சிவமயம்.



அருணந்தி சிவாசாரியார்

இயற்றிய

# சிவஞான சித்தியார்

சுபக்ஷம். X. 13. 4



மறைஞானதேசிகர்

சிவாக்ரயோகியர்

ஞானப்பிரகாசர்

சிவஞானயோகியர்

நிரம்பவழகியர்

சுப்ரமண்யதேசிகர்

இவர்களின் உரையுடன்



சிவஞானபோதயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



சென்னை - சிந்தாதிரிப்பேட்டை

[illegible] வைகாசி மீ

ஸ்வச்சந்தம்
பரமதநிராகரணம்
காரணாகமம்
ப்ரம்மபத்ததி
சமபுபத்ததி
வாதுளோத்தரம்

ஆ ௩௪.

## சிவாக்ரயோகியர்.

—o—

வீராகமம்
வாதுளம்
அமபாஸ்தவம்
மதங்கம்
மஹிமநஸ்தவம்
பௌஷ்கரம்
அநயதராபி (இதர நூல்)
காமிகம்
சித்தாந்ததீபிகை
நைஷதம்
சைவாகமம்
நயாயசார்யம்
தேவிகாலோத்தரம்
ரதநதந்திரயம்
ஜைநதந்தரம்
பாரக்கியம்
காளிதாசா
ம்ருகேந்தரம்
தத்வப்பிரகாசம்
ஆதித்யபுராணம்
பரமஹாணடபுராணம்
சிவஞானபோதம்
பூஜாஸஙவம்

ஆ ௨௩.

## ஞானப்பிரகாசர்.

—o—

ஞானாமிர்தம்
வாதுளம்
பௌஷ்கரம்
இரதநதந்திரயம்
மதங்கம்
காரணாகமம்
ஸ்வாயம்புவ வயாகயாநம்

ஆ ௭.

## சிவஞானயோகியா.

ஸ்ரீகண்டபாஷ்யம்
வேதாந்தநூல்-உ - அதிகர
ணம, க - உ-பாதம.
ஞானாமிர்தம
இரத்நத்திரயம
சிவப்பிரகாசம
சதாவேதத்தாற்பரிய
சங்கிரகம கக
தேவாரம
வாயுசங்கிதை
வாதுளம

ஆ. க

## நிரம்பவழகியர்.

திருவாசகம
சங்கற்பநிராகரணம
சிவஞானபோதம
சித்தி-பரபக்கம
தேவாரம்
திருக்களிற்றுப்படியார்
தத்துவவிளக்கம

ஆ. எ

சிவமயம்

# சிவஞானசித்தியார் சுபக்ஷ

## க—சூ, இஅதிகரணம்.



க—ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு
உலகமெல்லாம், வருமுறைவந்து நின்று போவது
மாதலாலே, தருபவனொருவனவேண்டும் ௩0௬
உ—ஈறுமாகி, மருவிடு மநாதிமுத்த சித்துரு மன்
னி நின்றே. ௬௭௪
௩—தானமுதல் ௬௬௩

இவற்றிறகுச் சூர்ணிகை கருத்து வார்த்திக முத
லிய சிவஞானபோததிற் கூறியுள்ளதே! இதன
விபரம் பாண்டிப்பெருமாள விருத்தியுடா அச்சி
ட்டிருப்பதிற் காண்க.

அதிகரணத்திறகு உதாரண விருத்தத்தொகை.

| | | |
|---|---|---|
| க—சூ, விருத்தம | | க |
| ,, | க அதி | உ௭ |
| ,, | உ ,, | ௩க |
| ,, | ௩ ,, | ௬க |
| | ஆ | ௭0 |

அதிகரண சப்கார்த்தம —

நீலகண்டபாஷ்யம்

"விஷய சம்சய பூர்வபக்ஷ சித்தாந்த நிர்ணய சங்கதி
நாமாதாரத்வம் அதிகரணத்வம் "

சிவஞானமுனிவர் சிற்றுரை - க—சூ, கருத்துரை.

தன்னாற் கூறப்படும் பொருளும், அதனைக் ஐயப்படும், அதற்குப் பிறர்கூறும் பக்கமும், அதனைமறுத்துத் தான்கொள்ளுஞ் சித்தாந்தத் துணிவும், இயைபும் என்னுமிவற்றது நிலைக்களம் அதி— கரணமெனப்படும்

பாயோகவிவேகம் - கக - செ.

"விஷயமோரோவழி மேவுதலெங்கும் வியாபகமென்
றடைய விம்மூன்று வகையான விரியுமதிகரணம்"

'விஷயமுரிமை விளம்புங்காலே' 'ஓரோவழிமேவுத ஔப சிலேஷம், 'வேற்றுமைநயத்தால் வேறேயாயினு-மொற்றுமைநயத்தா லொன்றாம்வியாபகம்'

இவற்றால் உய்த்துணர்க.



உ

சிவமயம்

# சிவஞானசித்தியார் சுபக்ஷ

## விஷயசூசிகை.

## பரபக்ஷம்

பாயிரத்தில் நின்றும் உரையாசிரியர்கள்

எடுத்துக்கொண்ட செய்யுள்கள்



| இலக்க | செய்யுள் | கருத்து | பக்கம். |
|---|---|---|---|
| கா | | | |
| க | ஒருகோட்டன | விநாயகர்வணக்கம் இதில் (ம-) பரபக்ஷ சுபக்ஷங்களின் உற்பத்தி | கரு |
| உ | முகவுரையிற | பரபக்ஷ செய்யுட்டொகை (ம) | உஅ |
| ங | ஐந்துத்தி | சுபக்ஷ ஷை (ம) | ,, |
| ச | ஆதிநிவந்த | சிவவணக்கம (சி-ஞா) ஈர்ஸ்வர பஞ்ச கிருத்தியம | உகூ |
| ரு | ஈசனருளிச | சத்திவணக்கம (சி-ஞா) சத்தி பஞ்ச கிருத்தியமும், சிவமும சத்தியும் பிதா மாதாவானதும | ஙரு |
| சு | அநாதையா | கந்தன வணக்கம் (சி-ஞா) | சஅ |
| எ | நீடுபுகழ | அவையடக்கம் (சி) | சுஅ |
| அ | போதமிகு | நூற்குஅதிகாரியும நூல்வழியும் நூற்பெயரும. (சி) சாம சித்தர் முதலி யோரியல்பு | சுக |



## சுபக்ஷப்பாயிரம்.





---

## அளவை.



| | | |
|---|---|---|
| கரு அநாதியே | மந்திரகலை தந்திரகலை உபதேச கலை என்னும் உரை மூவிதம (சி) வேதம் சிவாகமமுதலிய பதப் பொருள்களும், அகாராதி வாறேற்பதியும், இவற்றின் சிறப்பும் கூறுகின்றது | உ0௯ |
| கசா ராண்டுபகக | போலி—கூடு - இன், விபரம் உதாரணங்களுடன் (ஞா) சிவ-சிவசத்தி விளக்குகலைக் கூறுகின்றது. | (உரு௩-உ) |

---

## க—சூத்திரம்.

### பதியிலக்கணம்.

| | | |
|---|---|---|
| க ஒருவனே | இப்பிரபஞ்சத்துக் கொருகர்த்தா வுண்டென்பது (சி)பசுபதி நாமத்தின் பொருளும், அநவய வ்யதிரேக லக்ஷணமும், சார்வாகாதி மதநிராகரணமும், (நி) சிவஞானபோத சூத்திர சூர்ணை வெண்பாக்களின் கருத்துள்ள தென்பது கூறுகின்றது. | உ௩௯ |

# ௧—அதிகரணம்.

---

* உதிப்பது, முதல்; 'காரியங் காரணம்' ஈறு ௧௭-செய்யுளால் உலோகாயதர் புத்தர் சமணரென்னும் வைதிகபுறத்தார் மதமும், மீமாமசா தார்க்கிகர் சாங்கியரெனனும் வைதிகத்துட்பட்ட மூவர் மதமுமபற்றி ஐயநிகழாமல் 'வருமுறை வந்துநின்று போவதுமாதலாலே தருபவ னொருவனவேணடும்' என்னு முக்கூற்றுப் பொருளையுங் காததல்.

த்திபங்களும் ஆதி என்ப தும் ௩௮௭

(சி) ப்ரபாகரன

(சிவ) 'மாயைக கொருவனு ரெனனிங்கெனனி னுளள வாறுரைப்பககேணி'என பகொழிநத 'அழிநதிடுமெ னுஃகடாமே' என்பதுமு தல் இவை-௬-செய்யுளு ம், தாக்கிகர்.

(ம-ர்) பட்டாசாரி

௧௭ புகதிமற்காரி பூதாதியாகிய பிரகிருதியும் புருடனும் கர்ததாவாகா எனறது ௩௯௦

௧௮ காரியங்கார கர்த்தா பிரபஞ்சகாரியத்தை யுண்டாககுமிடத்துக குலாலனைபபோல காரணத் திரயததா லுண்டாககுவன எனபது ௩௯௧

(சிவ) 'மாயைக்கொருவ ரி றுகெனனினி னுள்ளவாறுறைப்பககேணி' எனபது டபட இவையிரண்டு செய்யுளும் சாங்கியர்.

(சு) மாயாவாதத்தில் கிரீச்சுரசாங்கியன.

இனி யக்காரணகாரியங்கள் தருபவ னொருவ ணாற் றரப்படுமாறும் அவற்ற தியல்பும் யாஙஙா னமெனபார்க்கு, சூரியன் குலாலனாய் நின்று சகுமாறு'விநதுவின் மாயை'முதல் 'அருவினிலு ரு' ஹறு க செய்யுளாற் றெருத் துணாததுகி றார்.

## உ—அதிகாரணம்.

உக மண்ணினிற் — மாயையி னின்று விகாரமாகி யபிரபஞ்சம் ஒரு கர்த்தா வாலுண்டாகின்றது — சஎச
(நி) புத்தன் மறுப்பு

ஙு0 சிலமோவுலக — காத்தாவுக்கு வடிவில்லையாயி னொருதொழிலை எப்படியி யற்றுவன் — சஎக
சாங்கியன மறுப்பு

ஙுக கற்றனூற் — அசரீரியும நிர்விகாரியுமான சி வன சிருஷடியாதிகள செ ய்வ தெப்படி — சஅரு
(நி) சிவஞானபோதம் - க-கு, உ-அ, ச-செ, 'நோக காது' எனட தினகருதது

" உயிரவை எ-து முதல்-கூ-செ, ஈறுமாகி மருவி டும' என்றதனை வலியுறுததுகின்றது.

ஙுஉ உயிரவை — ஒடுங்கின னனமா மீளததோன றுவானனெனபது — சகூக
புததனை மறுத்தது.

ஙுஙு தோற்றுவித — கர்த்தா கிருத்தியஞ செய்யுமி டத்து விகாரியாகானெவெ னபது
பாஞ்ச ராத்திரியைமறுத்தது. — சகூஎ

ஙுச உரைத்தவித் — ,, — ருoச
ஙுரு இறுதியாங் — ,, — ருகச
(சிவ) பௌராணிக மறுப்பு

| | | |
|---|---|---|
| ஙசு சொன்னவித் | இத்தொழிலென்ன பயன் கருதிச்செய்கிறார் | ருஉஉ |
| | (நி) புத்தன் மறு | |
| ஙஎ அழிப்பிளைப் | பஞ்ச கிருத்தியமு மநுக்கிரகமெனபது | ருஉஅ |
| | (சிவ) 'சொன்னவி'முதல்- உ- செ, நாத்திகர் மாயாவாதி பரிணாமவாதி மறுப்பு | |
| | (நி) புததனமறு | |
| ஙஅ அருவமோ | கர்த்தாவுக்கு வடிவியாதெனறகற்கு | ருஙச |
| ஙகூ நண்ணிடு | உருவததின முறைமை | ருஙகூ |
| ச0 விததகயோக | ,, | ருசச |
| சக மாயைதான | கர்த்தா மாயாரூபி எனறது. | ருசகூ |
| | (நி) புததன மறு. | |
| சஉ சத்தியே | அவனுக்கு வடிவு சத்தியாலுண்டாக்கப்பட்டது. | ருருசு |
| | (நி) புத்தன் மறு | |
| சங உலகினிற் | மேலதறகோர் புறனடை | ருசு0 |
| சச பநதமும்வீடுமாய | கர்ததாவின வடிவின்னதெனறளததற்கரிது. | ருசுரு |
| | (சி) சத்தபிரவாதி மறு. | |
| சரு குறித்ததொன் | மேன் முடிந்தது முடிந்ததெலன்னுங்கநதிரவுததி. | ருஎஉ |
| | குறிதததொன்று முதல் உருமேலி வரைக்கும் பாஞ்சராத்திரிகள் மறுப்பு. | |

முதல்வனுக்கு உருவத் திருமே
னியுண்டென்பது அரு+உரு-
எனபார் மகமறுபபு.

௪௬ ஆரணமாகம — சிவ ஞாகமங்களை யருளத் திருமேனிகொணடது. ௫௭அ

௪௭ உருவருள குணங் — சிவ னொருவனா யிருநது கிருததிய நிமித்தியம திருமேனி கொணடது. ௫அ௪

(சி) அங்க, ப்ரதயாஙக, சாஙக,உபாங்க,பதப்பொருளவிபரமும்,சிவபேத சத்திபேத உற்பத்திகளும்.

(சிவ) இவை-௧-செ, உருவத திருமேனி

௪அ உலகினையிறந்து — ,, ௫௧௫

௪௯ தேவரினொருவ — தேவரில் ஒருவனல்லன் எனறது. ௬00

(சிவ) இவை-௨-செ, அசிந்திதன

௫௰ போகியாயிருந்து — கடவுள்போகவிசேஷம் ௬0௫

௫௧ ஒனறே டொன் — மஹேச விக்கிரக நானாவிதமாயிருக்கு மென்றது. ௬0௯

இவை-௨-செ, அசிந்திதனுதற்கு வது

௫௨ நாயகனகண் — சிவப்ரகாசத்தால் உலகம் விளங்குவது. ௬௧௫

௫௩ கண்ணுதல் — கடவுள் யோகவிசேஷம் ௬௧அ

| | | |
|---|---|---|
| ருச படைப்பாதி | சிவனநுக்கிரகஞ் செய்யுமுறைமைபலவாறு. | ௬உ௫ |
| | 'உலகினை, எனபது முதல் படைப்பாதிவரை' எ-செய்யுளும் அருளின விசேஷம் | |
| ருரு உருமேனி | மூவிதஉருவம் | ௬௫0 |
| ருசு அததுவாமூர்த்தி | மேற்சொல்லியகை விரிதது கூர். | ௬௫௬ |
| ருஎ மநதிரமததுவா | ஆரத்து வாவில் மந்திரமே திருமேனி. | ௬௭௫ |
| ருஅ சுததமாமவிந்து | ,, | ௬௭அ |
| ருக மநதிரமதனிற் | ,, | ௬௯உ |
| | (சி) பஞ்சப்பிரம ஷடங்கமந்திரங்களின் பொருள | |

## ௫—வது, அதிகரணம்.

———o———

தான்முதல்'

| | | |
|---|---|---|
| ௬0 அயன்றனை | மந்திரங்களை யதிஷ்டித்தசத்தி, கிருத்திய கர்த்தாகளிடத் ததிட்டித்து நிற்குமென பது. | ௬௬௫ |
| ௬க சத்திதான் | சத்தி யொன்றோ பலவோ வென்பார்க் குதாரணம். | ௬எ௫ |

௬௨ சத்திதன்வடி மேற்சத்திரூப முணர்த்தல். ௬௭௮

௬௩ ஔறதா இச்சாஞானக் கிரியாசத்தி கி
ருதகிய முணர்த்துதல். ௬௮௪
(சிவ) அநேகேஸ்வரவாதிமறு
இந்நானகும் அநேகேசு
ரவாதியை மறுத்தல்.

௬௪ சிவனுமிச்சா சிவசமவாதி சிவனுக்கு மூவித
சத்தியென்றீராயின அம்
மூன்று மானமாவுக்குமு
ண்டாகையால் இருவரு
மொக்கும். ௬௯௧
(ஞா) மீமாஞ்சகன
சிவசமவாதி மறுப்பு.

௬௫ ஞானமேயான சிவ னிச்சாஞானக் கிரியாசொ
ரூப னெனபதும், சுத்த
மாயா காரியமும். ௬௯௭

௬௬ வித்தையோ சுத்ததத்வ மைந்துஞ் சிவன்றி
ருமேனி. ௭௦௪

௬௭ ஒருவனே சுத்த தத்துவங்களை யதிட்டி
த்திருநகாலு மதற்குவே
றுபட்டு நிற்பர் ௭௧௨

௬௮ பொன்மைநிலா சிவன் றனது தனமை திரியா
மல் சத்திகாரணமாய் நின்
று தானுங் காரணனென்று
ணர்த்தல். ௭௧௭
இந் நான்கும் சிவபேதவா
தி மறுப்பு.

| | | |
|---|---|---|
| சுக சத்தியுஞ்சிவ | ஐக்கியமாயிருக்கிற சிவசத்திகள் விசுவத்தின் கண்ணே பேதமாய் நிற்கும் முறைமை. | எஉசு |
| எ௱ சிவனுருவருவு | பதியினிலக்கண முணர்த்தி மேலெய்தியது விலக்கி பிறிது விதிகூறுகிறார். | எகூக |

முதற்சூத்திரச் செய்யுளின் கருத்து

முற்றியது.

இதில்வந்த குறிப்பெழுத்துகளின் விபரம்.

ம—மறைஞானதேசிகர்

சி—சிவாகரயோகியர்

ஞா—ஞானப்பிரகாசர்

சிவ—சிவஞானயோகியர்

நி—நிரம்பவழகியர் — இவர்கள் உரையிற் கூறுகினறது என்பது.

சமயங்களின பெயர் வருமிடத்தில் ஷ மறுப்பு எனக் கொள்க.

—o—

சிவமயம்.

# சிவஞானசித்தியார் சுபக்ஷம்.

## க—சூத்திரச் செய்யு ளகராதி.



தே

தேவரி ௬௦௦ ௪௯

தோ

தோற்றமு ௩௭௪ ௧௪

தோற்றுவிக் ௪௯௭ ௩௩

ந

நண்ணிடு ௫௩௯ ௩௯

நா

நாயகன ௬௧௩ ௫௨

நி

நிகழ்ந்திடும் ௪௪௦ ௨௪

நிலம்புன ௩௯ ௪

ப

படைப்பாதி ௬௨௩ ௫௪

பநதமும் ௫௬௫ ௪௪

பு

புத்திமற் ௩௯௨ ௧௭

பொ

பொனமை ௭௧௭ ௬௮

போ

போகியா ௬௦௫ ௫௦

ம

மண்ணினிற் ௪௭௪ ௨௯

(௧—௬, ௨—௮.)

மந்திரமதனிற் ௬௫௨ ௫௯

மந்திரமத்துவா ௬௪௩ ௫௭

மா

மாயைதான் ௫௪௯ ௪௧

மாயையி ௩௮௧ ௧௫

மூ

மூவகையுறு ௪௫௪ ௨௬

வி

வித்தகயோக ௫௪௪ ௪௦

வித்தைகள் ௪௪௮ ௨௫

வித்தையோடீச ௭௦௪ ௬௬

விநதுவின ௪௦௬ ௧௯

வே

வேற்றுமை ௪௨௭ ௨௨

வை

வைகரி ௪௧௮ ௨௦

ஆ செ-௭௦

பாயி-௨ட்,செ-௧).

செய்யுளகராதி முற்றியது.

---

உ

சிவமயம்.

# சிவஞானசித்தியார்

## சுபக்ஷம்.

## மறைஞானதேசிகர் உரை.

உரையாசிரியர் காப்பு.

ஆனைமுகன் பதங்கினைவா மார்வங்கூர வரனடியம் பிகை பாதம் பணிவா மன்பால், வானவரை வருத்தியவல் லசுரர்தம் மை வதைத்தகுகன் மலரடியெம் மனத்தில் வைப்பாம், கான மதி னடமாடிக் கோயில்வாய்தல் காவலரு ணந்திபதங் கருத்தில் வைப்பாம், ஞானமுனி சநற்குமாரா தியர்தம் பாதநயந்தெ ணுவா மெண்ணியவா றமைக்கேயாமே.

---

## சிவாக்கிரயோகியர் உரை.

உரையாசிரியர் அவையடக்கம்.

அருமறையா திகளனைத்து மன்பத்தொன்று மக்காதத்து ளடங்கியவா றுமதென்னத், தருவிதையு ளடங்கியதோர் தன்மையெனனச் சாற்றுசிவா கமப்பொருள்க டன்னை யெல்லாத், திருமுனிவர் சிவஞான சித்தியென்றே செப்பினரிங் கிதற் குரைநீ செய்கவென்றான், குருசரண மருள்புரிதன் மறுக்கவஞ்சிக் கூறுமுரை குணமெனவே கொள்வர்நல்லோர்.

## விநாயகஸ்துதி.

"திருமகளுமலை மகளுஞ் சேவித் தேத்துஞ் சிவகாம சுந்
தரிபுரு சிவனுமீன்ற, குருமணியாங் குமரனுக்கு மூத்தோனை
பாதமே கொண்டெனது புந்தியினிற் கூறுகினரே, வருமறையு
ஞ் சைவநெறி யனைத்துங் கோத்தே யருணந்தி தேவனா ரருளி
ச்செய்த, தருசிவஞான சித்தி யுண்மைத் தருமபொரு
ளாக குருவருளை தலைமேற்கொண்டே.

---

## தனியன் — நேரிசையாசிரியப்பா.

நீர்வளாபெருங்கடல் சூழுலகுய்யப் - பார்புகழ்கைலை
ப் பரமனாருரைத்த - திடமிகுவடமொழி யடைவுறத்தெ
ரிந்து - பண்ணவர்பயில்திரு வெண்ணெய்நல்லூரின - மெய்கண்
டிகசபுனை மெய்கண்டதேவனை - தொலைனாலுரையாற் றெரு
ளுறச்செய்து - முன்னூன்றும முறைபெறநிறுவிய - நன்னெறி
தருஞ்சிவ ஞானபோதந்தனை - யாங்கவரருள்கொண் டுந்தவ
னுடமிழாற் - பாங்குறவிரித்துப் பழமறையாகமப் - பொரு
ளெபொருளிடனே புலப்படத்தெரிந்த - அருணந்திதேவ சி
வாசாரியாதாம் - அனியுரவுலகி லாசைப்பகர்க்க - தெளிசி
வஞான சித்தியினுண்மையைச் - சிவனன்பருக்குத் தெளிய
மரறந்தனபொரு - ளுவமையின்விரித் துரைசெய்திடுகென -
வாசாரியாருநிந தருளிச்செய்தலிற் - றேசாரவருட் செ
றிந்தனமகிழ்ந்து - திரமாமுயிரிற் சிற்சத்திதானே - பிர
மாணமென்றும் பின்னதற்குக் - காரணமாவன காட்சியுங்
கருதலு - முரையுமிவ்வகை மூன்றெனவோதிப் - பேரிசைப
டைத்த பிரபஞ்செல்லாங் - காரியரூபமாய்க் காணப்படுத
லின - இவையொருமுதல்வனு லெய்துவதென்றும் - பலமுத
ல்புரிவோன் பாரிசேடத்தால் - அரனேயென்று மவ்வான்மா

சொல்லுநிலசத்தியஞ் சுதந்தரந்தனக்கென - வில்லையாகு மி
யற்றுகம்பணியெலாஞ் - சிவன்பணியென்று சிவனிடத்தேற்றி
ப் - பவங்கெடநிற்கினமுன பகர்ந்தவந்நிலையே - கூடுமெனறு
மக கொள்கையுங்கூடா - தாகியாணவச் சத்தியாற்றடைக
ள - பேதமோரறிவற் றிருந்தமகளுக் - கோதிலறிவு கொ
டுதசருள்சிவனை - மறத்தலரிதென மதியுறக்கூறி-யரததகை
யந்தரியாகமதனை - சிறப்பொடுபுரிந்துமித திரத்திலந்தரயக-
முரப்படுபெத்திவைத் தருகினுஞானம் - வரப்பெறுமென்னுமிவ்
வகையரிதாயிற - றலைப்படும்பெருமைச் சற்குருசரண - நிலைப்
படவடைந்து நெறியியனுலவர்த - மேவலின்வழாமலியம்
பியசிவனறிருக் - கோயிலினிடத்துங் குழாம்பயில்பரம - ன
டியவரிடத்து மஞ்சலியொடும்வழி - படுமுறைபுரியினும் பர
கதிக்கேதுவாய்த - தப்பிலாஞானத தழைத்திடுமென்று - மி
ப்படியநேக மெய்ப்பயனவிளங்கக் - கருதரும்பதப்பொருள
காட்டெனமுனனே - ருணாத்திடும்வகையா லொண்பொருள்
விரித்து - பண்டைகாண்முருகதன் பாற்கடல்கடைந்தெடுத -
தண்டமார்புலவோர்க் கமுதளித்ததுபோற் - பான்மையிற
றெளிதருப் பரமனன்பருக்கு - ஞானமென்னு நல்லமுதீந்தன
ன - தரகதவிர்பெருமைச் சதாசிவதேசிகன் - றிருகதுசந்தா
நத தீபமாய்த்தோன்றி - நிலைபெறுசத்திநி பாதர்க்கருள்வா
ன - மலைவறுவருண மருவுமாசிரமம் - பெயர்குணமெனறி
வை பெறுதலில்லாமையைப் - பார்மிசையறிவிப் பதுபொரு
ட்டாக - வாற்றலினவரு ளுச்சிரமியெனச் - சாற்றிடநின
ற தலைமையோனுகிக - கொல்லாவிரதமுங் கொடியபொய்யி
னமையு - மெல்லாவுயிர்க்கு மிதந்தருங்கருணையும் - பொறை
யுஞ்சாகசமும் பொருந்துறக்ரகமு - நிறையுநிக்ரகமு நீதியா
சாரமுங் - குருவினன்னேசமுங் கொண்டுயர்தவத்தால் - அரு
மறைப்பொருளா மாகமமுழுதுஞ் - செந்தமிழ்முழுதுந் திறை

த்கடலொலியென - மருவியதிருமட மணிமண்டபத்திற் - குல மறைமுனிவர் குழாம்புடைநெருங்கப் - புலியுரியாசனம் பொற்புறவிருந்து - நெஞ்சுறுபத்தி நெறிகொணம்பிக்கை - வஞ்சகமின்மை வழுத்தியகுருவின் - வாய்மைமறுமை மனத்தாதரவு - காய்புலனடக்கல் கலையுடனுண்மை - மெய்ப்பரிசுத்தம் விழுத்தவமுயற்சி - யத்தருகன்றி யறிதல்பலகால் - தத்துவஞான சாத்திரங்கேட்கையென் - றித்தகையிலக்கண மிசைந்தமாணாக்கருக் - காகச்சரிதை யாதிகாற்பாதமும் - போதித்தருளும் புலமையின்றலைமையுந் - தவமறக்கல்லவை தானசெய்யாமையு - மவத்தைசெய்மாதிர வாதவிநோதக் கிரியைகளினமையுங் கிளர்புலனடக்கலு - மறுபகைதடிந்த வாற்றலுமாமைவு - மிறலருந்தாமத மிராசதமின்மையு - மெல்லோரிடத்துமினபொதுப்பார்வையும் - பல்சமயத்திலுண் மைப்பயனறிகையு - மருவுமாணாக்கர் மனகுணதோடமுன் - கருதமுன்குறிப்பினிற் கண்ணுறக்காண்கையுஞ் - சகலசாத்திரத்தின் சந்தேகந்தவிர்க்கையு - மகமகிழ்சிவாகந் தானுபூதியுமென - றிவ்வகையனைத்து மியல்புரவுடைத்தாய்த் - தெய்வதவடிவு சிறந்தனனாகி - மன்னியதிங்களும் வான்றிகழ்கதியுஞ் - சென்னியின்மருவச் சிவனெனதநோன்றுந் - துயகோபுரமுஞ் சுடரவனிரதப் - பாய்பரிபிடறப் பயிற்றுமதிலு - மஞ்சுதஞ்சிய மாடமாளிகையும் - விஞ்சியவளம்பல விளங்குதனோக்கிச் - சூழிவெண்கனிற்றோரொல்பதிவெறுக்கும் - வீழிபம்பதியின் மெய்த்தவக்கைவரு - காழிஞானக் கவுணியன்போலச் - சைவநன்னெறி தான்றழைவித்துப் - பரவியசைவ பரிபாலனென்று - மூணாதருசிவாச்சரியாகமென்றுந் - திருக்குருகருணைச் சிவக்கொழுந்தென்றும் - நாமமின்மாதவர் வழுத்தும் - பரம்பரைமரமம் படைத்த தேசிகனே.

## வரலாறு.

உலகங்களுக்கு நடுவாயிலக்ஷம்யோசனையுயரமு முப்பத்திராயிரயோசனை விஸ்தீர்ணமுமுடைத்தாய், பசும்பொன்னிறமாயிருக்கும் மஹாமேருவினுச்சியினடுவே சோதிசிகரமெனும் பெயரையுடைத்தாய், இருபதினாயிரம் யோசனையுயரத்தையும்விஸ்தீர்ணத்தையுமுடைத்தாய், இரசிதம்போலும் படிகம்போலு நிர்மலதையாயிருக்கிற மஹாகைலாசத்தினடுவே, சுத்தமாயாஸ்வரூபமாகிய வடவிருக்ஷமூலத்திலே, சுத்தவித்தியாமயமான மந்திரசிம்ஹாசனத்தின்மீது, பக்குவான்மாக்களுடைய பாசசங்காரநிமித்தமாக தக்ஷிணாபிமுகமாக வெழுந்தருளியிருந்த ஸ்ரீகண்டபரமேஶ்வரனை; ப்ரம்ம விஷ்ணு இந்த்ராதி தேவர்களும் சர்வருஷிகணங்களுஞ் சேவித்திருக்க, பரமகிருபாளுவான ஸ்ரீநந்திகேஶ்வரநாயனார் ஸ்வாமியைப்பிரதக்ஷிணத்திரயம்பண்ணி துவாதசவாரஞ் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துக் கிருதாஞ்சலிபுடராகி; சுவாமி! சர்வானுக்கிரகார்த்தமாகத் தக்ஷிணாமூர்த்தமாய் சாஸ்திரவியாக்கியான முத்திராசகிதமாக வடியேங்களுக்குச் சேவைப்பிரசாதித்ததால் கிருதார்த்தரானோம். சிருஷ்டிகாலத்திலே ஸ்வாமியநுக்கிரகம்பண்ணிய வேதாகமங்கள் வெகுவிஸ்தாரமாகையால், அவையெல்லா மோதியுணருஞ் சத்தியில்லாமையால், சமுத்திரகலசநியாயமாக வவரவர்களறிந்தமாத்திரங்கொண்டு பூர்வபக்ஷமுஞ் சித்தாந்தமுமாக வநேகசாஸ்திரங்கள் பண்ணினார்கள்: அதனாற்சமயங்களநேகமாயிற்று. அச்சந்தேகங்களெல்லா நிவர்த்தியாகிப் பரமப்பிரயோசனமாகிய மோக்ஷத்தை யடைவதற்கு சங்கிரகமாக வுபதேசிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்த பிரஶ்னையாவன ?

(க) சகத்காரணது.—அனாதியோ - ஆதியோ?
(உ) சகத்து சுவாபிகமோ - ஏதுவுள்ளதோ.

(௩) ஏதுவானது, காலகன்மாதிமாத்திரமோ - சேதந னேதுவோ.

(௪) சேதனன்றான், சமுசாரியோ நித்தற்கற்பாந்தமு த்தனோ - அநாதிமுத்தனோ.

(௫) அநாதிமுத்தன்றான், அநேகனோ - ஏகனோ.

(௬) அவன்றனக்குத்தான் இலக்ஷணமேது.

(௭) அந்தக்கர்த்தாவினுடைய சத் பாவத்திலே பிரமா ணமேது.

(௮) அவன் நாமமேது.

(௯) அப்படியொருவன்சித்தித்தவளவில், சகத்துநிரு பாதாநகமோ - சோபாதாநகமோ - சூந்யோபாதாநகமோ - ப ரமாணூபாதாநகமோ - பிரதாநோபாதாநகமோ - கேவலம் பிர மோபாதாநகமோ - கேவலம் மாயோபாதாநகமோ - ஈஸ்வரச க்தியதிஷ்டிதமாயோபாதாநகமோ.

(௧௦) சகத்துற்பத்தி, சங்காதரூபமோ - ஆரம்பரூபமோ - விவர்த்தரூபமோ - பரிணாமரூபமோ - காரணசமுதாயரூபமோ - விர்த்திரூபமோ.

(௧௧) ஈஸ்வரன் சகத்சிருஷ்டியைப்பண்ணுகிறது, கன் மநிரபேக்ஷையோ - கன்மசாபேக்ஷையோ.

(௧௨) கிருத்தியம்பண்ணுவது, லீலையோ - பிரயோசநத் தை யுத்தேசித்தோ.

(௧௩) உத்தேசம், ஸ்வப்பிரயோசநமோ - பரப்பிரயோ சநமோ.

(௧௪) கிருத்தியங்கள் பண்ணுமிடத்து, கரணநிரபே க்ஷையோ - கரணசாபேக்ஷையோ.

(௧௫) கரணந்தான், தேகவியாபாரமோ - பஞ்சேந்திரி யங்களோ - அந்தக்கரணங்களோ - வித்துவோ - சத்தியோ.

(கசு) சுத்தியாகில், அச்சுச்சத்தி அநேகையோ - ஏகையோ - சிவனுக்குச் சமயுக்தையோ - சமவேதையோ-சடரூபையோ - சித்ரூபையோ.

(கஎ) சிவனுக்கு பின்னலக்ஷண லக்ஷியமான ஜீவனு ங்கியமோ - தேகமோ - இந்திரியசமஷ்டியோ - பிராணவாயுவோ - அந்தக்கரணவர்க்கமோ - ஆலயவிஞ்ஞானமோ-இவை யிறாறுக்கங்கியமோ.

(கஅ) ஜாதிபமாகில், சடமோ-சித்தோ-அகர்த்தாவோ-கர்த்தாவோ - அணுவோ - மத்தியமபரிமாணமோ - விபுவோ.

(ககூ) ஆன்மா, ஏகனோ - அநேகனோ - கிஞ்சிஞ்ஞனோ-சர்வஞ்ஞனோ-அவஸ்தா பஞ்சகோர்பத்திஞான பாவமோ-மித்தியஞானமோ - அநவாசனையோ - அநிர்வசநீயா வி தையோ - ஆணவமலமோ.

(உ௦) அந்த ஆணவமலம், அத்ரவ்யரூபமோ - த்ரவ்ய ரூபமோ.

(உக) த்ரவ்யரூபமாகில், ஐக்கியமோ - அஐக்கியமோ.

(உஉ) இத்தமலத்திற்கு மான்மாவிற்குஞ் சம்பந்தம், ச மவாயமோ - சமயோகமோ. (சையோகம்=சமயோகம்)

(உ௩) இத்தமலம், ப்ரதிபுருஷபின்னமோ - சர்வஜீவசா தாரணமோ - விசித்திரசத்தியுடையதோ - விசித்திரசத்தியில் லாததோ - அநித்தியமோ - நித்தியமோ.

(உச) இத்தமலத்தையுடைய ஜீவன், ஸ்வதந்திரனோ-ப ரதந்திரனோ.

(உரு) பரதந்திரனாகில் தன்னிர்வாகமாயிருக்கிற சர்வ ருவியவபாரமானது, ஈசுநிரூபமோ-சந்நிதிமாத்திரமோ.

(௨௬) சாந்நித்யமாவது, சமீபமாயிருக்கையோ - சந்திசமீபமோ - காரியோன்முக்கிய விசிஷ்டசந்நிதியோ.

(௨௭) இப்படிச்சந்நிதிமாத்திரத்திலே ஆன்மாக்களைப்பிரேரிக்கிற ஈஸ்வரன், பிரமாண விர்த்திப்பிரகாசியனோ - ஞானசொரூபனோ-சர்வப்பிரகாரத்தினாலும் மதிர்ஸயனோ-சொரூபஞானப்பிரகாசனோ - ஞானஸ்வரூபமாத்திரமோ-ஞானகுந்தஸ்வரூபியோ-விர்த்திஞானப்பிரகாசியனோ - ஆன்மஸ்வரூபஞானப்பிரகாசியனோ.

(௨௮) அந்தஈஸ்வரசத்பாவத்திலே, ஆகமம் பிரமாணமோ - ஆகமமும் பாரிசேஷமும் பிரமாணமோ.

(௨௯) இந்தப்பிரமாணத்தினுடைய பிரமாண்ணியமானது, பரதோவா - ஸ்வதோவா.

(௩௰) இந்தப்பதிக்கு, அந்நியமாகச் சொல்லப்பட்ட பசுவிற்கும் பாசத்திற்கும் இலக்ஷணமேது.

(௩௧) இந்தப்பசுக்களுக்கு, மோக்ஷத்திலே சாதகமில்லையோ-உண்டோ.

(௩௨) அதுதான், கன்மமேசாதகமோ - ஞானகன்மசமுச்சயஞ்சாதகமோ - கன்மவேதுவான ஞானஞ்சாதகமோ.

(௩௩) ஞானமுங்கன்மமும், ஸ்வதந்த்ரசாதகமோ-அங்காங்கிபாவசாதகமோ.

(௩௪) கன்மஞானத்திற்கு, ஐக்கியபாத்தியோப காரகமோ - ஆராதுபகாரமோ.

(௩௫) அந்தஞானம், சிவஜீவர்களுக்குப் பேதவிஷயஞானமோ - அபேதவிஷயஞானமோ - பேதாபேதவிஷயஞானமோ - தாதாத்மஸ்வரூபமோ.

(௧௬) இந்தஞானத்திற்கு ஏதுவான சைவாகமத்திற் கதிகாரி த்ரைவர்ணிகரோ - ஸ்ரீருத்திரத் துவிஜயக்தக்களோ, சாதுர்வர்ணத்தி னவர்களுமோ.

(௧௭) ஆகமாதிகாரிகள், கேவல சாதுவர்ணத்தி னவர்களுமோ - சமஸ்காரவிசிஷ்டரோ.

(௧௮) அந்தசமஸ்க்காரந்தான், ஸ்மார்த்தமோ - சைவமோ.

(௧௯) சைவந்தான், சமயவிசேஷமோ-நிர்வாணதீக்ஷையோ.

(௨0) நிர்வாணதீக்ஷையிலே, வர்ணமாத் திரத்திலே அதிகாரியோ - முமுக்ஷுவோ.

(௨௧) அந்த முமுக்ஷுவின் இலக்ஷணமேது.

(௨௨) தீக்ஷையைப்பண்ணு மாசாரியலக்ஷணமேது.

(௨௩) அந்தவாசாரியன்றான், ஜீவன் முத்தனோ-சிவனோ.

(௨௪) தீக்ஷையிலே சோதிக்கப்படு மந்திர பத வர்ண புவன தத்துவ கலையென்னு மவைகளினுடைய சொரூபமேது.

(௨௫) இந்தஅத்வாவைச் சோதிக்குமடைவேது.

(௨௬) தீக்ஷாநந்தரம், பரமமுத்தனோ-ஜீவன்முத்த வியவதாக முண்டோ.

(௨௭) ஜீவன்முத்தர்க்கு, கிஞ்சிஞ்ஞத்துவ கிருத்திய மில்லையோ-உண்டோ.

(௨௮) ஜீவன் முத்தியவத்தையில், ஆகாமியமேறுமோ ஏறாதோ.

(௨௯) ஏறாதற் குபாயமேது.

(௫௦) முத்தியானதுதான், தேக வியோகமோ - ப்ரக்ருதிபுருஷ விவேகத்தைப்பண்ணிப் பிரகிருதிக்குப் புறம்பாய் புருஷமாத்திரமா யிருக்கையோ - ஞானசத்திவிச்சேதமோ - அத்தியந்திகதுக்கவிச்சேதமோ - உலோகாக்கரத்தை யடைவதோ - நித்தியமான ரூபத்தைப்பெறுவதோ - அணுமாதிஷையைப்பெறுவதோ - கணிபத்தியமோ - பாஷாணவஸ்திதமோ - அநிர்வசனிய வத்தியா நிவர்த்தியோ - சிவசாயுச்சியமோ.

(௫௧) அந்தச் சிவசாயுச்சியந்தான் சிவகுணசங்கிராந்தியோ - சமுத்பத்தியோ - சிவசமாவேசமோ - ஆன்மாவிலேதனக்குள்ள சர்வஞ்ஞத்துவாதி அபிவியத்தியாய சிவசமமாயிருப்பதோ - அகண்டாகார சச்சிதாநந்தாத்வய சிவாநந்தானுபவாத்ம சாக்ஷாத்காரமோ: என்னுமித்தியாதி சந்தேகங்களெல்லாம் நிவிர்த்தியாம்படிக்கு அநுக்கிரகம்பண்ணவேணுமென்று விஞ்ஞாபனம்பண்ண.

ஸ்ரீகண்டமூர்த்தி பகவான் சந்தோஷித்து, நந்திகேஸ்வரபகவான் சிரஸிலே ஸ்ரீ அஸ்தத்தை வைத்து, நீர் பண்ணின பிரஸ்னை உலோகாநுக்கிரகமாச்சுது; இவ்வண்ணமொருவர்க்கும் பிரஸ்னை பண்ணக்கூடாது.

சிருஷ்டிகாலத்திலே பரமசிவம் சதாசிவமூர்த்தியை யதிஷ்டித்து, ¶ மாகௌகப்ரகாரமென்றும் ப்ரதிசம்ஹிதாப்ரகாரமென்றும் இருவகைத்தாய் ப்ரணவாதி சிவர்கள் பத்துப்பேர்க்கும் அநாதிருத்திராதியான உருத்திரர் பதினெட்டுப்பேர்க்கும் ஆக இருபத்தெட்டுப்பேர்க்கும் காமிகாதி வாதுளாந்தமான ஆகம மிருபத்தெட்டையும் அருளினுலநுக்கிரகம் பண்ணினர்.

¶ இதன்விரிவை சித்தாந்தசாராவளி க்ரியாபாத வியாக்யானம் - ௬ - ௨ - ௯ - ஸ்லோகங்களிற் காண்க.

இந்த விருபத்தேட் டாகமங்களையு மாகௌகப்பிரகார மாக அநகேஸ்வரதேவர்க்கு அநுக்கிரகம்பண்ண, அந்தப்பிர காரமே அநக்தேஸ்வர தேவர் நமக் கநுக்கிரகம் பண்ணினார்.

அதில் * இரௌரவாகமத்திலே † பாச விமோசகப் படலத்திலே அநுஷ்டுப்ச் சந்தசாக த்வாதச சூத்திரஞ் சர் வாகம சாரமாயிருக்கும், அதை யுமக் குபதேசம்பண்ணுகிறோம். அதை தேவமுனிகணங்களிடத்திலே பக்குவமறிந்து நீரும்போ தியுமென்று "ஸ்ரீ புக்தபுஞ்சகாதித்துவா" இத்தியாத்துவாதச சூத்திரத்தையு மதனுடைய வர்த்தத்தையு மநுக்கிரகம்பண் ண.—

* இரௌரவம்=ருருஎன்பவர்க்கு ஆதியில் உபதேசித்த ருளியதால் ரௌரவமெனப் பெயர் கொண்டது. இஃது வட நூற் சிவஞானபோத உரை யச்சிட்டிருப்பதிற் கூறுகின்றது.

† பாச விமோசகப்படலம், ரௌரவாகமத்தில்—எ கூ—வது படலம், கூ-வது அத்தியாயம், த்வாதசசூத்ரம் - சிவ ஞானபோதம்.

அந்த நந்திகேஸ்வர பகவான் சநற்குமார மகாருஷிக்கநு க்கிரகம்பண்ண, அவர் சத்தியஞான தரிசகர்க் கநுக்கிரகம்ப ண்ண, அவர் பரஞ்சோதி மகாமுனிக் கநுக்கிரகம்பண்ண, அ வர் க்ருபாவசத்தினாலே வித்தேசத்தேழுந்தருளித் திருவெண் ணெய் நல்லூரிலே சாம்சித்தராக அவதரித்திருக்கும் மெய்கண் டதேவ சிவசாரியரை இந்தச் சிவஞானபோதத்தை மொழி பெயர்த்துத் தமிழாகச்செய்து பக்குவான்மாக்களுக் குபதே சியுமென்று அநுக்கிரகம்பண்ண, அவ்வாறே மொழிபெயர்த்து முன்னூற்பெயராகவே யுரைத்துத் தம்முடைய சிஷியர்கள் - சஅ-பேருக்கு மநுக்கிரகித்துத் தம்முடைய ப்ரதான சிஷியரா கிய அருணந்திதேவசிவாசாரியாரை யிதை விஸ்தரித் தொரு க்ர.

ச்சிதஞ்செய்யும்படி ஆஞ்ஞாபிக்க; அவரும் சகலவேதாகமபுராண இதிகாச யதார்த்தமாக அறிந்துலோகாநுக்கிரகார்த்தமாகச் சிவஞானசித்திக்கும்பொருட்டாகப் பண்ணினதாகையால் சிவஞானசித்தியென்று நாமமாக பூர்வபக்ஷ சித்தாந்தத்துடனே பிரமாணத்திரயங்களினுடைய இலக்ஷணங்களையும், பிரமேயத்திரயமாகிய பதிபசுபாசத்தினுடைய உத்தேசலக்ஷண பரீக்ஷைகளையும், சரிய கிரியா யோக ஞானமென்னுஞ் சாதனசதுஷ்டயத்தையும், சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியமெனனும் சதுர்விதக்ரமமுத்தியையும், ஜீவன்முத்தி பரமுத்தி லக்ஷணத்தையும், இத்யாதியான வுண்மைகளையெல்லாம் விளங்கவருளிச்செய்தார்:—இதன்பொருளை யளப்பரிதாயினு மென்னுடைய குருசாரூபியோகிக் கையினாலே குருவாக்கியலக்ஷபயத்தினாலே சமுத்திரகலசநியாயமாக நானறிந்தளவு உரையிடுகின்றேன். இதைப் பெரியோர்க் ளுணர்ந்து ப் பிழைதீர்த்தருள்வர்.

---

திருவண்ணாமலை ஆதீனம்

## ஞானப்பிரகாசர் உரை.

காப்பு.

சிவமுறநமக்கு முத்தித் தந்திவத் திரளைச் சித்தித்
தவமையில் சிவனுப் பில்லா வுண்மைகுரு குலக்கன் மற்றெண்
ணவர்களை வணக்கி யின்பச் சிவஞான சித்திக் கேற்ப
நவமுறு முரை யுரைப்பா முன்னுரை நலக்கொள் ளார்க்கே.

திருமறைஞானதேசிகர் ஸ்ரீ சிவக்கொழுந்தாசாரியர் இவர்கள் சிவஞானசித்திக்குச்செய்த வுரைகள் விரிந்தபடியினாலே எழுவாய் பயனிலை பொருட்புணர்ச்சி பொருள்கொண்டு

தோன்றுதாகிலும் தீவ்ரதர புத்திமான்கள் தங்கள் தங்கள் சம்ப்ரதாயத்துக்கு மாறிச் சிறிது விரோதித்ததுமாத்திரங்கொண்டு நீர்நீக்கிப் பால்கொள்ளு மன்னம்போலப் பொருள்கொள்ளுவார்க ளாகையாலும், வேறு மற்றுள்ளோர்க ளுரைத்தவுரைக ளதாரம்போய்ச் சுஷ்கதர்க்கமாய் முடியு மாதலானும், மந்தமதிகட்கு மயக்கம் போக்கும்பொருட்டுச் சுருக்கமா வோருரை சொல்லுவாம் என்றது இதன்பொருள்.

## சிவஞானயோகியர் உரை.

குருவணக்கம்.

பண்ணிசையும் பரிதிமதி நிலத்தியலுந் திரிப்பு பாணபுப்பு, விண்ணிலகு முடலுயிர்நீர் நிழலுஞ்சிப் பல்வகுபமும் விளகுப் பானீர், கண்ணிரவி புணர்வொளிபோற் பிரியரிய வத்துவிதக் கலவிகாட்டித், தன்னைவினைத் தெளியரணுபட்ட துறை நமசிவாயகுரு சரணம்போற்றி.

## நிரம்பவழகியர் உரை.

காப்பு.

உள்ளும் புறம்பு மொருதன்மைத் தவரவார்
தெள்ளுறு சிவஞான சித்திக்கு—மெள்ள
விரிக்கும் பதவுரைக்கு வேழதகனைச்சங்
கரிக்குங் கிழமகனே காப்பு.
தேருஞ் சிவஞான சித்திப் பதவுரைக்குக்
காரு மதமுன் கிம்பரம்பும்—பேருலகிற்

பொய்யஞ்ச முள்ளார் புகழும் புவிநாலுங்
கைவருச முள்ளானே காப்பு

---

## தனியன் — நேரிசையாசிரியப்பா.

உலகம்புரந்த பலமலர்த்தழீஇ - யூன்றுதலைவ னோன்றாட் செல்வப் - பகலொளிகிளரு மகலிடமுழுதக - மகதிமேடீகா ன கரங்கழூழும் பாராரைக்கஞ்ச மொராலுமொராறு - மெய்யுரத தழுவுங் கையுறுகோட்டத் - தேய்க்தறமோதிப் பாய்ந்தடாங் தெரியுங் - கொழுந்தழலைக்கால் கொழுந்துயிர்த்தாடி - ய ஞசாகெஞ்சி னஞ்சங்கிளர்ந்து - பொங்குந்தங்க செங்கட்செ வியி - னவ்வுழிதயிலுஞ் செவ்வியமாலு - மெய்யுறகாட்ட மையிருறூற்று - ஞெவறமோக்குந் தேவர்கடேவுந் - தம்மையு மலையுந் தம்முட்டம்மையுஞ் - செம்மைவிளுடிச் சிவமுதற் றெனுறுங் - கைம்புயற்காய்ந்த செம்பொருடேர்ந்து - நம் மாற்செய்குவ நம்மறிவேதுள - வம்மாற்கேயென மையறும மாருங் - கற்றுங்கற்றிய முற்றும்பெற்றில - மியாமமாரன்பா ர கோமானெவ்வுழி - யெனபோர்ணமு முனபோர்கணமும்- பயிலுங்கயிலைச் சயிலத்தவ்வையி - னன்பாலேய்ந்த பெண்பா லெம்மான் - முன்னங்கலைகள் பன்னினபலவே - மங்கைதக்கன னற்றெருகுதிமுடுக்கி - யாடியகாலைக் கூடியவட்டாங் - கெங் கையெட்பெருமா னங்கித்தலைவர்க் - காறிரண்டாகக் கூறிய வஞ்ஞான - நிவிமைகொணர்ந்த முனிவர்கணத்தாங் - கரூப தேசப் பொருளெனவுரையச - சினக்குழூறறுஞ் சனற்குமா திப - னன்னூனெறிபைத் தன்னுளந்தழீஇ - மாயிருஞாலத் தேயிருபியத் - தோன்றியம்மொழியைச் சான்றோர்பெரி யன் - விண்ணைக்கவர்ந்த உண்ணைக்கவர்ந்த - மண்ணிக்கவி க்கும் வெண்ணெய்க்கதிபன் - மெய்ப்பொருடழீஇப் பொய்ப் பொருளொருவிச் - சைக்கண்டடைந்தான் மெய்கண்டானென-காம

ங்கோய்ந்த காமங்காய்ந்தோன் - தன்னுழிதழுவ வந்தனு
வற- வஃதோரம்மா னன்னுருடா - விகரீ இப்பாயிர மெய்
தியதொன்று - முன்னருஞ்சூத்திரம் பன்னிரண்டெனவு-மொ
பயருஞ்சூரீணை முப்பத்தொனபது - மரிதெனவிதனுக் கரையு
முதாரணை - மொருபதுமெழுபது மொருமூன்றெனவும் - கூறு
வங்கணூறுணூறு - வாறுர்பத்தோ ரேகாடித் - தன்ன
டிமலரைச் சென்னியின்மிலையுந் - கூரியபோதத் தாரியர்கண்
டோ - விருமருணந்த வருமருணக்திக் - கன்பானுவரப் பினபு
ணைசெய்யுஞ் - செழுஞ்சிவஞான சித்தியினற்பா - வெழுகது
வறுநூற் றிருபத்தேழாம் - விரிவாமஃது மிருபாலாகும்- மொ
ருபால்முன்னூ றுளவாமஃதும் - பரபாலாகப் பாடினவா
கு - மின்பாலோது மிணீயோர்பாலுக் - தன்பாலாகச் சாற்றின
வாகுஞ் - சொல்லுமிவ்வழியிற் சுபக்கவிருத்த - மெல்லையில்
முனனூற் றிருபத்தேழா - மிவ்வகைநூலுக் கேய்ந்தபொருளு -
மெய்வகைபிறங்கி மேவரும்பதமு - மெழிற்றெருங்கலைய மிதனு
ற்சொல்லு - மொழிப்பிரமாணமு முள்ளிடைச்செல்லுரு -
சமையச்செல்வர்க ளமையக்கூறுத் - தர்க்கமும்விடையு கிற்கநி
றுத்திப் - பைம்பைத்தோய்ந்த வெம்பற்குண்டலி-மெய்க்கட்டு
உங்குமுக்கட்டேவு - மும்மலக்தழீஇய மம்மர்க்கிழவரு- மம்மர்
செய்தொளிரு மும்மலமஃது - மார்கலிநிருப் பவையொருமு
லறும் -பரவுமதனுற் போலாமெனவு - முற்றுன்மூன்றும் வற்
றுகேயினு - மற்றுமலமொன் றுறியாவெனவு - மாறுமாதுயி
ரறிவித்தன்றித் - தாருவொனறைச் சாராதெனவு - மவனிவ
னுள்ளு மறிவாய்நிற்றல் - புவனியினுங்கமைப் பொருளாமென
வுங் - தாயாங்கெனவிரு மாயாமசனி - ரிருட்டலமசனிர் வெ
ருட்டவமுங்கும் - பூதந்தலையா நாதங்கடையாக் - கூறிய
தத்துவ மாறுதொருவத் - தோன்றியவழிவே கோன்றுளென
வுங் - கட்டுண்டோடாக் காண்டிக்குழுவை - விட்டிடிலோவ

வேலையினுடி - யாண்டோய்ந்தொருகா லீண்டியருதாங் - கிப்
புலனீந்து மெய்ப்பொருடோய்ந்த - வீரர்களிவ்வுழி வாரா
ரொனவு - மறையினபொருளின் - முறைபிறழாம - லிந்நூலொ
ளிர மனனுணாசெய்தோன - பைஞ்ஞாட்போவு மெய்ஞ்ஞான
தகோர்க - கருமறைமருநத் திருமறைஞானன் - வாடாமின
ருள் கோடாதேய்ந்த - கருமஞ்சலையுந திருமலியிஞ்சி - யிரு
நிலைபொருதாங் கொருவளையெள்ளா - வாடகமிளிரு மா
டகக்கோபுரத் - தில்லைபதியி னெல்லைக்குணபாற் - கொற்ற
ஙகுடிககர் பற்றிபசெல்வன் - பநமலரேய்ந்த முதலவர்கணத
தோ - ரறிவால்மிக்க நெறிசேர்செல்வ - னகலிடமருவுஞ சக
லச்செல்வளை - யாடல்பொருட்டா நீடனைபுக்குப் - படரொ
ளிஞாயிறு சுடர்வானுலவப் - பக்குவக்கஞ்ச மிக்கலர்ந்தாங்கு -
சேறறஞ்செற்ற நற்றவர்விடா - நிலைமையினிற்குந் தலைமைய
ளிப்போன் - பஃறுளியோடாக் கஃறுளித்தாங்கே - யுருகா
வாயி லுருகாநிற்கக் - கருதாஞானக் கனிநனியிட்டோன -
வெம்பகலெங்கு மம்பரமாருக - கார்கொணீரரி யார்கவிதழீ
இ - வாயுழிமாணுத் தோயகதாங்கி - விசும்பிடைவீசப் பசுங
காலாடிக் - கொழுநதுளிபூவின் விழுந்தாங்கம்மா - னறை
நூலாற்றின் றுறைபுக்கவ்வையின் - ஞானத்தோய மானத்
தேற்ற - திருவாயம லருள்சோருரவன - கவரேவும்பே
ழவரேயப்பட்டக் - காட்டாட்டாமளை மாட்டாத்தவவுழி
ச் - செநகாதுலவும் பைநதாளறுகால் - மானத்தோதுங் கா
னச்சும்மையு - மண்டங்கிளர்நத தண்டலைமிசையி - னுண்டா
தேய்ந்து வண்டேனுண்டு - தத்தையிசைக்குஞ் சுத்தவிரட்டு
ஞ் - சூர்த்தநெஞ்சக் கூர்த்தகண்ணியர் - நீபந்தரழுங்
கோபத்தன்ன - காழகம்புனைந்த வாழியமங்கை - யாடற்சும்
மையும் பாடற்சும்மையுந் - தன்னுணர்ந்தலக மின்னெனக்காண்
டோ - ரோதவெழுந்த வேதச்சும்மையுங் - கடுவோடமிர்த

முங் கம்புநதழுக்கும் - படுகடலேழிற் படரார்புறமு - மளவி லகாட்சியு மவிகாரனுக்கும் - வளனுக்கோய்ந்த மதுரைதகலை வ - விர்கருணைவிமலன் சிற்குணனசின்மயன - காரணகாவ லன பூரணபுண்ணிய - ஞானஞேகம ஞானநாயக - னதந்த னநாதருப விதநவிராமையன - சேவுடைச்சேவக ஞவுடை— நாயக - னற்புகஞுதிபன் கற்பகநகர்சா - ஞரமபதிஞானத் சொளிமேயா - விரமபவழுசனென னெஞ்சகத்தோனே.

கலித்துறை.

அறியுற்பொருளுக் கறிவாவனவு மருகநவதகோர்
நெறியுநெறிசகு நிலையாவனவு நினைப்பரிதாங்
குறியுங்குறிக்கக குணமாவனவுங் குவளைவயற்
செறியுநதிருத்தில்லை யம்பலவாணன திருவடியே.

ஸைகணடமேவும் பெருமானடியைய மருவியருள
கைகணடுணருஞ் சிவஞானசித்திக் கடர்சுபக்கம்
பொய்கணடுழுதவர் போற்றவியானசொற்பொருட்குதவி
மெய்கண்டதேவ னடித்தாமரையன்றி வேறில்லையே.

வெண்பா.

ஆரணமு மெக்கலையு மாகமமுங் கற்றுலக
சேருமுதன மூனறுக தெரியாதே—பாரிற
கருணைபொழி ஞானப்ர காசன் கமலச
சரணமிரண் டில்லையேற் றுன்.

---

## சுப்ரமண்யதேசிகர் உரை.

சிவஞானமுனிவர் கூறிய குருவணக்கத்தையே இவரும் கைப்பாகக்கொண்டனர்.

உரையாசிரியர்களின் தெய்வ வணக்க முதலிய
முற்றிற்று.

---

சிவமயம்.

# சிவஞானசித்தியார்

## சுபக்ஷம்.



## மறைஞானதேசிகர் உரை.



நூல் — காப்பு.



### விநாயகஸ்துதி.

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த னால்வாயை
ங் கரத்தனறு, தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடை
யான் றருமொருவா ரணத்தின்றாள்க, ளுருகோட்டன
பொடும்வணங்கி யோவாதே யிரவுபக லுணர்வோர்சி
ந்தைத், திருகோட்டு மயன்றிருமால் செல்வமுமொ
ன் றோவென்னச் செய்யுந்தேவே.

ஒருகோட்டன்...... ..தேவே. எ-து. ஒருகொம்பையுமி ரண்டுசெவியினையு மூன்று தானத்திலின்று பொழியாநின்ற மூன்று மதத்தினையு நான்றவாயினையுந் துதிக்கையுட னைந்து கையினையு முடையனுப், கங்காதேவியையும் வளைவுபெற்ற ஞானசந்திர கலையினையுங் கொன்றைமாலையையு நீண்ட திரு ச்சடா பாரத்தின்கட் டரித்த வுருத்திரமூர்த்தியும் பார்வதி யாருங் களிறும் பிடியுமாகக் கூடிப் புணர்ந்துண்டாக்காநின்ற வொப்பில்லாத வாரணத்தினது தாள்களை; யுருகியோடா நின்ற வன்புடனே வணங்கி, இடையறாம லநவரதமுந் தியா

நிப்போர்கள் சிந்தையினுண்டாகிய மலமாயாதி குற்றத்தை யகற்றிப் பிரமன் மான் முதலாயினர் செல்வமுஞ் ¶ சரக்கல்ல வென்று மதித்து, மேலான ஞானத்தைக் கொடாநிற்கும் இச் சிறப்பினையுடைய கர்த்தா எனறவாறு.

¶ சரக்கல்ல - பொருளல்ல, இதனை "நற்குஞ்சரக்கன் று நண்ணிற்கலைஞானங்,— கற்குஞ்சரக்கல்லகாண் என்னும் திருவருட்பயன நிரம்பவழகியர் உரை காப்பாறுணர்க.

தேவே என்பது எழுவாய் செய்யும் என்பது பயனிலை. ஏகாரம் ஈற்றசை. உமமை சிறப்பு. ஓகாரம் எதிர்மறை.

இவ்வாசிரியர் சிவதுதி, சத்திவணக்கம், கணபதிவணக் கம், கந்தர்வணக்கம், குருதுதி, அவையடக்கம், நூற்சிறப் பு, குருமரபு, நூற்பெயா, நூற்கருத் திவைகளைப் பததுசசெ ய்யுளாற் பாயிரமாக வுணர்த்தி, உலோகாயிதன்முதற் பா ஞ்சராததிரியீறுன பரசமயிகள் பதினல்வர் மதத்தையு மவ ரவர் மத மறுப்பினையு மிருநூற்றுத் தொண்ணூறு விருத்தத தா லுணர்த்தி, அதன்பின் தமது மதத்தைபே தாபித்தற் பொ ருட்டுப் பரமதக் தன்மதமாகிய விரண்டினையும் விருவிடை யாககி ஸ்வம்மதத்தினை முந்நூற் றிருபததொரு செய்யுளா லுணர்த்தினமையா லிதற்குச் சுபககமெனவு மதற்குப் பரப ககமெனவும் பெயராயிற்று.

இதனுடைய பரபக்கமானது சங்கராசாரியார் செய்த ச ர்வதரிசன சங்க்ரஹத்தும், சர்வமதோப நியாசத்தும், இரா மாநாசாரியர் பண்ணின பரமத நிராகரணத்தும், சர்வான மசம்பு பண்ணின சித்தாந்த தீபிகையினும், அகோர சிவாசாரி யர் பண்ணின சித்தாந்தார்த்த சமுசயத்தும் பார்த்து; அவை களின் கருத்தைப்பற்றிச் செய்ததென வறிக.

சுபக்கமானது முன்னூலாகிய சிவஞானபோதத்தின் கருத்தினையும், வழிநூலாகிய சூத்திரஞ் - சூரணி - வெண்பா இவைகளையும், சிவாகமங்களையு முற்றுநோக்கி; அவ்வழியே பன்னிரண்டு சூத்திரமாகச் செய்ததென வறிக.

சூத்திரமென்ற சொற்குப் பொருள் சூசனையாகச் சொல்லுகையாற் சூத்திரமெனப் பெயராயிற்று. அஃது வருமாறு.— "அவற்றுட் சூத்திரந்தானே, யாடிநீழலி னறியத்தோன்றி, நாடுதலின்றிப் பொருணனிவிளக்கி, யாப்பினுட் டோன்ற யாத்தமைப்பதுவே" என்றார் தொல்காப்பியனார். (க)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிந்தச் சாஸ்திரத்தி லாதியிலே நிர்விக்நபரி சமாப்தியின் பொருட்டும், சிஷ்யசந்தானாபி விர்த்தியின் பொருட்டும், இந்தச்சாஸ்திரம் லோகத்திலே பிரகாசிக்கையின் பொருட்டும், ஆதியிலே அருணந்திதேவ சிவாசாரியர் பண்ணின

### விநாயகஸ்துதி.

(இ - ள்.) கங்கையையும் வளர்ந்த பிறையையுங் கொன்றை மாலையையுந் தரித்த நெடிய சடையையுடைய பரமேஸ்வரனுடைய வருளினாலே தரப்பட்டொரு கொம்பையு மிரண்டு செவியையு மிச்சாஞானக்கிரியையென்னு மூன்றுமதத்தையு நான்றவாயினையு மைந்து கரங்களையுமுடையரா யானைபோன்ற திருமுகத்தராய்த் தமக்கொரு நாயகனில்லாமையால் விநாயகனென்னுந் திருநாமத்தை யுடையராய், ஒப்பற்றவருடைய பாதார விந்தங்களிலே கரைந்த பத்தியுடனே யிரவுபகலிடையறுமற் றியானிப்போருடைய திருக்காகிய வஞ்ஞானத்தை

பொழித்துப்பரமப்பிரயோசகமாகிய மோக்ஷத்தையும், ப்ரம்ம விஷ்ணுக்கள் செல்வமுஞ் சிறிதென்னும்படிக்கு அவாந்தரப் பிரயோசகமாகிய போகத்தையுங் கொடுப்பவராகையா லத்தேவனே யிந்நூலுக்குக் காப்பு.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இந்நூல் தடையின்றிப் பூரணமாகும்பொருட்டுக் கடவுள் வாழ்த்துச் சொல்லுகின்றாராய் முந்தி விநாயகவணக்கஞ் செய்கின்றார்.

ஒருகோட்டன் வாரணமென்று விசேடிக்கப்பட்டதாகையால் ஐங்கரத்த னென்றதோடு விசேடித்தைங்கரததனாகிய வாரணமென்று ரூபகம்பண்ணுக. ஒருகோட்டன் - என்பது - ஒற்றைக் கொம்பையுடையனாகியும்,—இருசெவியன். எ - து. இரண்டு கன்னங்களையுடையனுயும்,—மும்மதத்தன். எ - து. மூன்று மதசலங்களையுடையனுயு மிருக்கின்ற,—நால்வாயைங்கரத்தன். எ - து. நான்றவாயினையு மைந்து கரங்களையுமுடைய (விநாயகனாகிய)—ஆறு தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான் றருமொரு வாரணத்தின். எ - து. கங்காதேவியையுங் கோட்டத்தரும் பிறையென்று கூட்டுதலாற் குனிப்பாகிய சந்திரகலையையுங் கொன்றை மாலையையுஞ் சூட்டாகவுடைய பின்றூங்காநின்ற சடையையுடைய சிவனாற்பவித்த குஞ்சரத்தினது,—தாள்கள். எ - து. பாதாரவிந்தங்கள் (தம்மை)—உருகோட்டன்பொடு வணங்கி. எ - து. மிகுந்த பத்தியோடுந்தாழ்ந்த நந்தவணக்கத்தினாலே யடையப்பட்ட சிவநிஷ்டைவான்களாய்,—ஓவாதே. எ-து. நீங்காதே,—

இரவுபகல். எ - து. அகோராத்திரம்,—உணர்வோர். எ-து. அநதப்பாதத்தியாக முன்னாகச் சிவத்தியானம்பண்ணுவோர்,—சிகைத் திருகோட்டும். எ - து. அந்தச் சிவத்தியானத்துவாரத்திலே சிற்சத்தியினது விரிந்த அறிவுதொழில்களை மறைத்த மலசத்தியினது வியாபாரத்தைத் தடுத்ததனாற் பண்ணப்பட்ட வஞ்ஞானத்தைத் துரத்தும்,—அயன்றிருமால் செல்வமுமொன்றோ வென்ன. எ - து. பிரமத்வம் விஷ்ணுத்வமென்கின்ற வைசுவரியமு மொருபொருளோ வென்ன,—செய்யுந் தேவே. எ - து. (தேவேசெய்யும்) எனமாறுக.-தேவாகுந்தன்மையைச் செய்யும். முன்னிருந்த சிவத்துவத்தைத் தானே விளக்கித் தனித்தனி யவர்களைச் சிவனாகத் தானே பண்ணும்; முத்தி வியத்தி யிரண்டு மோக்ஷமென்கையால்.

திருகோட்டுமென்றதனாற் பாசமுத்தியும், செய்யுந்தேவேயென்றதனால் சிவத்வாபி வியத்தியுஞ் சொல்லப்பட்டதறிக. தாள்கள. எ-து. எழுவாய். ஒட்டும் என்பதும், செய்யும் என்பதும், பயனிலை.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

சிவஞானபோதநூற்பொருள் பிற்காலத்தார்க்கு இனிது விளங்குமாறு விரித்தல்யாப்பான் நூல்செய்வான் புகுந்தவாசிரியர், எடுத்துக்கொண்டபொருள் இடையூறு நீங்கினிது முடிதற்பொருட்டும், இந்நூலின்று நிலவுதற்பொருட்டும், முதற்கட் செய்துகொண்ட கடவுள்வாழ்த்து மாணாக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டுச் செய்யுளாற்றெரிக்கின்றார்.

என்பது கங்கையும் பிறையுங் கொன்றையு மணிந்த சடையானளித்தருளிய ஒருகோடு முதலியவற்றை யுடையவனாகிய

வாரணமுகத்தானுடைய திருவடிகள், பேரன்பாலிடையறாது தமமை வழிபட்டுத் தியானிப்போரறிவினகண்ணதாகிய மல ககோணைத் தாக்கும்; அதுவேயுமன்றி அயனரிமுதலியோர் வாழ்வு மொருபொருளன்றென வெறுப்பச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வையுந் தருமென்பதாம்.

சிந்தைத் திருகோட்டித் தெய்வத்தன்மை செய்யவல்ல தாளகளுக்கு, இடையூற்றையோட்டி இந்நூல முடிவுபெறச் செய்தல் அருமையன்றென்பது கருத்து.

கங்கையின் செருக்கடககிப் பிறையை வாழ்வித்த பெருமான மகனாதலாலும் அச்சீலமுடைமை தெளியப்படுமெனபார், ஆறுசருகோட்டம் பிறையிதழித்தாழ்சடையானருமொரு வாரணமென்றார்

இதழியுமுடன் கூறினார், திருவடையாள மாலையாதலின.

இதழித்துணர்போலத் தாழ்ந்த சடையானென உவமத் தொகையாகக் கொண்டுரைத்தலுமொன்று.

தருகோட்டம்பிறை- தன்னூர்தரப்பட்ட வளைவானழகு பெற்ற பிறை.

இருசெவியனென்றது, இசைபெச்சத்தால் இரண்டு *முறமபோலுஞ் செவியனெனப் பொருடந்து நிற்றலின், ஒரு கோடுமுதலியனபோலப் பிறிதினியைபுநீக்கிய விசேடணமாதற்கிழுக்கின்மையுணர்க.

* முறம்போலுஞ் செவி எனச் செவிக்கு முறத்தை உவமித்தமை, சூர்ப்பகர்ணம் என்னும் விநாயகர் ஷோடசநாம விதியிற் காண்க

யானைபுறப்புக் கழுத்திற்கு மேலன்றி யின்மையான் மும்மதத்தனாதல் யாங்ஙனமென்பார்க்கு மும்மதம் யானைக்கு அ

டைபென்பாரும், ஒருகோட்டன் முதலியனபோல மும்மதத் தனென விநாயகப்பிரானுக்கேயடையாய் நிற்றலின் யானைக்க டையாமாறு யாங்ஙனமெனமறுத்து இச்சாஞானக்கிரியைகள் ஈண்டு மும்மதமென உருவகஞ் செய்யப்பட்டனவென்றுரைப பாரும், ஒருகோடு முதலியவேனையடைபெல்லாம் உறுப்பினை யே யுணர்த்தி நிற்றலின் இது மாத்திரமினம்பற்றுருவகமாத ல் செல்லாமையானும் உருவகஞ் செய்தற்குரியதோரியைபுவிசே டமினமையானுங் கந்தன முதலியோரையு மக்கருத்துப்பற்றி மும்மதத்தனெனல் யாண்டுமின்மையானும் அதுவுமுரையன் றென மறுத்துப் பஞ்சாக்கரத்தின் பேதமாகிய எட்டெழுத்தா றெழுத்து காலெழுத்துமுதலியனவும் பஞ்சாக்கரமென வழங் கப்படுமாறுபோல மும்மதத்தின் வகையாகிய ஒருமதமு மிரும தங்களு மும்மதமென வழங்கப்படுமாகலின் அதுபற்றி ஆசங் கை யெனனையென்றொழிவாருமுளர்.

வாரணமுஞ் சிந்தையும் ஆகுபெயர்.

திருகு முதனிலைப்பெயர்.

ஓகாரம் எதிர்மறை.

இஃதெண்ணலங்காரம்.

ஈண்டு "இறைவனையுமிறைவனுலியம்புநூலு மீண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி-முறைமைகளும் பெத்த மொடு முத்தியெல்லாம்" என்றெடுத்துக்கொண்ட முறையே வைத்துப்பரபக்கங்களை எடுத்தோதி மறுத்தவாசிரியர், இனிய ம்முறையே சுபக்கங் கூறுகின்றார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

(இ-ள்) ஒருகோட்டன் எ-து. ஒரு கொம்பினையுமுடையனாய்,—இருசெவியன். எ-து. இரண்டு செவியினையுமுடையனாய்,—மும்மதத்தன. எ-து. மூன்று மதங்களையுமுடையனாய்,—நால்வாயன. எ-து. நான்றவாயினையுமுடையனாய்,—ஐங்கரத்தன். எ-து. துதிக்கையுடனே ஐந்துகரங்களையுமுடையனாய்,— ஆறுதருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையானருளொரு வாரணத்தின்றாள்கள். எ-து. கங்காதேவியினையும் வளைவுபெற்ற பிறையினையுங் கொன்றைப்பூவினையுமுடைய நீண்ட திருச்சடாபாரத்தினையுமுடைய தம்பிரானார் தரப்பட்டவொப்பில்லாத மூத்தநாயனாரது ஸ்ரீபாதங்களை,—உருகோட்டன்பொடும்வணங்கி. எ-து. உருகியோடப்படாநின்ற பக்தியுடனே தண்டனபண்ணி,— ஓவாதே யிரவுபக லுணர்வோர். எ-து. ஒழியாதே யிரவுபகல் நினைக்கிற பெரியோர்களுடைய,—சிந்தைத் திருகோட்டும். எ-து. இருதயங்களின் மலமாயாதிகன்மமென்கிற குணங்களைப்போக்கும்,— அயனை திருமால் செல்வமுமொன்றேயெனனச் செய்யும் எ-து. ப்ரம்ம விஷ்ணுக்களுடைய மாயாபோகமாகிய ஐஸ்வரியமும் ஒரு பொருளோவெனனும்படி ஞானச்செல்வமாகிய பரமபோகத்தைக் கொடாநிற்கும்,—தேவே. எ-து. ஆகையா லிவனே கர்த்தா வென்று சொல்லப்படுமென்றவாறு.

என்னவே யானு மிந்நூலைக் காப்பாற்று நிமித்தமாக வந்தச்சீர்பாதங்களை யொழியாதே யநவரதமு மென்னிருதயத்திலே வைத்துக்கொள்ள நின்றேனென்பது கருத்து.

இது காப்பு.

—

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

(இ-ள்.) ஆறு. எ-து. கங்கையும்,—திருகோட்டம்பிறை. எ-து. தனஞற்றரப்பட்டவளவான அழகுபெற்றபிறையும்,—இதழி. எ-து. கொன்றமாலையுமணிந்த,—தாழ்சடையாளாற ரும். எ-து. தாழ்ந்த சடையையுடைய சிவபிரான் அளித்தருளி ய,—ஒருகோட்டன். எ-து. ஒற்றைக்கொம்பை யுடையானும்,—இருசெவியன. எ-து. இரண்டுமுறம்போலும் காதையுடையானு ம்,—மும்மதத்தன். எ-து. மூனறுமதத்தை யுடையானும்,—நா ல்வா யைங்கரத்தன. எ-து. நானறவாயையும் ஐந்துகரத்தை யு முடையவனுமாகிய,—ஒருவாரணத்தில்றாள்கள எ-து. ஒப் பற்ற வாரணமுகத்தானுடைய தாள்கள்,—உருகோட்டவெயா மே எ-து. உருக்கியோடுதற்கு ஏதுவாகிய பேரன்போடும்,—ஒவாதே வணங்கி. எ-து. இடையறுதுதம்மனம் வழிபட்டு,—இரவுபகல். எ-து. இரவும் பகலும்,—உணர்வோர் சிந்தை. தியானிப்போ ரறிவினகண்ணதாகிய,— திருகோட்டும். எ-து. மலகசோரனைத் துர்க்கும் அதுவேயுமன்றி,— அயன்றிருமால் செல்வமும். எ-து. அயனரி முதலியோர் வாழ்வும்,—ஒன்றோ வென்ன. எ-து. ஒருபொருளன்றெனவெறுப்ப,—தேவுசெய் யும். எ-து. சிவமாந்தன்மைப் பெருவாழ்வையுந்தரும்.

சிந்தைத்திருகோட்டித் தெய்வத்தன்மை செய்யவல்ல தாளகளுக்கு இடையூற்றையோட்டி இந்நூல் முடிவுபெறச் செய்வ தருமையன்றென்பது கருத்து.

இது விநாயகர் துதி கூறியது.

## பரபக்ஷச்செய்யுட்டொகை.

முகவுரையிற்றசமெழுமூன்றதன்முப்பானென்று
மூதுலகன்முப்பானென்றெண்ணோர்தாம்புத்தன
றிகழ்மூவர்க்கோரெட்டாநிகண்டனுக்கெட்டீரேழ
சீவகனுக்கீரைந்தோடிருமூனரும்பாட்டன
பகர்பதின்மூனநீரைந்தேப்ரபாகரனீரிரண்டாம்
பரிணாமகான்கிருகான்கேமாயாவாத
நிகழைம்மூன்றாறுமூன்றும்பாற்கரியற்கேழா
நிரீசுரற்குச்சதுராத்திரியெழுமுபபானென்றே.

## சுபக்ஷசெய்யுட்டொகை.

ஐந்துதுதி யீரேழு மளவையாகு
மாதிதனி லெழுபதுபின ருண்ணூற்றாறு
நதுசதுட்டைய நாற்பானவமும் பினனவமு
நனிநான்கு நாற்பதினி லொன்றிடுதிராறுங்
கந்தன்முக மோராறுங் கரமங்கீராறுங்
கருதிடுவங் கணபதியைங் கரமுபிருபகமுஞ்
சிந்தையிவை மூவொனப தொடுமூன்றாறுஞ்
சிவஞான சித்திசுவ பக்கமெனத்தெளியே.

---

## இதற்கு
## மறைஞானதேசிகர் கருத்து.

---o---

இதன்கருத் தியாதெனில்?

சித்திதன்பரமகஞ் செப்புங்காலை - மையுறுமுலகா யதன் முதனமதமு - மெய்யுறுசைவ மேன்மையுமாகும் - ஸ்வம்மதந் தனனைத் துலங்கவுரைக்கிற் - கற்புறுமளவை காண்டலாதியா

ய்ச் - சொற்பயின்மூன்றுக் தொல்சிவன்படைத்து - முத்தமவ
னிப்புட னொழித்தருள்செய்து - மலனதுவாணையி ஞானமாகக
ன்மம் - புவனந்தோறும் புசித்தவுடம்பினை - மன்னியவானமா
மலத்துடனந்தப் - புண்ணியமூர்த்தியைப் புகலருஞ்சிவனைக -
காணவுங்காணாப் பொருளதுமின்றி - வீறியபரமும் பாசமும
வேறு - யீதெனவான்மா வியல்புடனுணர்ந்து - மெழிற்றருதரு
வா லிவவகைதெரிந்து - முழுதுணர்வாகி முத்தியையறிந்தரு-
சீருடன்குருவாற் சிவனமுத்தனு - யரனடிநிழனின் றஞ்செழு
த்துணர்ந்து - மகலருமும்மலத் தழுக்கினையகற்றியும் - புகலரு
ஞசுவாறு பூதியையடைந்து - மொழிவறுமினப முதலியபரன
பாற - பழுதறுமடிமைப் பத்திசெய்துஞ் - சிவனடியாரையுஞ்
சிவாலயந்தனையு - நவையறவழிபடு நன்மையுமுறைதரும் - ப
னிருத்திரப் பயனதுதனையு - முன்னியாகமப் படியுறைத
த்துவே எனவறிக.

இதற்கு மூலாகமங்க ளெழுதில் விரியுமென்று வேறேதிரு
ஷடாந்தமாக விருத்தங்சோறுங் காட்டினம்; ஆண்டுக்காணக

---

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

—o—

### சிவஸ்துதி.

ஆதிநடுவந்தமிலாவளவில்சோதி
யருண்ஞானமூர்த்தியாயகிலமீன்ற
மாதினையுமொருபாகத்தடக்கிவானோர்
மகுடசூடாமணியாய்வையம்போற்றப்
பாதிமதியணிபவளச்சடைகடாழப்
படரொளியம்பலத்தாடும்பரனார்பாதத்
தாதுமலிதாமரைகள்சிரத்தேவைத்துத்
தளராதபேரன்புவளராநிற்பாம்.

மேலிந்தச் சாஸ்திரத்தில் பிரதிபாத்யரான சிவனை ஸ்வரூபதடஸ்தமென்னு மிரண்டு லக்ஷணங்களினாலும் ஸ்தோத்திரம் பண்ணுகின்றது.

(இ - ள்.) ஆதிநடுவந்தமிலா வளவில் சோதி - உற்பத்தி திதி நாசமின்றிக் காலதேசவஸ்துக்களினாலே யபரிச்சின்னமாய் ஒன்றாய் சுத்தமாய் விபுவாய் ஸ்வயம் ப்ரகாசஞானானந்த ஸ்வரூபமாய் ஸ்வாநுபவைகவேத்தியமான பரமசிவம்

* [illegible]

இது ஸ்வரூபலக்ஷணம்.

மேல் தடஸ்தலக்ஷணம்:—சத்தர் உத்தியுக்தர் ப்ரவிர்த்தர் என்று மூனறுவிதம் இவவாறு பஹுவிதமாகில் அநேகேஸ்வரத்வமா மென்னில்? சத்திப்பிரவிர்த்தி பேதத்தினாலே பேத முபசாரமாகச் சொன்னதன்றி வஸ்துபேத மில்லை.

[illegible]

அருண்ஞான மூர்த்தியாய்-அப்படிப்பட்ட சிவன் ஆன்மாக்களை யநுக்கிரஹிக்கவேணுமெனனுங் க்ருபையினாலே பஞ்சசத்திகளுக்குள் ஞானசத்தி மூர்த்திமானாகிச் சததமொனனு நாமத்தை யுடையராய் ரூபமாய் ஞானப்பிரகாசரா யிருப்பர்.

* [illegible]

அகிலமீன்ற மாதினையுமொரு பாகத்தடக்கி - விஸ்வத்திற்கு அபின்ன நிமித்தோபாதானமாகிய தனது சமவாய ஆதிசத்தி வாம பாகமுந் தான் தக்ஷிண பாகமுமாக வித்ருமம்போல நீலமும் பொன்மையுமாகி, யொருமுதலிலே யிருவகை நிறமுமாகி, ஞானக்கிரியா சமமாய், அகளமாகிய பராயாதிசத்திகள் சகளமாகிய சுத்தமாயையிலே தர்ப்பணத்தில் பிரதிபிம்பம்போலே பொருந்துகையால் சகளாகளமாகி, விஸ்வத்திற்குப் பரமகாரணமாகி, யநேகசந்த்ரப் பிரகாசமுமாகி, மாயாதீதமாய், உத்தியுக்தனென்றும் சதாசிவனென்றும பரியாய நாமத்தையுடையராய், சுத்த மாயாகருத்தியத்தைப் பண்ணுவர். இவர்க்குத் திருமேனி பஞ்சசத்திகளுடைய பத்திலொரு அம்சமாக நிஷ்களமாகிய சிவசாதாக்யம், அமூர்த்தி சாதாக்யம், மூர்த்திசாதாக்யம், கர்த்ருசாதாக்யம், கர்மசாதாக்யமுண்டாம்; அது நிஷ்களம். சகளம் விந்துவிலே நின்றும் ஈசானன் ஈஸ்வரன் ப்ரம்மன சிவன் சதாசிவனென்னும் சகளமூர்த்திகளுண்டாம். இந்த விரண்டுவகை நிஷ்கள சகளத திருமேனியிலே சிவனிருந்து சுத்த மாயாஸ்தூல க்ருத்யத்தைப் பண்ணுவர். சுத்த மாயையில் சூக்கும க்ருத்யத்தை சத்தர் பண்ணுவர் எனவறிக.

* [illegible]

ஶக்தித்ரயஸமாவேஶாத் கர்த்ருத்வம் ஸதாஶிவ: ॥ இச்சா
ஶக்தித்ரயஸமாவேஶாந்நிவ்ருத்திகர்த்ருத்வம் ஈஶ்வரஸ்ய
தே । ஜ்ஞாநஶக்தித்ரயஸமாவேஶாத் கர்த்ரு ஸாதாக்ய
ஸம்ஹவ: ॥ க்ரியாஶக்தித்ரயஸமாவேஶாத் கர்த்ருஸாதாக்ய
ஸம்ஹவ: —

வானோர் மகுடசூடாமணியாய் வையம்போற்றப் பிறை மதி யணிபவளச் சடைகடாழப் படரொளி யம்பலத்தாடும் பரனூர்பாதத் தாதுமலி தாமரைகள் சிரத்தேவைத்துத் தளராத பேரன்பு வளராநிற்பாம் - பிரம்மாதிதேவர்கள் (அபிஷேகத்திற்கு சிகாரத்னமாய்) சர்வலோகப்பிராணிகளுந் தோத்திரம்பண்ணும்படிகருத் தனதிசசையாற் றிருமேனியை யாக்கிக் கொண்டு அஷ்டகலாப் பிரசாதரூபமாகிய வர்த்தசந்த்ரனை அழகுபொருந்தச் சிவந்த திருச்சடாபாரத்திலே தரித்துக் கொண்டு அந்தச்சடைகள் தாழ்ந்து தொங்க சோமசூரியாக்கினிப் பிரகாசங்கள் மழுங்கும்படிக்கு மிகுந்தப்பிரகாசமாய் வியாபியுள்ள சிற்சபையிலே பஞ்சகிருத்யமே நிர்த்தமாகப்பண்ணுஞ் சிவனது தாதுசெறிந்த பாதாரவிந்தங்களிலே சிரசினால்வணங்கி தளர்ச்சியில்லாத மிகுந்த வன்புடனே கூடுவோம். இது ப்ரவிர்த்தனைச் சொன்னது.

இதற்கு வேறுவிதமாய்ப் பொருளுரைப்பாருமுளர். அஃதுவருமாறு:—ஸ்வரூபம் தடஸ்தமெனவும் பரிபூரணம் சத்தர், உத்தியுக்தர், ப்ரவிர்த்தரென்று சொன்னதனறி அம்பலத்தாடும சிவனையே தோத்திரம்பண்ணினதாக வுரைப்பார்கள். (ஆதிகடு......நிற்பாம்.) எ - து. ஆதிமத்யாந்தரஹிதமாய் அளவிட அரிதாயுள்ள வொளியானது க்ருபையருளுகிற ஞானசத்தியினை வடிவாக வுடைத்தாய் விஸ்வத்தைத் தோற்றுவிக்கிர

கிரியாசத்தியைத் தன்னுடைய பாரிசத்திலே யுடைத்தாய் தேவர்களுடைய அபிஷேகத்திற்கு ரத்திநமா யுலகத்தார தோத்திரம்பண்ண அர்த்தசநத்ரனைத் தரிக்கப்பட்ட பவளம்போன்ற நிறத்தினையுடைய சடைகளைத் தாழவிட்டு;ஒளியாக்கப்பட்டாநின்ற அம்பலத்துள்ளே நிருத்தம்பயிலாநிற்கிற பரமேஸ்வரனுடைய தாதுசெறிந்த கமலம்போன்ற ஸ்ரீபாதங்களைத் தலைமேற்கொண்டு, தாழ்வுபடாத வணபினை மிகவும் அவன்பாதத்திலே யுண்டாக்காநிற்பேம். எ - று.

திருவம்பலத்து நிர்த்தம்பண்ணுகையாவது, பூமிக்குச் சுழுமுனைநாடி சிதம்பரமாதலால் அகிலாண்டகை அஜபாஸ்வர இபமா மிரண்டக்கரமாகிய திருவடிகளா லாடுவதனால், உலகத்திற் குயிருமாய் நிற்பனென்பது கருத்து. உயிர்களுக்கு பலமாயிருப்பனென்பது அஷ்டமூர்த்த வடிவாதலால் "தானுடத நனைதன்சயாதிம்" என்னும் பழவார்த்தையு மிதனைநோக்கி யெனசகொள்க "தேவர்கள் தானவர் சித்தவித்தியாதரர், மூவர்களாதி முப்பத்துமூவாகள், தாபகர்சத்தர் சமயஞ்சராசரமயாவையுமாடிடு வெம்மிறையாடவே." "தத்துவமாட சதாசிவந்தானுடச், சித்திகளாடத் திசைகளுமாடிட, வைத்தசராசரமாட மறையாட, வத்தனுமாடினு னானந்தக்கூத்தே." திருமந்திரம் திருக்கூத்துத்தரிசனம்.

*இச்செய்யுளும் பின்வரும் சத்திவணக்கம் கந்தர்வணக்கங்களும் பரபக்ஷத்திற் கூறப்பட்டுள்ளது. இவற்றிற்கு சிவாக்ரயோகிகள்,ஞானப்பிரகாசர் இவர்களிருவரும் இங்ஙனம் வருவித்துரையிட்டிருக்கின்றனர். ஒருகோட்டன் என்பது முதல் பாயக்ஷப்பாயிரச்செய்யுளிற் பிறவும் உரையாசிரியர்கள் சிலவற்றைத் தழுவியும் விடுத்துமிருப்பதை அறிஞர்க்கு குறிப்பிக்கப்படும்.

பரபக்ஷ சுபக்ஷங்கட்குப் பாயிரச் செய்யுள் வரையறுக்கப்பட்டிருப்பதை "முகவுரையிற்றசம்" "ஐந்ததி" எனனும் செய்யுட்டொகை விருத்தங்களிற்காண்க. (௨௬-வதுபக்கம்.)

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆதிநடு வந்தமிலா வளவில்சோதி யருண்ஞான மூர்த்தியாய் - (சோதியாய் அருள்மூர்த்தியாய் ஞானமூர்த்தியாய் எனறுபிரித்து மூன்றிடத்துங் கூட்டுக. ஆதிநடு வந்தமிலா வளவில்சோதியாய் என்பது ஆகுபெயராதலால்)

சோதியாய் - உற்பத்தி திதி நாசங்களின் றுபசாரத்துககுக ஆரமாய் மனோ வாக்கதீதமாகிய சுத்தசிவ சோதியாகி அதனது மத்தியநிஷ்கள நிர்த்தசோதியாய்; ஆகையால் சகளாதிகார ரென்கின்ற சதாசிவன், சகளநிஷ்களபோக ரென்கின்ற வநாகதசிவன், நிஷ்களவிலய ரென்கின்ற பரசிவன், இவர்கட் கதீதமாய்: ஆகையால், மஹாப்பிரளயத்திலேதான் யோகவிவேக பாவனையிலேதான் அநுபக்ஷமாகிய பிரமாதி பரசிவாந்தமாகிய அதிஷ்டாதங்களைவிட்டுச் சிவசத்தி யுன்முகமாய்த்திரும்பிய சம்புபக்ஷமாகிய பிரமா விஷ்ணு ருத்ரன் மகேஸ்வரன் சதாசிவன் பரவிந்து பரநாதம் பராசத்தி பரசிவமென நின்ற வதத்வ விலயத்தானமாய், திரும்பச் சகளநிர்த்தம்பண்ணும்படி,—

அருள் மூர்த்தியாய் - 'மகாமாயாமய மகாசபாபீடத்தியில் மாத்திரிகளெழுதியபூதாகாசவடிவாகிய மந்திரலிபியெனுமிலக்கில் மாத்திரிகை ளுச்சரிக்கு மந்திரகலிவழியாய்வத் தக்கியோலாலி

ற்பவித்துத் திவ்யமந்திரமாகிப் பலன்கொடுக்கும்படி சிவனது சங்கற்பத்தாலுண்டாய், அச்சத்தியசுத்த சம்மேளனமாகிச் சுத்தமாயா புவனவாசிகளாகிய சாரூபிகளுக்குச் சத்தியவடிவாயும் மாத்திரிகனது சங்கற்பத்தாற் கற்பிதசம்மேளனமாகிச் சிவனுக்குக் கற்பிதவடிவாயுமிருக்கும் வாசகமந்திரமாகிய பஞ்சதசாக்ஷரி பஞ்சாக்ஷரமாகி, தனது பரிக்ரஹசத்தியாயிருக்கின்ற வாசகசத்திமயசரீரத்தி லாவிர்ப்பவித் தவிளுபூதமாயிருக்கின்ற வாச்சியமந்திரமாகிய பஞ்சதசாக்ஷரி பஞ்சாக்ஷரமாகி, தனது சமவேதசத்தியாயிருக்கின்ற வாச்யசத்திமய சரீரியாய். ஆகையால்,—

ஞானமூர்த்தியாய் - சலையா யிருக்கின்ற ஜடமூர்த்திகட்கு வேறாய், அசலையாயிருக்கின்ற சித்தருவாய், இப்படி கற்பித மூர்த்திக்குக் கரசரணாதிகளின தசைவுகூடாததாகையால்,—

(அகிலமீன்ற மாதினையு மொருபாகத்தடக்கி) அகிலமீன்ற - பாரம்பரியமாய்ப் பராசத்தியா லதிஷ்டிக்கப்பட் டந்தப்பரா சத்தி த்வாரத்தினாலேயுந் தன்னாலே சாக்ஷாத் அதிஷ்டிக்கப் பட்ட ப்ரம்மாதி த்வாரத்தினாலேயுந் தநுகரண புவனபோகங்களாகிய சகலத்தையும் உற்பவிப்பித்து,—

ஒருபாகத்து - வாமபாகத்து,—

மாதினையும் - நிர்த்தசாக்ஷியாய் நிற்கும் உமாதேவியையும் நிர்த்தசாக்ஷியாய்த்தனது சத்திசாந்நித்தியத்தாகமாய் நின்று நிலைநிற்கவும் ஒரங்கிசத்தினாலே,—

அடக்கி - சமுத்திரத்துதித்த முத்தைப்போல வளர்த்த த்வாரத்தினாலே மாயையி னுற்பவிப்பித்துத் தனது சம்மேளன சக்ரவிக்ரகத்தி லாவிர்ப்பவிப்பித்த ஸ்ரீகண்டமூர்த்தியிற் ப்ரவேசிப்பித்து சம்மேளனமாகத் திரும்ப வதிற் றானுஞ்சாந்நித்தியமாய்,—

வானோர் மகுடசூடாமணியாய்- பிரமாதிதேவர்க்கு மதி தேவராகிய ஸ்ரீகண்டாதிதேவர் தேவராகிய அநந்தாதிகட்குந் தேவனாய்,—

வையம்போற்ற - உலகங்களெல்லாந் துதிப்ப,—

பாதிமதி யணிபவளச் சடைகடாழ - (பாதி - சம்பாதமன்று ஒரங்கிசமாதலால்) சந்த்ரகலையைத்தரித்த விரிந்த பவளக்கொடிபோன்ற சடைகள் பின்றூங்க,—

படரொளியம்பலத்து-பராசத்தியா லதிஷ்டிக்கப்பட்டுப் பரம்பாநின்ற ப்ரகாசத்தையுடைய சுத்த மாயாமயமாகிய சபையின்கண்ணே,—

ஆடும் - நடிக்கும்,—

பரனார் - சுத்த சிவனாரது,—

பாதத்தாமரை தாமரைகள் - பாதாரவிந்தங்களை,—

சிரத்தேவைத்து - சென்னியிற் றரித்து,—

தளராத பேரன்பு வளராநிற்பாம் - யாம் நீங்காத மிகுந்த பத்திநிறைவாக்காநிற்பாம். எ - று.

யாம்—தோன்றா யெழுவாய்.

---

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

———o———

ஈசனருளிச்சையறிவியற்றலின்ப
    மிலயமொடுபோகமதிகாரமாகித்
தேசருவமருவுருவமுருவமாகித்
    தேவியுமாய்த்தேசமொடுசெல்வதிமாப்

பேசரியவுயிரையெலாம்பெற்றுநோக்கிப்
பெரும்போகமவையளித்துப்பிறப்பினையுமொழித்திட்
டாசகலுமடியருளத்தப்பனுடனிருக்கு
மன்னையருட்பாதமலர்சென்னிவைப்பாம்.

மேலிகதச் சிவனுடைய *சமவாயசத்தியையும் §தத்பே
தங்களையுங் கூறுகின்றது.

*சமவாயசத்தி - அபின்னசத்தி, §தத்பேதம் - அதனது
பேதம்.

(இ - ள்.) ஈசனருள் - பரமேஶ்வரனுக்கு அக்நிக்கூஷ்ண
ம்போல + அவிநாபாவமாயிருக்கிற க்ருபாசத்தியானது பஞ்ச
¶ க்ருத்ய நிமித்தமாக க்ருத்யபேதங்களினாலே யஞ்சுபேதம்.

* [illegible]
[illegible]
[illegible] ||

பரமசிவத்தி லாயிரத்தொருகூறு பராசத்தி,—

+ அவிநாபாவம் - பிரிவில்லாமை, ¶க்ருத்யம் - தொழில்.

இன்பம் - ஆன்மாக்களுக்கு விஷயசுகத்தைப் பொருத்து
மாதிசத்தியானது அந்தப் பராசத்தியி லாயிரத்தொரு கூறாக
த்தோன்றும்,—

இச்சை - ச்ருஷ்டியாதியைப் பண்ணவேணுமென்னு மிச்
சாசத்தியானது அந்த வாதிசத்தியி லாயிரத்தொரு கூறாகத்
தோன்றும்,—

அறிவு-சர்வான்மாக்களுடைய கன்மங்களையு மக்கக் கன்
மங்களுக்கீடான தநுகரண புவனபோகங்களையு முபாதாகத்

யங்களினின்று முண்டாக்கும். அதையு மேககாலத்திலே ‡யகச் வத்தாக வறியு ஞானசத்தியானது இச்சாசத்தியி லாயிரத் தொரு கூறுகத்தோன்றும்;—

‡ அதர்வத் - உளளபடி.

இயற்றல் - †ச்ருஷ்டியாதி க்ருத்யங்களைப் பண்ணுங் க்ரியாசத்தியானது ஞானசத்தியி லாயிரத்தொரு கூறுகத்தோன்றும்.

† ச்ருஷ்டியாதி யென்றதனால் பஞ்சக்ருத்யங்களையும் எனவறிக.

இது சிவச்ருஷ்டி, இந்தச் சிவசத்திகளைந்து நிஷ்களமே.

✽ [illegible]

[illegible] இதி. ✽

இவ்வாறு பஞ்சசத்திகளு மொன்றுக்கொன்று ஸஹஸ்ராம்சமென்றது க்ருத்ய ¶ தாரதம்மியதையிலுலே சொன்னதன்றி § பரிச்சின்னமாகச் சொன்னதல்ல வெனவறிக. இப்படி தோன்றின பஞ்சசத்திகளிலே பராசத்தியானது பல்வு

னாகிய வான்மாக்களை யநுக்ரஹிக்கும். ஆதிசத்தியானது ஆணவமலம் பக்வமாம்படிக்குச் செலுத்தும்,—

¶ தாரதம்மியம் - ஏற்றக்குறைச்சல், § பரிச்சின்னம் - கண்டிப்பு.

இவையொரு போகமதிகாரமாகித் தேசருவ மருவுருவ முருவமாகி - ஞானசத்தியானது சத்கற்கு ஞானப்பிரகாசமாகி சர்மசக்ஷுராதி *பக்ராஹ்யமான தேஜோரூபமாம். இந்தப பஞ்சசத்திகளினுடைய தசாம்சங்களினாலே சகளா ‡களமாகிய சதாசிவரூபமாம். இவர் உத்தியுக்தர். இவருடைய சகளரூபம் பிறகே சொல்லுகிறார். இவ்விடத்திலே நிஷ்கள ரூபத்தைச் சொல்லுகிறார். இவர் சுத்தமாயாக்ருத்யம் பண்ணுவர்; இவர்க்கு அந்த சத்தியில்லை. பத்திலொன்று என்னவே பத்திலொரு பங்கு நிஷ்களத்திருமேனியான சாதாக்யமென்றறிக.

* அக்ராஹ்யம் - க்ரஹிக்கப்படாமை, ‡ அகளம் - நிஷ்களம்.

* [illegible]

ஸாக்ஷாத்கர்த்ருநாமேகசக்திக்ருதம் || க்ரியா மஹேஶ்வராம்.
பேதேந கல்பயாமாஸ வ்ருஷஸம்பவ: | க்ரியா கர்த்ருத்வ வி
ஜ்ஞேயம் ஸ்தாணுக்கர்த்ருத்வநாமத: || மஹதஸ் பஞ்சாஸ்த்ரக
ஸாக்ஷாத்ஸர்வகாரணகாரணம் | ஸதா ஶிவஶிவம் ப்ரா
ஹு: ஶிவாஸாஸ்த்ர நிஶ்சிதம் ||

க்ரியாசத்தியினாலே சதாசிவத்தில் சஹஸ்ராம்சமாகச் சகளமாகிய மஹேஶ்வரரூபமாய் இருபத்தைந்து விக்ரஹபேதமாகிய சுத்தமாயா சருத்யத்தைப் பணணுவர்.

இவர் ப்ரவிர்த்தர். இவர்க் கநந்கேஶ்வரர் என்றும் பெயர்.

* ததுக்தம் தத்ரைவ — கர்த்ருரூபஸ்ய ருத்ரஸ்ய ஸஹஸ்ராம்
ஶமேஶஸ்ய ருத்ரஸம்பவ: | ஶமேஶாம்ஶகலாவிஷ்ட்ராக்
ஸம்ருஷ்டிவிக்ரஹ்யாஸ்து தே: | பஞ்சவிம்ஶதிமேதேந தத்ர
திஷ்டந்தி பஞ்சவிம்ஶதி: || ஸம்வேஶ்யம் நிஶிவஸ்ஸ கர்த்ராப்ரா
க்தாநேஶாவிதேவப்ரஸாரிதி ||

சேவியராய் - சதாசிவாதி மூர்த்திகளுக்கு மனோன்மனியாதி போகசத்திகளுமாய்,—

தேசமொடு செல்வமாகி-சிவனுங் காதாரதேக கரண வஸ்த்ராபரண ஆயுத ஐஸ்வரியங்களுந்தானேயாகி.

* ததுக்தம் ஸம்பாதேவே — ப்ரஸ்ருஷ்டிஸ்ரீரஜயோ தேவஸ்ர
ஷ்டாரஸ்து ஜ்ஞாநக்ரியாகாரண ஶாஸநஜாநஶ்ச ஸ்வா |
வைஶ்வரூபசாயதநஜா வாரணாத்ககண்கிதோயஹ்வ வஹி
தேவிஶமாங்கஸ்யாஸிதி ||

பேசரிய வுயிரையெலாம் பெற்றுநோக்கிப் பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட் டாசகலு மடியருள த் தப்பனுடனிருக்கு மன்னையருட் பாதமலர் சென்னிவைப்பா ம் - (இவ்வளவென் றிலக்கஞ்சொல்ல வரிதாகிய) அதாவது அ ளவிடப்படாத ஆன்மாக்களையெல்லா மீன்றும் வளர்த்து ம லபரிபாகத்திலே பேரின்பத்தையுங் கொடுத்து மேல் ஜநநமில் லாதபடியும் பண்ணி யாணவா திருத்ற நீங்கின வான்மாககளி டத்திலே சர்வான்மாக்களுக்கும் பிதாவாகிய சிவத்துடனே பேதமற ப்ரகாசித்திருக்கும் லோகமாதாவினுடைய பாதார விந்ததைத் தலையின்மேற் பாவிப்பாம். எ-று.

பதியைப்போல் பசுவு மநாதி, அதற்கு உற்பததி காசமுமி ல்லையென்று சாஸ்த்ரங்களிலே சொல்ல, இவ்விடத் தீஸ்வர ளுன்மாக்களுக்குப் பிதாவென்றும் ஈஸ்வரியார் மாதாவென் றுஞ் சர்வப்பிராணிகளையும் பெற்றுரெனறுஞ் சொல்வது வி ரோதமெனனில்? விரோதமில்லாதபடி கூறுவாம்! ஆன்மாக்க ள மஹாப்ரளயகாலததி லாணவகேவலமாக விருந்தபொழுது ஞானம் ப்ரகாசியாதபடியாலே யானமாவென்ப தொனறில் லை யென்பதுபோல நினறது; அதை ச்ருஷ்டிகாலத்திலே ஸ்ரீ ஈ ஸ்வரா விநாபூதையான சத்தி, சுத்தாசுத்த மாயைகளிலே த த்ததாகாரமான கலாதிகளை யுதிப்பித்து, அந்தக் கலாதிகரண ங்களிலுலே யாணவமல சத்தியைச் சிறிதுநீக்கி, யான்மஞான ததைத்தான பேதமறநின்று ப்ரகாசிப்பிக்கையால்; ஈஸ்வரசத் தி யான்மாக்களைப் பெற்றதென்றது. அந்தச்சத்தி ஈஸ்வரா வி நாபூதையில் வேறற விருக்கையா லீஸ்வரநிமித்தகாரணமாகிய பிதாவெனறது. ஆணவமல பரிபாகத்திலே யான்மாக்களை வி ஷயசுகங்களான சிற்றின்பத்திற்கேதுவாகிய ஸ்தூல சூக்கும சரீரங்களிலின்றும் வாங்கிப் பேரின்பஸ்வரூபமாகிய சிவனுடன் றன்னைப்போ லவிநாபூதமாக வேறற நிற்கப்பண்ணி, இவ்வாறு

ண்டான வான்மாக்களுக்கு ஸ்ருஷ்டிகாலத்திலே யாணவகே வலத்திலே நின்றுநீங்கித் தன்னிடத்திலே ஜநிப்பதையும் (பிற ப்பினையும் என்ற—வும்மையால், ப்ரளயகாலத்திலே யாணவ கேவலமாகையான மரிப்பது போன்றதையு) மொழித்து; த கையப்படாத ப்ரகாச ஞானஸ்வரூபமாகி, தானும் பரமாநந் த ஸ்வரூபமாகிய சிவமும்,தகைவற்று ஞாதிருஸ்வரூபமான வா னமாக்களிடத்திற் பேதமற நிற்பார்கள்.

¶ ஈஸ்வரா விகாபூதா - ஈஸ்வர அவிகாபூதை எனப்பிரி த்து ஈஸ்வரனுக்கு பினமைற்றிருத்தல் எனப்பொருள்கூறுக.

பௌதிகதேகத்திற் கபிலியத்தி யேதுவானது கொண்டு பிதா நிமித்தகாரணமென்றும்,மாதா வுபாதாககாரணமென்று ம், பிள்ளை யவ்விருவர் காரியமென்றும் விவகாரம் §ஆபால கோ பால ப்ரசித்தமாகையால் முத்தி பரியந்தஞ் ச்ருஷ்டிகாலங்க டோறும் சந்தாநமாக ஸ்வரூபாபி வியக்தியைப்பண்ணின வீ ஸ்வரசத்தியையு மீஸ்வரனையு மாதாபிதா வென்பதும்; அவர்க ள் காரணம் ஆன்மா காரியமென்பது முசிதம். ஆகையா லீஸ் வரன் பிதாவென்றும் ஈஸ்வரி மாதாவென்றுஞ் சொல்லுகிற து சர்வசாஸ்த்ரப் பிரசித்தம். ஈஸ்வரன காரணமென்பதும் ஆன்மா காரியமென்பது முத்தி பரியந்தமுண்டு. முத்தியிலே ஈஸ்வரன காரணமாகிலு முத்தியந்த்ர மான்மா சிவஸ்வரூப மே ஆகையாற் காரணகாரிய பாவமில்லை. ஆகில் பாசச் † சே த மொருகாலமு மான்மஸ்வரூபப் பிரகாச மொருகாலமோ வென்னில்? அப்படியல்ல! பாம்பு ❊ குப்பாசங் கழற்றினபொ ழுது குப்பாசங் கழன்ற தொருகாலமும் பாம்பினுடைய ப்ர காச மொருகாலமு மல்லாததுபோல; பாச ‡ களைமும் ஸ்வரூ பாபி வியத்தியு மேககாலமே.

§ ஆபால கோபால நியாயம் பாலியாள் முதல் அறிவினரான இடையரீறாக. எ-து. † சேதம்-நீக்கம். * குப்பாசம்-சட்டை, ‡ களகம் - நீக்கம்.

* தத்த்வஞ் ஜடஞ்சேஹ கார்யஞ்சைவ நாநாவித்தஸ்த்தூலா வஸ்துநாமேஷா ஸாவயவ । யாவஜ்ஜநோ மோஹிநோ ஹ்ய நு ஸந்ஸ்க்ருத்யப்ரயத்நேநாஸ்வாத்யந்தே ஸிவஸேவிந: காரணஞ்சைவ காரணம்ச । நத்ஸ்வருத்தி தத்ஸாத்விகஸ்ய ஹ்ர ஸ்யே ஷாவிகாரஸ்ச மோஹாத்மாந: ॥ வஹ்ராவஹ்ரா ந । ஸா வஸ்த்திகஸ்ஹ்ருஷ்டிரவி । பத்வா: காரணஸாவ: கார்யஞ்ச ஜாபாஸ்த்த தேஜஸஸ்ஸ்வஸம் யஸ்ய பஸ்யா தஸ்ய த்ரு ஸாபஸ்யக்ஷுஸ்சக்ஷுஷ்மதி. ❋

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஓதனத்தினது பாகஞ் சாத்தனது யாகமென்கிறதுபோலக் கர்த்தாவாகிய சிவனுற் கனமமாகிய ஜடசித்துக்களிலேக் கிரியையாகப் பண்ணப்படுகையால் சிவனது சிருஷ்டி திதி சங்காரம் திரோபாவம் அநுக்கிரகம், ஜடசித்துகளது சிருஷ்டி திதி சங்காரம் திரோபாவம் அநுக்கிரகமென்றுஞ் சொல்லப்படுமென்றறிக. (ஆகி என்பதனைப்பிரித் தெங்குங்கூட்டுக. ஈசனுக்கு அருளாகி அருளென்பதாகு பெயராதலால்) அருளாகி - சித்தாகிய வான்மாவினிடத்திலே சிவனுக்கொப்பாகு முத்தி சித்திக்கும்பொருட்டு மலநீக்க முன்றடைபட்டிருந்த பேரறிவு பெருந்தொழிலாகிய சிவத்துவவிருத்தி விளக்கமென்னு முருவின அநுக்கிரகத்தைப் பண்ணும் பராசத்தியாகி,—

இன்பமாகி - க்ரமத்திலே பேரின்பமாவதாய் அந்தப்பேரின்பத்துக்குக் காரணமாகுஞ் சிற்றின்பத்துக்கு நிமித்தமாகிய சருஷ்டி திதி சங்காரம் திரோபாவமெனகிற நாலு க்ருத்யங்களை ஆரணி ஜநநீ ரோதயித்திரிரூபமாயிருந்து பண்ணுந் திரோதானசத்தியெனனு மாதிசத்தியாகி. (பரசிவாதீநமாகிய சிவனுக் கினபத்தைப்பண்ணும் பராசத்திபதீநமாகிய வினபசத்தியாகிய எனனும் தொனிப்பொருளுமாம்.) இப்படிப் பஞ்சக்ருத்யம் பண்ணுமிடத்து நியமித் தறிந் துத்தியோகித்துச் சங்கற்பித்துப் பண்ணவேண்டுகையால்,—

இச்சையாகி - இந்தப்பொருளிப்படியாம் இந்தப்பொருளிப்படியாகாதெனனு நியமத்தைப்பண்ணு மிச்சாசத்தியாகி,—

அறிவாகி-இதுகாரண மிதுகாரண மிதுகாரிய மிதுப்ரயோசநமெனனுஞ் சாதத சவிகற்பஞானத்தைப் பண்ணு ஞானசத்தியாகி,—

இயற்றலாகி - க்ரியாசத்தியாயிருந் திதைநான் பண்ணுகிறேனென றுத்தியோகித்தலாகிய சாதத சவிகற்பக்கிரியையைப்பண்ணி, நிருபப விச்சாசத்தி ரூபமாகியிருந் திந்தவஸ்திப்படியாகக் கடவதென்று சங்கற்பத்தைப் பண்ணும் கிரியாசத்தியாகி, பந்தத தூலபஞ்சக்ருத்யங்களையும் அந்தத் தூலபஞ்சக்ருத்யங்களுக்கு யோக்கியத்தைப் பண்ணுமதாகிய சூக்குமபஞ்சக்ருத்யங்களையும் பண்ணுமிடத்தில் லயபோக வதிகார காலங்களிலே பண்ணவேண்டிய தாகையால்,—

இலயமொடு போகமதிகாரமாகி - லயபோக வதிகாரங்களுக்குள் லயத்தைச் சொல்வாம். (அர்த்தமாத்ரயோசன நிர்விகற்பக்காட்சி, ப்ரத்தியர்த்தக்காட்சிமாத்ர சவிகற்பப் பார்வைபார்க்குஞ் சுத்தசிவன்போ லிருந்தாலும் போகனாயுமதிகாரனாயு மநுக்ரஹ க்ருத்யமாத்ரங் குறித் திருக்குமிப்

பித் துள்வைத் திருக்குமயோசக சாத்த சவிகற்ப ஞானக்கிரியா சங்கற்பவாரு யிருக்கின்ற விந்துவைநீங்காத விலயருககு முத்திபண்ணு மநுக்ரக க்ருத்ய மப்படியிருக்கும். விந்துவை நீங்கிய விலயருககு வியத்திபண்ணு மநுக்ரக க்ருத்ய மெப்போது மியற்கையா யிருக்கின்றதாகிலுந தூலபஞ்ச க்ருத்யததுக்கு யோக்கியத்தைப் பண்ணுமதாகிய சூக்கும பஞ்சக்ருத்யத்தைப் பண்ணும்படி இலயகாலத்திலே போகரையும் அதிகாரரையுஞ் சூக்குமிப்பித் துள்வைத்துச் சிருஷ்டிகாலத்திலே தா னவர்க் குள்ளுமாயிருப்பர். இலயராதலால் அந்த முத்திவியத்தி க்ருத்யமு முடித்துத் தூலபஞ்ச க்ருத்யநிமித்தமாகிய சூக்குமபஞ்ச க்ருத்யத்தையும் பண்ணுவர். ஆகையால், மஹாப்பிரளயத்திலே தூலபஞ்ச க்ருத்யங்களை விட்டிருக்குங் க்ரியாசத்திக்குச் சூக்கும பஞ்சக்ருத்ய நிமித்தஞ் சூக்குமித்து நியமித்தல், சற்றே சவிகற்பித்தறிதல், அப்படி யுத்தியோகித்தல், நிர்விகற்ப சவிகற்ப வேற்றுமைதோற்றச் சங்கற்பித்தலென்னுந் தொழில்களைப்பண்ணு மிச்சாசத்தி ஞானசத்தி க்ரியாசத்தி, அந்தக் கிரியாசத்தி பேதமாகிய விச்சாசத்திகளை பங்கியமன்றித் தனக்குள்வைத்து நிர்விகற்பவறிவு மாத்ரத்தைப்பண்ணு ஞானசத்தி மாத்ரமாயிருத்தல் லயம்) (போகத்தைச சொல்வாம். அந்தக் கிரியாசத்திக்கு சிருஷ்டியாதி தூலபஞ்ச க்ருத்யங்களைப் பண்ணும்படி நியமித்தல் அறிதல் உத்தியோகித்தலென்னுந் தூலயோசக பவுத்த சவிகற்ப வேற்றுமைதோற்றுஞ் சூக்கும யோசக சாத்தசவிகற்பத் தொழில்களின துள்ளுத்திரேகத்தைப் பண்ணி இச்சாசத்தியாயு ஞானசத்தியாயுங் க்ரியாசத்தியாயு மிருத்தல் போகம்.) (அதிகாரத்தைச் சொல்வாம். அந்தக் கிரியாசத்திக்குச் சொல்லிய சாத்த சவிகற்ப நிர்விகற்ப வேற்றுமைதோற்றுஞ் சூக்கும யோசக சாத்தசவிகற்ப சங்கற்பத்தினது அத்துர் ருத்ரேகத்தைப்

பண்ணிக் கிரியாசத்தி பேதமாகிய விச்சாசத்தியாயிருத்தல் அதிகாரம்.) ஆகையாற் றன்னைக்குறித்துப் பிரபஞ்சம் ப்ரயோசனமாகத் தோற்றுதாதலாற் றன்னைக்குறியாமற் ப்ரபஞ்சத்தை ஸ்வரூபமாத்ரமாகப் பார்த்தலைப்பண்ணுவது, "ஆதிநடுவந்தமிலா வளவில்சோதி." என்று முன்சொல்லியது சுத்தசிவச்சுபாவம். பிறர் ப்ரயோசனத்தைக் குறித்துப் பார்த்தலைப் பண்ணுதலைச் செய்வ திப்போதுசொல்லிய விலயபோக அதிகாரச் சிவச்சுபாவம் இந்த விலயபோக அதிகாரச்சுபாவமும் சர்வ கருத்ருத்வதத்துக்குட் சிறப்பு கருத்ருத்வ மாகலால் ஔபாதிகதடத்த லக்ஷணமன்று, நிருபாதிக மிருவகை பொருவகைச் சுபாவமும் சொரூபலக்ஷணமே. ஆதலால்,இந்த விலயபோக வதிகாரங்கள் விருத்தி பரிணதி விவர்த்தாரம்பங்களின்றொன்றுகிய நித்தியங்கள் சோபாதிகங்கள் சத்தியங்களென்று: பஹிரங்கபேதமாய்ப் பிரித்தற்கரிதாகி அந்தரங்கபேதமா யிருக்கின்ற சிவபேதமாயும் சிவசத்திபேதமாயும் சிவசத்தி வ்யாபாரபேதமாயு மிருத்தலால் வ்யாபாரங்கட்கு இலயபோக வதிகாரமென்னு மங்கரங்கபேதமுண்டு: சிவனுக்குஞ் சிவசத்திக்கு மில்லையென்று சொல்லப்படாது. காரணபேத மில்லாதிருத்தாற் காரியபேத மில்லையாதலால் சிவ சிவசத்தி சிவசத்தி வ்யாபாரங்கள் மூன்றிற்கும் தனித்தனி இலயபோக வதிகாரங்களபிரித்தலில்லாத வந்தரங்க பேதமாயும் பகிரங்கத் தபேதமாயும் நித்தியங்களாயுஞ் சத்தியங்களாயு மிருக்கும்; கற்பிதமூர்த்தி வடிவமாத்ரத்தாற் கற்பிதவநித்தியங்களாயு மசத்தியங்களாயு மிருக்குமெனவறிக. விந்துவுக்கும் வைந்தவ சரீரிகட்கு மாத்ரம் இலயபோக வதிகாரங்கள் பிரித்தற்கெளிதாகிய பகிரங்கபேதமா யசத்காரியத்தால் நித்தியங்களாயு மணுமூர்த்திவடிவுமுதற் காரியமாத்ரத்தா லநித்தியங்களாயு மசத்தியங்

களாயு மிருக்குமெனவறிக. திரும்ப விலைபோக வதிராக்கிரமங்களிலே,—

நேசவுருவ மருவுருவ முருவமாகி - சோதியாம் நிஷ்கள சகளநிஷ்கள சகளமாகிப் பின்னு மதிகாரத்துக்குப் புறம்புறமன்றுமாயிருக்கும் பரசிவனும் மகாசதாசிவனுமோராகலை யீரிரு கலைக் கிரமத்திலே யதிஷ்டிக்கப்பட்ட சாந்தியதீதை சாந்தி வித்தை ப்ரதிஷ்டை நிவிர்த்தியென்னுங் கலைகளில் விழுந்த பஞ்ச சாதாக்கியங்களையும் பஞ்சமூர்த்திகளையு மிந்த விருகலைப் பிறுள்ள பஞ்சப்பிரமங்களையு முறபவிப்பிக்கும் தூயகாரிய பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி ஞானசத்தி க்ரியாசத்திகளுமாகி, பின்னும் ஈசானியாதி மூர்த்தியந்தமாகிய பஞ்சசத்திகளுமாகி, வாமாதி சர்வபூததமனியந்தமாகிய வஷ்டசத்திகளுமாகி, பின்னு மனோன்மனியாதி சரஸ்வதியந்தமாகிய பஞ்சசத்திகளுமாகி,—

தேவியுமாய் - போகசத்தியுமாய்,—

தேசமொடு செல்வமாகி - யோகசத்தியொடு வீரசத்தியுமாகிப் பின்,—

பேசரி வுயிரையெலாம் பெற்று - எண்ணிறந்த வான்மாக்களுக்குப் பரதேகமென்றும் சூக்குமதேகமென்றும் தூலதேகமென்றுஞ் சொல்லப்படுந் திரிதேகங்களோடுங் கூட்டி அறிவு விளங்கச் சிருஷ்டித்து,—

கோககி - இரக்ஷித்து,—

பெரும்போகமவையளித்து - புவனபதிகளாயிருக்கின்ற பரபோகங்களையும் புவனவாசிகளாயிருக்கின்ற அபரபோகங்களையுங் கொடுத்துத் திரோபவித்து,—

பிறப்பினையு மொழித்திட்டு - சங்கரித்துச் சிவனுக்கொப்பாகி யிருக்கும் பரமுத்தியையும் சுத்த மாயாபுவனப் பிராப்தி

யாகிய வபரமுத்தியையுங் கொடுத் தநுக்ரஹித்த,—

ஆசகனு மடியருளத்து - தீக்ஷாசுத்தராகிய சாதகர் இருதயகமலத்திலே யவரவர் யோகியாநுகுணமாய்ச் சகள நிஷ்களசகள நிஷ்களநிருத்த மத்தியதிலக நிஷ்களாதீதமென்று முன்சொன்ன ஸவருபங்களாய்,—

அப்பனுடனிருக்கும் - சிவனோடுகூட நியாகம்பண்ணப் படும,—

அன்னையருட் பாதமலர் - உலகமாதாவினது பாதாரவிந்தங்களை,—

சென்னிவைப்பாம் - சிரசிலே சூட்டிக்கொள்ளா நிற்கின்றேம். எ - று.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

### கந்தன்வணக்கம்.

அருமறையாகமமங்கமருங்கலை நூறெரித்த
வகத்தியனுக்கோதுரைக்குமருட்குருவாங்குருவை
திருமறைமாமுனிவர்முனிதேவர்கட்தேவனை
சிவனருள்சேர்திருமதலைக்கவலிலையோர்தெய்வம்
பொருமறையார்கழல்வீரர்வீரன்கையிற்
பூநீர்கொண்டோவாதுபோற்றுமடியவர்கள்
கருமறையாவகையருளிக்கதிவழங்குங்கந்தன்
கழலிணைகளென்சிரத்திற்கருத்தில்வைப்பாம்.

(இ - ள்.) அருமறையாகம மங்கமருங்கலை நூறெரிந்த - ஓதியுணர்தற்கரிய நாலுவேதங்களையு மிருபத்தெட்டு சிவகாமங்களையு மாறங்கங்களையு மற்று மரிதாகிய கலைஞானங்களையு முதலே யோதியுணர்ந்த,—அகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருவை-அகத்தியமஹாருஷிக்கு வேதாந்த ஞானத்தை யநுக்கிரகம் பண்ணப்படாநின்ற க்ருபாமூர்த்தியாகிய நித்தியபாலனாகிய குரு,—திருமறைமாமுனிவர்முனி § வேதோக்தா சாரயுக்தரா யிருக்கிற ருஷிகளுக்கெல்லாம் ப்ரதானமாகிய முனி,—* தேவர்கடந் தேவனை சிவனருள்சேர் திருமதலை-தேவர்களுக்கெல்லா நாயகமாகிய சிவன், தாரகாசூரனைச் சங்கரித்து அவனாற் பீடிக்கப்பட்ட தேவாதிகளை யிரக்ஷிக்கவேண்டுமெனுகிற க்ருபையினாலே தரப்பட்ட, ஸ்ரீமத் குமாரமூர்த்தி,—தவநிலையோர் தெய்வம் - தபசினுடைய நிலைமைக்குப் பிரதிஷ்டையான வொப்பற்றதேவன்,—பொருமறையார் கழல்வீரர் வீரன் - வேதத்தினாற் றுதிக்கப்பட்ட ஸ்ரீபாதங்களையுடையவன மஹாவீரர்களெல்லா † மக்ரகண்யனை,—கையிற் பூநீர் கொண் டோவாது போற்று மடியவர்கள்-சர்வகாலமுங் கையிலே புஷ்பத்தையும் ஜலத்தையுங்கொண் டர்ச்சித்துத் தோத்திரவழிபாடுசெய்யுந் தொண்டர்கள்,—கருமறையா வகையருளிக் கதிவழங்குங் கந்தன் - ஜநநாதிதுக்கங்களினாற் றங்களுடைய ஸ்வரூபஞானத்தை மறைக்கப்படாதபடிக்கு சத்கதியை க்ருபைபண்ணுமவன், சத்ருக்களைச் ¶ சோஷிப்பிக்கையினாலே கந்தனென்னுந் திருநாமத்தையுடையவன்,—கழலிணைக ளென்சிரத்திற் கருத்தில்வைப்பாம் - வீரக்கழலைப்பொருந்திய விரண்டு ஸ்ரீபாதங்களையு மென்னுடைய சிரசினுமிருதயத்தினும் பொருந்த பாவிப்பாம்.

§ வேதோக்தா சாரயுக்தர் - வேதத்தினாலே சொல்லப்பட்ட வாசாரங்களை யநுஷ்டிப்போர். * தேவர்கடக தேவ

னென்பதனை யொருமுடிபாக்கி இந்த்ராதிதேவர்கட்கெல்லா மதிதேவனுயுள்ளவன் எனவும் இப்பாடல் முழுமைகரும் பொழிப்புரையாகவுமசில ப்ரதியி லெழுதப்பட்டிருக்கிறது. †அக்ரகணணியன்-முதன்மைபெற்றவன, ¶ சோஷிப்பிக்கை - உலர்ததல், வறறுதல், வாட்டுதல்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அருமறையாகமமங்கம் - தனதிடத்திற் சிவதீக்ஷைபெற்றபின ஆகமம்,அதற்குமுன வேதவேதாங்கங்கள்,அதற்குமுனமுன்பினமுன,—அருங்கலை - அரிதாகிய அறுபத்துநான்கா யிருக்கினற கலைஞானங்கள,—நூல் - சத்ததர்க்க மீமாங்கிச வேதாநதமெனகிற சாததிர மிவைகளைத் தான்போதிக்க,—தெரிந்த-அவைகளிலே சொல்லப்பட்ட பதார்த்தங்களை உத்தேச லக்ஷண பரீக்ஷைகளோடேகூட வறிந்த,—அகத்தியனுக்கு - அகத்தியமாமுனிக்கு,—ஒத்துனைக்கும் - பிரணவத்தை யுபதேசம்பணணி யதனமுடிவிற் சித்தாந்த மஹாவாக்கிய வுபதேசஞ்செய்யும்,—அருட்குருவாங்குருவை-அநுக்ரக விக்ரக குருவாகிய குமாரன,—திருமறைமாமுனிவர் முனி-வேதவித்தாகிய முனீஸ்வரர்களுக்கு முனீஸ்வரன்,—தேவர்கடந் தேவன் - தேவர்க்குந் தேவன,—சிவனருள்சேர் திருமதலை-சிவனது க்ருபைபொருந்திய புத்திரன்,—தவநிலைபோர் தெய்வம் - தவசைப்பண்ணுகிறபேர்க்குப் பலனகொடுக்கிற தேவன்,—பொருமறையார் கழல்வீரர் வீரன் - பொராநின் றறைந் தார்ப்பரியாநினற வீரவண்டயத்தையுடைய வீரர்க்கும் வீரன்,—கையிற் பூநீர்கொளை டோவாத போற்றுமடியார்கள் - கரத்திற் புஷ்பந் தீர்த்தங்கொண்டு இடைவிடாது பூசிக்கும் பத்தர்களுக்கு,—கரும

றையாவகையருளி - ஜநநமரணங்களுக்குக் காரணமாகிய மல மறையாதபடி க்ருபைபண்ணி,—கதிவழங்கும்-சிவஸ்வரூப வி ளக்கமாகிய மோக்ஷத்தைக் கொடுக்கும்,—நநதன் - நமது கு மாரஸ்வாமியினது,—கழலிணைகள் - இருபாதங்களை,—என்சிர த்திற சருத்தில்வைப்பாம் - எமது சென்னியில்வைத்து வணங் கி மனசில்வைத்து த்யாநம்பண்ணுவாம்.

## மறைஞானதேசிகர் உரை.



சுபக்ஷப் பாயிரம்.

மேற் சுபக்ஷஞ் சொல்லுவான றொடங்கித்
தெய்வவணக்க முணர்த்துகிறார்.

அறுவகைச் சமையத்தோர்க்கு மவ்வவர் பொரு ளாய்வேறாங், குறியது வுடைத்தாயவேதா கமங்களின குறிபிறந்தங், கறியினி லருளான்மன்னி யம்மையோ டபபணுகிச், செறிவொழி யாதுநின்ற சிவனடி சென் னிலைவப்பாம். (க)

இ-ள். அறுவகைச சமயத்தோர்க்கு — உலோகாயிதன் பௌத்தன் அருகன் மீமாஞ்சகன மாயாவாதி பஞ்சராத்ரியாகிய புறச்சமயிக ளறுவருந தாநதாங்கொண்ட கோட்பாட்டுக்குத் தக்க மூர்த்திகளுமாய்

மவ்வவர் பொருளாய் — (see above)

வேறாங் குறியது வுடைத்தாய் — முற்கூறிய சமயிக ளிதுவே பரமமான மூர்த்தியென்று குறிக்கத்தக்க கோட்பாட் டுக்கெட்டாத முதலுமாய்

வேதாகமங்களின் குறியிறந்து — வேதாகமங்களிற் கூறிய நினைவுகளுக் கெட்டாத பொருளுமாய், அயினதியப்படா ஞெவெண்ணில் ?

அறிவினி லரு ளானமனவி — சிவன் றனது காருண்யத்தினாலே பக்குவான்மாக்களுடைய வறிவிலே யநவரதமு நிலைபெற்று

அம்மையோ டப்பனாகிச் செறி வொழியாது நின்ற சிவனடி சென்னி வைப் பாம். — பார்வதியாரும் பரமசிவனுமாய் விட்டுநீங் காம லநவரதமுஞ் சராசரங்களாகிய வான் மாக்கடோறும் வியாத்தியினாலே யந்நியமா யிருக்கிற சிவனுடைய சீர்பாதங்களை யாஞ் சென்னியில் வைப்பாம்—எ-று.

யாமென்ப தெழுவாய், வைப்பாமென்பது பயனிலை. "தன்மைப்பெயரு முன்னிலைப்பெயருந் தானுந்தொகலுமா மின்னிசைசசெய்யுளினென்றனை" என்பதனாற் றன்மைப்பெயர் தொக்கதெனவறிக.

பசுக்களினது நிறம் பலவானாலும் பால் ஒன்றானாற்போலச் சமயங்கள் பலவானாலும் பலத்தைக் கொடுக்கிறவன் சிவனொருவ னென்பதுகருத்து. "அறிவினான்மிக்க வறுவகைச் சமயத்-தவ்வவர்க்கங்கே யாரருளபுரிந்து" என்னுந் திருவாக்கினு முணர்க.

சிவன சைவத்திற்குத் தாண்டவபூஷணனென்னு மூர்த்தியாயும், பாசுபததத்திற்குத் திருநீறுஞ் சடைமுடியுந்தரித்த மூர்த்தியாயும், மாவிரதத்திற்க் கெனபுமாலைதரித்த மூர்த்தியாயும், காளாமுகத்திற்குப் படிகம் புத்ரதீபமணிகடரித்த மூர்த்தியாயும்,வாமத்திற்கு அகநியுமுபவீதமுந்தரித்த மூர்த்தியாயும், வைரவத்திற்குத் தமருகமுஞ் சிலம்புந்தரித்த மூர்த்தியாயும், இவர்களெல்லா முகக்கண்ணையு முடையராயிருத்தலால் அவ்வவர் பொருளெனச் சிறப்பித்தார். (க)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---

எ - து. புறச்சமயமாகிய உலகாயிதன் புத்தன் சமண ன் மீமாம்சன் மாயாவாதி பஞ்சராத்தி அறுவர்களும், சைவம பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் பைரவம் என்னு ம றுவர்களு மவரவர்கோட்பாட்டுக்குத்தக்க மூர்த்திகளும் பொ ருளுமாய், அவர்கள் கோட்பாட்டுக் கெட்டாத அடையாளமுள் ள முதலுமாய்; வேதாகமங்களிற் கூறிய அடையாளங்க ளின்னு வுக்கெட்டாததா யிருக்குமாறு லறியப்படாத சூந்யமோவெ னவில்? பக்குவான்மாக்களுடைய வறிவினுள்ளே சிவன காரு ண்யத்தினாலே விளங்கி நிலைபெற்று நின்றுளளவன். மற்றவி டத்தி லில்லையோவெனனில்? பார்வதியும் பரமேஸ்வரனுமாகி ய விருவரும் சடசித்துக்க ளியாவையினும் வ்யாபகமா யந்நி யமாகவிருக்கிற சிவனுடைய சீர்பாதகமலங்களை யென்தலைமே ல்வைப்பாம்—எ-று.

யாம் - எழுவாய் வைப்பாம் பயனிலை.

பசுக்களின து நிறம்பலவாறுலும் பாலொன்றுனல்போல் சமயங்கள் பலவாறுலுஞ சமயத்துச்குக் கொண்டதெய்வங்க ள் பலவாறுலு மதிலே நின்றும் பலத்தைக்கொடுக்குஞ் சிவ னொருவனே! என்பது கருத்து.

இதற்குச்சம்மதி—"அறிவினுன்மிக்க வறுவகைச்சமயத்- தவ்வவர்க்கங்கே யாரருள்புரிந்து" என்னும் பாட்டாலும் "யா தொருதெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகியங்கே, மாதொருபா கனூர்தாம் வருவர்மற் றத்தெய்வங்கள், வேதனைப்படுமிற க்கும் மறக்குமேல் வினையுஞ்செய்யும் என்பதனுலுமறிக. சித்- உ—ரூ, உ௫—௪.

வேறுங்குறியது வுடைத்தாயென்றது, சைவத்திற்குத் தா ண்டவபூஷணனென்னு மூர்த்தியாயும், பாசுபதத்குத் திருநீறு

ஞ் சடையுந்தரித்த மூர்த்தியாயும், மாவிரதற்கு எலும்புமாலைதரி த்த மூர்த்தியாயும், காளாமுகத்திற்குப் படிகம் புத்ரதீபந்தரி த்த மூர்த்தியாயும், வாமதந்திர்கு அசநியும் உபவீதத்தையுந் தரி த்த மூர்த்தியாயும், பைரவத்திற்குத் தமருகமுஞ் சிலம்புந்தரித் த மூர்த்தியாயும்; இவர்களெல்லா முக்கண்ணுமுடையரா யிருத் தலா லவ்வவர்பொருளாய் வேறுங்குறியது வுடைத்தாயென் று சிறப்பித்தானெனவறிக

* இப்பாட்டும் உரையும் சிலப்ரதிகளிலில்லை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சுபக்ஷ. சிவதோத்ரஞ்செய்கிறார்.

அறுவகைச் சமயத்தோர்க்கும் - புறச்சமயிகளறுவர் க்குள் உலோகாயிதன் ப்ருதிவு அப்பு தேயு வாயு காலுபூதங் களுமே கர்த்தாவெனபன், அருகன உலகமெலா மிந்தப்படி நித் யமாயிருக்கும்-தானே அருகேசுரன் குருதவமாத்திரத்திலே கர் த்தாவாயிருப்பனென்பன, புத்தனு மப்படி தானே சுகதா கர் த்தாவென்பன், மீமாங்கிசன் உலகமெலா மிந்தப்படி தானே நித்யமாயிருக்கும்-சரீரா தியுற்பத்தியிலே கன்மந் தானே கர்த் தா வெனபன், பாஞ்சராத்ரி ஸ்ரீமந் நாராயணர் தானே யபி ன்னநிமித்தோபாதானராய் ஜகத்கர்த்தாவாயிருப்பாரென்பன், மாயாவாதி பிரமந் தானே தனவிடத்திலே பரிணாமத்தினாலே தான் விவர்த்தத்தினாலேதான் ஜகத்கர்த்தாவாயிருக்குமென்ப ன்,இப்படிச் சொல்லாநின்ற அறுவகைச் சமயத்தோர்க்கும்,— அவ்வவர் பொருளாய் - அவரவர்களாலே சொல்லப்பட்ட கர் த்ருகாரணங்களை யதிஷ்டித்துக்கொண்டு அந்தக் கர்த்ருகார ணஸ்வரூபியாய், பின்னு முட்சமயிகளறுவர் ; அவர்கட்குச் சிவனே தேவதையாகையாற் சைவர்க்குந் தாண்டவபூஷண

னென்னு மூர்த்தியாய், பாசுபதர்க்குத் திருநீறுஞ் சடையுந் தரித்த மூர்த்தியாய், மஹாவிரதர்க்கு எலும்புமாலைதரித்தமூர்த்தியாய், காளாமுகர்க்குப் படிகம் புத்ரதீபமணிகள்தரித்த மூர்த்தியாய், வாமர்க்கு அக்நியு மூபவீதமுநதரித்த மூர்த்தியாய், பைரவர்க்குத் தமருகமுஞ் சிலம்புநதரித்த மூர்த்தியாய்,—வேறுங்குறியது வுடைத்தாய் - வைதிகசைவர்க்கு உருத்ராகாரமாய், சைவசித்தாந்திகட்குச் சதாசிவாதியாகாரமாய், அதின மிகுந்த பகருவர்க்கு,—வேதாகமங்களின குறியிறந்து - வேதாகமங்களிற் கற்பிக்கப்பட்ட மூர்த்திகளைக் கடந்து,—அங்கு - அவ்விடத்தில்,—(அறிவினி லருளான்மன்னி) - அருளால் - சிவசத்தியால் விளக்கப்பட்டு மனோவாக்கதீதமாயிருக்கின்ற,—அறிவினில் - தீக்ஷாவான்களுடைய சிற்சத்தியிலே,—மன்னி - தோற்றி,— அர்மையோடப்பனாகி - சிவசத்திமாத்ரசொரூபமாகி,—செறிவொழி யாதுநின்ற - எங்கும் வ்யாபகமாயிராநின்ற,—சிவனடி - சிவனது ஞானக்கிரியாசொரூபமா யிராநின்ற சத்திரூபசாமர்த்தியத்தை,—சென்னிவைப்பாம் - உன்மனாகலைக்குமேலே த்யாநம் பண்ணுமற் றியாநம்பண்ணுவாம்: நிர்விகற்பமாகச் சிந்திப்பாம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

ஏ - து. புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னு நானகனுள் அகச்சமய மொழித் தொழிந்த முக்கூற்றுப்புறங்களிற் றனித்தனி யறுவகைப்பட்ட சமயங்களினின்றுகொண்டவற்றுள்ளும் பலவேறுவகைப்பட வோர்த்துணர்கின்ற அவரவர்கொண்ட முதற்பொருளாய்; அவரின்வேறாகிய பாடாணவாதமுதலிய அகச்சமயத்தார்க்கு இலயம் போகமதிகாரமென்னு மூன்றவத்தையின் முறையே சத்திமு முத்தியோகமும் ப்ரவிர்த்தியு

மெனனுந் தொழில் வேறுபாடுபற்றிச் சிவன் சதாசிவன் மகே சனெனனும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவமெனனு ங் கடத்தக்குறிபே குறியாகவுடைத்தாய், சித்தாந்தசைவர்க்கு அத்தடத்தகுறியேயன்றி வேதாகமங்களின் கருத்திற்க தமாய், உயிர்க்குயிராய், உயிர்கட்கெல்லாமறிவைப் பிரப்பிக்கும் அம்மையப்பனுமாகி, எங்கணுமெக்காலமுஞ் செறிந்து வ்யாபகமாய் நின்ற சிவபிரான திருவடியைச் சிரமேற்கொள்வா மென்பதாம்.

பரபக்கத்துட் புறப்புறச்சமயத்தாரையும் புறச்சமயத்தாரையு மறுப்பவே, அம்முறைபற்றி அகப்புறச்சமயத்தாரும் மறுக்கப்பட்டாரோ யாவரென்னுங் கருத்தான், அவரையுமுட னறுழுவ அறுவகைச்சமயத்தெனப் பொதுப்படக் கூறினார்.

ஒர்த்தல் ஆராய்தல்.

விசேடியமடியாகலின் உடைத்தாயென்றார்.

சிவனடியென்றது உபசாரம்.

இதனுள், அறுவகைச்சமயத்தோர்க்கு மவ்வவர் பொருளாமெனவே மேற்கூறிப்போந்த பரபக்கத்துப் பொருளும், வேறுங்குறியது வுடைத்தாயெனவே முதற்சூத்ர முதலியனவைந்து சூத்ரத்திற் பெறப்படுந் தடத்தப்பொருளும், வேதாகமங்களின குறியிறந்தெனவே இரண்டொன்றி யேனைச்சொரூபலக்கணங் கூறும் ஆறுஞ் சூத்ரப்பொருளும், அறிவினிலெனவே ஆன்மஸ்வரூபங்கூறு மேழாஞ் சூத்ரப்பொருளும், அருளான் மனனியெனவே ஞானதரிசனங்கூறு மெட்டாஞ் சூத்ரப்பொருளும், அம்மையோடப்பனுகியெனவே ஞானமூனேயமு ஞானிருவுமாகக் காணப்படுமொன்பதாஞ் சூத்ரப்பொருளும், செறிவொழியாது நின்றவெனவே ஏகனுகிநிற்றல் கூறும் பத்தாஞ்

சூத்ரப்பொருளும் சிவனடி சென்னிவைப்பாமெனவே அரன மலரடிக்கீழிருத்தல் கூறும் பதினொராஞ் சூத்ரப்பொருளும், சென்னிவைப்பா மென்னுஞ் சொல்லியல்பான அணைந்தோர்தன்மை கூறும் பன்னிரண்டாஞ் சூத்ரப்பொருளுங் குறிப்பா னறியக் கிடந்தன.

இங்ஙனந்தொகுத்துக் காட்டுதல் மங்கலவாழ்த்துக்கு இலக்கணமென வுணர்க.

இனி, இதனுட் கூறப்படுமறுவகை வினையெச்சங்களானும் முதல்வனுடைய அறுவகைக் குணங்களுங் கூறப்பட்டன வென்றுரைத்தலுமொன்று. அதுகாட்டுதும்:—

அவ்வவர் பொருளாயென்றதனால் அங்ஙனம் பலவேறுவகைப்பட நிற்கு மநந்தசத்தியாகிய அளவிலாற்றலுடைமை கூறப்பட்டது.

வேறுங்குறியது வுடைத்தாயென்றதனால் அநாதிபோதமநாதிமுத்தத் தன்மையெனப்படும் இயல்பாகவே பாசங்களினீங்குதல் கூறப்பட்டது, நிராமயான்மா வெனப்படும் இயற்கையுணர்வினனாதலு மீண்டேயடங்கும்.

வேதாகமங்களின குறியிறந்தென்றதனாற் சுதந்திரனெனப்படுந் தன்வயத்தனாதல் கூறப்பட்டது.

அறிவினிலருளான் மன்னியென்றதனாற் சர்வஞ்ஞத்வமெனப்படும் முற்றுமுணர்தல் கூறப்பட்டது.

அம்மையோடப்பனாகி யென்றதனால் அலுப்தசத்தியெனப்படும் பேரருளுடைமை கூறப்பட்டது, விசுத்ததேகமெனப்படுந் தூயவுடம்பினனாதலு மீண்டேயடங்கும்.

செறிவொழியாதென்றதனாற் பூர்த்தியெனப்படும் வரம்பிலின்பமுடைமை கூறப்பட்டதென் றுணர்க.

இன்னும் விரிப்பிற்பெருகும்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

அறுவகைச் சமயத்தோர்க்கு மவ்வவர் பொருளாய் - சைவம் பாசுபதம் மஹாவிரதம் காளாமுகம் வாமம் வயிரவம் என்று சொல்லப்பட்ட வாறுவகைப்பட்ட சமயத்துள்ளார்களும் அவவவர்கொண்ட கொண்ட கோட்பாடுகளுக்குத் தக்கதாக வநுக்கிரகஞ்செய்கிறவத்தமாய்,— வேறுங்குறியது வுடைத்தாய் - இநத்ச்சமயங்கள் குறிக்கத்தக்க கோட்பாடுகளுக்கெல்லைப்படாத சுகஸ்வரூபத்தையுடைத்தாய்,—வேதாகமங்களின குறியிறந்து - வேதாகமங்களினாலே யறுதியிடப்பட்ட பொருளுக்கு மெட்டாததுமாய்,— அறிவினிலருளால்மன்னி - கனது காருண்யத்தினாலே யான்மாக்கள்தோறு நிலைபெற்று நிற்பதாய்,—அமமையோடப்பனுமி - ப்ரபஞ்சத்திலுள்ள வானமாக்களுக்கெல்லாம் மாதாவும் பிதாவுமாகி,...செறிவொழியாதுநின்ற சிவனடிசென்னிவைப்பாம் - இப்படி சித்தசித்துக் ளிரண்டினும்விட்டு நீங்காமல் நிற்கிற தம்பிரானுருடைய ஸ்ரீபாதங்க ளிரண்டையு மெனனுடைய தலையின்மேல் வைத்துக்கொள்ளாநின்றேன்—எ-று.

அறுவகைச்சமயத்தோர்க்கு மவ்வவர்பொருளாய். எ-து உலகாயிதன் புத்தன் க்ஷபணன் மீமாங்கிசன் மாயாவாதி பஞ்சராத்ரி என்றுசொல்லப்பட்ட புறச்சமயிகள் சிவனைக்கத்தாவாகக் கொள்ளாதபடியினாலே யவர்கள்கொண்ட கோட்பாடுகளுக் கறியப்படாத வத்தமாய்; சைவம் பாசுபதம் மஹாவிரதம் காளாமுகம் வாமம் வைரவம்என்று சொல்லப்பட்ட வறுவகைச்சமயத்துள்ளார்க்கு மவ்வவர்கொண்ட கோட்பாடுகளுக்குத் தக்கதாக அநுக்கிரகஞ்செய்கிற வத்தமாயிருக்கும் என்றது. இதற்குப்பிரமாணம் திருவாசகம் திருவண்

டப்பகுதி—"இருமுச்சமயத்தொருபேய்த்தேரினை - நீர்நசை தரவருநெடுங்கண்மானகணம்" எ-ம். "திருத்தகு - மறுவகைச்சமயத்தறுவகையோர்க்கும் - வீடுபேறாய்நின்ற" எ-ம். சித - பரபக்ஷம் பாயிரம் - ௧௦ - செ.—"இறைவனையுமிறைவனுலிய ம்பநூலும், மீண்டளவும்பொருளியல்பும்வேண்டுஞெய்தி, முறைமைகளும்பெத்தமொடுமுத்தியெல்லாம், முதலகிலமகத்தியன்றமுயற்சியாலே, சிறையுலவும்புனனிலவத்தோன்றும்பேய்த்தேர்ச், செப்பைகைபோலுண்டாயபொய்கொண்மார்க்கத், துறைபலவுங்கடாவிடையாற்சொல்லிப்போக்கித், துகடீரவிந்நூலிற்சொல்லகிற்பாம்" எ-ம். சங்கற்பநிராகரணம் பாயிரம்—"அஃதாலந்நூற் றனையுனனிய - மாந்தரிதுவேபொருளெனறதனிலை - யடைந்தினவேற்றோர்பலவேற்றோர்க - கிசையாமாறுபாடுகூறுவாதலுற் - புறச்சமயங்கள்சிறப்பில வாகி - யருளின்மாகதைவெருஉறமயக்கி - யலகைத்தேரினிலையிற்றீரு - மீங்கிவைநிற்க" எ-ம். "நீங்காச்சமய - மூவிருதகுதிமேவியதாமு - மொனறோடொனறுசென்றுறுநிலையி - லாறுமாறுவீறுடைத்து" என்னுமதுங் கண்டுகொள்க.

வேறுங்குறியதுவுடைத்தாய். எ-து. இதவுட்சமயத்திலுள்ளவிவர்களுக்குஞ் சிவனைக கத்தாவாகக்கொண்ட வம்மாதரமொழிந்து த்ரிபதார்த்த நிர்ணயமுடையவர்க ளல்லவெனறிக.

வேதாகமங்களின் குறியிறந்து. எ-து. வேதாகமங்கள் மனவாக்குக்காயங்களினு லறிகையினு லப்பாசஞானமெனக் கொள்க.

நெறிவொழிபாதுநின்ற சிவன். எ-து. பெத்தமுத்தியிரண்டிடத்திலும் விட்டுநீங்காமை நிற்பனெனக்கொள்க.

இதுவே நிர்ணயம்.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

அறுவகைச்சமயத்தும் - புறப்புறம் புறம் அகப்புறம் அக மென்று நான்கனு ளகச்சமயமொழித் தொழிந்த முக்கூற்றுப் புறங்களிற் றனித்தனி யறுவகைப்பட்ட சமயங்களினின்று கொண்டு,—ஓர்க்கும் - அவற்றுள்ளும் பலவேறுவகைப்பட்டவர வியந்தறிகின்ற,—அவ்வவாபொருளாய் - அவரவர்கொண்ட முதற்பொருளாய்,—வேறுங்குறியது உடைத்தாய் - அவரினவே றாகிய பாடாணவாதமுதலிய அகச்சமயத்தார்க்கு இலயபோ கமதிகாரமென்னு மூன்றவத்தையின, முறையே சத்தியுமுத்தி யோகமும் ப்ரவிர்த்தியுமெனனுந தொழில் வேறுபாடுபெற்றி சிவன் சதாசிவன் மகேஶ்வரன்என்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவமென்னுந் தடத்தக்குறியே குறியாகவுடைத் தாய்,—வேதாகமங்களின் குறியிறந்து - சித்தாந்தசைவருக்குத் தடத்தக்குறியேயன்றி வேதாகமங்களினகருத்துக் கதீத மாய்,—அங்கறிவினில்-அவ்விடத்துயிர்க்குயிராய்,—அருளான் மன்னி - அருளாணிலைபெற்றுயிர்கட்கெல்லா மறிவைப்பிறப்பிக் கும்,—அம்மையோடப்பனுகி - அம்மையப்பனுகி,—செறிவொ ழியாதுநின்ற-எஞ்ஞான்றெக்காலமுஞ்செறிந்து வ்யாபகமாய்நி ன்ற,—சிவனடி சென்னிவைப்பாம்-சிவபிரான் திருவடிகளைச்சி ரமேற்கொள்வாம்—எ - று.

இஃது கடவுள்வணக்கம் கூறியது.

* இவ்வுரை சிவஞானயோகியர் பொழிப்பிற் கிணங்கச் செய்திருப்பதை அவ்வுரையாற்காண்க.

## மறைஞானதேசிகர் உரை.



இதற்குமேல் முன்னூற்சிறப் புணர்த்துகிருர்.

என்னையிப் பவத்திற்சேரா வகையெடுத் தென் சித்தததே, தன்னைவைத் தருள்ளுலே தாளிணை தலைமேற்சூட்டு, மின்னமர் பொழில்சூழ்வெண்ணை மேவிவாழ் மெய்கண்டானூல், சென்னியிற் கொண்டுசைவத் திறத்தினைத் தெரிக்கலுற்ரும். (௨)

என்னையிப்பவததில்... .... தெரிக்கலுற்ரும். எ-து ஒன்றாகரு மாகாமலான ஜநநமரணசமுத்ரத்திலே கிடந் தடிபடுகிறவெனனைத் தனது ஞானமாகிற கையைக் கொடுத்தென்னுடைய விதயகமலத்திலே தன்னை யநவரதமு நினைக்கும்படியிருததிப் பாசநாசம் பிறக்கும்படி தனது காருணயத்தினுலே சீர்பாதங்க ளிரண்டினையு மென றலைமேல் வைத்தருளி, மேகம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூரே பதியாகவிராநின்ற ஸ்ரீ மெய்கண்டதேவநாயனு ரருளிச்செய்த ஞானசாத்ரமான சிவஞானபோதத்தை யெமததலைமேல் வைத்துககொண் டதன்வழியே சைவசித்தாந்தத்தி னுண்மையினதிறத்தை யாம் தமிழாலே சொல்லப்புகாநின்றேரும்—எ-று.

யாமென்ப தெழுவாய், செரிக்கலுற்ருமெனபது பயனிலை. "சொல்லேயாயினுங் குறிப்பேயாயினுஞ் சொல்லிமுடிப்பவேண்டுவ தெச்சம்." என்பதனுல் தமிழாலெனபது சொல்லெச்சம்.

வடமொழி ப்ராக்ருதம் சௌரஜக்யாத்கதி பைசாசி சூசிகாபைசாசி அவப்பிரங்சம் தேசி எனப்பாடபேதம் பலவாயிருக்கவு மிவ்வாசிரியர் தமிழாற் கூறியதென்னெனில்? வட

வேங்கடந்தென்குமரி நடுத்தமிழ்வழங்கும்பூமி யாதலாற் காமிகமுதலிய விருபத்தெட்டுத் திவ்வியாகமங்களை யானமாகக ஏறிதற்குச் சிற்றறிவாதலால் ஸ்ரீநந்திகேஸ்வரநாயனார் பனிரண்டு சூத்ரமாகச் சநற்குமாரபகவானுக சநககிரகஞ் செய்தருளினார்.

அதனைச் சர்வானமாக்களு மெளிதிலறிந் தீடேறும்படிக்கு ஞானசிந்தாமணியாகிய மெய்கண்டதேவநாயனார் பார்த்து முதனூல் கருத்தனளவு மிகுதிப்பொருள செய்விததோன எனனுமிலக்கணததால் முதனூற்பெயரிட்டு வழிநூலாக்கியருளிச்செய்தார்.

அவர் மாணுக்கராகிய வருணந்திதேவநாயனார்திருத்துறையூரொன்னுக திருப்படைவீட்டி லெழுந்தருளியிருந் தம் முனனூல்வழியே பனனிரண்டு சூத்ரமாகச் சிவஞானசித்தியெனனுஞ் சிறப்புத்திருநாமஞ் சாததித் தமிழாலருளிச்செய்தார்.

அஃதெக்காரணத்தாலெனனில் ?—

“சீரார்கயிலைத் திருவாய்மலர்ந்த சிவாகமங்கற்
றூராய்வதுவட சொற்பயின் ஞாககெளி தமமொழியைச்
சாராதவருக்குத் தத்துவஞானந் தலைப்படுதற்
கோராதமிழ்ச்செய்யுளான மயிர வெழுதுவனே.”

என்பதனாலறிக. (உ)

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

—o—

### குருஸ்துதி.

மேகம்பொருந்துஞ் சோலைசூழ்ந்துள்ள திருவெண்ணெய்நல்லூரிலே திருவவதாரஞ்செய்து ஒன்றுக்கும் பற்றுதலென்னையெழுவகைப்பிறப்பாகிய கடலிலழுந்தாதவகை தனது ஞானமாகிய கையினாலே யெடுத்து ஸந்ததமுந் தன்னை யென்னித

யத்திலே சித்திக்கவைத்துக் கிருபையினாலே தம்முடைய ஸ்ரீ பாதங்களை யென்னுடைய புன்றலைமேல்வைத்தருளும் மெய்கண்டதேவநாயனா ரருளிச்செய்த சிவஞானபோதமென்னுஞ் சாத்திரத்தை சிரஸாகவுடைத்துக்கொண்ட சைவத்திற்றிரிபதார்த்த சதுஷ்பாதங்களையுஞ் சொல்லாநின்றேன் எனறிதனபொருள்.

யாம் - எழுவாய், பயனிலை - தரிக்கலுற்றும்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

தமது குருவணக்கங்கூறி முன்னூற்சிறப்பு முரைக்கின்றார்.

(செம்பரத்தைப் பூநிறமா யொருமுகமு மிருபுயமுமுடையராகிச் செம்பட்டுஞ் செஞ்சந்தனமுஞ் சிவந்தமாலையுந் தரித்தவராகிய குருமூர்த்தி பாவிக்கப்பட்டிருந்த ரூபியாயிருந்து) அருளினாலே - தனது தீக்ஷாகன்மத்திலே விளங்காநின்று நிகைஷயென்னு மியற்கைபெயரையுடைய சிவசத்தியால்,—என்னை - அநாதியிலே பசுத்துவத்தினாலே யஞ்ஞானியாயிருக்கிற வென்னை,—இப்பவத்திற் சேராவகை - இந்த ஜநநமரணங்களுக் கேதுவாயிருக்கின்ற மலமாயாகன்மங்களோடு பொருந்தாமலிருக்கும்படி ஜடத்வசோதனை செய்து,—எடுத்து - சமஞாங்கம் பாசக்கூட்டங் கூடாதவகை சின்மாத்ர சுத்தகேவலமாய்ச் சேஷிக்கப்பண்ணிச் சேஷித்துநின்ற,—என் சித்தத்தே - வித்யாதத்வமென நினைக்கப்படு முன்மனாமூலத்துச் சின்மாத்ரமா யான்மாவென்று செப்பப்படுமெனதான்ம தத்வத்திலே,—தன்னைவைத்து - உன்மனாகார வித்யாதத்வத்து பரியுநர் தனது பரசிவஸ்வரூபத்திற் கொத்து விரிதலமுதலாகிய குணங்களோடுகூடிப் பரமென்றுரைக்கப்படு மெனது வித்யாதத்வத்தை விளக்கித் திரும்ப,—அருளினாலே - தனது சத்தி

சங்கற்பத்தினாலே,—தாளிணை-ஒவ்வொன்று மும்மூன்றாய்ச் சுத்தசிவ சாட்குண்ணியரூபமாகிய ஞானசத்தி க்ரியாசத்தி யிருசத்தியாகிய வொருசத்திகளைக்கொத்து, அப்படி சாட்குண்ணிய பரிபூரணமாகிய சிவதத்வத்தோடு கூட்டிச் சுத்தசிவமென்று செப்பப்படுமென்று சிவதத்வத்தை,—தலைமேற்சூட்டும் - முன்சொன்ன பரமாகிய வித்யாதத்வத்துக்கும் பரிமுடிபோலச் சிறப்பித்துப் பிரகாசிப்பிக்கும்,—மின்னமர் பொழில்சூழ்வெண்ணெய்- மின்பொருந்திய மேகங்கள் படியாநின்ற சோலைசுற்றிய திருவெண்ணெய்நல்லூரின் கண்ணே,-மேவிவாழ மெய்கண்டான் - பொருந்திவாசம்பண்ணாநின்ற சத்தியதரிசியென்னும் பெயருடைய பரமாசாரியனது,—நூல் - வடமொழிச் சிவஞானபோதத்தைத் திரித்த தென்மொழிச் சிவஞானபோதத்தை,—சென்னியிற்கொண்டு (சென்னியிற்கொண்டென்பது பூஜ்ய வார்த்தை) செவிக்கேற்கக்கேட்டு மனதிலுட்படுத்திச் சிந்தித்துத்தெளிந்து,—சைவத்திறத்தினை - சைவாகமத்திலே சொல்லுந் திரிபதார்த்த லக்ஷணத்தை,—தெரிக்கலுற்றாம் - விரித்துச் சொல்வாம்.

இந்த விருத்தத்திற் கிதுவே கருத்தென்பது காண்பிப்பாம்.

"என்னை யிப்பவத்திற் சேராவகையெடுத்து" என்பதனாற் சமனாகதபாசமுத்தி சொல்லப்பட்டது.

"என்சித்தத்தே தன்னைவைத்து" என்பதனால் உன்மனாவதியுள்ள சிகாசசேதமுன்னாக நிஷ்கள சர்வாதிக்கிராந்தவித்துக பரசிவத்திலே யோசனைசொல்லப்பட்டது.

"தாளிணை தலைமேற்சூட்டும்" என்பதனால் சிவத்வாபிவியத்தி லக்ஷண நிஷ்களாதீத சுத்தசிவமாதல் சொல்லப்பட்டது.

இதுவன்றி "என்சித்தத்தே தன்னைவைத் தருளிஞலே" என்றது, இருதயத்திற் சிவரூப ஸ்வரூப குருத்யாகஞ்செய் வித்து என்றுபொருளுரைத்தாற் சமஞ்த முத்திப் பொரு ள்கொடுக்கும் எடுத்து என்றதோடு மாறுபடும்.

"காளிணைதலைமேர்சூட்டும்" என்பதற்குத்தனதுபாதங்க ளைச் சிரசிலேவைக்கும்என்று பொருளுரைத்தாலும்மப்படிப் பொ ருள் பகைத்து மாறுபடும்.

அதனுற் பொருள் பகைத்தவிடத்தில் லக்ஷணையிஞு ற்பொருளுரைப்பதே யியல்பு. அதுவன்றிப் பொருள் பகை த்தவிடத்துஞ் சொற்பொருளிருக்தபடி பொருளுரைகிற் க ட்டில் கூப்பிட்டதென்றவிடத்து முகயப்பொருளுரைத்தால ப்பொருள் பகைக்கும்; ஆகலா லபபொருள்விட் டாதா ரலக்ஷணையிற் கட்டிலிருக்கும் புருடன்எனறு சவுணப்பொரு ளுரைக்கவேணடுமிடத்து மப்பொருள்விடுத் கட்டில் தானே கூப்பிட்டதென்று முக்கியப்பொருளுரைக்கவேண்டும். ஆயுகமி ருதம் எனறவிடத்துங் காரணவிலக்கணையிஞலே ஆயுவுகருக் காரணமாகிய க்ருதமென்று பொருளுரையாது ஆயுதானே க் ருதமென்று பொருளுரைக்கவேண்டும். நூலுடுப்புடையன எ னறவிடத்துங் காரியவிலக்ஷணையிஞலே நூலிலுண்டாகிய பு டவையென்று பொருளுரையாது நூல்தானே யுடுப்பனென்று பொருளுரைக்கவேண்டும். கங்கையிலே யிடச்சேரி என்றவிட த்துஞ் சமீபவிலக்ஷணையிஞலே கங்காதீரத்திலே யிடச்சேரி யென்று பொருளுரையாது கங்காஜலப் பிரவாகத்தில் யிடச் சேரியென்று பொருளுரைக்கவேண்டும். பிச்சை சிதம்பரத்தில் ஜிப்பிக்குது என்றவிடத்து முபகாரவிலக்ஷணையிஞலே பிச் சை. வாசோபகாரமா யிருந்ததென்று பொருளுரையாது பிச் சைபிடித் திருத்திந்தென்று பொருளுரைக்கவேண்டும். சிக்க

நதானே புருடனென்றவிடத்துஞ் சாமர்த்ய சாதுர்ய்யவிலக்ஷணையிலுலே சிங்கத்திற்கொத்த சாமர்த்யவானென்றே பொருளுரையாது சிங்கந்தானே புருடனென்று பொருளுரைக்கவேண்டும் இதுவுமன்றி விடத்தைக்கப்புசி இவன்வீட்டிற் புசியாதே என்பதுமுதலர்த்தவாதத்தும், மலைதலையிலுற் பிள்ளையென்பதுமுதல் துதிவாதத்தும், சொற்பொருளிருக்கப்படிப் பொருளுரைக்கவேண்டும்; அப்படியுரைத்தா லெல்லாவியமமுறைமை தப்பும். ஆதலால் தாளிணைதலைமேற்சூட்டும் என்றவிடத்துஞ் சாம்பவதீக்ஷையிற் றிருவடி சிரசிற்சூட்டுமிடத்துச் சிவசத்தி ரூபாசத்திற் பூசிக்கப்படுதலாற் ரூபாசமாகிய பாதாரவிலக்ஷணையிலுற் சிவசத்தியென்றே பொருளுரைக்கவேண்டும். அப்படிப் பொருளுரைத்தாலுஞ் சிவசத்தி, சங்கிராந்திசொல்லும் பாசுபதிமதமாம். சிவனைக்குறித்தென்றுஞ் சிவாவேசஞ்சொல்லுங் காபாலமதமாம் ஆதலாற் காரியவிலக்ஷணையிலுலே சிவசத்தியால் விளக்கப்பட்ட சிவத்வரூப வான்மசித்தத்திறைச் சூட்டுமென்று முன்னுரைத்தபடிக்கே பொருளுரைக்க

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

எ-து. பவமாயக்கடலிலழுந்துகின்ற வெனனை அதன்கணழுந்தாதவண்ணங் கருணைக்கையாலெடுத்து, என்னறிவினகணே தற்சொரூபத்தை விளக்குதற்கெழுந்தருளிவந்து, திருவடி சென்னியிற் சூட்டித் தீக்ஷைசெய்தருளிய மெய்கண்டதேவன மொழிபெயர்த் துரைத்தருளிச்செய்த சிவஞானபோதநூலை; ஏனையாசிரியன்மார் செய்த பிரமாணநூல்கட்கெல்லாஞ் சிரத்தாமாகக் கொண்டு, அதனிற் கூறப்படுஞ் சைவாகமப் பொருட்கூற்றை விளக்குவா மென்பதாம்.

இந்நூலுக்கு வழிகூறியவாறு.

எடுத்தென்றது குறிப்புருவகம்.

வைத்தென்றது உபசாரவழக்கு ; "அன்போடிசைந்த வழக்கு" என்றாற்போல.

சென்னியின இன் உவமவுருபு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

இதனாற் சொல்லியது சிவஞானபோதத்தி லருளிச்செய்யப்பட்ட சைவசித்தாந்தத்தி னுண்மையை யானு மிந்நூலிலே விரித்துச்சொல்லுகிறேனென்னு முறைமையை யறிவித்தது.

என்னையிப் பவத்திற்சேரா வகையெடுத்து - ஒன்றுக்கும் பற்றாதவென்னை யிந்தச்சனனங்களில்வந்து பிறவாதபடி யெடுத்து,—எனசித்தத்தே தனைவைத்து - என்னுடைய விதயத்திலே தன்னை யிருத்தி,—அருளினாலே தாளிணை தலைமேற்சூடும் - தன்னுடைய காருண்யத்தினாலே தனது சீபாதங்களிரண்டையு மென்னுடைய பொல்லாத தலையின்மேல் வைத்தருளின,—மின்னமர்பொழில்சூழ் வெண்ணெய்மேவிவாழ் மெய்கண்டானூல் - மின்பொருந்தப்பட்ட சோலைகள் சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூரைத் திருப்பதியாகப்பொருந்தி வாழ்கின்ற மெய்கண்டதேவநாயனா ரருளிச்செய்த சிவஞானபோதத்தை,—சென்னியிற்கொண்டு - என்னுடைய தலைமேல் வைத்துக்கொண்டு,—சைவத்திறத்தினைத் தெரிக்கலுற்றாம் - சைவசித்தாந்தத்தி னுண்மையைச் சொல்லப்புகாநின்றேன்—எ-று.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

என்னை - பவமாயக்கடலு ளழுந்துகின்ற வென்னை,—இப்பவத்திற் சேராவகை - இப்பவக்கடற்க ணழுந்தாதவண்ணம்,—அருளினாலெடுத்து - கருணைக்கையா லெடுத்து,—எனசித்தத்தே - எனதறிவின்கண்ணே,—தனைவைத்து - தற்சொரூபத்தை விளக்குதற் கெழுந்தருளிவந்து,—தாளிணை - திருவடிகளை,—தலைமேற்சூட்டுமே - சென்னியிற்சூட்டித் தீக்ஷைசெய்தருளிய,—மினனமர் - மின்பொருந்திய மேகந்தங்குதற் கிடமாகிய,—பொழிற்சூழ்-சோலைகள் சூழ்ந்த,—வெண்ணெய்மேவிவாழ் -திருவெண்ணெய்நல்லூரெனனுந் திருப்பதியில் விரும்பிவாழ்கின்ற,—மெய்கண்டானூல் - மெய்கண்டதேவன மொழிபெயர்த்துவைத்தருளிச்செய்த சிவஞானபோத நூலை,—சென்னியிற்கொண்டு - ஏனையஆசிரியர்கள்செய்த ப்ரமாணநூல்கட்கெல்லாஞ் சிரத்தானமாகக்கொண்டு,—சைவத்திறத்தினை - அதனிற் கூறப்படுஞ் சைவாகமப்பொருட்கூற்றை,— தெரிக்கலுற்றும் - விளக்குவாமெனபதாம்.

இது நூற்கு வழிகூறியது.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

### அவையடக்கம்.

நீடுபுகழுலகுதவினமைந்தர்மாதர்
நேயமொடுகோம்பயந்தபுதல்வர்வாயிற்
கூடுமொழிமழலையொடுகுழறியொன்றுங்
குறிப்பரிதாயிடினுமிகக்குலவிப்போற்றி

மாடுமிக்கிதுவென்றுகொண்டுவாழ்வ
ரதுபோலமன்னுதமிழ்ப்புலமையோரென
பாடுகவிகுற்றங்கள்பாராரிந்நூல்
பாராட்டாநிற்பரருட்பரிசினாலே.

பெரிதாகிய புகழையுடைய வுலகத்தினகண் மக்களுமகளிர்களும் விருப்பத்தினாலே தாயகளபெற்ற குழந்தையினது வாக்கிலுண்டா மதலைச்சொல்லானது அவ்யத்தமாகச் சப்தத்தையு மருத்தத்தையுந் தெரியவரிதாயினு மகிழ்நது துதித்திதர வாக்கினாலே வியத்தமாயிருக்கிற சப்தங்களைக்கேட்பதினுமிப்பிள்ளையினுடைய மழலைச்சொல்லே நமக்கினிதென்று சந்தோஷித்துக்கொண்டு வாழ்வர். அதுபோலத் தமிழுணர்ந்த பெரியோருமென்னாற் சொல்லப்பட்ட விந்நூலுக் கெழுத்துச் சொற்பொருளியாப் பலங்காரமெனனப்பட்ட பஞ்சாதிகாரக் குற்றங்கள் பாரார்கள்; சிவனருளாற்பண்ணுங் க்ருத்யங்களை யிந்நூலிற் கூறுகையா லவ்வியல்பினா லிந்நூலைப் பரிபாலனம் பண்ணாநிற்பர்.

---

நூற்கதிகாரியும் - நூல்வழியும் -
நூற்பெயரும்.

போதமிகுத்தோர்தொகுத்தபேதமைக்கே
பொருந்தினோரிவர்க்கறிசகதிப்பாற்செல்ல
வேதநெறியெனுமவர்கட்கறியமுன்னா
ளிறைவனருணந்திகணத்தியம்பநந்தி
கோதிலருட்சனற்குமாரர்க்குக்கூறக்
குவலயத்தினவ்வழியெங்குருநாதன்கொண்டு
தீதகலவெமக்களித்தஞானநூலைத்
தேர்ந்துரைப்பன்சிவஞானசித்தியென்றே

ஞானதிகாரியாகிய சாம்சித்தர்க்கும், உலகவாழ்வே மெய்யெனறுந் தேகமே யான்மாவென்றுமிருக்கும் ப்ராகருத ஜநங்களுக்குமன்றி; மோக்ஷத்துக்கேது வென்னையென்று சிந்திக்கும் வைநயிகாககறியும்படி யாதிகாலத்திற் சர்வலோக ஸ்வாமியாகிய ஸ்ரீகண்டபரமேஸ்வரன ஸ்ரீநந்திகேஸ்வரர்க்கநுக்கிரகம்பண்ண அவர் க்ருபாமூர்த்தியாகிய சநற்குமாரபகவானுக்கு அநுக்கிரஹிக்க, அக்குருபரம்பரையிலே யென்னுடைய குருவாகிய மெய்கண்டதேவ சிவாசாரியரெனக் குபதேசம்பண்ணின ஞானசாஸ்த்ரத்தை யதர்வத்தாகவுணர்ந்து சிவஞானசித்தியென்னு நாமமாக விச்சாஸ்த்ரத்தைக் கூறுகினறேன.

சாம்சித்தராவார் - சாமாந்யமான இஷ்டாபூர்த்தாதி தருமங்களுக்குப் பரமான விசிஷ்ட சிவதருமமாகிய சரியை க்ரியா யோக மியற்றி யதனுன் நின்மலாந்தக்கரணராய்; அந்தத் தேகம்விட்டு மந்தஞானங்கெடாமன் மீளவும் ஜநிக்கும்பொழுது மந்தஞானத்துடனே ஜநித்து சிவபாவனை பண்ணுமவர்.

வைநயிகராவார் - விநயசீலரா யுலகத்துக்குயர்ந்தோர் போதிக்குஞானத்தினுலுங் குருபதேசத்தினுலுஞ் சிவசாஸ்திரத்தினுலு நித்யாநித்யவஸ்து விவேகிகளாய்,மனோவாக்குக்காய வ்யாபாரங்களினுற் சர்வகன்மங்களையுந் துடைக்கப்பட்டவர்களாகிக் கிரமத்தின் மோக்ஷத்தையடைபவர்.

ப்ராக்ருதராவார் - பூமியில்ஜநித்த மேற்சொற்பனத்தின் ஞானம்போ லறிநதறியாமலுங் கிஞ்சிலை வெள்ளியென்று அறிவதுபோல வியரீதஞானியுமா யதனுலே தேகாதிகளையானமாவென்றும் ப்ரகிருதி § ஐக்கியவஸ்துக்களையே பரமென்று மெண்ணுமவர்.

*[illegible]

§ ஜந்யவஸ்துக்கள் - உண்டானவஸ்துக்கள்.

* "நீடுபுகழ்" "போதமிகுத்தோர்" என்னுமிவ் விரண்டு செய்யுளும் பரபக்ஷத்தன; இவவுரையாசிரியர் இதனை வருவித்துரையுரைத்தனர்.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேனூற்பய னுணர்த்துகின்றார்.

பண்டைநற் றவத்தாற்றோன்றிப் பரமனைப் பத்
திபண்ணும், தொண்டரைத்தானே தூய கதியினிற்
றொகுப்பன் மார்க்கர், கண்டநூ லோதிவீடு காதலிப்
பவர்கட்கீசன், புண்டரீ கத்தாள்சேரும் பரிசினைப
புகலலுற்றாம். (௯)

(இ-ள்.) பண்டை ஆன்மாக்கள் முன்ஜநநத்தி லார்ஜ்ஜி
நற்றவத் த்த தபோபலத்தாற் பூமியின்க ணற்சாதி
தாற்றோ யிற்றோன்றி ஞானசாரியனை யடைந்து சரி
ன்றிப் பரமனைப் யை முதலியவற்றாற் சிவனை வழிபடாநின

பத்தி பண்ணுந் றவெண்வகைப்பத்திபையுடைய பக்தஜ கொண்டாைத் நங்களைச்சிவன் றானே தூயகதியாகிய சுத் தானே தூய கதி தாத்வாவினுண்டாகிய போகங்களைப் புசிப் யினிற் றெருகுப் பிப்பன் பன

மார்க்கர் க அனு சதாசிவ ரட்டவித்யேஸ்வரர்களா ண்டநூ லோதி ற் பரம்பரையாக வுண்டாக்கப்பட்ட இவ் விதி காதலிப்பவ யாகமங்களை யோதி மோக்ஷத்தை யடை ராகட்கிசன புண் வோமென றிச்சையுடைய வானமார்க்கட்கு டரிதந் தாள்சே முனனுள்ள சிவத்வாபிவியத்தியைப் பொரு ரும பரிசினைப் பு ந்துமுறைமையை யாஞ் சொல்லப்புகாநின கலலுற்றும் றேம்—எ-று.

மாாககரெனபது ஆசாரியர்களையுஞ் சொல்லப்பெறும்.

ஈசன - எழுவாய், தொகுப்பன - பயனிலை.

யாம்-தோனருவெழுவாய், புகலலுற்றும்-பயனிலை. (௩)

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

—o—

மேல்விஷயப் பிரயோசக சம்பநதாதிகாரிகளைக் கூறுகி ன்றது

பண்டைநற் றவதகாற்றேன்றிப் பரமனைப்பத்திபண்ணுக ொண்டாைத் தானே தூய கதியினிற் றெருகுப்பன் - பூர்வஜந் மததிற் சரிதை கிரியா யோகஙகளைச்சாதித்த பெயர் வரப்பிர சாதநதினுற் சுக வாமதேவ ஜடபரதாதிகளைப்போற் பூர்வ ஜநம ஸ்மரணையுடனே பிறந்து,சிவனிடத்தநந்ய பத்திபண்ணு ரு சாமசித்தரை; யாசாரியமூர்த்தியை யபேக்ஷியாமற் சிவஞ

றன்னையிற்றானே விஞ்ஞானகலர் ப்ரளயாகலர்க் கநுக்கிரஹம் பண்ணுவதுபோல வநுக்கிரகம் பண்ணுவர்,—மார்க்கண்டனாதி விடுகாதலிப்பவர்கட் கீசன் புண்டரீகத்தாள்சேரும் பரிசினைப்புகலலுற்றாம் - பூர்வஜந்மத்திலே சிவதர்மங்களை யநுஷ்டித்து ஞானசித்தியின்பொருட்டு பூமியிலே ஜநித்து குருவினாலே தீக்ஷிதராகிச் சன்மார்க்கஸ்தரா யுள்ளவர்கள் பண்ணப்பட்ட ஞானசாஸ்த்ரத்தை யோதி யறிந்து மோக்ஷத்தை யடையவேணுமென்கிற விச்சையுடைய வைநயிகர்க்கு பரமேஸ்வரனுடைய ஸ்ரீபாதகமலங்களைப் பொருந்துமுறைமையைச் சொல்லுகின்றேன்.

சிவன் - எ-ய், தொகுப்பன் - ப-லை. யாம் - தோ-எ-ய், புகலலுற்றாம் - ப-லை.

ஈசன் எனவே பதி, புண்டரீகத்தாள்சேர எனவே சேர்பவன்-பசு என்று சொன்னது, சேரும் பரிசு எனவே பாசத்தை நீங்குமுறைமை என்றது; இது த்ரிபதார்த்தம்.

இந்தச் சாஸ்த்ரத்திற்கு விஷயம் திரிபதார்த்தம், ப்ரயோசநம் - சிவசாயுச்யம், அதிகாரி - வைநயிகன், சம்பந்தம் - சொல்லப்படுகிறதுஞ் சொல்கிறது மெனனும் ப்ரதிபாத்ய ப்ரதிபாதகபாவம், நற்றவம் - கன்மநிஷ்ட தபசன்றியின் ஞானநிஷ்டமான தபசை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

டன்னைநற்றவத்தால் - மாயாதேகபோக சம்பந்தத்தினாலே முந்திய ஜன்மத்திலே மலபரிபாகமானது சற்றே தோற்றுகின்றளவி லதற்கநுகுணமாகிய தீக்ஷைமுன்னாகத்தா னதிலல்லாமற்றான் சைவப்பிரகாரமாய்த்தான் வைதிகப்பிரகாரமாய்த்தான் பூசாவிரதமுதலியவற்றினாலே சிவலோகமுதலாகிய தானங்களிலே போகம்புசித்துத் திரும்ப,—தோன்றி - பூலோ

கத்திலே வந்து ஜன்மித்துத் தீவிர தீவிரதர மலபரிபாகத்தி னாலே,—பரமனைப் பத்திபண்ணும் - சிவனைக்குறித்துத் தியா னம்பண்ணும்,—தொண்டரை - அடியார்களை,—தானே - கு ருவதிஷ்டானமன்றியிலே நிராதிகரணமாகத் தானே சத்திசங் கற்பமாத்திரமாயிருக்கின்ற நிராதிகரணதீக்ஷையினாலே தீக்ஷித் துச் சுத்தபுவனத் திருத்தியு மிருத்தாமலும்,—தூயகதியினில் - சிவசமானரூபவியத்த சிற்சத்திரூப சிவதத்வத்திலே,—தொகு ப்பன் - கூட்டுவன், சாத்திரத் தேவையில்லை. தீவிர தீவிரதர மந்த மந்ததர மலபாகத்தினாலே சாதி கரணசத்தியோ நிர் வாணதீக்ஷையினாலேதான, சத்தியோ போகதீக்ஷையினாலே தான், தீக்ஷிதற்கட்கு மொன்றும் வேண்டுவதில்லை யாதலால் சாதி கரணவசத்தியோ நிர்வாணதீக்ஷையினாலே தீக்ஷித்துக் கொண்டு ஆரியபாஷை தெரியாதபடியால்,—மார்க்கர் - சைவ சித்தாந்தமார்க்கசாரிசிகளா யிருக்கின்ற தேசிகர்,—கண்டனூ லோதி - தமிழ்ப்பாஷையிற் பண்ணின சாத்திரத்தைப்படித் ததனாற் பதிபசுபாசலக்ஷணங்களை யறிந்துதான், ஒருபிரதேச ங்களையறிந்துதான், அவரவர் மரியாதியில்வந்த வந்தந்த ஞா னங்கொண் —டந்தந்தஞானஞ் சாக்ஷாத்காரரூபமாய்ப் பலத் துக்குவருப்பொருட்டு ஒன்றுக்கொன்று ஐககாரியாயிருக்கின் ற சரியை க்ரியை ஸாலம்ப நிராலம்ப சிவயோகங்களை யனுஷ் டித்து,—விமோசலிப்பவர்கட்கு-முத்தியை விரும்புமவர்களுக் குச் சாக்ஷாத்தான பதமுத்தியிலிருந்து பாரம்பரியத்தினாலே தான்,—ஈசன்புண்டரீகத்தாள - ஓதனத்தினது பாகந் தேவ தத்தனது பாகம் என்பதுபோல ஈசன் புண்டரீகத் தாள் என் றுஞ் சொல்லப்படுமாதலால், இருளினுற்கு விந்த சூரியனது கி ரணத்தினா லலர்ந்த தாமரைப்பூபோன்று மலசத்தியினூர்க்கு விக நீசனது சத்தியா லலர்ந்த ஞானக்கிரியாரூபசொரூப சித்

சத்ரூபவியத்த சிவதத்வத்தை,—சேரும்பரிசினை - பொருந்து முறைமையை,—புகலலுற்றும் - சொல்லுவாம்.

ஆகையாலனேமேரு சததியோ நிர்வாணதீக்ஷையிலே தேசிகனுக்கனறி சாதகனுக்கு ஞானம் வேணடுவதில்லை; யாதலாற் றேசிகனுசகு ஞானம் ப்ரதாகம்.

சாதகர்களுக்கு தீக்ஷை ப்ரதாகமென்றும் ஸ்வாயம்புவ வியாகநத்திற் சத்தியச்சோதிபாகங்களால் விஸ்தரித்திருக்கையால், ஞானம் தீக்ஷாகன்மத்துக்கங்கம், தீக்ஷாகனமமங்கியெனபதும்; மலாக திரவ்யமாகலால் நேததிரபடலம்போல ஞானகொடிகளாலும் போகாதென்பதும் மேல்விஸ்தரிதது சசொல்வாம்.

## சிவஞானயோகியருளை வருமாறு.

எ-து. சாமுசித்தர் வைநயிகர் ப்ராகிருதரெனனுமிவருள், ஆற்றலுமறிவுங்காதலுமில்லாத ப்ராகிருதரையொழிதது, ஒழிநதவிருவரின முற்செய்தவவிசேடத்தாற் சாமுசித்தராய்ப் பிறந்து வீடு காதலிக்குஞ் சிவபத்தரை: விஞ்ஞானகலர் ப்ரளயாகலரைபபோல நூல்வழிபானனறித் தானே சிவகதியிற் சேர்ததுவனாகலின் அவர்க்கு நூல் வேண்டாமையான், முறைமையின் மந்ததரமுதலிய சத்திநிபாதமுடையராய் நூல்வழிபான் முத்தி பெற விரும்பும் வைநயிகராயினாகருச் சிவகதி கூடு முறைமையினை ஈண்டு வகுத்துக் கூறுகின்றுமென்பதாம்.

சன்மார்க்கரை மார்க்கரென்றது தலைக்குறை.

சன்மார்க்கராவார் ஞானிகள்.

கண்ட நூல் அவர்களெல்லாம் பிரமாணமென்றறிநது கைக்கொண்ட நூல்.

இதனுனே நுதலியபொருளுங்கேட்போரும்பயனுங் கூறியவாறு.

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

இதனாற் சொல்லியது இன்னுலார்க்குச் சொன்னதென்ன? வினவுவார்க்கென்று மேலருளிச்செய்கிறார்.

பண்டைநற் றவத்தாற்றோன்றி - முன்னஜநநங்களிற் சாத்திரஞ்சொன்ன முறைமையிலே நன்றாக தவசுகளைப்பண்ணி யந்த பலத்தாலே பூமியின்கணணே வந்தவதரித்து,—பரமனைப் பதிபண்ணுந் தொண்டரை - பரமேஸ்வரனளவிலே மிகுந்த வழிபாடுசெய்யு மடியாராகளாயுள்ளார்களை,—தானே தூய கதியினிற் சேருப்பன - அந்தப் பரமேஸ்வரன் றானே சுத்தமாயிருக்கிற சாயுச்சியத்திலே கூட்டுவன,—மார்க்கர் கண்டநூலோதிவீடு காதலிப்பவர்கட்கு - சன்மார்க்கத்தி லுள்ளாரால் ராய்ப்பட்ட ஞானசாத்ரங்களையோதி மோக்ஷத்தை யெப்படியே பெறுவோமென்கிற வாசையினுடனே கேட்டதையுடையவர்களுக்கு,—ஈசன புண்டரீகத்தாள் சேரும்படிசினைப் புகலலுற்றும் - தம்பிரானுருடைய ஸ்ரீபாதகமலங்களைப் பொருந்து முறைமையைச் சொல்லப்புகாநின்றேன்—எ-று.

இதனாற் சொல்லியது இன்னூலுத்தமர்க்கு மதமர்க்கும் வேண்டாவேண்டும் மத்திமர்க்கு வேண்டுமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

(சாமுசித்தர், வைநயிகர், ப்ராகிருதரென்னுமிவரு ளாற்றலு மறிவுங் காதலுமில்லாத ப்ராகிருதரை யொழித்தொழிந்த இருவரில்) பண்டைநற்றவத்தால் - முற்செய்த தவவிசேடத்

தால்,—தோன்றி - சாம்சித்தராய்ப் பிறந்து,—பரமனை - முத ல்வனிடத்தில்,—பத்திபண்ணும் - வீடுகாதலித்துப் பத்திபண் ணுகின்ற,—தொண்டரை - சிவபத்தரை,—தமனே-விஞ்ஞான கலர் ப்ரளயாகலரைப்போல நூல்வழியானனறித் தானே,— தூயசத்தியினிற் செருகுப்பன் - சிவசத்தியினிற் சேர்த்தவருகலின அவர்க்கு நூல்வேண்டாமையின்,—மார்க்கர் - ஞானிகள,—க ண்டநூலோதி-ப்ரமாணமென் றறிந்தகைக்கொண்ட நூலோ தி யதன்வழியான்,—வீடுகாதலிப்பவர்கட்கு - முறைமையின் மந்ததரமுதலிய சத்திநிபாதமுடையவராய் முத்திபெறவிரும் பும வைநயிகராயினார்க்கு,—ஈசன் - சிவனுடைய,—புண்டரிக தகாள்சேரும் பரிசினை - தாமரைமலர்போன்ற திருவடிகூடுமு றைமையினை,—புகலலுற்றும் - வகுத்துக்கூறலுற்றும் எனப தரம்.

இதனானே நுதலியபொருளுங் கேட்போரும் பயனும் கூ றியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலவையடக்க முணர்த்துகிறார்.

மறையினு லயனுன்மாலான் மனத்தினுன் வாக் கான்மற்றுங், குறைவிலா வளவினுலுங் கூறொணு தா கிநின்ற, விறைவனுர் கமலபாத மின்றியா னியம்புமா சை, நிறையினார் குணத்தோர்க்கெல்லா நகையினை விளு த்துமன்றே. (ச)

மறையினுல்.........நிளுத்துமன்றே. எ-து. சாலுவேத ங்களாலும் பிரமாவாலு மாயனாலு முக்குணங்களுடன் கூடிய

சவிகல்பம் முதலிய சூக்ஷமமான மனத்தினாலும் வாக்கியமாகிய வுரையளவைகளாலும் மற்றக் காண்டல் முதலிய வளவைகளாலு மினைனபடியென றளவிடுதற் கரிதாகிய நிலைகளாலளவிடப்படாதிருக்கின் மிப்பொழுதியான் கர்த்தாவினுடைய ஸ்ரீபாதகமலங்களை யடைகையினபொருட் டிந் நூலினை அச்சமின்றிச்சொல்லு மாத்ரவுமெத் தன்மைக்காக்கு மென்னின்? நிறைவில்லையுடைந்த வியர்க்கையை யுடைய ஞானமுள்ளவர்களுக்கு சிரிப்பையுண்டாக்கும்—எ-று.

அவையடக்கமாவது எல்லாரும் வழிபடக்கிளவிசொல்லுதலவையடக்கமெனப்பெறும். "அவையடக்கியலே யரிறபதத்தெரியின - வல்லார்கூறினு மவைதுகொண்மினென - றெல்லாமாந்தாக்கும் வழிமொழிந்தன்றே" என்றார் தொல்காப்பியனாரென்றிக.

அனறெனகிளவியு மின்றெனகிளவியு மாமெனகிளவியுமாகுமெனப.

ஆசை - எழுவாய், சிறுத்தம் - பயனிலை. (சு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேலவையடக்கமும், சிவன வாக்ருமலுதீதனென்பது மு-து.

வேதாகமங்களினாலு மனத்தினாலுங் குற்றமற்ற வநுமானங்களினாலும் சருஷ்டி ஸ்திதி கர்த்தாக்களாகிய ப்ரம்ம விஷ்ணுக்களினாலு மறியப்போகாத கர்த்தாவினுடைய கமலமலா போன்ற ஸ்ரீபாதத்தினுடைய தன்மையை யானிவ்விடத் தாசையுடனே சொல்லுகிறேன் எனகிறது; பரிபூரணஞானமுடையவர்களுக்கு ஒழிவற்ற விளைபத்தை யுண்டாக்குமென் றிதன பொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

அவையடக்கம்கூறுகின்றார்.

மறையினால்-பதியினாற் பாரம்பரியமா யதிஷ்டிக்கப்பட்டுத் தனதவதி சர்வஞ்ஞனாயிருக்கின்ற பசுவினாற் பண்ணப்பட்டபடியாற் சிறிதிடத்து பதிஞானமெனவும் பசுஞானமென்றும் பதிப்பிரமாணமெனவும் பசுப்பிரமாணமென்றுஞ் சொல்லப்பட்டிருந்தாலும், இயற்கையாய் காதரூப பாசரூபமாதலானு மானமஞானத்தை விளக்குதலால் ஞானமென் றுபசரித்தலானும் பாசஞானமெனவும் பாசப்பிரமாணமென்றுஞ் சொல்லப்பட்டியல்பினு லானமசிற்சத்திபைய பொருதிப் பசுபாச பதார்த்தமாததிரத்தையே படிக்கும் வேதங்களால்,—கூறொணுதாகி - சிறிதிடத பொருப்ரகாரத்துப் பதிபதார்த்தத்தைக்கூறி வேறுய்க்கூறுமாகினு மியல்பாகிய விலக்ஷணதராற் சொல்லப்படாததாகி,—அயனுல்மாலால் - சிவாநுக்கிரகம்பெறற நிரஞ்சனவிதி விஷ்ணுக்களுககு வேறுகிச சாஞ்சனராயிருக்கின்ற விதிவிஷ்ணுக்களுக்குப் பசுத்துவ நீங்காதபடியிருலே பாசஞானதகால் விளங்கிப் பசுஞானப் பசுப்பிரமாணமாகிக காணடல்முதலிய த்ரிப்பிரமாணமாகி யவரவர்களது சிறசத்திமானங்களா லவர்களா லறியப்படாதாகி,—மனததினுல - பாசஞானம் பாசப்பிரமாணமெனகின்ற மனமுதலிய வுட்கருவிப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினுலும் சேத்ரமுதலிய புறககருவிப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினுலும் பாசயோகப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினுலும் பசுயோகப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினு லறியப்படாததாகி,—வாக்கால் - உலோகவாதஞ் சத்தியமு மசத்தியமுமா யிருக்குமாதலால், அதற்குட் சத்திய மாகமப்பிரமாணத்தி லடங்குமாதலாற் பொதுவாகு மந்த உலோகவாதத்தினு லறியப்படாததாகி,—மற்றுங்குறைவிலா

வளவினாலும் - பசுசாத்திரங்களிற் படிக்கப்பட்டுப் பசுப்பிர மாணங்களாகிப் புத்திப்பிரகாசமாகிய லிங்கபார மரிச்சித்த விருத்திமுதலாகிய பஞ்சாவயவையவங்களினால் நிறைந்த பாசா னுமானங்களினாலும்,—கூடுறாதாகி - அறியப்படாததாகி,— நின்ற - நிலைபெற்ற,—இறைவனாற் - சிவஞானது,—கமலபாதம்- தாமரைபோல விரிந்த சத்தியென்னுஞ் சிவதத்துவ லக்ஷணத் தை,—இன்றிபா னியம்புமாசை - இப்போது நானசொல்லவே ணுமெனகிற விருப்பம்,—நிறையினாற் குணத்தோர்க்கெல்லாம்- சமத்தினாலே நிறைந்த நீர்மையராகிய சகலர்க்கும்,— நகை யினை - சிரிப்பினை,—நிறத்துமனறே - நீங்காதுண்டாகக்கூந் தானே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

எ-து. வேதமுதலியவற்றுறு மறிதற்கரிய முதல்வனதியல் பை யான சொல்லுவலென்றெழுந்த எனது புல்லியவாசை; சா ல்புடையா ரெல்லாரும் ஏயோ யிஃதோவிவனறிவென் றெள்ளி நகையாடுதற்கேதுவா மெனபதாம்.

அயனான் மாலான் மனத்தினான் வாக்கானெனபுழி, ஆனு ருபு முன்னேயவிரண்டும் வினைமுதற்பொருண்மையினும், பின்னே யவிரண்டுங் கருவிப் பொருண்மையினும் வந்தன: சாத்தனாற் கண்ணாேக்கப்பட்டடதெனறாற்போல.

ஈண்டளவென்றது அநுமானப்பிரமாணத்தை. அயன்மா லென்றது உபலக்கணம்.

கூடுறாதென்றது உபசாரம்.

இனி, அயனென்றது அவ்வேதத்திற் கங்கமாய் அயனாற் செய்யப்பட்ட பதினென் புராணநூலையும், மாலென்றது

மாயோனவதாரமாகிய வியாதனாற் செய்யப்பட்ட இதிகாசநூலையும், மனமென்றது மனுமுதலிய இருடிகளான் மனத்தானினைந்து செய்யப்பட்ட மிருதிநூலையும், வாக்கென்றது அவ்வேதத்தைக் கருமகாண்டம் ஞானகாண்டமென இருவகைப் படுத்தெடுத்துக்கொண்டு அதனபொருளை நிச்சயித்துரைக்குஞ் சாத்திரமாகிய பூர்வமீமாஞ்சை யுத்தரமீமாஞ்சைகளையும், அளவென்றது அளவைநூலாகிய தர்க்கசாத்திரத்தையும். ஆகுபெயரா னுணர்ந்தினவெனக்கொண்டு, வேதத்தானு மதற்கங்கமான புராணமிதிகாசமிருதி மீமாஞ்சை தருக்கங்களானுங் கூறொணாத பாதமென்றுரைத்தலுமொன்று.

அவையடக்கங் கூறியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேலவையடக்க மருளிச்செய்கிறார்.

மறையினால் - இருக்கு எசுச சாமம் அதர்வம் என்கிற நாலுவேதங்களினாலும்,—அயனால் - பிரமாவாலும்,—மாலால் விஷ்ணுவாலும்,— மனத்தினால் - மனத்தாலும்,—வாக்கால் - வாக்கினாலும்,— மற்றுங் குறைவிலா வளவினாலும் - வேறுங் குறைவற்ற வளவைப் பிரமாணங்களினாலும்,—கூறொணாதாகிநின்ற - சொல்லப்படாத தொன்றாயெங்கும் பரிபூரணமாய்ச் சற்றுமசைவற்றுநின்ற,—இறைவனார் கமலபாதம் - அப்படி குறைவற்றுநின்ற தம்பிரானாருடைய ஸ்ரீபாதகமலங்களை,—இன்றியானியம்புமாசை - இப்போ தொன்று மறியாத யான் ஒருசாத்திரத்திலே சொல்லுவதாகத் துணிந்தவாசையாவு,—நிரையினார் குணத்தோர்க்கெல்லாம் நகையினை நிறுத்து

மனறே- சர்வகுண சம்பந்நராயிருக்கிற ஞாதாக்களுக்கெல்லா மெப்பொழுதுஞ சிரிப்பினையுண்டாக்காநிற்கும்—எ-று.

இதனுற் சொல்லியது வேதங்களாலு மரிப் பிரம்மாதிகளாலு மளவைகளாலு மறியப்படாம லிருப்பதொருவதந்தனை யான் சொல்லுவேனெனகிற வாசை பெரியோர்களுக்கு சிரிப்பினையுணடாக்குமெனனு முறைமை யறிவித்தது.

இது சான்ருேர் அவையடக்கம்.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---

மறையினுல் - வேதங்களினுலும்,—அயனுல் - அயனுலும்,—மாலால் - மாலாலும்,—மனத்தினுல் - மனத்தினுலும்,—வாக்கால் - வாக்காலும்,—மற்றுங் குறைவிலா வளவினுலும்-வேறுங்குறைவில்லாத ப்ரமாணங்களினுலும்,—கூறெணு தாசிந்தை -அரிதற்கரிதாகினின்ற,—இறைவனூர் - முதல்வனது,—கமலபாதம் - கமலம்போலும் பாதமென றுபசரித்துக் கூறப்படு மருளிபல்லை,—இனறியானியம்புமாசை - இனறியானசொல்லுவேனென்று எழுந்த எனது புல்லியவாசை,—நிறையினுர் குணத்தோர்க்கெல்லாம் - சால்புடையராய குணத்தினை யுடையாரொல்லார்க்கும்,—நகையினை நிறுத்துமனறே - ஏயே? இஃதோஇவனறிவென றெள்ளி நகையாடுதற்கேதுவாமென்பதாம்.

(இனி மற்ருெருவிதம்.)

மறையினுல் - வேதங்களாலும்,—அயனுல் - அவ்வேதத்திற்கங்கமாய் அயனுற்செய்யப்பட்ட பதினெண்புராணங்களாலும்,—மாலால் - மாயோனவதாரமாகிய வ்யாதனுற் செய்யப்பட்ட இதிகாசங்களாலும்,— மனத்தினுல் - மனுமுதலிய

விருடிகள் மனத்தால் நினைந்து செய்யப்பட்ட மிருதி நூல்களாலும்,—வாக்கால் - அவவேகத்தை கருமகாண்ட ஞானகாண்டமென் றிருவகைப் படுத்தெடுத்துக்கொண் டதன் பொருளை நிச்சயித்துரைக்குஞ் சாத்திரமாகிய பூர்வமீமாம்சைகளாலும்,—மற்றுங் குறைவிலாவளவினாலும் - வேறுங்குறைவில்லாத அளவைநூலாகிய தருக்கசாத்திரங்களாலும்,—கூறொணாதாகின்ற - சொல்லுதற் கரிதாகின்ற இறைவனுற கமலபாதம் என்றலுமொன்று

இதனானே அவையடக்கங் கூறியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படிச் சிவனை யறியப்போகாதெனவீராயி னாகாசத்தி றபூப்போ லபாவபதார்த்தமாய்விடுமென்ற மாணாக்கனைக்குறித் தாகமமுதலியவற்றா லறியலாமென் றுணர்த்துகிறார்.

அருளினா லாகமத்தே யறியலா மளவினாலுந்,
தெருளலாஞ் சிவனைஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே, மருளெலா நீங்கிக்கண்டு வாழலாம் பிறவிமாயா,
விருளெலா மிரிக்கலாகு மநபரோ டிருக்கலாமே. (ரு)

| | |
|---|---|
| (இ-ள்.) அருளினாலாகமத்தே யறியலாம் | ஞானாசாரிய னநுக்கிரகத்தைப் பெற்றவர்கள் அபரஞானத்திற் சொல்லப்பட்ட வாகமப் பிரமாணத்தாலும் சிவனை யறியலாம். |
| அளவினாலுந் தெருளலாஞ் சிவனை | புகையைக்கொண் டனலை யநுமித்தறிந்தாற்போலச் சத்தியினது காரியத்தைக்கொண்டு சத்திமானாகிய சிவனையு மறியலாம் |

| | |
|---|---|
| ஞானச்செய்தியாற் சிந்தையுளே மருளெலா நீங்கிக்கண்டு வாழலாம் | ஞானமாகிற தீபம் பிரகாசிக்கவே யாணவாதியாலுண்டாகிய மயக்கமிகற்பநீங்கித் தன்னுள்ளே பலகாலு மநுசந்தானம்பண்ணிக்கொண்டு பரமமான நிட்டையைப்பொருந்தி நாடோறும் வாழ்வே |
| பிறவிமாயா விருளெலா மிரிக்கலாகும் | பிறப்பை யுண்டாக்குகிறதற்குக் காரணமாகிய கன்மமு மாயையு மாணவமு மோட்டலாம். இங்ஙனம் பாசக்ஷயம்பிறக்கவே |
| அடியரோ டிருக்கலாமே. | சிவானுக்கிரகத்தைப் பெற்ற முத்தான்மாக்களைப்போலச் சிவானந்தானுபூதியைத் திளைத்திருப்பார்கள்—எ-று. |

அளவினாலுமென்ற வும்மையால் யோகக்காட்சியாலுஞ் சிவனை யறியலாமெனவறிக.

சிவனை எ-து. நடுநிலைத்திடமெனவறிக.

இவை யைந்தும் பாயிரம்.

“ஆயிரமுகத்தாலகன்றதாயினும் - பாயிரமில்லது பனுவலன்றே”. “வகைசுமதிகாரமென்றிரண்டுஞ் சொல்லச் சிறப்பெனும் பாயிரமாஞ்சீர்” என்றாகலிற் சிறப்புப்பாயிரமாயிற்று.

*“ஆக்கியோன்பெயரேவழியேயெல்லை - நூற்பெயர்யாப்பேநுதலியபொருளே - கேட்போர்பயனோடாயெண்பொருளுநும் - வாய்ப்பக்காட்டல்பாயிரத்தியல்பே” எனபதனால் ஆக்கியோன்பெயர் - அருணந்திதேவநாயனார், வழி - சிவஞானபோதம், எல்லை - நடுநாட்டிட் டிருத்துறையூர், நூற்பெயர் - சிவஞானசித்தி, யாப்புத்தொகைவிரிநுதலியபொருள் - பதிமுதலிய முப்பொருளினிலக்கணம், கேட்போர் - அவர் மாணா

க்கருட் டலைமையாகிய மறைஞானசம்பந்தநாயனார், பயன்வீடு பேறு; மேல்வந்தவாறுகாண்க. * தொல்காப்பியம் பாயிரம்.

யாதானு மொருநூற்குப் பொருளுரைக்குங்கால் உரைவகை விருத்திவகை காண்டிகைவகையென மூவிதப்படும். ஈண்டிந் நூற் குரைக்கப்பட்டது காண்டிகைவகையெனவறிக.

அஃதாவது:—"பழிப்பில்சூத்திரப்பட்ட பண்பிற் - கரப்பின்றிமுடிப்பதுகாண்டிகையாகும - விட்டகல்வின்றிவிரிவொடுபொருந்திச் - சுட்டியசூத்திரமுடித்தற்பொருட்டா - வேதுநடையினுமெடுத்துக்காட்டினு - மேவாங்கமைந்தமெய்ந்நெறித்ததுவே" எனறார் தொல்காபபியனார், பொருள்-மரபியல். (௫)

உரையாசிரியர் அவையடக்கம்.

"ஓரா தெழுகினே னாயினு மொண்பொருளை
யாராய்ந்து கொள்க வறிவுடையார்—சீராய்ந்து
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்".

ஓர்வகையானே பாயிர முற்றிற்று.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

இப்படி யறியப்படாதபொருள் கர்த்தாவென்னில்? இல்லையாம்; அதனாற் பயனுமில்லையாம். அஃதனறியும்வேத சிவாகமங்களும் ப்ரமாணங்களு மேதுக்காகவென்னில்? அவையனைத்துமெல்லாம் * அர்வாசீநபதாவாச்யமாய் ஜகத்சிருஷ்டியாதிகளைப் பண்ணுஞ் ஸதாசிவாதிமூர்த்திகளைப்போதிக்கும் பரமசிவம் † ஸ்வரூபஞானருபவைகவேத்ய மென்பதை மேற்கூறுகின்றது.

* அர்வாசீகபதவாச்சியமாய் - கீழ்ப்பட்ட பதத்தினாலே சொல்லப்படுகிறதாய், † ஸ்வரூபஞானானுபவைகவேத்யம் - ஸ்வரூபஞானத்தினாலே யுண்டாகிற யநுபவமொன்றினாலே யறியப்படும்.

அருளினா லாகமத்தே யறியலாம் - கருணையினாலே தரித்த சதாசிவ மகேஸ்வராதி மூர்த்திகளினுடைய லக்ஷணங்களை யாகமத்திலே யறியலாம்,—அளவினாலுந் தெருளலாம் - ப்ரத்யக்ஷமன்றி யாகமங்களினாலு மநுமானங்களினாலு முணரலாம்,—சிவனை ஞானசசெய்தியாற் சிந்தையுள்ளே மருளலா நீங்கிக்கண்டு வாழலாம்-பரமசிவனை யவனது க்ரியாசத்தி ‡ சம்யோகத்தா லானமக் கிரியாசத்தியினாலே பாசங்களைநீங்கி, யவனது ஞானசத்தி சம்யோகத்தா லான்மஸ்வரூப ஞானசத்தியினாலே யானமாவிற் சிவனை யநந்நியமாகக்கண்டு, சிவாநந்தாநுபவியாகலாம். ஆதலாற் பரமசிவம் அநுபவைகவேத்யம்,—பிறவிமாயா விருளெலா மிரிக்கலாகும் - அவ்வாறு சிவாநுபவமுண்டாகவே ஜனனத்துக் கேதுவாகிய § மலமாயாகன்மங்க ளெல்லாவற்றையுங் கெடுக்கலாம், இப்படிப்பட்ட ஞானத்திற்குப் பக்குவமுண்டா மாறெங்ஙனமெனில்? அடியரோடிருக்கலாமே - சிவபத்தர்களுடனேகூடி யவர்களை வணங்கி வழிபட்டு அவர்களுபதேசித்தபடி நடக்கவுண்டாம். இவ் விரண்டு விருத்தத்திற்கும் சம்மதி.

‡ சம்யோகம் - கூட்டரவு, § மல மாயா கன்மம் - ஆணவம் மாயை வினை.

*[illegible]
[illegible]
[illegible]

ண: ஸ்வ்ருவிஷய: ஸம்ஜ்ஞாவாசீநே ஸஞ்சிந்த்யந: ஸ்வ்ருநவச: ॥ *

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சிவனிப்படி ப்ரமாணாதீதனாற் சூந்யப்பொருளோவென்ன? அன்று; பதிப்பிரமாணத்தாற் பார்க்கப்படும் பொருளே யென்று கூறுகின்றார்.

ஆகமத்தே - பிறன்படிக்கும் வன்னபதவாச்யங்களைக் கேட்கும் வ்யோமபௌதிககாகமவெழுத்தைப்பார்த்து நினைக்குந் தீக்ஷாவான்களாகிய நமது மனச்சங்கற்பத்தினால், வ்யோம பௌதிகத்தொனியோடு கிளம்பிய புத்தியினாற்பொருந்தப்பட்ட வன்னபதவாக்யமயமா யுச்சாரணரோசையாகிய மத்திமைவாக்குருபமா யிருதயத்திற்றோற்று மாத்தியான்மிக சடாகமத்தில், கரியிலக்கினிபோலவந்து வன்னபதவாக்யக் கிரமத்தி லாவிர்ப்பவித்துப் பொருள் போதிப்பதாய்; மஹாப்ரளய பர்யந்த நாசமில்லாமற் சுத்தவித்தையிலிருக்கு மாதிதைவிக திவ்யாகமத்திலேவந்து சாந்நித்யமாகிய,— அருளினால் - சிவசத்தியாகிய வாதிதைவிக திவ்யசிவாகமத்தினால், திரும்ப விதுகாரியலக்ஷணையாதலா லதினால் விளக்கப்பட்ட நமது சிற்சத்தியாகிய வாதியான்மிக சிவாகமத்தினாற் சிவனை,— அறியலாம் - பரோக்ஷமாய் நிச்சயிக்கலாம்;— அளவினாலும் - திவ்யசிவாகமத்திற் சிவனாற் காண்பிக்கப்பட்டுச் சிவசத்தி யதிஷ்டித புத்திப்பிரகாச கலுஷித லிங்கபராமரிச வ்யாபாரசீலமான நமது சிற்சத்தி யநுமானத்தினாலும்,— தெருளலாஞ் சிவனை - பரோக்ஷமாயறியலாம்;— த்யானசமாதியெனு மங்கயோகவாசனையில்வந்து பதிந்த சிவசத்தியினா லக்ஷசமாதிசமய மாத்திரத்தி

ல்,—மருளெலாநீங்க - மலமூல வஞ்ஞானங்களெல்லாம் போக,—சிந்தையுள்ளே - திரும்பவந்தச் சிவசத்தியினால் விளங்கிய நமது சிற்சத்தியிலே,—ஞானசசெய்தியால் - அந்த நமதுசிற்சத்தி விருத்திலக்ஷண சதேகஜீவன முத்தி சாக்ஷாத்காரத்தினால்,—கண்டு - சாக்ஷாத்கரித்த பரோக்ஷமாகப் பார்த்து,—வாழலாம் - நமதந்தச் சிற்சத்தி வ்யாபார சாக்ஷாத்காராகார சிவாநுபூதியினது பூரித்தலாகிய நமது சிவாநந்தத்தின தநுபூதிலக்ஷண ஸ்வாநுபூதிமானகளா யிருக்கலாம்,—சரீராநதசமயத்திலே யந்தஜீவனமுத்தி சாக்ஷாத்கார சாமர்த்யத்தினாலே சேவித்துத் திரும்பத்திரும்பவாராதபடி, பிறவி மாயாவிருளெலாம் - (பிறவியென்றதாகுபெயர்) ஆதலால், பிறவிக்கேதுவாகிய கனமமலம்,—மாயாவிருள் - மாயாமலம், திரும்பமாயாவிருள எனஎடுத்துக்கொண்டு மாயாவிருள் - கெடாத வநாதி சித்தவாணவமல மிவைகளெல்லாம்,—இரிக்கலாகும் - நம்மைப் பந்தியாமற் பொருளன்மைமாதரமா யிருக்கப்பண்ணலாம்,—அடியரோ டிருக்கலாமே - நிரதிசயவிதேக பரமுத்தி பலசர்வார்த்தவிஷய சிவசாக்ஷாத்கார வ்யாபாரகாரமா யிருக்கின்ற நமது சிற்சத்தி சமவேத சிவாநுபூதியினது பூரித்தலாகிய சிவாநந்தாநுபூதியாகிய ஸ்வாநுபூதிமான்களாய்க் கொண்டு அடிமை சிவசத்திசமான தமது சிற்சத்தியையுடையராகிய முத்தான்மாக்களோ டொத்த நாம்வயாபிக்கலாமே.

முன்சொன்ன ஜீவன்முத்தியவத்தையிலேயாகிற் சிவபத்தர்களோடு கூடியிருக்கலாம். பரமுத்தியிலே பரதந்திரியங் கைகழிபந்தமென்று ஞானமிர்த்தத்தி விருத்தலினா லடிமைத்திரமில்லாதபடியினாலே சிவன்களென்றல்லா தடியர்களென்று சிவசமான முத்தான்மாக்களைச் சொல்லப்படா தென்பது கருத்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

எ-து இறைவனியல்பு அப்பெற்றித்தாயினும், அவனை அவ்விறைவனூலெனப்படும் வேதசாரமாகிய சிவாகமத்தினநுபவமுடைய தேசிகரருளிச்செய்யும் உபதேசத்தாற் கேட்டறியலாம்,கேட்டதனை அதற்கநுகூலமானவளவையாற் சிந்தித்தறியலாம்: சிந்தித்ததனைத்தன்னறிவின்கண்ணே சிவஞானத்தான் மாசறத்தெளிந்தறியலாம்; அதனாற் பாசக்ஷயம்பண்ணி நிட்டைகூடிச் சிவானந்தாநுபூதியும் பெறலாமென்பதாம்.

உம்மை எண்ணின்கண் வந்தது. மேல் அவையடக்கத்துட் கூறியதுபற்றி நிகழுமாசங்கையை நீக்கிற்று.

இக்கடவுள்வணக்க முதலாயினவெல்லாம் பரபக்கதநூன்முகத்தாற் கூறிப் போந்தனவேயாயினும்; பரபக்கஞ் சுபக்கமென விதனை இருநூலாதலுங் கொள்ள வைத்தமையின ஈண்டும் வேறு கூறினார்.

அறுவகைச்சமயத்தென்னு முதற்செய்யுளிற் கடவுள்வணக்கங்கூறுமுகத்தாற் சுபக்கத்தி னிறைவனாவானிவனென்பதூஉம், ஏனை நான்குசெய்யுளினும் வழிமுதலியன கூறுமுகத்தான் அவ்விறைவனாலியம்பப்படும் நூலிவையென்பதூஉம், அவற்றுட் பொதுநூல் சிறப்புநூலெனனும் வேறுபாடு முணர்த்தப்பட்டன.

—

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இந்தவத்தந்தன்னை யறியுமுறைமை யெங்ஙனேயென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

அருளினா லாகமத்தே யறியலாம் - தம்பிரானார் திருவருளுண்டானவர்களுக்கு வேதாகமங்களினாலு மந்தப்பொருளை யறிந் தநுபவிக்கலாம்;—அளவினாலும் தெருளலாம் - அளவை

ப்பிரமாணங்களினாலும்சிந்தித்தறிபலாம்,—சிவனைஞானச்செய் தியாற் சிந்தையுள்ளே மருளொலாநீங்கக்கண்டு வாழலாம்- மகத்தானவை யிப்படி ஞானம் ப்ரகாசித்தமுறைமையாலே அஞ்ஞானங்களெல்லாம் விட்டுநீங்கத தன்னுடைய விருதயத்திலே பேரின்பத்தைக்கண்டு தரிசித்தநுபவிக்கலாம்,—பிறவிமாயா விருளெலாமிரிக்கலாகும் - ஜநநங்களை யுண்டாக்குகிற மலமாயாதிகன்மங்களையு மோட்டலாம்,—அடியரோடிருக்கலாமே - இப்படிபெற்ற திருவடியடியார் திரட்சியிலே கூடியிருக்கலாம்—எ-று.

இதனாற் சொல்லியது சிவனுடைய திருவருளுண்டானவர்களுக்கு வேதாகமங்களினாலு மளவைப்பிரமாணங்களினாலுந் தங்களிருதயத்திலுங்கண் டநுபவிக்கலாமென்றுஞ் சநநங்களையுண்டாக்குகிற மலங்களைப் போக்கிக்கொள்ளலாமென்றும், இப்படிப்பெற்ற வடியார்களுடைய கூட்டத்திலுங் கூடியிருக்கலாமெனனு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(இறைவனியல்புஅப்பெற்றித்தாயினும்)சிவனை - அவ்விறைவனை,—ஆகமத்தே - அவ்விறைவனாலெனப்படும் வேதசாரமாகிய சிவாகமத்தை,—அருளினா லறியலாம் - அநுபவமுடைய தேசிகர் அருளிச்செய்யு முபதேசத்தால் கேட்டறியலாம்,—அளவினாலும் - கேட்டதனை யதற்கநுகூலமான அளவையாலும்,—தெருளலாம்-சிந்தித்து மறியலாம்,—சிந்தையுள்ளே - சிந்தித்ததனைத் தன்னறிவின்கண்ணே,—ஞானச்செய்தியால் - சிவஞானத்தால்,—மருளொலாநீங்கிக் கண்டுவாழலாம் -மாசறத் தெளிந்து மறிபலாம்,— பிறவிமாயா விருளெலா மிரிக்கலாகும் - அதனால் பிறவிமாயாமைக்கேதுவாகிய பாசக்ஷயமும் பண்ணலாகும்,—அடியரோடிருக்கலாமே - அதனா லவனடியாரோடுகலந்து நிட்டைகூடி சசிவானந்தாநுபூதியும் பெற்றிருக்கலாம்.

இதனானே பொதுநூல் சிறப்புநூலென்று வேறுபாடுகூறியவாறு.

---

"ஐந்துதுதி"
என்னும்பாயிரம் ஐந்தும்
முற்றிற்று.

---

* 'ஐந்துதுதி' என்னும் சுபக்ஷசெய்யுட்டொகைச்செய்யுள் வரையறுத்தது 'அறுவகை' 'எனவே' 'பண்டை' 'மறையின்' 'அருளினால்' என்னும் ஐந்து செய்யுட்களேயே! இச்செய்யுட்களைந்தினையும் பெரியவெழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கு எல்லாவுரையாசிரியரும் உரையிட்டிருக்கின்றனர்.

மற்ற 'ஆதிகடு' 'ஈசனருள்' 'அருமறை' 'நீடுபுகழ்' 'போதமிகு' இவ்வைந்தும் பரபக்ஷ செய்யுட்டொகைச்செய்யுள் வரையறுத்த 'முகவுரையிற்றசம்' எனபதனுளடங்கியவை. இவற்றில் முதல் மூன்றுசெய்யுட்கும் சிவாகரயோகியர் ஞானப்பிரகாசர் இருவரும் உரையிட்டிருக்கின்றனர். பின் இரண்டிற்கு சிவாகரயோகியர் ஒருவரே உரையிட்டனர். இச்செய்யுட்களைச் சிறிய எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

'ஒருகோட்டன' என்னுஞ் செய்யுள் தொகைச்செய்யுளிரண்டினுமடங்காமையானும், விநாயகனை வெவ்வெககாரியங்கட்கு மிடையூறு நீங்குதற்பொருட்டு முன்னர்த் தியானிக்கவேண்டுமையானும், உரையாசிரியர் யாவரும் பரபக்ஷ சுபக்ஷ மிரண்டிடத்தும் வைத்துரையிட்டனர். ஆதலால் இச் செய்யுளையும் பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டது.

'முகவுரையிற்றசம்' ஐந்துதுதி'என்னும்இரண்டுசெய்யுளும் பரபக்ஷத்திற்கு முன்னர்க் கூறியிருப்பதை மறைஞானதேசிகர் 'ஒருகோட்டன'என்னுங்காப்புச்செய்யுட்குப்பின்னர்க்கூறி, இவற்றின கருத்தாய 'சித்திதன்' என்னும் அகவலைககூறினர், சுபக்ஷ அதிகார மிஃது விளங்குதற்பொருட்டு. இதனையும் சிறிய எழுத்தில் அச்சிடப்பட்டது.



சிவமயம்.

# அளவை.



## மறைஞானதேசிகர் உரை.



மேலதிகார மென்னுதலிற்றோவெனின்? பதிமுதலிய முப்பொருளையும் விளக்குவதாயுள்ள வளவைபிரமாணங்களைப் பதினொரு திருவிருத்தத்தாற் பெயரு முறையுந் தொகுத்துணர்த்துதனுதலிற்று.

அளவையென்பது - அளந்தறியப்படுவது. அஃதெவ்வாறெனின்? உலகத்துப்பதார்த்தங்களை யெண்ண லெடுத்தன முகத்த னீட்டலென்னு நால்வகையளவினு லளந்தறியுமாறு போலப் பதிமுதலிய பொருள்களைப் பக்குவான்மாக்கட்களந்தறிவிக்கையினபொருட் டளவைப்பிரமாணங்களை முதற்கட் கூறியதெனவறிக. "பண்ணிலாற்கில்லாத பாட்டிற்பயப்போன்று, கண்ணிலார்க்கில்லாக் கவின்போன்று—மெண்ணிலா வஞ்சொலளவை யறியாதவர்க்கில்லை, செஞ்சொலளவின் சிறப்பு." என வளவைவிளக்கத்தி லறிக.

இத்தலைச்செய்யு ளென்னுதலிற்றோவெனின்? காண்டன் முதலிய வளவைப்பிரமாணங்களைப பத்தவகை யானே பெயரு முறையுந் தொகுத்தக்கூறி அவைகளைக் காண்டன முதலிய மூனறி லடக்கி யுணர்த்திற்று.

அளவைகாண்டல் கருதலுரை யபாவம்பொரு ளொப் பாறென்ப, ரளவைமேலு மொழிபுண்மை யை தீகத்தோ டியல்பெனநான், களவைகாண்ப ரவைபிற் றின் மேலுமறைவ ரவையெல்லா, மளவைகாண்டல் கருதலுரை யென்றிம்மூன்றி னடங்கிடுமே. (க)

(இ-ள்.) அளவை அளவைப்பிரமாணம் வல்லார்கள் அறுவ காண்டல் கைதெனபர்கள். அவையாவன? காண கருதலு டலெனவு மநுமானமெனவு முரையெனவு ரை யபாவ மபாவமெனவும் அருததாபத்திபெனவும் உ ம் பொருளொப் பமானமெனவும்வரும். அவை வருமாறு.— பாறெனபர்

காண்டலாவது - ப்ரத்தியக்ஷம், மறைந்து மலத்திற் கர ணம் வாய்த்திடவு மத்கமறிநதிடுங்கால் காண்டலாம்.

கருதலாவது - கண்டபொருளை ய நுமித்தறிதல்.

உரையாவது - ஆகமப்பிரமாணம்.

அபாவமாவது - "ஒனறனைமற்றொன்றென்றெருவிப்பி னுண்மையின்றொடொன்றனபாவமெனவோர்". இதனை விரித் தறியி லைவகைப்படும் என்றுமபாவமு மில்லதனபாவமு மொ ன்றிலொன்றபாவமு முள்ளதனபாவமு மழிவுபட் டபாவமு மென வைந்தபாவம்.

முயற்குக்கோடில்லையென்கை என்று மபாவம்.
பெரியோர்வாயிற் பொய்யில்லையென்கை இல்லத னபாவம்.

கடத்தின்கட் படமில்லை படத்தின்கட் கடமில்லை
யென்கை ஒன்றிலொன்றபாவம்.

ஆனைப் பந்தியிற்சண்டிலமெனகை உள்ளதனபாவம்.

கட முடைந்தா லஃதில்லையெனகை அழிவுபட்ட
பாவம். எனவுணர்க.

பொருளென்பது - அருத்தாபத்தி, அஃதாவது? "தடுத்துலகோதும் பொருளருத்தாபத்தி யாமிதுதா, னெடுத்த தமொழியினஞ் செப்புவதாகும இவவூரிலருள், படைத்தவனொனிற் படையாதவருள ரொன்றுமிவன், கொடுப்பவனெனனிற் கொடாதாருமுண்டென்று கொள்வதுவே". எனவறிக.

ஒப்பாவது - "கண்ணன்கருமுகில்போல் வண்ணனெனக் கேட்டவனைக் - கண்ணுமுணர் வொப்பனவேகாண்" எனவறிக.

அளவைபேறு மொழிபுண்மை யைதீகத்தோடு யல்பெனநான்க எனவகாண்பர் இங்ஙனங் கூறிய வறுவகைப் பிரமாணத்தில் மொழியெனவு முண்மையெனவு மைதிகமெனவு மியல்பெனவும் நால்வகைப் பிரமாணங் கூறுவர்கள்.

அவையிற்றில் ஒழிபாவது:— "சீராரொழிபென்று செப்படபடுவது திண்புவிமேற, போராடிநின்று பொருதாரிருவர்தம் போர்க்களத்துப், பாராரிராகவன் வென்றனெனிற்றன் பரிசழிந்து, நேராமிராவணன றேற்றசசொல்லாயி னிகழ்வதுவே" எனவறிக.

உண்மையாவது - சம்பவம், அஃதாவது:—நயக்கநவுண்மை யெனநாவலர்க ணிேத்தைப்ப, நியற்கைப்பொருளினையிற்றெனவாமிது தானைக்கி

ண், வியச்குற்றகால்சலிக்குந் தீச்சுடு நீர்குளிரும், வயகருற்றமண்வலி தெனறுபட்டாங்கு வழங்குவதே" எனவறிக.

ஐதிகமாவது — கொன்டயில்வேலைக் கடல்புடைசூழுங் குவலயததோரன்புடனுவி லலசையுக்டெவபாக ளெனபதவு,மினடயில்புர்றில் விடகாகமுண்டெனபசொன்பதவு, மெனபாகனுவல செனபது மைதிக மெனபர்களே". எனவறிக.

இயல்பாவது.— "மாமேலிருந்தொரு கோறுவெளிற்சுளிக் கோறரலுந், துமேலிருநதொரு கோறுவெளிற் றரவேதுணிந்து, பூமேவுங்கண்ணழுத் தங்கோல்கொடுத்தலும் பூதலததே, காமேவியம்பென்று கூறுவர்நலலசொன் னுவலரோ".

இங்ஙன நால்வகைப் பிரமாணங்களையு ‌றிக.

| | |
|---|---|
| அவையிற்றின் மேலு மறைவர் | இங்ஙனங்கூறிய பத்துப்பிரமாணத்தின் மேலும் ப்ரமாணமுண்டெனறு சொல்லுவர்கள. |
| அவையெல்லா மளவை காண்டல் கருத லுரை யெனறிம்மூன்றி னடங்கிடுமே. | அந்தக்காண்டன்முதலிய பத்தும் ப்ரத்தியக்ஷ மநுமான மாகமம் மூனறினுள்ளே மடங்கும்—எ-று. |

முற்கூறிய வபாவமு மியல்புங் காண்டலிலடங்கும். அஃதெங்ஙனமெனனில்? இங்ஙனங்கூறிய வபாவம் இருவிதப்படும்; கண்ணுற் காணப்படுவதெனவும் காணப்படாததெனவுமென.

இதன்முந்தியது கண்ணாற் காணப்பட்டிருக்கிற கடாதியினுடைய தோற்றரவு கண்ணுக்குக் காணப்படுகையினாலே காண்டலிலடங்கும். மற்றையது கண்ணாற் காணப்படுவதற்கு விடயமாகாதிருக்கிற பரமாணுவாதிகளினுடைய தோற்றரவினறியிருத்தலா லநுமானத்திலடங்கும்.

இயல்பும் பதார்த்தவிதத்துக்கொடுக்கையாற் காண்டலிலடங்கும்.

மற்றவநுமானத்தி லருத்தாபத்தியு முன்மையு மொழிபும் அடங்கும்.

அஃதெங்ஙனமெனில்? தேவதத்தன் பருத்திருக்கையா லிராத்திரி புசிப்பன்; பகற் புசியாதிருக்கையினும் பருத்திருக்கிறானெனும் வியாத்திபைக்கிரிகிக்கையா லநுமானத்திலடங்கும்.

ஒழிபு - பாரிசேடம். அஃதெங்ஙனமென்னில்? ஜகத்கர்த்தா மாயையுங் கர்மமு மானமாவு மன்றெனவே, சிவனே கர்த்தாவெனறு பாரிசேடத்தால் அநுமித்தறிதலால் அநுமானத்திலடங்கும். அஃதெக்காரணத்தாலென்னில்? மாயையுங் கன்மமுஞ் சடமாதலானு மானமா தானுக வறியு மறிவிலாமையானும் சர்வஞ்ஞனை கர்த்தாவே சிவனெனவறிக.

சம்பவம் ஆயிரத்தினூறென்னு மெண்ணிக்கையான தவிகாபாவமாயிருக்கையா லநுமானத்தி லடங்கும்.

ஐதிகம் அப்ரமாணமெனவும் ப்ரமாணமெனவு மிருவிதமாம்.

இதன் முந்தியது ஆலின்கட் பேயுண்டென்கை யொருவருமதனைக் காணுதிருத்தலால் அப்பிரமாணமெனப்பெறும். மற்றது சான்றோர் வாக்கியமே மூலமாக விந்தவாலிற் பேயுண்டென் றறுதியிட் டறிகையா லிதுவு முரையி லடங்குமெனவறிக.

சமயிகளிந்தப்பிரமாணங்களை வேறுபடுத்திக் கூறுவர்கள்.

உலகாயிதன் - காண்டலொன்றுமே கொள்வன்.

பௌத்தனும் வைசேடிகனும் - காண்டலுடனநுமானமுங் கொள்வன.

சாங்கியன - காண்டலு மநுமானமு முரையுமாக மூன்று ப்ரமாணமுங் கொள்வன.

நையாயிகன - அம்மூன்றுட னுபமானமுங்கொள்வன

அருகனும் ப்ரபாகரனும் - அந்நாலுட னருத்தாபத்தியுங் கொள்வன.

பாட்டனும் வேதாந்தியும்- அவ்வைந்துடன் அபாவமுங் கொள்வன

பௌராணிகன் அவ்வாறுடன் சம்பவமு மைதிகமுங் கொள்வன்.

இப்படிச் சமயிகள் பேதப்படுத்திக் கூறுமையா லிவ்வாசிரியரும் பத்துப் பிரமாண முண்டென்று ஓதிற்றெனவறிக.

இதனுட் பலவெழுவாயும், பலபயனிலையுங் காண்க (சு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் ப்ரமாணங்களினாலே ப்ரமேயங்களை யறியவேண்டுகையான முதல் ப்ரமாணங்களின துத்தேசலக்ஷணங்களைக் கூறுகின்றது.

அளவையென்பது அளந்தறியப்படுமது. அஃதெவ்வாற்றுமெனின்? உலகத்துப் பதார்த்தங்களையெல்லா மளக்குமிடத்து எண்ணலெடுத்தல் முகத்தல் நீட்டல் எனனும் நால்வகைய ளவின் றளந்தறியுமாறுபோலப் பதிபசு பாசமுதலிய பொரு

ள்களைப் பக்குவானமாக்களுக் களக்கறிவிக்கையின் பொருட்டு அளவைபிரமாணங்களை முதற்கண் கூறியதெனவறிக.

அல்லாமலுந் தர்க்கயுக்தியாயுள்ளவையு மிந்தவளவையிலே சொல்லப்படுமெ தறிந்து ஆதசப்பிரயோகம் பண்ணவேணுமாகையான முதற்கண் கூறிடதெனவுமறிக.

"இராகமறியார் இசைப்பயன் தானறியார்
தாரதரமறியார் சர்க்காரியமறியார்
ஓராரளவை யொருபயனுந் தானறியார்
ராரராய்ந்தளவை யறிந்துகொளீரோ."

அளவை-பரமாணம். ப்ரமாணமாவது சிற்சத்தி.—அச்சிற்சத்திக கதிஷ்டாநங்களாவன? காண்டல் கருதலுரை - ப்ரத்யக்ஷம அநுமானம ஆகமம் என்று மூன்றுவிசமாம்.—இதற்குமேல் நையாயிகாதிகள் சொல்லும பரமாணம், (அபாவமபொரு ளொப் பாறெனபா) அபாவமானது - உண்டென்று ஞானத்திலில்லாமை, அநுபலத்தி;—பொருள் - அர்த்தாபத்தி,— ஒப்பு - உவமானம, இவைகளகூட வாறென்று சொல்லுவர்கள,—(மேலுமளவை மொழிபுண்மை யையதிகத்தோடியல்பென நான்களவை காண்பர்) பௌராணிகாதிகள முனசொன்னவாறு பரமாணத்திற்கு) மேலுமளவை ஒழிபு-பாரிசேஷம,—உண்மை-சாபவம,—ஐதிசம் - சர்வபரம்பரையாகவரும வாக்கியம்,—இயல்பு-ஸ்வபாவலிங்கம்,என்றிநாலுங்கூடப் பத்தாகச்சொல்வர்கள,—அவையிற்றின மேலுரைவா - இந்தப் பத்துக்குமேலும ப்ரமாணமுண்டென்று சொல்வாருமுளர் (அவைகள் "போதநாற்றத்தா லறிதல்" என்னும் இதனபின்வரும் - கஉ - வது விருத்தத்திற் காட்டுதும்) அவையெல்லாம் - இவ்வாறுசொல்லும் ப்ரமாணங்களனைத்தும்,—காண்டல் கருத லுரையென் றிம்மூன்றிலடங்கிடுமே-ப்ர

ணமாமபொழுது தீபாதிகளும் ப்ரமாணமாம், ஆகையால் சக்ஷுராதிகள் சிற்சத்திக்கு ப்ரமேயமுமாய் § பதார்த்தாபிவ்யஞ்சகமுமாவதன்றி ப்ரமாணமாகமாட்டாது.

† ப்ரமா-ஞானம் ‡ சக்ஷு - கண், § பதார்த் தாபிவ்யஞ்சகம் - பொருள்களை விளக்குவது,

ஆகில் கண்ணாலே காண்கிறேனென்கிற தெப்படியென்னில்? விளக்காலே காண்கிறேனென்கிறதுபோல வுபசாரம் ஆகையினாலே சக்ஷுவானது சப்தத்தையறியாது + ஸ்ரோத்ரமானது ரூபத்தையறியாது இவ்வாறு பஞ்சேந்திரியங்களு மொன்றையொன் றறியமாட்டாதபடியாலும், ஒன்றினுடைய விஷயத்தை யொன்றறியாதபடியாலும், எல்லாவிஷயத்தையு மறிகிறதியாதொன் றது ப்ரமாணமாக வேணும். ஆகில் எல்லாவற்றையு மறிகிறது புத்தியாகையால் புத்தியே ப்ரமாணமென்னில்? புத்தியும் ப்ரகிருதி ஜந்யமாகையால் சக்ஷுராதிகளுக்கு மொருவும பேதமில்லை. இதனறியும புத்தியானது சுகதுக்கரூபையாய சிற்சத்திக்குப் பிரமேயமானபடியாலும், ஜடமேயல்லது சித்ரூபமான ப்ரமாணமாகமாட்டாது ஆகையால் சிற்சத்திக்குப் பிரத்தியக்ஷாதி ப்ரமாணங்களிலே அவ்யாத்திதோஷமும, நாநாப்பிரகாரமாயிருக்கிற ப்ரமேயங்களிலே அதிவ்யாத்திதோஷமும், தான் நித்திய வ்யாபக சித்ரூபமாகையா லசம்பவதோஷமு மில்லாதபடியாலே இந்ததோஷத்திரய ரஹிதமான ஆன்மசிற்சத்தியே ப்ரமாணம்.

+ ஸ்ரோத்ரம் - காது.

* [illegible]
[illegible]
[illegible]

ர்நாம ப்ரமாணஸ்ய ப்ரஸங்கத: । யத்ப்ரமாணஜம்
ஜ்ஞேயம் ஜ்ஞேயாகார: ப்ரதிஷ்டித: ॥ உத்ராநீய
தேதத்ர ஸூத்ரே விஷயஸ்தித: । யஜ்ஞேய ஸஹிதம்
ஜ்ஞானம் யஜ்ஞாஜ்ஞேந நீயதே ॥ பஸ்ராதீதி ப்ரஸா
ணாக்ஷே ப்ரவிதிரவகாரத: । நகஸ்ராவி பதா
ய்ருஷ்ய யதீநாஹவதி ப்ராஜ்ஞா ॥ தந்தவஜ்ஞ நஷ்டிவ்ர க்ஷ
க்ஷராதி நதாப்ரஸம் । நவக்ஷ ஸூத்ரஸாவிதள
நஸ்ர்யாத்ரம் ரூபவிவேதே ॥ ஸவ்யத்ர ப்ராஹிணீ
ஸம்வித் ஸ்வஜ்ஞாநஜ்ஞாதாத் । யஸ்விஜா விதம்ஸி
ஜியத்ருவிஜா நக்ஷ்ண ॥ ப்ரஜிஸ்வ்யாத்ரி ஜக்ஷ
நக்ஷாநாநந்த ஶேஷதே । ப்ராக்தஸ்யாவிஶே
ஷேண ப்ராஸேந ரவிஶேஷத: ॥ க்ஷஸம்விதாத்ரக
ஸ்ந நஹிப்ரஜ்ஞ: ப்ரமாணதா । ப்ரஜிஸ்த்வே
ப்ரதிதிக்ஷு ஸ்வதப்ரவாதி ரூபத: ॥ ப்ரமாணே
காக்ஷதாந் ந ப்ரஜ்ஞாரவிந ஸம்ஸதா ॥ க்ஷத்ரா
வ்ராப்த்ராதிஜ்ஞாஷாணாஜ க்ஷாசந ஸம்ஹவ: ॥ ப்ரத்ர
க்ஷாதி ப்ரமாணேஷு வ்ராப்த்ரநா வ்ராப்த ப்ரூஷணம் ।
நாதி வ்ராப்திஸ்ய ஜ்ஞேயேஷு நாநாஹாவேஷ்வதந்த்
ராஸ் ॥ நாந்யா வ்ராப்திரப்ருஸ்தி ப்ரமாணஜ்ஞ
த்தீ த்ருஸ்யா ஜ்ஞதி.

பின்னுமொருவன் அந்தக்கரணங்களும் * பாஹ்யேந்த்ரியங்களும் விஷயங்களும் ப்ரமாதாவும் இதசநாலுமுண்டானாலொன்றையொன் றறிகையு மிவைகளிலே யொன்றில்லாவிடினு மறியமாட்டாமையு மாகையால் ப்ரமா சாமக்கிரியே ப்ரமாணமென்னில்? மறுத்தால் அப்பொழுது †ப்ரமாணம் ப்ரமேயம் ப்ரமாதா ப்ரமிதியெனனும் வ்யவஹாரமில்லாமற்போம் யாதொன்று யாதொன்றைக் காட்டிலுமதிக மதுவதற்குப் ¶ பின்னமெனகிற வ்யாபதியுமில்லையாம. ஒன்றினாலே யொன்றையொன் றறிகிறதெனகிறது மில்லையாம. ஆகையாலே சந்தேகாதிகளில்லாத ஆனமசிறசததியே பரமாணம.

* பாஹ்யேந்த்ரியங்கள்-வெளியே தோற்றுவிக்கும பஞ்சேந்த்ரியங்கள், †ப்ரமாணம்-அளவை, ப்ரமேயம்-அறியப்படும் பொருள, ப்ரமாதா-அறிகிறவன, ப்ரமிதி - மெய்யறிவு, ¶ பின்னமெனகிற வ்யாபதி - வேறெனகிறநியமம்.

* தது க்தம் தத்த்வப்ரகாசிகாயாம் ஸம்விதேவ ஸா ஜ்ஞேயத்ரய நிரூபிகா । ப்ரமாத்ராதி வ்யாபாரஸமூஹஸ்ய வ்யதிரேகாத் ॥ நதுப்ரமாத்ரஜ்ஞாதி வ்யவஹாராத் ப்ரமாணத: । ஜ்ஞாத்ருஜ்ஞேயாணாந் உபஹாரவதஸ்மிந: ॥ ததோந்யா வ்ருத்திரேகா ஸா ஜ்ஞப்திர் நாதேச்சதே । யஸ்யைகா வ்ருத்திர் முக்தாநாம் தஸ்யா ஸர்வேஸ்வரஸ்ய ॥ ஸம்பாத்யா விஷ்ணாதா விசக்ஷணா உபாநிஷத்வாதிநா இதி.

ஆசிரியர் *உக்தசோஷமுண்டு, உம்முடைய மதத்திலே ஆன்மா ஞானஸ்வரூபனாகையால் ப்ரமாணமும் ப்ரமாதாவும்

ப்ரமையுந் தானேயாகவேண்டு மாகையாலென்னில்? அப்படி யன்று; ஆன்மசிற்சத்தியானது வித்யாராகாதி †கலுஷிதையாய் ‡ விஷயாபிமுகியானபொழுது கலுஷிதாம்ச சிற்சத்தி ப்ரமாணமேயாம். புத்தியின § வ்ருத்திபோடேகூடி விஷயத்தைப் பரிச்சேதிக்கிறபோது ப்ரமையாம். இந்தவுபாதிகளின்றே ¶ அகலுஷித சைதந்நியம் ப்ரமாதாவாம். இந்த வுபாதிவ்ருத்தியின்றி சிற்சத்தி × சிவோன்முகியானபொழுது சிவஞ்ஞான + பிவியத்தியினாற் சூரியகிரணத்தாற் சூரியனையும் சர்வபதார்த்தத்தையுங் கண்டதுபோலச் சிவனையு மந்தச்சிவஞானத்தையுந் தன்னையுந் தானேகாணும்பொழுது அது ப்ரமையாய் அந்த ப்ரமையை யறிவிக்கிற சிவஞானம் ப்ரமாணமும், சிவைக்கியானுசந்தானம் ப்ரமிதியும், ஆன்மா ப்ரமாதாவுமேயாம்.

* உக்ததோஷம - நீர்சொன்னதோஷம், † கலுஷிதை - கூடிக்கலங்கல், ‡ விஷயாபிமுகியாதல் - விஷயத்தை விசித்தல் § வ்ருத்தி - வியாபாரம், ¶ அகலுஷிதம் - கூடிக்கலங்காதது. × சிவோன்முகியாதல் - சிவனை விஷயமாகப்பண்ணுதல், + அபிவியத்தி - ப்ரகாசம்.

இதனால் ஆன்மசிற்சத்தி கலுஷிதமாய் விஷயாபிமுகியானபொழுது அந்தவம்சம் ப்ரமாணமேயொழிய ப்ரமாதாவாகாதென்றும், அகலுஷிதையாய் பரோன்முகி யானபொழுது ப்ரமாதாவொழிய ப்ரமாணமாகாதென்றுங் கூறப்பட்டது

* தத்ஸங்க்ஷோபவிஷ்டம் — சிச்சக்திஸ் ஸமாவே
க்ஷோ ஸோயமேவ ந சாபரஃ | ந கலுஷ்யாஹி சித்ஸம்
ஜ்ஞானம் ஜ்ஞாதாஜ்ஞானம் ப்ரமாத்ருத்வமிஷ்யதே || விஷயாபிமு
கஜ்ஞானம் ப்ரமாணம் நப்ரமாணதா | ப்ரமாத்ருத்வம்

ஜௌதநீயம் ஶுமஜௌதவ நஶூணாஷி ஊஷியோ ஜநா ॥ *

* சுநீதீாவி — ஶிவாகஷ ஶஷிதீயிதீா ஸாஜஸ கஈத விஶூஈ ஶா । ஶிவம் ஶகீாநீ ஹிஸாஜஷம் வெஶதீதாநீா ஷதாவஈகிஶிகி.

அத்ர சிரசததிப்பிரமாணமென்றும் பொதுப்பிரமாணமானது ப்ரமிதியாகாது, பரமிதியானது ப்ரமையாகாது, ப்ரமையானது ப்ரமாதாவாகாது; பெத்தமுததி யிரண்டிலு மாத்ரம ப்ரமாதா அகரப்ரதிகஞான பேதத்திலே ப்ரமிதியாம்.

ஸ்வரூபஞானமான சிற்சத்தி முகத்திலே ப்ரமிதிபேதத்திலே சிவனுடைய இச்சாஞானககிரியை ப்ரமாணம். முத்தியிலே சிவனுடைய பராசததியாகிய ஸ்வரூபசத்தி சிற்சத்திப்பிரமான பேதததிலே மாயாபதார்த்தங்களே ப்ரமேயம் முத்தியிலே சிவனே ப்ரமேயம் இப்படியன்றி அத்ரசிற்சததியைத்தானே யோரவசரத்திலே ப்ரமாணமென்றும், ஓரவசரத்திலே ப்ரமையென்றும், ஓரவசரத்திலே ப்ரமாதாவென்றும், ஓரவசரததிலே பரமதியென்றுஞ் சொல்வது விருத்தம் மமத்வாசரயம் ஒரு வஸ்துவுக்குச் சொல்லுகிறது உசிதமல்ல. இதற்குச் சம்மதி சிவப்பிரகாசத்திலே "இத்தகையினையருளால்" எனனும் பாட்டிலே "பொருந்தியிடும்வகைபுணரும்புனிதசததிபுணாந்தே" என்றும் "பேசரியவராகந்தன்கனமதநுசகிடாய" எனனும் பாட்டிலே "இறைசத்தியுடனாய்நினறே" என்றும், "பன்னிரங்கவருங்கன்மை" என்னும்பாட்டிலே படிகத்தின ப்ரகாசத்தை விளக்குவிக்கிற ஆதித்தப்பிரகாசம் அது பல வன்னததைக் கூட்டியும் உருமத்திலே

அதை நீக்கித் தனது பிரகாசத்தைப் பதித்தும் நின்றதுபோலச் சிவஞானம் பெத்தத்திலே விஷயத்தைக்கூட்டியு முத்தியிலே யதை நீக்கி ஞானமாய்நின்று நேயத்தைக்காட்டி நிற்பதுஞ் சொல்லுகையாலும்; சிவசத்தியே ப்ரமாணமாத்ரசத்தி ப்ரமிதியெனறே கொள்ளவேணுமெனவறிக.

அவயாத்தி அதிவ்யாத்தி அசம்பவதோஷ முண்டாயிருக்கையாலு மத்ரசிற்சத்தியைப் பிரமாணமென்பது கூடாது. அஃதெப்படியெனில்? சிவனை அந்த ஆன்மசிற்சத்தி யறியப்போகாது என்கையிலேலே யவயாத்தி தோஷமும், சிவஞானமான்னது விஷயாதிகளையு மறிவிசதுச் சிவனையு மறிவிக்கையிலேலே ப்ரமேயமல்லாதவஸ்துசு சிவனெனப தோன்றுணடாகையிலேலே அதிவ்யாப்திதோஷமும வந்தது. ஆனம சிற்சத்தி தானே சிவனை யறியமாட்டாதாகையிலேலே அசம்பவதோஷமுண்டு. நித்ய வியாபக சித்ரூபனுமாவானாலும் சிவஞானததிலேலே மலதோஷம நீஙகியும் சிவஞானமறிவித்தாலல்லது தனனையும் சிவனையும் பாசததையு மறியமாட்டாத படியாலும் அசம்பவதோஷமுண்டு. ஆகையால் சிவசத்தியே பெத்தமுததி யிரண்டிலும் ப்ரமாணமெனவறிக.

* ஶிவாகாஂ ஶக்திமிதி த்ரா ஸஜாதகாத விகாத்மநா। ஶிவம் ஶக்த்யாத்ம விஜ்ஞாநம் பஶ்யேத் த்ராணாதா வஞ்சிஶி.

என்றது சிவரூப ஆதித்தனுடைய சத்தியிலேலே அத்ர சிற்சத்தி மலம் நீங்கினவிடத்துச் சிவனையு மந்தச் சததியையும் ஆன்மாவையும் பாசங்களையு மறியுமென்றார்.

பௌத்தர் † அவிசம்வாதியானவர்கள் அறிவு விஞ்ஞானம் ப்ரமாணமென்பர்கள். அப்படிசொல்லி ஆகமப்பிரமா

ணமில்லையென்பன்; அப்படியன்று. பரலோக பாதாளலோகங்ங்களை யறிவிப்பது ஆகமமாகலால் ஆகமப்பிரமாணமுண்டெனவறிக. அதாவது?—அர்த்தக்கிரியாஸ்திதி இதன்பொருள், யாதொருபதார்த்த *தரிசனத்திலேயே ஞானமானது †பாதிக்கப்படாமலிருக்கும் அதுவே அர்த்தக்கிரியாஸ்திதி அதுகூடாது, ‡பூதபவிஷ்யத விஷயங்களாயிருக்கிற அநுமானங்களிலே அவ்யாப்திபாகையாலே இந்த ஆற்றில் வெள்ள மழைபெய்தன்டானது எனகிறவிடத்தில் வெள்ளமுண்டு, அவ்விடத்து மழையில்லாதபடியாலே அர்த்தமுண்டு, க்ரியையில்லையாகையால் அந்தகாலத்தில இது அவ்யாப்தி, அவன §ஸ்மிருதிஞானமும சவிகற்பஞானமும ப்ரமாணமல்லவென்கையாலவனுக்கலக்ஷியமான விவவிரண்டிலு மர்த்தக்கிரியா காரித்வமுண்டாயிருக்கையா லதிவயாப்தியுமா மாகையால் ¶ பூர்வோக்தசித்தியே ப்ரமாணம்.

| அவிசம்வாதி விஞ்ஞானம் - யாதொருபதார்த்தத்தைக் கண்டதனாலே ஞானமானது கெடுக்கப்படாமலிருத்தல், * தரிசனம் - காண்பது, † பாதிக்கப்படாமல் - கெடுக்கப்படாமல், ‡ பூதபவிஷ்யத்விஷயம் - செல்கால எதிர்காலவிஷயம், § ஸ்ம்ருதிஞானம் - முன்நினைவு, ¶ பூர்வோக்தம் - முனசொன்னது.

மேல் ப்ரபாகரர்-அநுபூதியே ப்ரமாணமென்பர்கள் அநுபூதியாவது-¶ஸ்மிருதி வியதிரிக்தஞானம். ஸ்மிருதியாவதேதெனனில்? §பூர்வாநுபவ ஜநித சமஸ்கார ஜந்யஞானமென்பர்கள்; அதுகூடாது அஃதெவ்வாறென்னில்? *பதார்த்தஸ்மரண பூர்வகமாக வேதவாக்யார்த்த ஞானத்துக்கு ஸ்வதப்ரமாண்யம் சாதித்தவனே ஸ்மிருதிவ்யதிரிக்தஞானம் ப்ரமாணமென்கையால் ‡ பூர்வோத்தரவிரோதம். மேலும் ஸ்மருதிகளுக்கு

ம் × ஆன்மஸ்வாத்மாம்சங்களிற் ப்ரமாண்யமு மில்லையாமாகி ல் தோஷமேமெனனில்? + ஸ்வமததகி லபசித்தாந்தமாகை யால் அநுபூதியே பரமாணமெனபது † நிரஸ்தம.

¶ ஸ்ம்ருதி வ்யதிரிக்தஞானம் - முன்னினைவில்லாதஞான ம், § பூர்வாநுபவ ஜநித சமஸ்காரஜந்யம் - முன்னால்தந்த நுபவித்த தகனாலே யுண்டா யிருக்கிற, * பதார்த்த ஸ்மரணபூர்வகம் - சப்தார்த்ததைக் நினைத்து அதுமுன்பாக, ‡ பூர்வோத்தரவிரோதம - முனசொன்னதற்கு பின்சொன் னது விரோதம × ஆன்மஸ்வாதமாமசம - தனனுடைய வேக தேசம், + ஸ்வமதம-தனனுடையமதம, † நிரஸ்தம-கூடாமை.

மேல்பாட்டர் - அநதிகதார்த்தகதருப்ரமாணமென்பர் கள.இதனபொருள் ஒருககாலுமறியாதவஸ்துவை யறிவிக்கிறது ப்ரமாணம்; அதுகூடாது ஒருகார்க்கடகடததை யிதுகடம் இதுகடமென ஏழுங்காகவருகிற ஞானங்களிலே யிரணடாவ து முதலாயிருக்கிற ஞானங்களுக்கு ப்ரமாண்யமில்லையாம இவ் தனறியும் தைவாதீனமாக § அர்த்தசம்வாததை உண்டில்லை யென்றவாதம்உடைத்தாயிருக்கிறதோஷததையுடைய சக்ஷுரா திகளுக்கும் *ப்ராந்தவிப்பரலம்பக வாக்யங்களுக்கும் ப்ர மாண்யமவந்துவிடும்.ஆகையாலி துவுநிரஸ்தம்.பூர்வோகத ஆன் மசிற்சத்தியே ப்ரமாணமாகில் சிற்சததியானது இநத்ரியார்த்தக் கரணங்கள சம்பந்தமனறி தானே ¶ பதார்த்த தாமிமுகியாகா து. ஆகையாலே சிற்சததிக்குக் கடாதிவிஷயங்களோடு சம்ப நதமெப்படியென்னில்? ஒக்கும். சிற்சததியான தாணவமலத் தாற் றகையப்படுகையாலே † ஸ்வநிஷ்டமாகவே யிருக்கும். கலையினாலே ‡ கிஞ்சித்சஞ்ஞான நீககப்பட்டு வித்தையு மரா கமுங்கூடினபொழுது புத்தியாதியோடேகூடி விஷயா ÷ மி முகியாய் ஞானேநதிரியங்களோடேகூடி விஷயசம்பந்தமாம்.

இவ்வாறன்றிக்கனியே +கேவலபதார்த்தேந்த்ரிய×சம்யோகங் கொண்டு ப்ரத்யக்ஷப் பிரமையுமுண்டாமென்று சொல்லப்போகாது. பதார்த்தேந்த்ரிய சம்யோகமுண்டாகியும் புருஷனுக்கு விஷயசுகமுண்டானபொழுது அந்தப்பதார்த்த ℘ஞானமில்லாமல் சம்யோகம் ‖நிஷ்பலமாகையாலே சிறசந்தி விஷயசம்யோகமே ┼ப்ரத்யக்ஷாதி ப்ரமாணம.

§ அர்த்தசம்வாதம - உண்டில்லையென்னும் வாதம், * ப்ராந்த விப்ரலம்பகவாக்யம - பித்தர் விகடாசொல்லும் வார்த்தை, ¶ பதார்த்தாபிமுகம்-பதார்த்தத்திற் கெதிர்முகம், † ஸ்வநிஷ்டம்-தன்னிஷ்டம், ‡ கிஞ்சித்கஞ்ஞான நீக்கப்பட்டுபே ¶ சற்றேமலத்தை நீக்கப்பட்டு, | அபிமுகம்-எதிர்முகம், + கேவலபதார்த்தேந்த்ரியம் - தனியே பதார்த்தங்களும் இந்த்ரியங்களும், × சம்யோகம்-கூட்டுறவு, ℘ ஞானம்-அறிவு, ‖ நிஷ்பலம - ப்ரயோசனமில்லாமை, ┼ ப்ரத்யக்ஷம்-காண்டல்.

[illegible]

இந்தப்ரமாணம் § நிர்விகற்பகமென்றும் *சவிகற்பகமென்று மிரண்டுவிதமாம். நிர்விகற்பமாவது ¶ சாமாந்யமாகவொரு, ‡ வஸ்துவைக்காண்பது. பிறகு † சம்சய ○ விபர்யயஸ்திதி ● நிவிர்த்தியினபொருட்டு * நாம ь ஜாதியாதியோசனையைப்பண்ணு 1 மவாந்தர வ்யாபாரம். இந்த நாமஜாதியாதி விசிஷ்ட 2 பாரந்தரம் வஸ்துவை 3 யதாவத்தாக வறிகிறது சவிகற்பகஞானம் இந்த ப்ரத்யக்ஷந்தான் இந்த்ரிய 4 சாபேக்ஷமென்றும் அந்தக்கரண சாபேக்ஷமென்றும் இந்த்ரியாந்தக்கரண 0 நிரபேக்ஷமென்று மூன்றுவிதமாம். இதில் இந்த்ரியாந்தக்கரண நிரபேக்ஷ ப்ரத்யக்ஷமாவது ஒருக்காலு ¶¶ மாவரணமேலசமற்றிருக்கிற ஈஸ்வர சிற்சத்தியாலே சிவாநந்தத்தை ஆன்மா வநந்நியமாக வநுபவிப்பது. இதற்கந்யமான விந்த்ரியசாபேக்ஷ ப்ரத்யக்ஷமாவது ஆணவமலா §§ வ்ருத்தியைந்த கலையாலே சிறுசித் நீக்கப்பட்டு அந்தக்கரண ஞானேந்த்ரிய †† த்வாரா வஸ்துக்களை யறிவது அந்தக்கரண சாபேக்ஷாமாவது ‡‡ பாக்யேந்த்ரியங்களிறாலே கண்டபதார்த்தங்களை சிறசத்தியானது அந்தக்கரணங்களோடுகூடிநின்று சித்திப்பது.

§ நிர்விகற்பம் - விகற்பமில்லாதது, * சவிகற்பம் - விகற்பத்துடனே கூடினது, ¶ சாமாந்யம - பொது, ‡ வஸ்து - பொருள், † சம்சயம் - ஐயம, ○ விபர்யயம் - திரிவு, ● நிவிர்த்தி - இல்லாமை, * நாமம - பெயர், ь ஜாதியாதி - குலம குணமுதலான, 1 அவாந்தரம - நடுவேயுண்டானது. 2 அநந்தரம் - பிற்பாடு, 3 அகர்வத் - உள்ளபடி, 4 சாபேக்ஷம் - கூடினது, 0 நிரபேக்ஷம் - கூடாதது, ¶¶ ஆவரணமேல சமற்றிருக்கிற - மறைப்பில்லாமலிருக்கிற, §§ வ்ருத்தி - அதிகமாதல் அதாவது மறைதல், †† த்வாரா - வழி, ‡‡ பாக்யேந்த்ரியம் - வெளியிந்த்ரியம். அதாவது கண்முதலிய ஞானேந்த்ரியங்களே.

* தத்துக்தம் — [illegible] இதி.

இக்கப்ரமாண ¶ அபிவியஞ்சகமானது ப்ரத்யக்ஷமொன்றும் அநுமானமொன்றும் சப்தமொன்றும் சைவத்திற்கு மூன்றுவிதமாம்.

¶ அபிவியஞ்சகம் - வெளிப்படத்தோற்றுகிறது.

* தத்துக்தம் [illegible] இதி.

மேல் உலோகாயிதன் ப்ரத்யக்ஷமொன்றுமே யொழிந்த அநுமானாகமங்கள் ப்ரமாணமல்லவென்பன் அதற் கவனுடைய மதத்தை நிராகரித் தநுமானாகம ப்ரமாணங்களுண்டென்பது பரபக்ஷத்தி லவனுடைய மதநிராகரணத்திலே கூறப்பட்டது.

நாலு பூதங்கூடினதே ஆன்மாவென்பன் "பூதங்கூடின தைக் கண்டாயோ இந்தப் பூண்டபூத வுடம்பினவதெழு போகமெனகொடு கண்டனே" இதெல்லாம் அநுமானமெனவறிக.

அமாவாசையுங் க்ரஹணந்தீண்டலும சததப்ரமாணத்தினாலேயே அறிந்தாய்; ஆகையால் உரையுண்டு.

இனி ப்ரத்தியக்ஷநுமானமாகமங்க ளலலாமல் உபமானம் § ப்ரத்கப்ரமாணமென்று நையாயிகர் சொல்லுவர்கள். அந்த உபமானம் அநுமானத்திலே * யந்தர்ப்பவிக்கும்படி ‡ ப்ரதிபிப்பாம். உபமானமாவது கவயமாகிய மரையை யறியவேண்டின பட்டணஸ்தனானவன வநத்துக்குப்போய் வநத்திலுள்ளவனான வொருவனை மரையெப்படியிருக்குமென்று கேட்கப் பசுவைப்போலிருக்குமென றவன சொல்லக்கேட்டு வநத்திற்குப்போய் மரையைக்கண்டு இது ¶ கோசத்ருஸ்யமாயிருக்கிற மரை கவயமென்றறிகிறது. இது ப்ரத்யக்ஷாநுமானாகமங்களினாலே † யசாத்யமாகைபாலே ப்ரத்கப்ரமாணமெனனில்? சாஸ்த்ரஸ்யஞான முபமானமேயாமெனனில் ? இந்த மரை பசுவுக்கு சமானமாமெனகிறபொழுது ப்ரத்யக்ஷமேயாம். அல்லது 1அதிதேசவாக்ய சரவணத்திற்குப் பிறபாடு கவய 2வாசபதவ பரிச்சேதமான துபமானமெனனில்? அநுசப்ந்த்தினாலே தானேவருா. இந்தப்பசுவுக்குச்சமான மரை யெனகிற துபமானமெனவில்? அந்தமரை யிந்தப்பசுவுக்குச் சமானம் ந்தத சாஸ்த்ரஸ்ய ப்ரஸித்யோகியாலே யென்றுசொல்லி யறுமிக்கைபாலே அஃதநுமானத்தி லந்தர்ப்பவிக்கும்; ப்ரத்க ப்ரமாண மல்ல.

§ ப்ரத்க் - தனியே, * அந்தர்ப்பவித்தல்-அடங்குதல், ‡ ப்ரதிபிப்பித்தல் - சொல்லுதல், ¶ கோஸத்ருஸ்யம் - பசுவுக்கு சரிபாயிருக்கிறது, † அசாத்யம் - (அறிக்ிறது) கஷ்டம், அநா

வது அறியக்கூடாதென்பது கருத்து, 1 அதிதேசவாக்ய ச்ரவணம்-வந்ததிலிருப்பவன சொன்னதைக் கேட்டது, 2 வாச்சிய தவபரிச்சேதம் -சொல்லினாலே சொல்லப்படுகிறது.

ப்ரபாகரர் *அர்த்தாபத்தி பரதக்ப்ரமாணமென்பர்கள். அர்த்தாபத்தியாவது ஒருபுருஷன பகலெல்லாம் போஜனம் பண்ணவில்லை பருத்துமிருக்கிறான என்றதுகொண்டு பகல் போஜனம் பண்ணுதவனுக்கு தேகபுஷ்டி ராத்ரி புசியாவிட்டால் கூடாதாகையால் விருத்த வருபவததினாலே ராத்ரிபுசிப்பானென்று நிச்சயிக்கப்படுவது. இதுப்ரத்யக்ஷாதி ப்ரமாண சதுஷ்டயங்களிலும் × மகம்மியமானபடியாலே அர்த்தாபத்தி ப்ரதக்ப்ரமாணமெனின? அஃதல்ல இந்த அர்த்தாபத்தியானது கேவல வ்யதிரேகியநுமானத்தி லந்தர்ப்பவிக்கும். அஃதெப்படியெனனில்? தேவதத்த னிராத்ரி புசிப்பன், பகல்புசியாமலிருக்கவும் பருத்திருக்கையாலே. எவன ¶திவாராத்ரம் புசியாமலிருந்தா னவனுக்கு ‡ பீநதவங்கூடாது, § மாசோபவாசியைப்போல வெனகையால் கேவல வ்யதிரேகியி லந்தர்ப்பவிக்கும். ஆகையாலே ப்ரதக் ப்ரமாணமல்ல.

* அர்த்தாபத்தி -பொருள், × அகம்மியம் - அறியப்படாதது, ¶ திவாராத்ரம் - பகலுமிரவும், ‡ பீநதவம் - பருத்திருத்தல், § மாசோபவாசி - மாசப்பட்டினி யிருப்பவன.

மேல் பட்டாசாரியர் ப்ரத்யக்ஷாதிகளைந்தும் ப்ரமாணமுமன்றி யபாவமான † அநுபலப்தி வேதயமாகையா லபாவம் ப்ரதக் ப்ரமாணமெனபர்கள்; அதுகூடாது, சக்ஷுசம்யுக்தமான விக்தபூதலம் ¶ கடா பாவத்தையுடையதென்று பூதலத்துக்கு விசேஷணமாகத்தான், இந்த பூதலத்திலே கடமில்லையென்று பூதலத்துக்கு விசேஷியமாகத்தான், காரஷி

க்கப்படுகையா லிந்த வபாவம் ப்ரத்யக்ஷத்தி லந்தர்ப்பவிக்கு ம்; ஆகையாலே ப்ரதக் ப்ரமாணமல்ல.

† அநுபலப்திவேத்யம் - இல்லாமையைக்கொண் டறியப் படுகை, ¶ கடாபாவம் - (கட ஆபாவம) கடமில்லாமை.

பௌராணிகர் பாரிசேஷமும் சம்பவமும் ஐதிகமும் ஸ்வ பாவலிங்கம் இவைநாலும் ப்ரதக் ப்ரமாணமெனபாகள். இவைகள் முன்சொனன மூன்றுப்ரமாண த்ரயத்தி லந்தர்ப்ப விக்கையால் ப்ரதகப்ரமாணங்களல்ல. அஃதெவ்வாறெனனி ல்? ஆயிரமியானையின பலமுடையவர்கள் சல்லியன சராசந் தன கிசகன பீமசேனன இந்த நாலுபேருமாகையா லிவர்களு க்குள்ளே கிசகனை வதைத்தவனுறென்றவிடத்தில் அவவிடத் தில் சல்லியனுஞ் சராசந்தனு மில்லாதபடியால் * அஞ்ஞாத வாசியாகிய பீமசேனனேயென்று நிச்சயிப்பது பாரிசேஷம். ஆ யிரமியானையின் பலமுண்டான கிசகன தனக்கு சமபலமான வன கையாலே கொல்லப்படுவன; அத்தனை பலததை யுடை த்தாகையாலே சராசநதனைப்போலே யெனகிறது வயாப்திமு லகமானபடியாலே யிந்தப்பாரிசேஷம் அநுமானத்தி லந்தர்ப் பவிக்கும். சம்பவமானது ஆயிரத்திலே நூறுண்டென்கிறது, இதுவும் வ்யாப்திமூலகமாகையா லநுமாநத்தி லந்தர்ப்பவிக கும். ஸ்வபாவலிங்கமானது - தேமா ¶ வ்ருக்ஷமாம். தேமா ஸ்வபாவ மாகையால் வ்ருக்ஷமாகாதபோது தேமாவாகாது. ‡ சிலேபோல என்பது அந்வய வ்யதிரேக வ்யாப்தியுண்டாயிரு க்கையால் இதுவும் அநுமானத்தி லந்தர்ப்பவிக்கும். ஐதிகமா வது இந்தஅரசிலே †ரக்ஷோவுண்டெனபது. இது ப்ரத்யக்ஷமு மல்லாமல் அநுமானமுமல்லாமல் வாக்யமூலமாகையால் சப் தத்தி லந்தர்ப்பவிக்கும்; ஆகையால் முன்சொன்ன ப்ரத்யக்ஷ அநுமானாகமங்கள் மூன்றுமே ப்ரமாணம். இந்தப்பிரமாணங்களி

னுடைய ப்ரமாண்யமானது § ஸ்வதோவா பரதோவாவென்னில்? இந்த மூன்றுப்ரமாணத்திலும் ||. அநுஸ்யூதமாயிருக்கிற வானமசிற்சத்தியானது + ஸ்வசம்வேத்ய மாகையாலே × ஸ்வதகப்ரமாணமே.

* அஞ்ஞாதவாசி - அறியாமல் வசவாசம்பண்ணுவோன, ¶ வ்ருக்ஷம் - மரம், ‡ சிலை - கல்லு, † ரக்ஷஸ் - பேய், § ஸ்வதோவா பரதோவா-தனனைக்கொண்டுவருமோ வேறொன்றுகொண்டுவருமோ, ||. அநுஸ்யூதம்-கூடியிருத்தல், +ஸ்வசம்வேத்யம - தனனாலே யறியப்படுகிறது, × ஸ்வதகப்ரமாணம் - தனனைக்கொண்டறிகிறதே ப்ரமாணம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பதிபசுபாச தரிசனாத்மகமாகிய ப்ரமேயசித்தி ப்ரமாணமன்றி யில்லையெனபதனாற் ப்ரமாணங் கூறுகின்றார்.

அளவை - பரமாணம், ஆறென்பர்,—காண்டல் - ப்ரத்தியக்ஷம்,—கருதல் - அநுமானம்,—உரை - ஆகமம்,—அபாவம் - அநுபலத்தி—பொருள் -அர்த்தாபத்தி,—ஒப்பு - உபமானம், இப்படி பாட்டனும் வேதாந்தியு மப்ரமாணமாறென்பர்கள். அருகனும ப்ரபாகரனும் அவைகளுக்குள் அபாவப் பிரமாணமொன்றையுந் தள்ளிப்பிரமாணம் ஐந்தென்பர்கள்,நையாயிகன் அவற்றுள் அர்த்தாபத்திப் பிரமாணமொன்றையுந்தள்ளி நாலென்பன, சாங்கியன அவைகளுள் உபமானப்பிரமாண மொன்றையுந் தள்ளிப் பிரமாண மூன்றென்பன்,பௌத்தனும் வைசேஷிகனும் அவையிற்றுள் ஆகமப்பிரமாண மொன்றையுந்தள்ளிப் பிர

மாண மிரண்டென்பர்கள்,உலோகாயிதன் அவற்றினுள் அநுமா னப்பிரமாண மொன்றனையுந்தள்ளிப் பிரமாண மொன்றென்ப ன்,—அளவைமேலும் - சொல்லியவாறுப் பிரமாணங்களுக்கு மேலும்,—ஒழிவு - பாரிசேஷ்யம்,—உண்மை - சம்பவம்,—ஐதிகம் - உலோகவாதம்,—அதனோடியல்பு - ஸ்வபாவம் என நான்களவை காண்பர்,—அவையிற்றினமேலு மறைவர் - சொல்லிய விப் பத்து ப்ரமாணங்களுக்கு மேலும் ப்ரமாணங்களைச் சொல்லுவார்கள்,—அவையெல்லாமளவை - அந்த வெல்லாப் பிரமாணங்களுஞ் சாங்கியத்திலேபோல சைவசித்தாந்தத்தி லே,—காண்டல் கருத லுரை யெனறிம்மூன்றின் - ப்ரத்தியக்ஷம் அநுமானம் ஆகமமெனகின்ற மூன்று ப்ரமாணங்களின்,—அடங்கிடுமே - அந்தர்ப்பவிக்குந்தானே.

இந்தப் பிரமாணங்களினது பகுப்பிலக்ஷணம் அடக்கம் உதாஹரணங்கள் விரித்து,சுருங்கியவுரையி லுரைக்கில் விபரீதமாய் விரியும்; ஆதலால் முனசொல்லிய முனனோருரையில் முதிர்ந்தோ ருரைக்க வொருநெறியாலறிக.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனி,நிறுத்தமுறையானே பொருளுண்மைக் களவுகூறுவான் றொடங்கி, அவ்வளவையினியல் புணர்ந்தார்க்கன்றி அதனை யெடுத்துக்காட்டலாகாமையின், முதற்கண் அளவையினியல்பு பதினொன்று செய்யுளாற் கூறுகின்றார்.

எ-து. பிரமாணமாவது காட்சிமுதல் அறுவகைப்படுமென்பாரும்,அவ்வறுவகைப் பிரமாணங்கட்குமேலும் பாரிசேடமுதலிய நான்குபிரமாணமுளவென்பாரும், அப்பத்துக்குமேலும்

பிரமாணங்களுளவென்பாருமுளர். அவையெல்லாம் பிரமாண மேயாயினுங் காட்சிமுதலிய மூன்றனுளடங்குவனவனறி வே றுவனவல்லவென்பதாம்.

இம்முறைபற்றி ஆகமமு மநுமானத்தி லடங்குமெனப் புத்தர் முதலாயினர் கூறுப. அஃததனுளடங்காதென்பது "நூலுரைத்தானொருவனுளன," என்னும் பரபக்கத்துச் செய்யுளா னுணர்க. பௌத் - சௌத் - மறுதலை - கஉ—செ.

இது சொற்பொருட்பின்வருநிலை.

இதனானே பிரமாணமினைத்தெனபது கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

அளவைப்பிரமாணங்களினாலு மறியலாமென்றதெப்படி யென்ற மாணாக்கனைநோக்கி மேலருளிச்செய்கிறார்.

அளவை - அளந்தறியத்தக்க ப்ரமாணம்,—காண்டல் - ப்ரத்தியக்ஷம்,—கருதல் - அநுமானம்,—உரை - ஆகமம்,— அபாவம் - உள்ளதை யில்லையெனகை,—பொருள் - அர்த்தாபத்தி,—ஒப்பு - உவமானம்,—ஆறென்பர் - இப்படி ஆறுவகை யாகச் சொல்லுவர்கள்,—அளவைமேலும் - இந்தப்பிரமாணங்களையொழிய மேலும்,—ஒழிவு - பாரிசேஷம் (பாரிசேஷம் - மூன்றுபெயரிலே யிருவரைக் கள்வரல்லவென்றால் நின்றவொருவனைக் கள்வனென் றறிகை),—உண்மை - சம்பவம் (சம்பவம் - நூற்றிலே தொண்ணூறுண்டென் றறிகை),—ஐதிகம் - மரத்திலே பே யுண்டென்று லதுபோல் ப்ரதிவாதிக்கை,—இயல்பு - மா பூத்ததென்றால் மரத்தின்மேல் நிற்றல்,—என

கான் களவைகாண்பர் - என்று நாலுவகையாகவு மளந்தறிவர்கள்,—அவையிற்றின்மேலு மறைவர் - அவையிற்றுடனே வேறேயுஞ் சொல்லுவர்கள்,—அவையெல்லா மளவை - அப்படிச் சொல்லப்பட்டவையெல்லாம ப்ரமாணங்கள்,—காண்டல் கருதலுரை யெனறிம்மூனறி னடங்கிடுமே - இவைதான் ப்ரத்தியக்ஷம் அநுமானம் ஆகமம் என்றுசொல்லப்பட்ட மூன்றினுள்ளுமடங்கும்:

இதனாற்சொல்லியது ப்ரத்தியக்ஷம்முதலான பத்தும் மற்றுமுள்ள ப்ரமாணங்களுங் காண்டல் கருத லுரை யென்னு மூனறினுள்ளு மடங்குமென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———0———

### அளவை இலக்கணம்.

அளவை - ப்ரமாணமாவது,—காண்டல் - காட்சியும்,—கருதல் - அநுமானமும்,—உரை - ஆகமமும்,—அபாவம் - இன்மையும்,—பொருள் - அருத்தாபத்தியும்,—ஒப்பு - உவமையுமென,—ஆறெனபா - ஆறுவகைப்படுமெனபர்,—அளவைமேலும் - அவ்வறுவகைப் பிரமாணங்களுக்கு மேலும்,—ஒழிபு - பாரிசேஷமும்,—உண்மை - சம்பவமும்,—ஐதிகத்தோடு - உலகவாதத்துடன்,—இயல்பென - சகசமுமென,—நானகளவை காண்பர் - நானகுப் பிரமாணமுளவென்பாரும்,—அவையிற்றின் மேலுமறைவர் - அப்பத்திற்கு மேலும் ப்ரமாணங்களுளவென்பாருமுளர்,—அவையெல்லா மளவை - அவையெல்லாம் ப்ரமாணமேயாயினும்,—காண்டல் - காட்சியும்,—கருதல் - அநுமானமும்,—உரை - ஆகமமும்,—என்றிம்மூன்றி னடங்கிடுமே - என்ற இம்மூன்றி னடங்குவனவன்றி வேறுவனவல்லவென்பதாம்.

இதனானே ப்ரமாணமித்தனைத்தெனக் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



மேனிறுத்த முறையானே காண்டன் முதலிய மூன்றினையும் வகுத்துணர்த்துகிறார்.

மாசறு காட்சியையந் திரிபின்றி விகற்பமூன்று, வாசற வறிவதாகு மநுமான மவிநுபாவம், பேசுறு மேதுக்கொண்டு மறைபொருள் பெறுவதாகுங்,காசறு முரையிம்மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும்.(உ)

(இ-ள்.) மாசறு காட்சியை யசதிரிபின்றி விகற்பமுனறு வாசற வறிவதாகும் — குற்றமில்லாத காட்சியாவது,ஐயந் திரிபு மிகுதி முதலிய குற்றத்தையின்றி யுரை மாவினது சித்தியா லறிவது.

அநுமான மவிநுபாவம் பேசுறு மேதுக்கொண்டு மறைபொருள் பெறுவதாகும் — அநுமானமாவது தன்னைவிட்டு நீங்காத வ்யாத்தி பொருந்தின வேதுவைக்கொண்டு மறைந்தபொருளை யறிவது

காசறுமுரையிம்மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும். — குற்றமற்ற வாகமப்பிரமாணமாவது மூற்கூறிய காட்சியானு மநுமானத்தானு மறியப்படாதிருக்கிற ஸ்வர்க்க நரகாதிகளை யிதென் றறுதியிடுவிப்பது—எ-று.

விஞ - விட்டுநீங்குவது; அவிஞு - விட்டுநீங்காதது, பாவம் - உள்ளது; இது வடமொழி.

பசு சாத்திரஞ் சொன்னவர்கள் சர்வஞ்ஞரல்லாதபடியாலு மிராகத்வேஷத்துடன் கூடினவர்களாதலாலுஞ் சிவனுக் கஃதில்லாமையாற் சிவவாக்கியங் குற்றமில்லாதவாக்கியம் ஆதலாற் காசறுமுறையெனச் சிறப்பித்ததெனவறிக. (உ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேல் ப்ரத்யக்ஷாநுமானாகமங்களுடைய லக்ஷணங்கூறுகின்றது.

மாசறுகாட்சி - குற்றமற்றப் பிரத்யக்ஷமாவது,—ஐயம்-சந்தேகம்,—திரிவு - ஒன்றை மற்றொன்றாகக் காண்பது,— ¶அனதி - பூர்வஸ்மரணையன்றி,—விகற்பமுனஞ- நிர்விகற்ப * தரிசனாந்தரம் சவிகற்பமாக விசாரித்து,—ஆசறவறிவதாகும்-முன்சொன்ன ‡சம்சயாதிதோஷங்களின்றிக்காணபதாம்,—அநுமானம்-அநுமானமாவது,— † அவிநாபாவம் -காரணகாரியங்களுடைய பிரிவின்மை,—பேசுறுமேதுக்கொண்டு மறைபொருள பெறுவதாகும் - த்ரடவ்யாப்தியாகச் சொல்லப்பட்ட ப்ரத்யக்ஷமாகிய காரியவேதுவைக்கொண்டு அப்ரத்யக்ஷமாகிய காரண மவ்விடத்துண்டென்று நிச்சயிப்பது,—காசறுமுறையிம்மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும் - சிற்றறிவனும் வஞ்சனுமன்றி சர்வஞ்ஞனுக்கு சர்வாந்தரியாமியுஞ் சர்வஜீவ தயாபரனுமாகிய ஈஸ்வரன் வாக்யமான வேதாகமங்கள் ப்ரத்யக்ஷாநுமானமாகிய விவ்விரண்டினாலு மறியப்படாதபொருளையறிவிக்கும்.

¶ அன்றி - இனறிஎனவும்பாடம், இன்றி - இவ்விரண்டுமி ன்றி எனப் பொருளுரைப்பதுமொன்று, * தரிசனந்தரம் - க டைப்பிறகு, ‡ சம்சபாதி தோஷங்கள் - ஐயந்திரிவுகளாகிய கு ற்றம், † அவினாபாவம் பேசுறுமேதுக்கொண்டு - ஏனைஒன்றுடக் சேர்ந்து பிரிவினைசொல்லுகிற காரியகாரணத்தைக்கொண் டு தாடவயாப்தியாகச் சொல்லப்பட்ட,—மறைபொருள் பெ றுவதாகும் எனக் கூட்டிமுடிக்கவும்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மேனிறுத்தமுறையானே காண்டலமுதலிய ப்ரமாண மூ ன்றினையும் வகுத் துணர்த்துகின்றார்.

மாசறுகாட்சி - குற்றமில்லாதபொறி புணர்ந்த சிற்சத்தி ந்தறி ப்ரதயக்ஷமாவது,—ஐயந்திரிவினறி - சந்தேகவிபரீத மி ருதிகளனறி,—விகற்பமுன்னு - நிர்விகற்பத்துக்குமேற் சவிக ற்பமாக,—ஆசற - குற்றமின்றி,—அறிவதாகும் - பொருளைப் போதிப்பதாகும்,—அநுமானம் - தூமமுதற்சாதநம் புணர்ந்த சிறசத்திக்குறி யநுமானமாவது,—அவினாபாவம் பேசுறுமே துக்கொண்டு-வ்யாததியோடு சொல்லப்படுமந்த தூமமுதற்சா தநங்கொண்டு,—மறைபொருள் பெறுவதாகும் - ப்ரத்யக்ஷத்து க்கயோக்யமு மயோக்யமுமா யொளித்தவஸ்துவை யறிவிப்ப தாகும்,—காசறுமுனா - குற்றமற்ற அர்த்தவாக்யம் புணர்ந்த சிறசத்திக்குறிச் சிவாகமமாவது,—இம்மானத் தடங்கிடாப் பொருளைககாட்டும - ப்ரத்யக்ஷத்தைக் கடந்த அநுமானத்தி தமாகிய பதார்த்தத்தையும் போதிக்கும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

எ-று. அம்மூன்றனுள், நிருவிகற்பவுணர்வைத் தனக்கு மு ன்னாகக்கொண்டு ஐயவுணர்வும் விபரீதவுணர்வுமின்றி விடயங் களை நேரேயறிவதாகிய ஆன்மாவினது ஞானசத்தி காட்சியள வையெனப்படும். அங்ஙனம் நேரேயறியப்படுவதனறிச் சாதி த்துப் பெறற்பாலதாய் மறைந்து நின்ற பொருளை அதனை விட்டு நீங்காது யாண்டுமுடனாய் நிகழுமேதுவைக்கொண்டு அவவாறு ணர்வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி கருதலளவையெனப்ப டும். இவ்விரண்டானுமறியப்படாத பொருள்களை ஆத்தனவாக் கியங்கொண்டு அவவாறுணரச்செய்வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி உரையளவையெனப்படுமென்பதாம்.

அடங்கிடாப்பொருள் பரலோக பாதாளலோகமுதலாயி ன. இம்மானத்தடங்கிடும் பொருளையும் ஆத்தவாக்கியங்கொண டறிவது அருத்தவாதம். ஐயந்திரிவின்றி விகற்பமுன்றுவெனப தனை யாண்டுங் கூட்டியுரைத்துக்கொள்க.

விகறபமென்றது தலைக்குறை.

இதனானே இம்மூன்றற்கும் இலக்கணங் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---o---

காண்டல் கருதலுரையென்ற விம்மூன்றினு மெல்லா மடங் குமென்னில்? இம்மூன்றையும் விரித்துணர்க்கவேணுமென்ற மா ணாக்கனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

மாசறுகாட்சி - குற்றமற்றப் பிரத்யட்சமானது— ஐயந்திரிவின்றி விகற்பமுன்று மாசறவறிவதாகும் - ஐபக்கா

ட்சியுந் திரிவுகாட்சியுமற விகற்பக் காட்சியும் விசாரியாமல் பொருளைக்கண்ட மாத்திரத்திலே குற்றமற வறிவதாகும்;—அநுமானம் - அநுமானமானது;— அவிநாபாவம் - அவிநாபாவமென்னும்,-பேசுமேதுக்கொண்டு மறைபொருள் பெறுவதாகும்- பிரிவில்லாதகுணமாகச்சொல்லப்பட்ட வேதுக்களைக் கொண்டு காணுதபொருள்களைக் காணப்படுவதாகும்,—மாசறு முறையிம்மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும் - குற்றமற்ற வாகமமானது முன்சொல்லப்பட்ட விரண்டுப்ரமாணங்களினு மடங்காதவத்தத்தைக் காட்டாநிற்கும்.

இதனாற்சொல்லியது ஐயக்காட்சி திரிவுக்காட்சி விகற்பக்காட்சி மூன்றுங்கூடாமற்காணகிறது மாசறுகாட்சியென்றும், அநுமானம் ஏதுக்களைக்கொண்டு மறைந்தபொருள்களைக காண்கிறதென்றும், ஆகமம் இந்தவிரண்டு ப்ரமாணத்திலு மடங்காத பொருளைக் காட்டிநிற்குமென்னு முறைமையுமறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(அம்மூன்றுனுள்) விகற்பமுமூன்று-நிருவிகற்பவுணர்வைத் தனக்கு முன்னுகக்கொண்டு,—ஐயந்திரிபின்றி - ஐயவுணர்வும விபரீதவுணர்வு மில்லாமல்,—ஆசறஅறிவது-விடயங்களை நேரே யறிவதாகிய ஆன்மாவினது ஞானசத்தி;—மாசறுகாட்சியாகும்-குற்றமற்ற காட்சி யளவையெனப்படும்,—மறைபொருள்-அங்ஙன நேரே யறியப்படுவதினறிச்சாதித் தப்பெறற்பாலதாய் மறைந்துநின்ற பொருளை,—அவிநாபாவம் பேசுமேதுக்கொண்டு -அதனைவிட்டு நீங்காது யாண்டுமுடனிகழுமேதுவைக்கொண்டு,—விகற்பமூன்று வையந்திரிபின்றிப் பெறுவது - அவ்வாறு நிருவிகற்ப வுணர்வைத்தனக்கு முன்னுகக்கொண் டையவிப

ரீதக்குற்றமின்றி யுணர்வதாகிய வான்மாவினது ஞானசத்தி,—அநுமானமாகும்-கருதலளவையெனப்படும்,—இம்மரனத்த—ங்கிடாப்பொருளை - இவ்விரண்டு பிரமாணங்களாலு மறியப்படாதபொருளை ஆப்தவாக்கியங்கொண்டு,— விகற்பமுன்று வையங்திரிபினறிக்காட்டும் - அவ்வாறு நிருவிகற்பத்தைத் தனக்குமுன்னாகக்கொண்டு ஐயவிபரீதக்குற்ற மின்றி யுணரச்செய்வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி,—காசறுமுரை - குற்றமற்ற வுரையளவை யெனப்படும் - எ-று.

---

## மறைஞானதேசிகர் உரை.



ஐயக்காட்சி திரிவுகாட்சி யிருவிதமெனபதும் சவிகற்ப நிர்விகற்ப மிருவிதமென்பது முணர்த்துகிறார்.

கண்டபொருளை யிரட்டுறவே கருதலையந் திரியவே, கொண்டதிரிவாம் பெயர்சாதி குணமேகன்மம் பொருளெனவைந், துண்டவ்விகற்ப வுணர்வினுகருப் பொளினுண்மை மாத்திரத்தின், விண்டவில்லா வழிவாரும் விகறபமில்லாக் காட்சியே. (௯)

(இ-ள்.) கண்ட பொருளை யிரட்டுற — ஐயக்காட்சியாவது - தோன்றினதொரு பொருளைக் குற்றிகொல்லோ மகன்கொல்லோவென் றிரண்டுறக்கருதுமது

வே கருதலையம்

திரியவே கொண்டதிரிவாம் — திரிவுகாட்சியாவது - தோன்றினதொரு பொருளை விபரீதமாகக் கருதுதல்.

அஃதாவது? இருளின்கண் மயக்கத்தாற் பழுதையைக் கண்டு பாம்பென றச்சமுறுதல். இங்ஙன மாறுகொளக் கருதல் பிறவும் வந்துழிக்காண்க. விகற்பகாட்சி இருவிதமாம் அஃதாவது?

பெயர்சாதி குணமேகன்மம் பொருளெனவை நதண்டவிகற் பவுணாவினுகரு — பெயர்முதலிய வைந்தையுங் கூடி யறியு மறிவு சவிகற்பக்காட்சி. அஃதாவது? பெயர் மாவென்பது, சாதி மாவினதுதன்மை. குணம் வணணம் வடிவு முதலாயின, கனமும் அசைதல் நிற்றன முதலாயின, பொருள் மரம்

பொருளினுண்மை மாத்திரத்தின விண்டலில்லா வறிவாகும் விகற்பமில்லாக் காட்சியே. — சவிகற்பம்போலப் பெயர்முதலியவற்றைக் கூட்டி யுணராமற் பொருளினுண்மை மாத்திர முணரு முணர்வு நிர்விகற்பக்காட்சியாம்—எ-று.

அஃதாவது இஃதொன்றென்கை. இப்படி யைந்துவகையாக விகற்பியாதறிகை யெனவறிக.

ஆனலிதுதான் பாலமூகாதிகள் ஞானத்தைப்போலவோ வென்னில்? அவர்களுக்குள்ளே விகற்பித்தறியு மறிவும் பிரியாப் பிரியமு முண்டாகையால் விகற்பஞானமெனவறிக.

ஏகார மீற்றசை.

உதாரணம் "அவிகற்பஞ் சவிகற்ப மென்றிரண்டா மக்காட்சி-யிவிகற்பங் காட்டுவம்பா ரீண்டு."

"அவிகற்ப மத்கமூஉ தென்றறிகை பின்பறிகை- சவிகற்ப நாமாதி சார்ந்து" எனவறிக. (௩)

அளவை. 1264கஉ௫

# சிவாக்ரயோகியருரை வருமாறு.

---

மேல் ப்ரத்யக்ஷலக்ஷணங் கூறுகின்றது.

கண்டபொருளை யிரட்டுறவே கருதலையம்-இரண்டு †வஸ்துவுக்குப் பொதுவாயுள்ள வடையாளத்தை யொன்றினிடத்திலேகண்டிது வெதுவோவென்பதுவும், ஒருதருமத்தை யிரண்டு வஸ்துக்களிடத்திலே கண்டு சந்தேகப்படுவதும். அஃதாவன? சாயம் ப்ராதம் சந்தியாகாலத்திலே தூரத்திலே மரையைக் கண்டிதுமரையோ பசுவோவெனபதாதியும், கடக மகுடகேயூராதி ராஜசின்னாபரணங்களை சமனாகத்தரித்துள்ள ராஜாவும் தண்டநாயகனுமோரிடத்தினிற்பதைக்கண்டு இவனராஜாவோ இவன்தண்டநாயகனோ வென்பதாதியும்,—திரியவே கொண்டறிவாம்-மரையைப் பசுவெனக்கருதலும் தண்டநாயகனை ராஜாவாகக காண்பதாதியுந் திரிவுக்காக்ஷி, இவ்விரண்டுடனே கூடி யேற்றப்பட்ட * பூர்வானுபவ ஜநிதமாகிய முன்வினைவும் "ஒருமொழியொழிக வினங்கொளற் குரித்தே" என்னுஞ் சூத்ரத்தாற் கூட்டிப் பொருளுரைக்கவேண்டியது. அதுவருமாறு·—காமுகனுக்குக் காமினியுரு வெளியாதி. இதுவும் ப்ரத்யக்ஷாபாசம். மேல்புத்தி கூடாமல் வித்யாதத்வமாத்ரங்கொண்டு காண்பது சாமாந்ய ப்ரத்யக்ஷமெனபதற்காக,—பொருளினுண்மைமாத்திரத்தின் விண்டலில்லா வறிவாரும் விகற்பமில்லாக்காட்சியே - ஒருவஸ்துவை நாமஜாதியாதி நிர்த்தேசமறி யிஃதொன்றெனறு காண்பது நிர்விகற்பக ப்ரத்யக்ஷம்,மேல் புத்திதத்வத்தைக்கூட்டி நாம ¶ஜாதியாதி விசேஷத்தோடேகாண்பது விசேஷ ப்ரத்யக்ஷமென்பதற்காக,— § விகற்பவுணர்வினுக்குப் பெயர்சாதிகுணமே கன்மம்பொருளென வைத்தன்டு - சவிகற்பக ப்ரத்யக்ஷத்துக்கு நாமஜாதிகுண ‡ கன்

ம வஸ்துவென்று ஸம்வனையும் பகுத்தறிவது ஸவிகல்பப்ரத்யக்ஷம். அஃதாவது மதனபாணமான புஷ்பத்தையும், பரிமளத்தையும், கோகில ० கூஜிதத்தையு முடைத்தாகையால் வஸந்தருதுவ மதே மாவென்றறிவது.

ஏகாரம் ஈற்றசை.

† வஸ்து - பொருள், * பூர்வாநுபவ ஜநிதம் - முன்னநுபவத்தா லுண்டாயது, ¶ ஜாதியாதி விசேஷத்தோடே - ஜாதிகுணக்கிரியைகளுடனே எனபதாம், § இம்மூன்றாவது கண்ணழிவை இரண்டாவதினும் இரண்டாவதை மூன்றாவதினும் பாடபேதத் கேற்ப சிலப்ரதிகளி லுளாயிட்டிருக்கும், ‡ கனமம் - க்ரியை, ० கூஜிதம் - த்வனி, ஓசை.

※ தஉக்தம் பௌஷ்கரே — அத்ராலம்ப ஸம்யோ ஸஞ்ஜிஸஞா நாகார உபஸந்நாக । விஷயஸ்யோ நயாஜாநாதக உபலபவ்ருத்திஷிதம் ॥ கநாஹதா ஸஸவிஷயாஞ்சி ஸ்ருதி ரிஷாசர்தே ।

※ காஞ்சிகசம் — காஞ்சிகஞாக்ஷாஷாவிஸ்வம் காஞ்சிநீ உப ஜீக்ஷ்யதே ।

※ பௌஷ்கரே — விகல்பயோமாக ஸாமக்ரீரகா ஆவியஉசத்தே । வஸ்துஸாரஸவஉசுத ஸத்ம மஹணஸ்திஷிகல்பகம் ॥ நாமஜாதத்ராதி ஸம்பந்த யஸாஷிதம் ஸவிகல்பகஞ்சி । க்ஞாக்ஷவஸ்துஸம்யோ ரூபேஜ்ராலயோஷிகல்பகம் ॥ ஸ்வவிஷத்ராகொ ஜேயோஸம்வேஸதத்வத்திதம் । தஸத்ரா த த்ராஸெமதஸ்வெஸ்வாவிஸத்ராஸ்யாதி கஉதி.

பெயர் - மாவெனபது, ஜாதி - வ்ருக்ஷஜாதி, குணம் - வண்ணம் - வடிவு - பூககாய் பழமுதலாயினவை, கன்மம் - அசைதல்- நிற்றல் - பூத்தல் - காய்கருமது, பொருளாவது - இனனது பெறும் விலை-இனனத்துக்கானபொருளென்பது.

## ஞனப்பிரகாசருரை வருமாறு.

---o---

ஐயந்திரிவின திலக்கணமும், நிர்விகற்பஞானம் சவிகற்ப ஞானமெனறு ஞான மிருவிதமென்றும்பண்ணி யதிவிலக்க ணமும், உணர்த்துகின்றார்.

ஐயம் - சந்தேகமாவது,—கண்டபொருளை - பொதுவில லக்ஷணமாகப் பார்த்த பதார்த்தத்தை,—இரட்டுறவேதுருதல்- குற்றிகொல்லோ மகன்கொல்லோவென்று குறித்தல்,—திரிவு- விபரீதம்,—திரியவே கொண்டலாம் - சிப்பியை வெள்ளியென று க்ரகித்தலாம்,—அவ்விகற்ப வுணர்விறக்கு - அந்தச்சவிகற்ப ஞானத்துக்கு,—பெயர்சாதிகுணமே கன்மம் பொருளென வைத்துண்டு -தாண்டவனென்னும் பெயர், ப்ராம்மணனென்னுஞ் ஜாதி, சிவப்பனென்னுங் குணம், தேவபூஜகனென்னுங் கன்மம், இவனென்னும் பொருளெனவைத்துண்டு,—விகற்பமில்லாக்காட்சியே - நிர்விகற்பஞானமாவது,— பொருளினுண்மைமாத்திரத்தின் - ஒன்றிதென்று வஸ்துவினது சத்வமாத்திரத்திலே,-விண்டவில்லா வறிவாகும்-முன்னிர்விகற்ப காரணத்திலே சவிகற்பகாரியந் தோற்றுதாகி னுத்தரகாலஞ்சவிகற்பமுண்டாகாதாமென்னுஞ் சற்காரியவாதவார்த்தையினாலே காமஜாதி குண க்ரியைகட்குத் தன்னிடத்திற் சற்றேதோற்றுத லுண்டாயிருந்தாலும் வசநித்தலுக் கேதுவல்லாத ஞானமாகும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

எ-து. மேற்கூறிபபோந்த நிருவிகற்பமுதலிய நான்க னுள், பெயர்முதலியவற்முற் பகுத்தறிதலின்றி இஃதொன்று தோன்முநின்றதெனப் பொருளுண்மை மாத்திரையேயறியும் ஞானசத்தி நிருவிகற்ப மெனப்படும். அங்ஙனமறிந்த பொரு ளை இஃதியாதோவென ஒன்றிற்றுணிவுபிறவா தாராயும் ஞா னசத்தி ஐயமெனப்படும். அதனை அதனோடொப்புமையுடைய வேறுபொருளாக மயங்கி நிச்சயிக்கும் ஞானசத்தி திரிவெனப் படும். பெயர்முதலியவைந்தும் பொருடோறுமுண்மையின அ வவைந்தும் அப்பொருட்கணுள்ளவா றினிதுவிளங்க வுணரு ம ஞானசத்தி சவிகற்பமெனப்படு மெனபதாம.

முனகண்ட வாதனைபற்றித் தோற்றுவதாகிய நினைவுணர் வு இவ்விடத்துக் கண்ட பொருளின்க ணிகழ்வதனமையின, அ தனையீணடெடுத்தோதி விலக்காராயினுர்.

இதனுனே காட்சிமுதலிய மூனறினுஞ் சேறற்குரிய நிருவி கற்பமுதலிய நானகினிலககணங் கூறபபட்டது.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

முனசொனன ஐயககாட்சி திருவுகாட்சி விகற்பக்காட்சி நிருவிகற்ப்பக்காட்சியெனறு நாலு மேலருளிசசெய்கிறா.

கண்டபொருளை யிரட்டுறவே கருதலைபம் - தோன்றின தொருபொருளை யிரண்டுபடக் கருதுகிறது ஐயக்காட்சி,—திரி யவே கொண்டல் திரிவாம் - தோன்றின வந்தப்பொருளைத் தி ரியக்காண்கிறது திருவுகாட்சி,—பெயர்ச்சாதி குணமேகன்ம ம் பொருளெனவைந் துண்டவிகற்ப வுணர்வினுக்கு - பெயர்மா வென்றும் சாதிசந்தணமென்றும் குணஞ்சுகந்தமென்றும் இந்த

மரத்தைக்கண்டவ னித்தைக்கொண்டுபோறு லிதனல் நம க்குப் பயனுண்டென்றும் இதகமர மித்தனைபொன பெறுமெ ன்றும் இப்படி ஈதுவகையாக வறிகிறது சவிகற்பப பிரத்யட் சம,—பொருளினுண்மை மாததிரத்தின விண்டலில்லா வறிவா கும் விகற்பமில்லாக காட்சியே - தோனறின பொருளினுண மை சற்றுஞசொல்லுதற் கொண்ணுத வறிவாயிருககிறது நி ர விசற்பப் பிரதயட்சமாம்

இதனுற சொலலியது ஐயக்காட்சியும் திரிவுக்காடசியும் விகற்பககாட்சியும் நிருவிகற்பக காடசியுமெனறு சொல்லடப ட்ட நாலினது முறைமையு மறிவிததது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(மேற்கூறிப்போந்த நிருவிகற்பமுதலிய நான்கனுள்)விள்ள டலில்லா-பெயர்முதலியவற்றுற் பகுதகறிதலின்றி,—பொருளி னுண்மை மாததிரததி னறிவாகும்-இஃதொனறு தோனமுந்ர த தெனப்பொருளுண்மை மாததிரையே யறியு ஞானசததி,— விகற்பமில்லாககாட்சியே - நிருவிகற்பக்காடசி யெனபபடுமு ம,—கண்டபொருளை இரட்டுறவே கருதல் - இஃதியாதோவெ ன வொனறிற் றுணிவுபிறவாதாராயு ஞானசததி,—ஐயம - ஐ யக்காடசியெனப்படும்,—திரியவேகொணடல் - அதனையதனே டொப்புமையுடைய வேறுபொருளாக மயங்கி நிச்சயிககு ஞா னசததி,—திரிவாம் - திரிவுகாடசியெனப்படும்,—பெயாசாதி கு ணமே கனமம்பொருளென வைநதனுடு - பெயருஞ் சாதியுங் குணமுங் கன்மமும் பொருளுமெனவைநதும் பொருடோறு முண்மையின் அவவைந்து மப்பொருட்சணுள்ளவா றினிது வி ளங்கவுணரு ஞானசத்தி,—அவ்விகற்ப வுணர்வினுக்காம - ச விகற்பக்காட்சி யெனப்படும் என்பதாம்.

இக்குறின காட்சிமுதலிய மூன்றினுஞ் சேறற்கரிய நிருவி கற்பமுதலிய ஞானவிலக்கணம் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேற் காண்டல் நால்வகையெனபதூஉ மனுமான மிருவகைத் தெனபதூஉ முரை மூவிதமெனபதூஉ மிலக்கண மிருவித மெனபதூஉ முணர்த்துகிறார்.

காண்டல்வாயின் மனந்தன்வேதனையோ டியோ
கக் காட்சியென, விண்டுநான்கா மனுமானந் தனக்கும்
பரார்த்த மென்றிரண்டா, மாண்டவுரை தந்திரமந்திர
முபதேசச்சொ லெனமூன்றும், பூண்டவள
வைக் கெதிர்புலனறன னியல்புபொதுவென் றிரண்
டாமே. (௩)

(இ-ள்) காண்டல்வாயின மனந்தன வேதனையோ டியோகக் காட்சி யென விண்டுநான்காம — காண்ட லிவ்விடத்து நால்வகைப்படும அஃதாவது?—

இந்திரியக்காட்சி மானதக்காட்சி வேதனைக்காட்சி யோககாட்சி எனவரும். காட்சியெனபதனை முற்றுங்கூட்டுக. ஓடு எண்.

அநுமானத்தன்னநுமானம் பிறரநுமானமெனவு மிகைக்கும் பிறர்க் ருவிதமாம்.
குமெனவிரண்டாம்.

மாண்டவுரை அழியவாகமப்பிரமாணந் தந்திரகலை
தந்திரமந்திர மந்திரகலை யுபதேசகலையென மூவிதமாம
தோ படுதேசச்
சொலெனமூன
றும்

பூண்டவளவை இப்படிச்சொல்லப்பட்ட ப்ரமாணங்க
க்கெதிரபுனை ளாலேயளந்தறியப்பட்ட பொருள்களிரு
னவியல்பெர விதப்படும். அஃதாவது?—தனவியல்பென
துவென விரண் றும் பொதுவியல்பென்று மிரண்டாம.
டாமே.

எதிரதல் – தோன்றுதல், புனை – ப்ரமேயமெனவறிக.
(௪)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

மேல் ப்ரத்யக்ஷ நாலுவகையு மநுமானமிருவகையு மாக மமூன்றுவகையுமென்று முறைமை கூறுகின்றது.

காண்டல் வாயில் மனந்தன் வேதனையோ டியோகக்காட்சியென விண்டுநான்காம் – ப்ரத்யக்ஷமாவது, இந்த்ரியப்ரத்யக்ஷமென்றும் மாநஸப்ப்ரத்யக்ஷமென்றும் ஸ்வவேதந ப்ரத்யக்ஷமென்றும் யோகப்ரத்யக்ஷமென்றும் நான்குவகையாம்.

[illegible]

என்றும், ததேந்த்ரிய ஸாபேக்ஷம் நிரபேக்ஷ ஜ்ஞாநிநோ வச | சக்ஷு:கரண ஸாபேக்ஷம் சித்தீந்த்ரிய விவர்ஜிதம் || என்றும் ப்ரத்தியக்ஷ மூன்றாக சிவாகம வசநமிருக்க இவ்விடத்திற் ப்ரத்யக்ஷ நாலுவிதமென்று சொன்னது விரோதமெனனில் ? ஸ்வவேதநாப்ரத்யக்ஷ மாநஸபிரத்யக்ஷத்திலே அந்தர்ப்பவிக்கும். ஆகையால் விரோதமில்லை,—அநுமானந்தனக்கும் பிறர்க்குமெனவிரண்டாம - அநுமானமானது ¶ ஸ்வார்த்தாநுமான மென்றும் † பரார்த்தாநுமானமென்று மிருவகைப்படும்,—மாண்டவுரைதந்திரமந்திரத்தோடுபதேசச்சொல்லென மூன்றும்-ஆகாம் க்ஷாதி மூலகையுடைய ஆகமமானது தந்திரகாண்டமென்றும் உபாசநாகாண்டமென்றும் ஞானகாண்டமென்றும் மூன்றுவிதமாம்,—பூண்டவளவைக்கு - பொருந்தப்பட்ட ப்ரமாணத்துக்கு,—எதிரபுவன - முன்னேகாணப்பட்ட ப்ரமேயமானது,—தனவியல்பு பொதுவென விரண்டாமே - தனவியல்பு என்பது அவ்யாப்தி ஸம்பவதோஷ *ரஹிதமான × அசாதாரணலக்ஷணம். பொதுவியல்பு என்பது சாதாரணலக்ஷணம். இயல்பு என்பது லக்ஷணத்திற்குக் குற்றமென்றுண்டு அவைகளாவன — லக்ஷ்யைகதேசே லக்ஷணஸ்யாவர்த்தநம் அவ்யாப்தி: | அலக்ஷ்யே லக்ஷணஸ்ய வர்த்தநம் அதிவ்யாப்தி: | லக்ஷ்ய க்வாப்ய வர்த்தநம் அஸம்பவம் | என்றிதன் பொருள்.

‡ ஸ்வவேதநா - தன்வேதனை, ¶ ஸ்வார்த்தம்- தன்பொருட்டு, † பரார்த்தம் - பிறர்பொருட்டு, * ரகிதம்-இல்லாமை, × அசாதாரணம்-உண்மை.

இலக்கியத் தோரிடத்தி லக்ஷணமிராமை யவ்யாப்தி - இலக்கியமில்லாதவிடத்தி லக்ஷணமிருப்ப ததிவ்யாப்தி - இலக்கியத்தோரிடத்து மிலக்ஷணமிராமை யசம்பவம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

நிர்விகற்ப சவிகற்பஞானமெனும் ப்ரமிதிபலவத்தாகிய ப்ரத்யக்ஷப்பிரமாணமுதலாகிய ப்ரமாணத்தினது பேதங்களைக்கூறுகின்றார்.

காண்டல்-ப்ரத்யக்ஷப்பிரமாணமாவது,—வாயில்-இந்த்ரியப்ரத்யக்ஷம்,—மனம்-மானதப்ரத்யக்ஷம்,—தன்வேதனை - சுவசங்வேதநப்ரத்யக்ஷம்,—அந்தச்சுவசங்வேதநப்ரத்யக்ஷத்தோடு யோகக்காட்சியென-யோகப்பிரத்யக்ஷமென,—ஈண்டு நான்காம்-இத்தசைவத்தில் நான்காம்,—அநுமானம்-அநுமானப்பிரமாணமாவது,—தனக்கும் பிறர்க்குமென்றிரண்டாம்-தனனுமானமென்றும் பிரானுமானமென்று மிருவிதமாம்,—மாண்டவுரை - மாட்சிமைபொருந்திய வாகமப்பிரமாணம்,—தந்திரமந்திரத்தோ டுபதேசச்சொல்லென - தந்திரகலை மந்திரகலை யுபதேசகலையென,—மூன்றாம் - மூன்றுவிதமாம்,—பூண்டவளவைக் கெதிர்புலன் - பொருளோடு பொருந்திய ப்ரமாணங்கட்கு முன்னாகிய ப்ரமேயம்,—தன்னியல்புபொதுவென்று - அசாதாரணலக்ஷணத்தை யுடையது சாதாரணலக்ஷணத்தை யுடையதென்று,—இரண்டதே - இரண்டுவிதமேயாம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

எ - து. அம்மூன்றனுள், காட்சியளவை-வாயிற்காட்சிமு தல் நான்கு வகைப்படும்; கருதலளவை-தனபொருட்டுப் பிற ர்பொருட்டென இருவகைப்படும்; உரையளவை-தந்திரகலைமு தன மூவகைப்படுட. இப்ரமாணங்களா னறியப்படும் ப்ரமேய ங்களியல்பு - சிறப்பியல்பு பொதுவியல்பென இருவகைப்படு மென்பதாம்.

இதனானே, காட்சிமுதலிய மூன்றும் படும் பாகுபாடும், அவற்று னளக்கப்படும் பொருள்களின் பாகுபாடும், தொகுத் துக கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

மீளவும் ப்ரத்யக்ஷ மநுமான மாகமமென்ற மூன்றையும் பாரித்து விரித்தருளிச்செய்கிறார்.

காண்டல்வாயில் மனத தன்வேதனையோ டியோகக்கா டசி யெனவீண்டு நானகாம் - இந்த்ரியப் ப்ரத்யக்ஷமென்றும் மானதப் ப்ரத்யக்ஷமென்றும் தனவேதனா ப்ரத்யக்ஷமென்றும் யோகப்ரத்யக்ஷமென்றும் இவ்விடத்துப் ப்ரத்யக்ஷம் நாலா ம்,—அநுமானம் - அநுமானமென்று சொல்லப்பட்டது,—த னக்கும் பிறர்க்கு மென்றிரண்டாம் - அந்தவநுமானந்தான ஸ் வார்த்தாநுமானமென்றும் பரார்த்தாநுமானமென்றும் இரண்டு வகையாம்,— மான்றவுரை தந்திரமந்திரத்தோ டுபதேசச் சொல்லென மூன்றும் - மாட்சிமையுடைத்தாகிய வசனமாகம் மான துதான் தந்திரகலையென்று மந்திரகலையென்றும் உ

பதேசகலையென்று மூன்றுப்பிரகாரமாம்,—பூண்ட வளவைக் கெதிர்புலன் றன்னியல்புபொதுவென் றிரண்டாமே - இப்படி பொருந்தப்பட்டப் பிரமாணங்களுக்கு மாறுபாடாகச்சொல்லப்பட்ட விஷயங்களானது தனியியல்பென்றும் பொதுவியல்பென்று மிரண்டுவகையாம்.

இதனாற்சொல்லியது ப்ரத்யக்ஷம்நாலுப்பிரகாரமாயிருக்குமென்றும் அநுமானமிரண்டுப்பிரகாரமாயிருக்குமென்றும் ஆகமம மூன்றுப்ரகாரமா யிருக்குமென்றும் இந்தப் பிரமாணங்கள் தனியியல்பென்றும் பொதுவென்று மிரண்டுவகையாயிருக்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(அம்மூன்றனுள்) காண்டல் - காட்சியளவையானது,—வாயிற்காட்சி - வாயிர்காட்சியுர்,—மனக்காட்சி - மானதககாட்சியும்,—தனவேதனைககாட்சி - தனவேதனைக்காட்சியுர்,—யோகக்காட்சியென - யோகக்காட்சியுமென,—நானகாம் - இங்ஙன நானகுவகைப்படும்;—அநுமானம் - கருதலளவையாவது,—தனக்கும் பிறர்க்கும் - தனபொருட்டநுமானமும் பிறர்பொருட்டநுமானமும்,—என்றிரண்டாம் - என்றிருவகைப்படும்;—மாண்டவுரை - மாட்சிமைப்பட்ட வுரையளவையாவது,—தந்திரச்சொல் - தந்திரகலையும்,—மந்திரச்சொல்லோடு - மந்திரகலையும்,—உபதேசச்சொல் - உபதேசகலையும்,—எனமூன்றும் - எனமூன்றுவகைப்படும்;—பூண்ட வளவைக் கெதிர்புலன் - இப்பிரமாணங்களால் அறியப்படும் ப்ரமேயங்களி னியல்பு,—தன்னியல்பு பொதுவென்று - சிறப்பியல்பு பொதுவியல்புள்ள,—இரண்டாமே - இருவகைப்படுமென்பதாம்.

இதனானே காட்சிமுதலிய மூன்றும் படும்பாகுபாடு மவற்றானளக்கப்படும் பொருள்களின் பாகுபாடும் தொகுத்துக் கூறப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.



முற்கூறிய தன்னியல்பும் பொதுவியல்பு
மென விருவித முணர்த்துகிறார்.

அன்னிய சாதியுந் தன்சாதியு மகன்றுநிற்ற, றன்
னியல் பந்நியத்தைத் தவிர்ந்துதன் சாதிகொத்த,
றுன்னிய பொதுவியற்கை சொன்னவிவ் விரண்டினுள்
ளே, மன்னிய பொருள்களியாவு மடங்கிடு மானமுற்
றுல். (ரு)

| | |
|---|---|
| (இ-ள்.) அன்னிய சாதியுந்தன் சாதியு மகன்றுநிற்ற றனியல்பு | அந்யசாதியாகிய விருப்பையுந் தன்சாதியாகிய மாவையு மகன்று தேமாவெனச்சிறப்புப்பெயர்பெற்றுநிற்ற றன்னியல்பெனப் பெறும். |
| அந்நியத்தைத் தவிர்த்துதன் சாதிக்கொத்த றுன்னிய பொது வியற்கை | அந்யசாதியாகிய விருப்பைமுதலியவொழிந்து தன் சாதியாகிய மாமரமெனப் பொதுப்பெயர்பெற்று நிற்றல் பொதுவியல்பெனப்பெறும் |
| சொன்னவிவ் விரண்டினுள்ளே | இந்தவிசேடஞ் சாமாந்யமெனச் சொல்லிய விரண்டினுள்ளே புலகத்து நிலைபெற்ற |

மன்னிய பொரு பொருள்களெல்லா மளந்தறியுங்கா லிவற்
ன்களியாவு மட றினு ளடங்கும்—எ-று.
ங்கிடு மானமுற்
மூல்.

ஈண்டிதனாற் ப்ரயோசநமியாதோவெனின் ? அந்ய
சாதியென்பது - பாசவர்க்கம், தனசாதியெனபது - ஆனம
வர்க்கம், தனவியல்பெனபது - அந்யசாதியாகிய பாசத
தை யொழித்துத் தனசாதியாகிய விஞ்ஞானகலர் ப்ரளயாகல
ர் சகலரென நிற்றல், பொதுவியல்பெனபது - அந்யசாதியா
கிய பாசத்தைத தவிர்நது தனசாதியாகிய சகலரொன்னும் பெ
யரையு மொழித்துப் பசுவென நிற்றலெனவறிக. (ரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் அசாதாரணலக்ஷண மிவ்வாறு சாதாரணலக்ஷண
மிவ்வாறு என்பது கூறுகின்றது.

அனனியசாதியும் தனசாதியு மகன்றுநிற்றல் தன்னியல்பு-க
பிலைப் பசுவானது அந்யஜாதியான எருமைமுதலானவைக
ளினுடைய லக்ஷணத்தையுந் தன்சாதியாகிய வெள்ளை கறுப்பு
சிவப்புமுதலான வர்ணங்களையுடைய பசுக்களுடைய லக்ஷண
ங்களையு மன்றிக்கபிலைப்பசுவென்று நிற்பது தன்னியல்பென்னும்
ஸ்ரீ அசாதாரணலக்ஷணம்,—அந்நியத்தைத் தவிர்ந்து தன்சாதிக்
கொத்த றுனனியபொதுவியற்கை-அந்யஜாதியாகிய வெருமை
குதிரை முதலானவைகளின் லக்ஷணங்களையன்றிக் கழுத்தில்
தான்ற கொம்பு குளம்பு வால் குட்டேறு இந்த வைத்தலக்ஷ
ணங்களையுமுடையது பசுவென்பது பசுக்களுக்கெல்லாஞ் * சா
தாரணலக்ஷணம்,—சொன்ன இவ்விரண்டிலுள்ளே மன்னியு

பொருளியாவு மடங்கிடுமானமுற்றால் - இந்த அசாதாரணஞ் சாதாரணமென்னு மிரண்டிலக்ஷணத்துக் குள்ளே ப்ரமேயத்ரி பதார்த்தமான பதார்த்த த்ரயங்களின் பேதங்களெல்லாம் ப்ரமாண §புரஸ்ஸரமாக விசாரிக்குங்காலத்தி லறியப்படுமா கையால் பதியினுடைய ஸ்வரூபலக்ஷணத்தையும் சத்தர் உதாசீ யுக்தர் ப்ரவர்த்தரென்னும் பதி †யவஸ்தாத்ரயா சாதாரணல க்ஷணங்களையும் தச்சத்திபேதங்களினுடைய அசாதாரணலக்ஷ ணங்களையும் விஞ்ஞானகலர் ப்ரளயாகலர் சகலரென்னு மான மவர்க்கங்களினுடைய அசாதாரணலக்ஷணங்களையு மவஸ்தாத் ரயா சாதாரண லக்ஷணங்களையும் ஆணவாதி ‡பாசபஞ்சக த்தினுடைய அசாதாரண சாதாரணலக்ஷணங்களையும் சுத் தாசுத்த மாயாகாரியங்களாகிய தத்வதாத்விகங்களினுடைய அசாதாரண சாதாரண லக்ஷணங்களையும் ×பரீக்ஷாபூர் வகமாக வறிந்தவன +ப்ரமாணஞ்ஞன் ஆகையாலிந்த ஸாஸ் திரத்தில் முதல்சூத்ரந் தொடங்கி ஏழாஞ்சூத்ரபரியந்தம் இந்த லக்ஷணங்களைவகை விடங்கடோறுங்கண்டுகொள்க.

¶ அசாதாரணலக்ஷணம் - உண்மைலக்ஷணம், * சாதார ணலக்ஷணம் - பொதுலக்ஷணம், §புரஸ்ஸரமாக - முன்னிட்டு க்கொண்டு, † அவஸ்தாத்ரயம் - மூன்றவத்தைகள், ‡ பாசப ஞ்சகம்-பஞ்சபாசமென்னுமாறுக, × பரீக்ஷாபூர்வகமாக வறிந் து-பரிக்ஷித்துப்பார்த்து, + ப்ரமாணஞ்ஞன் - ப்ரமாணத்தை யறிந்தவன்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

தன்னியல்பு பொதுவியல்பென்று சொல்லிய ப்ரமேயப் பொருளின் இயற்கையைக் கூறுகின்றார்.

பதிபதார்த்தத்துள் - அநாதிமுத்த சிவனுக்கு:—அன்னிய சாதியும் - பசுபாசங்களையும்,—தன்சாதியும் - ஆதிமுத்தசிவன அபரமுத்தசிவ னிவர்களையும்,—அகன்று - நீங்கி அநாதிமுத்தசிவ னென்று,—நிற்றல், - இருத்தல்,—தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம்,—அந்நியத்தை - பசுபாசங்களைமாத்ரம்,—தவிர்ந்து - நீங்கி,—தன்சாதிக்கொத்தல் - ஆதிமுத்தசிவன அபரமுத்தசிவ னிவர்களுக்குச் சமமாகிச்சிவனென்று,—நிற்றல - இருத்தல்,—தன்னியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்.

ஆதிமுத்தசிவனுக்கு.—அன்னிசாதியும் - பசுபாசங்களையும்,—தனசாதியும - அநாதிமுத்தசிவன அபரமுத்தசிவ னிவர்களையும்,—அகன்று - நீங்கி, ஆதிமுத்தசிவனென்று,—நிற்றல் - இருத்தல்,— தனனியல்பு - தனதசாதாரணலக்ஷணம்,—அந்நியத்தை - பசுபாசங்களை மாத்ரம்,—தவிர்ந்து - நீங்கி,— தனசாதிக்கொத்தல் - அநாதிமுத்தசிவன் அபரமுத்தசிவ னிவர்களுக்குச் சமமாகிச் சிவனென்று,—நிற்றல் - இருத்தல்,—தனனியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்.

அபரமுத்திசிவனுக்கு:—அன்னியசாதியும் - பசுபாசங்களையும்,—தன்சாதியும் - அநாதிமுத்தசிவன் ஆதிமுத்தசிவ னிவர்களையும்,—அகன்று - நீங்கி, அபரமுத்தசிவனென்று,—நிற்றல் - இருத்தல்,—தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம்,—அந்நியத்தை - பசுபாசங்களைமாத்ரம்,—தவிர்ந்து - நீங்கி,—தனசாதிக்கொத்தல் - அநாதிமுத்தசிவன் ஆதிமுத்த னிவர்களுக்குச் சமமாகிச் சிவனென்று,—நிற்றல் - இருத்தல்,—தன்னியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்.

பசுபதார்த்தத்துள் விஞ்ஞானகலனுக்கு:—அன்னியசாதியும் - பதிபாசங்களையும்,—தன்சாதியும் - பிரளயாகலன் சகல

லிவர்களையும்,—அகன்று - நீங்கி விஞ்ஞானகலனென்று,—நிற்றல்-இருத்தல்,—தன்னியல்பு-தனதசாதாரணலக்ஷணம்,—அந்நியதனை - பதிபாசங்களைமாத்ரம்,—தவிர்த்து - நீங்கி,—தன சாதிக்கொத்தல்-ப்ரளயாகலன்ச கலனிவர்களுக்குச்சமமாகிப் பசுவென்று,—நிற்றல் - இருத்தல்,—தன்னியபொதுவியற்கை-பொருந்திபசாதாரணலக்ஷணம்.

ப்ரளயாகலனுக்கு:— அந்நியசாதியும் - பதிபாசங்களையும்,— தனசாதியும் - விஞ்ஞானகலன் சகலனிவர்களையும்,—அகன்று - நீங்கி,—ப்ரளயாகலனென்று,—நிற்றல் - இருத்தல்,— தனனியல்பு - தனதசாதாரணலக்ஷணம்,—அந்நியத்தை - பதிபாசங்களை மாத்ரம்,—தவிர்த்து - நீங்கி,—தன சாதிக்கொத்தல் - விஞ்ஞானகலன சகலனிவர்களுக்குச் சமமாகிப் பசுவென்று,—நிற்றல் - இருத்தல்,—தன்னியபொதுவியற்கை - பொருந்திப சாதாரணலக்ஷணம்.

சகலனுக்கு —அன்னியசாதியும் -பதிபாசங்களையும்,—தன்சாதியும் - விஞ்ஞானகலன் பரளயாகல னிவர்களையும்,—அகன்று - நீங்கி சகலனென்று,—நிற்றல் - இருத்தல்,—தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம்,—அந்நியத்தை -பதிபாசங்களை மாத்ரம்,—தவிர்த்து- நீங்கி,—தன்சாதிக்கொத்தல்-விஞ்ஞானகல ப்ரளயாகல னிவர்களுக்குச் சமமாகிப் பசுவென்று,—நிற்றல் - இருத்தல்,—தனனியபொதுவியற்கை - பொருந்திப சாதாரணலக்ஷணம்.

பாசபதார்த்தத்துள், மூலத்துக்கு:—அன்னியசாதியும் - பதிபசுக்களையும்,—தனசாதியும்-மாயாகன்மங்களையும்,—அகன்று-நீங்கி மலமென்று,—நிற்றல்-இருத்தல்,—தன்னியல்பு-தனது சாதாரணலக்ஷணம்,—அந்நியத்தை- பதிபசுக்களைமாத்ரம்,—தவிர்த்து - நீங்கி,—தன்சாதிக்கொத்தல் - மாயாகன்மங்களுக்

குச் சமமாகிப் பாசமென்று,—நிற்றல் - இருத்தல்,—தன்னிய பொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்.

மாயைக்கு:—அன்னியசாதியும்-பதிபசுக்களையும்,—தன்சாதியும்-மலகனமங்களையும்,—அகன்று-நீங்கிமாயையென்று,—நிற்றல்-இருத்தல்,—தன்னியல்பு-தனதசாதாரணலக்ஷணம்,—அநபதித்தை - பதிபசுக்களைமாத்ரம்,—தவிர்ந்து-நீங்கி,—தனசாதிக்கொத்தல்-மலகனமங்களுக்குச் சமமாகிப் பாசமென்று,—நிற்றல் - இருத்தல்,—தன்னியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்.

கன்மத்துக்கு:—அன்னியசாதியும் - பதிபசுக்களையும்,—தன்சாதியும் - மலமாயைகளையும்,—அகன்று - நீங்கிக் கனமென்று,— நிற்றல் - இருத்தல்,—தன்னியல்பு - தனதசாதாரணலக்ஷணம்,—அநபதித்தை - பதிபசுக்களைமாத்ரம்,—தவிர்ந்து - நீங்கி,—தன்சாதிக்கொத்தல் - மலமாயைகளுக்குச் சமமாகிப் பாசமென்று,—நிற்றல் - இருத்தல்,—தனனியபொதுவியற்கை - பொருந்திய சாதாரணலக்ஷணம்,—

சொன்ன விவ்விரண்டினுள்ளே-கூறிய பொதுச்சிறப்பென்கின்ற விக்தவிரண்டினுள்ளே,—மன்னிய பொருளியாவும்-நிலைபெற்ற பதார்த்தங்களெல்லாம்,—மானமுற்றுல் - அளவைப் பொருந்தில்,—அடங்கிடும் - அந்தர்ப்பவிக்கும்'

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

எ-து. சிறப்பியல்பு பொதுவியல்பென்ற இரண்டனுள், ஒருபொட்கு வேற்றுச்சாதிப்பொருளினுந் தன்சாதிப்பொருளினுஞ் செல்லாது தனக்குமாத்திரையே யுரித்தாய் நிலைபெறுந் தன்மை சிறப்பியல்பெனவும், வேற்றுச்சாதிப்பொருண்மாத்திரையிற் செல்லாது தன்சாதிப்பொருட்கெல்லாம் ஒப்ப நிலை

வேறுந்தன்மை பொதுவியல்பெனவுங் கூறப்படும். காட்சிமு தலிய பிரமாணங்களாற் பிரமேயப்பொருள்களை யறிதலுறுமி டத்து அவையெல்லாம் இவ்விரண்டியல்பினு ளொன்றுபற்றி அறியப்படுமென்பதாம்.

எனவே, இவ்விரண்டின் வேறாகிய வேற்றியல்புபற்றி அறி யப்படுமாயின், அவ்வறிவு பிராமாணியமன்றாய்ப் போமெனப தாயிற்று. பிரமேயத்தை யறிந்தவறிவே தான் பிராமாணிய மெனபதனையு மறியுமெனவும், தான பிராமாணியமாகாதவழி அவ்வாகாமைமாத்திரையே பிறிதொன்றா னறியப்படுமெனவும், இவ்வாறன்றித் தனது பிராமாணியம் பிறிதொன்றா னறியப் படுமேயெனனுந் தார்க்கிகர் முதலியோர் மதம் அடாதெனவுங் கொள்க. இவற்றை வடநூலார் சுதந்துவம் பரதத்துவமென வழங்குப

சாதியாவது ஒருங்கிரனவாகிய பலபொருட்குப் பொது வாவதோர் தன்மை.

இதனானே, சிறறன்னியல்பு பொதுவியல்பெனறவற்றி னிலக்கணங் கூறப்பட்டது.

இச்செய்யுள் சூசிகடாக நயம்பற்றி முன் வைத்தவாறு.

---

## திரம்பவழகியருரை வருமாறு.

—0—

தன்னியல்பென்றதேது பொதுவென்றதேது என்னமே லிரண்டு மருளிச்செய்கிறார்

அன்னிய சாதியுந் தன்சாதியு மகன்றுநிற்றல் தன்னியல் பு - தனக்குவேறான சாதியென்றுசொல்லப்பட்ட விருப்பை யும் தனக்கு வேறற்றிருக்கிற தன்சாதியாயிருக்கிற மாவையு மி வை யிரண்டையு நீங்கித் தேமாவெனநிற்றல் தனக்குள்ள விய

ல்பு,—அந்நியத்தைத் தவிர்த்துதன் சாதிக்கொற்றல் துன்னிய பொதுவியற்கை-தனக்குவேறான சாதியென்றுசொல்லப்பட்ட விருப்பையொழிந்து தனக்கு அநயசாதியென்று சொல்லப் பட்ட மாயெனநிற்றல் பொருந்தின சாமாந்யத்தினுடைய வியல்பாம்,—சொன்னவிவ் விரண்டினுள்ளே மன்னிய பொருளியாவு மடங்கிடு மானமுற்றால் - இப்படிச்சொல்லப்பட்ட தனியல்பு பொதுவெனற விரண்டினுள்ளு நிலைபெற்ற பொருள்களெல்லா மடங்கிடுமளக்குங்காலத்தில்.

இதனாற்சொல்லியது தனியல்பு பொதுவென்று சொல்லப்பட்ட விரண்டினுள்ளு மெல்லாப் பிரமாணங்களு மடங்கு மெனனு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(சிறப்பியல்பு பொதுவியல்பு எனவிரண்டனுள்)அன்னியசாதியும் -ஒருபொருட்கு வேற்றுச்சாதிப்பொருளினும்,—தனசாதியும்-தனசாதிப்பொருளினும் செல்லாது,—அதனாநிற்றல்-தனக்கு மாத்திரையே யுரித்தாய் நிலைபெறுந்தன்மை,—தனியல்பு-சிறப்பியல்பு எனவும்,—அந்நியத்தைத் தவிர்த்து - வேறாச் சாதிப்பொருண் மாத்திரையின் செல்லாது,—தன்சாதிக்கொத்தல் - தனசாதிப் பொருட்கெல்லா மெய்நிலைபெறுந் தன்மை,—துன்னிய பொதுவியற்க - பொருந்திய பொதுவியல்பெனவுங் கறகப்படும்,—மானம் - காட்சிமுதலிய பிரமாணங்களால்,—பொருள்கள்-பொருந்திய பிரமேயப்பொருள்களை,—உற்றால் - அறியலுறுமிடத்து,—யாவும் - அவையெல்லாம்,—சொன்னவிவ் விரண்டினுள்ளே யடங்கிடும் - முன்கூறிய விவ்விரண் டியல்பினு ளொன்றுபற்றி யறியப்படும்.

இதனானே மேற் றன்னியல்பு பொதுவியல்பென்றவற்றி னிலக்கணம் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



மேல் வரன்முறையானே யிந்திரியக்காட்சி மானதக் காட்சி யிரண்டினையு முணர்த்துகிறார்.

உயிரினோ டுணர்வுவாயி லொளியுரு வாதிபற்றிச், செயிரொடு விகற்பமின்றித் தெரிவதிந் திரியக்காட்சி, யயர்விலிந் திரியஞான மைம்புலன் சார்ந்துயிர்க் கண், மயர்வற வந்தஞான மானதக் காண்டலாமே. (சு)

(இ-ள்) உயிரினோ டுணர்வு வாயிலொ ளியுரு வாதிபற் றிச் செயிரொ டு விகற்பமின்றி த் தெரிவதிந் தி ரியக்காட்சி — ஆன்மாவுடனே விட்டுநீங்காத சிற்சத்தி யாலே யிந்திரியமுங் கலாதிகளுஞ் சோம சூரியாக்கினிப் பிரகாசங்களுமாகக் கூடி யுருவமுதலியவற்றை யையககாட்சிமுதலி ய குற்றமின்றி யறிவ திந்திரியக்காட்சி;

"வாயிலிடனும்புலனுமாகும்" என்பதனு லிந்திரியக்காட்சி யெனினும் வாயிற்காட்சியெனினு மிழுக்கா.

சாமானிய விசேடமென விருவிதமாம்.

இதிற் சாமாந்யமாவது - சமுதாயமாயறிவது. அஃதாவது? சமவாயகுணத்தோடேகூடித் தலக்கணங்களை ய றிகை.

விசேடமாவது - அதனைப்பிரித்தறிகை. அஃதாவது? ஆன்மா மனதோடேகூடித் தேசகால வவத்தைகளுட னிந்திரிய விசத்துக்கு விடயமானபொருளை யறிகை.

இந்த விந்திரியக்காட்சியினுடைய சம்பந்தத்தை யறியுமிடத் தறுவகைப்படும். சையோகம் - சையுத்தசமவாயம் - சையுத்தசமவேதசமவாயம் - சமவாயம் - சமவேதசமவாயம - விசேடணவிசேடியபாவம்.

இவையிற்றிற் சையோகமாவது - யாதொருபொழுது கடம் விடயமாயிருக்கிற ஞானமான துண்டாகாநின்றதப்பொழுது கண் இந்திரியம் கடம் விடயம் இந்த விரண்டினுடைய கூட்டரவு. இது பிரிந்திருக்கிற வத்துக்களினுடைய சம்பந்தமாகையாலே சையோகமெனப் பெயராயிற்று

சையுத்தசமவாயமாவது - யாதொருபொழுது கண்ணாலே கடத்திலே யிருக்கிற ரூபமான தறியப்படுகின்றதப்பொழுது கண் இந்திரியம் கடத்தையடைந்திருக்கிற நீலாதிரூபம் விடயம் இவைகளினுடைய சம்பந்தம். அஃதெங்ஙன்போலவெனவில்? கண்ணுடனே கூடியிருக்கிற கடத்திலே ரூபமானது சமவாயமா யிருக்கையினாலே டெனவறிக.

சையுத்தசமவேதசமவாயமாவது - யாதொருபொழுது கண்ணாலே கடத்தை யடைந்திருக்கிற ரூபத்திலேயிருக்கிற ரூபத்துவமான தறியப்படுகிறது, அப்பொழுது கண் இந்திரியம் உருவத்துவம் விடயம் இவைகளினுடைய சம்பந்தமெனவறிக

சமவாயமாவது - யாதொருபொழுது சோத்திரேந்திரியத்தினாலே சத்தமான தறியப்படுகிறது, அப்பொழுது சோத்திரம் இந்திரியம் சத்தம் விடயம் இவைகளினுடைய சம்பந்தம் சோத்திர மாகாசமிடமாக வறிகையினாலெனவறிக.

சமவேதசமவாயமாவது - யாதொருபொழுது சோத்தி ரத்திலே சத்தத்தின் றன்மையைக் காணப்படுகிறது, அப்பொழு து சோத்திரயிந்திரியம் சத்தத்வசாமாநியம் விடயம் இவை களினுடைய சம்பந்தம் சோத்திரத்திலே சமவேதமாயிருக்கிற சத்தத்திலே சத்தத்துவஞ் சமவாயசம்பந்தமாயிருக்கையினு லெனவறிக.

விசேடணவிசேடியபாவமாவது - யாதொருபொழுது க ணனுடனே கூடியிருக்கிற பூமியிலே கடத்தினுடைய வில்லா மையான தறிபப்படுகிறது. அஃதாவது, இந்தப்பூமியிற் கட மில்லையென்றால் அப்பொழுது கண்ணுடனேகூடின பூமி விசே டணம், கடாபாவம் விசேஷியம் ; கடாபாவத்தையுடைய து பூதலம் எனறபொழுது கண்ணுடனே கூடினபூமி விசேஷி யம், கடாபாவம் விசேடணம்

இங்ஙன மிந்திரியக்காட்சி யறுவிதமான சம்பந்தமாய்வந் தவாறுகாண்க. சம்பந்தமெனினும் சன்னிகிரிடமெனினுமிழுக் கா. உ-ம். “இந்திரியமத்தத் திணங்கும்பொழுதாறு-பக்குமு றும பாரறிவிப்பாம்” “இந்திரியமத்தத் திணங்குதலேசையோ க-மிந்தப் பொருளுணர்ச்சியாம்” “சாதிகுணந்தன்னிற் சை யோகசமவாயமாம்-போதமுளார் தாங்காணும்போது” “சை யுதசமவேத சமவாயசம்பந்த-மெய்துங்குணதத்துவத்திலே” “சத்தஞ்சமவேதத் தாலேசெவிப்புலத்துக்-கத்தமா மென்றே யறி” “சத்தத்திற்சாமாநி யத்தைத்தருமதனில்-வைத்தசம வேதசமவாயம்” “தவாதசமவாய சம்பந்தங்கருங்கா-ணபாவ விசேடணத்துவம்”. இதனைப்பௌட்கரத்திற் கூறினு ரா ண்டுக்காண்க.

அயர்வில் லிந்தி குற்றமில்லாத ஞானேந்திரியங்களினது ரியஞான ம்ாம் ஞானமானது சத்தாதிவிடயங்களைப் பொ புலன் சார்ந்துயி ருந்தி யான்மாவினிடத்து மயக்கமறவந்து

ர்க்கண் மயர்வற அக்க மனத்தா லறியு மறிவு மானதக்காட்சி
வகதஞான மா யாம்—எ-று. (சு)
ணதக காண்ட
லாமே.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிந்த்ரியப்பிரத்யக்ஷ மானஸப்பிரத்யக்ஷங்களி னுடைய க்ரமங்கூறுகின்றது.

உயிரினோடு ணர்வுவாயி லொளியுருவாதிபற்றிச் செயிரின்றி விகற்பமோடு தெரியுமிந்திரியக்காட்சி—ஆன்ம சிற்சத்தியானது ப்ராணவாயு மனசுடனே §பாஹ்யேந்த்ரியத்வாரா சூரியாதிப் பிரகாசங்கள் சகாயமாக ரூபாதி பானவஸ்துக்களை சம்பந்தித்துக் குற்றமாகிய ‡சம்சயமும் ¶ விபர்யயமும் †பூர்வாநுபவஜநிதமாகிய ஸ்ம்ருதியு மன்றி நாமஜாதியாதி விசிஷ்டமாகக் காண்கிறது இந்த்ரியப்ரத்யக்ஷம். "வாயிலிடனும் புலனுமாகும்" எனவறிக.

§ பாஹ்யேந்த்ரியத்வாரா -புறவிந்த்ரியங்களை முன்னிட்டுக்கொண்டு, ‡ சம்சயம் - ஐயம், ¶ விபர்யயம் - திரிவு, † பூர்வாநுபவஜநிதம் - முன்னினைவு.

இவ்விந்த்ரியப் பிரத்யக்ஷத்திற் கேதுவான விஷயேந்த்ரிய சந்நிகர்ஷம் விஷயபேதத்தினாற் சம்பந்தபேதமாறும். அவையாவன ? சம்யோகம் சம்யுக்தசமவாயம் சம்யுக்தசமவேதசமவாயம் சமவாயம் சமவேதசமவாயம் விசேஷணவிசேஷ்யபாவம்.

மேல்வையிற்றின் தரிசகம்:—கடதரிசநத்திலே சக்ஷுவுக்கும் கடத்துக்குமுண்டான சம்பந்தம் * சையோகம்.

* சம்பந்தஞ்சொல்லைக்குறிக்கிறது.

கடத்ரூபத்திற்குஞ் சக்ஷுவுக்குமுண்டான சம்பந்தம் சையுக்தசமவாயம்.

கடத்ரூபத்தில் ரூபத்வாதி சாமாந்யத்திற்கும் சக்ஷுவுக்குமுண்டான சம்பந்தம் சையுக்த சமவேத சமவாயம்.

சப்தத்திற்குஞ் ஶ்ரோத்ரத்திற்கு முண்டான சம்பந்தம் சமவாயம்.

சப்தத்வஜாதிக்கும் ஶ்ரோத்ரத்துக்கு முண்டான சம்பந்தம் சமவேதசமவாயம்.

அபாவத்தையும் சமவாயத்தையுங் க்ரஹிக்கிறபொழுது சக்ஷுவுக்கும் சமவாயாதாரமான படத்திற்கும் அபாவாதாரமான பூதலத்திற்கு முண்டாகின சம்பந்தம் சையோகம்.

சக்ஷு சையுக்தமானபடத்தில் படத்துவம் சமவாயமென்கிறபொழுது சையுக்தவிசேஷ்யத்வம் சம்பந்தம்.

இந்தபடத்திலே படத்வம் சமவேதமென்று க்ரஹிக்கிறபொழுது சையுக்தவிசேஷணத்தை சம்பந்தம்.

சக்ஷு சையுக்தமானபூதலத்தி லிப்பூமியிலே கடமில்லையென்கிறபோது பூதலம் விசேஷணம், கடாபாவம்விசேஷ்யம்.

அந்த அபாவத்துக்கும் சக்ஷுவுக்கும் சையுக்தவிசேஷ்யதை சம்பந்தம் கடாபாவத்தையுடையது பூதலமென்கிறபோது, அபாவம் விசேஷணம், பூதலம் விசேஷ்யம். இதற்குண்டான சம்பந்தஞ் சையுக்தவிசேஷணத்தை

* [illegible]

வாயாத் ஸம்யோகத: || ஸ்பர்சஸ்ய க்ரஹணம் ஶ்ரோ
த்ர ஸமவேத தயா ஸ்திதம் | ஶப்தஸ்ய ஸமவேதாத்ம-
ஸமவாயாத் ப்ரதீயதே || விஶேஷண தயாபாவ ஸம
வாய ஸ்திதிஸ்ததா | விஶேஷ்யத்வேந பாவ ஸம
வாய ஸ்திதிதே இதி,—

சம்பந்தமெனினும் சந்நிகர்ஷமெனினுமொக்குமெனவறிக.

அயர்வி லிந்திரியஞான மைம்புலன் சார்ந்துயிர்க்கண் மயர்வற வந்தஞான மானதக காண்டலாமே-குற்றமில்லாமற் பார்க்கிற ஞானேந்திரியமானது சப்தாதி பஞ்சவிஷயங்களைப் பொருந்தி சம்சயாதி மயக்கங்களற வுண்டான அநுபவத்தை மனசினாலே அநுசந்தானம்பண்ணுவது மானசப்பிரத்தியக்ஷம்.

"இந்திரியமத்தத் திணங்கும்பொழுதாறு- பந்தமுறும் பாரறிவிப்பாம்" "இந்திரியமத்தத்திணங்குதல் சையோகமுந்-லந்தப் பொருளுணர்ச்சியாம்" "சாதிகுணந்தன்னிற் சையோகசமவாயமாம் - போதமுளார் தாங்காணும்போது" "சையுத்தசமவேத சமவாயசம்பந்த-மெய்தல் குணத்துவத்திலே" "சத்தகுசமவேதத் தாலேசெவிப்புலத்துக்-கத்தமா மென்றோபதி" "சத்தத்திற்சாமாநி யத்தைத்தருமதனில் - வைத்தசமவேதசமவாயம்" "தவாதசமவாய சம்பந்தந்தருங்கா - ணபாவவிசேடணத்துவம்".

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

ப்ரத்தியக்ஷ நான்கின் இலக்கண மிரண்டு திருவிருத்தத்தாற் கூறுகின்றார்.

உயிரினோடு - ஆன்மாவாகிய ப்ரமாதாவோடு,—உணர்வு - சிற்சத்தியாகிய ப்ரமாணம்,—வாயில் - மலத்தைச் சிறிது நீக்கி யதைச் சிற்சத்தியைச் சிறிது விளக்காநின்று தனக்குப் ப்ரேரகமாயிராநிற்குங் கலை வித்தை ராகங்களோடுகூடிய மனசினாலே செலுத்தப்பட்ட இந்திரியம்,—ஒளி - காட்டாகிய சோமசூரியாக்கினிப்பிரகாசம்,—உருவாதி - உருவ சத்த ஸ்பரிச விரச கந்தங்க ளிவைகளை,—பற்றி - பொருந்தி,—செயிரொடு விகற்பமின்றி - ஐயந்திரிவோடு சவிகற்பமின்றி,—தெரிவது - நிர்விகற்பமாகக் காண்பது,—இந்திரியக்காட்சி - வாயிற் ப்ரத்தியக்ஷம்;—அயர்விலிந்திரியஞானம் - முன்சொன்னவாயிற் ப்ரத்தியக்ஷமாகிய நிர்விகற்பஞானம்,—ஐம்புலன்சார்ந்து-சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களைப் பொருந்தி,—மயர்வற-ஐயந்திரிவுகளின்றி,—உயிர்க்கண் - ஆன்மாவினது புத்திகலுஷித சிற்சத்தியினிடத்தது வித்துவாய்,—மயர்வறவந்தஞானம் - விளங்கிய சவிகற்பஞானம் பௌத்தப்ரமிதி ப்ரத்தியக்ஷமாயிருக்காலு மீதின்னரூபமாகவேணுமென்னு மனசினது சங்கற்ப சந்தேகஞான முன்னாகவுண்டாதலினால்,—மானதக்காண்டலாமே - மானதப் ப்ரத்தியக்ஷமுமாமே.

புத்திசித்தி மனசென்றும் பெயர் பொது, பௌத்தமென்று செம்மைப்பொருள்.

தத்துவ வியாபாரமுறைமை சிறிதுசாற்றுகின்றோம்:—ஒரு சிற்சத்திரூபமாகிய வோர்ஞானந்தானே தற்பொருளறிவென்றும் பிறப்பொருளறிவென்று மிருவிதமாயிருக்கும்.

அப்படியிருந்தாலும் பிறப்பொருளறிவாயிருந்த தான்றானே தற்பொருளறிவாயிருந்து பகுப்பற் றிருதன்மையாயிருக்கும். பிறப்பொருளை யறியுமிடத்துத் தற்பொருளறிவானது தற்பொருளறியுஞ் சமுதாய சித்ரூப மாத்ரூப முள்ளமைந்த சத்ரூப சிவரூப வான்மரூப ப்ரத்தியக்ஷரூப சிற்சத்தியென்கின்ற

ப்ரமாதா. பிறப்பொருளறிவானது கரணரூப சிவசத்திரூப வான்மசத்திரூப பராக்ரூப சிற்சத்தியெங்கின்ற ப்ரமாணம். ப்ரமாணத்தின தறிகற்றொழிலானது க்ரியையென்கின்ற ப்ரமிதி. பிறப்பொருளென்கின்றது கர்த்ருகரணக் கிரியைகட்கயமாகிய கன்மமென்கின்ற ப்ரமேயம்.

தற்பொருளை யறியுமிடத்துத் தற்பொருளறிவு பிறப்பொருளறிவெனகின்ற விரண்டிற்கும் பொது நடுச்சித்ரூபமாதலிர வந்து ரான்ம ப்ரேரகவறிவானது கர்த்ரூப மாத்ர சிவரூபானமரூப சிற்சத்தியெனகின்ற ப்ரமாதா. இப்பிரமாதாவோடு மணந்து பிறப்பொருள் ப்ரமாதாவாயிருந்த தற்பொருளறிவானது கரணரூப சிவசத்திரூபான்மசத்திரூப ப்ரத்யக்ரூப சிற்சத்தியென்கின்ற ப்ரமாணம். ப்ரமாணத்தின தறிதற்றொழிலானது க்ரியையென்கின்ற ப்ரமிதி. பிறப்பொருளறிவான பாரக்ரூப சிற்சத்தியென்கின்ற பிறப்பொருட் பிரமேயம்போ லல்லாமற் பிறப்பொருட் ப்ரமாணரூபமாக வறியப்படும் ப்ரமேயம்.

சிவன் முத்தசிவன் அபரமுத்தசிவன் ஜீவன்முத்தசிவன் ஜீவான்மாவென்னு மைவர்க்கும் அவரவர்க் கக்யமாகிய வவரவர் பிறப்பொருட் சித்சிற்பிரமேயம் ஸ்வரூபமன்று, பின்னைப் பொருள். அவரவர் ப்ரமாதிரூபம் ப்ரமாணரூப மிரண்டும் ஜீவான்மாவுக்கும் ஜீவன்முத்தசிவனுக்கும் அபரமுத்தசிவனுக்கு மாத்திரஞ் செப்பப்படுவதாகிய தடதக பௌத்த சவிகற்பஞான மௌயாதிகமாதலாற் பௌத்த தூல விகற்பமாத்திரத்தைத் தள்ளி நீங்காமதிற்குமூன் றற்பசாத்த சவிகல்ப நிர்விகற்பஞான ப்ரமிதிரூபமும், பிறப்பொருட் ப்ரமாணமாகும் தற்பொருட் சித்ப்ரமேயரூபமுமாக காலும் பகுப்பற்ற வேறுவேறு மவரவர்க்கு மன்னாய்த் தட்டற்றவசூனமன்றி ஸ்வரூபலக்ஷணமாய்த் தானேயிருக்கும். இங்ஙனமாற் கலாதத்துவஞ்

சிற்சத்திவிருத்தியிற் சிறிது மலத்தைநீக்கிப் பிறப்பொருளறி தலைய பண்ணுதலைக்குறித்துப் பகுப்பற்று ஞானசத்திதனமே லிச்சாசத்திகோத்த கிரியாசத்திரூப வீரொருகாரணரூபியா யிருக்கின்ற பராகரூபிபெயரொய்திய வெதிர்முகியாகிய சிற் சத்தியைப் பொருந்தி யதனிடத்தினுள் ளற்பசவிகற்பநிர்விக றபஞானமா யினிமே லிந்திரியத்வாரத்தால் விஷயாத்தவத்தி ளுல் மலவாசனைமாற்றிப் பிறபொருளை யிதுவென்றறியும்படி கரு மேலிராகத்தவங்கோத்த கலாதத்வமெனகின்ற தனுல் மலவாசனையைமாற்றி யிதுகாரியமென றுத்யோகித் தினனு தாகக்கடவதெனறு சங்கற்பித்துப் பண்ணும்படிக்கு மறிசல் பண்ணுதற்றொழில்களை மலவாசனைமணக்கச் சிறிது விளக்கி யபபோதுமாத்ரங் காணகாரகமாயிருந்தது.

பின்னுட னுள்முகமாய்த் திரும்பிப் பிறப்பொருளறிதல் பண்ணுதலைக் குறித்துப் பகுப்பற்று ஞாதிருகர்த்ருரூப விரொ ருகாதருரூபியாயிருக்கின்ற பிரத்தியகரூபிப் பெயரெய்திய திரு ம்பியமுக சிற்சத்தியைப் பொருந்தி யதினெதிர்முக சிற்சத்தி காணங்கொண் டறிதற் பண்ணுதற்றொழில்களைப் பண்ணுவிக் குஞ் சாமர்த்தியத்தையு மச்சிற்சத்தி பிறப்பொருள்காட்ட வச்சிற்சத்திகொண்டு பிறப்பொருளறியும் சாமர்த்தியத்தையும் விளக்கி யக்கால காதருகாரகமாயிருந்தது.

தற்பொருளறிதல பண்ணுதலைக்குறித்துப் பகுப்பற்று ஞானசத்தி தன்மேலிச்சாசத்திகோத்த க்ரியாசத்திரூப வீ ரொருகரணரூபியாயிருக்கின்ற ப்ரத்யக்ரூபிப் பெயரொய்திய திரும்பியமுகமாகிய சிற்சத்தியைப்பொருந்தி யதிலறிதல் பண் ணுதற்றொழில்களைச் சிறிதுவிளக்கிக் கரணகாரகமாயிருந்தது.

பின் னங்க வெதிர்முகசிற்சத்தி திரும்பியமுகசிற்சத்திக ளிரண்டிற்கும் பொதுவேச் சித்ரூபமாத்ர வந்தரான்ம கர்த்ரு

ரூபமாத்ர சிற்சத்தியைப்பொருந்தி யதிற் றிரும்பியமுக சிற்சத்தி கரணங்கொண் டறிதல்பண்ணுதற் றொழில்களைப் பண்ணுவிக்குஞ் சாமர்த்தியத்தையும அச்சிற்சத்தி தற்பொருள்காட்ட வச்சிற்சத்திகொண்டு தற்பொருளறியுஞ் சாமர்த்தியத்தையும் விளக்கி யக்கலை கர்த்ருகாரகமாயிருந்தது.

அப்படியிருந்து நானறிவேன் நானறிபாநிற்கின்றேன் நான் பண்ணுவேன் நானபண்ணாநிற்கின்றேனென்றும், அறிந்தபினனும் பண்ணினபின்னும் நானறிந்தேன் நானபண்ணினேனென்றும், முன் னற்ப சவிகற்ப நிர்விகற்பஞானமாய் அஹங்கார தூலவிகற்பார்ப்பதமா யறிதல் பண்ணுதற் கிரமத்தில் கர்வித்துச சங்க்ரமப்பித்து நிற்கும்; ஆதலாற் கலை கர்த்ருகாரகமெனபதே முக்கியம்.

பிறப்பொருட் ப்ரமாணமென்கின்ற தற்பொருட் ப்ரமேயந்தான ரூனை ப்ரத்பக்ரூப தற்பொருட்பரமாதிருப்ரமாணரூபமா யதி லதிருக்குமித்து மேயவிலக்ஷணமாய்ப் புரித்து ஸ்வயம் ப்ரகாசமாய் நிரந்திரமாய்ச் சடிதிவிளங்கிவிடுதலா லதவத்தையினறித் தற்பொருட்ப்ரமேய விஷயத்திற் ப்ரமாதாமுதலிய நான்கும் ஸ்வரூபமாயிருந்தாலும்ப்ரமாதாவல்ல; ப்ரமாதா ப்ரமாணமல்ல, ப்ரமாணம் ப்ரமிதியல்ல, ப்ரமிதி ப்ரமேயமல்ல, ப்ரமேயமெனவறிக. பிறப்பொருட் சிற்ப்ரமேயவிஷயத்திலேயுஞ் சிறிது சிறப்பொப்பிருத்தலாலப்படி யொருபடியறிக.

பின்பு வித்தியாதத்வங் கலையினு லொருபடி விளங்கிய கர்ணரூப பார்க்ரூப ஞானசத்திரூப சிற்சத்தியைப்பொருந்தி மலவாசனையை நீக்கித் தெளிவுபண்ணிக் கரணகாரகமென்று பெயர்பெற்று நிற்கும். ராகதத்வங் கரணரூப பார்க்ரூப

விச்சாசத்திரூப சிற்சத்தியைப்பொருந்தி போக்யப்பொருளி லுபரஞ்சிப்பித்துக் கரணகாரகமென்று பெயர்பெற்று நிற்கும்.

காலதத்வ நியதிதத்வத்தாற் போக்கியப்பொருளில் நியமித்த புருடனை யேவி நியதியோடு கரணகாரகங் கர்த்ருகாரக முமன்றிக் கரணமாத்திரமாயிருந்தாலு மொருப்ரகாரத்தாற் கர்த்ருகாரகமென்று பெயர்பெற்றுநிற்கும்.

புருடதத்வம் அவிவேக ப்ரதிபத்தி விபரீத சுகதுக்க ... வேதன போகக்கிரியையைப் பண்ணு ... போகதாவா யோடுகூடிக் கர்த்ருகாரகமென்று பெயர்பெற்று நிற்கு

ப்ரகிருதிதத்வஞ் சாதாரணசாதாரணமுமாய்ப் ப்ரவிருத்தி நியம வியாபாரசீல குணகாரியத்வாரத்து தனக்குக் கீழுள்ள போக்கியபோகப்பொருள்களை யுண்டா குணதத்வத்தோடுகூடக் காரணமாத்திரமாய் நிற்கும் மாத்திரைகளும் பூதங்களுமாகிய தேரிற் றேராளிபோ கும்.

சக்ஷுராதி தத்வமுதலிய ஞானேந்த்ரியம் இச்சாசத்திரூபசுற சத்தியைப்பொருந்திய விராகதத்வத்தாற் செலுத்தப்பட்டுத் தசிற்சத்தியைப்பொருந்திய விராகதத்வமணைந்த மனசினாலே வப்பட்டு பார்க்ரூப ஞானசத்திரூப சிற்சத்தியைப்பொருந்தி முன்சொல்லிய புறபோக்கியப்பொருள்களைக்காண்பித்துத் தத்த சி ற்சத்திபொருந்திய வித்யாதத்வத்தினாற் புருஷனென்றிது வென றறியும்படிபண்ணிக் கரணகாரகமென்று பெயர்பெற்று நிற்கும்.

அந்தவறிவு நிர்விகற்பஞானமென்று மிந்திரியப்ரத்திய க்ஷமென்றுஞ் சொல்லப்படும்.

அவ்வறிவை யவ்விராகதத்வங் கலக்கும்.

திரும்ப அராகதத்வத்தோடு கோத்துநிற்கும் மனதத்வ
மந்தநிர்விகற்பஞானத்திற் றோற்றும்பொருள்களி லொன்றை
விகற்பித்துத் தூக்கி யிது வினதையினது ரூபமாகவேணுமென
றிதுமுதல் ரூபங்களைச் சந்தேகமாய்ச் சங்கற்பித்து அஹங்கார
புத்திப்ரேரகமாய்க் கரணகாரகமென்று பெயர்பெற்றுநிற்கும்.

கலாதத்வத்தோடு கோத்துநிற்கு மஹங்காரதத்வம் புற
ப்பொருளறிதல் பண்ணுதலைக்குறித்து ஞாதிரு கர்த்ருரூப கர்
த்ருத்வ மாத்திரமாய்த் தற்பொருளறிதல் பண்ணுதலைக்குறித்
து ஞானசத்தியே லிச்சாசத்தியோடு கூடிய க்ரியாசத்திரூப கரண
ரூபியாயு மிருக்கின்ற ப்ரத்யக்ஷரூபியென வொய்திய திரும்பி
யமுநோபாகிய சிற்சத்தியையு மெதிர்முகசிற்சத்தி திரும்பிடமுக
சிற்சத்திகளிரண்டிற்கு மந்தராணமசித்காத்ருரூபமாத்ர சிற
சத்தியையுங் கலாதத்வத் துவாரத்தாற் பொருந்தி, யதினதினி
டத்தி லறிதல் பண்ணுதற்றொழில்களையு மந்தத்தொழில்களைப
பண்ணுவிக்குஞ் சாமர்த்தியத்தையு முறைமையிற் சமர்த்தித்
திகத்விகதிரிய நிர்விகற்பஞான மெதைப்பற்றிவந்ததோ வதை
நிச்சயமாய் நானறிவே நானறிபாநிற்கின்றேனென நானபண்ணு
வேனென நானபண்ணுநிற்கின்றேனென்றும்; அறிந்தபின்னும் பண்
ணினபின்னும் நானறிந்தேன நானபண்ணினேனென்றும்: அந்த
ச கலபின்னு ளுர்ப்பவித்த தற்பொருள்விஷய நிர்விகற்பஞான
நதைப்பற்றிப் பிறக்குஞ் சவிகற்பஞானமாய்ப் பிறப்பொருள்
விஷய வித்தியாகலாகலுஷித பார்க்ரூப ஞானக்கிரியாசத்
தியை விஷயீகரித்து கர்வித்து சங்க்ரமப்பித்து நிற்குமாத
லாலொருப்ரகாரத்தாற் கரணகாரகமென்றும் ப்ரதானமாய்
கர்த்ருகாரகமென்றும் பெயர்பெற்றுநிற்கும்.

பின்பு வித்யாதத்வத்தோடுகோத்துநிற்கும் புத்திதத்வம்
கரணரூப பார்க்ரூப ஞானசத்திரூப சிற்சத்தியைப்பொருந்தி

இவள்வனிதை இதுமாலை இதுசந்தனம் இதுசர்ப்பம் இதுமுள் இதுவிடம் இதுசிவகாதம் என்றிவைமுதற்பொருள்களை நிச்சயித்துக கரணகாரகமென்று பெயர்பெற்று நிற்கும்.

அந்த நிச்சயிக்கப்பட்டபொருள் ஞேயமாத்திரத்திலே தான போகத்துக்குப் பொருந்திய கனமேந்திரியங்களாற் காரியப்பட்டுத் தான புத்தியிற் ப்ரதிபிம்பிக்கும்.

புத்தி யதனாற் சுகரூபையாயுந் துக்கரூபையாயும் மோகரூபையாயு மிருக்கும்.

அந்த சுகமுதலாகிய மூன்றை யொவ்வொன்றுப் பார்க்ரூபஞானசத்திபொருந்திய வித்திபாதத்வமான திதுவென்று நிர்விகற்பமாயப் பார்க்கும்

அந்தப்பார்வையைப் பார்க்குரூப விச்சாசத்திபொருந்திய விராகதத்வ முபாருசிப்பித்துக் கலக்கும்.

அந்த விராகதத்வத்தோடுகோத் தங்கவிச்சாசத்திபொருந்திய மனதத்வ மிது சுகரூபமாகவேணும் இது துக்கரூபமாகவேணும் இதுமோகரூபமாகவேணுமென்று விகற்பித்து ஒவ்வொன்றைத் தாக்கிச் சங்கற்பிக்கும்.

கலாதத்வத்தோடுகோத்து ப்ரத்திபக்ரூபஞானசத்திபொருந்திய வஹங்காரதத்வம் வித்யாதத்வத்தினறேற்றி நிர்விகற்பஞான மதை விஷயீகரித்து வந்ததோ வந்தவஸ்துவை நானிச்சைபிப்பேனென்று கர்விக்கும்.

பின்பு தற்ப்ரகாச பிறப்ரகாசமாயிருக்கின்ற புத்திதத்வத்திலது முன ப்ரபஞ்சித்த பார்க்ரூபசிற்சத்தி விருத்திகுறி நிர்விகற்ப பிறப்ரகாசத்தோடுகோத்த தற்ப்ரகாசத்தி லந்தச் சுகதுக்கமோகங்க ளிதுசுக மிதுதுக்க மிதுமோகமென்று தோற்றும்.

அந்தச் சுகதுக்கமோகங்களோடு பகுப்பற்றிருக்கு மந்தப் புத்தி யத்யவசாய சவிகற்பஞானத்தினின்று மந்தப்புத்தி ப்ரகாசத்தோடுகலந்துநின்று அதனறிகுறியோடும வித்யாதத்துவத்தோடுகோத்துக் கிளம்பி யந்தப்புத்திப்பிரகாசாங்கி சமாதர போக்கியத்தினமேல்விழுந்த வெதிர்முகஞானசத்தி யில் அந்தப்புத்திப்ரகாசத்தினது விகற்பந்தோய்ந்த சற்றே சவிகற்பஞானமாய்வரும்புத்தி யத்யவசாய முற்றுப்பொருந்திய பௌத்தசுகதுக்க மோகபோகமென்கின்ற வேதனையினது சுபூர்த்தி துடபூர்த்திச சொரூப சுபாநந்த தாரதம்மியமாய்த் தோற்றும்போகத்தை யாங்காரத்தோடுகோத்தத திரும்பிய முகசிற்சத்தி,கலையினூற் றன்னிடத்தின முனதோற்றிய வுள்ளற்ப சவிகற்பஞானமான சுவசம்வேதன ப்ரத்தியக்ஷத்தை யகங்காரவிகற்ப சவிசற்பமாக்கி, நானசுகி நானதுக்கி நானமோகி யென்று பெயாக்கோப்பபோகமாய்; புசிக்கும் அநுபவிக்கும் பார்க்ரூபியென்றும் பரோன்முகியென்றும் பாசங்விததென்றும சத்தியென்றும் மெதிாமுகசிற்சத்திககுப் பெயரொன்றறிக.

ப்ரத்யக்ரூபி யென்றும் ஸ்வயோனமுகி யென்றும் ஸ்வசங்வித் தென்றும் சத்திமானென்றும் சிவான்மாவென்று திரும்பியமுகசிற்சத்திக்குப் பெயரென்றறிக

அந்த வெதிர்முகசிற்சத்தித் திரும்பியமுகசிற்சத்திகளிரண்டினை தந்தரானமசித்தானமாவுக்கு மவரவ ரீர்ருசத்திக்குள் ளருஞ் சித்தான்மாவென்பதைக் குறித்துச் சிவனென்று மானமாவென்றும் பெயரொனறறிக.

பின்னுமொரு சிற்சத்தியினுடைய வெதிர்முகரூபந் திரும்பிய முகரூபமே சத்தியென்றுஞ் சிவனென்றுஞ் சொல்லப்படு மாதலாற் றனதுசத்தியைத்தவிர சிவன் றுனென்பதில்லையென்

பது மப்படியாதலாற் றனதுசத்தியைத்தவிர வான்மாத் தா
னென்ப தில்லையென்பதுமறிக.

திரும்ப வந்தவகங்காரங் கலையினால் விளங்கிய கிரியாச
த்தியைப்பொருந்தி மனோசங்கற்பமுள்ளனாகிப் ப்ராணவாயு
கன்மேந்திரியங்களைச்செலுத்தி ஞானசத்தியாலறிந்த கடமுத
ற் காரியபதார்த்தங்களைப் பண்ணும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

எ-து. மேற்கூறிப்போந்த காட்சி நான்கனுள்ளும், தன்னை
நோக்கிநிற்குமறிவாகிய ஆன்மாவினிடத்தும் விடயங்களை நோக்
கியோடுமறிவாகிய சித்சத்தி, கண்முதலிய பொறிகளையும், அவ
ற்றிற்குத் துணையாய் வலிசெய்துநிற்குந் தேயுமுதலிய பூதங்
களையும், அப்பூதங்களுக்கு முதற்காரணமாய் அவற்றைவிட்டு
நீங்குதலின்றி உடனாயுருவமுதலிய தன்மாத்திரைகளையுமதி
ட்டித்துக்கொண்டு, ஐயவிபரீதக் குற்றங்களும் பெயர்சாதிமு
தலிய விகற்பமுமின்றி, உருவமுதலியவைம்புலன்களை நிருவிக
ற்பமாயறியுமறிவு வாயிற்காட்சியெனப்படும். அங்ஙனமைம்புல
ன்களை இயைந்தறிந்த பின்னர் மீள மறத்தலின்றிச் சித்தத்தா
ற் சிந்திக்கப்பட்டு நிலைபெறுவதாகிய அவ்வாயிற்காட்சியறிவு; பெ
யர்சாதி முதலியவற்றான் விபரீதமாதலின்றி நிச்சயமாய்ப் பு
த்தித்தத்துவத்தின்கண் வருதலானாகிய சவிகற்பவுணர்வாய் உயிரி
னோடுணர்வு தெரிவது மானதக்காட்சியெனப்படுமென்பதாம்.

ஐம்புலன்சார்ந்தயர்விலிந்திரியஞானமென மாறுக.

இன் ஐந்தாமுருபு.

ஓடுணர்வு வினைத்தொகை.

ஒளி ஆகுபெயர்.

ஆதியெனபதனை ஒளிபோடுங் கூட்டுக.

சாாகதபினெனபது சாாக்தெனத்திரிநது காரியத்தின்மே னின்றது.

உயிாக்குப் பற்றுககோடாகிய புத்தியை உயிரென்றுபசரி த்தார்.

வந்தஞானமென்னும் பெயரெச்சம் ஆறுசென்றபெயரெ னுற்போல நின்றது.

மனத்தினெழுச்சிப்பாடு முனனுக நிகழ்தலின மானதககா ட்சியெனப்பட்டது.

அதிகாரமுறைமையென்னுமுத்தியான் உயிரினோடு னாவு தெரியதெனபதனை அளவையதிகாரமுழுதினு முய்த்துரைகக.

---

# நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முனசொன்ன ப்ரத்தியக்ஷப்பிரமாணம் நாலில் வாயில் காட்சியு மானதககாட்சியு மேலருளிச்செய்கிறார்

கூ உயிரினோடுணர்வுவாயி லொளியுரு வாதிபற்றிச் செயிரொ ம் விகற்பமின்றித தெரிவ திநதிரியக்காட்சி — ப்ராணவாயுவும் னமபோதமு மிந்திரியங்களுஞ் சோமசூரியாக்கினிப்பிரகாசமு மாக வுருவமுதலானவையிற்றைப் பொருந்திக் குற்றத்தோ டிகத்ரியவிகற்பமுமின்றியே காண்பது இந்த்ரியப்பிரத்தியக்ஷ ம்,—அயர்வி லிந்திரிய ஞான மைம்புலன சார்ந்துயிர்க்கண் மய ர்வற வநதஞான மானதக் காண்டலாமே- குற்றமில்லாத விந் த்ரியங்களினது அறிவுகளானது பஞ்சவிஷயங்களையும்பொரு

ந்தியான்மாவினிடத்திலே மயக்கமற வந்தவறிவு மானதப் பிரத்தியக்ஷம்.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---0---

(மேற்கூறி - போந்த காட்சிநானகனுள்ளும்) உயிரின் - த ன்னை நோக்கி நிற்குமறிவாகிய வானமாவினின்றும்,—ஒடுண ர்வு - விடயங்களை நோக்கியோடு மறிவாகிய சிறசத்தி,— வாயில் - கண்முதலிய பொறிகளையும்,—ஒளியாதி - அவற்றிற் குத் துணையாய் வலிசெய் துடனிற்கு தேயுமுதலிய பூதங்களை யும்,—உருவாதிபற்றி - அப்பூதங்களுக்கு முதற்காரணமா யவ ற்றைவிட்டு நீங்குதலின்றி யுடனாகிய வுருவமுதலிய தன்மாத்தி ரைகளையு மதிட்டித்துக்கொண்டு,—செயர் - ஐயவிபரீத குற்ற ங்களும்,—உறுவிகற்பமின்றி - பொருந்திய பெயர்சாதி முதலி ய விகற்பமுமின்றி,—தெறியது - உருவமுதலிய வைம்புலன்க ளை நிருவிகற்பமா யறியுமறிவு,—இந்திரியக்காட்சி - வாயிற்கா ட்சியெனப்படும்,—ஐம்புலன்சாராது - அங்ஙனமைம்புலன்களை யியைந்தறிந்த பின்னர்,—அயர்வில் - மீளவுமறத்தலின்றி,—இ ந்திரியஞானம் - சித்தத்தாற் சிந்திக்கப்பட்டு நிலைபெறுவதாகிய அவ்வாயிற்காட்சியறிவு,—மயாவற - பெயர்சாதி முதலியன வற்றுள் விபரீதமாதலின்றி நிச்சயமாய்,—உயிர்க்கண் - புத்தி தத்துவத்தின்கண்,—வந்தஞானம - வருதலினாலாகிய சவிக ற்ப வுணர்வாயுயிரினோடுணாவுதெரிவது,—மானதக்காண்டலா மே - மானதக்காட்சியெனப்படும.

இதனானே வாயிற்காட்சி மானதக்காட்சிகள் இயல்பு கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேவிருத்தமுறையானே வேதனைக்காட்சியும்
யோகக்காட்சியு முணர்த்துகிறார்.

அருந்தின்பத் துன்பமுள்ளத் தறிவினுக் கராக
மாகி, தருந்தன்வே தனையாங்காட்சி சமாதியான மலங்
கள்வாட்டிப், பொருந்திய தேசகால வியல்பகல் பொ
ருளகளெல்லா, மிருந்துணர் கின்றஞானம் யோகநற்
காண்டலாமே. (எ)

(இ-ள்) அருந்தின்பத் துன்பமுள்ளத் தறிவினுக் கராகமாகி தருந்தன்வே தனையாங்காட்சி — ஆன்மஞானத்தாலே யிராகம் வித்தை கலையிவற்று லுண்டாக்கு மின்பதுன்பங்களைப் புசித்தலே தன்வேதனைக்காட்சி.

சமாதியான் மலங்கள்வாட்டிப் பொருந்திய தேசகால வியல்பகல் பொருள்களெல்லா மிருந்துணர் கின்றஞானம் யோகநற் காண்டலாமே — யோகிகள் பலகாலுஞ் சமாதியைப் பண்ணப்பண்ண மலசத்தி கெடப்பட்டுத் தாம் பொருந்தியிருக்குந் தேசங்களுடையவும், செல்காலம் வருகால மதுகளுடைய தன்மையையுஞ், அகயதேசத்திலுண்டாய வ்யாபாரங்களையு மிருந்தவிடத்திலேயிருந் தெல்லாவற்றையு மறியத்தக்கவறிவு நனமுன யோகக்காட்சியாம்—எ-று.

சுவசங்வேதமாகிய தற்சொரூபதரிசனமுஞ் சுவசங்வேத்யமாகிய சிவாநுபூதியு மிவைகள் சாக்ஷாத்காரியாதலால் இவைகாண்டலி லடங்கும்.

இஃதொப்பின முடித்தலாற் கூறியதெனவறிக. (எ)

காண்டல் முடிந்தது

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் நிறுத்தமுறையானே ஸ்வவேதனுப்ரத்தியக்ஷம் யோகப்ரத்தியக்ஷங்களுடைய க்ரமங்கூறுகின்றது.

அருாதின்பத் துன்பமுளளத் தறிவினுக் கராகமாதி தருந்தனவே தனைபாங்காட்சி - விஷப *ஜநயங்களாயிருக்கிற சுகதுக்கங்களை யிராகதத்துக்காதியான வித்யாதத்வம் ஆன்மஞானத்திலிடத்திலே செலுத்த நான்சுகி துக்கியென்பது முதலாக வருகிற ஞானம் † ஸ்வவேதனுப்ரத்யக்ஷம்,—சமாதியான மலங்கள்வாட்டி - வித்யாராகாதி நிரபேக்ஷயாக § அநாவிாத இயம நியம ஆசன ப்ராணாயாம ப்ரத்தியாகார தாரணை தியான சமாதி என்னு மிவையை ‡சிற்சத்தியாகிய சிவஞானந்த யோகத்தினுலே மலங்களை நீக்கி,— பொருந்திய தேசகால வியல்பகல் பொருள்களெல்லா மிருந்து ா கினறஞான மியோகநற் காண்டலாமே - பொருந்தப்பட்ட த்ரிபுவநத்திலுண்டான வஸ்துக்களையும் பூதபௌஷ்ய வர்த்தமானமெனனும் த்ரிகாலங்களிலே வருகிறவிஷயங்களையும் தூரத்ருஷ்டி தூரச்ரவணங்களை யியல்பாக விரிவுடனேகூட யேககாலததி லதீந்த்ரியமாகவே கரதலாமலகம்போல வறிவது ஸவிகற்பஞானம். ஞாதுருங்காநுபவஸ்வபாவமாகவே நிற்பது நிர்விகற்பஞானம். இப்படி யோக ‡ப்ரத்யக்ஷமிரண்டுவகைப்படும். ஸவபாவமென்பது தாதாத்மியம்.

* ஜந்யம் - உண்டாதல், † ஸ்வவேதனை - தன்வேதனை, § அநாவிரதம்-தடையில்லாமல், ‡ சிற்சத்தி-ஞானசக்தி, ‡ ப்ரத்யக்ஷம் -காக்ஷி.

தத்ர ச்ரோத்ராதீந்த்ரியாணி ஸ்வவிஷயேஷு ஸவி
ஷாதி பரியா | விதிஜ்ஞா நஜநநமாத்ர மேவ
ப ஸாஹாவிநோத இதி,—

இதனாற் பஞ்சேந்த்ரியங்களு மொவ்வொருவிஷயத்தை யறிகிறதொழிய அந்யவிஷயத்தை யறியமாட்டாதபடியாலும், அந்தக்கரணங்களு மப்படியே யொன்றறிந்த தொனறறியாதாகையாலும், மனசு பற்றவும் அஹங்காரங் க்ரஹிக்கவும் புத்தி நிச்சயிக்கவும் புத்தியினாலே நிச்சயிக்கப்பட்ட விஷயத்திலே யிராக மிச்சையைப்பண்ணுவிக்கவும் வித்தை விஷய ¶ கடகம் பண்ணவுமாய் நிற்பதாகையால் இவையெல்லாத்தையும் வியாபித்து சர்வவிஷயத்தையும் பரிச்சேதம்பண்ணுகிறதாகையினாலும், இந்தக்கரணங்களெல்லாத்தையு மபேக்ஷையாகவே × பூதபௌஷியத்வர்த்தமாந ‡ காலீனமாயிருக்கிற விஷயங்களை யறிகையினாலும், தன்னுடைய ஸ்வரூபத்தையும் சிவனையும் அந்யமாகத் தரிசிக்கையாலும், ஆன்மசிற்சத்தியே * நிருபாதிதமான பிரமாணம்.

¶ கடகம் - பொருத்துதல், × பூதபௌஷியத்வர்த்தமானம் - செல்கால நிகழ்கால வெதிர்காலம், ‡ காலீனம் - காலங்கள், * நிருபாதிதம் - உபாதியில்லாதது.

இவைபொழிந்து சொல்வாருமுளர். அவைவருமாறு.—
கண்ணேராமை உணர்ந்ததை யுணர்தல் நினைப்பு என்னும் போலிகளும் கூறும்.

கண்டுணராமையாவது - சிலவற்றைக் கண்டதின்பின் பெயரறியார்;

உணர்ந்ததையுணர்தலாவது - முன்பு குளிர்வந்தற்றகாலத்து நெருப்பு மருந்தென்று அறிந்தான, பின்பு மதற்கிது மருந்தென உள்ளங்கொள்ளல்.

நினைப்பாவது - குழவிப்பருவத்தே தந்தைதாயை யிழந்தோன காரணங் கருதாது நினகினைனார் தந்தைதாயென்று பிறர்சொல்ல விதனைக்கருதிக் கொள்ளல். இதுபோலிகள்; இம்முறை யறியுமாறுங் காண்க.

இதனுடைய பூர்வபக்ஷசித்தாந்தம் விஸ்தாரம், இவ்விடத்து க்ரந்தவிஸ்தாரபயத்தினாற் சொன்னதில்லை; ஆகையால் சித்தாந்ததீபிகையிலே விஸ்தரித்துச்சொனனோம், கண்டுகொள்க.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

(முன்சொன்ன முறைமையிற் புறம்பே பார்க்குபசிற்சத்தியைப்பொருந்தி நிர்விகற்பமாய்ப்பார்க்கும் வித்யாதத்வத்திற்பின்கோத்த விராகமுதற் புத்திதத்வ முடிவாகிய தத்வங்களினால் முன்சொன்ன முறைமையில்வரும் இதுமாலை இதுசந்தனம் இவள்வனிதை இதுபாம்பு இதுமுள்ளு இதுவிஷம் இதுசிங்காதமென்று புத்தி நிச்சயபுத்தி ப்ரதிவிம்பங்களினாற் புத்திதத்வத்துதிக்கும்.)

அருந்தின்பதுன்பம் - போக்கியமாகிய சுகதுக்கமோகங்களை,—

இராகமாதி - திரும்ப வுள்நிர்விகற்பமாய்ப் பார்க்கும் வித்யாதத்வத்திற்பினகோத்த விராகதத்வமுதற் புத்திதத்வ ஸ்வப்பிரகாசமந்தமாகிய தத்வங்கள்,—

உள்ளதறிவினுக்கு-ஆன்மாவின தெதிர்முகசிற்சத்திக்கு,—

தரும் - கொடுக்கும், (திரும்பத்தனனோடு பிரித்த தர்சிதாகிய சுகமுதலியவற்றைத் தனது சுகாதிவேதனாபூர்த்திசருதி போகத்தோ டெதிர்முகசிற்சத்தி முனசொல்லியபடிக்குத் திரும்பியமுகசிற்சத்திக்குக் கொடுக்குமது முனசொல்லியபடி யநுபவிக்கு மதத வநுபவம்),—

தன்வேதனைபாங்காட்சி-ஸ்வசம்வேதனாப்ரத்தியக்ஷம்,—

பலவிதமாயிருக்கின்ற சுத்தாவத்தைகளைசசுருக்கிக் கீழாலவத்தைமுத லவத்தைகளிற் சாக்ராவத்தைமுதலிந்தகளையுந் தனது சாக்ரமுதலிந்தவத்தைகளினால் ஜயம்பண்ணும் சுத்தாவத்தையிற் சாக்ரமாவது—ஆசநப்ராணாயாமங்களைப்பண்ணி யிந்திரியங்களைச் சத்தாதிவிஷயங்களினின்றுந் திரும்பித் தன்வசமாய் நிறுத்தலாகிய ப்ரத்யாகாரம்.

ஸ்வப்நமாவது.—சாலம்ப சிவயோகத்திற் ஸ்வரூப சிவரூப சகள சகளாகள சாகாரசிவனிடத்தில் ப்ராகருதமனத்தைவைத்து நிறுத்தலாகிய தாரணை, திரும்ப நிராலம்ப சிவயோகத்திற் ஸ்வரூப சிவரூப நிஷ்கள நிஷ்களாதீத நிராதார நிராகாரசிவனிடத்தில் முறைமையிற் ப்ராகிருதமனதை நிர்விஷயமாய் ஜ்வலிதமாயிருக்கும்படிபண்ணித் தியானத்தினடுத்தப்புக்குள்ளாம்போய்த் தாக்குஞ் சிவசத்தியாகிய மன சினால விளங்கிய தனதுசிற்சத்தியாகிய மனதைச் சின்மாத்ரானமாவில்வைத்து சிவசத்திக்கொப்ப விரித்துத் தேடசிவத்தில் வைத்தலாகிய தாரணையுஞ் சுழுத்திகுள்ளாந் தாக்குஞ் ஸ்வப்நமாம்.

சுழுத்திபாவது:—சவிகற்பமாயு நிர்விகற்பமாயு மந்தநால் வகை ஸ்வரூப சிவரூப விருசிவனகளை முறைமையிற் சிந்தனைபாவனைபண்ணுவதாகிய வங்கசிவயோகமெனகின்ற தியானம்.

துரியமாவது:—தியானதசை வருதலாகிய வங்கசிவயோகமென்கின்ற சமாதி.

துரியாதீதமாவது— சமாதிசாமர்த்தியத்தினால் முறைமையிற் சவிகற்பமாயு முன னற்ப சவிகற்ப நிர்விகற்பமாயு மந்த நால்வகை ஸவரூப சிவரூப சிவபரத்தியக்ஷமாகுஞ் ஸ்வரூப சிவரூப சிவாபரோக்ஷமெனகின்ற ஸ்வரூப சிவரூப சிவசாக்ஷாத்காரமாகிய வங்கிசிவபோகம்.

இப்படி சிவயோகமுறைமைசுருக்கியிருத்தலால்,—

சமாதியால் மலங்கள்வாட்டி - சமாதிசாமர்த்தியத்தினால் மலமாயாகனம சாமர்த்தியங்களைத் தடுத்து,—

பொருந்திய தேசகால வியல்பகல் பொருள்களெல்லாம் - தானிராகின்றவிடம் தானிராநிற்குங் காலம் இநததேசகாலங்களினது முறைமையை நீங்கியு நீங்காமலு மிருக்கின்ற சிவமுதல் நித்தியபதார்த்தமுதற் பதார்த்தங்களையெல்லாம்,—

இருந்து -தானிருந்தவோரிடத்திருந்து,—

உணர்கின்ற ஞானம்-சாலம்ப நிராலம்ப சிவயோக முறைமையிற் சவிகற்பமாயு முள்ளற்பசவிகற்ப நிர்விகற்பமாயுஞ் சாக்ஷாத்காரியாநின்ற சாக்ஷாத்காரம்,—

யோகநற் காண்டலாமே - யோகக்காட்சியென்கின்ற போகப்பிரத்தியக்ஷமாமே; அந்த விந்தசுவசங்வேத்யமாம் பராநுபூதி டரியாய பரசங்வேதனாகார சிவரூப சிவாநுபூதி விசேஷநுகமாகிய சுவத்தை விஷயீகரித்துவருஞ்சுவசங்வேதரூப ஸ்வரூப சிவாநுபூதி ஸ்வாநுபூதி ப்ரத்தியக்ஷமுமாமே.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

எ-து. அம்மானதக்காட்சி விசேடம்பற்றி மேம்பட்டு நிகழுஞ் சத்துவருணமுதலியவற்றின் விளக்கமாகிய இன்பதுன்பங்கள் புருடனதறிவிறகு விடயமாம்படி அராகமுதலியவைத் தத்துவங்களானும் புணர்க்கப்படுமதனை உயிரினோடுணாவு தெரிவது தன்வேதனைக்காட்சியெனப்படும்; இவவாறன்றி அறிவைத் தடைசெய்து நின்ற மலசத்திகளை இயமநியமமுதலிய அட்டாங்கயோகசமாதியான ஒருவாறுகெடுதது ஒரிடத்தொருகாலத இருந்தாங்கிருந்து மூவிடத்து முக்காலததுப் பொருள்களையுங் காண்கின்ற காட்சியாய் உயிரினோடுணர்வு தெரிவது யோகக்காட்சியெனப்படுமெனபதாம்.

இவையிரண்டு செய்யுளானும் மேலெடுத்துக்கொண்ட நால்வகைக் காட்சிகளதியல்பு கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன்சொன்ன ப்ரத்தியக்ஷப்பிரமாண நாலில் வாயில்காட்சியு மானதக்காட்சியு மருளிச்செய்து மேல் தன்வேதனைக் காட்சியும் யோகக்காட்சியு மருளிச்செய்கிறூர்.

அருந்தின்பத் துன்பமுள்ளத் தறிவினுக் கராகமாதி தருந தனவேதனையாங்காட்சி - புசிக்கத்தக்க விதாவகிதங்களை யானமாவினுடைய ஞானத்துக் கிராகத்வேஷாதிகளாலே யுண்டாக்கிறவிது விவனுடைய வேதனுப்பிரத்தியக்ஷம்,—சமாதியால் மலங்கள்வாட்டிப் பொருந்திய தேசகால வியல்பகல்

பொருள்களெல்லா மிருந்தணர் கின்றஞானம யோகக்காட்சி கண்டைலாமே - சமாதியாலே யசைவறவிருந்து அந்தச்சமாதியினாலே மலமாயாதிகனமங்களைக் கீழ்ப்படுத்தித் தானபொருந்தப்பட்ட தேசங்களிலுள்ள வியல்புகளுந் தான்பொருந்தப்பட்ட காலங்களிலுள்ள வியல்புகளுந் தான்பொருந்தியிருக்கப்படாத மற்றுமுள்ள விராஜ்யங்களிலுள்ள வியல்புகளுந் திரிகாலங்களிலுள்ள பொருள்களெல்லாத்தையுந் தானிருந்த விடத்திலே யிருந்தறியத்தக்கவறிவு நன்றானயோகப்பிரத்தியக்ஷம

இதனாற்சொல்லியது தன்வேதனைக்காட்சியு மியோகக்காட்சியு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(அம்மானதக்காட்சி விசேடம்பற்றி மேற்பட்டு நிகழும் சததுவஜணமுதலியவற்றின விளக்கமாகிய) அருந்தின்பதது னபம் - நுகரப்படு மின்பத்துன பங்கள்,—உள்ளதறிவினுக்கு - புருடன தறிவிற்கு விடயமாம்படி,—அராகமாதிதரும் - அராக முதலிய வைசுதுததததுவங்களாலும் புணர்க்கப்படுவதனை யுயிரிறேனுணர்வுதெரிவது,—தனவேதனைக் காட்சியாம் - தன வேதனைககாட்சியெனப்படும்;—மலங்கள் - இவ்வாறினறி யறிவைதடைசெய்து நின்றமலசத்திகளை,—சமாதியான்வாட்டி - இயம நியமமுதலிய வட்டாங்கயோக சமாதியாறெருவாறு கெடுதது,—இருகது - ஓரிடத்தொருகாலத் திருந்தாங்கிருந்து,—பொருந்திய - பொருந்தப்பட்ட,— தேசகால வியல்பகல் பொருள்கள் எல்லாம் - மூவிடத்து முக்காலத்து மியல்பாகவிரிந்து

பொருள்கள் எல்லாவற்றையும்,—உணர்கின்றஞானம் - காண்கின்ற காட்சியா யுயிரிஞேடுணர்வுதெரிவது,—நல்யோகக் காண லாமே - நன்மையாகியயோகக்காட்சி யெனபதாம்.

இதனுனே தன்வேதனைக்காட்சி யோகக்காட்சிகளி னியல்புகூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.

மேலனுமானமுணர்த்துவானருெடங்கிப்பக்கமூனறெனவு மியல்புமுதலிய வேதுமூன்றினையுந் தெகுத்துப் பொருநத வநுமானந் தன்னநுமானம் பிறரநுமானமாக விரண்டினையும் வகுத்து, அந்வயவெதிரேகமிருவிதமெனபதனையுந தொகுததுணர்த்துகிருர்.

பக்கமூன்றின் மூன்றேது வுடையபொருளைப் பார்த்துணரத், தக்கஞானந் தன்பொருட்டாம் பிறர் தம்பொருட்டா மநுமானந், தொககவிவற்முற பிறர் தெளியச் சொல்லலாகு மச்சொல்லு, மிக்கவந்து வயத்திஞெடு வெதிரேகச்சொ லெனவிரண்டாம். (அ)

| | |
|---|---|
| (இ-ள்.) பக்கமூனறு | பக்கம் சபக்கம் விபக்கம் எனப்பக்கமூனரும் |
| மூன்றேது | இயல்பேது காரியவேது அநுபலத்தியேதுவென வேது மூனரும் |
| உடையபொருளைப் பார்த்துணரத் தக்கஞானம் | இங்ஙனங்கூறியபக்கங்களோடேதுக்களானுமதற்கேற்றப் பொருள்களுடனகூடத் தானே வியாத்தியைக் கிரகித்தறிகிற தநுமானம் இருவிதப்படும் |

தன்பொருட்டாம் பிறர்தம்பொருட்டா மநுமானந் தொக்கிவற்றுற் பிறர்தெளியச் சொல்லலாகும்

அநுமானந் தன்னாலறிந் தறியப்படுவதெனவும், பிறராலறிந் தறியப்படுவதெனவும் இருவிதமாம்

சுவார்த்தாநுமானமாவது—சுவர்த்தஞ் சுவப்பிரதிபத்தியேதுவானையாலிது பரோபதேசமன்றி முன்பு தான புகை கண்டவிடத்திலே யனலைக்கண்டு பின்பு தானேயாதாமோரிடத்திலே புகையுங் டவ்விடத்திலே யனலுமுண்டென்று வியாத்தியைக் கிரகித்தறியு மறிவு தன்னநுமானம். இஃதன்றித் தானே சிவனுண்டென் றறுதியிட் டறிகிறதுமாம்.

முற்கூறிய பக்ஷம், ஏதுக்களினாலும் பிறரறியும்படி யறிவிக்கு மறிவு பரார்த்தநுமானம். இஃதன்றிக் குரவன் மாணாகனுக்குச் சிவனு மான்மாவும் பாசமுமுண்டென் றறிவிக்கு மறிவுமாம்.

அச்சொல்லு மிக்கவந்நுவய த்திரேகவெதிரேகசொ லெனவிரண்டாம்.

அச்சொல்லு மிகுக்க வந்வயச்சொல்லெனவும் வெதிரேகசசொல்லெனவு மிருவகையாம்—எ-று.

மூன்றுபக்கமும் எ-து. மூன்றும் பரார்த்தாநுமானத்துக்கு வேண்டுகையாற் றெக்கவிவற்றாலெனச் சிறப்பித்தார் அநவயவெதிரேகிக்குப் பஞ்சரூபமுடைத்தாதலின 'மிக்க வந்வயம்' எனச் சிறப்பித்தாரெனவறிக. (அ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

முன்னஞ் ஸ்வார்த்தாநுமாநம் பரார்த்தாநுமாநமென் றுத்தேசங்கூறி யதற்குமே விலக்ஷணங் கூறுகின்றது.

பக்கமூன்றின் - பக்ஷ சபக்ஷ விபக்ஷ மென்னுமூன்றிலே,— மூன்றேது வுடையபொருளைப் பார்த்துணரத் தக்கஞானம் - இயல்பு காரியம் அநுபலப்தி என்னுமேதுத் * த்ரயங்களினு ¶ லேதுமத்தாகிய சாதத்தியங்களைத்ருடவியாப்திகளினாலே நிச்சயிக்கு மநுமிதிஞானம்,— தன்பொருட்டாம் பிறர்பொருட்டா மநுமானம் - † ஸ்வார்த்தாநுமாநமெனவும் ‡ பரார்த்தாநுமாநமென்று மிருவகையாம், ஸ்வார்த்தாநுமாநவாவது பரோபதேசமின்றி முன்புதான் புகையைக்கண்டவிடத்திலே அனலைக்கண்டு, பின்புதானே யாதாமோரிடத்திலே புகையுண்டவவிடத்திலே யனலுமுண்டென்று வியாத்தியை க்ரஹித்தறியு மறிவு. ஸ்வார்த்தாநுமாநமென்னும் தன்பொருட்டநுமாநம் - இஃதன்றித்தானே சிவனுண்டென் றறுதியிட்டறிகிறதுமாம். முற்கூறிய பக்ஷத்துள் பரார்த்தாநுமாநம்என்பது இவைகளினாலே பிறரறியும்படி யறிவிக்குமறிவு பரார்த்தாநுமாநம் என்னும் பிறர்பொருட்டநுமாநம்; இஃதன்றிக் குரவன் மாணாக்கனுக்கு சிவனும் ஆன்மாவும் பாசமு முண்டென்று அறிவிக்கு மறிவுமாம்,— தொக்கவிவர்முற் பிறர்தெளியச் சொல்லலாகும் - பஞ்சாவயவ § யுக்தவாக்யரூபமா யிருக்கிற வநுமானத்தினு லந்யருக்குத்தெரியும்படி சொல்லலாம்,—அச்சொல்லு மிக்க + வந்வயத்தினொடு வெதிரேகச்சொல்லெனவிரண்டாம்-அந்தப்பஞ்சாவயவவாக்கியமானது அன்வயவ்யதிரேகி கேவலவ்யதிரேகியென்னு மேதுவாம்.

*த்ரயம்-மூன்று, ¶ஏதுமத்தாகிய-ஏதுகூடிய, † ஸ்வார்த்தம் - தன்பொருட்டு, ‡ பரார்த்தம்-பிறர்பொருட்டு, § யுக்தம் - கூடிய, + அந்றுவயத்தினொடு வெதிரேகச் சொல்லெனவிரண்டாம் - அந்வயமென்று மேதிரேகமென்று மிரண்டுவிதமாம்.

மூன்றுபக்கமும் பகார்த்தாநுமாநத்திற்கு வேண்டுமையால் "தொக்கவிவற்றுல்" எனச்சிறப்பித்தார்.

அந்வயவெதிரேகிக்கும் பஞ்சரூபமுடைத்தாதலின் "மிக்கவந்றுவயம்" எனச்சிறப்பித்தார் எனவறிக.

அந்வயம் - பொருத்தமுள்ளது, வெதிரேகம் - பொருந்தாது. இவை மேல்விரிதுக்கூறுமிடத்தறிக.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

அநுமானப் பகுப்புணர்த்துகின்றார்.

பக்கமூன்றின - பக்ஷம் சபக்ஷம் விபக்ஷமென்கின்ற மூன்றினுள் மலை யுலகுமுதலிய பக்ஷத்தின்,—உடையபொருளை - அந்த பக்ஷத்தினது சாத்தியதனமமாகச் சாதிக்கப்படு மக்நிகாத்தா முதலிய பகார்தநங்களை,—பார்த்துணர - ஊகித்தறிய,—மூன்றேது -இயல்பேது காரியவேது அநுபலத்தியேது வெனக காரணவேது கணமவேது வாகமவேது முதலியவேதுபேதங்களையுந் தோற்றுவிக்கு மேதுமூன்று, தன்பொருட்டநுமாநம் பிறர்பொருட்டநு மாநமென வநுமாநமிருவிதமாதலால்,—தக்கஞானம் - சொல்லிய மூன்றேதுவினது தகமைபொருந்திய தனதுசிற்சத்தி,—தன்பொருட்டாம் - தன்பொருட்டநுமாநம்,—பிறர்பொருட்டாம்- பிறர்பொருட்டநுமாநம்,—தொக்கவிவற்றுல் - மூன்றுபக்கத்தோடுகூடின மரியாதிபெற்று

ந்திய முன்சொன்ன மூன்றேதுக்களால்,—பிறர்தெளிய - பிற ரது சிற்சத்தியநுமானகம் ப்ரகாசித்துப் பிறர்மறைத்த வகங் யீஸ்வரன்முதலிய பொருள்களையறிய,—சொல்லலாகும் - ப்ரி திஞ்ஞை யேது திருஷ்டாந்தம் முபநயம் நிகமநமெனனும் பஞ் சாங்கத்தைப் படித்தலாகும்.—அச்சொல்லும் - அந்தபபட்ஙு மும்,—மிககவந்று வயததிறெனுடு வெதிரேகச்சொல் லெனவிர ணடாம் - மிக்கவங்வயச்சொல் சாதந சாத்தியங்களினது மேனமையாகிய வுள்ளமையைச் செப்புதல், வெதிரேகசசொல் மாறியில்லாமையைச சொல்லுதல்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

எ-து இயல்பு முதலிய மூன்றனுள் ஒரோதுவுடைய சாத்தி யத்தைப்பக்கமுதலிய மூன்றின் வைத்து அவினுபாவம்பற்றி ஆ ராய்தற்குரிய ஞானமாய் உயிரினேடுணர்வு தெரிவது தனபொ ருட்டநுமானமாம்·அவ்வேதுக்களானே தானறிந்ததனைப் பிறர றியப்போதித்தலையுயிரினேடுணர்வு தெரிவது பிறர்பொருட்டநு மானமாம். அங்ஙனம் பிறரறியப் போதிக்குஞ் சொல்லும் உட ம்பாடு மறையென்று இருவகைப்படுமென்பதாம்.

இதனுனே மேலெடுததுக்கொண்ட இருவகையநுமானங் களியல்பு கூறப்பட்டது·

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

முன்சொன்ன ப்ரத்தியக்ஷப்பிரமாணமானது ஐயக்காட் சி திரிவுகாட்சி விகற்பக்காட்சி நிர்விகற்பக்காட்சி வாயிற்கா

ட்சி மானதக்காட்சி தன்வேதனைக்காட்சி யோகக்காட்சி ஆக எட்டாயிருக்குமென்றுசொல்லி; மேலநுமானமாவது ஏதுக்களைக்கொண்டு மறைந்தபொருளை யறியலாமென்றது எப்படியென்னை? அநுமானத்தை விரித்தருளிச் செய்கிறார்.

பக்கமூன்றின் மூன்றேது வுடையபொருளைப் பார்த்துணரத் தக்கஞானந் தன்பொருட்டாம் - பக்கமூன்றுமூன்றேதுக்களை யுடைத்தாயிருக்கப்பட்ட பொருள்களை யாராய்க்தறிபத்தக்க வறிவு சுவார்த்தாநுமானம்,—பிறர்பொருட்டா மநுமானந் தொக்கவிவற்றாற் பிறர்தெளியச் சொல்லாகும் - கூட்டப்பட்ட பக்கமூன்றும் மேதுமூன்றும் பிறர்க்கு மறியும்படி யறிவிக்கத் தக்கது பரார்த்தாநுமானமாம்,—அச்சொல்லு மிக்கவந்நுவயத்தினொடு வெதிரேகச்சொல் லெனவிரண்டாம் -அந்தப்பரார்த்தாநுமானமென்று சொல்லப்பட்ட சொல்லானது மிகுந்த வந்நுவயச்சொல்லென்று மதனோடுகூட வெதிரேகச்சொல் லென்று மிரண்டுவகையாம்.

இதனாற் சொல்லியது தன்பொருட்டா மநுமானமென்று சொன்ன விரண்டினமுறைமையும் பிறர்பொருட்டாமநுமானத்தான அந்நுவயமென்றும் வெதிரேகமென்று மிரண்டுவகையாயிருக்குமென்னு முறைமையை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

மூன்றேது வுடையபொருளை - இயல்புமுதலிய மூன்றனுள் ஓரேதுவுடைய சாத்தியத்தை,—பக்கமூன்றின் - பக்கமுதலிய மூன்றின்வைத்து,—பார்த்துணரத் தக்கஞானம் - அவிநாபாவம்பற்றி யாராய்தற்குறிய ஞானமா யுயிரினோடொர்வுறிய

தனக்கு வருந்தோல்வியைப் பிறிதொன்றுபேசி மறைத்தலும்

படடுபடாதன பேசுதலும்

பொருள் இனிது விளங்காத சொற்களை யெடுத்துக்கொண்டுபேசுதலும்

அவாய்நிலை தகுதி பக்கமையில்லனவாய்ப் பேசுதலும

மேற்கோண்முதலிய வைநதினையும் முறைபிறழப் பேசுதலும

அவற்றுட் சிலகுறையப் பேசுதலும்

ஒன்றற்குப் பல கூறுதலும்

சொல்லை இரட்டித்துச் சொல்லுதலும்

பொருளையிரட்டித்துச் சொல்லுதலும்

பிறன்கூறிய பொருளை அநுவதிக்கமாட்டாமையும்

பிறன்கூறியபொருளை யறிந்தும் அறியான்போன்று விளுதலும

விடைசொல்லத் தெரியாது வேறொரு கருத்துடையன் போன்றிருத்தலும்

வாதத்தை விட்டுப் பிறிதொன்றனைச் சொல்லிப் பொழுதுபோக்கலும்

சுபக்கத்துக்குச் சொல்லிய குற்றத்தைப் பரிகரியா துடம்பட்டுப் பரபக்கத்துக்குக் குற்றம்பேசுதலும்

தோல்வித்தானமெய்தியோனைத் தோல்வித்தானமெய்திலனென றறிந்துகூறுதிருத்தலும்

தோல்வித்தானமெய்தாதானை எய்தினனென்று கூறுதலும்

தன சித்தாசுததிற் இணங்காதவற்றைச் சொல்லிச சித்
தாந்தஞ் சாதிததலு
மெனவிவை

இகைனம் நான்கும், இருபததொனறும், பதினெட்டும்
இருபததிரண்டுமாகிய அறுபததைநதும்; அனுமான வளவைக
குக குற்றஙகளா மெனபதாம.

.........

இவை குற்றமாகலின ஆகமவளவைககு முன்னுக வையா
து இறுதிககன வைத்தார். இவற்றிற்குதாரணம உயததுணாங்
துகொளக. ஈண்டு விரிபபிற் பெருகும்.

இனனும் இப்பக்கவேது வுவமைகளை எடுத்துச் சொல்லும்
வழிப் படுஞ சொற்குற்றங்களெல்லாந் தோல்வித்தானததுள
டஙகும.

ஈண்டுக்கூறும் பக்கப்போலி உவமைப்போலிகளெல்லாம்
ஏதுப்போலியுளடங்குமெனத் தார்ககிகா கூறுவா. பககவுவ
மைகளி னிலக்கணததை நோக்கிக் காணும்வழி, அவை பககப்
போலி யுவமைப்போலியெனப படுவனவன்றி ஏதுப்போலியெ
னப் படாமையறிக.

இதனுனே அநுமானப் பிரயோகத்தின கட்படுங் குற்றங்
களிவையெனபது தெரிததுக் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

'காண்டல் வாயில்'என்ற திருவிருத்தத்துச்கு 'அளுதியே
யமலனுய்' என்ற திருவிருத்தமளவும் வியாககியானம் வநது

மூடிக்கது. மேலித்தப் பிரமாணங்களுக்குத் தொகை யருளிச் செய்கிறார்.

ஈண்டு பக்கப்போலி நானகு - இவ்விடத்துப் பட்சம் நாலாயிருக்கும்.

அவையாவன —

பிரத்தியட்சாபாச மென்றது - அநுஷ்ணோயம் அக்நிதியனுமானம, ஸஹா பிரத்தியட்சாபாசம.

அனுமானபாசம .. அனித்திய சத்தம் சாக்ஷுஷத்துவாது, இதிய மனுமானுது

ஸ்வனுமா நாபாசம் பிரத்தியாபாசம் .. சுத்திகையிலே ரசிதமிதிஞானம, ஸஹா பரத்தியாபாசம.

வசனுபாசம . பராம்மணேன சுராபேடா திரவத் திரவியாத வாது க்ஷீரவது இதி யநுமானம, இது வசனுபாசம.

ஆ. ச

எதுப்போலி யொருமூன்றுய் வேறுடு மெழுமூன்ருக - ஏதுவாபாச மூன்று பிரகாரமா யிருபதொன்ரும.

அவையாவன —

அசித்தம . அநிஸசித டட்சவிருத்தி

அனேகாந்திகம .. பட்சத்திரய விருத்தி

விருத்தம் . பட்ச விபட்ச விருத்தி.

யென்று மூன்ரும் —

அசித்தபேதம்-கஉ

அனேகாந்திகம-எ,

விருத்தபேதம-உ.

ஆக இம்மூன்றுபேதமும் இருபத்தொன்று —

விளங்குவமைபோலி யீரொன்பான் காண்டும் - விளங்
கத்தகக திருட்டாந் தாபாசம்-௪௮-ஆகக கரணப்படும.

அவையாவன —

சாதநிய விகலாதி டதினெட்டுமாம்.—

தோல்விதான மிரண்டிருபத திரண்டாம் - நிக்கிரகத்
தான மிரணடுவகையா யிருபததிரணடாம.

அவையாவன ?—

பிரதிஞ்ஞா ஹாநி முதலான-௧௨,

அனனுபாஷண முதலான-௮,

ஆக இருபததிரண்டாம்.

இதுக குவமை,

பரதிஞ்ஞாஹாநி சுதரா வுன்டெனன வேறே யொருவ
னில்லை யென்று சாதிக்க வுடனபடுதல். க

பிரதிஞ்ஞாநதரம ஒருபிரதிஞ்ஞையைப்பண்ணிஅதனைச்
சாதியாமல் வேறேயொனறைப பிரதிஞ்ஞை பண்ணுதல். உ

பிரதிஞ்ஞா விரோதம ..தான சொனன பிரதிஞ்ஞைக்கு ஏது
சஞ்சகுத தானே விரோத முரைததல். ௩

பிரதிஞ்ஞா சநநியாசம .. ஒன்றை பிரதிஞ்ஞைபண்ணி
அதனை வாதியானவன தூடணமடன்னி யுளளவளவில் ஆரசொ
னனது ஒனனை ௪

ஏதநுவாந்தரம் . . வேதம் நித்தியமென்று சொல்லி யுதி
சகைக்கு ஏதுககாட்டி அதற்குத் தூஷணம்வர வேறே ஒன
றை ஏதுவாககொள்ளல். ௫

அத்தாந்தரம் வாதியானவன் தனக்குத் தோல்விவர ஏது வென்ற சத்தத்துக்குப் பொருளேசென்று வினவிக் கேட்டவை தனனை மறைத்தல். சு

நிரத்தகம் ... அத்தமல்லாத வசனங்களைப் பேசல். எ

அவிஞ்ஞாதார்த்தம்...வாதியானவன தனக்குவந்த தூஷணமறைத்தற்காக தெரியாதசத்தங்களைக் கொண்டு பேசல். அ

அபாரத்தகம்...பூர்வபாஷை சம்பந்தமின்றி யிருச்கின்ற வசனங்களைப் பேசுதல். கூ

அப்பிராத்தகாலம் ... பஞ்சாவயவங்களை யடைவொழித்து மாறிப்பிரயோகித்தல். க0

நியூனம் ... பஞ்சாவயவங்களைக் குறையப் பிரயோகித்தல். கக

அதிகம் ... ஏது உதாரணங்களைப் பலவாகப் பிரயோகித்தல். கஉ

புனருத்தகம் ...சொன்னபொருளை மீண்டுஞ்சொல்லுதல். அத்தப் புனருத்திகம், சத்தம தொனி கேடின்றியிருக்குமென திரட்டித்துச் சொல்லுதலுமாம். கங

அந்து பாஷனம் ... வாதியானவன் சொன்ன பொருளையறிந் தனுமதியாதிருத்தல். கச

அஞ்ஞானம்...ஒன்று மறியாதிருத்தல். க

அப்பிரிதிபை ... உத்தரஞ்சொல்லாமல் திகைத்தல். உ

விட்சேபம்...ஒன்றைச் சொல்லுவதாகத் தொடங்கி வேறேயொரு வியாசத்தையிட்டுச் சொல்லாமலிருத்தல். ங

மதானுஞ்ஞை...தன்னுடைய மதத்துக்குவருந் தூஷணம் பரிகரியாமல் பிரமதமெடுத்துத் தூஷிக்கை. ப

பரியனுயோச்சியா பேட்சணம்...நிக்கிரகத்தான பிராந்தி யினையறிந்து நிக்கிரஹியாமிருத்தல். ரு

நிரனுயோச்சியானுபேக்ஷம் ... நிக்கிரகத்தான பிராந்தனு காதவனை நிக்கிரகித்தல். சு

அபசித்தாந்தம் ..சித்தாந்தஞ் சொல்லத் தொடங்கி வேறேயொன்றைச் சொல்லுதல். எ

* எத்துவாபாசன - உதாரணம். விடுபட்டிருப்பதை மறைஞானதேசிகருரையிற் காண்க. அ

ஆ உஉ.—

கருதலிவை யாண்டுமொழிவா ரவையெல்லா மளக்கிலறு பத்தைக தாகும்—பிரமாணத்தைக் கொண்டு பிரமேயத்தை யறியுங் காலத்தி லப்படியே யனுபவித்துச் சொல்லுவார்கள், அவையிறறையெல்லா மறியுங்காலத்து அறுபத்தைந்து பிரகாரமாம். இந்த வறுபத்தைந்து குற்றமும வாராமல் பிரயோகிப்பது எ-று.

இதனாற் சொல்லியது பக்கப்போலி
பிரத்தி யட்சாபாசமென்றும்
அநுமாநு பாசமென்றும்
பிரத்தியாபாசமென்றும
வசனுபாசமென்றும்

ஆக நாலென்றும,

ஏதுபக்க மூன்றுயிருக்குமென்றும், அவை
அசித்தம்
அனேகாந்திகம்
விருத்தம்

ஆ -மூன்றுக்கு வகை

அசித்தபேதம் - ௧௨
அநைகாந்திகம் - எ
விருத்தம் - ௨
ஆ உக - என்றார்,

இதில்திட்டாந்தாபாசம் சாத்தியாகலாதி முதல் பதினெட்டுப்பேதமென்றும்;

சொலவிதத்தானமென்றது, இரண்டு வகையான பிரதிஞ்ஞா ஹானிமுதற்-௨௨.

அனனுபாஷணமுதல்-அ
ஆ உஉ - என்றும்,

பிரமாணத்தைக் கொண்டு பிரமேயத்தை யறியுமிடத்து இவையெல்லாவற்றையும் பெரியோர்கள் அநுபவித்து அவை ப்பிரமாணமாக - கூறு என்பொன்று முறைமையும் அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——0——

மேற்கூறிப்போந்தவனுமானசாமக்கிரிகளுள்,—நான்கு-க்க ப்போலி - துணிபொருட் கிடனுதலாகிய பக்கலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும் ஒருபுடை யொத்துப் பக்கப்போல்தோன்றுவதாகிய பக்கப்போலி,—நான்கு -நான்குவகைப்படும்,—ஏதுப்போலி - சாத்தியப்பொருளோடு வியாத்தியுடையத்தாய் பக்கத்திலிருத்தலாகிய வேதுவிலக்கணத்திற் குறைபாடுடைத் தொரு புடையொத்து ஏதுப்போலத் தோன்றுவதாகிய வேது

ப்போலி,—ஒருமூன்ருய் - ஒருமூவகைப்பட்டு,—வேண்டுமெழு மூன்ருகும் - விரிபா லிருபத்தொன்ருகும்.—விளங்குவமைப் போலி - இனி வியாத்தி நிச்சயித்தற் கிடனுதலாகிய உவமை யிலக்கணமின்றியு முவமைபோலத் தோன்றுவதாகிய விளங்கு வமைப்போலி,—ஈரொன்பானகாண்டும் - அன்னுவயம்பற்றியு ம எதிரேகம்பற்றியு ம இருவகைப்பட்டு, விரியா லொரோ வொ ன் ருன்பதாய்ப் பதினெட்டுவகைப்படும், — தோல்வித்தா னம - இனித் தருக்கவாதத்தினகட் பேசத்தெரியாமையாகிய தோல்வித்தானம,—இரண்டிருபத்திரண்டாம் - மயங்கப் பே சுதலும வாளாவிருத்தலுமென இருவகைப்பட்டு, விரியா லிருப த்திரண்டாம — அவையெல்லா மளக்கில் - அவைகளை யளவி டுமிடத்து,— அறுபத்தைந்தாகும - இங்ஙன நான்கு மிருபத் தொன்றும பதினெட்டு மிருபத்திரண்டுமாகிய அறுபத்தைந்தா ம,—இவைகருதில - இவைகளை விசாரிக்கின்,—பான்மொழி வா - அனுமானவளவைகட் கெவ்விடத்துங் குற்றங்களாமென் ருெழி -லனபதாம்.

இதனுனே யனுமானப்பிரயோகத்தினகட் படுங் குற்றங் களியையென்பது தெரிந்துக கூறப்பட்டது.

அளவை-கச.

பாயிரமுட்பட செய்யுள்-உ0.

"ஈரேழுமளவையாகும்"

என்னும் அளவை பதினுலும் முற்றிற்று.

உ

சிவமயம்.

# சிவஞானசித்தியார் சுபக்ஷம்

## மறைஞானதேசிகர் உரை.



## க—சூத்திரம். பதியிலக்கணம்.

*மேலிச்சூத்திர மென்னுதலிற்றோவெனின்? அளவை*
*யை யுணர்த்தி, அதனா லநுமிக்கப்படும் பதி*
*யிலக்கண முணர்த்துத லுதலிற்று*

*அச்சூத்திரத் திலக்கண மியாதோவெனின்? "அவற்றுள், சூத்திரந்தானே யாடிநிழலி னறியத்தோன்றி, நாடுதலின்றிப் பொருணனிவிளங்க, யாப்பினுட்டோன்ற யாத்தமைப்பதுவே" என்றார் தொல்காப்பியனார்.*

*மேலித்தலைவிருத்த மென்னுதலிற்றோ வெனின்? இப்பிரபஞ்சத்துக் கொரு கர்த்தாவுண்டென்றும், அந்தக்கர்த்தா சங்காரகர்த்தாவென் றுணர்த்துதனுதலிற்று.*

ஒருவனோ டொருத்தியொன்றென் றுரைத்தி
டு முலகமெல்லாம், வருமுறை வந்துநின்று போவது
மாதலாலே, தருபவ னொருவன்வேண்டுந் தானமு
தலீறுமாகி, மருவிடு மநாதிமுத்த சித்துரு மன்னிநி
ன்றே. (க)

(இ-ள்.) ஒருவ ஒருவனோ டொருத்தியாகிய வுயர்திணையு
னோடொ ம், ஒன்றென்று சொல்லப்பட்டநின்ற அஃறிணை

ருதநி யொன்றெ னறுனாகநிமு லக மெல்லாம — யுமாய், சொல்லிய பிரபஞ்சமெல்லாம்

வருமுறை வந்து நின்று போவ துமாதலாலே — உபாதானத்தினின்று தோன்றுமுறைமையி லே தோன்றி, நிற்குமுறைமையிலே நின்று, ஒடுங்கு முறைமையிலே யொடுங்கி வருகையி னாலே, தோன்றியு மொடுங்கியு மிப்படிக் கா ணப்படுகையினாலே

கருபவ னொரு வன வேண்டும — இவையிற்றைத் தோற்றி நிறுத்தி யொ டுக்குவித்துங் காரிபப்படுத்துகையா லொரு கர்த்தாவைக் கருதவேணடும்.

தான்முதலீ றுமாகி மருவிடு மநாதிமுத்த சித்துரு மன்னிநின்றே — அனமாக்களைப்போல வாதிமுத்தனன்றி யநாதிமுத்தனுமாய், ஞானமே தனக்கு வடி வாய், நிலைபெற்று நிறகு மந்தக்கர்த்தா தா னே, சிருஷ்டி திதி சங்காரங்கட்கு முரியனு ய் நிற்பன. எ - று

"ஒருமொழியொழி தன விளங்குகொளற்குரித்தே" என வே, திதியுங் கூறிபதாயிற்று.

உமமை யிறுதிகசணின்று விளக்கின வெண்ணும்மை.

ஏகாரம் ஈற்றசை.

அநாதிமுத்தன் எழுவாய், மருவிடும் பயனிலை.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம் - க - சூ - ம், எ னவறிக

இதனை யநுமித்தறியுமிடத்துக் கேவலாந்வயி யநுமானத் தா லறிக.

அஃதாவது? இப்பிரபஞ்சத்துக்குக் கர்த்தா வுண்டென பது - பிரதிஞ்ஞை.

அதற்கேது யாதெனின்? ஒருவனொடொருத்தி யொன் றென றவயவப்பட்டிருததலா லெனபது - ஏது.

அஃதெனபோலவெனனின்? கடாதி காரியத்துக்குக் கு லாலனைப்போலெனகை - திருட்டாந்தம்.

இக்கடாதி காரிபத்துக்குக் குலாலனாைனென மதித்தாற் போல, ஒருவனொடொருததியெனனுங் காரியத்துக் கொருகர் ததா வுணடெனமதிக்கை - உபநயம்.

முன்சொன்ன திருட்டாநதத்துச் கிந்தத் திருட்டாந்திர சொ நதிருககையா லேதுவாகிய காரியத்துக கொருகர்த்தாவு ளதென்ற பிரதிஞ்ஞை திடம்பண்ணுகை - நிகமநம். (க)

---

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

இவ்வாறு ப்ரமாணலட்சணங்களைக் கூறி, மேற் ப்ரமேய மாகிய பதிபசுபாசமெனனும் பதார்த்ததிரயங்களிற் பரத மோத் திஷடமான பதிபதார்த்தத்தை; ஹேதுபூர்வமாக நிரூ பிககின்றது.

பதி யென்றது,இந்திரனென நாமைகதேசநாம கிரஹ ணமாகத தேவேந்திரனெனப் பெற்றதுபோல; பதி எனவே. பசுபதி யெனப்பெறும்

பசூநாம்பதி, பசுபதி என்னும் வசநத்தினால்,

பசு பசுத்தவ சம்யோகாத்-என்னும் வசநத்தினால், அநா திபே பசுத்தவமாகிய வாணவப் பிரதி பந்தத்தினல் ஜீவான் மாக்களெல்லாம் பசுவெனப்பெறும்.

பந்தநாத் பாசமுச்யதே - என்னும் வசநத்தினால், ஆன்மாக்களுடைய விபுத்துவ சர்வஞ்ஞதையை யநாதியே பந்தித்திருக்கையா லாணவாதிகளைப பாசமென்றது.

ஆணவாதியென்றது, ஆணவங் காமிகம் மாயை யென்றது

பந்த மொன்றிரு வென்றுமன் மூன்றைச்சொன்னது கற்பனா கௌரவமெனின? அற்றன்று உபசர்க்க வசத்தினா லர்த்தபேதமுண்டு அஃதெப்படியெனனில்? ஆணவம் ஆன்மாவினது சர்வஞ்ஞதையைத தகைகையாலே ப்ரதிபந்தம்.

காமிகம் ப்ரவாகாநாதியாக வான்மாவைப் பினபற்றிக் கொண் டான்மாவினுடைய புத்தியை, முத்தியி லிச்சைசெல்ல விடாமல், போகத்திற் ப்ரவர்த்திப்பிக்கையினா லநுபந்தம்.

மாயை யான்மாவின் விபுத்வத்தை யாவரித் தேகதேச வர்த்தியாகப் பண்ணுகையாற சம்பந்தம். இந்தபந்தங்கள் சமயோகமென றிப்படி பேதமாக வறியப்படும்.

* ஸம்வ்ருதி ப்ரதிபந்தத்வே கேவலேஷ்வேதே ஸம்ஸ்த்திதா: காலாதிஜ்ஞாத ஜ்ஞாநேஷு தாவத்ஸ்வேஷு ஸஹிதேஷ்வேதே ப்ரஸக்தா: | மாயா ஸம்ஸ்த்திதா: ஸகலா ஸ்த்தாநேஷ்வேதே ப்ரத்யக்ஷாதி ப்ரவ்ருத்தா: ஸ்த்திதா: ஸிவாஜ்ஞயா ஸ்த்தித்யை ஸம்ஸாரஸ்ய ஸம்ஸ்த்திதா ||

சொல்லிப்போந்த பிரமாணங்களினாற் ப்ரமேயங்களை யறியப்பெறவேண்டும்.

அவைவருமாறு:—

ப்ரத்திய க்ஷானுமா னாகமங்களுட் பிரத்தியக்ஷமாவது, இந்திரியக் காக்ஷியாகையான, முதற் பதியுண்டெனபதின ப்ரமாணத்தையு மிலக்கணத்தையு முதற்சூத்திரத்தில் தொகுத்துக் கூறுகின்றது.

(ஒருவனோடொருத்தி—மன்னிநின்றே) எ-து. ஆண்பெண்ணலி தேகமுதலான காரியரூபப் பிரபஞ்சமெல்லாம் வேதாகமங்களி லின்னதின்னபடி தோன்றி, இன்னபடி புசித்துநின்று, இன்னபடி யழியுமென்று சொன்னபடியே, தோன்றிநின்றழியக்காண்கையால்; இப்பிரபஞ்சத்தை யுண்டாக்குவா னொருகர்த்தாவேண்டும். அக்கர்த்தாதா னிப்பிரபஞ்சத்தைச் சம்ஹரித்து, மீளவு முண்டாக்குவன அவனிலக்கண மேதெனின்? அநாதிநின மல ஞானஸ்வரூபன் ஆதாரமேதெனின்? சர்வவ்யாபியாய் நின்றே ஜடசித்துக்களைப் பிரேரிப்பன. அவன நாமமேதெனின்? அஞ்ஞானத்தை யரிக்கிறவனாகலின் அரனென்னும் யோகநாமத்தை யுடையவன் —இதுபொழிப்பு.

இனி விருத்தி —அத னிலக்கணமாவது, சூத்திரத்தட் பொருளானறியு மாண்டைக கின்றிபமையா தியாவையும விளங்கத் தன்னுளாயானும் பிறநூலானு மையமகல வைவகாண்டு கையுறுபபோடு மெய்யினை யெஞ்சாதிசைபபது விருத்தி

பதிபசுபாசமூன்று பொருளும் பிரத்திபக்ஷமாகக காணப் படாமையி னநுமானத்தி னறியவேண்டும.

இனி யன்வய வியதிரேகி யநுமானத்தினாற் பதியுண்டென்னும்படி வருமாறு.—

முதற்சூத்திர மெழுபதுவிருத்தமாகையான் முதல் விருத்தமன்றி, நின்ற விருத்தங்களினு மெடுத்துக் கூட்டிப் பொருளுரைக்கப்படும். “குளகப்பலபாட் டொருவினைகொள்ளும்” என்பவாகலின்.

அந்வய வ்யதிரேகி யநுமானத்திற்கு

பிரதிஞ்ஞை

ஏது

திட்டாந்தம்

உபநயம்

நிகமநம்

என றைந்து ரூபமுண்டு.

இவற்றுள் 'கருபவனொருவன் வேண்டும்' என்றது-ப்ரதிஞ்ஞை. ௧

'வருமுறைவர்துநின் றுபோவதுமாதலாலே' என்றது-ஏது.

'ஒருவனோ டொருத்தி யொன்றென றுரைத்திடு முலகமெல்லாம்' என்றது-காரியத்துவசாதனை.

'மண்ணினிற் கடாதியெல்லாம் வருவது குலாலனாலே' என்றது - திட்டாந்தம். ௩

'எண்ணிய வுருவமெல்லா மியற்றுவன' என்றது-உபநயம.

'கண்ணுகாரியங்க ளெல்லாங் காரணமதனிற் காண்பன' என்றது-நிகமநம். ௫

'ஈசனருனே' என்றது - பக்ஷதருமத்தின் பலத்தினுல மகேஸ்வரன் ஏகனே ஜகத்கர்த்தா வென்றது.

இனி பேறுவுக் கைந்துருணமு மைந்துதோஷமு முண்டு. இத்தோஷங்கக் குணம்வருமாறு:—

௧ - பக்ஷதருமத்துவம், பிரபஞ்சங் காரியரூபமாகலிற் பக்ஷத்திலேயுண்டு; அதனுல் - அசித்தியென்கிற வேத்துவாபாச நிரஸ்தம்.

௨ - சபக்ஷசத்துவம், அது கடாதிகளிலுங் காரியத்துவமாக் காண்கையால் - விருத்தன் ஏத்வாபாச நிரஸ்தம்.

௩ - விபக்ஷாத் வியாவிருத்தி, ஆத்மாவிற் காரியத்வமில்லாதிருக்கையால் - அநைகாந்திக ஹேதவாபாச நிரஸ்தம்.

௪ - அபாதித விஷயத்துவம், பிரபஞ்சத்திற் குற்பத்தி லயங் காணப்படுகைபா லீஸ்வர கர்த்திருத்துவ மில்லாமையி னென்ற தபாதிதமாகலில் - காலாத்தியாபா திஷ்ட ஹேத்துவாபாச நிரஸ்தம்.

௫ - அசத்பிரதிபக்ஷத்துவம், உபாதாந காரணமான மாயையுந் துணைக்காரணமான கன்மமும் ஜடமாகையினாலும், பசுக்களுடைய ஞானக்கிரியை யாணவத்தினாற் றடுக்கப்பட்டிருக்கையினாலும், இரண்யகர்ப்ப நாராயணாதிகள் சிருட்டியந்தர மீஸ்வரனா லுண்டாக்கப்பட்ட தேகேந்திரியாதிகளை யுடையவராகையாலும், பரமேஸ்வரனுடைய கர்த்திருத்துவஞ் சாதிக்கிறதற்கு - ப்ரகரணஸமனென்னு மேதுவாபாசநிரஸ்தம்.

இனி அநுமானந்தான்

தருமாதருமி யநுமானமென்றும்
காரணாத காரியாநுமானமென்றும்
காரியாத் காரணாநுமானமென்றும்
உரையாலநுமானமென்றும்

நான்குபேதப்படும்.

இவற்றுள் ஈஸ்வர கர்த்ருத்வஞ் சாதிக்கிறதற்குப் பிரபஞ்சங் காரியமித்தமாகையா லிக்காரியத்தை யறிந்து பண்ணுவதாக ஞானக்கிரியா ஸ்வரூபமாகிய சத்தியுண்டு இச் சத்திக்குஞ் சத்திமானாகிய வீஸ்வரனுண்டென்று தருமா தருமியநுமானத்தினு லறியப்படும்.

எப்படியெனின்? மண்ணுந் திரிகையுந் தண்டுங் கடாதிகளை வேண்டினவனுங் குலாலனு மிருக்க, குலாலனுடைய வியாபா

ரமுண்டானாற் கடாதிகளுண்டு இல்லாதிருக்கவில்லை; அப்படியே மாயையுங் கனமுமானமாகக்ளு மீஸ்வரனு மெப்போது முண்டாயிருக்கையினு மீஸ்வரனுடைய சமவேதசத்திப் பிரவிருத்தியுண்டாயிற் பிரபஞ்சமுண்டு இல்லையாகிற் பிரபஞ்சமில்லையென்னு மன்வய விபதிரேகியனுமானத்தினால், ஜகத்கார்த்தா மகேஸ்வரனென்று நிச்சயிக்கப்பட்டது.

சாவகர்த்தா மகேஸ்வரனென்று ப்ரதிஞ்ஞைபண்ணிக் குலாலனைத் திட்டாந்தம்பண்ணி யது பிரதிஞ்ஞாவிரோதமென்னை? அற்றன்று காத்திருத்துவம்.

† பிரயோசககர்த்திருத்துவமென்றும்.

* பிரயோச்சிய கர்த்திருத்துவமென்று

மிருவகைப்படும்.

† பரயோசகர்த்ருத்வம் - ஏவுகிறது.

* பரயோச்சிய கர்த்திருத்தவம - ஏவப்படுகிறது.

இவற்றுள் -

ஈஸ்வரனெவ்விடத்தும் பிரயோசகர்த்தா, குலாலாதிகள் பிரயோச்சியகர்த்தாக்கள்

ஆகலிற் பிரதிஞ்ஞாஹானியில்லை; திட்டாந்த விரோதமுமில்லை —

'மருவிடு மநாதிமுத்த சித்துரு மன்னிநின்றே - அநாதியேயாணவத்தினுடைய தடையற்ற ஞானஸ்வரூபியா யான்மாக்களையும் முபாதாநங்களையும் பொருந்தினின்று சிருட்டியாதியைந்தொழில்களையுஞ் சத்தியாலேபண்ணுமென்றிதன்பொருள்.

ஒருவனொருத்தி யென்றென் றுருமையாகக் கூறிய வாசிரியர்கருத்து, இணையற்ற வீஸ்வர னிமித்தமு மீஸ்வர சமவாய

சத்தி யோஸியும், ஆன்மாக்களுடைய கன்மங் துணைக்காரண மும், ஒடுனறதனல் விந்து வுபதானமாகுமளவி லிவ்வேதுவி னற் பிரபஞ்ச முண்டாயிற்றெனபது.

இதற்குச்சம்மதி

* பௌஷ்கரே — தேசிகாசார்ய வாயோ
நிவ்ருத்தஜ்ஞ பாசஜ்வாஸ்ய । நித்தத்வஸ்ய ஸேஷ்டாம்
உபாதானம் ச பிந்துஸ்யாத் ॥ ஸ்வகர்ம ச மகாரீ
ஸ்ருத்ஸ்யாத்காயம் ஸம்ஹதம் ॥

இதனுல் - ஜகதது நிமோதகமெனறது தளளப்பட்டது.

வருமுறை வந்துநினறு போவது மாதலாலே - எனறத ஞல் பிரபஞ்ச நிததியம், இதற்கொரு கர்த்தாவும் வேண்டா! என்கிற சார்வாகமதமும், பூர்வமீமாம்சமதமுநிரஸ்தம்.

தருபவ னொருவனவேண்டும் - என்றதனல் நிரீஸ்வரவாதி கண்மதமும், ஒருவனெனறதனு ன் - அநேகேஸ்வரவாதி மதமுந் தளளப்பட்டது.

தானமுத லீறுமாகில் - எனறதனல் நிதிதியனென்று கூறப்பட்டது

மருவிடும் - என்றதனல் சகலவ்யாபி யென்னப்பட்டது.

அநாதிமுத்தன - எனறதனல் ஆதிமுத்தரான வனந்தேஸ் வராதிகளைப் போலனறி ஸ்வதந்திரனெனறு கூறப்பட்டது.

சித்துரு - என்றதனல் தேஹேந்திரியாதி சஹிதரெல்லாம் பிரயோச்சியகர்த்தாக்கள். தேஹேநதிரியாதி ரஹிதனுய்ச் சுத் தசைதன்னிய ஸ்வரூபியாயுள்ள சிவனேபரம். தச்சதநியோக பலத்தினு லபரராயுள்ள வனந்தேஸ்வராத் தியதிகார புருஷ

ரெல்லாங் கிருத்யங்களைப் பண்ணுவார்கள். சிவனுக்குக் கேவல சைதன்யமே ஸ்வரூபமல்லது ஸகலருக்கும ஞானரூபமி னென்றது.

* தத்க்ருதம் ஜகதீச்வரோதிதம் — நஷ்டமேஷ்ட மோக்ஷநஷ்டமுத்யம் ஜாத்ய நேக முக்ய ஜாதிதைவமேவ ஸித்தி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

ஆகையாற் சாத்திரத்தினாலறியு மறிவிற் சந்தேகம் வாரா தபடி யனுமானத்தினாற் சிவனை யறியுமுறைமையை யுணர்த்து கின்றார்.

உலகமெல்லாம் தருபவன் ஒருவன்வேண்டும் - சிவதத்து வமுதற் பிருதிவிதத்துவ மீறாகும் தத்துவ தாத்துவிகமாகிய உலகொரு கர்த்தாவையுடையது. இது...பிரதிஞ்ஞை.

காரியத் தன்மையால். இது வருவித்த.. ஏது.

உலகிது காரியமன்று; உமகேதுச் சுவரூபா சித்தம், சும தேதுச் சுவரூபா சித்தமன்று; உலகு காரியம்.—

ஒருவனொடொருத்தி யொன்றென் றுரைத்திடு மாதலாலே - சரீரத்தைப்பற்றி யசேதனமாகவு மொருவனொ டொருத்தி யொன்றென் றநேகமாகவு மறையப்படு மாதலால்,—

வருமுறை வந்துநின்று போவது மாதலாலே-இவ்வுளதா கி உளதிலதாகி உற்பத்தி, திதி, நாசமுறு மாதலால்;

இப்படிக் காரியத்துவ நிச்சயமாதலால் யாதொரன் றியா தொனறு காரிப மது கர்த்தாவையுடைத்து, எப்படி ? கடம், இது ... திருட்டாந்தம்.

அப்படி யுலகிது காரியம். இது உபநயம். ஆகையால் அப் படி யுலகிது கர்த்தாவையுடைத்து...இது நிகமனம்.

அந்தக் கர்த்தாவின திலக்கண மெப்படியென்னில்,—

தான-அந்தக கர்ததாவானவன,—

முதலீறுமாகி மருவிநிற் - சிவதத்துவ முதற் சுத்தவித்தி யா தத்துவ மீருகுரு சாதாரண வசாதாரண சாதாரணாசா தாரணங்களாகிய தத்துவதாத்துவிக புவன சூக்குமதேக துலதேக போககிய சுத்தாத் துவப் பொருளகளைச் சுத்தமாயை யினின்றுஞ் சிருஷடிததுத் திதிததுச் சங்கரித்து,

ஸ்ரீமத் அநநதேசுரத் துவாரத்தினாலே மகாசிருட்டியிற் காலதத்துவமுதற் பிருதிவிதத்துவ மீருகுரு சாதாரண வசா தாரண சாதாரணா சாதாரணங்களாகிய தத்துவ தாததுவிக புவன சூககுமதேக துலதேக போககிய சுத்தாசுத்த வசுத்தா துவப் பொருள்களை அசுத்தமாயையிலே நின்றுஞ் சிருஷ்டித்து துத் திதித்துச் சங்கரித்து,

குணதததுவத்துள்ளும் மத்திமப் பிரளயத்திற் பிரகிருதி யின தக்கிரத்து நிலயராகிய, ஸ்ரீமத் ஸ்ரீகண்ட நாதத்துவாரத் தினாலே,மத்திம சிருஷ்டி தோறும் அசாதாரணம் மகாப்பிரள யபரியந்தம் இருக்கு மென்றுகொண்டு, குணதத்துவ முதற் பிரு திவி தத்துவ மீருகுஞ் சாதாரண அசாதாரண சாதாரணாசா தாரண தத்துவ தாத்துவிக புவன திவ்விய துலதேக போ க்ய அசுத்தாத்துவப் பொருள்களையும், பின்னும் குணதத்துவத் துள் மத்திமப் பிரளயத்திற் பிரகிருதியின தக்கிரத்து நிலயரா.

கிய பிரம விட்டுணுத் துவாரத்தினுலேயும் பிரமாண்டத் தண் ணிலையராகிய பிரமவிட்டுணுத் துவாரத்தினுலேயும், சில திவ்யா திவ்விய தூலதேக போசகிய வசுத்தாத்துவப் பொருள்களையும் பிரகிருதியிலேநின்றுஞ் சிருஷ்டித்துத் திதித்துச் சங்கரித்து —

முதனடு வீறுமாகி மருவிடும் -என்றுகொள்ளுதலால், முத லென்று சொல்லும் சிருட்டி கர்த்தாவாயும், நடுவென்றுசொல் லும் திதிகர்த்தாவாயும், ஈறென்று சொல்லும் சங்காரகர்த்தா வாயும் பொருந்திடும்.

அதுவன்றிச் சுவபாவத்தினுலேயும் அநந்தேசுவர த்வா ரத்தினுலேயும் திரோபாவ கர்த்தாவுமாம், சுவபாவத்தினுலே யும் அநந்த ஸ்ரீகண்டாதித் துவாரத்தினுலேயும் அநுக்கிரக கர் த்தாவுமாம்.

சரீரிகளே கர்த்தியம்பண்ணுதலால், அசரீரியாயிருக்கின்ற உமது கர்த்தாவுக்குக் கிருத்தியமெப்படிக் கூடும்? சத்தியம். மூர்த்தி யிரண்டுவிதம் —சலையென்றும் அசலையென்றும். சலை யாயிருக்கின்ற மூர்த்தி யவர்க்கில்லாதபடியினுலே,—

அநாதிமுத்த சித்துருமன்னி நின்றே - அசலையாகிய நித்தி யமுத்த சிற்சத்தி மூர்த்தி பொருந்தி நின்றே.

தான் முத லீறுமாகி மருவிடுமென்று பொருட்புணர்ச்சி போதிக்க.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

இங்ஙனம் அளவையிலக்கணங் கூறியவாசிரியர், அவ்வள வையா னுணரப்படுமிப்பொருள்களதுண்மை மூன்றுசூத்திரத்

தா னுணர்த்துவான் றொடங்கி, முதற்சூத்திரத்துப் பதியுண்மைகூறு அளவை கூறுகின்றார்.

எ - று. அவனவளதுவெனனும் அவயவப்பகுப்புடைய பிரபஞ்சம்,தோனறுதற்குரிய சற்காரிய முறையாற் றேன்றிநின்று அழிதலுடைமையால், அதுதன்னைத தோற்றுவிப்பா னொருவினை முதலை அவாய்நிற்கும். ஆகலான,அவ்வுலக மொடுங்குதற்கு ஏதுவாய் நின்ற சங்காரகாரணனே! அஃதொடுங்கிய பினனும அநாதிமுத்தசித்துருவாய் நிலைபெற்று நின்று, அநாதிபெத்த சித்துருவின்பொருட்டு மீளவு மவ்வுலகத்தை முனபோல மருவுவிசகுமஅதனுல் அவனேயுலகிற்கு முதற்கடவுளெனபதாம்.

"கொள்ளப்படாதுமறப்பதறிவிலென்கூற்றுககளே" என்பதனுட் கொள்ளப்படாதெனபதுபோல, போவதென்னுமொருமை அததொழின்மேனினறது

உம்மை இரந்தது தழீஇயிற்று.

ஒருவனையெனனு மிரண்டாவதும், தானேயென்னும் பிரிநிலையேகாரமும் விகாரததாறறெக்கன.

ஈறு ஆகுபெயர்.

உம்மைசிறப்பு. ஆகியென்பதுபெயர்.

மருவுவித்தல் முனபோலவே தோன்றச்செய்தல்.

"குடிபொன்றிக்-குற்றமு மாங்கே தரும்" என்றாற்போல விவ்விகுதி விகாரததற் றெககது.

முழுவதுமொடுங்கியபின முதல்வனெவ்வாறு நிற்பனென்; னுங் கடாவைவிடுத்தற்கு அநாதிமுத்த சித்துருவாய் மன்னிநின்று என்றார்.

ஆக்கச்சொல் வருவித்துரைக்க.

அநாதிமுத்த சித்தருவென இனம்பற்றி யடையடுத்லின் அநாதிபெத்த சித்தருவுமுண்டென்பதூஉம், மீளவுமருவுவித்தல் அதனபொருட்டென்பதூஉம் பெற்றும். "மலத்துளதாம்" என்றார் முதனூலாசிரியரும்

ஒருவனோடொருத்தியொன்றென்றுரைத்தலாகிய அடைமொழி, வந்துநின்று போதலாகிய ஏதுவைச் சாதிக்குங் குறிப்பேதுவாய் நின்றது.

இது மூன்றெழுவாயும் மூன்றுபயனிலையுமுடைத்காய் முதனூல முதற்சூத்திரம்போல முக்கூற்றதாமாறுகாண்க.

---

## திரம்பவழகியருளை வருமாறு.

---o---

மேல் சிவஞானபோதமும் சிவஞான சித்தியும் ஒரு கருத்தா விருக்குமென்று பரபட்சத்தி லிந்த நூலுக்குச சொன்ன பாயிரத்தில் நூற்பெயர்சொன்ன திருவிருத்தஞ் சொல்லும்.

அஃதெங்ஙனே யென்னில்? போக மிகுத்தோர் — முற்சனனத்திற் செய்த சரியை கிரியா யோகங்களின முதிற்சியிலு லுண்டாகிய சிவஞானத்தின் மிகுதியாலே பூலோகத்திலேவந்து அவதரித்த பெரியோர்களுக்கும்,—தொகுத்த பேதமைக்கே பொருந்தினோர் — அநாதியே பொருந்தி யிருக்கிற அஞ்ஞானத்தோடே கூடி யொன்று மறியா திருக்கிறவர்களுக்கும்,— இவர்க்கன்றி - இந்த விரண்டு பேற்கு மன்றி, — சதிப்பாற் போக வேதநெறியென மவர்கட் கறிய - ஜநந மரண துக்கத் துக்கஞ்சி மோக்ஷத்தைப் பெறுகைக்கு வழியே தென்று தேடுகிற விருப்பத்தை யுடையவர்களுக் கறியத் தக்கதாக, —

மூன்று ளிறைவ னருணைநதி தனக் கியம்ப - முற்காலத்தி லே ஸ்ரீகண்ட பரமேஸ்வரன ஸ்ரீ நந்திகேஸ்வர் தம்பிரானுற்கு அருளிச்செய்த ஞானசாத்திரத்தை, — நநதிகோதிலருட் சனர்குமாரர்ச்குக்கூற - ஸ்ரீநநதிகேசதேவ தம்பிரானுர் குற்ற மற்ற திருவருளினேடெ கூடியிருககிற சனற்குமார பகவானுக் கருளிச் செய்ய,—குவலயதத லவ்வழி யெங்குருநாதன்கொண்டு - சனற்குமார பகவானுதியாகச சததிபஞான தரிசனிகள் பூலோகத்திலே யநதச்சாததிரததைக் கொண்டெழுந்தருளி வந்த என்னுடைய வாசாரியனுகிய மெய்கண்டதேவ தம்பிரானுற்கு அநதக் கிரமத்திலே அருளிச்செய்ய,—தீதகல வெமக்க ளித்த ஞான நூலைத தேர்நதுரைப்பனசிவஞான சித்தியெனறே -மெய்கணடதேவ தமபிரானுர் எனனுடைய வஞ்ஞான நீங்க வொனறுக்கும் பற்றுத வெனக்குத் திருவுள்ளம்பததின சிவஞானபோததிலுண்டாகிய சம்பிரதாயத்தை யாராய்நது பாரது, ஒனறுமறியாத நானுஞ் சிவஞான சிததியெனறு ஒருசாததிரமாகச் சொல்லாநின்றேன.

எனவே சிவஞான போதம் பன்னிரண்டு சூத்திரமும் அந்தச் சூத்திரங்களுககுச் சூரணைகளு மநதச் சூரணைகளுக் கெண்பத் திரண்டு வெண்பாவு மாகச் சொல்லும் இந்த மூன றுவகையிலு முள்ள வாத்ததைத் தாமெடுத்துக கொண்டு, சுப ட்சம் பன்னிரண்டு சூத்திரததுக்கு மாக முன்னூத் திருபத் தேழு திரு விருத்தமாக வருளிச் செய்தா ரெனபது கண்டு கொள்க.

அளவைப் பிரமாணத்தில் 'அநாதியேயமலனுய்' என்ற திருவிருத்ததில் 'உணர்த்துதலுபதேசந்தான்' எனறுசொல்லுகை யால், மேல்உலகாயுதன அப்படி யொரு பதியுண்டென்றும், ஒரு

பசுவுண்டென்றும், நீர்சொன்னது உள்ளதொன்றல்லவென்னு பின்னையுள்ளதேதென்ன, பிரத்தியட்சமாயுள்ள நாலுபூதங்களு மே யுள்ளது, அது நித்தியமுமாய் ஜடமுமாய் நிற்குமென்று சொல்ல: இல்லையென்ற கர்த்தாவை யுண்டென்றும், அவன் நித்தியமென்ற பிரவஞ்சத்தை யனித்தியமென்றும், மேல் மறுத் தருளிச் செய்கிறார்.

ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலக மெல்லாம் - நீ நித்தியமென்ற பிரவஞ்சம் அவ னவ ளென்ற யுயர்திணையாயும், அது வென்ற அஃறிணையாயும், மூன்றுவகை யாகச் சொல்லப்பட்ட பிரவஞ்சங்க ளெல்லாம்,—வருமுறை வந்து நின்று போவது மாதலாலே -தோன்றுகிற கிரமத்திலே தோன்றி, நிற்கிற கிரமத்திலே நின்று, அழிகிற கிரமத்திலே யழிவதுமாய் வரும். ஆகையாலே பிரவஞ்ச நித்தியம். அதுவன்றியும் பிரவஞ்சம் ஜடமா யிருக்கபடியாலே இதுதானே காரியப்படமாட்டாது. ஆகையாலே,—தருபவ னொருவன் வேண்டும் - இவயிற்றை யுண்டாக்குவா னொரு கர்த்தாவுண் டாகவேணும். பாஞ்சராத்திரி பிரபஞ்சஞ் சிருட்டி கர்த்தாவா லே யுண்டாவதொழிந்து சங்காரகர்த்தாவாலே யுண்டாகுமோ வென்னை? அவனைமறுத் தருளிச்செய்கிறார்,—தானமுதலீறுமாகி மருவிடும் - சங்காரகர்த்தாதானே சிருட்டி கர்த்தாவாயும், திதிகர்த்தாவாயும், தோற்றுவிக்கவு மிரட்சிக்கவுங் கர்த்தாவாய்ப் பொருந்திநின்றுசெய்வன. அப்படிச்செய்யில், அவனையுமொரு க த்தாப் படைக்கவேண்டுமென்று பாஞ்சராத்திரிசொல்ல, அவனை ஒரு கர்த்தாப்படைக்கவேண்டுவதில்லை; அஃதெங்கனேயென்னில்? அநாதிமுத்த சித்துரு மன்னிநின்றே - அநாதியே சர்வத்தை யும் பொருந்திநின்று காரியப்படுத்துகச் செய்தேயுந் தானொ ன்றுடனுந் தோய்வற நிற்கிற ஞானமே தனக்குத் திருமேனி

யாக வுடையவன். ஆகையாலே தனக்குவேண்டின வடிவு தானேகொண்டு நின்று செய்வன.

இதனாற்சொல்லியது உலோகாயுதன் பிரவஞ்ச நித்திய மெனநுங் கத்தாவில்லையெனனு மவனை மறுத்தது; பிரவஞ்ச மநித்திய மெனறுங் கத்தாவுண்டென்றும் சங்காரகத்தாதானே சிருட்டியையுஞ் செய்வனெனனு முறைமையையு மறிவித்தது. ()

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஒருவனோ டொருத்தியொன்றென றுரைத்திடும்உலகமெல்லாம்-அவனென்றும் அவளென்றும் அதுவெனறும இவ்வாறு அவயவப் பகுப்புஉடைத்தாய்க்கூறப்படும்பிரபஞ்சத்தொகுதி,— வருமுறை-தோன்றுதற்குரிய சற்காரிய முறையால்,— வந்துநின்றுபோவதுமாதலாலே-தோன்றிநின்றழிதலுடைமையால்,— தருபவ னொருவனவேண்டும - அதுதனனைத் தோற்றுவிப்பா னொரு வினைமுதலை யவாய்நிற்குமாகலான,—ஈறுமாகி - அவ்வுலக மொடுங்குவதற் கேதுவாய்நின்ற சங்காரகாரணனே,— அநாதிமுத்த சித்துரு மன்னிநின்றே - அஃதொடுங்கிப் பின்னும் அநாதிமுத்த சித்துருவாய் நிலைபெற்றுநின்று,—மருவிடும்- அநாதிபெத்தசித்துருவின் பொருட்டு மீளவு மவ்வுலகத்தை முன்போல மருவுவிக்கும்,—தானே முதல் -அதனா லவனே யுலகிற்கு முதற்கடவு ளென்பதாம்.

இஃது முதனூன் முதற்சூத்திரம் போல மூன்றெழுவாயு மூன்றுபயநிலையுமாய் முக்கூற்றதாமாறுகாண்க.

---

## மறைஞானதேசிகர் உரை.



உலகாயுத விப்பிரபஞ்சத்துக்குத் தோற்ற மொடுக்க மில்லா திருக்கவு மஃதுண்டென்று சொன்ன தெப்படியென்று சொல்ல; அவனை மறுத்து மூன்று விருத்தத்தால் உணர்த்துகின்றார்.

உதிப்பது மீளுமுண்டென் றுரைப்பதிங் கென்
னைமுன்னோர், மதித்துல கநாதியாக மன்னிய தென்ப
னென்னி, லிதற்கியா னநுமானத்தி யெடேனிப் பூதாதி
யெல்லாம், விதிப்படி தோற்றமாயக் காணலான் மேதி
னிக்கே. (உ)

(இ-ள்) உதிப்பதுமீளுமுண்டென்றுரைப்பதிங்கென்னை — இப்பிரபஞ்ச மொருகர்த்தாவாலே தோற்றமொடுக்கமுண்டாகுமென்று நீர் சொல்லிய தென்னை, அஃதெக்காரணமெனனில்?

முன்னோர் மதித்துலகநாதியாக மன்னியதென்பனென்னில் — ப்ரகஸ்பதிபகவான முதலிய வாசிரியமாரிப்பிரபஞ்சத்தை யநாதியென்று தனித்து சொல்லுவர்கள் என்று நீ சொல்லில்?

இதற்கியானநுமானத்தி யெடேன — இந்த விசுவந்தானே தோன்றினதென்றுங் கெடுமென்பதற் கநுமானமுதலிய பிரமாணங்களை யெடுத்துக்கரித்துச் சொல்லுவதில்லை. அஃதெக்காரணமென்னில்?

இப் பூதாதியெல்லாம்விதிப் — நீ பிரத்தியட்ச வாதியல்லோ, உனக்கநுமான மெடுத்துச் சொல்லுவதில்லை; இந்தப்பூ

| | |
|---|---|
| படி தோற்றி மா யக் காரணமான மேதினிக்கே | யிவினைகளை பூதாதியான சரீரங்களெல் லா மீசுரன விதிக்கப்பட்டபடியே தோன்றி நின றழிபக் காரணமாயைபா விதனை யுள்ளபடி யுணாவாயாக எ-று |

இதற்குப் பிரமாணம் ஸ்வாயம்பு வாகமம் எனவறிக (உ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———0———

இச்சூத்திரத்தி லர்த்தங்களை யொவ்வொருமதத்தினவா க ளொவவொருபக்த்தைப்பற்றிச் சங்கைபண்ணி யதற் குத்த ரஞ்சொல்லி ஜகதகர்த்தா வீஸ்வரன ஏகனே அநேகானமாக களுடைய மலசன்மானு குணமாகச சுத்தாசுத்தமாயைகளிற் றனு கரண புவன போகங்களை யுண்டாக்கிப் + பாலித தழிப் பனெனபதை மேற் கூறுகினறது

+ பாலித்தல் - திதித்தல்

இதில் 'வருமுறைவந்தநின்று போவதுமாதலாலே' என பதற்கு, லோகாயுதரை சங்கையு முத்தரமுமாக, மேன மூன்று விருத்தத்தாற் கூறுகினறது.

உம்மை இறுதிக்கணின்று விளக்கினவெண்ணும்மை

ஏகாரம் ஈற்றசை.

சித்துரு என்பது எழுவாய், மருவிடும் என்றது பயனிலை

* இக்கருத்து - க - செய்யுளினகுறை, ஈண்டு சிவக நோக்காய் இச் செய்யுளில் அதிகாரமாய் எழுதப்பட்டுள்ளது.

(உதிப்பதுமீறு ... எனவில்) - இச்சகத்திற்குத் தோ ற்றமுமாசமு முண்டெனடதென்னை, பெரியோர்கள் விசாரி

த்துப்பார்த்து ஜகத் தநாதியுமாய் நித்தியமுமாயுள்ளதென்று சொல்லுவர்களென்று சொல்லின்? (இதற்கியானறுமாறுதி .. மேதினிக்கே) எ - து நீ தோற்றமுமொடுக்கமுமில்லை ஸ்பாவமாமென்ற வசநத்திற் கநுமானுகமங்கள்கொண்டுசொல்லேன; பிரத்தியக்ஷமாகப் பூதங்களை முதற்காரணமாக நர பசு பக்ஷி கிருமி கீடாதி தேகங்களும், விருக்ஷகுள்ம லதா தாபர பாஷாணாதிகளெல்லாம், இன்னதிலின்னபடிரூபமாயின்னபடி பலித்து இன்னபடி நசிக்குமென்று வேதாகமங்கள் சொன்னபடியே, மகாபூதங்களினின்றுந் தோற்றமுமொடுக்கமும் பூமியின்கண்ணே காணலால் பூமியாதிமகாபூதங்களுங் காரியவஸ்துவாயிருக்கையினால், இதற்குமொருகாரணமும், அக்காரணத்திற்காரியத்தையுண்டாக்குங் கர்த்தாவுமுண்டென்றிதன்பொருள்.

பூதாதியென்றதில் வேற்றுமை தொக்குநின்றது.

இதனால்ஜகத்து-சாதியே! வேதத்தில்ஜகத்தநாதியென்றிருக்க விவண்சாதியென்றதுவேதவிருத்தமெனின்? அநாதியென்றவாக்கியத்திற்குப பிரவாகரன் ஆதியிலே தாற்பரிய மாகையால் விரோதமில்லை.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

உலகொரு கர்த்தாவையுடைத்து, காரியமாதலால், உலகு காரியம் ,ஒருவனோடொருத்தி யொன்றென்றுரைத்திடுமாதலாலும், வருமுறைவந்து நின்று போவதாதலாலும், என்று காரியத்தைச் சாதித் ததனாற் கர்த்தாவைச் சாதித்தீர்; அது கூடாது. பிருதிவிமுத லுலகிற் றோற்றநாசங் காணேமென்று லோகாயுதன் ஆருகதன்முதலோர் சொல்ல, மறுத்துணர்த்துகின்றார்.

உதிப்பது மீறு முண்டென் றுரைப்பதிங் கென்னை - உலகுக்கு உற்பத்தியாதலு நாசமாதலு முள்ள தென நிசைப்ப தேது,—முனனோர் - தர்கக மூதற்சாததிர முணர்நதோர்,—மதித்து - தர்க்கித் துநிச்சயம்பண்ணி,—உலகு - பிரபஞ்சம்,—அநாதியாக - எப்போது மிப்படியிருப்பதாய்,—மன்னியதெனபர் - நிலைபெற்றதெனறு நிகழத்துவர்,—எனனில் - எனறு நீ சொல்லில்,—இதற்கு - நீ சொல்லு மிநதவார்த்தைக்கு,—யான - நான் நீ பிரததியக்ஷவாதி யாகையினாலும், இது பிரத்தியட்ச சித்தமாகையாலு ம,பிரத்தியக்ஷப் பிரமாணமா ததிரமன்றி,—அநுமானாதி யெடேன - அநுமானாகமப்பிரமாணங்களைத் தொடேன, பின்னை யறியுமாறெப்படி யெனனில்—இப்பூதாதியெல்லாம் - பூதங்களையாதியாகக் காரணமாக வுடைததாயப பூதபரிணாமமாகிய உட லூர்மர முதலிய விவவுலகிற்பொருநதிய பொருள்களெல்லாம்,—விதிப்படி தோற்றிமாயக்காணலான மேதினிக்கே - பூமியின கண்ணே கன்மமுறைமையி லீசுரசங்கற்பத்தினா லுற்பத்தி நாசமாகப் பிரததியட்சப் பிரமாணமாகிய சிற்சததிபொருநதிய நேததிரத்தினாற் பார்த்தலால்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

இனி அம்மூனறனுள் முதற்கூற்றை இருபத்தேழுசெய்யுளான் வலியுறுத்துவான றொடங்கினார்.

எ - து. உலோகாயதநூலுணர்ந்தோர் காட்சியளவைக் கெய்தாதன பிரமாணமாகாவென மதித்து உலகம் நித்தமென்பாராகலான், நிலத்தொழிலொன்றேயன்றி ஏனையிரண்டு தொழில்களதுண்மை பெறப்படாதெனின்?—ஈண்டு நீ விதித்த விதி

யாகிய நிலத்தொழில்போலவே ஏனையிரண்டு தொழிலும் உடன்கழுக காண்டலான, இதனைச் சாதித்தற்கு நீ கொண்ட காட்சியளவை யொனறே அமையுமாகலின், ஈண்டு வேறு பிரமாணங்க ளெடுத்துக்காட்டல் வேண்டாமென்பதாம்.

படி உவமவுருபு.

"தோற்றமுமீறு முள்ளதனபாலே கிடத்தலின்" என்றார் முதனூலாசிரியரும.

மேதினிகதென்பது உருபுமயக்கம்.

இதனுனே உலோகாயுதன மதம்மற்றி நிகழுமாசங்கையைப் பரிசரிதது முத்தொழிலுண்மை சாதிககப்பட்டது.

பரபககத்துட் சிததாநதப் பாாவையாற் பரபககத்தாரை மறுத்தார்: ஈண்டுப் பரபக்கப் பாாவையால் அவா கூறு மறுப்பைப் பரிகருத்துச் சித்தாந்தத்தை நாட்டுகின்றார் இவை தம்முள் வேறறுமையாகலிற் கூறியதுகூறலனமையுணர்க.

வேதாந்தநூ லிரண்டாமத்தியாயத்துள் இரண்டாம் பாதத்தினும் முதற்பாததகதினுங் கூறியனவு மிவ்வாறே கொளளப்படும்.

---

## நிரம்பவழகியருணா வருமாறு.

—o—

மீளவு முலோகாயுதன் பிரபஞ்சத்துக்குத் தோற்ற மொடுக்க மில்லையாயிருக்க வுண்டெனற தெபபடியென்று சொல்ல, அவன் மதமறுத்து மே லருளிச்செய்கிறார்.

உதிப்பதுமீறுமுண்டென் றுரைப்பதிங்கென்னை முன்னோர் மதித்தல கறுதியாக மன்னியதென்பர் - பிரபஞ்சததுக்குத்

தோற்றமுமொடுக்கமு முண்டென்று சொல்லுகிறபடி யெப்படியே! ஞாதாக்கள் விசாரித்துப் பார்த்துஇந்தப்பிரபஞ்ச மநாதியே நிலைபெற் றுள்ளதென்று சொல்லுவர்,—எனனில்-என்று நீசொல்லில்,—இதற் கியானுமாதியேடெ-ஙனயிப்படி நித்தியமென்று சொல்லுகிற பிரபஞ்ச மநித்தியமென்று காட்டுகிறதினுக்கு நான அநுமான முதலான பிரமாண மெடுத்துச்சொல்லவேண்டுவதில்லை,—இப்பூதாதி யெல்லாம் விதிப்படி தோற்றிமாயக காணலால் மேதினிக்கே - இந்தப் பூதகாரியமான தேகங்களெல்லாம் பரமேசுரனாலே விதிக்கப்பட்ட விதியின் வசத்திலே இந்தப் பூமியினகண்ணே தோன்றி நின் றழியப் பிரத்தியட்சமாகக் காணலாம்

உலகாயுதனே நீர்சொன்ன கர்த்தாவென்ப தொன்றில்லை நாலு பூதங்களுமே யுள்ளது அது நித்தியமாயிருப்ப தொன்றென்ன;ஒரு வடிவிலேநின்று மொருவடிவு தோன்றி நின் றொடுங்குகலால் பிரபஞ்ச மநித்தியமென்றும்,இது ஜடமானபடியினாலே இதைக்கொண்டு செய்வா னொருகர்த்தாவுண்டென்றும், அவனை மறுத்ததற்குப் பிரமாணம்—சிவஞானபோதம் "பூதாதியீறு முதலுந்துணையாகப்,பேதாய்'திதிபாகும் பெத்திமையி-லோதாரோ, வொன்றொன்றிற்றோன்றி யுளதாயிறக்கண்டு, மன்றென்று முண்டென்ன வாய்கது."என்றும, பரபட்சம் "பூதமானவை நித்தமென்று புகலுறதெனை யுருககளா, யாதாலோடழிவாகுமாதலி ஞககுவோரவர் வேண்டிடுங், காதலோடுகடாதிமண்கொடியற்றுவோருளர்கண்டனஞ்,சீதனீரி னெழுநதகொப்புளிகழ்நதமாருத செய்கையே." என்றும் "பூதமானவைகாரியங்கள் பொலிந்துமன்னியழிந்திடு, மாதலாலொரு நாதனிங்குளனென்றறிந்துகொளையனே, பேதமான கடாதிமண்ணினி

ல் வந்தவாறு பிடித்திடிற், கோதிலாத குலாலனால்வரு செய்கைபெனறு குறிப்பதே." என்னுமது கண்டுகொள்க."

சித - ப, ரு - உச - செ.

இதனாற் சொல்லியது உலகாயுதன் பிரபஞ்ச நித்தியமென்றும கத்தா வில்லை யெனறுஞ்சொல்ல, அவனை நோக்கிப் பிரபஞ்ச மநித்தியமென்றுங் கத்தா வுண்டெனறு மறுத் தருளிச்செய்த முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

முனனோர் - உலகாயதநூ லுணர்ந்தோர்,—மதித்து-காட்சியளவைக கெய்தாதன பிரமாணமாகாவென மதித்து,—உலகநாதியா மனனியதென்பார்- உலகம் நித்தமாக நிலைபெறுமெனபர் ஆகலான,—உதிப்பது மீறு முண்டென் றுரைப்பது-நிலைதொழிலேயன்றி யேனைததோற்றநாசங்கள துண்மைகூறுவது,—இஙகெனனை யென்னில் - இவ்விடத்துப் பெறப்படாதெனின,—விதிப்படி-நீவிதிதகவிதியாகிய நிலைத்தொழில் போலவே,—மேதினிக்கு-இவ்வுலகின்கண்,—இப்பூதாதியெல்லாம்-இப்பூதமுதலிய பிரபஞ்சங்களெல்லாவற்றிற்கும்,— தோற்றிமாயககாணலான - தோற்றநாசங்களாகிய இவ்விரண்டுதொழிலு முடனிகழக காணலான்,—யானதற்கு- யானிதனைச் சாதித்தற்கு, — அநுமானாதியேடேன் - நீகொண்ட காட்சியளவையொனறேயமையுமாகலி னீண்டநுமானமுதலிய வேறுபிரமாணங்க ளெடுத்துக்காட்டுவே னல்லே னென்பதாம்.

இதனானே உலகாயதமதம்பற்றி நிகழு மாசங்கையைப் பரிகரித்து, முத்தொழிலுண்மைசாதிக்கப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



இயல்புகாண் டோறறிமாய்கை யென்றிடி னியல்
பினுக்குச், செயலதின் றியல்புசெய்தி செய்தியே லிய
ல்பதின்று, மியல்பதாம் பூதநதானே யியற்றிடுஞ்செய்
தியென்னிற, செயல்செயவ ் னொருவன்வேண்டுஞ்
செயற்படும் சேதனத்தால். (௩)

(இ-ள்.) இயல்பு காண்டோ றறிமாய் கை — இந்தப் பிரபஞ்சந் தானேதோன்றித் தானேயழிகை யியல்புகாணும், இதற்குக் கர்த்தா வேண்டுவதில்லை

என்றிடின — என்றுநீ சொல்லின்?

இயல்பினுக்குச் செயலதின்று — நீசொல்லுகிற வியல்பாகிய பூமிமுதலிய நாலுபூதத்திற்குந் தாந்தாஞ்செய்யுந் தொழிலில்லை.

இயல்புசெய்தி — பூதங்களினது தத்தம் வ்யாபாரந்தானே யியல்பெனின?

செய்திே யலியல்பதின்றும் — நீசொல்லுகிற தொழிலேயே யியல்பென்று சொல்லுவையாகில்? அதனைவிட்டுவிடு.

இயல்பதாம் பூதந்தானே யியற்றிடுஞ் செய்தியென்னின — சுபாவமா யிருக்கப்பட்ட பூதங்கடானே தத்தந்தொழில்களைச்செய்யாநிற்குமெனின்? பூமிகம்பிப்பானேன், ஓரிடத்திலேநீர்சுடுவானேன், ஓரிடத்திலே யக்நி சுடாதிருப்பானேன், வாயு சலியாதிருப்பானேன், இப்படிக்காண்கையினாலே

| | |
|---|---|
| செயல் செய் | பூதங்கள் ஜடமாகையா லித்தத்தொழி |
| வா னொருவன் | ல்களைச செய்வா னொருகத்தாவேண்டுங்கா |
| வேண்டுஞ் செய | ண்; ஜடமானபூதந்தானே காரியப்படமா |
| ற்படும் சேதனத் | ட்டாது. ஆகலால் ஒருசேதனன காரியப்படு |
| தால் | த்தக் காரியப்படும். எ - று. |

ஏகாரம் தேற்றம்.

இதுமுக லுலு திருவிருத்தத்துக்கும் ப்ரமாணம் பார்க்கி லையென னு மாகமமெனவறிக (௩)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



இபல்புகாண டோறறிமாய்கை யெனறிடி னியல்பிறுக்கு ச்செயலகினறு - மஹாபூதங்களிற் றேகாதிகடோற்றுகிறது மொடுக்குகிறதும் ஸ்வபாவமே யெனின ? ஸ்வபாவமானது ஷட்பாவவிகாரம பொருநகாது,—இயல்புசெய்தி செய்தியே லிய ல்பதினறும-இங்ஙனந்தொழிற்படுவதே ஸ்வபாவமெனின ? வி காரப்படுகிறது ஸ்வபாவமல்லவாம்,— இபல்பதாம் பூதநதா னே பி॥ ற்றினு செய்தியெனனிற் செயல்செய்வா னொருவனை வேண்டும் - இயல்பாயுள்ள பூதங்கடானே தேகாதிகளைத் தன னிடத்தினுண்டாக்குமெனின்? இநதக்காரணத்திற் காரியத்தை யுண்டாககுகிறவ னொருவன்வேண்டும்,— செயற்படுஞ்சேதனத் தால் - பூதங்க ளசேதகமாகையாற் கர்த்தாவினாலே காரிய ப்படுமென் றிதனபொருள்.

இதனாற் சுவாபாவிக மன்று ஜகத்ஏதுக மென்றது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

உலகுக் குற்பத்தி நாசமுளது, அஃதொரு கர்த்தாவை விரும்பாம லியல்பி லாமெனன; மறுத்துணர்த்து கின்றார்.

இயல்புகாண் டோற்றி மாய்கை யென்றிடில் - உபாதான காரணத்திற் றோற்றி யொடுங்குவது காரியப்பொருளினது சுபாவமென்றுநீ சொல்லில்,—

இயல்பினுக்குச் செயலின்று - இயல்பாயிருக்கும் பொருளுக் கொருபோதுண்டாய் ஒருபோதின்றாய்க் காரியப்படுந் தன்மையின்று,—

இயல்புசெய்தி - அப்படிக்காரியப்படுவ தப்பொருட் சுபாவமென்று நீசொல்லில்,—

செய்தியே யியல்பதின்றும் - காரியப்படுமாகில் அப்பொருட்குச் சுபாவ மில்லையாம். அப்படிச் சொல்ல வேண்டுவதில்லை, செய்தி யியல்பதாம்; உற்பத்திநாச யோக்கியமாகிய வியல்பில்லாத பொருள் சர்வ சாமர்த்தியமுடைய கர்த்தாவினாலுந் தோற்றுவித் தொடுக்கப்படாது; ஆதலால் காரியப்பொரு ளுற்பத்தி நாசமாகு மோரியல்புடையது, ஈரியல் புடையதன்று. அப்படியாயி னுற்பத்தி காலத்து நாசம், நாசகாலத் துற்பத்தி காணு திருப்பானேன்? உள்ளது. தற்காலத் துற்பத்தி ரூபமாயும் நாசரூபமாயும் நாசோற்பத்திகளோரியல்பாயிருக்கும் பௌத்தனுக்குப்போல, தற்காலத் தீரியல்பாயிராது. அந்த வுற்பத்தி நாசங்கள் காரியப்பொருளிற் காணப்படுதலாற் காரியமாய், செயற்படும் பொருள் செய்பவனை விடாதாதலால்; அந்தவுற்பத்தி நாசங்களொருங்கே

யொருகாலத் தோரியல்பாயிருந்தாலுந் தனது தனது காரியம றைதலாகு முரூபந் தனது கர்த்திருகாரக முதற் காரகங்களி னறி முதற்காரணத்தினின்றுந் தோன்றாது. ஆதலாற் கர்த்தா வை விரும்புதல் காரியத்துக்குண்டு. சம்மதமே! இதெல்லா முமசந்நுமாதலால்,—

செய்தி இயல்பதாம் - காரியம் இயல்பதாம், சிருட்டி திதி சங்காரங்களை பூதநதானே கர்த்தாவாய்,—

இயற்றிடுமெனவில் - பண்ணுமென்று லோகாயுத பக்ஷத்து யிருக்கும நீ சொல்லில், அப்பூதங்கள,—

செயற்படுமசேதனத்தால்-காரியமாகுஞ் சடமாதலால்;—

செயல் செய்வானொருவன் வேண்டும் - பூதகாரியத்தினது தோற்றம் நிற்றல் போதற் றொழில்களைப் பண்ணுமொரு கர்த்தாவை விரும்பும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

எ - து. அத்தோற்றக்கேடுகள் உலகிற் கியல்பாகலின அவற்றிற்கு வினைமுதல் வேண்டப்படுவதனறெனில்,—தோன்றலுங் கெடுதலும் விகாரமாகலின விகாரமாத லியல்பிற்குக் கூடாது. அங்ஙனம் விகாரமாதலாலே உலகிற்கியல்பெனின? அவ்வாறியம்புவார்க்கு விகாரத்தின வேறாய் இயல்பென்பதொன் றில்லையெனப்படும். படவே, தோற்றிமாய்கைஇயல்பெனபது விட்டுப்போய்த் தோல்வித்தானமாய் முடியும். இனி இயல்பும் விகாரமும் வேறெனவே கொண்டு, பூதநான்கும் இயல்பாயுள்ளன.அவை தோற்றிமாய்தலாகிய விகாரத்தைச் செய்யுமெனின ? எனறுசொன்னாய்; அவை அங்ஙனந் தொழிலுற்று நிற்

குஞ் செயப்படுபொருளாகலிற் செயப்படுபொருட்கு வினைமுத ல் வேறு வேண்டப்படுமெனபதாம்.

படுமென்பது செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச் சம்.

அசேதனமென்பது செப்யப்படு பொருளென்னுந் துணையா ய் நின்றது

சாதகன் தனனைக் குத்திறனென்புழியும், குத்தியது கை யும் குத்தப்பபட்டது பிறிதோருறுப்புமாகலின; வினைமுதலுஞ் செயப்படுபொருளுமொனறுதல் யாண்டுமினமையுணர்க.

---

## நிரம்பவழகியருளா வருமாறு.

—o—

பிரபஞ்சத் துக்கு அகையு மழிகையு மியல்புகாணும், அதற் கொரு கதகா வேண்டுவதில்லையெனறு உலோகாயதன சொல் ல; அவனை நோககி மேலு மருத தருளிச்செய்கிறார்.

இயல்புகாண் டோற்றிமாய்கை யென்றிடின் - பிரபஞ்சந் தானே தோன்றுகையு நிற்கையும் அழிகையுமாய் வருகிறது அத ற்குள்ள வியலபுகாணும, இதற்கொரு கததாவேண்டுவ தில்லை யென்று நீசொல்லில்,—இயல்பினுககுச் செயலதின்று - நீஇயல் பென்று சொல்லுகிற பிரபஞ்சம் சடமாகையாலே தானாகத் தோன்றி யழியமாட்டாது,—இயல்புசெய்தி - பிரபஞ்சத்துக் குத தோன்றி நின ரழிகிறது தானே இயற்கை காணுமென்று, நீ சொல்லில்,—செய்தியே வியல்பதின்றும் - பிரபஞ்சத்துக்கு த்தோன்றிநின ரழிகிறது செயற்கையாகையால் இயல்பென்ற தில்லையாம்,—இயல்பதாம் பூதத்தானே யியற்றிடுஞ்செய்தியெ

னவில்-பூதகாரியமல்லோ தொழில், பூதங்க ளியல்பதாகையா லே எடபொழுது மொருசுபாவமாயிருக்கத்தக்க பூதங்களதா னே தொழில்களையெல்லா முண்டாக்கா நிற்குமென்று நீ சொ ல்லில்,—செயல்செய்வானொருவன வேண்டுஞ் செடற்படுஞ் சே தனத்தால் - அந்தபூதங்கள சடமாகையாலே இந்தத்தொழில் களை யுண்டாக்குவா னொரு கருத்தாவேணும் ஆகையாலே சட மான பூதங்கள் இவனாலே செய்யப்பட்ட தொழில்களுக்கிட மாக நின்று தொழிற்பட்டுவரும்.

இதனாற் சொல்லியது பிரபஞ்சந் தானே தோன்றுவதை யும் தானே யொடுங்குவதையும இதற்குள்ள வியல்பென உலகா யதனசொல்ல, அவனை மறுதது இது சடமானபடியினாலே இந தப் பிரபஞ்சத்தைத தோற்றுவிக்கவும ஒருகருத்தாவுணடென்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

தோற்றிமாய்கை -அததோற்றநசேடுகள்,—இயல்புகாணெ ன்றிடில் - உலகிற கியல்பாகலி னவற்றிறகு விணைமுதல் வேண் டபபடுவ தனறெனின,—செயல தியல் பிணைகின்று - தோன ரலுங் கெடுதலும விகாரமாதலின விகாரமாத லியல்பிற்குக் கூடாது,—செய்தி யியல்பெனநிடின - அங்ஙனம விகாரமா தலே யுலகிற்கியல்பெனின,—செய்திய் வியல்பதினாலும - அவவாறு இயம்புவார்க்கு விகாரத்தினவேறு பியல்பெனப சொனநில்லையெனப்படும.படவே தோற்றிமாய் கை யியல்பென் பது விடடுபோய்த் தோல்வித்தானமாய் முடியும். இனியியல்பு ம் விகாரமும் வேறெனவேகொண்டு, பூதகதானே யியல்பதாம்

பூதநான்கு மியல்பாயுள்ளன,—செய்தியியற்றி மென்னின - அவைதோற்றி மாய்தலாகிய விகாரத்தைச்செய்யு மெனின், நன்று சொன்னாய்,—செயற்படும்-அவையங்ஙனந் தொழிலுற் றுநிற்கும்,—அசேதனத்தால் - செயற்படுபொருளாகலான,— செயல் செய்யாவொருவன வேண்டும - செயப்படு பொருட்கு வினைமுதல் வேறுவேண்டப்படுமெனபதாம.

---

## மறைஞானதேசிகர் உரை.

—o—

பூதங்கள் சிருததியகாததாவல்லவென றுணர்த்துகிறார்.

நிலம்புன லனல்காலகாண நிறுத்திடு மழிக்குமாக் கும், பலந்தரு மொருவனியருப் பண்ணிட வேண்டா வென்னி, னிலங்கிய தோற்றநிறற லிழிவை யிசைத லாலே,நலங்கிளர் தோற்றநாசந் தனக்கிலா நாதன்வே ண்டும். (௪)

(இ-ள்.) நிலம்புனலனல்காலகாண நிறுத்திடு மழிக்குமாக்கும் பலந்தருமொருவனிங்குப் பண்ணிட வேண்டாமெனவிற் நாலுபூதமும் ப்ரகதியட்சமாகப் பிரபஞ்சத்தைத் தோற்றியு நிறுத்தியு மழித்தும பிரயோசனங்களைத தாராநிற்கும், ஒருகர்த்தா விவற்றையுண்டாக்கிக் காரியப்படுத்த வேண்டுவதில்லையென்று நீசொல்லில்?

இலங்கியதோ ற்றநிற்றலீறிவை யிசைதலாலே — நாலுபூதமும் விளங்காநின்ற தோற்றமுதலிய கருத்தியம ப்ரத்யட்சமாகக் காரியப்படக் காண்கையாலே

நலங்கிளர் தோற்றநாசந் தனக்கிலா நாதன வேண்டும் — உற்பத்தியு நாசமுந் தனக்கில்லாத கருத்தாவே யிவற்றையுண்டாக்கவேண்டும்.எ-று.

(௬)

---

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.

—o—

(நிலம்புனல் .என்னில்) -ப்ருதிவி அப்பு தேஜசு வாயுவென்னுநானகுபூதங்களே பிரத்தியக்ஷமாகத் தேகாதிகளை யுண்டாக்கி நிறுத்திப பலங்கொடுத்தழிக்கும் வேறொருகர்த்தாவுண்டாகவேண்டாவெனின,—(இலங்கிய தொற்நிற்ற லீறிவை... நாதன் வேண்டும்)-விளங்கப் பட்ட வுற்பத்தியைய திதியையு நாசத்தையு மிந்நானகு பூதங்களும் பொருந்தகையா லுற்பத்தி நாசமில்லாத நலத்தையுடைய கர்த்தாவானவ னொருவனபண்ணுவான வேண்டுமென றிதன்பொருள்.

இம்மூன்று விருத்தத்தினுஞ் சங்கிரகமாகச்சொன்ன வுலோகாயுத மதமுந தத்தூஷணமும் விஸ்தரித்துப் பரபக்ஷத்திற் கூறினோ மாமகுணர்க.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

பிரத்தியக்ஷப் பிரமாணகோசரமாகபபூதங்கடாமே பொருள்களைத்தோற்றுவித்து நிற்பித்துப் போக்கும்; சேதனனாகிய வொருகர்த்தா வேண்டுவதில்லை யென்னை மறுத்துணாத்துகின்றார்

நிலம்புன லனல்கால் - பிருதிவியப்புத் தேயுவாயுக்கள்,— காண - பிரத்தியட்சமாக சரீராதிப்பொருள்களை,—[நிறுத்திடுமழிக்குமாக்கும் பலந்தரும] - ஆக்கும் சிருட்டிக்கும்,— நிறுத்திடும் - திதிக்கும்,—பலந்தரும் - அதனூற போகத்தைக் கொடுக்கும்,— அழிக்கும் - சங்கரிக்கும்,— ஒருவன - அபபிரத்தியக்ஷனாய்ச் சேதனனு யொருகர்த்தா,— இங்கு - இந்தககாரியத்து,— பணணிடவேண்டாம் - செயயத்தககதில்லை,—எனனில் - என்று நீ சொல்லுகில், "பூதாதியீறு முதலாக துணையாகப் பேதாய் திதியாகும்" என்று சிவஞானபோதத திருத்தலால்,நிற்றலாகிய திதி தோற்றமீருகிய சிருட்டி சங்காரஙகளை முனபின காணபியாதிராது. அப்படிப் பூதஙகளினிருக்கும திதியும் அப்படி யன்று,—இலங்கியதோற்ற நிற்ற வீறிவை யிசைதலாலே-மனத்து ஜதித்த சிருட்டி திதி சங்கார சமபந்ததிதினுல், பூதங்களுங காரியமென்றுகொணடு அவற்றைத் தோற்றுவிதது நிற்பித்துப் போககும்பொருட்டு,—தனககுத் தோறற நாசமில்லாத,—நலஙகிளர் நாதன - சாட்குணணியபரிபூரணனு யிருக்கின்ற காத்தா,— வேண்டும் - விரும்பபபடுவன.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

எ - து. நான்கு பூதங்களுள், வாயு ஒழிந்த மூன்று பூதங்களையும் நிலைபெறுத்தித் தான் அவற்றது சமுகத்தி னிலைபெ

றும். அங்கி ஏனை மூன்று பூதங்களையுமழித்துத் தான் அவற்ற
து சமுகத்தி னழிவெய்தும். அப்பு ஏனை மூன்றுபூதங்களையுந்
தோற்றித் தான் அவற்றது சமுகத்திற்றோன்றும். பிருதிவி ஏ
னை மூன்றுபூதங்களினின்று நுகரப்படும் பயனைப் பயப்பித்துத்
தானும் அவற்றது சமுகத்திற் பயன்படுதலையுடைத்தாம். இ
ங்ஙனஞ் செயப்படுபொருட்கு வினைமுதல் வேறாய் நின்று காரி
யம் நிகழ்த்துதல் கண்கூடாக நிகழ்தலின், இவையே தம்முள்
ஒன்றனை யொன்று பண்ணவல்லமையுற, வேறொருவன் வேண்டற்கு
வினை முதலாதல் மிகையாமெனின்? அற்றன்று. இந்நான்கு
பூதங்களுமொப்ப முத்தொழிற்படுதலான் இவை ஒன்றனைக்
காரியப்படுத்துமாற்றல் உடையனவல்லவாயின, இவைபோல
முத்தொழிற் படுதலின்றி மேம்பாடுடையானொருவனே இவற்
றைத் தொழிற்படுத்தற்பொருட்டு வேண்டப்படுமென்பதாம்.

எதிர்நிரனிறைபாக வைத்துரைக்க.

இவ்வாறன்றி மேலைச்செய்யுளின் பொருளே பொருளாகக்
கொண்டு கூறியதுகூறலெனும் வழுப்படவுரைப்பாருமுளர்.

நலங்கிளர்நாதனென வியையும். நலம் மேம்பாடு.

இவையிரண்டு செய்யுளானும் உலகம் முத்தொழிலுடைத்
தெனப்தனை யுடம்பட்டுத் தருபவனொருவன் வேண்டாவென்
னும் உலோகாயதரிலொருசாரார்மதம்பற்றி யாசங்கித்துப்
பரிகரிக்கப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மீள வுலகாயுதன் நாலுபூதங்களுங் கூடின சமவாயத்தி
லே பிரபஞ்சந் தோன்றிநின் றழியும், ஆகையால் ஒரு கத்தாவே

ண்டுவதில்லையென்று சொல்ல; அவனை நோக்கி மேல் மறுத்தருளிச்செய்கிறார்.

நிலம்புன லனல்காலென நிறுத்திடு மழிக்குமாக்கும் பலக்கருமொருவனிற்கு பண்ணிடவேண்டாவெனவில-பிருதிவி யப்பு தேயு வாயுவென்று சொல்லப்பட்ட நாலு பூதங்களுங் கூடின சமவாயத்திலே எல்லோருங் காணவே தோற்றிவித்தும் நிறுத்தியும் அழித்தும் பல பிரயோசனங்களையுந் தாநிற்கும்; ஆகையாலே இந்த நாலுபூதங்களுமொழிய வேறேயொருவன் இவையிற்றை யுண்டாக்க வேண்டுவதில்லையென்று நீ சொல்லில?—இலங்கிய தோற்றநிற்ற லீறிவை இசைதலாலே - விளங்காநின்ற சிருட்டியும் திதியுஞ் சங்காரமு மிவை மூன்றும் பிரபஞ்சத்துக் குண்டா யிருக்கையாலே,—கலங்கிடா தோற்றநாசந் தனக்கிலா நாதனவே வேண்டும்-இந்த மூன்று தொழிலையுஞ் செய்கைக்கு நன்மை மிக்கிருக்கப்பட்டாநின்ற முதலு முடிவுந் தனக்கில்லாததொரு கர்த்தாவுண்டாக வேணும்.

இந்தத் திருவிருத்தமிரண்டிற்கும் பிரமாணம் 'உதிப்பதும் ஈறும்,' என்ற திருவிருத்தத்துக்கு இட்டப் பிரமாணத்திலே கண்டுகொள்க. இது வன்றியும் சிவபுராணம் "ஆக்கமளவிறுதியில்லாதனைத் துலகு-மாக்குவாய் காப்பா யழிப்பா யருடருவாய்" என்னு மது கண்டுகொள்க.

திருவாசகம்-க-செய்.

இதனாற் சொல்லியது நாலுபூதங்களுங் கூடின சமவாயத்திலே சிருட்டி திதி சங்காரமுண்டாகா தென்றும், இந்த மூன்று தொழிலுந் தானசெய்கச் செய்தேயும் இவையிற்றிற் றோய்வற நிற்கிற கர்த்தா வுண்டென்னுமுறைமையையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

கால்காணநின்றுத்திடும் - நான்கு பூதங்களுள் வாயு வேனைமூன்று பூதங்களையு நிலைபெறுத்தித் தானவற்றது சமுகத்தினிலைபெறும்,—அனலழிக்கும் - அங்கி யேனைமூன்று பூதங்களையு மழித்துத் தானவற்றது சமுகத்தி னழிவெய்தும்,—புனலாக்கும்-அப்பு வேனை மூன்றுபூதங்களையுந் தோற்றித் தான் அவற்றது சமுகத்திற் றோன்றும்,—நிலம் பலந்தரும் - பிருதிவி யேனைமூன்று பூதங்களினின்று றுகாப்படும் பயனைப் பயப்பித்துத் தானவற்றது சமுகத்திற் பயன்படுதலை யுடைத்தாம். இங்ஙனஞ் செயற்படு பொருட்கு வினைமுதல் வேறாய்நின்று காரியநிகழ்த்துதல் கண்கூடாகநிகழ்தலின - ஒருவனிங்குப்பண்ணிட வேண்டாவெனனில்,—இவையே யொன்றனையொன்று பண்ணவலையும், வேறொருவனினைடைக்கு வினைமுதலாதன் மிகையாமெனின்? அற்றன்று,— இலங்கியதோற்றநிற்றல் வீறிவை யிசைதலாலே - விளங்கியவிநாசனகு பூதங்களுமொப்ப முத்தொழிற்படுதலா லிவை யொன்றனைக்காரியப்படுத்து மாற்றலுடையன வன்மையின - தோற்றநாசந் தனக்கிலா நலங்கிளர் நாதன் வேண்டும்,—இவைபோல முத்தொழில் படுதலின்றி மேம்பாடுடையானொருவனே யிவற்றைத்தொழிற்படுத்தற்பொருட்டு வேண்டப்படுமெனபதாம்.

இவை யிரண்டு செய்யுளானும் உலக முத்தொழிலுடைத் தென்பதனை யுடன்பட்டுத் தருபவனொருவன்வேண்டா வென்னு முலகாயதரி லொருசாரார் மதம் பற்றி யாசங்கித்துப் பரிகரிக்கப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை



மேற் புத்தரிற் சௌத்திராந்திகனை நோக்கிக் கர்த்தா
வனாதியிலே நிகழ்ந்தானென வுணர்த்துகின்றார்.

சார்பினிற் றோன்றுமெல்லாந் தருபவ னில்லை
யென்னிற், றேரினில் லதற்கோ தோற்ற முள்ளதற்
கோநீ செப்பாய், யோரினில் லதுவுந் தோன்றா துள்ள
தே லுதிக்கவேண்டா, சோர்விலா திரண்டுமின்றி நிற
பது தோன்றுமன்றே. (௫)

| | |
|---|---|
| (இ-ள்) சார்பி னிற்றோன் றுமெல்லாந் தருபவனில்லை யெனனில் | பஞ்சகந்தங்களுடைய வாச்ரயவிசேடத்தாலே பூதங்கடோன்றுவதன்றி வேறொருகர்த்தா வுண்டாக்க வேண்டுவதில்லையென்று நீசொல்லில் ? |
| தேரினில்லத ற்கோ தோற்ற முள்ள தற்கோ நீசெப்பாய் | அது தோற்றமில்லாதபொருட்கோ உள்ளபொருட்கோ வதனை நீவிசாரித்துச்சொல்லாய் |
| ஓரினில்லதுவு ந்தோன்றாது | உணருங்காலத் தாகாசத்திற் புட்பம்போல வில்லாததொருக்காலு முண்டாகமாட்டாது |
| உள்ளதே லுதி க்கவேண்டா | காரியமெப்பொழுது முள்ளதாகி லிப்பொழுதுலகத்தினைக் காரியப்பட்டு வரவேண்டுவதில்லை |
| சோர்விலா தி ரண்டுமின்றி நிற் பது தோன்றும ன்றே | இவ்விரண்டுமின்றிப் பாரிசேட வநுமானத்தான் மாயையினிடத்திலே யுதியாநிற்பதியாதொன்றதுவேதோன்றும். எ-று (௫) |

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

"தருபவனொருவன் வேண்டும்"

என்ற பதத்திற்குப் பௌத்தரிற்சௌத்திராந்திகன்சார்பிலுற்சகத்துண்டாவதொழிய வேறொருகர்த்தாவேண்டாவெனன; அதைநிராகரித்துச சகத்திற்குக கர்த்தாவுண்டெனறதை மேன மூன்றுவிருத்தத்திலே கூறுகின்றது.

சார்பினிற் றோற்றுமெல்லாந் தருபவனில்லை யெனவில் - ரூப ரஸ கந்தமாவது மூர்த்தமாயிருக்கிற பூதங்களுடைய சந்தானம

இந்த ருபாணுக்களி னுடைய உபசயமானது † ஸ்தம்ப குமபாதியா யிருக்கிற பாஹ்யார்த்தம்

† தூண்கல முதலாயிருக்கிற வெளிபானபொருள்.

ப்ருதிவியின் றருமம §ஸ்தைரியமும, ருபமும்,

§ உரம்.

ஜலத்தின றருமம் * த்ரவத்துவ ஸ்நேஹாதி

* பெருகல், தொட்டா லொட்டுதல்

தேஜசுக ¶கௌஷ்ணிய சுக்லபாஸ்வரத்துவாதி

¶ சூடு வெளுத்த பரகாசமுதலிய.

வாயுவுக்கு ¶சமீபகரண வேகாதி

¶ கிட்டல் ஓடல்.

வர்ணம - கந்தம - இரசம் - உரூபம் - ஒஜசுக்களாயிருக்கிற நான்கு பூதங்களின சங்காதமே பிண்டம்

அப்பிண்டத்தினின்றும் பிருதிவ்யாதி யுண்டாம்.

அப்பிருதிவியாதிகளாவது - பரமாணுக்களின் சமூகம்.

சுரோத்திர துவக்கு சக்ஷு சிங்ஙுவை யாக்கிராண மைந்திற்கும் பிரதய பஞ்சகமென்று பெயர்.

வாக்கு பாத பாணி பாயு உபஸ்தங்க ளைந்திற்குங் காரக பஞ்சகமென்று பெயர்.

சைதன்னிய சமுதாயத்திற்குப் புத்தியென்று பெயர்.

அதிற் காரணபூதமாயிருக்கிற வேகதேச மனசு.

இப்படியே யொன்றினுடைய சாரயினு லொன்றாகத் தானேயுண்டாவதன்றி யிதனை யுண்டாக்குவா ரொருவ னில்லையெனின்,—

தேரி லில்லதற்கோர் தோற்ற முள்ளதற்கோர் நீ செப்பாய் - விசாரிக்குமிடத் துள்ளதற்கோ வில்லாததற்கோ தோற்ற மென்றுசொல்லுகிறாய்,—

ஓரி னில்லதுவுந்தோன்று துள்ளதே லுதிக்கவேண்டா - அறியுமிடத் தில்லாத தாகாய — குசுமம்போல வொருகாலு முண்டாகாது உள்ளதே யாமாகிற தோற்றஞ் சொல்ல வேண்டுவதில்லை,—

— குசமம் - பூ

சோரிலா விரண்டுமின்றி நிற்பது தோன்றுமன்றே - அழிவற்ற காரிபரூப மல்லாததுமா, யசத்துமன்றிநின்ற தொருகாரணத்திற் காரியமான துண்டாக வேண்டுமென றிதன் பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பௌத்தன் புத்ததேவனை குருவாயிருந்தன் மாத்திரமன்றி உலககர்த்தாவல்லன், பஞ்சக்கந்தங்களினது கூட்டத்தினு

லுலகுண்டாம்,கர்த்தா வேண்டுவதில்லை யென்ன; மறுத்துணர்த்துகின்றார்.

சார்பினிற் றோன்றுமெல்லாம் -பஞ்சகந்தத்தினது கூட்ட விசேடத்தாற் பூதமுதலாகிய பொருள்களெல்லா முதிக்கும்,— கருபவனில்லையெனனில் - சிருட்டிமுதற் கிருத்தியகிருத்தாய் முனனீசொனன முறைமையனுகிய கர்த்தாவில்லையெனறு நீ சொல்லில், கர்த்தாவுண்டில்லை யெனபது பினபேசுவோம். இப்போது நீ நிருபாதான வாதியனறோ,—தேரினில்லதற்கோதோற்ற முளதறகோநீ செபபாய்-விசாரிக்கிற் றோற்ற முள்ளபொருட்கோ இல்லாதபொருட்கோ நீ சொல்,—ஓரில் - லை,—இல்லதுவுந் தோனறு துள்ளதே லுதிக்கவேண்டா -இல்லாத முயற்கொம்பு முதலியவு முணடாகாது, உதித்துளதாயிருக்கின்ற கடபடாதியு முண்டாகமாட்டாவாம்,—சார்விலாதிரணடுமினறி நிற்பது - அப்படியுள்ளது மில்லது மினறி யுளளதாயிருப்பது,—தோன்றுமனறே - உண்டாகுந்தானே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

எ - து. கணபங்கமாகிய வெல்லாப் பொருள்களுள்ளும் முறகணததிற்றோன்றிய பொருள பிற்கணத்திற்றோனறும் பொருட்குச சாாபாய் மேம்படுதலின், எல்லாப பொருளும் வித்தினகேட்டினங்குரம்போல அவ்வச்சார்பிலே தோனறுமெனச சவுததிராநதிகா முதலியோர் மதம்பற்றிக் கூறலமையும்; இதற்கொரு கருத்தாத் தோற்றநாசமின்மைபற்றி மேம்பாடுடையனுயுளனுதல் வேண்டாவெனின்? அற்றனறு. நீசார்பிற் றோறறங்கூறியது இல்பொருட்கோ உள்பொருட்கோ? இல்.

பொருட்காயின், அது மூபற்கோடுபோல ஒருஞான்றுந் தோ
னறுமாறில்லை. அற்றேற் குடம்போல உள்பொருட்குந் தோ
ற்றம் வேண்டாமையின், மாததிமிகர்மதம்பற்றி இல்லதுமன்றி
யுள்ளதுமன்றி அநிர்வசனமாய் நிற்பதொருபொருள் தோனறு
மெனக கோடுமெனபதாம்.

இல்லதுவுமெனனுமும்மை சிறப்பு.
உடமபடுமெய்பெறுதல் இலேசாற் கொள்க.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

—o—

பஞ்ச கந்தங்களுங் கூடின சமவாயத்திலே, உருவம் வீடு வழக்குஎனனும் நாலும். தநதஞ் சார்புகளிலே பிரபஞ்சந் தோனறுமதொழிந்து ஒருகததா வேண்டுவதில்லையென று சொன்ன புததரில் சௌததராநதிகனை நோககி ; மேல் மறுததருளிச்செய்கிறுா.

சார்பினில் தோன்றுமெல்லாந் தருபவனில்லையென்னில் — சர்வமும் உருவம் அருவம வீடு வழககு எனறு சொல்லப்பட்ட நாலிலுட் அநதந்த சார்புகளிலே ஒனராய்த்தோனறி சொல்லாநிற்கும்; இவை யிறரையுண்டாக்குகைககு ஒரு கததா வேண்டுவதில்லையெனறு நீசொல்லில்,—தேரிநிலலதற்கோ தோற்ற முள்ளதற்கோநீசெப்பாய்-விசாரிததுப் பார்க்கில் நீதோன்றுமெனகிறதாய் உளளது தோனறுமென்கிறுயோ இல்லாதது தோன்றுமென்கிறுயோ சொல்லாய்,—ஓரிவில்லதுவுந்தோன்முது - ஆராயுமிடத்து இல்லையாயிருப்பதொன்று ஒருகாலத்திலு முணடாகமாட்டாது,—உள்ளதே லுதிக்கவேண்டாம்-எப்பொழுது முண்டாயிருப்ப தொன்று புதிதாகத் தோன்ற வேண்டுவதில்

லை,—சோர்விலாவிரண்டுமின்றி நிற்பதுதோன்றுமன்றே - இப்படி யுண்டாயு மில்லையாயு நிற்சத்ககக பொருள்க ளிரண்டுமின்றியே ஆவதுமழிவதுமாய்நிறப தொருபொருள அதற்கே தோற்றம். எ-று.

சாரயினிற் றேனறுமெல்லாந் தருபவ னில்லையென்றும் புத்தன சொன்னதறகுப பிரமாணம் பரபடசம. "ஒருவனென றேசுபபடடா னுருவாதி யைந்துங்கூடி, வருபவனென றுரைாத தல் தொகையுண்மைவழக்கதாகு,முருவமஙகாதியாய வைகதை யுமொருவனென று, தருவதுதொகையினின்மை வழககதாஞ சாற றுஙகாலே" எனறும "உளவழக கிலவழக குளதுசாாநத வுளவழகதோ, டுளது சாாநதவினமை வழககுடனினமைசாாந்த, வுளவழககினமைசாாநத வில்வழக்கெனறேராறு,முளவழக் குணாவுண்டெனகை முயற்கோடினறி லவழக்கே."எனறும."உணாவுசாாநதுணாவுதிகளை யுள்ளதுசார்நதவுணமை, யுணர்வு பினினறுமெனகையுளளதுசார்நதவினமை, யுணாவுமுனபினறி தகோனற லிலலதுசாாநதவுண்மை, யுணரிநல்லதுசாரினமை யுள்ளங்கை ரோமநாமே." எனனு மதுங் கணடுகொளக.

சிந - பா - சௌ - மத ம, எ - ௧0 - ௧௧ - செ.

இரண்டுமினறிநிறபதுதோற்றமனறே-அவனைமறுத்தது இதற்குப் பிரமாணம "எனறுமிலா தொனறினறுய் வருமுருவம் வித்திறெழுமரமபோலேநினற-விதநினு னடாய்நினறெழுவகாண்னறதேல விததினமரங்கணட தில்லையென்னி னெற்கமுகாய் கீளாது நெல்லாயே நீரு, மொனறிலொன் றங்கிலாமையினு லுதியா காரணம் பெற்றிருப்பது காரிய மதவு முளளதாகு, மனறாமதிககலைபோலக கததைநது மருவியுள தெனு முறையுமாநதனையோ வினரே." எ-ம். உருவாதி கநதங்க ளைநதுங்கூடி பொருவனவே றொருவநிலை யென்றுரைக்கும்புத்தா, வுருவா

தியைத்தினையு முணர்பவராரென்ன வுணரும் விஞ்ஞானமெ
னறாய் ஞானமுணர்ந் தவரா, ருருவாதி பொருள் காட்டித் த
னைக்காட்டுஞ் சுடர்போ லுணர்வுபிறி தினையுணர்த்தித் தனை
யுணராததுமெனனி, னுருவாதிபொருளினையுஞ் சுடரினையுங்காணு
முலோசனம்போ லுணர்வுபொரு ளுணர்பவன வேறுண்டே"
எ - ம். கண்டுகொள்க. சித-பர-சௌத-மறுதலை-கசு-உசு-செ.

இதனாற்சொல்லியது பிரபஞ்சம் சந்தானத் தொடர்ச்சி
யாக வொன்றிலே யொன்றுக்தானே தோன்றுமென்ற சவுத்
திராந்திகனை மறுத்தது; பிரபஞ்சம் தானேதோன்றுமென
றும, தோற்றுவிக்கைக் கொருகர்த்தருண்டென்றும, உள்ளது மில்
லதுதோன்றுமென்றும், உள்ளகாலத்திலே உள்ளகாரியந் தோ
ன்றுமென்னு முறைமையையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(க்ஷணபங்கமாகிய வெல்லாப்பொருள்களுள்ளும் முற்கண
த்திறந்தொழிந்த பொருள் பிற்கணத்திற்றோன்றும பொருட்கு
ச் சார்பாய்மேம்படுதலின) எல்லாஞ் சார்பினிற்றோன்றும்-எ
ல்லாப்பொருள்களும் வித்தினைக்கெட்டி னங்குரம்போல அவ்வச்
சார்பிலே தோன்றுமெனச் சவுத்திராந்திகா முதலியோர் மத
ம்பற்றிக் கூறவமையும்,—தேரின - ஆராயுமிடத்து,—தருபவனி
ல்லையென்னின் - இதற்கொருகருத்தா தோற்ற நாசமின்மை
பற்றி வேம்பாடுடையனாயுளனாகல் வேண்டாவெனின்? அற்றன்
று,—தோற்ற மில்லதற்கோ வுள்ளதற்கோ நீ செப்பாய் - சா
ர்பிற்றோற்றங்கூறியது இப்பொருட்கோ வுள்பொருட்கோ,
நீகூறுவாயாக,—ஓரின் - உணருமிடத்து,—இல்லதுவுந் தோன்
றாது - இல்பொருட்காயின முயற்கோடுபோல வொருஞான்

றுந் தோன்றுமாறில்லை,—உள்ளதே லுதிக்கவேண்டா - அற்றே ல் குடம்போல வுள்பொருட்குந் தோற்றம் வேண்டாமையி ன,—சோர்விலாதிரண்டுமின்றி நிற்பது - மாத்திமிகர் மதமப த்றி யில்லதுமன்றி யுள்ளதுமன்றி அநிர்வசநமாய் நிற்பதொரு பொருள்,—தோன்றுமன்றே - தோன்றுமெனக் கோடுமென்ப தாம.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலதற்குச் சற்காரியவாதஞ் சாதித் துப் புறனடை யுணர்த்துகிறா.

உள்ளது மிலதுமின்றி நின்றதொன் றுளதேலு ண்டா, மில்லதே யில்லையாகுந் தோற்றமு மிசையாதா கு, முள்ளகா ரணத்தி லுண்டாங் காரிய முதிக்குமண ணி. யில்லதாம் படங்கடாதி யெழுமரு மியறுவா ளல். (௬)

| | |
|---|---|
| (இ-ள்.) உள்ள துமிலதுமி ன்றி நிற்ற தொன் றுளதே லுண்டாம | யாதொருபொருளுண்டானதுமன்றி யில் லையானதுமன்றி நிற்பது யாதொருகாரண மாகிய மாயையிற் பரம்பரையாகிய பௌதி கத்துக்குத் தோற்றமுண்டாகாநிற்கும். |
| இல்லதே யில் லையாகுந் தோற் றமு மிசையாதா கும் | உவர்ப்பூமியின்கண் வித்துண்டா யிருந்த தாயினு மதினிடத் தங்குரோற்பத்திக்குக் காரணமில்லாதபடியாலே யவ்விடத்தில்லை யாகும் |
| உள்ளகா ரண த்தி லுண்டாங் | பசுவின்கொம்பிலே யங்குரோற்பத்திக் குக் காரணமுண்டாகையால் காரியமாகிய |

காரிய முதிக்கும் நாண லவ்விடத்துண்டாகாநிற்கும். அஃதெ லைபோலவென்னில்?

மண்ணி லில் லதாம் படங்க டாதி யெழிறு மி யற்றுவானால் — மண்டொழி னனறுகவல்ல குலாலன் கடத்தையுண்டாககுவ தொழிந்து படததை யுணடாககமாட்டான, படகாரியமவல்ல குவிந்தன றாதவினசட் படததை யுண்டாக குவதொழிநது கடததை யுணடாககமாட டான, காரியோற்பததிசகுக காரணமில்லாமையால். எ-று.

இதற்கு மதங்கததம வாயுவவியதது மறிக.

"இல்லாதன பிறக்துளளன மாயுமென நிம்மயகக, நல்லாகம வறிவாாககில்லே" என்னும திருவாக்கினுமுணர்க. (க)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

உள்ளதுமிலதுமன்றி நினறதொனறுளதே லுண்டாம்-காரியரூபமாக வுள்ளது மல்லாமற் காரணுதமனுதி யில்லாததுமல்லாமலொருபதார்தத முண்டாகு லதிற்பிரபஞ்சமுணடாம,—

இல்லதே லில்லையாகுந தோற்றமு மிசையாதாகும் - அப்படி யொருவஸ்து வில்லையாகிற் பிரபஞசமு மில்லையாம்,உற்பத்தியுண்டென்று சொல்லுகிறதுங் கூடாது,—

உள்ளகாரணத்தி லுண்டாங்காரியம் - சத்தாயுள்ள காரணத்திற் காரியரூபமாகிற பிரபஞ்சமுண்டாம்படி யோருபாதாககாரணமாக வொருவஸ்து வுண்டாகில்,—

உதிக்கும் - அக்காரணத்திற் றுனே பிரபஞ் முண்டாம். ஒரு காத்தா வேண்டாவெனின? காத்தாவின்று லல்ல துண் டாகா தெனபதற் குகாரணம்

மண்ணில்லாகாம் படங்கடாதி யெழிரு மியற்றுவானுங்- பூமியிர படத்திர்குச சமவாயி காரணமான தந்துசகளும் கடத்திற் குபாதான காரணமாகிய மிருதபிணடமு மெப்படி யுணடாயிருசசவுந் தானே படமுங்கடமு முண்டாகாது. தந துவாய குலாலனு லழுருபெற வெப்படி யுண்டாயிற் றப்படியே யுபாதான காரணமாகிய மாயையினின்றும் பிரபஞச மீஸ்வர ஞுலுணடாமென றிதனபொருள

---

# ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

ஆகதச் சற்காரியவார்ததையைததானே சமுத்தரித்து நி றுத்துகினறா.

உள்ள து மில துமின்றி நின்றதொன்றுளகே லுணடாம்- வியத்திரூ-மெனசிற காரியரூபததிலுலே உளதுமினறி, சத்தி ரூபமெனகிற காரணரூபததிலுலே யில்லது மினறி, இருப்ப தொரு பொருளுணடாமாகில் அது உற்பத்தியாம்.—இல்லதே ல் - இப்படி பொருபொருளினறேல்,—இல்லையாகும் தோற்ற மு மிசையாதாகும - உற்பத்தியும் பொருநதாதாகும்,— பின னைச்சித்தாநதமெப்படியெனனிறசொல்வாம்.—உள்ளகாரணத் தில - காரிபகாலததில் வியததிருபமாய்ச் சத்தாயிருக்கு முத ற்காரணத்தில்,—உண்டாங் காரியம் - காரணகாலத்திற் சத் திருபமாய்ச் சத்தாயிருக்குங் காரியம்,—உதிக்கும் - உற்பத்தி யாம். காரியங் காரணததில்லா துண்டா மென்னில்?—மண்

ணிலில்லதாம் படம் - சத்திருபமாய் முனனதில்லாமையால் நூலெயடாமல், மண்ணைக் குலாலனெடுககும்படி முனசூசகு மித இருநது இருகாரண மதுகாரண மல்லவென்றறியமிகரு வ காரிபமாகும,—சடாதி இயற்றுவானுல - கூலாலனுல்,—எ ழிரும - பிரகாசிதலுண்டாம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அங்ஙனம் அநிர்வசனமாய்க கூறப்படும் பொருடானென்று உணடோ இல்லையோவெனக சடாயிறாகரு, உண்டெனி லுளபொருளேயாம,இனறெனி லி பொருளே யாமெனப்பட்டு அநிரவசனமெனறது போலியாபொழியும அல்லதூஉம், அநிர்வசனபபொருள் சூனியமாகலின அசற்குத தோறறமுங கூடாது: இவவாறு சவுததிராந்திகா முதலியோர் கூறும இப்பொருட்கும்,மாதமிகா முசலியோா கூறும் அநிரவசனபபொருட்குத தோற்றங கூடாமையின, பாரிசேட வளவையாற் காரணவ காரிபமிரணடும் உள்பொருளேயாய், காரணத்தினின்றுங் காரியம ஒருகருததாவால் வெளிபபட்டுத தோனறுமெனபது, குயவனுவான திசிரிமுதலிய துணைககாரணங்களை மஙகுஞகிய முதற்காரணததினக ணுய்ப்ப, அதனினின்றும ஆடைமுதலிய காரியங் தோனறுறு குடஞ் சால் கரகமுதலிய காரியமே வெளிப் படுத தோனறுதலின, அவவெதிர்மறை முகத்தானும் உடமபாடு முகததானும் அறியப்படுமெனபதாம்.

உள்ளது மிலதுமின்றி நின்றதொன் றுளதேலென்றது அநுவாதஞ் செய்துகொண்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---o---

உள்ளதுஈதோன்றாது இல்லாததுந் தோன்றாதென்றால், பிரபஞ்சந் தோனறுகிறபடி யெப்படியென்ற புத்தனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

உள்ளதுமில்லதுமின்றி நின்றதொன்றுளதேலுண்டாம் - இயாதொருபொருளுண்டானது மன்றி யில்லையானதுமன்றி நிற்பது, அப்படி பொருபோருளுண்டாகில் அசற்கே தோற்றமுண்டாகா நிற்கும்,—இல்லதே லில்லையாகுந் தோற்றமு மிசையாத் 'கும் - இப்படியே பொருளுளதல்லையாகில், பிரபஞ்ச காரியமு நேராக வில்லையாய் விடும். இதனை யொழிந்து அதற்கொரு தோற்ற முண்டாகாது—உள்ள காரணத்தி லுண்டாங் காரியமுதிக்கும்-அதுஉண்டாகத்தக்க காரணத்திலேஉண்டாகப் பட்ட பிரபஞ்ச காரியங்களுண்டாம். அதெனபோலவெனனில்? மணணிலில்லதாம் படங் கடாதி யெழிற்று மியற்றுவானால்-மண்டொழிலிக்குவல்ல நூலால னெனனிலும் மண்ணைக்கொண்டு கடாதிகளை யுண்டாக்குவன, இதனையொழிந்து படாதிகளையுண்டாக்குவதில்லை, அததனைப்போலும். எ-று.

இதனாற் சொல்லியது உள்ளது தோனறவேண்டுவதில்லையென்றும, இல்லதற்குத் தோற்ற மில்லையென்றும், இவ்விரண்டுமன்றி இருப்பதொரு காரணத்திலே காரிய மாகிய பிரவஞ்சம் கத்தாவாலே உண்டாமெனனும முறைமையயு மறிவித்தது உறு

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---o---

உள்ளதுமில்லது மின்றி நின்றதொன்று - அங்ஙனம் உள்ளதுமில்லது மல்லவா யதிர்வசனமாய்க் கூறப்படும் பொரு

டாஞென்று உண்டோ இல்லையோவெனக் கடாயினூர்க்கு,—உளதேலுண்டாம்-உண்டெனி னுள்பொருளே யாம்,—இல்லதே லில்லையாகும் - இன்றெனி லில்பொருளேயா மெனப்பட் டனிர்வசன மென்பது போலியா மொழியும்,—தோற்றமு மிலை யா தாகும் - அல்லதூஉம் இவ் வநிர்வசநப் பொருள் சூனியமா கலி னதற்குத் தோற்றமுங்கூடாது. இவ்வாறு சவுத்திராந்திகர் முதலியோர்கூறு மில்பொருட்கு மாத்திமிகர் முதலியோர் கூறு மநிர்வசனப் பொருட்குந் தோற்றங் கூடாமையிற் பாரிசேட வளவையால்,—உள்ள காரணத்தில் உண்டாங்காரிய முதிக்கும் - காரணகாரியமிரண்டும் உள்பொருளேயாய்க் காரணமாய்க காரணத்தினின்று முண்டாகும் காரியம் ஒருகருத்தாவால் வெளிப்பட்டுத் தோன்று மெனபது,—இபற்றுவானூன மணணில் - குயவனூவான் திகிரி முதலிய துணைக்காரணங்களை மானூகிய முதற் காரணத்தின்க ணுப்பப வதனினின்றும்,—படமிலதாம் - ஆடை முதலிய காரியந் தோன்றுது,—கடாதி யெழிறரும் - குடஞ்சால்கரகமுதலிய காரியமே வெளிப்பட்டுத் தோனறுதலின் அவ்வெதிர்மறை முகத்தானு முடம்பாட்டு முகத்தானு மறியப்படுமென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



*மீளவு மவனைநோக்கிக் காரணருபமுங் காரியரூப*
*மென் றிரண்டுளவென் றுணர்த்துகிறூர.*

ஒருபொரு ளொருவனின்றி யுளதில தாகுமென்னின், றருபொரு ளுண்டேயின்றுந் தன்மையின் றின்றேலுண்டாய், வருதலின் மிலதுகாரிய முதலுள தாகு

மெனவிற, கருதுகாரியமுமுண்டாய்த் தோற்றமுங் கருத்தாவாலாம். (எ)

(இ-ள்) ஒருபொருளொருவனின்றி யுள திலதாகுமெனின — ஒரு கர்த்தாவையின்றி யொரு பொருளுண்டாயு மில்லையாயும் வருமென்று நீ சொல்லில்?

ஒரு பொருளொருகாலின்றுந் தன்மையின்று — எப்பொழுது முண்டா யிருக்கத்தக்க பொருளுண்டாகி யில்லையாகத்தக்க முறைமையில்லையாம்.

இன்றே யுண்டாய் வருதலின்று — எப்பொழுது மில்லையான தொன்றுண்டாய்ப் பின்புவருவது மில்லை.

இலது காரியமுந் துளதாகுமெனில் — காரியமானது மழிந்துபோங் காண், காரணமான தழியாமற் கிடக்குமெனவில்?

கருது காரியமு முண்டாய்த் தோற்றமுங் கருத்தாவாலாம — நீ காரணத்தை யுண்டென் றங்கீகரித்தபோதே காரியமுண்டாகையினாலே வினையிரண்டுமொரு கர்த்தாவாற் றோற்றமுண்டாமென்று கருதுக. எ-று.

இதற்கு நிச்சுவாசோதகரம். (எ)

---

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.

———o———

ஒருபொருளொருவனின்றி யுளதிலதாகுமெனில் - ஒரு வஸ்துவானது ஜகதீஸ்வரனை யன்றித் தானே யுற்பத்தியையு நாசத்தையு மடையுமெனின்,—ஒருபொருளுண்டேல் லின்றாந்

ண்மையின்று - ஸ்வதச்சித்தமாக வுண்டான வஸ்துவுக்கு நாச மவாராது.—இன்றேலுண்டாய் வருதலின்று - நாசத்தையடை யுமாயின மீளவுமுண்டாகமாட்டாது —இலதுகாரிய முதலுள தாகுமெனனில் - நீர் காரணரூபமாக முதலுண்டாமென்ற தில்லை,முதலே காரியமே யுமாகெனின்,—கர்த்துகாரண முண்டாய்த் தோற்றமுங் கர்த்தாவாலாம் - விசாரித்துப்பார்; காரியமுண் டெனகையினு லிதற்கொரு காரணமுமுண்டு, அக்காரணத்திற் காரிய முண்டாவது மொரு கர்த்தாவினுலென விதன்பொருள்

இம்மூன்று விருத்தத்தினுஞ் உபுத்தாக னுல்வருடையமத்தையுமறுத்தது.

இதன விஸ்தாரமு மறுப்பும் பரபக்ஷத்திற் சொன்னோ மனுனாக.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

முதற்காரணத்தின் முனவிருந்து காரியந் தோன்றுமென நீர், அது நிமித்தகாரணனின்றித் தானே பிரகிருதியிற் றேன்று மென்று சாங்கியனசொல்ல மறுத்துணாததுனைரு்.

ஒருபொருள் - காரியம,—ஒருவனின்றி - நிமித்தகாரணனை யன்றி,—உளதாகுமென்னின - முதற் காரணத்திற் றோற்றி யொடுங்குமென்று நீ சொல்லின்,—தருபொருள் - அந்த முதற் காரண முற்பவிப்பித்த வஸ்து,—உண்டேல்-உள்ளதேல்,—இன ருந்தன்மையின்று - நாசத்திற்குக் காரணமில்லாமையால் கெடு பெற்றிருக்கும் தானே,—இன்றேல் - நாசமானுல்,—உண்டாய் வருதலின்று - நிமித்த மில்லாமையால் காரணரூபமாயிருப்பதன்றிக் காரிய ரூபமாய்த் தோற்றுவதில்லை,—முதலுளதாகும் - முதற்காரண முள்ள பொருளாகும்,—இலது காரியம் - அதிற்

ரென்றுங் காரியம், [சிப்பியிற் றோன்றும் வெள்ளிபோல ஆ யாசமாய் அசத்தியமாம்,]—என்னில் - என்றுநீசொல்லில்,அது அசத்தியமன்று,—கருது காரியமு முண்டாய்த் தோற்றமுங் கர்த்தாவாலாம் - குற்றமற்ற பிரத்தியக்ஷப் பிரமாண முதற் பிரமாணங்களிற் உள்ளபொருளென்று பரீக்ஷிக்கப்பட்ட காரியம், முன சூக்குமிதது முதற்காரணத் துள்ளதா யதினுற்பத்தியுஞ் செய்பவனுலாகும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

எ-து. அற்றேல்-அவையிரண்டு மேலாமையிற் காரியப்படுவ தோர் பொருள் உண்டுமா யில்லையுமாய் நிற்கும், ஈரியல் புடைய தாகலின இதற்கொரு கருததா வேண்டப்படுவா னல்லனெனச சமணர்மதம் பற்றிக் கோடுமெனின? அற்றன்று உண்டு மில்லையு மாமென மாறுபட்ட இரண்டுதனமை ஒருபொருட் கிசைதல் கூடாது. இனிக் காரணரூபமாயுண்டு, காரியரூபமா யில்லையெனப தே உண்டுமில்லையுமெனறதற்குப் பொருளெனின? நனறு சொன்னாய். காரண காரியங்கட்குத் தம்முள் வேற்றுமையினமையிற் காரண முளபொருளாகவே காரியமு மதன்கட் சூக்குமரூபமா யுள்ளதாய் அது பினனர்த் தூலரூபமாய் விளங்கித் தோன்றுதல் ஒருவினை முதலானுமெனபது தானே போதருமெனபதாம்.

இன்னுமிச் சற்காரிய வாதத்தினகட் படுங் கடாவிடைக ளெல்லாம் "தந்துமுதல் காரகம்" என்னும் ஞானாமிர்த முதலியவற்றுட் காண்க.

இவை மூன்று செய்யுளானும் முறையே, இல்லது தோன்றுமென்னுஞ் சவுத்திராந்திகர் முதலியோர் மதமும், இல்லது முள்ளதுமல்லது தோன்றுமென்னும் மாத்திமிகர் முதலியோர்

மதமும், இல்லது முள்ளதுமாயது தோன்றுமென்னுஞ் சமணர் மதமும் பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து; வருமுறை யென்பதனு ற்பெறப்பட்ட சற்காரிய வாதத்தை வலியுறுத்தி கருபவனொ ருவன் வேண்டுமெனபது சாதிககப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

மீளவும் புத்தன் ஒரு காரணத்திலே நின்று பிரபஞ்சகாரி யங் கோனறுமிடத்துத் தானேதோனறித தானெயொடுங்கா தோ, இதற்கொரு கர்ததா வேண்டுவ 'தில்லையென்று சொல்ல; அவனைநோக்கி மறுத் தருளிச்செய்கிருர்.

ஒருபொரு ளொருவனினறி யுளதிலதாகு மென்னில் - ஒரு கத்தாவை யினறியே தேகாதிப் பிரபஞ்சந் தானே தோன்றி யொடுங்கும் என்று நீசொல்லில்,—தருபொருளுண்டேலின்றுந் தன்மையின்று - இந்தப் பிரபஞ்சந் தோன்றத்தக்க முதலுண் டாகில் இல்லையென்றுசொல்லு முறமை யுண்டாகாது.—இன் றே லுண்டாய் வருதலின்று-இல்லையான தொன்றிலே பிரபஞ் சந் தோன்றுமென்னில் உண்டாய் வருவது முண்டாகாது,— இலதுகாரிய முதலுளதாகுமென்னில்-காரியமழிந்து காரணங்கி டக்குமென்று நீசொல்லில்,—கருதுகாரணமு முண்டாய்த் தோ ற்ரமுங் கத்தாவாலாம் - ஆராய்ந் தறியுமிடத்து ஒருகாரணமு முண்டா யிந்தக் காரணத்திலே நினறு பிரபஞ்ச காரியமும் ஒ ருகர்த்தாவாலே யுண்டாம்.

இதனுற் சொல்லியது பிரபஞ்சந் தானேதோன்றி யொடு ங்காதென்றும், உள்ளதொன்று எப்பொழுது முண்டாயிருக்கை யினுல் தோன்றவேண்டுவ தில்லையென்றும், இல்லாத தொன்

றும் எப்பொழுது மில்லையாயிருக்கிறதற்குத் தோற்றமில்லையா யிருக்குமென்றும், காரணத்திலே நின்றுங் காரியம் ஒரு கர்த்தா வாலே யுண்டாமென்று முறைமையு மறிவித்தது.

இதற்குப் பிரமாணம் "சாரபிவில்" என்ற திருவிருத்தத் துக்கிட்ட பிரமாணத்திலே கண்டுகொள்க.

'சார்வு' 'உள்ளது' 'ஒருபொருள்' இம்மூன்றும் புத்தன்.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

---

ஒருபொருளொருவனின்றி-அற்றேலவையிரண்டு மேலாமை யின,—ஒருபொரு ளுளதிலது - காரியப்படுவதோர பொருளுண் டுமா யில்லையுமாகிநிற்கு மியல்புடைய தாகலின்,—ஒருவனின் றியாகுமென்னின - இதற்கொரு கருத்தா வேண்டப்படுவ தின றியே யுண்டாமெனச் சமணர் மதம்பற்றிக் கோடுமெனின? அ ற்றன்று,—தருபொருளுண்டேல்-தரப்பட்டபொருள் உளபொ ருளாயின,—இனருந் தனமையின்று - இல்லையாந்தனமை யி னமையி னுள்ளதேயாம்,—இனறேல் - இல்பொருளாயின்,— உ ணடாய் வருதலின்று - உணடாய் வருதலின்மையி னல்லதே யாம்,—ஆதலில் உண்டுமில்லையுமாமென மாறுபட்ட விரண்டு தன்மை யொருபொருளுக் கிசைதல் கூடாது,— மூதலுளதாகு ங் காரிய மிலதெனின்- இனிக் காரணரூபமா யுண்டுக் காரியரூப மாயில்லை யென்பதே யுண்டு மில்லையெனபதற்குப் பொருளென் னின?என்றுசொன்னும்; காரண காரியங்களுக்குத் தம்முள் வே ற்றுமை யின்மையின் காரண முள்பொருளாகவே,—கருதுகாரி யமுமுண்டாய்-கருதுகின்ற காரியமும் அதன்கண் சூக்கும ரூப மாயுள்ளதாய்,—தோற்றமும் கருத்தாவாலாம்-அது பின்னர்த்

நிலரூபமாய் விளங்கித் தோன்றுத லொரு வினைமுதலாலு மெனபது தாமே போதருமென்பதாம்.

இவை மூன்று செய்யுளானு முறையே இலது தோன்றுமென்னுஞ் சவுத்திராந்திகர் முதலியோர் மதமும், இலது முளது மலலது தோனறுமென்னு மாத்தியமிகர் முதலியோர் மதமும, இலதுமுளது மாயது தோனறுமெனனுஞ சமணர்மதமும் பற்றி யாசங்கித்துப பரிகரித்து; வருமுறை யெனபதனாற் பெறபபட்ட சற்காரிய வாததனை வலியுறுததி, தருபவன ஒருவன வேண்டுமெனபது சாதிக்கப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



மேலிரண்டு திருவிருததததாற் பட்டாசாரியன
மதமறுத் துணர்ததுகிறுா

காயத்தி னழிவுதோறறங கண்டன முலகிறகா
னே, நீபித்தை யுரைத்தவாறிங கென்னெனி னிகழ்
த்துமுண்மை, மாயத்த வுலகம்பூநீர் தீவளி வானமா
கி, யாயித்தா னென்றினென்று தோன்றிநின றழிதலாலே (அ)

(இ-ள) காயத்தி னழிவுதோ றறங் கண்டன முலகிற்கா ணோம் — இந்தச் சரீரம ஜடமானையினாலே தோற்றமுமழிவுங் கண்டோம், பிரபஞசத்தின கட்டோற்றமு மழிவுங் கண்டிலம

நீயித்தையுரைத்தவாறிங்கென் னெனின் — நீ யித்தைச் சொனன தெப்படி யென்று சொல்லுகிறாயாகில் ?

நிகழ்த்துமுண்மை — அகதப் பூதங்கட்குத் தோற்றமு மீறு முள தென்பதனை யெனக்குள்ளபடியே சொல்லும்.

மாயத்தவுலகம்பூநீர்தீவளிவானமாதி, யாயித்தாமொன்றினொன்று தோன்றிநின்றழிதலாலே. — பூமி நீர் தீ வளி வான மிவைகள், ஆகாச முதலாக வொன்றி னொன்றாகத் தோன்றிக் காரியப்பட்டு நின் றுதித்தமுறையா லுதித் தொடுங்கு முறைமைக் காணகையா லான மாககளுக்கு மயக்கத்தைப் பண்ணும் பிரபஞ்சமு மழிந்துவிடுங்காண் எ-று.

உலகெனபது - பஞ்சபூதக் கூட்டத்தை.

அழிவு தோற்றமெனபதனை யிருபாலுங் கூட்டுக.

பூதோற்பததியை யவன மதானுசாரமாகக் கூறி மறுத்ததென வறிக

ஏகாரம் தேற்றம்.

இதற்குச் சூத்திரயாகமமென வறிக. (அ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

முதல் விருத்தத்திற்
"போவது மாதலாலே"

என்ற பதத்திற்குப் பட்டாசாரிய மதானுசாரிகள் - நசுதாசித நிதருசஞ்சகத்-என்று காரியரூபமா யிருக்கிற தேககடாதிகளுக்கே யுற்பத்தியுநாசமும், காரணரூபமாயிருக்கிற பிருதிவியாதி மகாபூதரூபமாகிய வுலோகங்களுக்கு நாசமில்லையென்றபக்ஷத்தை மேலிரண்டு விருத்தங்களான் மறுத்துக் கூறுகின்றது.

(காயத்தினழிவு ...சென்னெனின்) தேகங்களிற் றோற்றமு நாசமுங் கண்டோம், உலோகங்களுக்குத் தோற்றநாசங்கண்டதில்லை,நியிதனை யுண்டென்று சொல்வதென்னையோவெனின,—

கேழ்த் தமுண்மை - உள்ளபடி சொல்வாம், — மாயத்தவுலகம் ∴ றழிதலாலே-மயக்கத்தைப் பொருந்த முலகங்களான பிருதி வி யப்பு தேஜோ வாயு வாகாச மைந்தும் ஆகாசாதியாக வொ ன்றிலொன்று தோன்றினை றழியுமென்று வேதஞ் சொலலுகை யால்; வேதப்பிரமாண்ய வாதியாயிருக்கிற வுனக் கிஃதன்றெண ப் போகாதென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பட்டாசாரியன் மத மாசங்கித் திரண்டு திருவிருத்தத் தான் மறுத் துணர்த்துகின்றார்.

காயத்தினழிவு தோற்றங் கண்டன முலகிற்காணேம்- ஒருவஞெடொருத்தி யொனறென் றுரைத்திடும் சரீரமுதலி ய பொருள்களி னுற்பத்திநாசங் கண்டோம், பூமிமுதலிய சக த்திற்காணேம,—நீ யித்தை யுரைத்தவாறிங் கெனனெனில்-உல கமுங் காரிய மாதலால் அதற்கொரு கர்த்தா வுண்டென்று நீர் சொல்லுவ தேதென்று நீ சொல்லுகில்,—மாயத்த வுலகம்- மயக்கத்தைப் பண்ணும் பிரபஞ்சம்,—பூ நீர் தீவளி வான மாதி யாயில் - பிருதவி யப்புத் தேயு வாயு வாகாச முதற் பொருளாகில், சைவத்திற்குத் தன மாத்திரையிற் ரேற்ற மொடுக்கம். அதுநிற்க, நமக்குப் பொதுவும் உனக்குப்பொதுவ ன்றிச் சிறப்பு மாகும் வைதிகமார்க்கத்தில்,—ஒன்றி ஞென்று தோன்றி நினறழிதலாலே - ஆன்மாவிலாகாயம், ஆகாயத்தில் வாயு, வாயுவிலக்கினி, அக்கினியி லப்பு, அப்புவிற் பிருதிவி இ த்த முறைமையி லுண்டாயிருக் தக்க முறைமையிலு லொடுங்

கு மென்று சொல்லுதலாலே அந்தவுலகம், —உண்மை நிகழ்த்தும் - தனக்குத் தோற்றம் நிற்றல் ஈறு இது சத்தியமென று சாற்றும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

இதுகாறும் வந்தநின்று போவதென்றதூஉம், வருமுறை யென்றதூஉம், தருபவனொருவன் வேண்டுமென்றதூஉம், வைதிசப்புறத்தார் மதத்தான இகந்துபடாமைக் காத்தார்; இனிவை திசத்துட்பட்ட மீமாஞ்சகர் தார்க்கிகர் சாங்கியர் மதத்தான முறையே அவை யிகந்துபடாமற் காக்கின்றார்.

எ-து. காயமுமுலகுமென்னும் இருகூற்றுப் பிரபஞ்சத்துள், ஆண்பெண்ணலியென மேற்கூறிய அவயவப்பகுப்பு காயத்திற்கேயன்றி ஏனையுலகத்திற்கின்மைபால், அவயவப்பகுப்புடைமைபற்றித் துணியப்படுந் தோற்றக்கேடுகளுங் காயத்திற்கேயன்றி உலகிற்கில்லையெனபது துணியப்படுவதாயிருக்க ; தோற்றக்கேடுகள் இரண்டற்கு மொப்பக்கூறுதல் அமையாதென்று நீ சொல்லில், அற்றன்று. இவ்வாறுனக்கு மயக்கத்தைச் செய்வதாகியவுலகமும் நிரவயவமாகலின்றி நிலநீர்தீவளிவான மென நற்றொடக்கத்துப் பகுப்புடைத்தாகியவிதனுன, அவ்வுண்மையே நீகூறு மிருகூற்றுப் பிரபஞ்சத்து ளொன்றாகியவுலகமும் ஏனைக்காயம்போலத் தோன்றிநின்றழிதலை உணர்த்துமெனபதாம்.

ஆயவென்னும் பெயரெச்சத்துளகரமும், இதனுனென்பதுள் அன்சாரியையும், விகாரத்தாற்றொக்கன. "பெற்றத்தாற் பெற்றபயன" என்றாற்போல.

ஆயிற்றொன்று பாடமோதுவாருமுளர். -

ஒன்றினென்னும் இன் உவமவுருபு.

"ஐயுங் கண்ணு மல்லாப் பொருளவயின்-மெய்யுருபு தொ கா விறுதி யான" என்பதோத்தாகலின, இரண்டாவது இறு திககட் டொக்கது.

ஆல் அசை.

ஒன்றிரெறன்று தோனறிநின் றழியுமொனனுஞ் சுருதி உன க்குப் பிரமாணமாதலா லெனறுரைப்பாருமுளா.

வேதத்துள் விதிவாக்கியமொழிந தொழிகதனவெல்லாம் புனைந்துரை வகையானனறிப் பிரபாணமாகாவெனக் கொண ட மீமாஞ்சக மதத்தார்க்கு, அவ்வுபநிடகச் சுருதி பிரமாணம ன்றென்பது அவரறிந்திலா. அல்லதூஉம ஈண்டுக் கூறுவன வெ ல்லாம் பொருநதுமாறு பற்றியனறி ஆகம வளவைபற்றி யன மையானும் அவவுரை போலியாத லறிக.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

உலகாயுதன் சரீரங்களுக்குத் தோற்றமு மொடுக்கமுங் கண்ட தொழிநது பிரபஞ்சம் ஆசவுமழியவுங் கண்டதில்லையே யென்று சொல்ல; அவனை நோக்கி மேல் மறுத் தருளிச் செய் கிறார்.

காயத்தினழிவுதோற்றங்கண்டன முலகிற்காணோம் - தே கங்கள் ஆகியுமழிகையுங் கண்டோம், பிரபஞ்சத்திற் கண்டோ மில்லை,—நீயித்தையுரைத்தவாறில் கெனனெனில் - நீ யிக்த பிர புஞ்சக தோன்று மொடுங்கு மென்று சொன்னபடி யெப்படி யெனறு கேட்கிறாயாகில்,—திகழ்த்துமுன்னைமாயத்துலகம்

பூ நீர் தீவளி வானமாதி யாயிற்றொன்றொன்று தோன்றின ரழிதலாலே - ஆராயில் மயக்கதனையுடைய பிரபஞ்சம் பிரிதிவு அப்பு தேயு வாயு ஆகாசம் ஆதியாயிருக்கும்; ஆகையாலே நீ யழியுமெனறு சொல்லுகிற பஞ்சபூத பரிணமமாகிய தேகாதியுள தான ஒன்றிலே ஒனறுதோற்றி யழிகையாலே, அந்தப் பிரபஞ்சத்துக்கும் அழிவுண்டாமெனறு இந்த தேகாதிகள தானே யறிவியா நிற்கும்.

ஆயிதநா ஞென்றிஞென்று தோன்றினின் ரழிதலாலே எ-து. உலகாயுதன. இதற்குப் பிரமாணம் சிவஞான போதம. "பூதாதியீறுமுதலுந் துணையாகப், பேதாய்திதியாகும்பெறறிமையி—லோதாரோ, வொனறொனறிற் றோனறி யுளதாயிற் கண்டு, மென்றெனறுமுண்டென்னவாய்ந்து" எனனுமதது கண்டு கொள்க.

இதனாற் சொல்லியது பூதகாரியமாகிய சரீரங்கள் தோன்றின ரழியக் காண்கையினாலே பிரபஞ்சத்துக்கும் ஆகையு மழிகையு முண்டெனனு முறமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(காயமுமுலகு மென்னு மிருகூற்றுப் பிரபஞ்சத்து ளாண் பெண் ணலியென மேற்கூறிய அவையவப்பகுப்புக் காயத்திற் கேயனறி யேனையுலகத்திற் கினமையால்) அழிவு தோற்றங் காயத்திற் கண்டனம் - அவயப்பகுப்புடைமைபற்றித் தனியப்படுந் தோற்றக்கேடுகளுங் காயத்திற்கே யன்றி,—உலகிற்கா ஞம் - உலகத்திற் கில்லையென்பது அனியப்படுவதாயிருக்க;— நீயித்தை யுரைத்தவாறிங் கென்னெனில் - தோற்றக்கேடுகளி

ண்டற்கு மொப்பக்கூறாத லமையாதென்று நீ சொல்லில்? அற்றன்று,— மாயத்தவுலகம் - இவ்வாறுனக்கு மயக்கத்தைச் செய்வதாகிய உலகமு நிரவயவமாதலினுற்,—பூ நீர் தீ வளி வானமாதிபா யிததான-நில நீர் தீ வளி வானமென்றற் றூட ககத்துப் பகுப்புடைத்தாகிய விதனுல்,—உண்மை - அவவுண்மையே,— ஒன்று - நீகூறுமிறுகூற்றுப் பிரவஞ்சத்து ளொன்றுகியவுலகமும்,— ஒன்றின - ஏனைககாயம்போல,— தோனறிநின்றழிதல் - தோன்றிநின்றழிதலே,— நிகழ்ந்ததும் - உணர்த்துமெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



ஓரிட மழியப்பின்னு மோரிடநிற்கு மொக்கப்,பா
ரிட மழிவதின்று மென்னிடிற பயில்வித்தெல்லாங், கா
ரிட மதனிறகாட்டு மங்குரங் கழியும்வேனிற், சிருடைத்
துலகுகாலஞ் சேர்ந்திடப் பெயர்ந்துசெல்லும். (க)

(இ-ள்.) ஓரிடமழியப் பினனுமோரிடநிற்கும் — இப்பிரபஞ்ச மொரு பிரதேசமழியப் பினனுமொரு பிரதேச மழியாமனிற்கும்

ஒக்கப் பாரிடமழிவதின்றும் — பூமிமுதலிய பூதங்க ளெங்கு மொக்கவழிந்துபோகாது

என்றிடில் — எனறுநீ சொல்லுகிறுயாகில்?

பயில் வித்தெல்லாங் காரிடமதனிற் காட்டுமங்குரம் — பூமியின கண்ணே செறிந்திருந்த வித்துக்களெல்லாம் கார்காலத்திலங்குரோற்பததிகளை யெங்குமொக்கக் காட்டாநிற்கும்

சழியும் வே விலை — வேனிற் காலத்திலே முன்பே முளைத்துப் பயிரானவைகளெல்லாஞ் சேரவழிந்து போ கக கண்டாமே

சிருஷ்டித்தல குகாலஞ் சோர் திடபடெடாந்து செல்லும் — சிவசததியினுடைய கூட்டரவிஞலே சிற ப்பிலையுடைத் ராகிய விகதப்பிரபஞசமு மப படியே சிவன் சிருட்டிக்கிறபொழு த சேரவு ண்டாயு ம, அதனைச் சங்கரிககிற காலத்திற் சேர வழிந்து ம, இப்படிக் காலங்கடோறு மாறிமாறியுண்டாயும பினபழிந்தும் வாராநிற்குங்காண் எ-று.

இதற்குச சிரு தியததும், சுவச்சந்தத்துங காண்க. (கூ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

சைவத்திலே அங்கார வுற்பத்தியாகிய பூதாதி யாங்கார ததிலே பஞச தனமாததிரையிற் பூதோற்பததி சொல்லியிரு கக, ஆகாசததில் வாயுவும், வாயுவி லகனியும், அக்னியி லப்பும், அப்புவிற் பிருதிவியுமாக வொன்றி லொன ருடைவே தோனறு மெனறு சொல்வானை மறுப்பா னேனெனின? பூர்வ மீமாம் சருககுச் சம்மதமாக வெவ்வாற்றானும் பிரபஞச முற்பத்திநாச முடைத் தெனபதற் காகக கூறிபது. ஆயி னுமக் கந்தவேத வாககியஞ் சம்மத மனறோ வெனின? ஆம். வேத சிவாகமங்க ளிரணடு வாககியததிற்கு மவிரோத மிரணடாஞ்சூத்திரத்திற் பூதோற்பத்திக் கிரமததிற் கூறுவாம்.

ஓரிடமழியப் பினனுமோரிடத்திற்கு மொக்க வழிவதின்றும்- உலகமான தழியுமென்ற வாககம வாக்யத்திற்குப்பொரு ளிப் பூதங்களி லொனறழியுமெனறு சொன்னதன்றி யெல்லாமொக்

கழியுமென்று சொன்னதன்று, பின்னை யழிய தேதெனின,—பாரிடம்- பூமியானது §ஜலமக்கினமாகச் சிறிதுகாளிருக்குமென்றதெனின? அஃதற்றன்று,— டயில்வித்தெல்லாங் காரிடமதனி லங்குரங்காட்டும் வேனிற் கழியுஞ் சிறுடைததுலகு காலஞ் சேர்ந்திடப போகது செல்லும் - பூமியினுண்டான பீஜங்களெல்லம் வருஷாகாலத்தின முளையானதுண்டாம், வேனிற்காலத்திற் பட்டுப்போம், அப்படிப்போல சிறைப்புடைத்தான வுலகங்களுஞ் சிருட்டிகாலம் பொருந்தினபொழு துண்டாம், சம்ஹாரமானது பொருந்தினபோது நாசததை யடையுமென் றிதன்பொருள்.

§ ஜலமக்கம் - நீரி லமுழ்ந்தியிருத்தல்

இவவிரண்டு விருத்தத்தினாலும் பூர்வமீமாம்சருடைய மதமு நிராகரணமுஞ் சஙகிரகமாகக் கூறப்பட்டது.

இதனவிஸ்தாரம் பரபக்ஷத்திற் சொன்னோமென வுணர்க.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

பஞ்ச பூதங்கட்கு நாசஞ் சொல்லுஞ் சுருதிக்குத தாற்பரியஞ்சொல்ல மறுத் துணர்தது கின்றார்.

இதனபொருள் வெளிப்படை.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

எ-து. நில மலை கடன் முதலிய வடிவிற்றாகிய வுலகமுங் காயம்போல் அவயவப் பகுப்புடைமையான் அதுபோலத் தோன்றிநின்றழிதல்பெறப்படுமென்றதொக்கும்; அங்ஙனமாயினும்,

பார்த்தறியப்படுமுலகமெல்லாம் ஒருங்கேயழிவதெனின்? உலக மநாதியென்னுஞ் சுருதியோடு முரணுதலானும், மீளத் தோன றுதற் கோரியையின்றாய் முடியுமாகலானும், அவ்வாறன்றி உலக ததினொருபக்கமழியினும ஒரு பக்கம் நிற்குமென்றலே பொரு தத முடைத்தெனின,—அற்றன்று; தமமு ளொருசாதிப் பல பொருளாகிய வித்துமுதலிய சடங்கள் ஒவ்வொருகாலவிசேட ததின ஒருங்கே தோனறுதலு மொருஙகேயழிதலுங் கண்டா மாகலின, அவ்வியல்பிற்றாகிய வுலகமும் அவவககாலம் வந்து ழி அவவாறு முழுவது மொருங்கே தோனறி ஒருங்கேயழியு மெனபதாம்.

பாரிடம் வினைத்தொகை.

சீர உவமவுருபு, அசசீரெனறாற்போல.

---

## நிரம்பவழகியருளா வருமாறு.

—o—

ஒரு தேசமழிய ஒரு தேசபழியாதிருக்கும், ஆகையாலே யெங்குமொக்க அழியாதெனற பட்டாசாரியனை நோக்கி; மேல் மறுத தருளிச் செயகிறார்.

ஓரிடமழியப் பினனுமோரிடநிற்கு மொக்கப்பாரிடமழிவ தினறும் - பிரபஞச மொருதேசமழிய பின்னுமொரு பிரதேச நில்லாநிறகும், எங்குமொக்கப் பிரபஞ்ச மழிந்து போகாது— எனறிடில் - எனறு நீசொல்லுகிறாயாகில்,— பயில்வித் தெல் லாங் காரிடமதனிற்காட்டு மங்குரம்- பூமியிலே சொரியத்தக்க விதைகளெல்லாம், சேரக் கார்காலத்திலே யங்குரங்களைக் கா ட்டாநிற்கும்,—கழியும்வேனில் - வேனிற்காலததிலே அவையெ ல்லாஞ் சேர வழிந்துபோகா நிற்கும்,—சிறுடைத் துலகுகாலஞ்

சேர்ந்திடப் பெயர்ந்துசெல்லும்- அப்படியே சிறப்பை யுடைத் தாகிய பிரபஞ்சஞ் சிருட்டிகாலத்திலே சேரவுண்டாயும், சங் காரத்திலே சேரவழிந்தும், காலங்கள் தோறு மிப்படியே மாறிநிற்கும.

இதனாற் சொல்லியது ஒருதேசமழிய ஒருதேசமழியாமல் நிற்குமென்று சொல்லுகிறது ஆகாதென்றும; சிருட்டிகாலத்துச் சாவமுந் தோன்றும் சருவசங்காரத்தி லெல்லாமழியு மென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

(நிலமலைகடன்முதலிய வடிவிற்றாகிய வுலகமுங் காயம் போலவயவப் பகுப்புடைமையா லதுபோலத் தோன்றிநின் றழிதல் பெறப்படுமெனப் தொக்கும், அங்ஙனமாயினும) பாரிட மொருக்க வழிவதின்றும் - பார்த்தறியப்படு முலகமெல்லா மொருங்கே யழிவ தில்லையாம், அழியுமெனின்? உலக மநாதியெ னனுஞ் சுருதியோடு முரணுதலான மீளத்தோன்றுவதற் கோரி யையின்றிய் முடியுமாகலானும்,—ஓரிடமழியப்பின்னு மோரிட நிற்குமென்றிடின-அவ்வாறின்றி யுலகத்தி னொருபக்க மழியினு ம ஒருபக்க நிற்குமென்றலே பொருந்த முடைத்தெனின், அற் றன்று,—பயில்விததெல்லாம்-தம்மு ளொருசாதிப் பலபொரு ளாகிய பயில்கின்ற வித்துமுதலிய சடங்கள்,—காரிட மதனில் ஒருங்காங்கொட்டும்-கார்காலமாகிய வோர்காலவிசேடத்தி னொ ருங்கே முளைதோன்றுதலும்,—வேனிற்கழியும்-வேனிற்காலமா கிய வோர்கால விசேடத்தி னொருங்கேயழிதலுங் கண்டாமா கலின்,—சீருடைத்துலகு - அவ்வியல்பிற்றாகியவுலகமும்,—கா

லஞ்சோநதி — அவ்வக்காலம்வந்துழி,— பெயர்ந்துசெல்லும்— அவ்வாறு முழுவது மொருங்கேதோனறி யொருங்கேயழியுமெனபதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.

உமது கர்த்தாச செய்யவேண்டுவ தில்லை, காலந்தானே கர்த்தா வென்று காலவாதி சொல்ல, அவனை மறுத் துணர்த்துகிருர்.

காலமே கடவுளாகக கண்டனந் தொழிலுக் கென்னிற, காலமோ வறிவின்ருகு மாயினுங் காரியங்கள், காலமே தரவேகாண்டுங் காரணன் விதியினுககுக, காலமுங் கடவுளேவ லாற்றுணைக காரணந்தான். (௪0)

(இ-ள) காலமே கடவுளாகக் கண்டனந் தொழிலுக்கெனனில் — இநதப் பிரபஞ்சத்துக்கு மூனறு காலந் தானே சிருட்டிமுதலிய தொழில்களைப் பண்ணும், அதற்கு வேறு கர்த்தா வேண்டுவதில்லை, அது நித்தியமா யிருக்குமெனறு நீ சொல்லின்?

காலமோ வறிவினருகும் — நீ சொல்லிய காலம் சடமுமா யநேகமுமாய் நித்தியமுமா யிருக்கையாற் ருனொருதொழிலைச் செய்யமாட்டாதுகாண்.

ஆயினுங் காரியஙகள காலமே தரவேகாணடும் — அது சடமேயா யிருந்ததேயாயினு மானமாக்களுககுப் பருவங்கடோறுமரங்களிற்பூககவுங் காய்க்கவும் பழுக்கவும் வால யவ்வன விருத்தமெனப் பேதமும் பிரயோசனமுங்கண்டோம். அது தானுகக் கொடுக்க வற்றே வெனில்?

| | |
|---|---|
| காரணன் வினைக்காலமுங் கடவுளைவலாற் றனைக்காரணந்தான். | பரமகாரணனாகிய சிவனது ஜநநி ரோதாயி தரி ஆரணி யென்னுஞ் சத்திகளினாலே யதிட்டிக்கப்பட்டுத் தானே சிருட்டி முதலிய கிருத்தியங்களுக்குத் துணைக்காரணமாம் எ-று. |

தான எ-து. அசை.

இதற்குப் பரமத நிராகரணம் காரணாகமத்தும், பௌட்கரத்தும் காண்க

“இறப்பே நிகழ்வே யெதிர்வே யென்னாத், திறத்தியன் மருங்கிற் றெரிந்தன ருணரப், பொருணிகழ் புணர்ப்பது காலமாகும்” என்றார் தொல்காப்பியனார் இந்தக் காலம் சமணனையுகனுதனையும் அட்சபாதனையும்போல நித்தியத்துவஞ் சொல்லப்பட்டதில்லை எனவறிக. (௧0)

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

—0—

மேல் முதல் விருத்தத்தில்,

“தருபவனொருவன வேண்டும”

என்றபதத்திற்குச் சிருஷ்டி திதி சமஹாரத்திற்குக் காலமே கர்த்தா வல்லது வேறில்லையெனனுங் காலேஸ்வர வாதியை மறுத்தல்.

காலமே கடவுளாகக் கண்டனர் தொழிலுக்கென வில்-காலமானதே பிரபஞ்சத்தை யுண்டாக்கும், காலமேதிதிபண்ணும், காலமேசம்ஹாரத்தையும் பண்ணும், † பிரபஞ்சோப சமமாராந்தரமுங் காலமேநித்தியமாயிருக்கும், காலத்தை யொருவராலுங் கடக்கப்போகாதாகையாற் காலமேகர்த்தாவெனின?-

† ப்ரபஞ்ச மழிந்தபின்னுங் காலமே நித்தியமாயிருக்கும்.

தது—க்தம் — காலஸ்ய ஜகதி ஸங்கராதி காலஸ்யஹேத் தி ப்ரஜா: । காலஸ்யாபேக்ஷா ஜாயதே காலோஹி தத்ரதிகாரண: இதி॥

இப்படிச் சொல்லிற் காலமோவறிவின்றாகும் - காலமா னதறிவில்லாததாகையானுஞ் ‡ ஜகத்து புத்திமத் கருத்ருக மாகையானு மிவவநவய வயதிரேகத்தினாற் காலத்திற்குக கர் த்ருத்வம் கூடாது;—ஆயினும் காரியங்கள் காலமேதுவேகா ணமிம் - காலம் ஜடமாயினுங் காரியங்களெல்லாங் காலத்தினு லுண்டாகக்கண்டோமெனின்?—காலமுங்கடவுளேவலாற் கா ரணன விதியினுக்குத் துணைக்காரணங்காண் - அககாலமானது பரம கர்த்தாவாகிய சதகருடைய ஜநநீ ஆநிணீ ரோதயித்ரீ யெனனுஞ சததிந திரயநதினு லதிஷ்டிககப்பட்டுக் கொண்டு சதாசிவாதி காரணேஸ்வரர்பண்ணுஞ் சிருஷ்டியாதிககு லக காரிகாரணம் எனறிதனபொருள்.

தது—க்தம் . சுத்ரப்ரஹ்மோ நகாலோ யஞ்ஜநகஸ்ய ஷட்ப்ராதிகாரிணீ । ஜநகஸ்யாநுஸ்வதந்த்ரஸ்யாதந்ரீயம் ச வேக்ஷதஇதி.

வக்ஷ்யமாணப்ரகாரேண — கிமர்த்தகம் வதாஸ்யாநாம் கஸ்ய்ரேத காலயோஜித: । ஶிவ: காலாநவஷ்ணொமாயாத: வஸ்யஸஞ்சித: ॥ உக்தவாதயதி விஸ்வம் காலாதர்வாதகசாதிதி.

‡ ப்ரபஞ்சம் புத்திமானாலே செய்யப்படுகையானும்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

காலேசுரவாதி காலமே கர்த்தாவென்று சொல்ல, மறுத்துணர்த்துகினறார்.

தொழிலுக்கு - சிருட்டி ஸ்திதி சங்காரங்களுக்கு,—காலமே கடவுளாக - கர்த்தாவாக,—கண்டனமெனவில் காலமோ அறிவினருகும் - இதுகத்து காரணங் காரியம் கரணம் பிரயோசனமென் றறியுமறி வில்லாதகாம்,—ஆயினும காரியங்கள்-ஆயினும், தாத்துவிகபோககியப் பொருள்களோ,— காலமே தரவேகாண்டும் - கால முற்பததிபண்ணக் கண்டோமாகையால்,—காரணன் விதியினுககு - முதற்காரணமாகிய தததுவங்களினின்று தாதவிகமாகிய போக்கியப் பொருளினது தோறற நிலை யீருகச் சொல்லப்படும் நிமிதத காரணனாகிய சிவனது கிருத்திபத்துககு,—காலமும் கடவுளேயலால் - காததாவினது செலுத்துதலால்,—துணைக காரணங்காண் - சககாரி காரணங்காண்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

எ - து. காலஞ்சேர்க்கிடப் பெயர்து சேறலான் அத்தோற்றக் கேடுகட்குக் காலமே கருத்தாவாய் முடியுமெனின ? அஃதொக்கும். அங்ஙனமாயினும் அது சடமாகலாற் கருத்தாவாகாது சேதனனுகிய கருத்தாவினதேவலான் அவன செய்யு மத்தொழிற்குத் துணைக்காரண மாமென் றறிவாயாக வென்பதாம்.

இது சொற்பொருட்பின் வருநிலை.

ஓகாரஞ் சிறப்பினகண் வந்தது.

காலமேதரவே எனனும ஏகார மிரண்டினுள் முன்னைய து பிரிநிலைககண்ணும, பின்னையது தோற்றத்தின கணணும் வநதன.

இவை மூன்றுசெய்யுளானும் மீமாஞ்சகர் மதம்பற்றியாசங்கிதுப் பரிகரிதது, வந்துநின்றபோவது சாதிககப்பட்டது.

## நிரம்பவழகியருளை வருமாறு.

மீளவும் பட்டாசாரியன் பிரபஞ்சங் காரியப் படுகைக்கு வேறோர் கருததா வேண்டுவதில்லை, நீர்சொல்லுகிற காலஙகள் தானே காததாவாமெனன; அவனை நோக்கி மேல் மறுத் தருளிச்செய்கிறார்.

காலமே கடவுளாகக் கண்டனந் தொழிலுக் கெனனில் - பிரபஞ்சகாரியத தககு வேறே கர்த்தா வேண்டுவதில்லை, இந்த ககாலங்கள் தானே கர்ததாவாகக கண்டோமெனறு நீசொலவில்?—காலமோ வறிவினறுகும் - காலங்கள சடமாயிருக்கையினாலே பிரபஞ்சகாரியங்களை உண்டாககுகைககு அதற்கொரு பிரஞ்ஞையுமில்லை, காலத்துககொரு பிரஞ்ஞையுமில்லையானால் காலம்வேண்டுவதில்லை எனறு நீசொல்லில்?—ஆயினுங் காரியங்கள் காலமேதரவேகாண்டும் -பிரஞ்ஞை யில்லையாயினு ம காலங்களிலே அந்நதக்காரியங்கள் கைகூடக் காண்கையாலே, இநதப் பிரபஞ்ச காரியங்களைக் காலமே யுண்டாக்கவேணும். ஆனால் கத்தாவேதுக்கு என்று நீசொல்லில்?—காரணன்

விதியினுக்குக் காலமுங்கடவுளேவலாற்றுணைக்காரணங்காண்- கர்த்தா நிமித்தகாரியத்துக்கு கர்த்தாவினுடைய ஏவலினாலே இந்தக் காலங்களும் பிரபஞ்ச காரியத்துக்குத் துணைக்காரணமாம்; இதனை ஒழித்துக் காலங்கள நிமித்தகாரண மென்று சொல்லப்பட்ட கர்த்தா வாகா

இந்தவிரண்டு திருவிருத்தமும் பட்டாசாரியன். இதற்குப் பிரமாணம் பரபட்சம் அவனமதம் "போககோடி வரவுசால மொனநினிப் புணர்வதின்றி, யாக்குவோரொருவரின்றி யணுதியா யணுக்களாகி, நீக்கிடாவினையிற்கூடி நிலமுதலாகநீடி, யூககமாருலகமென்று முள்ளதென்றுரைக்கலாமே" என்றும. அவனமறுப்பு "அறிகின்ற பான்மையவை யவநின்றதாகிலணு வழியுங்காதி யெனவே, செறிகின்ற வாறதில யெனில்வந்து சேருமது திடமன்றுகூட லொருவன, குறிகொண்டுகாரினமுனை வருகின்றபீசமவை கொலைவொன்றி யேனிலழிய, முறுகின்றகாலமவை யுடனின்றுபோயழியு முலகென்று நீடியிலதே" மென னுமது கண்டுகொள்க.

பட்டா-மத, அ-செய். பட்டா-மறு, எ-செ

இதனாற் சொல்லியது பிரபஞ்ச காரியத்தை யுண்டாக்குகைக்குக் காலங் கத்தாவாகாதென்றும்; இந்தக் காலங்களைத் தோற்றுங்கத்தா தனனுடைய ஆஞ்ஞையினாலே பிரபஞ்சத்தை யெல்லாம் உண்டாக்குவ னென்னு முறைமையும அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(காலஞ்சேர்ந்திடப் பெயர்ந்துசேரலான) தொழிலுக்கு- அத்தோற்றக்கேடுகட்கு,—காலமேகடவுளாகக் கண்டனமெ

னவின் - காலமேகருத்தாவாய் முடியுமெனின்? அஃதொக்கும்,—ஆயினும் - அங்ஙனமாயினும்,—காலமோ வறிவின்றாகும - அக்காலமறிவில்லாத சடமாகலாற் கருத்தாவாகாது,—காரியங்கள் காலமே தரவேகாணுடும் - காரியங்களைக் காலமேதரக் காணுடலின்,—கடவுளேவலால் - சேதனனாகிய கருத்தாவின் ஏவலால்,—காரணவிதியினுக்கு - அவன்செய்யு மதனொழிலுக்கு,—காலமுந் துணைக்காரணங் காண் - காலமுந் துணைக்காரணமாமென் றறிவாயாகவென்பதாம்.

இவைமூன்று செய்யுளானு மீமாஞ்சகர்மதம்பற்றி யாசங்கித்துப பரிகரித்து "வந்துநின்று போவது" சாதிக்கப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலருகன மத மறுத் துணர்த்துகின்றார்.

அழிந்தபி னணுக்கடாமே யகிலமாய் வந்துநின்று, கழிந்திடுங் கன்மத்தென்னிற கன்மமு மணுவுங்கூட, மொழிந்திடுஞ் சடமேயாகி முடிதலான் முடியா செயதி, யொழிந்திடு மணுருபங்க ளுலகெலா மொடுங்குமன்றே. (௧௧)

(இ-ள்) அழிந்த பினணுக்கடாமே யகிலமாய் வந்து நின்று கழிந்திடுங் கன்மத்தெனனில் சிருட்டியாங் காலத்திலான்மாக்கள் கன்மத்துக்கீடாகப் பரமாணுவிலே பரிணமித்த பிரபஞ்ச மழிந்தபினனும் பரமாணுக்களாய்ச் சூக்குமித்து நின்று, சிருட்டிமுதலிய வவ்வொரு காலங்களிலே கருமத்துக் கீடாகப் பிரபஞ்சமாகத் தோன்றி நின்று, பின்

பொரு காலங்களிலே யழியா நிற்குமென்று நீசொல்லில்?

கன்மமு மணுவுங்கூட மொழி கதிடுஞ் சடமே யாகி முடிதலான் முடியா செய்தி — நீசொன்ன கன்மமும் பரமாணுவுஞ் சடமாகையினாலே இந்த விதிகளை யறிந்து பிரபஞ்ச காரியத்தைத் தானாகத் தோற்றுவியாது;

ஒழிந்திடு மணுரூபங்க ளுலகெலா மொடுங்குமன்றே — அவ் வணுரூபங்களெல்லாஞ் சங்காரகாலத்திலே சேர வழியுமாதலா லவை இப்பிரபஞ்சத்துக்குக் காரண மாகா. எ-று

அணுக்கடாமே எனனும் ஏகாரம தேற்றம்.

இந்தவிருத்த முதற் "கருதுகாரணம்" எனனும்விருத்த மீருக வாறுக்குங் காரணகமப் பிரமாணமென வறிக. (கக)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் பரமாணு† புஞ்சமே பிரபஞ்சமென்கிற ஆருகதமதத்தை மறுத்தல்.

† புஞ்சம்-கூட்டம்.

ஓர் பரதியில்:—மேற் பரமாணுக்கூட்டமேப்ரபஞ் சோற்பத்தி, மாயை யல்லவென்பன். அதற்கு முதல் விருத்தத்தில்

"வருமுறை வந்துநின்று போவது"

என்ற பதத்துக்கு அருகமதக்காரர் பரமாணுவே கூடுகிற முறைமையிலே கூடிப் பிரபஞ்சமாயும், பிரிகிற முறைமையி

லே பிரிந்து நாசமாயும் போமென்ன ; அப்படியல்ல, மாயையிலே கர்த்தாவினாலே ப்ரபஞ்சோற்பத்தி யென்றும் ஒருபாட்டினாலே மறுத்துணர்த்துகிறார். எனறெழுதப்பட்டிருக்கிறது.

அழிந்தபின னணுக்கடாமே யகிலமாய்வந்துநின்று கழிந்திடுங் கனமதெனனில் - பிரபஞ்சோப சம்மாரானந்தர மீஸ்வரனனறியிற் பரமாணுக்கடானே யானமாக்களுடைய கனமாணுகுணமாகப் புஞ்சமாக ‡ தருணகுல்மலதாதிகளின கூட்டமே வனமானது போலப் பிரபஞ்சரூபமாய்ப் பினனுங்கனமாணுகுணமாகவே * யுபசம்ஹிருதமாம,—

* உபசஙகாரம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இப்படியெனனில்? கனமமு மணுவுங் கூட வொழிந்திடுஞ் சடமேயாகி முடிதலால் முடியாசெய்தி - கருமமும் பரமாணுக்களும் ஜடமெனறு வேதாகமங்கள் சொல்லுகையினாலும், அவைகள் பிரளயகாலத்தி னாசத்தை யடைகையினாலும், திரும்பவுற்பத்திக்கிரியை யுண்டாகாது,—ஒழிந்திடு மணுரூபங்களால கெலா மொடுங்குமனறே - அதையாற சாவலோகோப சம்ஹாரகாலத்தி லணுக்களெல்லா நாசத்தை யடையுமென் றிதனபொருள.

‡ புல்சிறுகொடிமரங்கள்.

இவண்குறிக்கப்பட்ட சைனனுடைய மதத்தையு மறுப்பையும் விஸ்தரித்துப் பரபக்ஷத்திற கூறினு மாங்குணர்க.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

ஆருகதரி லொருவன் மத மறுத துணர்த்து கின்றார்.

(அருகேசுரனுக குபதேச கர்த்தகிருத்துவ மாத்திரஞ் சக த்கர்த்திருத்துவ மில்லையாகலால்) அழிந்தபின - பிரளயத் துலக மொடுங்கின பின, ஒடுங்காது நின்ற,—அணுக்கடாமே - முதற்காரணமாகிய பரமாணுக்கடாமே,—கனமத்து - நிமித்தகாரத்தாவாகிய பாப புண்ணியங்களினாலே,—அகிலமாய் - எல்லாவுலகுமாய்,—வந்து நின்று கழிந்திடு மெனனில் - தோற்றியிருந் தொடுங்குமென்று நீ சொல்லுகில்,—கன்மமு மணுவுங்கூட - நிமித்தகாரண முதற்காரண மிரண்டு மொத்து,—மொழிந்திடுஞ் சடமேயாகி முடிதலால் - சொல்லப்படும் அசேதநமாகி யநித்தியமாதலான,—முடியாசெய்தி - கிருத்தியம் நிறைவேறாது.—உலகெலா மொடுங்குமன்றே - உலகமெல்லாஞ் சங்கார மாமபோதே,—அணு ரூபங்கள் - பரமாணுக்கள், சைவத்துக்குப் பூத காரிய மாதலால்,—ஒழிந்திடும்-ஒடுங்கும்; பூத முதலிய வுலகத்துக் கெப்படிக காரணமாம், காரணமன்று தானே.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

எ - து உலகமழிந்தபின்னர் மீளப் பரமாணுக்கடாமே கன்மமேதுவாகப் பிரபஞ்சமாய்த் தோன்றிநின்றழியும், கனமங்காலங்கள்போல் இறைவனிச்சையும் ஒருகாரணமாமத்துணையே பிறிதில்லையெனின்? அற்றன்று; கன்மமுமணுவுஞ் சடமேயாகலான், அவை தம்முட்கூடித்தொழிற்படுதல் சித்தாகியு

முதல்வன்றொழிலையின்றி அமையாது. அதுவன்றியும், உலக மொடுங்கும்போது அணுவுங் கூடவேயொடுங்குமாதலால், அது பின அகிலமாய்வந்து கழியுமாறு யாண்டையதென்பதாம்.

இவ்வணுகாரணவாதஞ் சவுத்திராந்திகர் வைபாடிகர் ஆசீவகர்கரு மொக்குமேனுந் தலைமைபற்றித் தார்க்கிகர்மேல் வைத்து மறுத்தவாறு

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---0---

மீளவும் பட்டாசாரியன பரமாணுவினாலே பரிணமித்த பிரபஞ்சம் ஒடுங்கினபின்னும் இந்த வணுக்களினாலே ஆன்மாக்கள் கனமதத்துக்கீடாக மீளவும் உண்டாமென்றுசொல்ல; அவனைநோக்கி மறுத்தருளிச்செய்கிறார்.

அழிந்தபின னணுக்கடாமே யகிலமாய் வந்துநின்று கழிந்திடுங்கனமதனெனனில் - அணுபரிணாமமான பிரபஞ்ச மழிந்தபின்னர், பரமாணுக்களாய்ச் சூக்கமத்திலே நின்றும் கனமங்களுக்கீடாக வ்வொரு காலங்களிலே பிரபஞ்சமாகித் தோன்றிநின்று; பினபு ஒவ்வொரு காலங்களிலே அழிபாநிற்கும் என்று நீ சொல்லில்?—கனமருமணுவுங்கூட மொழிந்திடுஞ் சடமேயாகி முடிதலால் முடியாசெய்தி - நீசொன்ன இந்தக் கனமங்களும் பரமாணுக்களுஞ் சேரச் சொல்லப்பட்ட சடமேயாய் விடுகையாலே, இவையிற்றால் பிரபஞ்சகாரிய முண்டாகாது.—ஒழிந்திடு மணுருபங்க ளுலகெலா மொடுங்குமன்றே - பிரபஞ்சமகளெல்லா மழியுங்காலத்து அந்த பரமாணுக்களுங் கூடவழிந்துபோம்.

இதனாற் சொல்லியது பிரபஞ்ச மொடுங்கினவிடத்து பரமாணுக்கள் மீளவுங் கன்மத்துக் கிடாகத் தோன்றி நின் றொடுங்காதென்றும், அந்தக் கனமமு மணுக்களுஞ் சடமானபடியாலே தானாகத் தோனறமாட்டா தெனறும்; சருவசங்காரத்திற பூதவணுக்களும் பிரபஞ்சமும் சேரவொடுங்குமென்னு முறமையையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அழிந்தபின்-உலகமழிந்தபின்னா,—அணுக்கடாமெ-மீளப்பரமாணுக்கடாமெ,—கன்மதது - கனமவேதுவாக,—அகிலமாய் - பிரபஞ்சமாய்,—வநதுநினறு கழிந்திடும் - தோன்றி நினறழியும்,—எனனின் - கனமங்காலங்கள்போ லிறைவனிச்சையுமொருகாரணமாம். அத்தனையே பிறிதில்லை யெனின?அற்றனறு,—கனமமு மணுவுங்கூட - கன்மமும் அணுவுங்கூடினும் —மொழிந்திடுஞ் சடமேயாகி முடிதலான - சொல்லாநினற சடமாயே முடிதலின்,— செய்திமுடியா - அவை தம்முட்கூடித்தொழிற்தபடுதல் சித்தாகிய முதல்வன தொழிலையின்றி யமையாது,— உலகெலா மொடுக்குமனறு- அதன்றியு முலகம் ஒடுக்கும்போது,—அணுருபங்க ளொழிந்திடும்-அணுவுங்கூடவே யொடுக்குமாகலான் அது பின் னகிலமாய் வந்து நின்று கழியுமாறியாண்டைய தெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



இப்பிரபஞ்சத்துக் குபாதான மாயையெனறுணாத்துகிறார்.

காரண வணுக்கள்கெட்டாற் காரிய வுலகின்றெ னனிற, காரண மாயையாகக் காரியங் காணலாகுந, காரண மாயையென்னை காணபதிங் கணுவேயென் னிற, காரண மாயையேகாண காரிய மணுவிற்கண் டாய். (கஉ)

(இ-ள்.) காரண வணுக்களை கெட்டாற் காரிய வுலகின றெனனில் — இப்பிரபஞ்சத்துக்குக் காரணமாயிருக்கிற பரமாணுக்களை சங்காரகாலத்திலே யழிந்துபோனால் காரியமாய் வருகிற பிரபஞ்சம் பின்னை யெப்படித் தோனறப்போகிற தென்று நீ சொல்லில்?

காரணமாயையாகக் காரியங் காணலாகும் — நித்தமாயிருக்கிற மாயை காரணமாயிருக்கையிலே, காரியம பின்னுண்டாகற்குக குறையில்லை;

காரணமாயையென்னை காணபதிங் கணுவே யெனனில் — மாயை காரணமென்று நீர் சொல்லுகிறதென்ன, வணுக்களை காரணமாகக் கண்டிருக்கிறோமே யெனபாயாகில்?

காரணமாயையேகாண் காரிய மணுவிற் கண்டாய் — அணுக்கள் காரியமா யவயவத்தோடே கூடியிருக்கையிலே யவயவ மில்லாத மாயையே பரமகாரண மாகவேண்டு மென்று காண்பாயாக எ-று. (கஉ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் நியாயவைசேஷிகரும் பிரபஞ்சத்திற்குப் பரமாணூபாதான வாதிகளாகையால் பரமாணுகாரணவாதமாகிய வாருகதமதத்தை நிராகரித்துக்கொண்டு பரமாணுவுக்குநாசஞ் சொல்லின் மேற்பிரபஞ்ச முண்டாகாதென்றும்; பரமாணுநித்தியமென்றும், அதுவே ஜகத்துபாதான காரணமென்றுஞ் சொல்லும் வாக்கியத்தை யநுவதித்து நிராகரித்தல்

காரணவணுக்கள் கெட்டாற் காரியவுலகின் றெனனில் - காரணமாயிருக்கிற பரமாணுக்கள் பிரளயகாலத்தி னாசத்தை யடையிற் காரியமாகிய பிரபஞ்ச மேலுமுண்டாகாதெனின்?—காரணமாயையாகக் காரியங்காணலாகும் - காரணமாகியமாயை நித்தியமாகையாற் காரியமாகிய பிரபஞ்சமுண்டாகக்காணலாம் —காரணமாயையென்னை காண்பதிங்கணுவேயெனனில் - காரணமாயையென்று சொல்லுகிறதெதற்காக, நாங் காரணமாகக்காண்பது பரமாணுவேயெனின்?—காரிய மணுவிற்கண்டாற் காரணமாயையேகாண் - காரியமாகிய ரூபத்துவமுமேகதேசமும் பரமாணுவிற் காணப்படுகையால், ரூபத்துவமுமேகதேசமு மல்லாதமாயையே சகத்திற்குக் காரணமாகவேண்டுங்காணென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

உலோகாயத னுலகுக்குக் காரணமென்னும் பூதமும், நையாயிகன் முதலோர் உலகுக்குக் காரணமென்னும் பரமாணுவு

ம், பிரளயத் தொடுக்குமென்றீர்; பின்காரணமேதெனறு வினு வச செப்புகின்ருர்.

காரண வணுக்கள் கெட்டால் - நாங்காரணமாகக் கற்பி த்த வணுக்கள் சங்கரிக்கப்பட்டால்?—காரியவுலகின்றெனவில் -காரிமாயய்த் தோற்றும் பிரபஞ்சமு மில்லையாயவிடும்; அஃது ணடாகும் பொருட்டுக காரணம் வேணடு மெனின?—காரண மாயையாக;அதினின்று முற்பவிக்குங்காரியங் காணலாகும்,—காரணமாயையென்னே - மாயைகாரணமெனபதேது,—இங்கு, காரியத்திற்குக காரணமாக,—அணுவே காண்பதெனனில, அ ணுவில் காரியங் கண்டால்-காரியத்தனமையறியப்பட்டால்,—காரணமாயையே காண.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

எ - து. சத்திருபசமுகமாய் நிலைபேறுடைய மாயையே உலகிற்கு முதற்காரணமாதலால் அணுக்களழிந்தமைபற்றி உலகு மீளக் காரியப்படுதற் கோரிழுக்கில்லை யெனவும்; அணுக்கள் காரியப்பொருளாகலால் அவை யுலகிற்கு முதறகாரணமாதல் செல்லாதெனவு முணர்கவெனபதாம்.

இது சொற்பொருட்பினவருநிலை.

காண்டாலாலென்பது கண்டெனத்திரிந்தது, "மயலாகு மர்றும் பெயர்தரு" என்றற்போல.

ஆல் அசை.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

பிரபஞ்ச மழிவதன்றியே, பிரபஞ்ச காரணமாயுள்ள பரமாணுக்களுங்கூட வழிந்தால், மீளப் பிரபஞ்ச முண்டாகாதென்றவனை நோக்கி; மேலு மறுத் தருளிச் செய்கிருர்.

காரணவணுக்கள் கெட்டால் காரியவுலகினறெனனில்- பிரபஞ்ச காரணமா யிருக்கத்தக்க பரமாணுக்கள் கெட்டால் காரியப்பட்டு வருகிற பிரபஞ்சம் பின்னையும் உண்டாகாதென்று நீ சொல்லில்?—காரணமாமையாகக காரியங்காணலாகும் -இந்தப்பிரபஞ்சத்துக்குக் காரணம் மாயை யாகையாலே பிரபஞ்ச காரியங்களுந் தானே யுண்டாகாநிற்கும்;—காரணமாயை என்னை காண்பதிங் கணுவேயெனனில் - மாயையைப் பிரபஞ்ச காரணமாகச் சொல்லுகிறது காரணமாக, இவவிடத்துக் காணப்பட்டது பரமாணுக்களல்லவோவென்று நீ சொல்லில்,—காரணமாயையேகாண காரிய மணுவிரகண்டால் - நீசொல்லுகிற பரமாணுக்கள் காரியப்பட்டு வருகையாலே இந்தவணுக்கள் காரணமாகாது; காரணமாயுள்ளது மாயையென றறியாய்

இதனாற் சொல்லியது அணுக்கள் பிரபஞ்ச காரணமாகாதென்றும், பிரபஞ்சகாரணமாயுள்ளது மாயையென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

காரணவணுக்கள் கெட்டால்-காரணமாகிய வணுக்கள் அழிந்தால்,—காரியவுலகின் றென்னின் - காரியமாகிய பிரபஞ்சமின்றெனின,—மாயை காரணமாக - சத்திரூபசமுகமாய் நில

பேறுடைய மாயையே யுலகிற்கு முதற்காரணமாதலால்,—காரி யகாணலாகும்- அணுககள் அழிந்தமைபற்றி யுலகு மீளககாரிய படுத்தற கோரிழுககில்லை,—இங்குகாண்பதணுவே - ஈண்டு முத ற்காரணமெனக காணப்படுவ தணுவே,—காரணமாயை யென் னை யெனின - அங்ஙனமாக முதற்காரண மாயையென்பதென னை யெனின்?—அணுவிற்காரிபங் கண்டால் - அணுககளிடத் தே காரியத்தன்மை காண்டலான, அவையுலகிற்கு முதற்கார ணமாதல் செல்லா தாகலின,— மாயையே காரணங்காண் - மாயையே முதற்காரணமாமென உணாக வெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



காரிய மென்பதென்னை காரண வணுவையென் னிற, காரிய மவயவத்தாற் கண்டனய் கடாதிபோலக், காரிய வுருவமெல்லா மழிதருங் காரணத்தாற, காரிய வுருபமின்மாயை தருமெனக கருதிடாயே. (௬௫)

(இ - ள்) காரிய மெனபதெ னனைக் கா ரணவணுவை யெ னனில் — அவயவத்தோடே கூடின காரியமென்று நீரணுககளைச் சொல்லுகிற தென்ன, அணு ககளுருவகத்துககுக் காரணமன்றோ வென பையாகில்?

காரிய மவயவ த்தாற் கணடன ய கடாதி போல — பிரபஞ்ச காரியங்கள் கால வவயவமா யிருந்து காரியப்படுகையினாலே கடாதி கா ரியங்களைப்போலக் காரியப்பட்டு வருமென றறிகதோம்;

காரிய வுருவ மெல்லா மழிதரு கா காரணதகால் — யாதொன்று காரியமுமா யுருவமுமாகக் காணப்பட் டிருக்கின்றது, அவையெல்லா மொவ்வொரு காலங்களில் ஒவ்வொரு காரணங்களாலே யழிந்துவிடு மாதலால்,

காரிய வுறுப் பினமாயை தரு மெனக் கருதி டாயே. — தனக்கொரு காரணமில்லாமற் றானவய வப்படாம லிருக்கிற மாயைதானே, இந்தப் பிரபஞ்ச காரியங்களை யுண்டாக்குமென்று புத்தி பண்ணுவாயாக. எ-று. (கரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

காரணவணுவைக் காரியமென்பதென்னையெனின் - ஜகத் காரணமாகிய பரமாணுக்களைக் காரியமெனபதென்னேயோ வெனின்?—காரியமவயவத்தாற் கண்டனங் காரியவுருவமெல் லாங் கடாதிபோல வழிதருங் காரணதகால் - பரமாணுக்க ளவயவ வததாகக் காணப்படுகையாற் காரியரூபமானதெல்லா மணுகடாமுதலியவைபோ லழியுமென்னு மேதவினுற் பரமாணு ககளும் பிரளயகாலத்தி னுசத்தையடைவதேயாதலாற் பிர பஞ்சத்திற்குக் காரணமாகாது. பின்னை பிரபஞ்சத்திற்குக் காரணமேதெனின்?—காரியவுறுப்பின் மாயைதருமெனக் கரு திடாயே - காரியரூபமல்லாத மாயையே பிரபஞ்சத்திற்குக காரணமென றறிவாயாகவென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

திரும்ப விகற்பித்து நிராகரிக்கின்றார்.

காரண வணுவை - நாங்களுலகுக்குப் பரமகாரணமாகக்கற்பித்த பரமாணுவை,—காரியமென்ப தென்னை யென்னில்? அவயவத்தால் - சாம்சத்தால்,—கடாதிபோலக் காரியமாகக் கண்டனம் - அறிந்தோம்,— நிரவயவமாகிய பரமாணுவைச் சாவயவமாக வெந்தவேதுவினாலே கண்டீர்? திக்கொடு சம்யோகியாயும் மூர்த்தமாயுங் கேட்கப்படுதலாற் சாவயவமென்றும், அதனாற் காரியமென்றும், அதனா லதற்குவேறொரு காரண முண்டென்றும், அறிந்தோ மாகையால்; பரமாணு முதலாம்.—காரியமுருவமெல்லா மழிதருங் காரணத்தால் - அந்தப் பரமாணு முதலிய காரியங்களை,—காரியவுருப்பினமாயை - அசேதனமாய் அநேகமா யிருத்தல், அமூர்த்தமா யிருத்தல், சாவயமா யிருத்தல் முதலான காரிய லக்ஷணமில்லாததாய்; இதற்குச் சேதன மாத்திரமின்றி விபரீதலக்ஷண முள்ளதாகிய மாயை,—தருமென - உண்டாக்குமென,—கருதிடாயே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

**எ-து. அணு காரியப்பொருளாய் அழிதன்மாலைத்தென்பதூஉம், மாயை காரியப்பொருளாதலின்றி நிலைபேறுடையதென்பதூஉம்; முறையேஅவயவமுடைமையானும் அஃதின்மையானு மறியப்படுமென்பதாம்.**

இதுவுஞ் சொற்பொருட்பின் வரு நிலை.

அணுக்களுக்கு அவயவமுண்டென்பது சையோகப் பதே வாற் பெறப்படும்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

பரமாணுக்கள் பிரபஞ்சத்துக்குக் காரணமாயிருக்க, அவை யிற்றைக் காரியமென்று சொல்லுவானேனென்ற பட்டாசாரி யனை நோக்கி; மேலருளிச்செய்கிறார்.

காரியமெனப்படுதென்னைக் காரணவணுவையென்னில் - பிர பஞ்ச காரணமாயிருக்கத்தக்க பரமாணுக்களைக் காரியமென் று சொல்லுகிறதெப்படி யென்று நீ சொல்லில்? —காரியம வயவத்தாற் கண்டனங் கடாதிபோல - பரமாணுக்கள் தா னே யவயவங்களுடையிருக்கையாலே கடாதிகளைப்போலே கா ரியப்பட்டு வருமென்று அறிந்தோம்,—காரியவுருவமெல்லா மழிதருங்காரணத்தால் - காரியப்பட்டு வருகிற பிரபஞ்சமெல் லாம் ஒவ்வோரவசரங்களிலே ஒரோர் காரணங்களாலே அழிய த்தக்க முறைமையுண்டாம. ஆகலாலே,—காரியவுருபயின மா யை தருமெனக் கருதிடாயே - பண்ணப்பட்ட அவயவங்களி ல்லாததொரு மாயையே யின்பு இந்தப் பிரபஞ்ச காரியங்களை யுண்டாக்குமென்று புத்திபண்ணுவாயாக.

இதனுற் சொல்லியது பரமாணுக்கள் அவயவங்களாய் காரியப்பட்டு வருகையினாலே பிரபஞ்சத் தோற்றுகைக்குக் கா ரண மாகாதென்றும்; அவயவங்க ளில்லாததொரு மாயையே பிரபஞ்சத் தோன்றுகைக்குக் காரணமாய் நிற்குமென்னு முற யையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

காரணவனுவை - காரணமாகியவணுவை,— காரியமென்பதெனனை யெனனில் - காரியமெனப தெங்ஙனமெனின,—காரியங்கடாதிபோல - அணுககள் காரியப் பொருளாதல் குடமுதலியனபோல,—அவயவததாற் கனடனம் - அவயவமுடைமையா லறிநதனம்,—காரிடவுருவமெல்லாம்-காரியப்பொருளகளெல்லாம்,—அழிதருங்காரணத்தால் - அழிதனமாலைய வாகலின,—காரியவுருப்பினமாயை - காரியப் பொருளெனப்படுதற்கிடைபுடைய அவயவத் தனமையினமையி னிலைபெறுமியற்கைத்தாகிய மாயைபயே,—தருமெனக் கருதிடாயே - முதற்காரணமென நீ யறிவாயாகவெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



இவ்வுலகு மாயையின காரியமென்பதற்கு
உதாரணமிட் டுணர்த்துகின்றார்.

தோற்றமு நிலையுமீறு மாயையின் றொழிலதென்றே, சாற்றிடு முலகம்வித்துச் சாகாதி யணுக்களாக, வேற்றதே வீண்டிநிற்கு மில்லதே யில்லையாகு, மாறறநீ மறந்தாயித்தான் மாயையை மதித்திடாயே. ௧௪

(இ-ள்.) தோற்றமு நிலையுமீறு மாயையின் றொழிலதென்றே சாற்றிடு முலகம் — ஞாதாக்கள சிருட்டிமுதலிய தொழில்களை மாயாகாரியமென்று சொல்லுவார்கள், அஃதெனபோல வென்னில்?

விதைச்சாகர
ஐ

சூக்குமமாய்ப் பூமியாதாரமா யிருக்கிற விதையின்கட் பனை கொம்பு முதலானவைக ளடங்கி நின்று காரியப்பட் டவிதைதினக ளொடுங்கிநின்று பினபுதோனறுமாறுபோல,

அணுக்களாக வேற்றதே வீண் டி நிற்கும்

இப்படி யொழிந் தப்பரமாணுகக டாமே பிரபஞ்ச ரூபமாகப் பொருநதில், ஒருகால ததிலு மழிவின்றியே நிற்கவேணடும்

இல்லதே லில் லைபாகும

அஃதொரு காலஙகளி லழியுங்காணு மெ னில்? அப்பொழுது காரணகாரிடங்கள சேர வழிகையாற் பினபொருகாலததில் ரேறறு ம லொனறுமில்லையாய்ப் போகவேணடும்

மாற்ரசி மறந் தாய்

அறியாதுபர்ந்தோா மாயையே காரண மெனறு சொல்லில் இ பொழுது நீயிநத வார்த்தையையு மறந்து விடுவையோ!

இத்தான் மா யையை மதித்தி டாயே

இதுபோல மாயையே காரணமென றறி வாயாக. எ-று

இததாவெனபது - அஃறிணைச் சுட்டுப்பெயரின மூனரும் வேற்றுமை யேதுவினகண் வந்தது. (கச)

ஏகார மீற்றசை.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

இன்னமும் அத்த வாதியை மறுப்பதாக உதாரணமிட் டு ணர்த்துகிறார்.

உலகத் தோற்றமு நிலையு மீறு மாயையின்றெழில தென றே சாத்திரம் - உலகமான துண்டாகிறது நிலைபெற்றுநிற்கி

றது மொடுங்குகிறது மாயாசத்தி விலாசங்களென்று வேதா ந்தங்களசொல்லும்,—வித்துச் சாகாதியணுக்களாக வேற்றதே லீ ணடிநிற்கு மில்லதே விசைவதினரு மாற்றநீமரக்தாய் - சூக் குமமாகிய வடவீசத்திற் றூலமாகிய சாகோபசாகை பத்தி ரபுஷ்ப பலஙகளெல்லா முண்டாவதுபோ லத்ருஸ்யமாயிருக் கிறமாயையில் திருஸ்யமாயிருக்கிற பிரபஞ்சம் அகடிதகடனாப டீயசிமாயா என்றுண்டாவ தன்றிப் பரமாணுக்களின கூட் டமே பிரபஞ்சமாமெனின? இவன் வித்துககளின் கூட்டமே சாகோப சாகையாக நிற்கவேண்டும். அப்படிநிற்க நீசொல்லும் பரமாணுக்களின கூட்டங்களும் பிரபஞ்சமாம். அஃதில்லையா கையாற் பரமாணுக்களின கூட்டமும் பிரபஞ்சமெனபது கூ டாது இதறகு நீயுத்தரஞ்சொல்லமாட்டா திருக்கையா லப்பி ரதியாநாம நிக்ரகஸ்தானம்,—இததானமானபயை மதித்தி டாயே - இநத நிக்ரகஸ்தான முனககு வருகையால் நானசொ னனமாயையே பிரபஞசததிறகுக காரணமெனறு விசாரிய் பாயாக எனறிதன்பொருள்.

இதனாற் சகதுற்பத்தி * சங்காதரூப மல்லவென்றது.
* சஙகாதம - கூட்டம்

இம்மூனறு விருத்தத்தினாலுஞ் சங்கிரஹித்துச்சொன்ன நியாய வைசேஷிகருடைய மதத்தையு மறுப்பையுஞ் சிறிதுவிஸ் தரித்துக்கூறுவாம்.

ஈஸ்வரேச்சையினாலும் *போஜகர திருஷ்டத்தினாலும் ப ரமாணுத்துவயங்களிற கிரியையுண்டாய் ஸஜாதீய பரமாணு க்களுக்குச் சம் யோகம்வருதபோது த்விஅணுகமாம். † த்விய ணுகத திரயத்தினாற் —ஜாலஸ்தசூரிய மரீசிப்பிரகாச்யமான த் ருசரேணுவாம். த்ருசரேணுவின் கூட்டங்களா லவயவித்துவா ர மஹா பிருதவியாதியாம். ¶ஏவம் ஆப்ய தைஜஸ வாயவ்ய

ங்கள் தத் தத் பரமாணுக்களினு லிக்கிரமத்திலுண்டாம். பிரளயமு மீஸ்வரனுடைய ‡ சகஹிஹீர்ஷையினுனு மான்மாக்களுடைய போஜகா§திருஷ்டாபாவத்தினுனு மஹாபூதசதுஷ்டயாரம்பக பரமாணுக்களிற் கிரிபையுண்டாய் கிரியையினுல் +விபாகமுண்டாய் அவ்விபாகத் துவாரா அசமவாயிகாரண சம்யோகநாசத்தினுன மஹாபூதங்களுடைய நாசமுண்டாம். ஆகாசம் காலம் திக்கு ஆன்மா இந்நான்கும் விபுவும் நித்தியமும், மன தணுவுமா யநித்தியமு மாயிருக்கும். இஃதவர்கண்மதம்.

* ஆன்மாக்களுடைய புசிப்புக்கு அதருஷ்டம் வந்ததினுலும், † இரண்டணு சேர்ந்தது மூன்று கூடியது, ÷ சாலகவாசசூாய கிரணத்திலே விளக்குகிற மூவணு, ¶ இப்படி அட்புகேயு வாயு ‡ சங்கரிப்பு, § அதருஷ்ட - அபாவம்=அதிருஷ்டமில்லாமை, + பிரிதல்.

இதற்குமறுப்பு பரமாணுசத்பாவத்திற் பிரமாணமேயில்லை நிரவயவ திரவியத்திற்குச் சம்யோகங்கூடாது. சாவயமாகி லுசவத்தா யுபாதானத்வங் கூடாதாகையாற் பரமாணுப் புரகசிறியையினுற் சகத்சிருட்டிகூடாது. ஆகாசங் காலந் திசகு மன திவைகளுக குற்பத்தி வேகாக மோகத மாகையா வித்திபத்துவங் கூடாது. மன தணுவாகின், மஹத்பரிமாணத்திரணங் கூடாது, ஆகையான் மன மகத்தே, விபுவே. ஆன்மா நித்தியமும் விபுவுமென்றதே யதார்த்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—௱—

இவ்வுலகமாயையின் காரியமென் றுணர்த்துகின்றூர்.

உலகின து தோற்றமு நிலையுமீறும் - சிருட்டியுந் திதியுஞ் சங்காரமும்,—மாயையினருமிலதென்றே - அன்னாத்தினது

பாகஞ் சாத்தனது பாக மென்றாற்போல மாயையினது கிருத்திய மீசுரனது கிருத்தியமென்றுதானே,—சாற்றிடுமுலகம்-யாக்கோர சொல்லுவார்கள்,—வித்து - ஆலம் விதைமுதலியன,—சாகாதி-பணை கொம்புமுதலானவையை,—அணுக்களாக - சூக்குமசத்தி ரூபங்களாக,—ஏற்றதேல் - தனனிடத்துத் தரித்திருந்ததானால்,—ஈண்டு நிற்கும்- தனதிடத்து நின்றுந் தூலவியத்திரூபமாகத் தோன்றி நிற்கும்,— இல்லதேலில்லையாகும் மாற்ற நீ மறந்தாய் - முதற்காரணத்திற் காரிய முன் சூக்குமித்துச் சத்திரூபமா யிராநின்றதா லுண்டாகாதென்று முன சொன்ன வசனத்தை நினையாதிருந்தாய்,—இதனால் - வித்துச் சாகாதியெனனுந் திருட்டாந்த முறைமையால்,—மாயையை மதித்திடாயே - மாயை தனது காரியத்தை முன் சத்திரூபமாக ஏற்றதேல் அந்தக் காரியத்துக்குக் காரணமாம். இல்லையேற் காரணமாகாதென்று மாயையைச் சற்காரியவாதியாகித் தானே விசாரித்துப் பார்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

எ - து. மாயைகருமெனறற்கு, மாயையே பிரகிருதியென்றறிக வென்னும வேதமொழியும், வித்துச்சாகாதி முதலியவற்றின வைத்து, உடம்பாட்டானுமெதிர்மறையானும் வழங்குகினற உலகமொழியும் சான்றாகலின்; இதனானும அணுகாரணவாதத்தை விட்டு மாயையே காரணமெனபதனை அறிவாயாகவென்பதாம்.

பிரமாணங்கூறி வலியுறுத்தியவாறு.

வேதத்தின்மொழிப் அதனை யுணர்ந்தார்மே லேற்றிக் கூறப்பட்டது.

ஏனையவற்றைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

இத்தாலென்புழி விகாரத்தாற்றொக்கவும்மை, காரிடவுருப்பினம்மை மாத்திரையேயன்றியென இறந்ததுதழீஇயிற்று.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

பிரபஞ்சந் தோன்றிநின்றொடுங்குகைக்கு மாயையே யுபாதானமென றெங்கே காணப்பட்டது எனறவனை நோக்கி; மேலருளிச் செய்கிறார்.

தோற்றமு நிலையு மிறு மாயையினறெழிலதென்றே சாற்றுமுலகம் - பிரபஞ்சந் தோனறிநின றழிகிற விதனை ஞாதாக்கள மாயாகாரியமென்றே சொல்லுவாாகள். அதெனபோலவெனனில்?—வித்துசசாகாதி - விதையிலே சாகைகள் முதலானவை தோனறுகிறாப்போலே,—அணுககளாக வேற்றதே வீணடுநிற்கும் - அப்படியொழிந்து அந்தப் பரமாணுக்கள் தானே பிரபஞ்சமாய்ப் பொருந்தில், ஒரு காலத்திலு மழிவின்றி நிற்கவேணும்,—இல்லதே விசைவதின்றும் - ஒருகாலங்களிலே யழியுங்காணு மென்னில்? காரணகாரியங்களசேர வழிகையாலே பினபு ஒருகாலங்களிலுண்டாகாமற் போக,இல்லையாய்விடவேணும்,—மாற்றநீ மறந்தாய் - ஞாதாக்கள் மாயையைக் காரணமெனறு சொல்லிப்போதுகிறவிது காண்கையாலும், நீ காரணமென்று சொன்ன பரமாணுக்களுக்கு அழிவுண்டாமெறதிகையாலும்,—நீதான்மாயையே மதித்திடாயே-இனிமாயையேபிரபஞ்சத்துக்கேத்தகாரணமென்றுநிபுததிபண்ணுவாயாக,

இதனாற் சொல்லியது பிரபஞ்சத் தோன்றுகைக்கு மொழிக்குகைக்கு மாயையே காரணமென்றும், பரமாணுக்கள் காரணமெனவில் பிரபஞ்ச மொரு காலத்திலு மழியாதிருக்க வேணுமென்றும், ஒருகாலத்திலே யழியில் பின்னை யொருகாலத்திலுந் தோன்றுதென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

தோற்றமுநிலையுமிறும் - தோற்ற நிலை யிறுதியென்னு முத்தொழிலும்,—மாயையின தொழிலதென்றே சாற்றிடும - மாயை தருமென்றற்கு மாயையே பிரகிருதியென றறிவென்று கூறுகின்ற வேதமொழியும்,—வித்துச் சாகாதியணுக்களாக வேற்றதேல் - வித்தினகண்ணே சாகைமுதலியன சூக்குமரூபமா யடங்கினின்றனவாயின,— ஈண்டுமிற்கும் - அவைதூலரூபமாக வெளிப்படும் எனவுடம்பாட்டாலும்,— இல்லதேல் - அவ்வாறு சூக்கும ரூபமாயடங்கி நிற்றலிலவெனின்,— இவைவதினமு - அவைதூலரூபமாக வெளிப்படுதலுமின்றுமென வெதிரமறையாறும்வழங்குகின்ற,—உலகமாற்றம் - உலகமொழியுஞ் சான்றுகளின,—நீமறந்தாய்- அதனைமீமறந்தாய்,—இதனால் - காரியவுறுப்பின்மை மாத்திரையன்றி வேதமொழி யுலகமொழி சானறுதலாகிய விதனுனும்,—மாயையை - அணுக்காரணவாதத்தை விட்டு மாயையேகாரணமென்பதனை,—மதித்திடாயே- அறிவாயாகவெனபதாம.

## மறைஞானதேசிகர் உரை.



மாயையின்கணின்று தோன்றியொடுங்குவதில்லை
யென்றவனை நோக்கித் திருட்டாந்தமிட
டுணர்த்துகிறார்.

மாயையி லுள்ளவஞ்சம் வருவது போவதாகும்,
நீயதிவ தில்லையென்னி னிகழ்ந்திடு முயலிற்கோடு
போயுகு மிலைகளெல்லா மரங்களிற புகுதப்போதி, ஞா
யிடு மதுவுமென்னிற காரணங் கிடக்கவாமே. (கரு)

| | |
|---|---|
| (இ-ள) மாயையி லுள்ள வஞ்சம வருவ துபோவதாகும் | காரணமாகிய மாயையிலே நின்று தோன்றும் பிரபஞ்சம அழியாமற் முனே தோன்றிபும பினபழிவது மாகாநிற்கும. |
| நீயதிவ் தில்லை யெனவில் | இங்ஙவிசுவந் தோற்றுமதற்குக் காரண மில்லையென்று நீ சொல்லில் |
| நிகழ்ந்திடுமுய லிற்கோடு | இல்லாதது தோன்றுமாயின அது முய லுசகுக கொம் புண்டென்று சொல்லுகிற தற கொக்குங்காண. |
| போயுகு மிலைக ளெல்லா மரங்க ளிற் புகுதப் போ தி ஞாயிடு மதுவு மெனவில் | மரத்தின கணின றுதிர்ந்த விலைகளந்த மரத்திலே பொருந்தித் தானே மீளவுந்தோ னறுமாயின, இவவிடத் தழிந்துபோன வு லசமு மாயையின்கட் சென்று தோன்றுமெ னவில்? |
| காரணங் கிட க்கவாமே | அங்கவிடத்திலே காரணமுண்டாயிருக்கு மாகிற் பின்பு காரியமு மப்படியே யுண்டாம். எ-று. |

பிரவஞ்ச மெனபதனை வஞ்சமெனத் தலைகளுரைத்தலாக் கின்றொன வறிக. (௧௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் லப்தாவகாசனுக, சூனியவாதி நீவி ரிருவருஞ் சொல்லும்பரமாணுவு மாயையும், பிரபஞ்சத்திற்குக் காரணம ல்ல; சூநயமே! சகத் துபாதானகாரணமெனனும் வசனத தை யொருவிருததததிற் லநுவதிததுத் தூஷித்தல்.

மாயையி னுள்ளவஞ்சம் வருவது போவதாகும் - மாயை யின் கணுண்டாம் பிரபஞ்சமானது, உண்டாய்வருவது நாசமா ய்பபோவதுமாம்;—நீயகிங்கில்லையெனவி னிகழ்த்திடு முயலிற் கோடு - இவிடதது நீசத்தாக வொருமாயை யெனப கோரு பாதானகாரண மினறெனின? அத்திபககாபாவமாகச சொல் லு முயற்கொம்புககு குணகாமக கிரியைக ளில்லாததுபோல வுபாதானசாரணஞ சூநயமாகிற் பிரபஞசமுஞ் சூநியமேயா ம் இதகாரிய முண்டு காரணமில்லையென்று சொல்லுகிறது கா லாத தியயாதிஷட வேக்வாபாச மாகையால் இப்பக்ஷம் நிரஸ்தம்,—போயுரு மிலைகளெல்லா மரங்களிற புகுப் போ தினுயிடு மதவுமெனனில் - அதிற் பிரவஞ்சமானது மாயையி லொடுங்கி மீண்டு மாயையிலுண்டாமெனபது, மரங்களினின் றும் பழுததுவிழுந்த விலைகள் மீண்டு மம்மரங்களிற் புக்கலைதே சனிராகத் தோனறுமாயின,நீர்சொல்லியமாயையிற் பிரவஞ்ச மிலபத்தையடைநது மறித்து மம்மாயையினினறு முற்பத்தி யடைமெனின்?—காரணங்கிடக்கவாமே - அங்ஙனங் காரியரூப மானதெல்லாஞ் சூக்குமரூபமாகக் காரணத்திலிருந்து மீளவுமு

ண்டாமென்று சொல்லுமவர்களுக் கித்திட்டாந்தமூக துஷணமு மெம்மதமானது. காரணமாகிய சமுத்திரத்தில் +வாயுவசாத தரங்க பேகபுர்புக துஷாரங்களுமுண்டாய் மீண்டு மதிலயிப்பதுபோ லீஸ்வரசத்தி மாயையை க்ஷோபிக்கப்பண்ணவி னைதக்ஷூ-ப்துப்பிரதேசத்திற் றனுகரண புவனபோக சதுர்விதரூபப்பிரபஞ்ச முண்டாமென்பதேயாம்.

ததுக்தம் — [illegible] மாயாம் விகாரகாரிணீதி.

+ வாயுவசத்தினால் திரை நுரை குமிழி விநதத்திலலே.

பிரவஞ்சம எனபது. வஞ்சம் எனக் குறைந்துநின்றது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அட்பஷ தானே,மதிததலைவெளிப்படண்ணிச் காட்டுகின்றூர்.

மாயையின உள்ளவஞ்சம் - சத்திருபமாய் முன் சூக்குமித்திருந்த பிரபஞ்சம் வியத்திரூபமாய்த திருமபச் சத்திருபமாய், மாயையின் - மாயையிலிடத் திருநது,—வருவது போவதாகும - தோற்றிபொடுங்குவதாகும்,— நியதிக்கில்லையெனில் - மாயையிற் காரிய முனசத்திருபமாயிருந்து வருவதுபோல இல்

லையென்று நீசொல்லில்,— முயலிற்கோடு - முயலின்கண்ணே கொம்பு,—நிகழ்ந்திடும் - உண்டாம்,—மரங்களில் உருமிலைக ளெல்லாம்-உதிரும் பத்திரங்க ளெல்லாம் மரங்களிலே,—போ யப்புக்குப் போதின - சென்றொடுங்கி வருமாகில்,—அதுவும் ஆயிடுமென்னில் - மாயையிற் பிரபஞ்சம வருவது போவதாகு மென்று நீ சொல்லின், மரங்களி லுதிர்ந்தவிலைகள் தங்களுக் குக் காரணமாகும் மரங்களுக்குக் காரணமாகிய பிருதிவியிலொ டுங்கும். அப்பேது மரங்களி லிலைகளினது தோற்ற மெப்படி யெனனில்?உதிர்ந்த விலைகள்வந் தொடுங்காதிருந்தாலும்,—கார ணங்கிடக்கவாமே - அவைகளினறிப் பினனுமனந்த பத்திரசத் திரூபமாகிய மரத்திற்க வேறுவே றிலைகளுண்டாகாநிற்கும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அதுவன்றியுஞ் சற்காரியகாரணங் கொள்ளாது இல்லது உற்பத்தியாமெனபார்க்கு முயலின்கண்ணுங் கோடுளதாதல் வேண்டும்; அற்றேல் உள்ளபிரபஞ்சமே மாயையினொடுங்கி மீளத் தோன்றுமென்பார்க்கும், அவ்வாறே மரத்தினின்றுதிர்ந்த விலை,தானே மரத்தினொடுங்கி,மீளத் தோன்றுதல் வேண்டுமெனின்? அஃதொக்கும். அங்ஙனமுதிர்ந்த விலைகள் சத்திரூபகாரணமாய் நிலைபெறுடைமையின, அது மீளத் தோன்றுதற்குரிய பிறகாரணங்களெல்லாம் அதனொடொருங்கு கூடியவழி, அவ்வாறே தோன்றும்; அல்வழித் தோன்றாதாகலின் ,அதுபற்றிக் கடாவென்னையென்பதாம்.

தருக்கங் கூறி வலியுறுத்தியவாறு.

பிரவஞ்சம் வஞ்சமெனக் குறைந்து நின்றது.

பிறகாரணங்களாவன, கன்மங் காலம் முதலாயின.

கிடத்தல் முதற்காரணத்தோடு ஒருங்கியைதல்.

கிடக்கவாமென்பது மழைபெய்யக் குளநிறையு மென்றாற்போல நின்றது.

அதுவே தோன்றுதற்குரியகாரணவிளைபு இல்வழியும்,மாத்திரின்கண் அதுபோல மற்றுஞ்சத்திகள் பலவுளவாகலின, இயைபுடைய வேறுவேறுநிலைகள் தோன்றுதற் கிழுக்கின்மையு முணர்க.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

—o—

மாயையிலே நின்றும் பிரவஞ்சம் தோன்றுகிறதும் ஒடுங்குகிறதும் உள்ள தொன்றல்லவென்றவனை நோக்கி; மேலுமருளிச் செய்கிறார்.

மாயையினுள்ளவஞ்சம் வருவதுபோவதாகும் - இப்படிக் காரணமான மாயையி லின்றுங் காரியமான பிரவஞ்ச மாவது மழிவதுமாயும் வாராநிற்கும்.—நீயிதிங்கில்லையெனனி னிகழுதிடு முயலிறகோடு - இப்படிக காரணமான மாயையினின்றும் காரியமான பிரவஞ்ச மாவதாயு மழிவதாயும் வருமென்று சொல்லாமல், பிரபஞ்சந் தானே காரணமுமாய்க் காரியமுமாயிருக்குமென்று நீ சொல்லுகிற விது; முயலுக்குக் கொம்புண்டென்று சொல்லுகிறதுக் கொக்கும்;—போயுகுமிலைகளெல்லா மரங்களிற் புக்குப்போதி ஞயிடுமெதுவுமெனனில் - உதிர்ந்துபோகிற இலைகளெல்லா மரத்திலே புகுந்து மீண்டு மிலையாகப் புறப்படில்,நீர் சொல்லுகிற பிரபஞ்சகாரியமு மிப்படியே யாமென்று சொல்லில்?—காரணங் கிடக்கவாமே - காரியப்பட்டவை காரணத்திற் செல்லவேண்டுவதில்லை, காரண முணர்கவே காரியமுந் தானே யுண்டாகா நிற்கும்.

இதனாற் சொல்லியது மாயையினாலே நின்றும் பிரபஞ்சந்தோன்றியு மீளவு மந்த மாயையிலே யொடுங்கியும் பிரபஞ்சங் காரியப்படுமென்றும; மரங்காரணமாகத் தோன்றின விலைகளும் பூக்களும காய்களும் மரத்திற்சென றொடுங்க வேண்டுவதில்லையென்றும மரங் காரணனு முண்டானாற்போல மாயையென் கிறகாரணங் கிடக்கவே, காரியமு முண்டாகா நிற்குமென்னு முறைமையையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

நீ பதிங்கில்லையென்னின - அதுவன்றியு நீசற்காரியகாரணங்கொள்ளாது இலல துறபத்தியா மெனபையாயின,—முயலின்கொம்பெழுந்திடும - முயலினகண்ணுவ கோடுண்டாதல்வேணடும,—உள்ளவஞ்சம் - அறறேல் உளபிரவஞ்சமே,—மாயையின போலவதுவருவதாகும-மாயையினொடுங்கி மீளத் தோனறுமெனபாக்கு,—மரஙகளினுத மிலைகளெல்லாம் - அவ்வாறே மரத்தினினறு உதிர்ந்தவிலைகள,—போய்ப்புக்கு - தானே மரத்திலொடுங்கி,—போதின - அதற்குரியகாலத்தில்,—ஆயின மதனுமெனவில்-மீளத்தோனறுதல் வேண்டுமெனினஃதொசதும,— காரணங்கிடக்க - அங்ஙனமுதிர்ந்த விலைகள் சத்திரூபகாரணமாய் நிலைபெறுடைமையின்,—ஆமே - அதுமீளத் தோன்றுதற்குரிய கனமங் காலமுதலிய பிறகாரணங்கள் எல்லா மதனோடொருங்குகூடியவழி யவ்வாறேதோன்றும்; அல்லுழித் தோன்றாதாகலி னதுபற்றிக் கடாவென்னையென்பதாம்.

## மறைஞானதேசிகர் உரை.



மாயை காரிய காரணத்துடனே கூடியிருக்கையா லநாதி
யெனபதூஉம், பிரபஞ்சமுஞ் சிருட்டியாதி
கிருத்தியங்களு மாதியெனபதூஉம்
உணர்த்துகின்றார்.

கருதுகா ரணமுண்டாகக் காரிய முள்ளதாகி, வ
ருதலா லநாதிவைய மறறொரு கடவுளித்தைத், தருத
லா லாதியாகச் சாற்றலு மாகுமாயைக், கொருவனு
ளெனினிக்கென்னி லுள்ளவா றுரைப்பக்கேணீ. (கரு)

(இ-ள்.) கருதுகா ரண முண்டாகக் காரி ய முள்ளதாகி வருதலாலநாதி — இந்த மாயை யநாதி, யெக்காரணத்தாலெனனில்? கருதப்பட்ட காரணத்துடனுங் காரியத்துடனு மனறே கூடிவருகையினாலே?

வைய மற்றொரு கடவுளித்தைத் தருதலா லாதியாகச் சாற்றலுமாகும் — இந்தப் பிரபஞ்சம் ஜடமாகையா லதனை யொரு கர்த்தா சிருஷ்டித்துக் காரியப்படுத்துகையா லாதியென்று சொல்லப்படும்.

மாயைக் கொருவனு ளெனவிக்கெனனின — இந்த மாயை காரியே போதாதோ, ஒரு கர்த்தா வாரெனனில்?

உள்ளவா றுரைப்பக் கேணீ. — கர்த்தா வுண்டெனபதனை யுனக்குள்ளபடி யாஞ் சொல்வ மதனைக் கேட்பாயாக என்று. (சக)

மற்றென்ப தசைநிலை

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

மேல் பிராபாகரன் ஜகத் தநாதிய நித்தியமும், இதற்கு நிமித்தோபா தானங்கள் சொல்லவேண்டுவ தின்றெனபதைக் குறித்துக் கூறல்.

கருதுகாரணமுண்டாகக் காரியமுள்ளதாகி வருதலால நாதி வையம் - புத்திபண்ணு முபாதான காரணமாகிய மாயை சத்தா யநாதியாயுள்ள விககாரியமாகியபிரவஞ்சமு மம்மாயை யினின்று முண்டாய் வருகையாற் பிரபஞ்சமும் ‡பிரவாகா நாதி,—மற்றொருகடவு ளிதனைத் தருதலா லாதியாகச் சாற் றலுமாகும் - [மற்றுவினைமாற்று] காததாவானவனுண்டாக் கலிற் பிரபஞ்சத்தை யாதியென்று சொல்லவுங் கூடும்,—மா யைக்கொருவனு ரெனனிங்கெனனின - நிரீஸ்வரசாங்கிய கா பிலர், அங்குராதிகளுக் கொருசேதனனை யபேக்ஷியாமற் பீ ஜாதிகள் சாமககிரியையானதுபோல் மூலபிரகிருதியானது தி ரிகுணாத்மக மாகலின மகதாதி பிரபஞ்சோற் பததியுந் திதியு மிலயமுந் தானேயாயிருககுமாகலி னிதற்கோ ரீஸ்வரனை வே ண்டா. ஈஸ்வரனொருவன ஜகத்கர்த்தாவாக வுணடாமாகி லி ப்பிரகிருதி யேதிற்கென்று சொல்லுவர்,—

தஉ-ஙூஂ - யஉ[illegible]யாவஙிஙாமெணக ஸஹாவஂ தத[illegible] தத்யா । கஙா[illegible]ஙவெக்ஷ ஙீஜாஉ ஸாஉ[illegible]யஊஉஂ கூமெ । ஊமஉாஉவிகாஙஎவ வஙிணாஉ ஸஹாவகவு[illegible] [illegible]மஙணா[illegible] [illegible]யா ந ஞ தெந ஸாவ[illegible]ஂ நிரீ[illegible] ஙஷி.

உள்ளவா றுரைப்பக்கேண் - இப்பிரகிருதி ஜகத்தருபமாகப் பரிணமியாது,ஜகத்துண்டாமாறு சொல்லுதுங்கேள எனத்திரன பொருள்.

‡ ப்ரவாகாநாதி-ஆற்றிலே தண்ணீர் முன்னேவந் தத் தண்ணீரோடிப்போகப் பினனேயு மொழியாமல் வருவதென வறிக.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

பிரபஞ்சம் பிரவாகாநாதி யென்பதிசைக்கின்றார்.

கருது காரணமுண்டாக - இந்தக்காரியத்துக் கிதுவேகாரணமென்று பரிசிக்கப்பட்ட மாயை யெக்காலத்து முள்ளதாயிருக்க,—காரியமுள்ளதாகி - காரியஞ் சத்தி ரூபத்தினாலேயும் வியத்தி ரூபத்தினாலேயு மெப்போது முள்ளபொருளாகி,—வருதலால் - சத்திரூபந்திரிந்து வியத்திரூப மாதலால்,—வையம - பிரபஞ்சகாரியம்,—அநாதி - நித்தியம,—வியத்திரூபத்தினாலே யொனறுபோகவொனறு பிரவாக மாய்வருதலாற் பிரவாகா நித்தியமெனறு சொல்லபபடும்; மற்றொருகடவுள்-நிமித்தகாரணனாகிய கர்த்தா,—இத்தை - இந்தவையத்தை,—தருதலால் -சத்திரூபத்தை வியத்திரூபமாகத் திரித்துநீக்கி வியத்திரூபமாக்கலால்,—ஆதியாகச சாற்றலுமாகும் - அநித்திய மாகவுஞ் சொல்லப்படும், —மாயைக கொருவனுரென்னிங் கெனனில்-மாயை யொவ்வோரொவவோர் பிரதேசங்களிலே, சத்திரூபந்திரிந்து வியத்தி ரூபமாதலுககு நிமித்தகாரண னெவனெனறு நீர்சொல்லுமெனறு நீசொல்லில்,—உள்ளவா றுரைப்பக் கேண்-சத்தியமாகச் சொல்லுவாம் நீ கேள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அற்றேல் இங்ஙனஞ் சற்காரியவாதங் கூறுவார்க்கு உலகழிபொருளென்றல் பொருந்தாதாய் முடியுமெனின்? அற்றன்று; காரணங்காரியமிரண்டும் உள்பொருளேயென்பது மேற்கூறியவாற்றான் இனிது விளங்குதலிற் காரியப்பிரபஞ்சமுஞ்சித்தபொருளேயாம ஒருகருத்தாவால ஒருகாலத்து விளங்குதலுமொருகாலத்து மறைதலுமாகிய அவத்தை வேறுபாடுபற்றி அழிபொருளென்றுஞ் சாற்றப்படும். அவ்வவத்தை வேறுபாடு கருதாதவழி உம்மையால் நித்தப்பொருளென்பதே துணிபென்பதாம்.

மாயைக்கொருவனு ரெனனிங் கென்னி னுள்ளவாறுரைப்பக கேணீ எனபதொழிந்தது அழிந்திடுமெனுங்கடாமே எனபது முதல் இவையாறு செய்யுளானுந் தாரகிகா மதம்பற்றி யாசங்கிதுப் பரிகரித்து, வருமுறை எனபதனுற் பெறப்பட்ட சற்காரியவாதத்தினியல்பு வலியுறுததப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மாயையிற் றோனறுமென்ற பிரவஞ்சம் ஆ போ வகாதியோவெனறு கேட்ட பட்டாசாரியனை நோக்கி; மேலருளிச்செய்கிறார்.

கருது காரணமுண்டாகக் காரியமுள்ளதாகித் தருதலாலநாதிவையம் - கருதப்பட்ட வுபாதான முண்டாகவே அந்தக் காரியப்படுகிற பிரபஞ்ச முண்டாய் வருகையா லநாதியேயுள்

௭௩.—மற்றொரு கடவுளித்தைத் தருதலா லநாதியாகச் சாற்றலுமாகும் - முன சொன்னதொரு கத்தா சிருஷ்டிகாலத்திலே இந்தப் பிரவஞ்சத்தை யுண்டாக்குகையினாலே இதனை யாதியென்றுஞ் சொல்லுமாம்,—'அழிதசயின்'' காரணவனு' 'காரியமொனபது' 'தோற்றமும்' 'மாயையின்' என்ற அஞ்சுதிருவிருத்தமும் பட்டாசாரியன. இதனை மறுத்ததற்குப் பிரமாணம்-யாபட்சம். "அழிகின்ற தால்வினைகளாகின்றவாறென்று வதும்பங்கியானபரிசே, யொழிவின்றியோதனமு மறவுணடுநாமவினைகளுருகின்றவாறதெனலாங், கழிகின்றதாலறிவு வினைதந்திடாவினைஞர் கருமங்களுடியுரவோா, பழுதின்றியேயுதவு மதபணபதாகவருள பரமனகளுக்கும் வினையே," எனனுமது கண்டுகொள்க. நிரீச்சுர சாங்கியன் மாயை காளே யுருககளாகிறசொழிநது இசற்கொரு கத்தா வேண்டுவதில்லையென்ன அவனை மறுத் தருளிச்செய்கிறார்,—மாயைக் கொருவனு ளொன்னிலெனனில் - மாயையாலே பிரவஞ்சமுண்டாமாகில் இதற்கொரு கத்தாவும்வேணும் என்றிவ்விடத்திற் சொல்லுகிறது எப்படியென்று நீகேட்கில்,—உள்ளவாறனைப்பக் கேணீ - காமுளளபடி சொல்ல நீ கேட்பாயாக

பட்டா-மறு, கூ-செ.

இதனாற் சொல்லியது பிரபஞ்ச மநாதியென்றும் ஒருகாலத்திலே கர்த்தாவினாலே காரிபப்படுகையாலே ஆதியெனறும்; இப்படி காரிபப்படுகைக்கு கர்த்தா வேண்டாமெனன கர்தா வேண்டுமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

கருதுகாரணமுண்டாகக் காரியமுள்ளதாகிவருதலால்-கருதுகின்றகாரண முள்பொருளாக வதனகட்டோன்றுங் காரியமுமுள்பொருளே யெனபது மேற்கூறிய வற்றானினிது விளங்குதலில்,—வையமனாதி - காரியபிரபஞ்சமு நித்தப்பொருளேயாம,—மற்றொருகடவு ளித்தைத்தருதலால் - ஒருகர்த்தாவாலொரு காலதது விளங்குதலு மொருகாலத்து மறைதலுமாகிய அவத்தை வேறுபாடுபற்றி,—ஆதியாகச் சாற்றலுமாகும்-அழிபொருளெனறு சாற்றவும்படும. அவ்வவத்தை வேறுபாடு கருதா வழி யுண்மையா னித்தப பொருளென்பதே துணிபெனபதாம். ஆகலின,—இங்கு-இவ்விடத்து,—மாயைக் கொருவ னான்றெனின - மாயையே தனகாரியத்தைத்தரும் இதற் கொருகருத்தா வெற்றுக்கெனின?—உள்ளவாறுணாப்பர் - அதனை யுள்ளவா றுரைத்தலை,—நீகேள் - நீகேட்பாயாக என்பதாம்.

மாயைக் கொருவனான்றெனின் கென்னி னுள்ளவாறுணாப்பகேணீ எனப தொழிதது; அழிந்திடு மனுககடாமெ யெனபதமுத லிவை யாறுசெய்யுளானுந் தார்க்கிகர்மதம்பற்றியாசங்கித்துப் பரிகரிதது வருமுறையெனரதனாற் பெறப்பட்ட சற்காரியவாதத்தி னியல்பு கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



பூதாதியாகிய பிரகிருதியும் புருடனுங் கிருத்திய
கர்த்தா வாகாதென றுணர்த்துகிறார்.

புத்திமற் காரியங்காண் பூதாதி புருடன்றானு, மத்தனு கரணம்பெற்றா லறிதலா லவற்றைமாயை, யுய்

த்திடு மதனன்மாயைக் குணர்வொன்று மில்லையென்றே, வைத்திடு மதனலெல்லாம் வருவிப்பா னொருவன்வேண்டும். (௧௭)

| | |
|---|---|
| (இ-ள.)புத்திமற்காரியங்காண் பூதாதி | பரமாணு முதலிய பூதாதியாகிய விசுவம் புத்திமானாகிய கத்தாவினது காரியங்காண். |
| புருடனாலும் | ஆன்மாவு மஞ்ஞானனாகையாற் பிரபஞ்சந்தானாக வுண்டாக்க மாட்டான், அதுவும் புத்திமான காரியங்காண். |
| அத்தனுகரணம்பெற்று லறித லால் | அந்த வானமாவுந தனுகரணங்களையும் பெற்றகாலத்து விடயங்களை யறியவேண்டுகையினாலே |
| அவற்றை மாயையுய்த்திடுமே | அந்தத் தனுவாதிகளை மாயைதானே செலுத்தாநிற்கும்; |
| அதனன மாயைக்குணர் வொன்றுமில்லையென்றேவைத்திடும் | அந்த மாயை சடமாகையாற் சரீர வவயமு மாயாகாரியமாய்த் தனுவாதிகளைத்தானாக வறிந்து கூட்டுதற் கறிவில்லை யென்று வேதாமங்கள சொலலும் |
| அதனல் லெல்லாம வருவிப்பா னொருவன வேண்டும். | ஆதலா லானமாவையு மாயையினையுங் கூட்டிக காரியப்படுத்துவான் பசுபாச விலக்கணனாகிய வொரு கத்தா வேண்டுமென்று புத்தி பண்ணுவா யாக எ-று. |

புத்திமான் எ-து. வடமொழி.
ஏகாரம் தேற்றம்.
உம்மை - எதிரதுதழீஇய வெச்சம்.

இதற்குப் பிரமாணம். பார்க்கியையும் வாயுவ்விய சங்கிதையுமென வறிக. (௧௭)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

பூதாதி - பிருதிவிமுதலான பிரவஞ்சம்,—புத்திமத்காரியத்தால் - தடையற்ற ஞானக்கிரியாவானா லுண்டாகவேண்டும்,—புருடன் - ஞானக்கிரியாவா னன்றோவல்லவோ, அவனாற்ப்ரவஞ்சமுண்டாமெனின்,— தானும்-[அந்தவானமா தானுமென்பது தொகைநிலை],— அதத்னுகரணம்பெற்றறிதலால் - கேவலத்தி லொன்று மறியாமலிருந்த அப்பூதாதிகளினின்றுங் கன்மத்திற்கிடான காயத்தையும் புறக்கரணங்களையு முட்கரணங்களையுமுண்டாகப்பெற்று லடபோதொன்றை யறியுமறிவுண்டாதலா லான்மாக்களாற் சிருட்டிக்கக்கூடாது,—அவர்றை மாயை யுப்தத்திடாதலால் - அக்காயாதிகளுக்கு மாயை யுபாதான காரணமாகையினாலும் மாயையாமவைகளைச் செலுத்துகையினாலும், அதனால்,—மாயைக்கு ணர்வொன்று மில்லையென்றே வைத்திடுமதனால்-வேதாகமங்களின் மாயைக்கோ ரறிவுமில்லையென்று ஸ்தாபித்திருக்கையினாலும்,—எல்லாம் வருவிப்பானொருவன்வேண்டும் - எல்லாப்பிரபஞ்சத்தையு மாயையினின்றும் பிறப்பிப்பானொருகர்த்தாவேண்டுமென்று பாரிசேடப்பிரமாணத்தினாற் ஜகத் தீஸ்வரகர்த்ருகமென்று கூறப்பட்டது.

[illegible]

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

உள்ளமுறைமையை யுணர்த்துகின்றார்.

பூதாதி-சங்காரக்கிரமத்தில் பூதத்திற்குப் பூர்வமாகவும், பிருதிவி தத்துவாதி சிவதத்துவாந்தமாகியவுலகு.

புத்திமற் காரியத்தால் - [புத்திமத்என்னும் தகாராந்தவடமொழிப்பதம்.] இலக்கணையாற் புத்தியென்றது, ஞானமன்றிக் கிரியையுங் காட்டுதலால்; சர்வசிருட்டி ஸ்திதி சங்காரத்தொழில்அறிவுடையவொரு கர்த்தாவையுடைத்து-இதுபிரதிஞ்ஞை.

காரியப்படுந்தன்மையால்-இது ஏது.

காரியானுமானத்தால் முன்கர்த்தாவைவிஸ்தரித்துச் சாதித்திருக்க, கூறியது கூறலென்னுங் குற்றம் வரத் திரும்பக்கூறுவானேன்? உண்டு. இப்போது காரியானுமானங்கோத்து பாசேஷியானுமானத்தாற் சாதித்துச் சிறப்பிக்கின்றார்.

ஞானவான் கர்த்தாவாகவேண்டுமென்று அறிவுள்ளவனாய்ப் பிரசித்தனானவனாதலானே கர்த்தா, பிரசித்தனன்றியிருக்கும் வேறோரீசுரனவேண்டியதில்லையென்று மீமாஞ்சகன் சொல்ல; மறுத்துணர்த்துகின்றார். விஞ்ஞானகலர் பிரளயாகலர்கள் அறிவின்றியப்பிரசித்தராதலால்.—

புருடன்றானும் - சகலன்றானும்,—

அத்தனுகரணம்பெற்றால்- அந்தவேறொரு கர்த்தாச் சிருட்டித்துக்கொடுத்த தூலதேக சூக்குமதேக பரதேகங்களைப்பொருந்தினால்,

அறிதலால் - அவனறிவுக்கு நிமித்தமாக முன்பொரு சுவதந்திர வறிவனாகியகர்த்தாச் சித்தித்தலானும்.

அவன் கர்த்தாவல்லன் முதற்காரணந்தானே கர்த்தாவென்று சாங்கியனமுதலோர் சொல்ல மறுத்துணர்த்துகின்றார்.—

அவற்றை - அந்தத்தனுகரணாதிகளை,

மாயைமுதற்காரணமாயிருந்து நிமித்தகாரணனாலேவப்பட்டு,—

உய்த்திடும் - உண்டாக்கும்,—

அதனால் - முதற்காரணமாகையால், யாதொன்று முதற்காரண மஃதறிவில்லது மண்போலவென்று —

மாயைக்கு உணர்வொன்று மில்லையெனறே வைத்தனர்- பெரியோர் நிச்சயித்தார்கள்,—

அதனால் எல்லாம் வருவிப்பானொருவன் வேண்டும் - சகலத்தையு மறிந்துண்டாக்கு மொருகர்த்தாவிரும்பப்படுவன்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

ஈண்டுக் கூறியவற்றுள் ஏனையவெல்லாமொக்கும், மற்றொருகடவுளைத் தருதலாலென்றது பொருந்தாது. மாயையேதனகாரியத்தைத் தரும்,இதற்கொரு கருத்தா எற்றுக்கெனின் ? அறியாது கூறினாய் குடங் குயவனாற் செய்யப்படுங் காரியமாதற்போலப் பூதமுதலிய பிரபஞ்சமெல்லாம் ஒருசேதனப்பொருளாற் செய்யப்படுங் காரியமேயாகலானும், புருடன் சேதனப்பொருளாயினும் அவன் அப்பூதாதியாகிய தனுகரணாதிகளைப் பெற்றாலன்றி யறியமாட்டாமையானும், மாயை அவற்றிற்கு முதற்காரணமாகலின் அது சேதனப்பொருளாதல் செல்லாமையானும், பாரிசேடவளவையான் இவ்வனை

த்தினும் வேறாய் மாயையினின்றும் பூதமுதலிய பிரபஞ்சமெல்லாவற்றையுந் தோற்றுவிப்பா னொருகடவுள் வேண்டப்படுவ னெனபதாம்.

புத்திமற்காரியமென்பது வடசொன்முடிபு.

ஈண்டுத் தொக்குநின்ற ஆறனுருபு காரகப்பொருண்மையின வந்தது.

புத்திமான் சேதனனென்பன ஒருபொருட் கிளவி.

ஒன்றுமென்பது சிறிதுமெனனும்பொருளபட நின்றது

ஏகாரந் தேற்றம.

---

## நிரம்பவழகியருளா வருமாறு.

—o—

மாயையிலே நின்றும் பிரபஞ்சந் தோன்றுகைக்குக் கர்த்தா வேண்டாம், தானே தோனறு மெனறவனை நோககி, மேல் மறுத தருளிச்செய்கிறார்.

புத்திமற்காரியத்தாற் பூதாதிபுருடனாறனு மத்தனுகரணம்பெற்று லறிதலால் - [ அநவயம் ] பூதங்கள் முதலான தனுவும்கரணமும் புருடனபெற்ற காலத்து,புத்திமற் கிருத்தியமாயிவனறி பத்தக்கவை யெல்லாத்தையு மிவனறிகையாலே,--அவற்றைமாயையுய்த்திடும்-அந்ததனுகரணாதிகளை யிவன்பொருட்டாகமாயை கொடாநிற்கும்.—அதனால் மாயைக் குணர்வொன்றுமில்லையெனறே வைத்திடும்-இபபடிகொடுததாலும் அந்தமாயைக்குப் பிரஞ்ஞை சற்றுமில்லையென்றே வேதாகமங்கள் சொல்லாநிற்கும்.—அதனாலெல்லாம் வருவிப்பா னொருவனவேண்டும் -ஆகையா லிவையெல்லாத்தையு முண்டாக்கிவிப்பானுமொரு கர்த்தா வேணும்.

இக்கூற்றுச் சொல்லியது, ஆன்மாவுக்கறிவு மாயை கூட்டி யறியுமென்றொழிந்து தானேயறியாததுகொண்டு மாயை அசேதனமாகையாலும், இரண்டையுங் கூட்டிக் காரியப்படுத்துகிறது கர்த்தாவென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(ஈண்டுக்கூறியவற்று ளேனையவெல்லா மொக்கும், மற்றொருகடவுள் இச்சையைத்தருதலால் என்றது பொருந்தாது, மாயையே தனகாரியத்தைத்தரும்; இதற்கொரு கருத்தாவெற்றுக்கெனின்? அறியாது கூறினாய் குடங்குயவனாற் செய்யப்படுங் காரியமானாற் போல),—பூதாதி - பூதமுதலிய பிரவஞ்சமெல்லாம்,—புத்திமற்காரியத்தால் - ஒருசேதனப் பொருளாற் செய்யப்படுங் காரியமேயாகலானும்,—புருடனானும் - புருடன் சேதனப்பொருளாயினும்,—அத்தனுகரணமபெற்றலறிதலால்-அவன்பூதாதி பலஞ்சிய தனுகரணாதிகளைப் பெற்றலன்றி யறியமாட்டாமையானும்,—மாயையவற்றையுந்தருதலால்-மாயையவற்றிற்கு முதற்காரணமாகலின்,—மாயைக்குணர்வொன்று மில்லையென்றே வைத்திடும் - மாயைக்குணர்ச்சியின்மையின் அது சேதனப்பொருளாதல் செல்லாமையானும்,—அதனாலெல்லாம வருவிப்பான். - பாரிசேடவளவையா லிவ்விரண்டினும்வேறாய் மாயையினின்று பூதமுதலிய பிரவஞ்சமெல்லா மவற்றையுந் தோற்றுவிப்பான்,—ஒருவனவேண்டும்-ஒருகடவுள்வேண்டப்படுமென்பதாம்.

## மறைஞானதேசிகர் உரை.

இந்தக் கர்த்தா பிரபஞ்ச காரியத்தை யுண்டாக்கு மிடத்துத் தானே யுண்டாக்குவானோ, ஒரு காரணங்களா லுண்டாக்குவானோ வென்னில்? குலாலனைத் திருட்டாந்தமிட் டதுபோலக் காரணத் திரயத்தா லுண்டாக்குவனென் றுணர்த்துகிறார்.

காரியங் காரணங்கண் முதறுணை நிமித்தங்கண்டாம்,
பாரின்மண் டிரிகைபண்ணு மவனைமுத றுணைநிமித்தம்,
தேரினமண் மாயையாகத் திரிகைதன் சத்தியாக, வாரி
யன் குலாலனாய்நின் றாக்குவ னகிலமெல்லாம். (௧௮)

(இ-ள்) **காரியங்காரணங்கண் முதறுணை நிமித்தங்கண்டாம்** — இந்த லோகத்தை யுண்டாக்கு மிடத்துக் கர்த்தாக காரணத்திரயத்திலே நின்று காரியங்களை யுண்டாக்குவன். அக்காரணம் முதற்காரணமெனவுந் துணைக்காரணமெனவு நிமித்தகாரணமெனவு மூவிதப்படும். அவை யாதெனில்?

**பாரின் மண் டிரிகை பண்ணு மவனைமுத றுணை நிமித்தம்** — நிரைநிரையே மண்ணை முதற்காரணமாகவும், திரிகையைத் துணைக்காரணமாகவும், குலாலனை நிமித்த காரணமாகவும், பூமியினிற் கண் கண்டனம், அதுபோலச் சிவனும் பிரபஞ்சகாரியத்தை யுண்டாக்குமிடத்து.

**தேரின மண் மாயையாக** — இதனை விசாரித் தறியுமிடத்து மண்ணை மாயையாகவும்,

**திரிகை தன் சத்தியாக** — திரிகை தண்டு முதலானவைகளைக் கிரியா சத்தியாகவும்,

| | |
|---|---|
| ஆரியன் குலாலனும்நின் முசகுவ னகிலமெல்லாம். | சிவனுங் குலாலனைப்போலச் சுத்த மசுத்த மாகிய விருவிதப்பட்ட வத்துவாவி னுண்டான வண்டமாகிய பாண்டத்தை யுண்டாக்கிக் காரியப்படுத்தாநிற்பன. எ-று. |

காரணமெனினுங் கரணமெனினு மிழுக்கா. முதற்காரணத்தை உபாதான காரணமெனப்பெறும் காரண மென்ற சொற்பொருளியாதெனின்? யாதொன்று காரியத்துக்கு முன்னே யுண்டாய, இஃதில்லாவிடத்திற் காரிய நிறைவேறு தென்பதுமாய், வேறேயு மொன்றை யுண்டாக்காததுமாய், இருக்கு மியாதொன்று காரணமெனப் பெறும. உ-ம. "சட்டிகுடஞ் சால் கலசந் தோண்டி சார்வாதி யெனப், பட்டவிவை தோன்றும் பகம்பண்ணி—லிட்டமுக, விந்தவிந்தனை யிலக்கிய மண்ணினெழுழிலே, இந்தவியல் காரிபமெனனு ம""குலாலன் றனகைபற்றிக கோலாற் சுழற்ற,வுலாவுநதிசிரியதனமேலுற்-றுலாவுமுனு, மந்தமணிற் கைததொழிலா லாககுமவன சாலாதி, யிந்தவினை காரணமென றெண" என விதனுட காரியகாரணத்தின் முறையையறிக.

இதற்குப் பிரமாணம் பார்ககிரை மதங்கம் நிசுவாசமென வறிக. (கஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———○———

மேல் காரியத்திற்கும காரண பதங்களைத் திட்டாந்த பூர்வகமாகத் தொகுத்துக்கூறுகின்றது.

காரியம் - காரியமாகிய பிரவஞ்சத்திற்கு, [இவண் நாலம் வேற்றுமை தொக்குநின்றது,]—காரணங்கண் முதற்றனை நிமித்த

து மண்டிரிகை பண்ணுமவன் முதறுணை நிமித்தம் பாரிற்கண்டாங்குயேரின் மண்மாவையாகத திரிகை தனசக்தியாக வாரியன குலாலனுயிவருக்குவ னகிலமெல்லாம் எனக்கூட்டிப் பொருளுரைகக,—* உபாதானகாரணஞ் சககாரிகாரண நிமித்தகாரணமென மூவிதமாம் அவைகள், கடாதிகளுக்கு உபாதானகாரண மண்ணுடையும், சககாரிகாரணந் திரிகையாதிகளும, நிமித்தகாரணம் குலாலனுமாகப் பூமியினிடத்திற் கண்டோம, அதுபோல் இறுதிகசில், கடாதிகளுக்கு மண்போலப் பிரபஞ்சத்திற் குபாதானகாரண மாயையும, திரிகையாதிகளைப் போல சககாரிகாரண மீஸ்வரனுடைய கிரியாசத்திப் பிரேரிதமானகாலமும் [இக்கருத்தே "காலமுங்கடவுளைவ லாற்றுணைக காரணம்" என்றது.] குலாலனபோல சாவலோக பூச்யரான வீஸ்வர னிமித்தகாரணமாக வநாதிபமாசநின்று சகலப் பிரபஞ்சங்களையு முண்டாககுவன.

மண்போலவெனுமன மண்ணென்றதாதிமுதல் வேற்றுமையி லொத்தவெனறபொருள்.

இவன் சொனன கர்த்தா சதாசிவேஸ்வர ஞானாபரிபாலகரான அநந்தேஸ்வரரை யசுத்தமாயா கிருத்தியத்திற்குச் சொனனது.

த்ரு—க்ஷம் – வாஸஸ் ஸத்ருவிய—த்ருக்ஷ ஸமவெ ஹா வியி
வொதித: । வித்ரு ரா ஜா யி ரா ஜெ ஸொ ஸா யாம் வி
ஜ்ஞாவ ஸ்ரோத் ரா வி க்ஷி.

* முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம் எனவுமாம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

காரியோற்பத்தியிற் காரணம் மூன்றுமுறைமையாயிருக்குமென் றுரைக்கின்றார்

காரியங் காரணங்கள் — கடமுதற்காரியங்களினது காரணங்கள், — முதற்றுணை நிமித்தங்கண்டாம் — முதற்காரணமென்றுந் துணைக்காரணமென்றும் நிமித்த காரணமென்றும் மூன்றுபகுதிபடப் பரீக்ஷித்துப் பார்த்தோம், § அதெப்படி? — தேரின் — விசாரிக்கின், — மண்மாமாயையாக — மண்போல முதற்காரணஞ் சுத்தமாயை யசுத்தமாயையாக, — திரிகை தன் சத்தியாக — திரிகைபோலத் துணைக்காரணந் தனது சத்தியு மதனாலேவைப்பட்ட வாகீசுர சத்தியுமாக, — அண்ணல் — நிமித்தகாரணமாகிய சிவன், — குலாலனாய் — மண்மகனைப்போல, நின்று, — அகிலமெல்லாம் — சகலலோகமெல்லாம், — ஆக்குவன் — உண்டாக்குவான்.

முதற்காரணம் — உபாதானகாரணமென்றும், சமவாயி காரணமென்றும்; துணைக்காரணம் — சககாரிகாரணமென்றும் பெயர் பெறும்.

§ இவ்விடத்தில் — பாரின் மண் திரிகை பண்ணுமவன் (முறையே) முதல் துணை நிமித்தம். இக்கவிழ்வுபதம் பிரதியில் விடப்பட்டிருக்கிறது.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

அல்லதூஉம், ஒருகாரியநிகழ்ச்சிக்கு முதல் துணை நிமித்தமென்னுங் காரணமூன்றுந் தம்முளொன்றையின்றி யமையாவென்பதூஉம், மூன்றுந் தம்முள் வேறுதலுங் குடமுதலிய காரியத்தி

ணமென்றுந் துணைக்காரண மென்றும் நிமித்தகாரண மென்று மூன்றுப் பிரகாரமாயிருக்கும். அதெங்ஙனே என்னில்,— பாரில் மண திரிகை பண்ணுமவன் முதல்துணைநிமித்தம் - பூமியின்கண்ணுண்டான மண்ணும் திரிகையும் வனையுமவனும், முதற்காரணமுந் துணைக்காரணமும் நிமித்தகாரணமுமென்று மூன்றுவகைப்பட்டு வருகிற முறைமையைத்;—தேரின் மண்மாயையாகத் திரிகை தனசத்தியாக வாரியன்குலாலனாய்நின்றுக்கு வனகிலமெல்லாம் - இப்படி யிந்த முறைமையையெல்லாம் விசாரித்துப் பார்க்கில், மாயைக்கு மண்ணுவமையாகவும், சத்திக்கி திரிகை யுவமையாகவும், கர்த்தாவுக்குக் குலால னுவமையாகவுஞ் சொல்லும். இப்படியே நின்று பிரபஞ்சமெல்லாம் உண்டாக்குவான.

என்னவே மாயையுங் கர்த்தாவு மிரண்டும் வேணுமென்பது கருத்து.

" மாயைக்கொருவனுமொனனிங் கென்னி னுள்ளவாறுணைப்பகர்வேனி" என்ற பக்ஷமு, "புத்திமற் காரியங் காண்" என்ற திருவிருத்த முத லிரண்டும் மாயாவாதத்தில் நிரீச்சுர சாங்கியனைமறுத்தது. இதற்குப் பிரமாணம் பரபக்ஷம் "அறியான்புருடனபிரகிருதி யசேதனங்காரியத்தினுக்குக், குறியாய்நாதனுளனென்று கூறுமுத்தி விவேகமெனிற், செறிவாந்தனைபோ காதறியிற் சேர்ததோனவேண்டுஞ் செயலிற்போ, நெறிபாற்பணிசெய் துடற்பாசம் நீச்கிக்கொணணி நின்மலனுல்" என்று மதுகண்டுகொள்க.

பர-நிரீ-மறு, கூ-செ.

இதனுற சொல்லியது கர்த்தா பிரபஞ்சத்தை யுண்டாக்குமிடத்து மாயை முதற்காரணமாகவும், தனது சத்தி துணைக்

காரணமாகவும், தானிமித்தகாரணமாகவு முண்டாக்குவனெ னறு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———0———

காரியகாரணங்கள் - அல்லதூஉ மொருகாரிய நிகழ்ச்சிக்கு வேண்டுங்காரணங்கள்,--முதற்றுணைநிமித்தம்-முதற்காரணந் துணைகார நிமித்தகாரணமென மூவகைப்படும்,—பாரின மண் திரிகைபண்ணுவன - இவ்வுலகினகண்ணே குடமாகிய காரியத்திற்கு மண்ணுந் திரிகையுங் குலாலனும்,—முத றுணை நிமித்தங்கண்டாம்-முறையே முதற்காரணமுந் துணைக்காரணமுநிமித்தகாரணமுமாதல் காட்சியளவையா லறிந்தாம்,— தேரின-ஆராயுங்கால்,—அகிலமெல்லாம் - பிரவஞ்சகாரியத்திற்கு மவ வாறே,—மாயைமண்ணாக - மாயை மண்போலமுதற்காரணமாகவும்,—தனசத்தி திரிகையாக - தனசத்தியே திரிகைபோலத் துணைக்காரணமாகவும்,—ஆரியன குலாலனாய்நின்று - சிவபிரான குலாலனபோல நிமித்தகாரணமாய்நின்று,—ஆக்குவன - தோற்றுவிப்ப னெனபதாம்.

மாயைக்கொருவனு ளெனனிங்கெனனி னுள்ளவாறுணைப் பக்கேணி எனபதுளப்பட விவையிரண்டு செய்யுளானுஞ் சாங்கியர்மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்துத் தருபவனொருவன வேண்டுமெனபது வலியுறுத்தப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



அந்தக்கர்த்தா ப்ரபஞ்சத்தை யுண்டாக்கு மிடத்
துபாதானகாரண மூன்றெனபதூஉம், அவற்
றிற் றோன்றுங்காரியங்க ளிவையெனப
தூஉம், தொகுத துணர்ததுகிறார்.

விந்துவின் மாயையாகி மாயையி னவ்வியத்தம்
வந்திடும் விந்துத்தன்பால் வைகரி யாதிமாயை
முந்திடு மிராகமாதி முக்குண மாதிமூலந்
தந்திடுஞ்சிவனவன்றன்சன்னிதிதன்னினின்றே.(கசு)

(இ-ள்) விந்து வின் மா யையாகி — சுத்தமாயையைப்போல வசுத்தமாயையு முபாதான காரணமாகி

இன ஐந்தாமுருபு ஒப்பினகண் வந்தது. "இனநன்றோமே து வெல்லை ரீகரு முவமைபெனப் - பனனுகலு முன்னடக்கிப் பார" எனவறிக.

மாயையி னவ்வியத்தம் வந்திடும் — மாயையைப்போலப் பிரகிருதியு முபாதானகாரணமாய்வரும்.

விந்துத்தன்பால் வைகரியாதி — முற்கூறிய விந்துவிலே சூக்குமைமுதலிய நாலுவாக்குக்களிடத்தி லொன்றி லொன்றாகக் காரியருபமாய்த் தோன்றும்

மாயைமுந்திடு மிராகமாதி — அந்த வசுத்தமாயையிலே யிராகதத்துவமுதலிய வைந்துமுண்டாம்.

முக்குணமாதி மூலந் தந்திடும் — அந்தமூலப் பிரகிருதியிலே குணமுதலிய தத்துவங்களெல்லாந் தோன்றும்.

இக்கமூன்றுபாதானங்களுந் தத்தங் காரியங்களைத் தாமாகத் தோற்றுவிக்கவற்றோ வெனின?

| | |
|---|---|
| சிவனவன்றன் சன்னிதி தனனி னிறே | ஆதித்தன் சன்னிதியிற் ப்ரபஞ்சங் காரியப்படுமாறுபோல, சிவனது சன்னிதிமாத்திரத்திலேதானே தத்துவங்களையுந் தாத்துவிகங்களையு முண்டாக்கிக் காரியப்படுத்துவன. எ-று |

"பெருமாயை விந்து பரசிருதியெனன-வொருமூன றுபாதானமுண்டு" எனவறிக.

மூன்றுமெனபதனை விந்துவினிடத்துங் கூட்டுக.

இறந்தபல வெழுவாயும பலபடனிலையும.

இந்நூற்குபயிரமாணம விசுவசாரோத்தர மெனவறிக (௪௬)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் ஒன்பது விருத்தத்திரு லுபாதானத் திரவியங்களின்வெறாங் காரியருபப் பிரபஞசமுண்டாமபடி தொகுத்துக் கூறுகின்றது.

விந்துவின மாயையாகி மாயையினவவிபதத்தில் வந்தில்ம்-விந்துவாகிய சுத்தமாயையி னதோபாக மசுத்தமாயை அவவசுத்தமாயையினிடத் தவவிபத்தமாகிற மகானுண்டாம இவ்வாறு விஞ்ஞானகலா பிரளயாகலர் சகலரென்னு மூவர்களுந் தனுகரணதிக ருபாதானமாகிய விந்து மோகினி மகானெனுமூன்று சித்திததுள்ளளவி னிவைமிற்றின காரிய முண்டாம்படி சொல்லில்,—

விந்துத்தனபால் வைகரியாதி மூன்றும் - விந்துவினிடத்தினின்று காதாதித்தத்துவங்களுதிப்பதற்கு முனனே வைகரிகாதிகாரணமான சூக்குமை பைசந்தி மத்தியமையுண்டாம்,—

மாயை யிராகமாதி தந்திடும் - மோகினியாகின்ற அசோ மாயை யிராகதத்வத்திற் காதிகாரணமான காரணமாயை;கா லம், நியதி, கலை, வித்தைகளைடபெற்றிடும்,

சூ-ம் யாதனுருபிற் கூறிற்றுயினும பொருள் செனம ருங்கில் வேற்றுமைசாரும். எனபவாகலின, இராகமென்ற தற்கிராகத்திற்கு என்று நானகனுருபாகப் பொருளுரைககப் பட்டது —

மூல முசகுணமாதி தந்திடும் - மூலப்பிரகிருதியாகிற வவ் வியத்தஞ் சாத்மீக விராசத தாமதகுணங்கள் முதலிய வா ணமதத்துவ மிருபத்துநானகையும் பெற்றிடும்.

பிரகிருதியினின்றும் புத்திமுதலாக வொன்றினொன்று தோனறுவதைப் பிரகிருதி தருமென்றதும், கலையினுண்டான பிரகிருதியை மாயைதருமென்றதும், காரியத்திற காரணமுப சாரலக்ஷணை இவவுற்பத்திக கிரம மேல்விரித்துக் கூறப்படு ம். இவவா றுபாதானத்திரடங்களே பிரபஞ்சத்தை யுண்டா க்கிற கர்த்தா வொருவ னேதுக்கெனின.—

சிவன-சிவனோயிவவுபாதானங்களினின்றுங் காரியங்களை யுணடாககுகிறவன. சிவனுக்கிற் சிவன சிரியாவானுவ னெனி ன?—

அவனறன் சந்நிதி தனிலன்றே -அசசிவனது சந்நிதிமா த்திரத்திற காரியப்படுவதாம்.

சூ-ம். அனறெனகிளவி யாமெனத்தகுமே

தது-க்தம் - யதாமெ ராநீ நம்சேஷ்டா நாம ஸந்நிமெ ஈவகாரகஃ। ததா ஸந்நிமாத்ரேண விஷயாத்ர விஸ்வம் ஶிவஃ॥ இதி.

விந்துமோகினி மஹானென்று மூனறுபாதானமாகச் சொல்லுகிறது கற்பனுகௌரவம்

மாயையொனறே போதுமெனின்? அப்படியன்று சுததாத வாவுககு விநதுவே யுபாதானமாக வேண்டும். மிச்ராத்வாவுககு மோகினி யுபாதான மாகவேண்டும். அசுததாத்வாவுககுப் பிரசிருதியே யுபாதானமாகவேண்டும் அஃதெப்படியெனனில் ? பருததிநூலிற படடுப் புடைவையுங் கோணியு மாகாததுபோல, மாயையிலே மிசராததுவா வொழிய சுததாதவாவு மசுததாதவாவுங் கூடாது

இதற்கு சிவாதவைதவாதி - ஈஸ்வரனே ஜகத்துபாதான காரணமெனறும்

வாமாத்வைதவாதி - சிற்சத்தியே ஜகத்துபாதானகாரணமெனறும்.

பாசுபதி - மாயையேஜகத் துபாதான காரணமெனறும்.

நியாய வைசேஷிகா-பரமாணுவே யுபாதான காரணமெனறும்

சாங்கியனும் பாஞ்சராத்திரியும - பிரகிருதியே யுபாதான காரணமெனறும சொல்லுவார்கள்

* அருகன-அணுவே யுபாதான காரணமெனபன.

புததன-பஞசகந்தமே காரணமெனபன்;

உலகாயுதன-நாலு பூதமே காரணமெனபன்.

அதகூடாது. இவை சுத்தாததுவாவுககு விந்துவே யுபாதானகாரணம்.

* அருகன மதமுதல் சேர்த்து சில ப்ரதிகளிலெழுதி யிருக்கிறது. இது, யுக்தமனறு. இவவிடத்து மாயையின் பேதங் கூறியது; மாயையுண்டெனபவர்கசே யாகலின.

𑌤𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 𑌪𑍌𑌷𑍍𑌕𑌰𑍇 — [illegible]

மேலுஞ் சுத்தசாத்துவாவுக்கு விந்துவே காரணமென்பதற்குயுக்தி. பிரபுத்தராகிய விஞ்ஞானகலருடைய தனுகரணாதிகளுக்கு அசுத்தமாயை காரணமல்ல. விஞ்ஞானகலர் தேகேந்திரியாதிகளை யுடையவர்களாகிலுஞ் சிவானுக்கிரகத்தினாற் சர்வதா பிரபுத்தரே. அசுத்தமாயை கர்மானுகுணமான தனுகரணாதிகளை யுண்டாக்குவதாகையாலுஞ் சுத்தாத்துவ வாசிகளாகிய விஞ்ஞானகலருக்குக் கர்மமில்லாமையாலு மவர்களுடைய தனுகரணாதிக்குச் சுத்தமாயிருக்கிற விந்துவே காரணம். சுத்தாசுத்தமென நிர்ணயமே யாகலின், அசுத்தம் மாயையாகலின், சுத்தமென்று விந்துவைச் சொல்லுகையால் ஈஸ்வரனுக்குச் சமவாயசத்தியேயெனின்? அதுசுத்தமாயினும் ஜடமுமா யுபாதானகாரணமு மாகையாற் குலாலனுக்கு ம்ருத்பிண்டம்போல வீஸ்வரனுக்குப் பரிக்கிரகசத்தியல்லது சமவாயசத்தியல்ல.

இஃதன்றியும் அசுத்த மாயையை க்ஷோபிப்பித் தான்மாக்களுக்குக் கர்மானுகுணமாகத் தனுகரணாதிகளை யுண்டாக்குகிற வநந்தேஸ்வரருடைய தனுகரணாதிகளுக்கு யாதொன்று காரணம், அதைப் பெற்ற அனுருத்திரரான பேர்கள் யாதொரு தனுகரணாதிகளினாற் பந்திக்கப்படுகிறார்கள், யாதொரு தனுவாதிகளை விட்டுப் பரம முத்தியையடைகிறார்க ளத்தனுகரணாதிகளுக்குபாதானம் விந்துவே.

ஈஸ்வரனுடைய லயபோகாதி காரங்க ளியாதோ ருபாதியிலுணடாயிற் றதுவும் விந்துவே.

ஆகையாற் சுத்தாத்வாவுக்கு விந்துவே யுபாதான காரணம் மிச்ராத்துவாவுக்கு அசுத்த மாயையே யுபாதான காரணம் அசுத்தாத்துவாவுக்கு மாயாஜந்யமான ப்ரகிருதியே யுபாதான காரணம.

ஆகையால் விந்து யோகினி மஹாவென்று முபாதானத் திரயமு மங்கீகரிப்பீம

[illegible]

த்கஃ || யதா வாதாநந்தா ஜாதம் ஸ்வேந்த்ராஜித ம
த்ராத் | கிஞ்சித்ராணமேவ யநபேக்ஷ்யதே யத்
வாஸ்யதாஃ || விசேஷத்தேயதா வாயம் ஸ்வேந்த்ராஜி
தமத்ராத் | ஸயாதிமேஹஃ ப்ராமாணோ யதா வா
யளபிவஸ்த்தா || ஸ்வேந்த்ராஜித ஜதேவத்மே ஸ்வ
க்ஷாவஸி நிதோதத்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சிலசைவாசாரியர்கள் சுத்தமாயை யொன்றுமே முதற்காரணத்துள நித்தியமாகும பரமகாரணம, அசுத்தமாயை பிரகிருதி யிரண்டும, சுத்தமாயையினின்று முறைமையிற்றோற்றி அநித்தியமாகு மவாந்தரகாரணமென்று சொல்லுவார்கள, மற்றுள்ள சைவாசாரியர்கள சுத்த மாயைபோல் அசுத்த மாயையும நித்தியமாகும் பரமகாரணம், பிரகிருதிமாத்திரம அநித்தியமாகு மவாந்தரகாரணமென்று சொல்லுவார்கள என்று இரத்தினத்திரயத்திற சொல்லி யிருத்தலால், அசுத்தமாயையும் நித்தியமெனபார கருத்து இரண்டாஞ சூத்திரத்தில் 'நித்தமாயருவா' என்றும் திருவிருத்த முதல் விருத்தங்களிஞல் விஸ்தரிக்கின்றூர்.

அநித்தியமென்பார்கருத்திதுபோ தறிவிக்கின்றூர்.

விந்துவின்மாயையாகி - சுத்தமாயையி னின்றும்அசுத்த மாயைதோற்றி —

மாயையினவ்வியத்தம் வந்திடும் -அந்தவசுத்தமாயையி னின்றும் பிரகிருதி தோன்றும்,—

வித்தத்தனபால் - திரும்பச் சுத்தமாயையி னின்றும்,—

வைகரியாதி வந்திடும் - (எனக்கூட்டுக) சங்காரக்கிரம கணனைக்கு வைகரிமுதல், சிருட்டிக்கிரம கணனைக்கு அதிசூக்குமை முதலாதலால், மகாமாயையி னின்றும் மகாசிருட்டியினுண்டாய் மகாப்பிரளயபரியந்தம் அவரவர்க்கு வேறுவேறு யானமாக்களைப்பற்றிப் பிரணவகலாசத்தி சதுஷ்டய ரூபவிருதய பங்கஜத்திருக்கும் பிரணவ பஞ்சம நாதகலாசத்தி கர்ப்பப் பிரதான நாதத்துக்குள் ளானையுருட்பபோ லப்படிச் சத்திரூபமாயடங்கிச் சிவதத்துவமைந்தின திடமாயிருக்கின்ற நாத விந்து மகார உகார அகாரபெயர்ப் பிரணவகலைக ளைகயும் பற்றிக்கொண் டதிசூக்குமை சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி யென்கின்ற வாக்குகடோற்றும.

அவ்வாக்கு நான்கென்றுமிடத்து; உகார அகாரங்களிரண்டினையும் பற்றி வைகரிவரும், அதிசூக்குமை சூக்குமையி னடங்கும்—

மாயைமுந்திடுமராகமாதி - சங்காரக்கிரம கணனைக்கு ராகமுதல், சிருட்டிக் கிரம கணனைக்குக் காலமுதலாதலான, மாயையினின்றுங் கால நியதி கலை வித்தை ராகங்கள புருடதத்துவத்தோடு மேற்சொல்லு முறைமையில்,—

முந்திடும் - உண்டாம்,—

முக்குணமாதி மூலந் தந்திடும்-பிரகிருதி, முக்குணதத்துவமுதற் பிருதிவி தத்துவ மீறுகுந தத்துவங்களை மேற்சொல்லு முறைமையிற் றோற்றுவிக்கும் நிமித்தமின்றி யாமோ வாகாது,—

சிவனவனறன் சந்நிதி தன்னிலின்றே - சிவனது சங்கற்பத்திலும், சிவனதியற்றுதற் கர்த்தாவாகிய அனந்தேசுரர் சங்கற்பத்திலும் முன்னின்றே

சிவனவனாதெனு மாறும்வேற்றுமைத் தொகை விரிவுவிட்டு சிவனாகிய அவனென்னும் பண்புத்தொகை மாத்திரம விரிவுபடுவதனால் மாறுபடும், அசுத்தாத்துவா அனந்தேசுரர் கர்த்தவமாதலால்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

சுத்தஞ் சுத்தாசுத்தம் அசுத்தமெனக் காரியப்பிரபஞ்சம் மூன்றிறப்படுதலின், அவற்றிற்கு முதற்காரணங்களுங் கம்முள் வேறுதலபெறும். அவற்றுள், மலகன்மங்களோடு விரவாது முதற்காரணமாய் நிற்பது சுத்தமாயையென்றும், அஃதிவ்விரண்டனையும் வியாபித்து மேலாய்நிற்ப அவற்றின் கீழாய் அவ்விமலகன்மங்களோடு விரவி முதற்காரணமாவது அசுத்தமாயையென்றும், அவ்வசுத்தமாயையது பரிணாமமாய்த் தோன்றுவது பிரகிருதிமாயையென்றுங் கூறப்படும். அம்முறையான், சுத்தமாயையினின்றுஞ் சங்காரமுறைபற்றி வைகரிமுதல் வைத்தெண்ணப்படு நாலு வாக்குந் தோன்றும். அசுத்தமாயையினின்றுஞ் சங்காரமுறைபற்றி அராகமுதல் வைத்தெண்ணப்படுங் காரணத்தத்துவமேழுந் தோன்றும். பிரகிருதிமாயையினின்றுஞ் சிருட்டிமுறைபற்றிக் குணதத்துவமுதல்வைத்தெண்ணப்படும் போக்கிய தத்துவமிருபத்துநாலுந் தோன்றும். இவ்வனைத்துஞ் சடரூபமான விந்து மோகினி மான மூன்றனுந் தத்தங் காரியங்களைச் சிவசத்தி சங்கற்பரூப சாந்நித்தியினின்றுந் தோற்றுவிக்குமென்பதாம்.

விந்துவின் மாயையாகிய என்புழிக் கீழென்னும் பொருள்படவந்த கண்ணுருபு விரித்துரைக்க. இன் சாரியை. அதோமாயையென்றதும் இப்பொருள்பற்றியென்க. இஃதறியாதார்

விந்துவைப்போல மாயையாகியென உவமையுருபாகக்கொண்டுரைப்பாரும், விந்துவினின்று மாயை தோன்றியென ஏகப பொருட்டாகக் கொண்டுரைப்பாருமாயினார். இரத்தினத்திரயத்தொன்றும் வடநூலின அவ்விரண்டனையும் பிறாகருத்தாக வைத்தோதுதலின அவைபொருந்தாமையறிக. அந்நூலார் ஏகன்—ர் செய்யுந் தொழிலுஞ் சிவசந்நிதியையின்றி யமையாவென்னுங்கருத்தான மூன்றற்குஞ் சிவசந்நிதியே கூறினா.

அவன பகுதிப்பொருள் விகுதி.

இதனுள், முதற்காரண மூன்றுமாறும், அவை தத்தங் காரியங்களைத் தோற்றுவிக்குமாறும், அது முதலவனையின்றி யமையாவாறுந் தொகுத்துக் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படி மாயையிலே நின்றுங் கர்த்தாப் பிரபஞ்சத்தை யுண்டாக்குகிறபடி யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

விந்துவினமாய்கையாகி - விந்துவாகிய சுத்தமாயையைப்போல அசுத்த மாய்கையும் நித்திய வியாபகமாகி,—மாயையினவியத்தம்வந்திடும - அந்த அசுத்தமாயையிலே அவ்வியத்தமாகிய மூலப்பிரகிருதி தோன்றும்,—விந்துதனயால் வைகரியாதி - முன்சொன்ன விந்துவிலே நின்றும் வைகரிமத்திமை பைசந்தி சூக்குமையென்கிற நாலுவாக்குந் தோன்றும்,— மாயைமூர்த்திடுமாராகமாதி - முன்சொன்ன மாயையிலே அராகம் வித்தை கலை நியதி காலம் என்கிற தத்துவம் அஞ்சும் தோன்றும்,—முக்குண மாதிமூலந் தந்திடும் - சாத்துவித இ

ராசத தாமதம் என்கின்ற மூன்றுகுணமுதலான தத்துவங்களை டங்கலையும் மூலப்பிரகிருதி தோற்றுவிக்கும் இந்த வுபாதானங் களிலே இவைதானே தோன்றுமோ வெனனில்?—சிவனவன றன சன்னிதி கன்னிலன்றே - இவையித்தையெல்லாங் கர்த்தா வினுடைய சன்னதியிலே தோற்றுவிக்கும்

மாயையி னவ்வியத்தம் வந்திடும்என்றது எல்லா தத்துவ ங்களுந் தோன்றுமுன்னே மூலப்பிரகிருதிக்குத் தோற்றஞ்சொ ல்லவேண்டினது, இதுவும உபாதானமாகையினு லெனக்கொ ளக.

மாயைமுந்திடு விந்துத் தன்பால் வைகரியாதி என்றது சுத்தமாயா காரண காரியங்களுக்குப் பின்னமற் றிருக்கையினு லும், சிவதத்துவ மஞ்சும காரியப்படு மிடத்து நாலு வாக்கு களாகக் காரியப்படுகையினுலும் எனககொளக

மாயை முந்திடு மராகமாதிம என்றது வித்தியாதத்துவ மேழுக்குள் அஞ்சுக்குத் தோற்றஞ்சொல்லி, இரண்டிற்குத் தோற்றஞ் சொல்லியிருந்து புருடன தனிதகொரு முதலல்லா தது கொண்டு தோற்றஞ்சொன்னுரில்லை, காரியப்படு மிடத்தி லே கண்டுகொள்ளவேணும் ஆகையினுலும், ப்ரகிருதிக்கு முன னே தோற்றஞ் சொல்லுகையினுலு மெனககொள்க.

முக்குண மாதிமூலந்தந்திடும், முக்குணமு மொத்தவிடம் அவ்வியத்தமாயும், அவ்வியத்தந், தானே சித்தமாயும் ஒருகுண மேறினவிடம் புத்தியாய் முக்குணமும் புத்தியிலே சென்று பொருந்த புத்தியிலே நின்று ஆங்காரந்தோன்றியும்,இந்த வாங் காரந தான் மூன்றுவகைப்பட்ட வாங்காரமாய் இதிலே முக் குணஞ்சென்று பொருந்த மனதும் சோத்திராதியும் வாக்காதியு ம்சத்தாதியும் இந்தச் சத்தாதியிலே பூதாதியும் இவையெல்லா

தோன்றுமையினால் சித்தமுதல் பிருதிவு ஈறாயின. ஆன்ம தத்துவம் இருபத்துநாலுக்கு முக்குணங்களே முதலென்றறெனக் கொள்க.

இதனாற் சொல்லிபது விந்து மோகினி மானென்று சொல்லப்பட்ட மூன்றுதானத்திலும்; வைகாரியாதி யான நாலுவாக்குகளும், அராகமாதியான தத்துவங்களுளும், குணமாகியான தத்துவங்களிருபத்துநாலும், ஆக மூன்று வகைப்பட்ட தத்துவங்களும் சிவனுடைய சந்நிதியிலே தோன்றுமெனனும் முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தம் எனக் காரியப் பிரபஞ்சம் முத்திறப் படுதலின், அவற்றிற்கு முதற்காரணங்களுந் தம்முள் வேறுதல்பெறறும். அவற்றுள் மலகன்மங்களோடு விரவாது முதற்காரணமாய்நிற்பது சுத்தமாயையென்றும், அஃதேனையிரண்டனையும் வியாபித்து மேலாய்நிற்ப) விந்துவின் மாயையாகி- அவ்விந்துவின் கீழாயடங்கி மலகன்மங்களோடு விரவி முதற் காரணமாவது அசுத்தமாயையென்றும்,—மாயையி னவ்வியத் தம்வாகிடும் - அவ்வசுத்தமாயையினது தூலபரிணாமமாய்த் தோன்றுவது பிரகிருதிமாயையென்றுங் கூறப்படும். அம்மூன்றனுள்,—விந்துத்தனபால் - சுத்தமாயையி னின்றும்,—வைகரியாதிமுதலிடும் - சங்காரமுறைபற்றி வைகரிமுதல் வைத்தெண்ணப்படும் நாலுவாக்குந் தோன்றும்.—மாயை - அசுத்தமாயையினின்றும்,—அராகமாதி முதலிடும் - சங்காரமுறைபற்றி யராகமுதல் வைத்தெண்ணப்படும் காரணதத்துவ மைந்து

மாக நிச்சந்தேகமாகப் பிராணவாயுவுடனேகூடி யர்த்தத்தி்
கு வாசகமுமாய் வசனிக்கிறவனாக குபகாரத்தைப்பண்ணுவது
மாயிருக்கும். எ - று

தத்ர க்ஷ வஹ்ம — ...

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சங்காரக்கிரமத்தில் வாக்குகளில் வைகரிவாக்கின் இலக்க
ணமுணர்த்துகின்றது

வைகரி செவியிற கேட்பதாய் - வைகரிவாக்குக் கேட்பவ
ன செவியிற் கேட்பதாய்,—அர்த்தவசனமாகி - கேட்பவனது
நாக்கத்திலறைந்த முறைமையின மதத்திமையாகி,—அவனுக்கு
ப் பின்பொருளைப் போதிப்பதால், முன்சொல்பவனது கிரியா
சத்தி பொருந்திய வக்காரப் பிரயத்தினப் பிரேரிதமாய்,—மெ
ய்தரும - உண்மைகொடுக்கும்,—உதானவாயு.—மேவிட - பொ
ருந்த, இச்சாசத்தி பொருந்திய மனச்சங்கற்பத்தால்,—விளங்க
தவனனம் - பைசந்தியிற் பரிணமித்த வக்கரங்கள்,—புத்தி கா
ரணமதாகி-ஞானசத்தி பொருந்திய புத்திபோதங் காரணமா
க —பொய்யற வடைவுடைத்தாய் - விபரீதமற் றொழுங்குபெ
ற்று மதத்திமையாய்,— ஐயமில்பிராணவாயு வடைந்தெழுந்த
டைவுடைத்தாம்- பிராணசம்சய காரக விரேசகமற்ற பிராண
வாயுவைப பொருந்திப் புறம்பே புறப்பட்டு வைகரியாயுர்ப்பவி
த்த முறைமையிற் கேட்பவனுக்குக் கேட்கப்படும்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற்கூறிய வைகரியாதி நான்கனுள், வைகரியாவது தன் செவிக்கும் பிறர்செவிக்குங் கேட்கப்பட்டு நினைத்தபொருளைச் சொல்லுஞ் சொல்லாய்; அச்சொல்வானுக்குங் கேட்பானுக்குஞ் சவிகற்பவுணர்வுண்டாதற்கு ஏதுவாதலும், உதானனென்னுங் காற்றானுந்தப்பட்டு மந்திமைத்தானத்துச் சூக்குமரூபமாய்ப் பிறந்து தோன்றிய வக்கரங்கள் அகங்காரத்தாற்செலுத்தப்பட்டும் பிராணனென்னுங் காற்றானுந்தப்பட்டெழுந்து புறத்தே யடைதலுடைத்தாதலுமாகிய இரண்டும் இலக்கணமாகவுடைத்தென்பதாம்.

மெய்தருமுதானவாயு மேவிடவிளைந்தவனலம் என்றது அனுவாதம்.

விளைதல் உருவெவையுந் தெரிதல்.

மெய் உடம்பு

பொய் விபரீதம்.

ஐயமில் பிராணவாயு, மனத்தின்றொழிற்பாடாகிய ஐயமின்றாதற் கேதுவாய் அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணவாயுவென ஏதுப் பெயர்கொண்ட குறிப்புவினைத்தொகை.

எழுந்து பொய்யறவடைவுடைத்தாயென மேலேகூட்டுக.

அடைவு பின்னையது இலக்கணம்.

ஈண்டுப் புந்தியென்றது ஏதுபுமிகோடலாற் பிறத்தற்குரிய சவிகற்பவுணர்வினை யேற்றுநின்றது.

—

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

சுத்த மாயாகாரியங் காரியப்படுகிற முறைமை மேலருளிச் செய்கின்றார்.

வைகரி செவியிற்கேட்பதாய் - வைகரிவாக்கானது இவ னுடைய சோத்திரத்துக்கு விஷயமாய்,— அத்தவசனமாகி - அத்தங்களை பொருந்தின சத்தமுமாய்,—மெய்தரு முதானவா யு மேவிட விளைந்தவனனம் - தேகத்திலே யுண்டாய்நிற்கிற வு தானவாயுப் பொருந்த வுண்டானவாக்காம,—பொய்யறவுடை வுடைத்தாம் - சத்தியமாக வுடைவே யொழுங்குபட வுடைய தாய்,—புத்திகாரணமதாகி-இவனுடைய வறிவைக் காரணமாக வுடையதாய்,—ஐயமில் பிராணவாயு வுடைந்தெழுந் தடைவு டைத்தாம - சந்தேகமற்ற பிராணவாயுவுடனே கூடிவருகிற தே இதுக்கு முறைமையாம.

இதனாற் சொல்லியது, வைகரிவாக்கானது உதானவாயுக் கூடின பிராணவாயு தன்னோடு கூடிவந்த வசனம் சூக்கும முதலாயுள்ள வாக்குகளைச் செவியின் பகுதியிலே கேட்க, நினை ந்தபொருளை யறிவியா நிற்குமென்னு முறைமை யறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

மேற்கூறிய வைகரியாதி நான்கனுள்,—வைகரி - வைகரி யாவது,—செவியிற்கேட்பதாய் - தனசெவிக்கும் பிறர்செவிக் கும் கேட்கப்படு,—அத்தவசனமாகி - நினைந்தபொருளைச் சொல்லுஞ்சொல்லாய்,—புத்திகாரணமதாகி - அச்சொல்வானு க்குங் கேட்பானுக்கும் அறிவுண்டாதற் கேதுவாத லால்,—மெய்தரும்-உடம்பினகண்ணிருக்கும்,— உதானவாயுமேவி ட-உதானனென்னுங்காற்று ஒலிக்கப்பட்டு,—விளைந்தவனனம்- மத்திமைதானதுதச் சூக்குமரூபமாய்ப் பிரிந்து தோன்றிய வக் கரங்கள்,—ஐயமில்பிராணவாயு - மனத்தின தெழிற்பாடாகி

ய வையமின்றாகற் கேதுவா யகங்காரத்தைச் செலுத்தப்படுற பிராணனென்னுமுவகாற்றால்,— அடைந்தெழுந்து - உந்தப்பட்டெழுந்து,—பொய்யற வடைவுடைத்தாய் - விபாகமறப் புறத்தே யடைதலுடைத்தாதலுமாகிய விரண்டுமே,—அடைவுடைத்தாம்-இலக்கணமாக வுடைத்தெனபதாம

## மறைஞானதேசிகர் உரை.



மேன முறையானே மத்திமையெனனும்
வாககின திலககண முணாததுகிறுா.

உள்ளுணர் வோசையாகிச் செவியினி லுறுதல்செயயா, தொள்ளிய பிராணவாயு விருத்தியை யுடையதன்மித், தெள்ளிய வக்கரங்கள சிந்திடுஞ் செயலின்றி, மெள்ளவே யெழுவதாகு மத்திமை வேறதாமே. (உக)

(இ-ள) உள்ளுணர் வோசை யாகிச செவியினி லுறுதல்செய்யாது — மத்திமையென்னும் வாககு வைகரிக்குக் காரணமா யிதற்கு வேறுமா யிவனுடைய கண்டத்தின்கண்ணின் றறிவா யுள்ளேயோர்த்தொனியுமாய்ச் சோத்திரத்துக்கு விடயமாகாமற் சவிகற்ப சொரூபமாய்ப் புத்தியினக ணெழுத்துககளை யொழுங்குபட நிறுவி

ஒள்ளிய பிராணவாயு விருத்தியை யுடையதன — நல்ல பிராணவாயுவைச் சார்ந்து புறம்பே பேசுவிக்குந் தனமையினைப் பொருந்தாமல்,

ழ

| | |
|---|---|
| தெள்ளிய வக்கரங்கள் சிறந்து செயலின்றி | பைசந்தியினின்றும் விளங்கப்படாத வக்கரங்களை மிடறுமுதலிய தானங்களைப் பொருந்தி நாநாவிதமாகப் புறம்பே புறப்பட்டு ஜீவிகளுந் தொழில்களுமின்றி |
| மௌனமே பொழுவசாகு மத்திமை வேறதாயே | புத்திபு முபாதானமாய் மெத்தென்று தோன்றுவதாய் நாலவொலிக்குக் காரணமாய் வேறுபட் டெழுந்திருப்ப தியாது அது மத்திமையாம். எ-று.. (உச) |

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

(உள்ளுணா...வேறதாயே) - மத்திமைவாககான திவைகரிவாககிறசனனிபமுமாய்ப் பிறாசெவிகளுககேடகபபடாமலககர்ககசமான சத்தசைசயுமுடைத்தாய் வர்ணனுசநதானமுமின்றிப் பிராணவாயு விருத்தியுடனகூடாத்துமாய் மந்தசுவாசததையுடையதுமா யிருககும்.

தஉக்தஂ தமெ்தெவ - பொணவுத்தி உக்தா ஜா வாமெமாஷ ஐவுாஷயா । வண-ிரு-ஞவா ந- ஸமயா நவிஷமாய ஸஉ-ஜமெதி .

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

மத்திமைவாக்கினது லக்ஷணங்கூறுகின்றார்.

உள்ளுணர்வோசைபாகி - சொல்பவன திருதயாதி கண்டாந்தத்துக்குள் அவனறிவுக் கறியப்பட்டு, அவனாற் சொல்லப்படும பொருளில் அவனறிவைவிளக்குந் தொனியாகி,—செவி

யினிலுறுதல் செய்யாது-கேட்பவன்செவிக்கேறுதகாய் வைகரி யாய்த் திரிந்து மேலவனுக்குக கேட்கப்படுவதாய்,—ஒள்ளிய பிராணவாயு விருத்தியை யுடைய தன்றி-உதானவாயு வியாபா ரமாத்திரமுடையதாய் பலமுடைய பிராணவாயு வியாபாரத் தினது விடுதலுடையதாய்,— தெளிவக்கரங்கள் சிதறிநிந் செபலஇன்றி - தெளிவாகிய வனனங்கள் சிதறுதலின்றி பொ ழுங்குபெற்று,—மத்திமை,—வைகரிகரும பைசகதிகரும,வேறு ய்,—மெள்ளவே யெழுவதாகும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

செவியிற் சேட்கப்படாதாயும் மெல்லோசையாய்க் கண் டத்திலே விளங்குதலுடைமையாற் சொல்லுவானரனதுள்ளே யுணருஞ் சவிகற்பவுணர்புகதேதுவாய் உள்ளேயுணரப்படுமோ சையாதலும், பிராணவாயுவின தொழிற்பாடின்றி உதானவாயு வின தொழிற்பாடுமாத்திரையே ஆண்டுவமையிற் சூக்குமரூப மாய் அக்கரங்கள பிரிந்து தோன்றினும் பல்லிதழ்நாவண் ணங்களிற் பட்டுச சிதறிப்போதலின்மையுமாகிய அவ்விரண்டி லக்கணத்தானு முறையே பைசந்திகரும் வைகரிகரும் வேறு ய நியப்படுவது மத்திமைவாக்கென்பதாம்.

இரட்டுறமொழிதலான உணரோசையென்னும் வினைத் தொகையின ஓசையெனபது ஏதுப்பெயராயுஞ் செயப்படுபொ ருட்பெயராயு நின்றது.

தெள்ளுதல் ஈண்டு வடிவு விளக்குதல்.

அதுவிரண்டும் பகுதிப்பொருள் விகுதி.

"உயிரிற் சேர்ந்தவருமவை மருவுமுரு வெவையுக் சரித் துமுக்கியிடுஞ் செவியுலுறு தள்ளுணர்வா யோசை முழங்கி

மெத்திமை" என்றார் புடைநூலாசிரியரும் §உயிரிற்சேர்ந்து ருடனை பெறாது முன்னர்க் கூறப்படும் வைகரியை

§ சிவப்பிரகாசம்-உகூ-செ.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

மத்திமை காரியப்படுகிற முறைமை மேலருளிச் செய்கிறார்

உள்ளுணர் வோசையாகி - இவனுக்குள்ளே யறிவுமாய்த் தொனியுமாய்,—செவியினி லுறுதல்செய்யாது - இவனுடைய சோத்திரத்துக்கும் விஷயமாகாமல்,—ஒளிப பிராணவாயு விருத்தியை யுடையது - நன்றான பிராணவாயுவினது தொழிலையு முடையதாய்,—அனாதித் தெள்ளிய வக்கரங்கள் சிந்திடுஞ் செயலதின்றி - அதுவுமன்றி ஆன்மாவுக்கு மயக்காரத் தெளிந்த அக்கரங்களை சிதறும லொழுங்குபட்டக் கூட்டிக் கொள்ளுகிற தொழிலையு முடைத்தாய்,—மெள்ளவேயெழுவதாகு மத்திமை வேறதாகியே - வைகரியாகக்குக்கு வேறுபட்டு மெத்தனவே யெழாநிற்கிறது மத்திமையென்றது.

இக்கூற சொல்லியது பிராணவாயுவிலே கூடிவருகிற அக்கரங்களைப பொருந்தத்தக்க ரூபங்க ளெல்லாவற்றையு மொழுங்குபட நிறுத்திச் செவிக்குக் கேளாமல்இவனுக்குள்ளேயறிவாய தொனியுமாய், நாவிலே பிறக்கு மத்திமையென்னு முறைமை யுமறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

செவியினி லுறுதல்செய்யாது - செவியிற்கேட்கப் படாததாயும்,—மெள்ளவேயெழுவது - மெல்லோசையாகக் கண்டத்

தில் விளங்குதலுண்மையால்,—உள்ளுணரோசையாகி-உள்ளே யுணரப்படும் ஓசையாதலும்,—ஒளிவிடப்பிராணவாயு விருத்தி யையுடையதன்றி - விளங்கியபிராணவாயுவின் றொழிற்பாடின்றி யுதானவாயுவின் றொழிற் பாடோடு தினாலேயே யாண்டுண்மை யின,—தெளிவியவக்கரங்கள் - சூக்குமரூபமாய் வடிவுவிளங்கிய வக்கரங்கள,—சிந்திடுஞ்செயலதின்றி - பிரிந்துதோன்றிடு பல்விதழ நாவணைவுகளிற்பட்டுச் சிதறியபோத வினையுமாகிய விவ்விரண்டிலக்கணத்தானும்,—வேறதாய் - முறையே வைசந்திக்கும் வைகரிக்கும் வேறு பறியப்படுவது,—மத்திமை யாகும் - மத்திமைவாக்கெனப்படும்.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேன் முறையானே பைசந்திவாக்கி
லிலக்கண முணர்த்துகிறா

வேற்றுமைப் பட்டவன்னம் வெவ்வேறு விபாகமாகித், தோற்றுத லடைவொடுக்கிச் சொயம்பிர காசமாகிச், சாற்றிடு மவ்விளண்டங் கரித்திடுஞ் சலமே போன்றவ், காற்றவே யுடையதாகிப் பைசந்தி யமாக் துகிறதும். (உஉ.)

| | |
|---|---|
| (இ-ள்) வேற்றுமைப் பட்டவன்னம் | பைசந்திபெனனும் வாக்கு மத்திமையை ப்பற்றி விளங்காதிருக்கிற விந்துரூபமாகித் தனவிடத்துக் காரியங்களெல்லாம் விளங் |
| வெவ்வேறு விபாகமாகி | காத புத்திபாற் சுட்டியீடென்றறிப்படாத வக்கரங்களை பொன்றென றொவ்வொத வடிவாக வுடையதாய், |
| தோற்றுத லடைவொடுக்கிச் | சூக்குமையாகிய வாக்கே தனக்குக் காரணமாய்த் தன்னிடத்திற் றோற்றப்பட்ட வ |

சொயம்பிரகாச மாகி — க்கரங்களினுடைய முறைமையைச் சற்றுந் தெரியாதபடி தனனிடத் தொடுக்கிற தன விடதனதெல்லாம் விளங்கும் ப்ரகாசத்தினை யுடைத்தாய் நிற்கும். அஃதெனபோலவெனி ன?

சாற்றிடு மயி லினண்டத் தரி த்திடுஞ் சலமே போனறங் காற் றவே யுடை யதா கிப் பைசந்தியம ர்ந்திருக்கும். — மயிலினண்டத்தின்கண் மயில் சொரூபி கரித்துத் தோற்றுமையினுஞ் சலமாயவாறு போல எழுத்துக்கள சொரூபிகரித்துத்தோ னறி விளங்காநிற்கும். எ-று.

பைசந்தி-எழுவாய், நிற்கும்-பயனிலை. (௨௨)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

(வேற்றுமை . நிறகும) - அநவயம் வேற்றுமைப்பட்டவ ன்னம் வெவவேறு விபாகமாகித் தோற்றுகலைடவொடுக்கி சாற்றிடுமயிலினண்டத தரித்திடுஞ்செயலேபோனறு சொயம் பிரகாசமாகி யாற்றவே யுடையதாகிப் பைசந்திபாரர்ந்து நிற் கும் - நீலாதிபாகிய பலவர்ணங்களையும் வெவவேறாகக் கா ணபிப்பகனறி மயூராண்ட ஜலமான தேகரசமாக நின்றது போலப் பைசந்திவாக்கான நேகபஞ்சாசத வர்ணத்தினுடை ய பேதத்தையுங் கிரமத்தையு மடக்கிக்கொண்டு விஞ்ஞானப் பிரகாசமாய் மேன மத்திமைவாக்கிற்குக் காரணமுமாய்ப் பி ராணவாயுவுடனேகூட உத்தானமினறி நிற்கும்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

வைசந்திவாக்காவது, மேல் விளங்கித் தோன்றுவனவாகிய பஞ்சவன்னங்களையுஞ் சூக்குமரூபமாய் அடைவுபடவொடுக்கி நிற்குமயிலமுட்டையிற்போலப் பலவகைப்பட்ட வெழுத்துக்களை மத்திமைத்தானத்துப் பிரிவுபட விளங்கித்தோன்று முறைமையினை அடக்கி, மிகவுஞ் சூக்குமரூபமாய்க் கொண்டு நிற்கையினைக் கனிறலும், நிருவிகற்பவுணர்விற்கு ஏதுவாதலுமாகிய இரண்டிலக்கணமாகவுடைத்தென்பதாம்.

விபாகம் - பிரிவு.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

வைசந்தி காரியப்படு முறைமை மேலருளிச் செய்கிறார்.

வேற்றுமைப்பட்ட வன்னம் வெவ்வேறு விபாகமாகி - ஒன்றுக்கொன்று வேறாயிருக்கிற சுபாவத்தையுடைத்தாகிய அக்கரங்களை வேறுவேறான ரூபங்களையுடையதாய்,—தோற்றுதலையொடுக்கி - தோன்றுகிற முறைமைகளை அடைவிலே கூட்டி,—சுயம்பிரகாசமாகி-அந்த வக்கரங்களுக்குள்ள பிரகாசமேயாய்,—சாற்றிடு மயிலினண்டந் தரித்திடுஞ் சலமேபோன்று-சொல்லப்பட்ட மயிலின் முட்டைக்கு ஜலத்திலே பஞ்சவன்னங்களுந் தோன்றி உருத்தெரியாது நின்று உடைத்தால் ஜலமான தன்மைபோல,—ஆற்றலையுடையதாகி-அக்கரங்களைத் தோன்றாதிருக்கச்செய்தே உள்ளே சத்தியையே உடைத்தாய்,—வைசந்தியமர்ந்து நிற்கும் - பைசந்தி வாக்கானது ஆன்மாவுக் கறிவாய் இப்படியே பொருந்திநிற்கும்.

(இ-ள்) சூக்கும வாக்கதனுள்ளோர் சோதியாய் — சூக்குமையென்னும் வாக்கான தன்மேலே யதத்யாத்திரத்தை விளக்குகிறதாய்

அழிவதன்றி — மற்ற வாக்குகளைப்போலத் தோன்றுவதுமொடுங்குவதுமின்றித் தானிலைபெற்றிபல்பாயிருக்கும்

ஆக்கிடு மதிகாரத்தைக் கழிவிலை தன்னைக் கண்டால் — அதிகாரத்தை யுண்டாக்கி யதனை யழிக்கிற விந்தச் சூக்குமவாக்கினுடைய வுண்மையா தொருபுருடன விவேகஞானத்தினாலே யிது பரமமான பதமென்று விசாரத்திதற்கு மேலான விந்துவையுங் கடந்திருக்கிறதந்தப்புருடற்கு

நீக்கமி லறிவானந்த முதன்மை நித்திய முடைத்தாய்ப் போக மொடு வரவிளைபபு விகாரமும் புருடனின்றும் — நீங்காதபேரறிவும் பரமமான வானந்த முஞ் சுதந்தரத்தையு நித்தியத்துவத்தையு பெற்று ஜனனமரணங்களையும் விட்டு நீங்கியானமவித்தா யிருப்பர்கள். எ-று.

இதமுதலிய பந்தம் நீங்கவே மோட்சமடைவனெனபது கருத்து. உ-ம் 'அநாதிமுதத சின்மய ஞேக்கா ஞதாமாகு, மகாதிசுத்த மாயைமி ஞனமாக்கண - மஞதியினை, யாக்கப் புவிதமந்த நாதத்தாம் விந்துவினும், வாகொருநான் கென்று ர் மதிதது.' 'சூக்குமைநம பைசநதி மத்திமைசொல் வைகரியென், ருக்கு மிவற்றினபே ரடைவறிக - சூக்குமைதான்,பகதிதரன் மாவுணாவைப் பைசநதி மத்திமையா, மக்நத்திற்

னூல வெழுத்தாம்' 'வாக்கி னுதித்துப் பொருளை மதிப்பிக்கை க், காககும பதத்தி னவயவமாய் - வாககியமாய்ப், பாவா யி யலாகி நூலாய்ப் பரந்திலங்கு, மோவாதே மததிலைையி னற று.' என விவைகளை யறிக. (உ௬)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

சூக்குமவாக்கதுளளோா சோதியாயழிவதினறி - சூக்கு மவாககான தந்தாககதமாய் விஞ்ஞானப்பிரகாசமாய்த தன னுடையகாரியவிருததியான பைசநதி மததிமை வைகரியெனனு மூனறுவாககு மொடுஙகிய காலததுந் தாெனாடுவருவதினறி நிற்கு மானமஞ்ஞானககிரியாப் பிரதிபநதகமான வாணவமலநி விர்ததியுடனே நிவிாததியாகையாற் சுசேன யானமாகளுககுப பரமானபநதமுந தனனுடையநிவிாததியே பரமானமோக்ஷமு மாகப் பிரதயானம நியதமாய்நிற்கும்,—

ததுக்தம் - ஸூக்ஷ்மாவிகல்பகஞ்ஞாநா நிவ்ருத்தாத்மப்ர ஷவ்ருத்திகா | ஸூக்ஷ்மா நவாஶ்ரயம் வைந்தவம் ஸூக்ஷ்மா ஶ்ருத்திஸ்தா நாமபரா || தந்நிவ்ருத்த்யா விநா ஸம்ஸ்தா ஸ்ருஷ்டிக்ரியாவாஸிகா யதஃ.

தனனைக் கணடா லதிகாரததிற் கழிவினையாக்கிடும் புரு டனினும் போககொடுவரவிளைப்பு விகாரமு மினறும் நீகக மிலறிவானந்த முதன்மை நிததிய முடைததாகும். (எனமாறுக) இச் சூக்கும வாக்கிற் கனனிபமாக வானமாக்க டஙகளைச காண்ப தருமை குருகடாக்ஷததினாற் கலாசேரதனை பண்ணப்பெற்ற வானமா வானவன் சூககும வாக்கிற் கங்யமாகத தன்னைக் கண்டாற் போகாதி காரத்திற் கழிவினை யுண்டாக்கு

மவ்விடத்துப் புஂஸத்வமல நிவிர்த்தி யாகையா லான்மாவுக்குப் புருட னென்னும் பெயரில்லையாம் ஆன்மாவைக் கஞ்சுகம்போல வாவரித்த தேகதேச விருத்தி பண்ணிக்கொண்டிருந்த புஂஸத்வமலம் போகையால் ஜநந மரணமு மதனாலுண்டான பாரதந்திரியமு விகாரமு மில்லையாம். இது அநிஷ்ட நிவிருத்தி. நையாயிகரைப்போ லாத்தியந்திக துக்க சம்சேதமே மோக்ஷ மென்ப தன்றி சைவ சித்தாந்தத்திற்கு ஸ்வதந்திரதையும் ஞானானந்தானுபவமாகிற இஷ்டவ்யாப்தியு முண்டென்பதனு னிரபேக்ஷ சர்வஞ்ஞதையும் பரமானந்தஸ்வரூபவமுஞ் ஸ்வாதந்திரியமு நித்தியதையுமுண்டாமென றிதன் பொருள்

[illegible]

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

சூக்குமைவாக்கின் இலக்கணமுணர்த்துகின்றார்.

சூக்குமைவாக்காவது உள்ளொளி சோதியாய் - தூலசரீரத்தின இருதயாதாரத் திருக்கும் பார்த்திவபங்கசப்பொகுட்டினை

ஞழியிற்பற்றி, அதனது அழிவில் வேறொன்றுபற்றி, பிரளய பரியந்தமிருக்கு முனசொன்ன பரசரீர விநதுசததிசதுஷடய பஞசசததியிருககும் பிரதான நாத கர்பததிருககும் பிரணவ கலாநாத சததியைப் பற்றி யிருநதலாலொப்பறற அநதரங்க பிரகாசமாய்,—

அழிவநினறி - பிரளயபரியநத மீறினறி இருக்கும்.—

(அது) தனைககணடால்,—

முறைமையிற பிரகிருதிபுருட விவேகஞானததார் சாங்கியன பாஞசரலன வேதாநதி இவா முதலோர்க்குப புருடதத துவப பிராப்தி.

மலபரி பசுருவமினறிக் கேவலங் கலாதத்வாநத தீக்ஷா சுததி மாயாபுருஷ விவேக ஞானததாற் சைவைகதேசிகடகு விஞ்ஞானகலப் பிராபதி

மலாநத தீக்ஷாசுததி மலபுருஷ விவேகஞானத்தால் மந்ததராதி தீவிராநத மலபரிபாகமுடைய மகாவிரதா முதலோர சாமானியசைவர், சைவசிததாநதிகளிற் சிலாககுஞ் சுததத துவப பிராப்தி.

மகாமாயாந்த தீக்ஷாசுத்தி மகாமாயா புருஷவிவேக ஞானததாற தீவிரதர மலபரிபாக முடைய சைவ சிததாநதிகட்குப பரமோக்ஷப பிராபதி.

நாதபுருடவிவேகஞானமே மகாமாயாபுருட விவேகஞானமாதலா லநத நாததகோடு பற்றியிருக்கும் சூககுமை வாக்கை நானவே றிது வேறெனறு விவேசித்துத தரிசிததால்,—

அதிகாரத்துக் கழிவினையாககும்-மோக்ஷாதிகாரங் கொடுத்துப் போகாதிகாரத்துக்கு நாசத்தைப் பண்ணும்தா வி

ங்குவதே கொடுப்பதும். அப்போது புருஷன் சர்வபாச முத்தனாய் சின்மாத்திரனாய்.—

நீக்கமிலறிவானந்த முதன்மை நித்திய முடைத்தாய்-சங்காரத்திற பசுதத்துவ ஸ்வரூப சிற்சத்தி விளக்கமே போகானந்தம் முத்தியிற் சிவனுக்குப் போல, சிவதத்துவ ஸ்வரூப சிற்சத்தி விளக்கமே மோக்ஷானந்த மாதலால நீக்கமிலென்றது; மலமறைப்பிலும் ஸ்வநிட்ட மாய்ப் புருடனோடு சமவாயசம்பந்தமாயிருந்த லொன்றாதலால்,—

[நீக்கமிலறிவானந்தம் - சர்வஞ்ஞத்துவ சிவதரூப சர்வஞ்ஞதை நிருத்தி, அநாதிபோதம முதற்குண வடிவாகிய ஞானசத்தியபிவியத்தி,

நீக்கமின முதன்மை - சாவ கர்த்திருத்துவ சிவதத்துவ ஸ்வதந்திரதை யனுந்தசத்தி யனந்தசத்தி முதற்குண வடிவமாகிய கிரியாசத்தி யபிவியத்தி இப்படி யறுவிதமாம. இருவிதமாய் ஒருவிதமாயிருக்கின்ற சிவதத்துவரூப சிற்சத்தி யபிவியத்தி யென்கின்ற சிவதத்துவ விளக்கமாகிய சிவானந்தத் தெரந்த தனது சிவானந்தத்தை.

நித்திய முடைத்தாய் - சிவசத்தி விளக்கிறாற் றிரும்பச்சிவசத்திவிளக்கு விருப்பினறி சர்வப்பிரகாரமாய் மலமறைப்பு நீங்கி விளங்குதலாற கெடாதிடைவிடாது அநுபவிப்பாருகி,]—

போககொடுவரவிலைப்பு விகாரமுமின்றும் - இறப்புப் பிறப்பில்வருந தொய்வித்றேனும வேற்றுமையு மில்லாதவனாய்.

போக்கொடு வரவிலைப்பு விகாரமானதும் புருடனுக்கின்றுமென்றும் எழுவாய் பயனிலை யிசைத்துப் பொருளுரைக்கலுமாம்.

சிவத்துவமெனகின்ற சிவகுண விளக்கமே சிவானந்தமெ ன்று சித்தாந்தஞ் சித்தித்திருக்கவும், சிவகுணமே சிவான ந்தமென்று சிலர் சொல்லுவார்கள், அதுமாறுபடு மென்பது பிரமாணதீபிகை சித்தாந்தசிகாமணி சிவஞானபோத வியாக்கி யான மிவைகளிலே காணப்படுதலை கண்டித்தனம், இதுசொல் லியதேது? சிவத்துவமென்ன குணவிளக்கமுமா குணமாகாதோ! குணமாமே! உள்ளது குணமானாலுங் குணியிலிருப்பதென்று கந்தாதிகளிடத்தது தீவிராதி தன்மம்போல சிவத்துவ லக்ஷ ணம் குணத்திலிருக்கு மதற்கு மாறுபாடில்லை.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

பரசரீரத்தினுள்ளாக நாதமாத்திரையாய் விளங்குதலும் ஞானமாத்திரைக்கேதுவாதலுமாகிய இலக்கணத்தையுடைய து சூக்குமவாக்கு அதுதான், பைசந்தி மத்திமை வைகரி யாய் விருத்திப்படுவதாகிய தன்னதிகாரமாத்திரைக்கேயுழி வுண்டாக, தான் சுத்தமாயாரூபமாய்க் கேடின்றி நிலைபெறு வதாம் அவ்விசேடத்தால் அதனைஉள்ளபடி காணப்பெறுவா ர்க்குச் சுத்தமாயாபுவனத்தின்கண்ணதாகிய அபரமுத்திப் பெரும்போக முண்டாமென்பதாம்

ஆப இன்றி ஆக்கிடமெனவும், கண்டால் உடைத்தாய்இ னருமெனவும், வேறுவேறு வினைமுடிபு செய்க.

அழிவினை வினைத்தொகை.

புருடனென்பது "கால மூலகம்" என்னுஞ் சூத்திரவிதி யால் அஃறிணைச்சொல்லாயிற்று.

சுத்தமாயா புவனத்தின்கண்ணதாகிய அபரமுத்திப் பெ ரும்போகத்தினியல்பிதுவென அதன்பெருமை கூறுவார், நீக்க

பிலறிவானந்த முதன்மை நித்தியமுடைத்தாய்ப் போக்கொடு வரவிளைப்பும் விகாரமும் புருடனின்றும் என்றார்.

தானழிவதின்றித் தன்னதிகாரமாத்திரைக்கு அழிவினைச் செய்யுமெனவே, அதுசிவதத்துவம்போலச் சுத்தமாயையின் வேறன்மை பெற்றாம்.

தன்னை உள்ளபடி காண்டலாவது அதிசூக்குமவாக்கினை வியஞ்சகவோசைபற்றித் தூலமாய்க் காணும் நம்மனோர் போலன்றி, நம்மனோர்க்குக் குடம்படமுதலியன காட்சிப்புலனாமாறுபோலத் தன்னியல்பானினிது விளங்கக் காண்டல். கண்டாலெனவே அங்ஙனங் காண்டல் அரிதென்பது பெற்றாம். இவ்வாறன்றி, 'ஒவ்விடவிந்துஞான முதிப்பதோர்ஞானமுண்டேற் சேவுயர் கொடியினான்றன் சேவடி சேரலாம்' என்பதே ஈண்டைக்கும் பொருளாகக்கொண்டு, 'கண்டாலாகிடும்' எனக்கூட்டித் தமக்குவேண்டியவாறே யுரைப்பாருமுளர். அவர், 'அழிவதின்றி யழிவினையாக்கிடும்' என்னுந் தொடர் அவ்வாறு பொருள்படுதற்கேலாமையும், கூறியதுகூறலாதலும், உண்மையதிகாரத்திற் கூறப்படும் பரமுத்தியிலக்கணம் ஈண்டு வருதற்குக் கூறுந் றகோரியையினையும் நோக்கிலர்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் சூக்குமை வாக்குக் காரியப்படுகிற முறைமை யருளிச் செய்கிறார்.

சூக்குமவாக்கத்துள்ளோர் சோதியாய் - சூக்குமைவாக்கென்று சொல்லப்பட்டதுதான் ஆன்மாவுக்குள்ளே அவரவரறிவுக்குத்தக்கபிரகாசத்தினை யுடைத்தாய்,—அழிவதின்றியாக்கி

ம்-கேடின்றியே மேலுண்டான மூன்று வாக்குகளையும் அந்த வாக்குகளுக்குண்டான காரியங்களையு முண்டாக்காநிற்கும்,—அதிகாரத்திற் கழிவினை - இப்படித்தான கொடுக்கத்தக்க பிக்த அதிகாரங்களுக்கு அழிவுண்டாங் காலத்து அவையிற்றை ஒடுக்கிக் கொள்ளுவதுமாய்,—தன்னைக் கண்டால் நீக்கமிலறிவானந்த முதன்மை நித்தியமுடைத்தாய்ப் போக்கொடு வரவிளைப்பு விகாரமும் புருடனினமும - தன்னை யுள்ளபடி தரிசித்தால் ஒருகாலத்திலும் பிரியாத வறிவினையுற்ற சொரூபத்தையும் பிரபஞ்சத்துக் கெல்லாம் மேற்பட்டிருக்கிற முதன்மையும் அழியாத முறைமையையு முடைத்தாய,இப்படிக் கொத்திருக்கிற தன்னுண்மையைத் தரிசித்த பசுவானமாக்களுக்குச் சுகதுக்கங்களுக் கீடாகச் சொர்க்க நரகங்களிற் போகையும்,அது தொலைந்தவாறே பூலோகத்திலே வருகையுமாய், கொள்ளிவட்டம்போலவும் கரங்குபோலவும் வட்டஞ்சுத்தித் திரிகிற இந்த விகாரங்களும் இளைப்புகளு மெத்தன வில்லையாய் விடும்.

இதனாற் சொல்லியது சூக்கும வாக்கானது ஆன்மாவுக் குள்ளே யிருப்பதொரு பிரகாசமுமாய் அறிவுமாய் மற்றுள்ள வாக்குகளுக்கெல்லா முதன்மையுமாயத் தன்னை யுள்ளபடி தரிசித்த பெரியோர்களுக்கு நிர்விகாரத்தையு முண்டாக்கி அவர்களுக்கு ஜநந மரண துக்கமென்கிற இளைப்பும இல்லையாக்கு மென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

சூக்குமவாக்கது - சூக்குமவாக்கானது,—உள்ளோர்சோதியாய் - பரசரீரத்தினுள்ளாக நாதமாத்திரையாய் விளங்குத

ளும் ஞானமாத்திரைக் கேதுவாதலுமாகிய விலக்கணத்தையு டையதாய்,—அழிவதின்றி - தானசுத்தமாயாரூபமாய்க் கேடின்றிநிலைபெறறு,—அதிகாரநிற கழிவினையாகநிடும-அதுதான் பைசந்தி மத்திமைவைகரியாய் விருத்திபபடுவதாகிய தனனதிகாரமாததிரைககே யழிவுண்டாகரும,—தனனைககண்டால்-தவவிசேடததா லதனையுள்ளபடி காணபபெற்றால்,—புருடன-அபபுருடனுசகு,— நீககமிலறிவானநத முதனமை நிததியமுடைததாய - நீஙகாதபேரறிவு மானநதமுந சுதநதரமு நிததியத்துவமுமுடையதாய்,— போககொடுவரவிலபபும் விகாரமுமின்றி-நாசோற்பததியானவரு மிலைப்பும் விகாரமுமுறுதலுமில்லையாய்,—அம - சுததமாயா புவனததின கண்ணதாகிய பரமுததி-ெருமபோகமு முண்டாமெனபதாம,

---

## மறைஞானதேசிகர் உரை.



இநதவாககு நானகும, நிவிர்த்திமுதலிய பஞ்சக
லைகளி லிருப்பார்ககுக காரியததுவாரததா
ல் சிவிககு முறைமை யுணாததுகிறார்.

நிகழுநதிடும வாககுநான்கு நிவிர்த்தாதி கலையை பபறறித், திகழுநதிடு மருசதாகச் செயல்பரி ணமமன்று, புகழுநதிடும் விருத்தியாகும் படஙகுடி லாறுற போல, மகிழுந்திடும் பிரமமன்று மாமாயை யென்பர் நல்லோர். (உச)

(இ-ள) நிகழுந் விளங்காநின்ற வாக்கு நான்கும் நிவிர்திடும்வாக த்திமுதலிய கலைகளி லிருப்பார்ச் கஞ்சுவிகு நானகு தமாய் சிவியாகிர்கும். அஃதெங்ஙனமெனி

நிவிர்த்தாதி கலையைப் பற்றித் திகழுநதிடு மஞ் சுதாக — ல்? நிவிர்த்திமுதலான புவனவாசிகளுக்கு மிகவுந் தூலமாயு , ப்ரதிட்டாகலை புவனவாசிகளுக்குத் தூலமாயும், வித்தியாகலா புவனவாசிகளுககுச சூசகுமமாயும், சாந்திகலா புவனவாசிசளுக கதிசூக்குமமாயும், சாநதியாதீதகலா புவனவாசிசளுககு அதிசூசகுமதரமாயும் சீவியாநிற்கும.

இங்ஙன மூவகை யானமாகசளுககும சீவிக்குமுறைமையறிக

செயல்பரிணமமன்று — அவை காரியமாகிறபோது பரிணமவாதமன்று

அஃதாவது, பா ரயிராயும்,தயிர் மோராயும் இப்படியொருபொருடான முனபிருநதவடிவைப் பேதிதது மற்றொருவடிவாகை உ-ம் 'வாளாகை தாளாகை பரிணம மண்ணிற்-பிளை மூனோயாதி பெறும்'. எனவறிக.

புகழுந்திடுமவி ருததியாகும படக்குடிலாறறபோல — மடிப்புடைவையைத்தானே விரித்துக் கூடாரமாய்க காரியப்படுமென்று சொல்லும் விருத்திகாரியமுமன்று,

மகிழ்நதிடும பிரமமன்று — மகிழ்ச்சியைப் பொருநதிப் பிரமந்தானே விவர்த்தமாகுமெனனும் விவர்த்தவாதமுமன்று, பரிணமமாயிற் பாலுக்கு நாசம் வருமாறுபோல வுபாதானத்துக்கு நாசம் வருமாதலா லதுகூடாது

விருத்திகாரியமென்னில்? படமாய்க் காரியப்படும்போது குடிலுக்குக் காரியமில்லாமற் போமாதலாற் கூடாது.

விவர்த்தவாதமெனனில் ?காரியத்துக் கசத்தாய் விடுமா தலா லிதுவுங் கூடாது.

மாமாயைபெ ணபா நல்லோர் — வாயு வடிக்கிறபோது சமுத்திர மெப்ப டி யொரு ப்ரதேசததிலே விகாரப்படும் அதுபோலச் சிவனறனது பரிக்கிரகசததியா யிருக்கிற குண்டலியி னேககேசத்தைப் பரி ணமிப்பித்தது தத்துவ தாததுவிதங்களைத் தோற்றுவித்துக் காரியப படுத்துவிப்பனெ ன் றறிவா லுயர்ந்தோா சொல்லுவர்கள் எ-று (உச)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

நிகழுந்திடு மவாசகு நாலு நிவிர்தாதிகலைப்பற்றித் திக ழ்ந்திடு மைந்தசாக - முனசொனனவைகரிபாதி வாகருநான் கு நிவிர்த்தாதி கலைகளுடைய ஸ்வரூபமாகககொண் டைந்து பேதமாய்த் தத்தகதகலாவாசிகளுக் கவவாறே தாரதம்யமாகச் சததார்த்தப் பிரகாசகமாயிருக்கும்,—

𑌤𑌤𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 — 𑌶𑍈𑌵𑌾𑌗𑌮𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌕𑌲𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌶𑍍𑌚 । 𑌵𑍈𑌖𑌰𑍀 [illegible] 𑌇𑌤𑌿

𑌕𑌾𑌰𑍍𑌮𑍋𑌤𑍍𑌤𑌰𑍇 𑌚 — 𑌸𑌾𑌨𑍍𑌨𑌿𑌧𑍍𑌯𑌾𑌤𑍍 [illegible] 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 । [illegible] 𑌪𑍍𑌰𑌾𑌣 [illegible] 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌰𑌮𑍍𑌭 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌇𑌤𑌿—

𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮 [illegible] 𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 — 𑌶𑍈𑌵𑌾 [illegible]

உ—வ்ருத்திர்வ்ருத்த்யாதி கஷாயாணாம் ஸூத்ராணாம் தே
ஷ தம் ஹாநேந வஸ்துஜ்ஞாநேநாவகாசிகேத்யயுக்
தமிதி.

செயல் பரிணாமமன்று புகழுந்திடும் விருத்தியாகும் படங் குடிலானாற்போல - இவ்வாக்கானது விந்துவின் பரிணாமமல்ல. பரிணாமமாகிய ‡ க்ஷீரம் ததியாய் ததி தக்ரமானாற்போல விந்துவுக்கு நிதத்தியதை யில்லாமற்போய்விடும் போகில், புநஸ் ஸிருஷ்டி யுண்டாகாது. ஆகையாற் புடைவையே கூடாரமான துபோல விந்து வாக்குகள் விந்துவிருத்திரூபமே,—

‡ பால் - தயிர் - மோர்.

ததுக்தம் பௌஷ்கரே — ஸவிகல்பம் விஜாநாதி த்ரி
விதோ ஹியாநத꞉ । வ்ருத்தேர்வசதாஸ்மிந்நா꞉
விபரீதவ்யக்தஜதி.

மகிழ்ந்திடும் பிரமமன்று மாமாயையெனபர் நல்லோர் - இவ்வாக்கு விந்துவிருத்தியென்று சொல்லவேண்டுவதில்லை, பிரமாணமாவே வாக்குரூபமென்றும் வாக்கே பரமாணமாவென்று சுருதியர் சத்தங்கள் கேட்கப்படுகையினாற் சத்தம் பிரமமே யெனின் ? பரமானந்த ஸ்வரூபமாயுள்ள பிரபஞ்சத்திற்கு ✱ சமவாயிகாரணமன்று. அஃதெவ்வாறெனின ? வாக்கானது விகாரியாகையினாலும் ஜடமாகையினாலும் பிரதி புருட நியதமாக வநேக மாகையினாலும், பிரமமும விகாரியும் ஜடமுமநேக முமாய் விடுமாகையான் மஹாமாயையே வாக்குவிருத்திக்குச் சமவாயி காரணமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

ததுக்தம் தத்த்வ - பரமாத்மைவ வாஸ்தாவர
ஏவாத்ம சித்ஸாத்ரகஃ ।

இது பூர்வபக்ஷம்.

மேல் சித்தாந்தம்

நஹ்ய காரணகார்யத்வம் ஸாமாந்யேந கதாசந ॥
தேஷாம் யத்காரணம் விப்ர ஸ ஸ்வீகார்யம் ஸதா த்ருஷ்டி தாஸ்திதி.

* முதற்காரணம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

பஞ்சகலைகளில் வாக்கிருக்கும் முறைமை வகுத் துணர்த் துகின்றார்.

நிகழ்ந்திடும் வாக்குநான்கு நிவிர்த்தாதி கலையைப்பற்றித் திகழ்ந்திடும் அஞ்சதாக - நிவிர்த்திகலா கர்ப்ப புவன வாசிக ளுக்குத் தூலதரமாயும், பிரதிஷ்டாகலா கர்ப்ப புவன வாசிக ளுக்குத் தூலமாயும், வித்யாகலா கர்ப்ப புவனவாசிகளுக்குச் சூக்குமமாயும், சாந்திகலா கர்ப்ப புவனவாசிகளுக்குச் சூக் குமமாயும் சாந்தியதீதகலா கர்ப்பபுவனவாசிகளுக்குச் சூக் குமதமமாயு மிருக்குமென் றிதன்பொருள்,—செயல் - காரிய படுதல்,—பரிணாமமன்று - மண்ணினின்றுங் கடகலச முதலா னவைபோல மகாமாயையினின்றும் வாக்குற்பத்தி தூலபரி ணதி ரூபமன்று,—படங்குடிலாகுற்போலப் புகழ்ந்திடும் விரு த்தியாகும் - புடைவை கூடாரமானாற்போல விருத்திரூபமா ம், விருத்திக்கும் பரிணாமத்துக்கும் அத்தியந்தம் பேதமில்லா மையால் முற்றுவமையன்று, சூக்கும பரிணாமமாகுமென் றிதன் பொருள். அந்தவாக்கு விருத்திக்குக் காரணம்,—மகிழ்ந்திடும் பிரமமன்று - சத்தப்பிரமவாதி சொல்லுமான்மாவன்று,— நல் லோர் மாமாயை யென்பர்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

இங்ஙனங் கூறிபபோந்த வைகரி முதலிய நான்குவாக்கு களும் நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளைப் பற்றுக்கோடாகச் சார்ந்த ஐவகைப்படுஞ் சிவதத்துவ முதலிய பஞ்சதத்துவங்க ளி னிருக்கும். இவைசுத்தமாயையினின்றும் விருத்தியாயக் காரியப்படுவனவன்றி அசுத்தமாயா காரியம்போலப் பரிணாம மாய்க் காரியப்படுவனவல்ல இவ்வாக்குகளைச் சுத்தப்பிரம வாதிகள் பிரமமென்பார்; சைவசித்தாந்திகள் பிரமமாதலின் றிப் பிரமத்திற்கு நேரே பரிக்கிரகசத்தியெனப்படுஞ் சுத்தமா யாரூபமாமென்று கூறுவரெனபதாம.

காரியப்பாட்டிற்கு எள்ளாகிய குப்பைப்போலப் புத்தர் சமணர் கூறுஞ சமுதாயவாதமும், நூலாகிய வாடைபோ லத் சார்சகிகர் கூறும் ஆரம்பவாதமுஞ், பெய்த்தோராகிய நீர்த்தோற்றம் போல மாயாவாதிகள் கூறும விவர்த்தவாத முமசித்தாந்தத்திற்கேலாமையின்? அவற்றையொழித்து, சித் தாந்தத்திற் கொள்ளப்படும் பரிணாம விருத்தியென்னு மிரண் டினுள் இச்செயலியாதோவெனனின்? ஐபரீகருத்தற்பொருட்டுப் பரிணாமமன்று விருத்தியாகுமென்றும், அற்றேற் பிரமம்போ லுமென்னுங் கடாவையாசங்கித்துப் பிரமமன்று, மாமாயையா மென்றுங் கூறினார்

அன்றியென்னும் வினையெச்சத் திகரம் உகாரமாய்த் தி ரிந்தது.

ஆகுமென்றது பின்னருஞ்சென்றியையும்.

பரிணாமம் விருத்தியென்னு மிரண்டனுள், மலகன்மங்க ளோடு விரவாத சுத்தமாயையின் காரியம் படுங்குடி லாகு

ற்போல; விருத்தியெனவே ஏனைப்பரிணாமம் அவற்றோடு விரவி ய அசுத்தமாயையின காரியத்திறகெனபதூஉம் பெறப்பட்டது. பாலினுண்டாகிய தயிற்போல முழுவதும பரிணமித்தலும, நெய்யினுணடாகிய புழுப்போல ஏகதேசத்திற்பரிணமித்தலுமென்ன பரிணாமமிருவகைப்படும. அவற்றுள் பினனையதே அசுத்த மாயையிற் கொள்ளப்படுவதூஉமெனக.

விருத்தியெனபது சூக்குமபரிணாமமெனப.

நிவிர்த்தாதி கலைபபற்றித் திகழுந திடுமஞ்சதாக எனப தற்கு, நிவிர்த்திகலையுட்பட்ட புவனவாசிகட்குத் தூலதமமாயும், பிரதிஷ்டையுடபட்ட புவனவாசிகட்கு தூலதரமாயும, வித்தையுடபட்ட புனவாசிகட்குத் தூலமாயும், சாநதியுட்பட்ட புவனவாசிகட்குச் சூக்குமமாயும, சாந்தியதீதகலையுட்பட்ட புவனவாசிகடகுச் சூக்குமதரமாயும, இஙஙனம் நால்வகை வாக்கும ஐவகைபடடுமென் றுரைத்தலுமொனறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் வாக்குகள் நாலும் கலைக ளைந்தாலும் காரியப்படு கிற முறைமை அருளிச்செய்கிறார்.

நிகழ்நதிடும வாககுநானகு நிவிர்த்தாதி கலைபபற்றித் திகழநதிடுமஞ்சதாக-இநதக கலைகளைநதாலும ஆனமாவுக்குள ள வறிவு விளங்காநிற்கும்,— செயல் பரிணாமமனறு புகழ்ந்தி டுமவிருததியாகும படங்குடிலானுற்போல-சுததமாயாகாரியம் அசுததமாயாகாரிய மப்பரிணாமமிராது, சொல்லப்பட்ட விர்த்திகானே காரியமாயிருக்கும் அதெனபோலவெனனில்? படவை தான் குடிலானாற்போல. இப்படியே யிருநததாமாயினும்,—மகி

ழ்கிடும் பிரமமன்று மாமாயையெனபர் நல்லோர் - சர்வான்மாக்களிடத்திலும் அநுக்கிரக மூர்த்தமாயிருக்கிறதாகவல்ல, மகத்தான சுத்தமாயையென்று சொல்லுவார்கள் ஓதியுணர்ந்த பெரியோர்கள்

வாக்கு நாலும் நிவிர்த்தாதி கலையைப்பற்றித் திகழ்ந்திடு மஞ்சதாகென்றது நிவிர்த்தி வைகரியைக் காரியப்படுத்தும், பிரதிட்டை மத்திமையைக் காரியப்படுத்தும், வித்தை பைசந்தியைக் காரியப்படுத்தும், சாந்தி சாந்தியாதீதை சூக்குமையைக் காரியப்படுத்து மென்னு மது கண்டுகொள்க

மகிழ்ந்திடும் பிரமமன்று மாமாயையெனபர் நல்லோர்-கர்த்தா கொள்ளப்பட்ட திருமேனியெல்லாஞ் சுத்தமாயையிலே கொள்ளுகையினாலும், வேதாகமங்களிலே நின்று தோன்றுகையினாலு மெனக்கொள்க.

இதனாற் சொல்லியது பஞ்சகலைகளினாலே நாலு வாக்குங் காரியப்படுகிற முறைமையும், சுத்தமாயா காரணகாரியங்களுக்கு தன்னிற் பின்னமில்லையென்றும், இந்த மாயை கர்த்தாவாகாதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

திகழ்ந்திடும் வாக்கு நான்கும் - இங்ஙனம் கூறிப்போந்த வைகரி முதலிய நான்கு வாக்குகளும்,—நிவிர்த்தாதி கலையைப்பற்றி - நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளைப் பற்றுக் கோடாகச் சார்ந்து,—அஞ்சதாகத் திகழ்ந்திடும் - ஐவகைப்பட்டுச் சிவத்தத்துவ முதலிய பஞ்ச தத்துவங்களின் இருக்கும்,— படங் குடிலாற்போல - படமே குடிலாற்போல,—புகழ்ந்தி

மேம் விருத்தியாகும் - இவை சுத்த மாயையினின்றும் புகழத்தக்க விருத்தியாய்க் காரியப்படுவன வன்றி,— செயல் பரிணாம மன்று - அசுத்த மாயா காரியம் போலப் பரிணாமமாய்க் காரியப்படுவன வல்ல,— மகிழ்ந்திடும் பிரமமென்பர் - இவ்வாக்குகளைச் சத்தபிரமவாதிகள் மகிழ்ந்திடும் பிரமமென்பர் — நல்லோர் - சைவசித்தாந்திகள்,— அன்றுமாமாயையென்பர் - பிரமமாதலின்றிப் பிரமத்திற்கு நேரே பரிக்கிரகசத்தியென்னப்படுஞ் சுத்தமாயாரூபமென்று கூறுவரென்பதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.



இங்ஙனம் விந்து காரியமுணர்த்தி, மேல் விஞ்ஞான கலர்க்குத் தனுவாதியைந்தவனென் றுணர்த்துகிறார்.

வித்தைகள் வித்தையீசர் சதாசிவ ரென்றிவர்க்கு,
வைத்துறும் பதங்களவன்னம் புவனங்கண் மந்திரங்க,
டத்துவஞ் சரீரம்போகங் கரணங்க ளாமெலாமு,
முத்திறம் வயிந்தவந்தா னுபாதான மாகின்றே. (உரு)

(இ-ள்) வித்தைகள் - சுத்தவித்தையிலிருக்குஞ் சத்தகோடி மந்திர மூர்த்திகளுக்கும், வித்தையீசர் - ஈசுரதத்துவத்திலிருக்கும் அநந்தர் சூக்குமர் சிவோத்தமர் ஏகநேத்திரர் ஏகருத்திரர் திரிமூர்த்தி சிரீகண்டர் சிகண்டி எனனும் அட்டவித்தேசுரராகிய வெண்மர்க்கும், சதாசிவர் - சாதாசிவ தத்துவத்திலிருக்கும் பிரணவர் சாதாக்கியர் தீக்கர் காரணர் சுசீவர் ஈசர் சூக்குமர் காலர் தேசேசர் அம்பு எனக் கூறிய வணுசதாசிவர் பதின்மர்க்கும்

என்றிவர்க்கு வைத்தறும் பதங்கள் வன்னம் புவனங்கண் மந்திரங்க டத்துவஞ் சரீரம் போகங் கரணங்க டாமெலாமும் — என்று சொல்லப்பட்ட இவர்களுக்குப் பதமுதலான தெல்லாம் பொருந்தும். அஃதி யாதெனில்?

உய்த்திடும் வயிந்தவந்தானுபாதானமாகி நின்றே. — சுத்தமாயை யுபாதானமாய்நின்று தரா தரபோகங்களை யுண்டாக்கி யவைகளைச் செலுத்தாநிற்கும். எ-று.

அட்டவித்தேசர் அனுசதாசிவரென்றது வித்தையீசர் சதாசிவரென்றது தலைகுறைத்தல்.

தான் - அசை.

ஏகார மீற்றசை.

சத்தருபத்துடனே மந்திரங்களைக் கூட்டிச் சொல்லாமற் பின்னாகக் கூறியதென்னையெனில்? தலைதடுமாற்றமென்னுந் தந்திர யுக்தியெனவறிக. (௨௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் விந்து உபாதான காரணமாய்க் காரியப்பட்டதே தத்வ தாத்விகங்களுண்டாவது இன்னவையென் றுணர்த்துகிறார்.

வன்னம் பதங்கள் மந்திரங்கள் வித்தைகள் வித்தையீசர் சதாசிவரென்றிவர்க்கு வைத்தறும் தத்துவஞ் சரீரங் கர

ணம் புவனம் போகங்கடாமெலாமும் வயிந்தவந்தா னுபாதா னமாகிநின்றேயுய்த்திடும (எனமாறுக.) வர்ணங்களும் பதங் களு மந்திரங்களு மந்திரேஸ்வரர் மந்திரமகேஸ்வர ரனுசதா சிவாதிகளுக்கு அதிட்டானமான தத்துவங்களுஞ் சரீரங்களுங் கரணங்களும் புவனங்களும் போகவஸ்துக்களுஞ் சுத்தமாயை யாகிற விந்துபாதானமாகிநின் றீஸ்வரசத்தி ப்ரேரகத்தினு லுண்டாகுவதாம.

எல்லாமென்ற திராகாதி தத்துவமில்லாதபொழுது போ சகா சுடாதாகையா லசுத்தாத்துவாவிலேபோல சுத்தாத்துவா விலும் காலம நியதி கலை வித்தை இராகம புருடதத்வம்அந்தக் கரணங்கள ஞானேந்திரியங்கள கன்மேந்திரியங்கள எல்லா முண்டென்றது.

ததுக்தம் பௌஷ்கரே — ஸ்வாயம்போஹ்ருதீஷோ ஹோமோமாராமாத்மவிஸ்ருதம் || ஈதஶோஷா ஜஹானேந கம்மிவோமோஜமேஶ்வ | ஈத்ராவி காஜ ஜவ்யாநி ந்ரமோயமா || கிசோதாந்த்ர பஸாநி மொவைந்து வாநிஜிமோஜாத்ஜாஜதி.

ஆனால் கலாதி சம்பந்த முண்டாகையினாலே இவர்களும் சகலரோ எனனில்? விஞ்ஞான கலர்க்குக் கலாதிசம்பந்தமுண் டாயிருந்தும் கலாதிபரதந்திர ரல்லாதபடியா லகலரே.

ததுக்தம் தத்ரைவ — கலாதி தத்வஸம் யோகாத் ஸகலா ஜீவாஸ்த²ஃ | தேஷாஜ்ஞாவிலஸஞ்ஜாவெ ஸகலாஸகலாஸவி|| தேஷாம்கலாதி யோகேவி வாரா

தந்த்ரோக்தந்தநேநை: । விஜ்ஞாநகேவலா ஸஸாஷ்ட ஸகலாஸ்சகலாஸ்சவேதி.

இவ்விடத்து போகமாவன? இரத்தினகசிதமான கிரகாதிகளும் * சருக்கு சந்தன வனிதாதிகளுஞ் சர்வமுஞ் சுத்தமாயிருப்பதுபோல, சுத்தாசுத்தமாயினும் சுத்தமுமாய் இவ்விடமுமாய் நாகக்லேச வாஜிநமுமாய தீக்ஷையினை யிவ்வ யோசிக் கப்பட்ட பேர்களுக்கு வித்யாதித்தத்துவங்களில் ஞானக்கிரியா சத்தி யபிவிருத்தி தாரதம்மியமுடையதாக வுண்டாம * மாலே

தத்ரஸ்தம் தம்மித்ர்வ - ஸம்ஸாரேந்த்ரா தாமிதஸ்வாமி ராஜ்ஞாணேநாம ஐஹாஜ்நாம் । விவிக்தவல்லபா ஜாயா ஹி: வவி தாமி ஐஹாம்திவ ॥ ஜிவத்ர்ஹிஸ் ஜஹோமஸ்மேரு ஹைமாமௌஷதோவவிவஸ்ஜமேத: தநாமேஹாமேஷஜே யாமேதிர்ஸ்ஸ வவி தாநர்த்ருதாமிவ ॥ வொடாயி கா ரமியாமஸ்ஸிரஹிவ ர்கேஷ ஹக்ஷயா । யெஷாம்தேஷா ஞேமேஹாடாஷம் ஸியெந வாஸிகஷ்வதீதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இப்படி மாமாயையினின்று மசாதாரணசத்த சிருட்டிசொல்லிச் சாதாரண சத்தார்த்த சிருட்டியைச் சாற்றுகின்றார.

வித்தைகள் - சத்தகோடி மகாமந்திரர்கள்,—வித்தை யீசர் - அநந்தாதி மந்திர மகேசுவரர்கள்,—சதாசிவர் - அனுசதாசிவர்கள்,—என்றிவர்க்கு வைத்திம்பதங்கள் - சாதாரண

ங்களா யிருக்கும் பதங்கள் எண்பத்தொன்று.—வன்னம் ஐம்பத்தொன்று,—புவனங்கள் இருநூற்றிருபத்துநான்கு,—மந்திரங்கள் பன்னிரண்டு,—தத்துவம் அசாதாரணமா யிருக்கும் சுத்தகலாதி சுத்த பிருதிவியந்தம் முப்பத்தொன்று.—சரீரம் - சாதாரண சாதாரணமாயிருக்கும் தூலதேகம்,—போகம் - போக்கியப்பொருள்,—கரணம் - முன் சொன்ன தத்துவங்களில் விசேடமாகும் இந்திரியங்கள்,—தாமெலாமும் - இவைகளெல்லாவற்றையும்,—வயிந்தவந்தான் - சுத்தமாயையி லுண்டாகிய சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னுஞ் சிவதத்துவமைந்துந்தானே தானேதங்களங்களிட்ட திருப்பவர்க்கு முறைமையிலே,—உபதானமாகின்றே உய்த்திடும் - சமவாயி காரணமாய்நின் றுண்டாக்கும்.

மாயையிற்பிரபஞ்சம் மாயையிற்றோற்றமுண்டாவதுபோல, மாமாயையிற் றோற்றமுண்டாகவேண்டுவதில்லை. விஞ்ஞானகலருட் பரிபக்குவ மலர்களி லநுக்கிரகப்பட்டு மலபாகமின்றிப் பதிதாரத்துக்குட் பிரவேசித்துப் பதியாயிருக்கின்ற மந்திரங்கள் மந்திரமகேசுவரர்கள் அநுசதாசிவர்கள் என்னும் இவர்களை விஞ்ஞானகலர்களென்று சிலர் வியாக்கியானம் பண்ணினார்கள் அது முன்னிலை மலையும். ஒருமலத்தார் விஞ்ஞானகலா என்று சொல்லியிருக்க, மலம் நீங்கி அதிகாரமலமாத்திரர்களாய அபரபதிகளாய்க்கடந்துபோனவர் எப்படி விஞ்ஞானகலராவார்கள், ஆகார்கள் அப்படியாகிற் சிலவிடத் தப்புச் சொல்லியிருப்பதேதுமுண்டு. பூர்வத்தி லிருப்பை நோக்கிப் புறப்பட்ட வசனம். இப்போதிருப்பை நோக்கி யெழுந்த வசனமன்று விஞ்ஞானகலர் மாயைக்குமேற் சுத்தவித்தைக்குக் கீழ் நடுத்தானத்திலே யெண்ணிறந்திருப்பார்கள் என்றறிக.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

சுத்தமாயை முதற்காரணமாவது ஈண்டுக் கூறிப்போந்த வாக்குமாத்திரைக்கேயன்று, மந்திரேசுரர் மந்திரமகேசுரர் அணுசதாசிவர் முதலிய வபரமுத்தர்க்கு வேண்டப்படுஞ் சுத்த தாத்துவாக்களெல்லாவற்றிற்கும் முதற்காரணமாமென்பதாம்.

விந்துவை மாயையென்றது பகுதிப்பொருள் விகுதி பெற்றது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

மேலுஞ் சுத்தமாயையி லுண்டான தோற்ற மருளிச் செய்கிறார்

(அந்வயம்) மாமாயையானது தான உபாதானமாகின்று நாதம விந்து சாதாக்கியம் ஈசுரம் சுத்தவித்தையென்கிற சிவதத்துவங்க ளைந்தும் பஞ்சகலைகளும் நாலுவாக்குகளும் ஐம்பத்தோரக்கரங்களும் வேதாகமங்களிலே சொல்லியிருக்கிற பொருந்தப்பட்ட எண்பத்தொரு பதங்களும் சத்தகோடி மந்திரங்களும் மந்திரர் அட்ட வித்தியேசுரர் அணுசதாசிவர்களுக்கு முண்டாகிய தனுகரண புவனபோகங்களும்; விஞ்ஞான கலர்க்குத் தனுகரண புவன போகங்களுந் தோன்று மென்னு முறைமை யறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

———0———

வயிந்தவத்தான - சுத்தமாயை முதற்காரணமாவது,— வித்தைகள்-ஈண்டுக்கூறிப்போந்த வாக்குமாத்திரைக்கேயன்றி

மந்திரேசுரர்,—வித்தையீசர் - மந்திரமகேச்சுரர்,— சதாசிவ ரென்றிவர்க்கு-அனுசதாசிவர்முதலிய அபரமுத்தர்க்கு,—வைத்துறும்பதங்கள்-வேண்டப்படும் பதங்களும்,—வன்னம்-அக்கரங்களும்—புவனங்கள்-புவனங்களும்,—மந்திரங்கள் - மந்திரங்களும்,—தத்துவம்-தத்துவங்களும்,—சரீரம்-சரீரங்களும்,—போகம்-போகங்களும்,— கரணங்கடாமெல்லாமும் - கரணங்களாகிய சுத்தாத்துவாக்க ளெவற்றினுக்கும்,—உபாதானமாகின்றே யுபத்திமே-முதற்காரணமாய்நின்று செலுத்துமென பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



அந்த விந்துஞான மூவகைப்பட்ட வான்மா
க்களுக்குத் தாரதன்மியமாகச் சித்திக்
கு முறைமையை யுணர்த்துகின்றது.

மூவகை யணுக்களுக்கு முறைமையால் விந்துஞான
மேவின தில்லையாகில் விளங்கிய ஞானமின்று
மோவிடா விந்துஞான முதிப்பதோர் ஞானமுண்டேற்
சேவுயர் கொடியினானறன் சேவடி சேரலாமே. (௨௯)

(இ-ள்) மூவகை யணுக்களுக்கு முறைமையால் விந்துஞான மேவின தில்லையாகில் விளங்கிய ஞானமின்றும்

மூவகைப்பட்ட வான்மாக்களுக்கு விந்துகாரியமாய் நாலுவிருத்தியையு முடைய சுத்தஞான தாரதன்மியமாகப் பொருந்தி மேவியாதிருக்குமாகில், அவர்களுக்கு ஞானமுண்டாகாது.

இவ்விட விந்து ஞான முதிப்ப தோர் ஞானமுண்டேற் சேவுயர் கொடியினான்றன் சேவடி சேரலாமே.

விந்து ஞானம் பரமமான பந்தத்துக்குக் காரணமாகையா லந்த ஞானத்தைவிட்டுச் சுத்தமாயைக்கு மேற்பட்டிருக்கிற சிவனது பரசாதத்தினாலே சிவஞான மிவர்களுக்குப் ப்ரகாசிக்குமாயின்; உயர்ந்த விடபக்கொடியையுடைய சிவனது சீபாதகமலங்களை யடையலாம். எ-று.

ஏகாரம் ஈற்றசை.

முறைமை என்பதனாற் ப்ரணவாதிகளைப்பற்ற வந்நதாதிகளுக்குக் குறைய சீவிக்கும், அவர்களைப்பற்ற சத்தகோடி மகாமந்திரங்களுக்குக் குறையும், அவர்களைப்பற்ற மண்டலாதிகளுக்கு, அவர்களைப்பற்ற கணேசாதிகளுக்கு, அவர்களைப்பற்ற பரமாண்டதாரகராகிய வுருத்திராதிகளுக்கும் ப்ரமாதிகளுக்குங் குறையக்குறைய சீவிக்குமெனவறிக.

இங்ஙனஞ் சுத்தாசுத்த வாசிகளான வான்மாக்களுக்கு வறியுங் குறைந்தும் விளங்குமெனவறிக. (உகூ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

(மூவகை...சேரலாமே)-விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரெனனுமிவர்களுக் கடைவே சுத்தாத்வா மிசிராத்வா அசுத்தாத்வா தாரதம்மியமாக வாச்சியவாசகஞானமானது பொருந்திற்றில்லையாகி லறிவேயில்லையாம். இவ்வாச்சிய வாசகஞானமாகிய விஞ்ஞானம் பிரகாசித்து, மேல் விஞ்ஞானப்ரகாசமு மப்பிரகாசமாம்படி சிவானந்தானுபவ ஞானோதயமுண்டா

மாகில் ருஷபக்கொடியை யுயர்த்த சிவனது செய்ய தாமரைம
லர்போன்ற ஸ்ரீபாதத்தையடையலாமென றிதனபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

முன்சொல்லிய மந்திரர் முதன மூவகையானமாக்களு
க்குஞ் சர்வஞ்ஞத்துவம், முன்சொல்லிய வாசகவிருத்திமுதல்
விந்துகாரியமின்றி யுண்டாகாதென றுணர்த்துகின்றார்.

(சர்வான்மாக்களுக்குஞ் சூக்குமைவாசகு முதலிய விந்து
ஞானமிருந்தாலுங் கன்மத்தினால் மாயையி லுண்டாகிய தூல
சரீர சூக்குமசரீர சம்பந்தத்தினாலே சர்வஞ்ஞத்துவம் பிரகா
சிக்கவில்லையாதலால்.) மூவகை யணுக்களுக்கு - மந்திரா மந்
திரமகேசுவரர் அனுந்தாசிவர்களுக்கு,—முறைமையால் விந்து
ஞானமேவியதில்லையாகில்-சூக்குமை முதல் வாக்கு விர்த்தி ச
ம்பந்தக்கிரமத்தில் ஞானத்தை விளக்குதலான் ஞானமென
று பெயருடைய முன்னடுத்த விருத்தத்திற் சொல்லிய வயிந்த
வ சூக்குமதேக தூலதேக புவனாதிகாரிய சம்பந்த மில்லாதி
ருந்தால்,—விளங்கிய ஞானமின்றாம - சர்வஞ்ஞத்துவ சத்தி
யிற சமுற்பன்ன சவிகற்ப சர்வவிஷயஞானம் அவர்களிடத்
திற காணப்பட்ட தில்லையாய் விடும்,—வந்துஞானம்-இப்போ
து சொல்லிய வயிந்தவ தத்துவத்தாத்துவிக வாக்குருபவியஞ்
சக ஞானமுமவாக்குபாதி பொருந்திச் சர்வஞ்ஞத்துவசத்தியி
ற் சமுற்பன்ன சர்வவிஷயவியங்கிய சவிகற்ப ஞானமும்,—
ஒவிட-நீங்கிட,—உதிப்பதோர் ஞானமுமவேல்-பரமுத்திக்க
ருகராமிவர்களுக்குச் சிவஸ்ரீக்ஷணபாத்ர நிர்விகற்ப சமாதி சமு
ற்பன்ன நிர்விகற்ப ஜீவன்முத்தி சாட்சாதகார ஞானமும்.

சகலர்க்கு முன்சொல்லிய மகாமாயாந்த தீக்ஷாசத்தி மகா மாயாபுருஷ விவேகஞான சிவத்தியான சிவசமாதியினுற்பவிக்கு மொப்பற்ற சிவவிஷய சீவன்முத்தி சாக்ஷாத்கார ஞானந்தான, சமாதிஞான மாத்திரந்தான, தியானஞானமாத்திரந்தான, விவேகஞான மாத்திரந்தான, உளவேல்! அந்த மூன்றனுமையினும்,—சேவடியார் கொடியிருனரென,—சேவடி சேரலாமே-திருவடியைப் பெறலாகுந்தானே!

காரிய லக்ஷணையினால் முன்சொல்லிய அறிவானந்த மூன்றனைமயெனகின்ற சிற்சத்தி லக்ஷண சிவத்துவாபி வியத்தி பெறலாகுந்தானே!

சத்தியோநிருவாண தீட்சாசத்தியாகில், அசத்தியோநிருவாண தீக்ஷா மாத்திரத்துக்கங்கமாகிய விவேகஞானத்தியான சமாதி சீவன்முத்தி சாக்ஷாத்காரங்களின்றிப் பெறலாம்.

மூவகைப்பணுக்களாவார் விஞ்ஞானகலர் பிரளயாகலா சகலாகளல்லர், விதேகிகளாகும். முதலிருவர்க்கும் விந்துஞானமில்லாமையால் விந்துஞான மென்றது வாசகமாத்திர மென்றுபண்ணி, அஃதெல்லாகக்கு முன்டென்று சகலர்க்குள் உத்தம மத்திம அதமர்கள மூவகை யணுக்களென்று பொருளுரைத்தாலு மாறுபாடில்லையே! உள்ளது; ஒருபிரகாரத்தாலப்படியும் பொருளுரைகலாம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற் கூறிப்போந்த வாக்குகள் சவிகற்ப ஞானத்துக்கேதுவாகலால், ஈண்டுக் கூறியது சுத்தப் பிரபஞ்சம்போல வித்தைகள் வித்தையீசர் சதாசிவர் மாத்திரைக்கே யன்றி, விஞ்ஞானகலா பிரளயாகலர் சகலர்க்கும் ஒருதலையான் வேண்ட

ப்படும் சவிகற்ப ஞானத்திற் கேதுவாகிய அவ்வாக்குகள் தன்னின் வேறாகக் காணப்பட்டு நீங்க; அதற்கு மேலாகிய பேரறிவு ஒருவனுக்கு விளங்குமாயின், அவனப்பொழுதே பரமுத்தியைத் தலைப்படுவனென்பதாம்.

எனவே, இவ்வாக்குகள் பரமபந்தமென்பதாயிற்று.

முறைமையின் மேவுதலாவது, வித்தைகள் வித்தையீசர் முதலியோர் போலன்றிச் சகலர் முதலிய மூவர்க்கும் வியஞ்சவேறுபாடுபற்றி முறையே தூலதமமாயுந் தூலதரமாயுந் தூலமாயும் பொருந்துதல்.

ஞானத்திற் கேதுவாகிய வாக்கை ஞானமென றுபசரித்தார்.

பிரளயாகலர் விஞ்ஞானகலரூத தனுவில்லையென மயங்கிக் கூறுவாருமுளர், அஃது ஆகம வசனங்களோடு முரணுதலின் அவசித்தாந்தமென்றொழிக.

இவை யேழுசெய்யுளானுஞ் சுத்தமாயையிற் றோன்றுங் காரியங்களும் அவற்றதியல்பும் வகுத்துக் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

முன் சொன்ன சுத்தமாயையாலொழிந்த மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களுக்கு மறிவுண்டாகா தென்று மேலருளிச்செய்கிறார்.

மூவகையணுக்களுக்கு முறைமையால் விந்துஞான மேவினதில்லையாகில் விளங்கிய ஞானமின்றாம் - ஆன்மவர்க்கமெல்லா மலசம்பந்திகளாயிருக்கையினால் மூன்றுவகைப்பட்ட ஆன்மாக

களுக்கும் அவரவ ரறியும் பகுதிக் கேற்க வயிந்தவ ஞானங் கூட்டநின்று அறிவிக்கிறதில்லையாகில் இவர்களுடைய விச்சா ஞானக்கிரியைகளாலே பிரகாசிக்கப்பட்ட வறிவுண்டாகாது.— ஓவிட விந்துஞான முதிப்பதோர் ஞானமுண்டேற் சேவுயர் கொடியினானடி சேவடிசேரலாமே - இப்படி சிவதத்துவங்க ளைந்தாலும் வேதாகம சாத்திர புராணங்களினாலும் அறியப்பட்ட வயிந்தவஞானத்தினாலேயும் ஒழியும்படிக் கேற்க யிவனிடத்திலே பிரகாசிக்கத்தக்க தொரு சிவஞான முண்டாகில், உயர்த்த விஷபக்கொடியை யுடைய தம்பிரானுடைய ஸ்ரீபாதத் தைப் பொருந்தலாம்.

இதனாற் சொல்லியது மூன்றுவகைப்பட்ட வான்மாக்களுக்கு வயிந்தவஞானத்தா லொழிய அறிவுண்டாகா தென்றும், இந்த ஞானமு மொழியும்படி யிவர்களிடத்திலே சிவஞானம் பிரகாசித்த காலத்து சிவனுடைய திருவடியைச் சென்று கூடலாமென்னு முறைமையு மறிவித்தது.

'விந்துவின் மாயை' என்ற திருவிருத்தத்தில் 'விந்து தன்பால் வைகரியாதி' என்ற பதத்துக்கு வியாக்கியானம் இவ்வளவும் வந்து முடிந்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

விந்துஞானம் - மேற்கூறிப்போந்த வாக்குகள் சவிகற்ப ஞானத்திற் கேதுவாதலால்,—மூவகையணுக்களுக்கும் - நன்மைகூறிய சுத்தப் பிரவஞ்சம்போல, வித்தைகள வித்தையீசர் சதாசிவர் மாத்திரைக்கேயன்றி, விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர்க்கும்,—முறைமையான மேவினதில்லையாகில்-மூன்றையே தூலமாயுந் தூலதரமாயுந் தூலதமமாயும் பொருந்தியதி

தலில்லையாயின்,—விளங்கியஞானமின்றும் - சவிகற்பஞானத்திற கேதுவாகிய அவவாசசுககளா லுண்டாகும ஞானமில்லையாம்.—விந்துஞானமோவிட - விநதுஞானம் பரமபந்தமாதலின றனினவேருகக காணப்படடுநீஙக,—உதிப்பதோர ஞானமுணடேல - அதற்குமேலாகிய பேரறிவு ஒருவனுசகு விளங்குமாயின,—சேவுடா கொடியினுனறன சேவடி சேரலாமே- அவனபபொழுதே யிடபககொடியையுடைய சிவபிரான திருவடி சேர்தலாகிய பரமுத்தியைத தலைபபடுவ னெனபதாம.

இவை ஏழு செய்யுளானும சுத்தமாயையிற் ருேன்றுங காரியங்களு மவற்றினியல்பும வகுததுக்கூறபபட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.

இவ்வண்ம வாக்கின முறைமையைக் கூறி யருவமாயிருக்கிற மாயையினின்றும பரடஞ்சகாரியந் தோன்று முறைமையை யுரைாததுகிருர்

அருவினி லுருவந்தோனறி யங்கங்கி பாவமாகி, யுருவினி லுருவமாயே யுதித்திடு முலகமெல்லாம், பெருகிடுஞ் சுருங்கும்பேதா பேதமோ டபேதமாகு, மொருவனே யெல்லாமாகி யல்லனு முடனுமாவன. (உஎ)

(இ-ள்) அருவி அருபமாகிய மாயையினின றுருவமாகிய வி லுருவந் தனுவாதிக டோன்றித் தேகமுந் தேசியும் தோனறி ய போனறு, அஃதாவது தனுவாதிகள் சரீரம் ங்காங்கி பாவமா போலவும் மாயை யானமாவைப்போலவுங் கி யுருவினி லுரு கலந்து பிறிவற்று நின்று, பினபொரு வடி

| | |
|---|---|
| வமாயே யுதித்தி டும் | விலே நின்றுந் தூலவுருவம் பரிணமித்த தொருவடிவாகித் தோன்றிநிற்கும் |
| உலகமெல்லா ம் பெருகிடும் | இந்த முறையே விசுவமெல்லா மாயைதானே நராமிருகாதியான வெண்பத்து நான்கு நூறாயிரம யோனிபேதமாய் விரியும. |
| சுருங்கும் பே தாபேதமோ ட பேதமாகும | பேதமு மபேதமுமாகிய வாண்பெண்ணு கியும அந்தப் பேதமாகிய வாண்பெண்போலத் தோன்றுகையிலே பேதமல்லாத வலியாகியுந் தோன்றிப் பெருகாநிற்கும. |
| ஒருவனே யெ ல்லாமாகி யல்ல னு முடனுமாவன | அநதக் காததாதானே யிவைகளெல்லா மாகியிநதப் பிரபஞ்சத்துக் கநயனுமாய் யாத்தியிலே யநயனுமா யிருப்பன (உஎ) |

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

அருவினிலுருவந்தோன்றி யங்காங்கிபாவமாகி யுருவினிலுருவமாயே யுதித்திடும-அருவமாகிய மாயையின் முதல் சூக்குமருபந்தோன்றி, தோன்றினவளவிற் சூக்குமருபாங்கமு மான மாவாங்கியுமென்கிற தன்மையைப்பொருந்தி, மேற்சூக்குமருபத்திற் றூலருபமான துண்டாம்,— உலகமெல்லாம் பெருகிடுஞ்சுருக்கும - உலகங்களுக்கு மிப்படியே சூக்குமமாகிய தத்துவங்களுண்டா யதிலேதூலமாகிய வுலகமுண்டாயவிரியும் விரிந்த வுடனேவே தூலஞ்சூக்குமத்திலுஞ் சூக்குமங்காரணத்திலுமொடுக்கும. இனி யந்தக் காரணமான மாயையும் காரியமாகிய பிரபஞ்சமு மெவ்வாறு நிற்குமெனின்?—பேதாபேதமோ டபேதமாகும் - காரியகாரணங்களாயிருக்கிற வவசரத்தின் மாயை

யென்றும் பிரபஞ்சமென்று மிரண்டுபெய ருளைக்கவுண்டாய், காரிய காரணங்களை பிரிக்கப்படாத தன்மையாற் பேதாபேத முமாம், வஸ்துக அபேதமுமாம். வஸ்து ஒருமுதலாகையா லிப் படி மாயைதானே யிவ்வாருகிற் கர்த்தா கேவல நிமித்தமே போவெனின்?— ஒருவனே யெல்லாமாகி யல்லவா யுடனுமாவன - சிவனொருவனே மாயாப் பிரபஞ்சமெல்லாமாய் ப்ரபஞ்சத்தன்மையுந் தானல்லவா † யனுப்பிரவிஷ்டனாகநின்று ஸ்திதியையும் பண்ணுவனென்ன றிதன்பொருள்.

† உள்ளே நின்று.

ஒருவனென்றது ஒருவனேயென்ற ஏகாரத்திற்கு லநேகே ஸ்வர ‡ வியாவிருத்தி.

‡ தள்ளப்படுதல்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

இவ்விடத்து மகாமாயாகாரியத்தைச் சிறப்பித்த சிவிமேற் செப்புமபடிகதுப் பொதுவாயுரைத்து, மாயாகாரியத்தையும் அப்படிச்செப்பும்படிக சுபபடியுரைக்கின்றார்

அங்காங்கிபாவமாகி-காரியசத்தி சமூகமே மாயையாதலான மாயையாகி, காரியங்க ளங்கங்களொன்னுந் தன்மையாகி,— அருவினில் - காரியசத்தி ரூபமாகிய மாயையின,—உருவம்-அந்தக்காரியசத்தி வியத்திரூபமாகிய கலாதிகாரியம்,—தோன்றி - உற்பத்தியாய்,--உருவினிலுருவமாயே-அந்தக்கலாதி காரியத்தினின்றும் பிரகிருதி முதலாகியகாரியமாகித்தானே,—உலகமெல்லாம்-கலாதி பிருதிவி யந்தமாய தத்துவதாத்விகப் பொருளையெல்லாம்,—உதித்திடும்-உற்பத்தியாம்,--பெருகிடுஞ்சுருங்கும்-

சிருட்டிகாலத்தில் வியத்திருபமாயும் சங்காரகாலத்திற் சத்திரூபமாயுமிருக்கும்,— பேதாபேதமோ டபேதமாகும் - வியத்திருபமாய்க் காரணம் பெருகிக் காரியமான காலத்திற் குடமும் மிருத்துமபோலக் காரியகாரணங்கள் விசேஷா விசேஷமாய்த் தோற்றும், சத்திரூபமாய்க் காரியஞ் சுருங்கிக் காரணமான காலத்திற் காரிய காரணங்கள் அவிசேஷங்களாய்த் தோற்றும், நிமித்தகாரணனன்றி யாமோ வாகாதென றுணர்த்தற்கின்றா,—ஒருவனே யெல்லாமாகி யல்லனு முடனுமாவன -சிவனென்றேன அநந்த துவாரத்தாலே மாயா காரியமெல்லாவற்றையும் பண்ணுகிறவனும் குலாலன் தண்டு முதலியவற்றைக் கைக்கொண்டிருந்து பண்ணுவது போலப் பண்ணாதவனுமாய்த் தனது சத்திரூப சரண சங்கற்ப சலனமாற தொழிலினாற் பண்ணுகிறவனுமாவன.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

சூக்குமமாகிய மாயையினின்றுந் தூலமாகிய கலாதியும், அவற்றினின்று தூலமாகிய மூலப்பகுதியும், அதனினின்று தூலங்களாகிய குணதத்துவ முதலாயினவுந் தோன்றும். அத்தூலங்களினின்றுந் தோன்றுங் காரியம் அவற்றினுந் தூலமேயாம். இவ்வாறே காரியப் பிரபஞ்சமெல்லாந் தோன்றி, நிலம் நீர் தீ வளி விசும்பு ஆண் பெண் அலி என்றற்றொடக்கத்து அவயவப்பகுப்புடையனவாய், வளர்ந்துந் தேய்ந்தும் பரிணமித்துவரும். இத்தன்மையவாகிய காரியகாரணங்கட்குத் தம்முட்பெரும்பாலும் வேற்றுமை கூறும நையாயிகர் முதலியோர் மதம் அடாது. மற்றென்னெனில்? பரிணாமமாதலை நோக்கிப் பேதாபேத

மாம், சற்காரியமாதலை நோக்கி அபேதமாம், மேற்சிவனவன்றன் சந்நிதி தனினின்றே தோன்றுமெனபதனாற் பெறப்பட்ட நிமித்தகாரணனாகிய முதல்வன, அநந்தா சீகண்டர் முதற்தான அவற்றைக் காரிப்படுத்துங்கால், கலப்பினாலொன்றாயும் பொருண்மையால் வேறாயுஞ் செலுத்துதலான உடனாயு நிற்பனென்பதாம.

எல்லா மென்றதனாற் சுத்தமாயா விருத்தியினும் அவ்வாறு நிற்பனென்பது பெறுதும.

உருவினிலருவாய்த் தோன்றுமென்னப் பிரித்தமையின், ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

ஒருவனே எனனும ஏகாரம் தேற்றம்

அங்காங்கிபாவமாகிய பெருகிடுஞ் சுருங்குமெனக் கூட்டுக.

அதிசயவனத்தின உலகந் தோன்றுமென்னும் மாயாவாதத்தை மறுப்பார் அருவினிலுருவந் தோன்றியென்றும், அவயவமே பொருளாய்த் தோன்றுவதன்றி அவயவியென்பதொன்றில்லை யென்னும் சமுதாயவாதத்தை மறுப்பார் அங்காங்கிபாவமாகியென்றும், நிலமுதலிய உருவம் பொருளினின்றுஞ் சத்குணமுதலிய அருவந் தோன்றுமென்னும் ஆரம்பவாதத்தை மறுப்பார் உருவினிலுருவமாயே யுதிக்குமென்றுங் கூறினார்.

பெருகிடுஞ் சுருங்குமென்றதும பெருக்கமுஞ் சுருக்கமும்பற்றி ஒருபொருளே பெயர்பாலும் வேற்றுமைகூறும், அவ்வாதத்தை மறுத்தற்பொருட்டு, பிறவுமன்ன.

இதனானே மாயை முதலியவற்றாக்கமாதி முக்குணமாகிமூலக் கருவியும் என்றுதனைக்கட்டுப்படுத்தியல்பு தொகுத்துக் கூறப்பட்டது.

---

# நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

சுத்தமாயையிற் றோற்றமு மது காரியப்பட்ட முறைமை யு மருளிச்செய்து,மேல் சுத்தமாயையில்நின்று பிரபஞ்சந் தோன்றுகிற முறைமை யருளிச்செய்கிறார்.

அருவினிலுருவந்தோன்றி - அருவமாயிருக்கிற மாயையில் நின்று மாயாகாரியமான பிரபஞ்சரூபந் தோன்றி,—அங்கமாய கியாவமாகி - இவையிரண்டுந் தேகமுந் தேகியும்போலப் பிரிய றாது நின்றதாய,—உருவினி லுருவமாயே யுதித்திடு முலகமெல்லாம் பெருகிடுஞ் சுருங்கும் பேதாபேதமோ டபேதமாகும் - இந்தப் பிரவஞ்ச மனவிறந்த வடிவாகப் பெருகித் தூலாகாரமாய் நிற்கும், ஒடுங்குங்காலத்திற் சூக்குமமா யற்பமாய் விடும், இந்த வடிவுகள்தான் ஒன்றுகசொன்று இருளும் வெளியு மபோல பேதங்களுமாய,சொல்லும பொருளும்போலப் பேதாபேதங்களுமாய, பொன்னும் பணியும்போல அபேதங்களுமாய், இப்படியே தோன்றுநிற்கும். இந்தப் பிரவஞ்சந் தானே நின்று காரியப்படுமோ வெனனில்?—ஒருவனே யெல்லாமாகி யல்லவாயுடனுமாவன் - கர்த்தா தானே முன் சொல்லப்பட்டவை யெல்லாந் தானேயாய் விசாரித்துப் பார்த்தால் இவை யிறுசகுளொன்றுமில்லவுமாய் இப்படித் தோய்வற நிறகச்செய்தேயும் இவை யெல்லாந்தையும் விட்டு நீங்காமல் பிறிவறும்.

இப்படி எண்ணிறந்த வடிவமாயிருக்கிற விசுவத்தோடே காத்தாவுங்கூடி விசுவரூபியாய் நிற்பனென்பதற்குப் பிரமாணம் திருப்பாட்டு. “ இருநிலனாய்த் தீயாகிநீருமாகி யியமானனாயெரியுங் காற்றுமாகி,யருநிலைய திங்களாய் ஞாயிராகி யாகாசமாயட்ட மூர்த்தியாகிப், பெருநலமுங் குற்றமொடுபெண்

ணுமானும் பிறருருவுந் தம்முருவும் வேறதாகி, நெருணலை யாயினருகி நாளையாகி நிமிர்புன்சடையடிக ணின்றவாறே" கீர்த்தித் திருவகவல். "வேறுவேறுருவும வேறுவேறியற்கையும், நூறுநூருயிர மியல்பினதாகி" எனறும், திருவண்டப்பகுதி, "நாடொறு-மருக்கநிற்சோதி யமைத்தோனறிருத்தகு - மதியிற்றண்மை வைத்தோனறிண்டிறற - றீயின வெம்மை செய்தோனபொய்தீர-வானிற்கலப்பு வைத்தோன மேதகு-காலினூக்கங் கண்டோ னிழறிகழ்-நீரினினசுவை நிகழ்ந்தோன வெளிப்பட-மண்ணிற்றிண்மை வைத்தோ னனறென-றெனைபபலகோடி யெனைப்பலபிறவு - மனைத்தனைத்தவவயி னடைத்தோன." திருத்தோணோக்கம். "நிலநீர்நெருப்புயிர் நீள்விசும்புநிலாபபகலோன், புலனாயமைந்தனோ டெணவகையாய்ப் புணர்ந்துநினருலகேழெனத் திசைபத்தெனத் தானொருவனுமே, பலவாகி நினறவா தோணோக்கமாடாமோ" எனறும், இருக்களிற்றுப்படி "ஏதேனுங்காரணத்தா லெவ்வுலகிலெத்திரமு, மாதேயும் பாக நிலைச்சினையே—யாதலினாற், பேதமேசெய்வா யபேதமேசெய்திடுவாய், பேதாபேதஞ்செய்வாய் பின" என்னுமதுங் கண்டுகொள்க

இதனாற் சொல்லியது அருவமாகிய மாயையிலே நின்றும் உருவமாகிய பிரவஞ்சம கர்த்தாவாலே தோனறுமெனறும்,கர்த்தா விந்தப பிரவஞ்சந்தானேயாய் இவை யல்லவுமாய் இப்படி நிற்கச்செய்தேயும் விட்டு நீங்காமற் பிரிவற நிற்பனெனனு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

அருவினுருவந்தோன்றி - சூக்குமமாகிய மாயையினின்றுந் தூலமாகிய கலாதியு மவற்றினுந் தூலமாகிய மூலப்பகுதியு மதனினுந் தூலங்களாகிய குணதத்துவ முதலாயினவுந் தோன்றும்,—உருவினிலுருவமாயேயுதித்திடும்-அந்தத் தூலங்களினின்றுந் தோன்றுங்காரிய மவற்றினுந் தூலமேயாம்,—உலகமெல்லாமங்காங்கிபாவமாகி - இவ்வாறே காரியப்பிரபஞ்சமெல்லாந் தோன்றி நிலநீர் தீ வளி விசும்பு ஆண் பெண் அலியென்றற் றொடக்கத்தவை யவ்வப் பகுப்புடையனவாய்,—பெருகிடுஞ் சுருங்கும்-வளர்ந்துந் தேய்ந்தும் பரிணமித்துவரும் இத்தன்மையவாகிய காரியகாரணங்கட்குத் தம்முட் பெரும்பாலும் வேற்றுமை கூறு நையாயிகர் முதலியோர் மதம்படாது மற்றென்னெனில்,—பேதாபேதமோ டபேதமாகும்-பரிணாமமாதலை நோக்கிப் பேதாபேதமாம், சற்காரியமாதலை நோக்கி லபேதமாம்,—ஒருவனே-மேற் சிவன்றன் சந்நிதி தன்னின்னிறே தோன்று மெனப்பட்டதற் பெறப்பட்ட நிமித்தகாரணனாகிய முதல்வன்,—எல்லாமாகி - அநந்தர் சீகண்டர் முதற்றா னவர்களைக் காரியப்படுத்துங்காற் கலப்பினாலொன்றாகியும்,—அல்லவாய் - பொருண்மையால் வேறாகியும்,—உடனுமாவன் - செலுத்துதலா லுடனாகியு நிற்ப னென்பதாம்.

இதனானே 'மாயை முந்திடுமிராகமாதி முக்குணமாதி மூலந் தந்திடும்" என்றதன்கட்படு மியல்பு தொகுத்துக் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



அந்நமாயையிற் ப்ரபஞ்சந் தோன்றுவதில்லை, பிர மத்தினின்றும் ப்ரபஞ்சந் தோன்றுமென்னும் பாற்கரியனை நோக்கி யுணர்த்துகின்றார்.

அருவுரு வீறதாகும் விகாரமு மவிகாரத்தில்,
வருவது மில்லையென்னின் வானவளி யாதிபூதந், த
ருவது தன்னின்மேக சலனசத் தங்களோடு முருவின்
மின் னுருமேறெல்லா முதித்திடு முணர்ந்துகொள்
ளே. (உஅ)

(இ-ள்) அருவுரு வீறதாகும் விகாரமு மவிகாரத்தில் வருவது மில்லையென்னில் — முற்கூறிய வருவத்திலே நின்று முருவந் தோன்றுமோ? அவிகாரமாகிய மாயையினின்றும் விகாரமாகிய ப்ரபஞ்சந் தோன்றுகைக் கொரு காரணமுமில்லையென்று நீ சொல்லில்?

வானவளி யாதிபூதந் தருவது தன்னின் — அருவாயுள்ள வாகாசத்திலே வாயுமுதலிய பூதங்க ளுண்டாகாநிற்கும். இன்னு மவ்வானில்,

மேக சலனசத்தங்களோடு முருவின் மின் னுருமேறெல்லா முதித்திடும் — அந்த வாகாசத்திலே மேகமுஞ் சலனத்தையுந் திரட்சியையுமுடைய மின்னுமிடியு மிவையெல்லாந் தோன்றாநிற்கும்.

உணர்ந்துகொள்ளே — அதுபோல வருவமாயுள்ள மாயையிலே யுருவமாயுள்ள ப்ரபஞ்சந் தோன்றுங் காணென் றறிந்துகொள்வாயாக. எ-று.

இதற்குப் பிரமாணம் விசுவசா ரோத்திரத்தி லெனவ
றிக. (உஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேலு மதற்கோர் புறநடை.

அருவுருவினுதாகும் விகாரமுமவிகாரத்து வருவதுமில்லை யெனனின்-அரூபத்திலுரூபமுண்டாகாது அவிகாரத்தில விகாரமுமுண்டாகாது. ஆகையா லரூபமாயிருக்கிறமாயை ரூபமாயிருக்கிற பிரபஞ்சத்தைப்பெருது அவிகாரியாயிருக்கிற சிவனிடத்திற்கிருத்தியமாகிற விகாரமுமவாராதெனின்?—வான - ஆகாசமவிகாரரூபிதமாயிருக்க,—வளியாதிபூதந் தருவதுமேகம் - பாரத்திவமாயிருக்கிறதுமதத்தையும ஜலத்தையுந் தேஜசையும் அரூபமாயிருக்கிறவாயு வருபரந்தித்துக்கொண்டு மேகத்தையுண்டாக்கும — தனவிரசலனசத்தங்களோடு முருவினமின னுமேரெல்லாமுதித்திடும-அம்மேகத்தினிடத்தில் வாயுதருமமாகிய சலனமும, இவைகளுக் கவகாசப்பிரதமாயுள்ள வாகாயகுணமான சத்தமும, தேஜசினுடைய தர்மமான மினனிடியும்,—ஆப்பியதருமமானஜலமும, பிருதிவிதருமமானரூபமுமுண்டாகக்கண்டோம்,— உணாநதுகொளளே -இவ்வாறுசொனன திருஷ்டாநதத்தினபடியே தாஷ்டாநதிகத்தையு மறிந்துகொள்வாயாக. அவையாவன? மாயையுங் கனமமு மாணவமுமான மாவுமுங்கூடி நித்தியநினமலநிர்விகாரியாயிருக்கிற வீஸ்வரனுடைய சந்நிதியிற் பிரபஞ்சமுண்டாம் உண்டாம்படி, மாயாகாரியமாகிய தனுகரணாதிகளுங் கனமபலமாகிய சுகதுக்கங்களும், ஆணவதர்மமாகிய மோகாதிகளும், ஆன்மதர்மமாகிய ஞாதிருத்வ கர்த்திருதவ போக்திருத்துவங்களும், ஈஸ்வரசிற்சத்தி இ

ருத்தியமாயிருக்கிற ஞானப்பிரகாசமுமுண்டாய்; இவையைந்து
ங்கூடிய பிரபஞ்சமா மென்றிதன்பொருள்.

¶ ப்ருதிவிவிகாரம், × இடங்கொடுக்கிற, ÷ மப்பு,

இங்ஙனமன்றி வானவெளியாதி பூதந்தருமென்பது, ஆகா
சத்தில்வாயுவும் வாயுவிலக்கினியு மக்கினியிலப்பு மப்புவிற் பி
ருதிவியுமுண்டாமென்று சொல்லலாகாதோவெனின்? மேற்பி
ரபஞ்சபூதோற்பத்தியி லாகாசாதிகளி லொன்றிலொன்று தோ
ன்றுமென்பதை நிராகரித்து, பஞ்சதன்மாத்திரையிற் பஞ்சபூ
தங்களுந் தோன்றுமென்று சமாதித்திருக்கையால் பூதங்க
ளொன்றி லொன்று தோன்றுமென்று சொல்லில், ஸ்வமத அஞ்
ஞானமும் பரமதாப்பியனுஞையு மிரண்டு நிக்கிரகஸ்தானமு
ண்டாம்

தஸ்மாத் காஷ்டாமேஸந - யஜ்ஞ ஜ்யோதி ஸ்வயம்
ஏவ தாம் ஸம்வோத்க்வமேவஹதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——0——

தந்துமுதலிய வுருவத்தினின்றும் படமுதலியவுருவந் தோ
ன்றுதல் கண்டிருந்தும், அருவினி னுருவந் தோன்று மென்ப
தடாதென் றுசங்கித்து மறுத்துணர்த்துகின்றார்

அரு-மாயை,— உருவினுதாகும் - கலாதிகளை யுண்டாக்க
மாட்டாது,—விகாரமும்-பரிணமமும்,— அவிகாரத்தில்-பரி
ணமமல்லாத பொருளின,—வருவதுமில்லை யெனவில்-வாரா
தென்று நீசொல்லில், வைதிகமதத்தினுண மறுக்கின்றார்,—வா
ன-அருவாகிய ஆகாசமானது,—வளியாதி பூதந்தருவது-வாயு
வாதி பூதங்களை யுண்டாக்குவது,—தனவில் - அதனிடத்தில்

அநகப் பூதவிகாரங்களாகிய தூம தூளி படல முதலியவற்றி
ன,—மேகசலன சததஙகளோடு முருவின மினனுருமேறெல்லா
முதித்திடு முஙனாநதுகொளளே

அந்தமேகத் தசைவு தொனிகளோடுகூடி, உருவென்பது வ
ருவிதது, உருமின, உருவில் உருமேறெனறுபொருளகளகொண
டு இவைபெல்லா முதிததிடுமெனறு கூடடுக.

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

அருவெனவே அவிகாரமாதலும பெறப்பட்டமையின்,அப்
பெற்றிததாகிய மாயையினினறும உருவமாய் விகாரியுமாகிய
பிரபஞசந் தோனறுமெனறல் பொருநதாதெனில்? அறியாதகூ
றிரூய்; உனமததகதில் அருவமும அவிகாரியுமாகிய ஆகாயததில்
நினறும உருவுமும, விகாரியுமாகிய வாயுமுதலிய பூதங்கண
முறையே தோனறும. அதுவேயுமனறி அவவாகாயததினினறு
ம பல முகில்களும் முகிலினகட பல விகாரங்களும் பலவோ
சைகளும் பலமினகளும பலவிடிகளும இனனு மிவைபோல்வன
பலவுந தோனறுமாகலான, அதனை மறநது அஙஙனங் கூறுத
ல் உனககே வழுவாய் முடியுமெனபதாம்.

சற்காரியங்கொண்ட வெமககாயின அதுவழுவன்றென்ப
து கருத்து.

இதனுனேமாயாவாதி மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரி
த்து மேலது வலியுறுத்தப்பட்டது.

## நிரம்பவகிழயருனா வருமாறு.

———o———

மாயையிலே நின்றும் பிரபஞ்சந் தோன்றுமென்கிறது அர்த்தமல்ல, பிரமத்திலேநின்றும் பிரபஞ்சந் தோன்றுமென்ற பாற்கரியனை நோக்கி மேலருளிச் செய்கிருர்.

அருவுருவிலுதாரும் விகாரமு மவிகாரத்தில் வருவதுமில்லை - மாயையிலே நின்று பிரபஞ்சந் தோன்றுமென்பானென்னில்? அதிசூக்கமா யிருக்கிற மாயையிலே நின்றும் எண்ணிறந்த ரூபங்களாயிருக்கிற பிரபஞ்சந் தோன்றப்படாது அதெப்படியெனில்? அவிகாரமா யிருப்ப தொருபொருளிலே நின்று விகாரமா யிருக்கப்பட்ட பல பொருள்களு முண்டாகைக் கேதுவுமில்லை,—எனனில் - என்று நீ சொல்வாயாகில்,—வான வெளியாதி பூதந் தருவது - ஆகாசத்திலே வாயுபூத முதலான பூதங்களெல்லா முண்டாகாநிற்கும். இதுவன்றியும்,— தனினை மேகசலன சதத்தங்களோடு முருவில் மின்னுருமேறெல்லா முதித்திடு முவாந்துகொள்ளோ-அந்த ஆகாசந் தனிலே சலிப்புந் திரட்சியும் பொருந்தியிருக்கிற மேகமும் உருவத்தையுடைய வில்லும் பிரகாசத்தையுடைய மின்னும் இடியும் இவையெல்லாந் தோன்றுநிற்கும்; இந்த முறைகளையு மாராய்ந் தறிவாயாக.

பாற்கரியன —பிரமத்திலே நின்று பிரபஞ்சந் தோன்றி யொடுங்கி யொழிந்து மாயையிலே நின்றும் பிரபஞ்சந் தோன்றிடுதற்குப் பிரமாணம், பரபட்சம்; அவன் மதம். "சித்தேயுல காய்ப்பரிணமித்து சிவனுகித் திகழ்ந்தமையாற், சத்தேயெல்லாமுத்தினைச் சாரக்கண்ட ஞானங்கள், வைத்தேமொழியு மாமறைகள் சொன்ன மரபேவந்தக்கா, லொத்தேகேட்டுப் பிரமத்தோ டொன்றுய்ப் போமென றுரைத்தனனே."

சித்-பர-பாற, உ - செ.

அவன் மறுப்பு—உன்னுகின்றபிர மத்திலேசிரிதிய் வுலக மானதென வோதினீ, மன்னுகின்றசில காலமோடழியு மழிய வந்ததவு மாயையாற்றனனிலொன்றுமெனில வருதலோடிறு தி தருதலாலது சடசததா, மினனமுஞ்சசமி துனமையனறுசட மெனனவேயுறுதி மனனுமே" எனனுமதுங் கண்டுகொள்க.

சிஅ - பர - பாற் - மறு, - உ - செ.

இதனாற் சொல்லியது அருவத்திலே நின்று முருவந் தோனறுது, அவிகாரத்திலே நினறும விகாரந் தோனறுதாற்போலவென்று பாறகாரிபன சொல்ல, அவனை மறுத்து, அருவமாயிருக்கிற வாகாசத்திலே நினறும் உருவமாயிருக்கிற பூதஙகளும், உருவமாயிருக்கிற மேகமுதலானவையுந தோனறுகிற முறைமைபோலே, அருவமாயிருக்கிற மாயையிலே நினறும் உம்முடைய கத்தாவாலே பிரபஞச முணடாகிற தெப்படியெனனில? எ எணணிறந்த ரூபங்களாயுள்ள பிரபஞ்சந தோனறுமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அருவவிகாரத்தின - அருவும் அவிகாரமென்னும் பெற்றித்தாகி, மாயையினினறும்,—உருவிகாரம் - உருவமாய் விகாரியுமாகிய பிரவஞசம்,—ஈனுதவருவது மில்லையாகுமென்னில்-தோனறுமெனறல் பொருநதாதெனின? அறியாது கூறினாய்,—வான வளியாதிபூதந்தருவது- உனமதத்தில் அருவும் அவிகாரியுமாகிய வாகாயத்தினினறு முருவமும் விகாரியுமாகிய வாயுமுதலிய பூதங்கண் முறையேதோனறும்,—தன்னின் - அதுவேயுமன்றி யவ்வாகாயத்தினின்றும்,— மேகசாலசத்தங்களோடு

ம் - பலமுகில்களு முகிலினகட் பலவிகாரங்களும் பலவோசை களோடும்,—உருவமினனுறுமேறெல்லா முதித்திடும் - உருவமாகிய பலமினனுக்களும, பலவிடிகளும், இனனும இவைபோல் வனதோனறுமாகலான,—உணாந்துகொளளே- அதனைமறந்த நீயெனங்கூறுத லுனககே வழுவாய்முடியு மெனபதனை யறிவாயாகவெனபதாம.

இதனானே மாயாவாதி மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்த மேலது வலியுறுததபபட்டது

☞ க - சூத்திரம, க - அதிகரண முடிந்தது

---

## மறைஞானதேசிகர் உரை.



அவிகாரமாகிய மாயையினின்றும் விகாரமாகிய பரபஞ்சந தானுகத தோறறவறறேயெனில்? ஒருகாததாவா லுணடாமெனபதற்குதாரணமிட் டுணர்த்து கிருர்.

மண்ணினிற கடாதியெல்லாம் வருவது குலாலனாலே, பெண்ணிய வுருவமெல்லா மியற்றுவா னீசனாறுங், கண்ணுகா ரியஙகளெல்லாங காரண மதனிற காணபன், பணணுவ தெஙகேஙின் மிங கெனறிடிற பகரககேணீ. (உக)

(இ-ள்) மண்ணி னிற் கடாதியெல்லாம்வருவது குலாலனாலே - பூமியின் கண் மண்ணின் விகாரமாகிய கடாதிகாரியஙகளெல்லாங் குலாலனாலாக்கப்படு மதுபோல

எண்ணிய வுருவமெல்லா மியற்றுவா னீசனுமம — சிவன் குலாலனைப்போலக் கரண சிருட்டியினறிச் சங்கற்பமாத்திரத்திலே மாயையினிடத்துத் தனுவாதிகளை யுண்டாக்காநிற்பன

கண்ணுகாரியங்களெல்லாங் காரண மதனிற்காணபன — தான் கருதப்பட்ட சகத்திலுண்டாகிய காரியங்களெல்லாதனையுந் தத்தங்காரணங்களிலே நின்றுதிப்பிப்பன

பண்ணுவதெங்கேநின்றிங் கென்றிடிற் பகரக்கேண் — உமது கர்த்தாவோ அகண்ட பரிபூரணனாயிருக்கிறவன, எவவிடத்தே யெந்தவடிவை யெடுத்துக்கொண்டு நின்று பண்ணினுனென்று கேட்கிறுயாகில்? யாமதனை விளங்கச சொல்வாம,அதனைககேட்பாயாக எ-று.

இதற்கு நிச்சுவாசமும் பௌஷ்கரமு மெனவறிக (உக)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் விரித்தபொருளைத தொகுத்துரைத்தல்.

மணணினிற கடாதியெல்லாம் வருவதுகுலாலனுலே யெண்ணியவுருவமெல்லா மியற்றுவனீசனுனும் - பூமியினிடத்தின மிருத்துகடமுதலான பாண்டங்களெல்லாங் குலாலனு லுண்டாம், அப்படிபோல பூசர்தேவமனுஷிய தேகாதிடவயவங்களாகபபணணபபட்ட பிரபஞ்சமெல்லா மீஸ்வரனுண்டாக்குவன் எங்கனெனின?—கண்ணுகாரியங்களெல்லாங் காரணமதனிற்காணபன - கருதப்பட்ட காரியங்களெல்லாங் காரணங்களிலுண்டாக்குவன.— பணணுவதெங்கேநின்றிங் கென்றிடித்

பகரக்கேணீ - இப்பிரபஞ்சத்தை யுண்டாக்கும்பொழுது கர்த்தா வெங்கேநின் றுண்டாக்குவனெனின் சொல்லக்கேளென் றிதனபொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

திருஷ்டாந்தமுனனுகச் சிவனகிருத்தியம பண்ணுமுறை மையறிவிககின்றா.

மண்ணினின - மிருக்கின்றடத்தினின்றும்,— கடாதியெல்லாம - கும்பகலசமுதலிய காரியங்களெல்லாம்,—குலாலனுலே வருவது - மண்மகனுலுண்டாவது, அப்படி,—ஈசனுனும்-சிவனும்,—எண்ணிபவுருவமெல்லா மியற்றுவன - நினைத்தகாரியங்களெல்லாம நிருமிப்பன. முதற் காரணமின்றி முடிப்பானோ வெனில்? சர்வசாமாத்தியமிருந்தாலு மது கூடாது பினனெப்படியெனனில்?—கண்ணுகாரியங்களெல்லாங் காரணமதனிற்காண்பன-நினைத்த காரியங்களெல்லாம முதற்காரணமாகிய மாயையினின்று முண்டாக்குவன —குலாலன பூமி யாதாரமாக நின்று கடாதிகாரியம் பண்ணக்கண்டோமே,—ஈசனுனும் எங்கே நின்றுபண்ணுவ தெனறிடில்,—பகரக்கேணீ - சொல்லுவாம் நீகேள

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

இவ்வாறு, உதிப்பதுமீறும், எனபது முதல் 'அருவுரு' என்பதீருகிய இருபத்தேழு செய்யுளானும், முதற்செய்யுளின் 'ஒருவனே டொருத்தியென்றெனு றுரைத்திடுமுலகமெல்லாம் வருமுறை வந்துநின்று போவதுமாதலாலே தருபவனொருவன வே

ண்டும' என்ற முதற்கூற்றை, முறையே அவ்வவர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்துவலியுறுத்தி; இனி 'ஈறுமாகி யநாதி முத்த சித்துருவாய் மன்னிநின்று மருவுவித்திடும, என்னும் இரண்டாங் கூற்றை அவ்வாறுவலியுறுத்துவானெடுக்கின்றார்.

இங்ஙனம அகிலமெல்லாம ஆரியன் குலாலனைபோலின்று ஆக்குவனாயின, குலாலன கடாதி காரியங்களையெல்லாம் அவற்றிற்குக காரணமாகிய அகநிலத்தினின்றுஞ் செய்யக் கண்டோமே! ஆரியன் யாங்ஙனநின்று செய்வனெனபதாம.

மண்ணினிற் கடாதிபெல்லாம வருவது குலாலனாலேயெண்ணியவருவமெல்லா மியற்றுவ னீசனாலும என்றது அநுவாதம்

ஆயின எனபது சொல்லெச்சம்.

காரணம என்றது நிலமெனனுந் துணையாய்நின்றது.

காணடல் செய்தல்.

நின்றெனபது மேலுங் கூட்டப்பட்டது.

இதனின இதற்குப பிறரெல்லாங் கூறியதுகூறலென்னும் வழுப்படவுரைத்தார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

புத்தன் மாயையிலே நின்றும் உம்முடைய கத்தாவாலே பிரபஞ்சமுண்டாகிறபடி எப்படியென்ன மேலருளிச் செய்கிறார்.

மண்ணினிற்கடாதியெல்லாம் வருவதுகுலாலனாலே-மண்ணினி லுண்டான கடாதிகளெல்லாங் குலாலனாலே யுண்டாகிற முறைமைபோல,—எண்ணிய வுருவமெல்லா மியற்றுவ னீசன்றானும் - முன்சொல்லப்பட்ட எண்ணிறந்த வடிவுகளெல்லா

வற்றையுங் கத்தா அநத மாயையைக்கொண்டே யுண்டாக்கா நிற்பன,—கண்ணுகாரியங்களெல்லாங் காரண மதனிற்காண்பன - கருதப்பட்ட காரியங்களெல்லாவற்றையுங் காரணத்திலே யுண்டாக்காநிற்பன,—பண்ணுவ தெங்கேநின்றிங்கு - இந்தப் பிரபஞ்சத்தை உம்முடைய கத்தாவானவன் எவ்விடத்திலேநின் றுண்டாக்கினன்,— என்றிடிற்பகரக்கேண் - என்று கேட்பாயாகில் நாமசொல்ல நீ கேட்பாயாக.

இதற்குப் பிரமாணம் பரபட்சம அவனமதம் "உள்ளது கடாதிபோல வுதிப்பித்தா னென்றுரைக்கின, மெள்ளவேயெங்குநின்று விதித்தனனுலகிலமீது, வள்ளறானினறெனனில் வந்ததாமுலக முன்னே, தள்ளிடாதெங்குநிற்கி லெங்குமுன றந்ததாமே". என்னுமதுங் கண்டுகொள்க.

சி.த - பர - பௌத - சௌ, உஉ - செ.

இதனாற் சொல்லியது குலாலன மண்ணிலே நின்று கடாதிகளை யுண்டாக்குகிற முறைமைபோல, கத்தாவு மாயையாகிய காரணத்திலேநின்றும எண்ணிறந்த வடிவுகளாயுள்ள பிரபஞ்ச காரியங்களை யுண்டாக்குவனென்றும, இப்படி யுண்டாக்கு மிடத்து எங்கேநின் றுண்டாக்குவனென்று கேட்டவனைப் பார்த்து மேல்சொல்லுகிறோம் கேட்பாயாகவென றருளிச்செய்த முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

இவ்வாறு 'உதிம்பதுமீறும்' என்பதுமுதல் அருவுரு என்பதீறாகிய விருபத்தேழு செய்யுளானு முதற் செய்யுளின 'ஒருவனொடொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம வரு

முறைவந்துநின்று போவதுமாதலாலே தருபவ னொருவன்வே ண்டும்,என்ற முதற்கூற்றை முறையே அவ்வவர் மதம்பற்றி யா சங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தி,இனி, ஈறுமாகி யாதிமுத்த சித்துருவாய் மன்னிநின்று மருவுவித்திடும்' என்னு மிரண்டாங் கூற்றை யவ்வாறு வலியுறுத்துவானெடுக்கின்றார்.

குலாலனாலே - குயவனாலே,—மண்ணினிற்கடாதியெல்லா ம்வருவது - மண்ணினிற்கடமுதலிய காரியமனைத்தும் வருதல் போல,—ஈசன - அரியனும்,—எண்ணியவுருவமெல்லா மியற்று வன - அகிலமெல்லாவற்றையு மாக்குவனாயின்,— தானுங்கண் ணு காரியங்களெல்லாம - குயவனுருவங் கருதியகடாதி காரி யங்களையெல்லாம்,— காரணமதனிற்காணபன - அவற்றிற்கு க்காரணமாகிய வகிலத்தினின்றுஞ் செய்யக்கண்டோமே. அ துபோல,—இங்கு-அரிபணிவவிட்டது,—எங்கேநின்று பண்ணு வது - யாங்கணின்றுசெய்வன,—என்றிதற்பகரக்கேணீ - எ ன்ற விருவிற்கு'விடை மேற் கூறப்படுதலி னீயறிவாயாக வெ ன்பதாம.

---

## மறைஞானதேசிகர் உரை.



சாங்கியன் உமது கர்த்தாவுக்கு வடிவில்லையென்றீர், அவ னொருதொழில் யெப்படி யியற்றுவனென்று சொல்ல; அதற்குத் திட்டாந்த பூர் வமாக வுணர்த்துகிறார்.

சீலமோ வுலகம்போலத் தெரிப்பரி தத்தனிற் குங், கோலமு மறிவாரில்லை யாயினுங் கூறக்கேணீ, ஞாலமே ழினையுந்தந்து நிறுத்திப்பின் னாசம்பண்

னுய, காலமே போலக்கொண்ணீ யச்செயல் கடவுட்க ணேணே. (ந0)

(இ-ள்) சீரோமோ வுலகம்போலத் தெரிப்பரிது — அநேகக் கர்த்தாவினுடைய சுபாவத்தை விசாரிக்குமிடத்து மூர்த்த மாகையாலும் செயல் காணப்படாதபடியாலும் இன்னபடியென்று நாவிட்டுச் சொல்லுதற்கரிது;

அதனுநிற்குங் கோலமு மறிவாரில்லை — ஆதலா லவனது சொரூபத்தையு மவனிற்கு நிலைமையினையு மொருவராலு மநாவிட்டுச் சொல்லுதற் கரிது;

ஆயினுங் கூறக்கேணீ — ஆனாலு மவனது நிலைமையை யாஞ்சொல்வாம், அதனைக் கேட்பாயாக

ஞாலமே ழினையுந் தந்து நிறுத்திப்பின் ஞசமபண்ணுங் காலமே போலக்கொணணீ யச்செயல் கடவுட் கணணே — பூலோகம் புவலோகம் சுவலோகம் மகாலோகம் சனலோகம் தபோலோகம் சத்தியலோகமெனக் கூறிய வேழுலோகங்களையுஞ் சிருட்டித்தும் திதித்தும் சங்கரித்துஞ் செய்கை கூடிநிற்கிற காலமெப்படி வடிவறநின்றும் எப்படிப் பலத்தைக்கொடுக்குது, அதுபோலச் சிவனும் மூர்த்தனாயினு மனதிச்சாசத்தியாலே சகத்தைப் பண்ணுநிற்பன

ஞால மேழினையும் என்ற உம்மையால் அகலவிடலை முற்றிய வேழினையு மெனவறிக.

ஒகார மெதிர்மறை.

உம்மை எதிரது தழீஇய வெச்சவும்மை.

ஏகாரம் ஈற்றசை.

இதற்குக் கிரணகம மெனவறிக. (கூ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் கர்த்தாவினுடைய நிலைசகுஞ் செயற்கு முதாரண முரைத்தல்.

சிலமோவுலகட்போலத் தெரிப்பரித்தனுவிற்குங் கோல மூமறிவாரி ல்லை-பரமேஸ்வரனுடைய சரித்திர முலோகத்திலுண் டாகிய பிரமாதிதேவாகளைப்போலத் தெரிப்பரிது, அதனாலப் பரமேஸ்வரனுடைய நிலைபெற்றஸ்வரூபத்தையும் நிற்குநிலையை யும் ஒருவராலு மறியப்போகாது,—ஆயினுமக்கூறகக்கேணி - அப் படி பிரத்தியக்ஷமாகக் காணப்படாதாயினும் திட்டாந்தத்தி னாற் சொல்லுகிறோம் நீ கேள்,—ஞாலமேழினையுந்தந்து நிறுத் திப் பின்னுசம் பண்ணுங் காலமே போலக் கொண்ணீ - எழுவ கைப் பிறப்பினுகிய ஜந்துக்க ணிறைந்த பூலோகமுதலிய ஏழு பிரபஞ்சத்தை யுண்டாக்கி நிலைபெறுவித் தழிக்குங் காலமே போல, சிவனு மருபமுமாய் வியாபியுமாய்நின்று பண்ணுவனெ ன்று நீயறிந்துகொள்,—நிலைசெயல் கடவுட்கண்ணே - சிவனே சர்வாதாரமுமாயிருக்கச் சாவமுஞ் சிவனிடத்திலேயே நிலைபெ றுமெனறிதனபொருள்.

கடவுட்கண்ணே யென்னும்ஏகாரத்தினுற் சிவனிடத்தி லெல்லா மிருப்பதனறிச் சிவனுக்கோ ராதாரமில்லை யென்றது.

ததுக்தம் ஸ்ரீம்ருகேந்த்ரே. யதா காலோ ஹ்ருதே
தேசாதி த்ருஷ்டே ஸமவாயக: | ஏவம் சிவோ
ஹ்ருதே தேசாதி காரணே காயஸ்தூயா||ஸமவா
யாரப்தாயார இதி.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

கர்த்தா நிற்கும் நிலைமையை நிர்வசனிக்கின்றார்.

சிலமோ வுலகம்போலத் தெரிப்பரிது - பரமேசுவரனுடைய சரித்திரம் உலகத்திலுண்டாகிய பிரமாதி தேவர்களுக்குப் போலச் சொல்லுவது துல்லபம், அமூர்த்தமாகையால்,—அதனு விற்குங் கோலமுமறிவாரில்லை -ஆகையால், இந்தப்பரமேச்வரனுடைய சகளவிக்கிரக தடத்தலக்ஷணத்தையுங் காண்பாரில்லை, ஸ்வரூபலக்ஷணந்தானென்பது சொல்லவேண்டுமோ!—ஆயினுங் கூறக்கேணீ-அப்படியிருந்தாலுஞ் சொல்லுகிறோம் நீங்கள்,—ஞாலமேழினையுந் தந்து நிறுத்திய விநாசம் பண்ணுங் காலமேபோல - தாத்துவிக சகலபிரபஞ்சத்தையுந் தோற்றுவித்து நிறபித்துப்போக்கும், அமூர்த்தமாய், அப்பிரத்தியட்சமாய், நிராதாரமா யிருக்கும் காலமேபோல,—கடவுட்கண்ணே - காரியம்பண்ணும் சிவனிடத்திலே,—நிலைசெயல் கொளணீ - நிராகரமாய்நிற்கு முறைமையுஞ் சங்கற்பமாத்திர சன்னிதானத்தாற் கிர்த்தியம் நிகழுந் முறைமையுங் காண்பாயாக.

அப்போ காலத்துக்குப்போற் புத்திமற் கர்த்திருத்துவம் பொருந்துவதின்றென்னின்? அப்படிச்சொல்லவேண்டாம். காலமென்பது அமூர்த்தமாய் ஸ்வதேகத் தசைவுபண்ணும் ஆன்மாவைப்போலவென்று போதிப்பது.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

அவன் உலகம்போலன்றி வாக்குமனாதீத கோசரப்பொருளாகலான், அவனிற்கு நிலையும் அயலியல்பிற்றேயாம்; அங்

ணமாயினும், ஒருவாற்று னுவமையில் வைத்து உனக்குக் காட்டுதும். உலகமெல்லாங் காலத்தாற் காரியப்படுமென்பது எல்லார்க்கு மொக்குமன்றே, அக்காலம் அவற்றைக் காரியப்படுத்துங்கால் எல்லாபொருட்குந் தா னாதாரமாய்த் தனக்கோராதாரமின்றி நிற்றல்போல, சிவசத்தியும் நிராதாரமாய் நின்றே காரியப்படுத்துமுறைமை உணர்ந்துகொள்க வென்பதாம்.

சீலம் தன்மை.

ஓகாரம் சிறப்பின்கண் வந்தது.

சோலமுமென்ற உம்மைஇறந்தது தழீஇயற்று.

ஞாலமேழினையு மென்றது உபலக்கணம்.

கண் அறிவு

ஒற்றுமைபற்றிச் சிவசத்திமேல் வைத்துக் கூறினார்.

உயாதிணைக்கட் சிறுபான்மை ளகாரந் திரிதல், மக்கட் பண்பு முதலியனபோல இலேசாற் கொள்க.

நிலைசெயலென்பது நிற்றலெனனும் பொருட்டாய் இரண்டாவது தொகக்குநின்றது அற்றேல் ஞாலமேழினையுந் தந்து நிறுத்திப்பின் னாசம்பண்ணுங் காலம், அதுதொழில் வேறுபாடு பற்றிச் செல்காலம் நிகழுகாலம் எதிர்காலங் கணம் இலவங் துடியென்றற் றொடக்கத்தனவாயப் பலவகை யவதைப்படுமென்பது சித்தாந்த நூற் றுணிபாகலின், அதுபோல உலகத்திற்காதாரமாய் நின்றுசெய்யு முதல்வனும் அவ்வதொழில்பற்றிப் பலவகையவைத்தப்பட்டுத் துடக்குறுவனபொலு மெனின்? அதற்கன்றே வருஞ் செய்யு ளெழுந்ததென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

கர்த்தாவினுடைய வுண்மை பிரவஞ்சத்தின முறைமைபோலச் சொல்லுதற் கரியதெனகிரமுறைமையை மேலருளிச்செய்கிறார்.

நிலமேயுலகம்போலத் தெரிப்பரிது - அந்தக் கர்த்தாவினுடைய சுபாவம் பிரபஞ்சத்தை யிதுவென் றறுதியிட்டுச் சொல்லுதற் கெளிதல்ல,— அதனால் நிராகுல கோலமு மறிவாரில்லை - அப்படியிருக்கையினாலே அவனுடைய நிலைபெற்ற சொரூபமும் ஒருவ ராலறியப்படாது,— ஆயினுங் கூறக்கேளீர் - ஆனாலுஞ் சொல்ல நீ கேட்பாயாக,— ஞாலமேழினையுந் தந்து நிறுத்திப் பின்னுஞ்சமய மனுங் காலமேபோலக்கொள்நீ நிலைசெயல் கடவுட்கண்ணே - ஏழென்று சொல்லப்பட்ட உலகங்களை சிருட்டித்தும் திதித்தும் சங்கரித்துஞ் செய்கைக்குக் கூடிநிற்கிற காலங்களினுண்மைபோல், கர்த்தாவினுடைய வாக்கினையினது நிலையும் அவனுடைய நிரதிசயங்களையும் புத்தி பண்ணுவாயாக.

இதற்குப் பிரமாணம் பரபக்கம், அவனை மறுப்பு "காரியமா யுலகமெலா மிருத்தலாலே கடாதிகள்போற் காரியகர்த்தாவொருவன்வேண்டு, மாரியமா யறபொருளோ டின்பம்வீ டெல்லா மறைந்துயிர்கட் கறிவுசெயலளிப்பது நூலந்நூல், கூரியராயுள்ளோர்க ளோதவோதிக் கொண்டுவரலான முன்னே குற்றமின்றிச், சீரியபே ரறிவுடையோன் செப்பவேண்டுஞ் செயலின்றுச் சரிவேண்டுஞ் சிவஞானமென்றறியே". என்னுமதுங் கண்டுகொள்க.

சித-பர-சௌ-மறு, ௬௪-௭

இதனால் சொல்லியது கர்த்தாவினுண்மை பிரபஞ்சத்திலுள்ள முறைமைபோல அறிதற் கெளிதல்லவென்றும், ஆயினுஞ் சொல்லுமிடத்தில் உலகங்களெல்லாந் தோன்றுகைக்கும் நிற்கைக்கும் ஒடுங்குகைக்குங் கூடிநிற்கிற காலங்களின் முறைமை போலத் தன்னுடைய வாக்கினையாலே எல்லாக் கிருத்தியங்களையுஞ் செய்வன் என்கிற முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—௧—

சிலமோவுலகம்போலத் தெரிப்பரிதருளல் - அவனறனை யுலகம்போலன்றி வாக்குமனாதீதகோசரப்பொருளாகலான, — நிற்குங்கோலமு மறிவாறில்லை - அவனிற்குநிலையு மவ்வியல்பிற் றேயாம், — ஆயினுங்கூறக்கேணீ - அங்ஙனமாயினு மொருவாற்று னுவமையில வைத்து உனக்குக்காட்டுதும், — ஞாலமேழினையுந்தந்து நிறுத்திப்பின்னுஞ் சம்பவிக்கும் காலமேபோல - உலகமெல்லாங் காலத்தாற் றோன்றி நின்று மழிந்துங் காரியப்படுமென டெல்லோர்க்கு மொசக்குமன்றே அக்காலமவற்றைக் காரியபடுத்துங்கா லெல்லாப்பொருட்குந் தானே ஆதாரமாய்த் தனக்கோராதாரமின்றி நிற்றல்போல, — கடவுட்கண் - சிவசத்தி, — நிலைசெயல்கொண்ணீ - நிராதாரமாய் நின்றே காரியப்படுத்து முறைமை யுணர்ந்துகொள்க வென்பதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.



அசரீரியுமாய் நிர்விகாரியுமுமா யிருக்கிற சிவன் சி
ருட்டியாதிகளைச் செய்யுமதற்குத் திட்டாந்த
பூர்வமா யவனைமறுத் துணர்த்துகிறார்

கற்றநூற் பொருளுஞ்சொல்லுங் கருத்தினி லடங்கித்தோன்றும், பெற்றியுஞ் சாகராதி யுயிரினிற் பிறந்தொடுக்க, முற்றதும் போலவெல்லா வுலகமு முதித்தொடுக்கப், பற்றொடு பற்றதின்றி நின்றனன் பரனுமன்றே. (கக)

| | |
|---|---|
| (இ-ள்.) கற்றநூ<br>ற் பொரு<br>ளுஞ்சொல்<br>லுங் கருத்தினி<br>லடங்கித்தோன<br>றும் பெற்றியும | யாதாமொருவன் கற்கப்பட்ட வேதாக<br>மங்களின சத்தமர்த்தமாகிய விரண்டினையு<br>ங் கற்றவன றிவிலே யிருந்து வருத்தமற<br>வவனிடத்திற்றோன்றி யொடுங்குமுறைமை<br>போலவும், |
| சாக்கிராதி யு<br>யிரினிற பிறந<br>தொடுக்க முற்ற<br>தும்போல | சாக்கிரமுதலிய வவத்தைகளைந்து மான்<br>மாவினிடத்தே ப்ரயாசமற வொடுங்கித்<br>தோன்றுகிற முறைமைபோலவும், |
| எல்லா வுலக<br>மு முகிழ்த்தொடு<br>ங்கப பற்றொடுப<br>ற்றின்றி நின்ற<br>னன பரனுமன<br>றே. | நிர்விகாரியான சிவனற்றன சன்னிதிமாத்<br>திரத்திலே யெல்லாப் பிரபஞ்சங்களையுந<br>தோற்றி யொடுக்கினனேயாயினுந் தானொரு<br>செயலுஞ் செய்யாது பணியற நிற்பன. எ-று. |

"அனறெனகிளவியு மின்றெனகிளவியு மாகுமென்ப."
இதற்கு விசுவாசோத்தர மெனவறிக. (௩௧)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———()———

எல்லாஞ் சிவனிடத்தில்நிற்ப தெவ்வாறெனின்.

கற்றனூற் பொருளுஞ்சொல்லுங் கருத்திலிலடங்கித்தோ னறும் பெற்றியும் - படிக்கப்பட்ட சாத்திரங்களிற் சத்தமுமர்த்தமும, நினைக்கும்போது தோன்றி யல்லாதநேரந் தோன்றாத முறைமைபோலவும்,—சாக்கிராதி யுயிரினிற்பிறந்தொடுக்க மு

ற்றதும்போல - சாக்கிராதியவத்தைகளிற் கருவிக ளான்மாவினிடத்திற் கூடிப் பிரிந்தொடுக்க முற்றதுபோலவும். [சாக்கிராதியென்ற தாகுபெயர்]—எல்லாவுலகமு முதித்தொடுங்கப் பற்றும்பற்றதின்றி நின்றானன பரனுமன்றே - பிரபஞ்சமெல்லாந் தோன்றிநின்றொடுங்கப் பிரபஞ்சத்திற் றனபற்றுதலின்றி, அதிற்பற்றிய வான்மாவினோடே தானநந்நியமாகப் பரனாநாதியே நின்றன னென்றிதன் பொருள்

கற்றனூற்பொருளுஞ் சொல்லுங் கருத்தினிலடங்கித்தோன்றல்போல வென்றது சிவன் பிரபஞ்சத்தையின்னபடி யுண்டாக்கவேண்டுமென்று நினைத்தபொழுதுண்டா யல்லாதபொழு தில்லையாதலுக்குத் திட்டாந்தம்.

சாக்கிராதி யுயிரினிற் பிறந்தொடுக்க முற்றதுபோலவென்றது சத்தா உதயத்தா பிரவிருத்த ரவசரங்களிற் சத்திகளபிவியத்தியானதற்கு மந்தர்க்கதமானதற்குந் திட்டாந்தம்

த்ருஷ்டாந்தம் தக்ஷ்வ்ருக்காம்ஸ — ஸத்யாவ்யாவ்ருத்தி ஹே ஊஹதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சிவசங்கற்பத்தான மாயையில் விகாரமாய்ச் சிவனுக்கு விகாரமின்றிப் பிரபஞ்சந்தோற்று முறைமையை விரிக்கின்றார்.

கற்றநூர்பொருளுஞ் சொல்லுங் கருத்தினிலடங்கித்தோன்றும் பெற்றியும்-முன்படித்துப் பழகிய சாத்திரச் சொல்லனுபூதி பொருளனுபூதிகள் புத்தியிற் கூட்டிய வாசனையொடுங்கிக்

கண்ணெழுத்திணையபு முதலிய காரணத்தில், திரும்ப அந்தவாசனை கிளம்பி மதியினினைவு வருவிக்க, நினைத்தவரு வுயிரா த்துணைவி மனத்தி லிசசிகக, சூசுருமைவாககிற் சொல் முனைதோற்ற, மதிமணிவிளக்கின மலர்ந்த சிற்சத்தியிற் சொல்லனுபூதி பொருளனுபூதிகள பின்றோற்றுமுறைமையுறா போல,—சாசகிருதி - சாககிரமுதலிய அவததைகளெந்தும்,—உயிரினிறபிரநதொடுக்க முற்றதுமபோல-அருவாகி நிமித்தகனாகிய வானமாவிற் பொருந்திய கருவிகளிற றமோகுணங் கிளமபிக்கிளமபி மௌளமௌள மேலிடமேலிடச சததுவகுணஞ் சற்றே சிறசத்தி மனச்சஙகற பதநோடு குனறிககுனறி மூவர் முறைமையிற றேற்றி, திரும்பத் தமோகுண சத்துவகுணங்களின தோற்றுதல் குறைதல் மாறிவர மறைநத்தும போல,— பரனு ர-சிவனும்,—எல்லாவுலகமு முதித்தொடுங்க - சகல காரிய பிரபஞ்சமுற்றும மாயையிற றேற்றியழிய, அந்தப் பிரபஞ்சத்தோடு,—அன்றே - அநாதியே,—பற்றொடு பற்றின்றி -தனது சத்தியாகிய சொரூப காரணத்தினது சத்திய சங்கறபத தொழிலாகிய சன்னிதிச் சொரூப சமட்டியாய் நின்று, கடத்தொடுதொடடுக்கைகொடுபிடித்த தண்டசக்கிராதி கடத்தினைசசார் ஞெருழிற் சம்பந்திபோற் சமபந்தியன்றி,— நின்றனன -வியாபித்திருப்பன

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

கரணங்களாகிய சாககிரமுதலிய வவத்தைகள் ஆன்மாவினொடுங்கித் தோனறும்வழி ஆனமாவும் அவத்தைப்படத் தடக்குறுதல்போல,முதல்வன எல்லாவுலகமுந் தனபாலொடுங்

கியுதிப்பத் தானுமதுபற்றி இலயம் போகம் அதிகாரமென்னும் அவத்தைப்படுத்த டக்குறுவோனுசியும், கற்றநூற்பொருளுஞ்சொல்லும் வாதனுரூபமாய்ப் புத்திதத்துவத்தை பொட்டின்று ஆன்மபோதத்தின்கண் ஒடுங்கித் தோன்றும்வழி அவ்வான்மபோதம் அதுபற்றித் தடக்குருதவாறுபோல, ஆண்டுத் தடக்குறுதலின்றியே நின்றனனென்பதாம்.

எதிராநிரனிறையாகக்கொள்க

ஈண்டுக் கருத்தென்றது உயிருணர்வை

பற்று முதனிலைத்தொழிற்பெயர்

இவைமூன்று செய்யுளானும மண்ணினினமேமருவிடு மென்றது தடைவிடைகளாற் றெரித்துணர்த்தப்பட்டது

இவைபற்றி இதனைமுன்வைத்தார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

நிருவிகாரியா யிருக்கிற கத்தா சிருட்டி திதி சங்காரமென்கிற மூன்று தொழிலையுஞ் செய்யுமிடத்து அவனுக்குப் பாரமாகாதோவென்ற ஆசீவகன சொல்ல, அவனை மறுத்து மேலருளிச் செய்கிறா

கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினி லடங்கித் தோன்றும் பெற்றியும்- கற்கப்பட்ட சாத்திரங்களிற் சத்தமுமர்த்தமுமிரண்டும ஆன்மாவினுடைய வறிவிலேயொடுங்கி யுண்டாகிற முறைமையும்,—சாக்கிராதி யுயிரினிற பிறங் தொடுக்கமுற்றதும்போல - சாக்கிரமுதலான அஞ்சவத்தைகளும் ஆன்மாவினிடத்திலே தோன்றியொடுங்குகிற முறைமைபோல,—எல்லாவுல

கமு முதித்தொடுங்கப் பற்றொடுபற்றதின்றி நின்றனன் பரனும் ன்றே - அந்தக் கர்த்தாவும் தன்னாலே எல்லாப் பிரபஞ்சமுந் தோன்றி யொடுங்குமபடி தான கூடிநிற்கயிலேயுந் தனக்கொரு பணியற்நின்ற முறைமை; ஆன்மாவினறிவிலே சத்தார்த்தங்க ளொடுங்கித் தோன்றுகையிலும் நினைவுமாத்திர மொழிந்து அந் தறிவுக்கொரு பாரமற்று நின்றாப்போலவும்,ஆன்மா அஞ்சவத் தைபபட்டு அவத்தை நீங்கி விழித்தவிடத்து அந்த வவத்தையி னுக்கு நினைவுமாத்திரம மெய்யாயப் பயனில்லையானாற் போலவு ம, கர்த்தாவும் சிருட்டி திதி சங்காரமென்கிற மூன்று தொ ழிலையுஞ்செய்கச செயதேயும அவனுக்குப பாரமறநின்ற முறை மையும இத்தனமையது

இதற்குப பிரமாணம சிவஞானபோதம "நோக்காது நோக்கி நொடித்ததன்றே காலத்திற், றாக்காது நின்றுள்ளத்திற் கண்டிறைவ-னாக்காதே, கண்டநனவுணவிற கண்டகனவுணர க், கண்டவனி லிற்றின்றுங் கட்டு" என்னுமது கண்டுகொள்க.

சிவ-போ, க - கூ, ச-செ

இதனாற் சொல்லியது, கர்த்தா சிருட்டி திதி சஙகாரமெ ன்கிற மூன்று தொழிலையுஞ் செய்யுமிடத்துத் தனக்கு பாரமற நின்று செய்வனென்னு முறைமை அறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

சாக்கிராதி - கரணங்களானாகிய சாக்கிரமுதலிய அவத் தைகள்,—உயிரினி லொடுக்கமுற்றும பிறந்ததும்போல - ஆன் மாவினொடுங்கித் தோன்றும்வழி யான்மாவுமவத்தைப்பட்டுத் தொடக்குறுதல்போல.—பரனும் - முதல்வனும்,— எல்லாவுலக

| | |
|---|---|
| செயிருறு மல த்திருக்கும் | குற்றத்தைப் பொருந்திய வாணவமலங் காரணமாக வுண்டாகாநிற்கும். |
| சிதைந்த தே தெனனில் | ஆறு லானமாக்களுக்கு மலங்களுக்கு ம ழிவில்லாதிருக்குமாயி னந்தச் சங்காரந்த னனிற் சங்காரப்பட்ட தேதென்று நீ சொ ல்லிலி லை? |
| சித்தத் தயர் வொழி காரியங் களழியு ம | ஆன்மாவினது ஞானக் கிரியைகளை சீவி பயிக்கின்ற காரியரூபங்களழியும் |
| காரணங் கிட க்கும | காரியத்தை யுண்டாக்கப்பட்ட காரண மழிடாது நிற்கும் |
| பயிறரு காரிய ம் பின் பண்டு போற் பண்ணுமீ சன. | அந்தக்காரணங் கிடக்கையாலே யந்தக கர்த்தா செய்யுந்தக்க காரியங்களை மீண்டு முனபுபோல சிருட்டிகளை யுண்டாக்காநிற டன. எ-று. (௯௨) |

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் ஜநககாரண முணர்த்துதல்.

உயிரவையொடுங்கிப் பினனுமுதிப்பதெ னரன்பாலெனனி ல் - ஆன்மாவானவைகள சாவசங்கார காலத்தி லன்னமயம் ப்ராணமயமனோமயமாகிய கோசத்திரயமுஞ சம்ஹாரத்தையு டைய விவையிரண்டைச் சம்ஹாரமபண்ணின அரனிடத்திலொ டுங்கின முத்த னென்று திரும்ப வுற்பத்தி சொல்லுங் கா ரண மேதெனின ?— செயிருறு மலத்திருக்கும் சிதைந்ததே

தெனின்-குற்றமாகியவாணவமலநீங்குவதே மோக்ஷம், மலநீங்காமற் றனுவாதியுபசம்ஹாரப்படுகையாற் சிவனுடன்கூடியிருந்தும் சிவானுபவம் விளங்காததற் காரணத்தினாற் புநருற்பத்தியாகவேண்டியது, ஆம்பொழுது கோசத்திரயமு நாசத்தையடைகையால் வெவ்வா றுண்டாமெனின்?—சித்தத் தயர்வொழிந்தாரியங்க ளழியுங்காரணங்கிடக்கும் - ஆணமாயினயாவெனனு மஞ்ஞானத்தை நீக்கு மாயாகாரியங்கெட்டுக் காரணமாகியமாயை சம்ஹாரகாலத்திலு நிற்குமாதலால்,—பயிர்ருகாரியமபின் பண்டுபோறபண்ணுமீசன - அம்மாயை கைக்கொண்டு பூர்வம்போலச் சங்காரத்திற்குப்பின்புந் தனுவாதி காரியங்களைப் பரமேஸ்வரன் பண்ணுவனென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சித்துக்கும் அசித்துக்கும் தோற்ற மொடுக்கஞ் சாத்திரஞ் சொல்லுமாகலான் மாயையிற் றோற்ற மொடுக்க முயிர்க்கு மதிக்கப்படாது, சித்துக்குச் சடத்தன்மை வாராதலாலே பாரிசேஷத்தாற் சிவனிடத்திற் செப்பவேண்டும், சிவனிடத்தொடுங்கினால் முத்தியடைந்து போகாமற் றிரும்பச் சித்துதிப்பானேனென் றாசங்கித்துப் பரிகரிக்கின்றார்.

உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பாலென்னில் - சிவனிடத்திற் சித்துக்குத்தோற்ற மொடுக்கம் பிரமத்தில் நாராயணப் பிரகிருதியிற் பரிணத வேதாந்தி பாஞ்சராத்ராத்திரிபோல, சித்தாந்திகள் செப்பார்கள். பின்னெப்படி?—செயிருறுமலத்திலுறும் - ஆன்மாக்களுக்குத் தோற்றமொடுக்கம் மாயையிற் கலாதித்தத்துவங்க டோற்றி யொடுங்கிக் கட்டவி

ட மோகமுற்ற மல மொருபிரதேசத்தில் நீங்க மறைக்க, அத னல் ஞானக்கிரியைகள் விளங்க மறைய உபசரிக்கப்படுமே விகா ரமின்றி, ஞானக்கிரியைகட்குக் கலையினால் விளங்குதல், மல த்தினுன மறைதல், சித்துக்கு ஜநந மரணம் சிவனிமித்த மா தலால் அரனபாலென றுபசரிக்கப்பட்டது சடத்துக்குச் சி வசங்கற்பத்தால் விகாரமாய்த் தனதுகாரண ரூபத்திற் காரி யரூப மறைதல், காரணரூப மறையக் காரியரூபம் விளங்குக ல், நாச முற்பத்தி, —சிதைந்த தேதெனனில் - ஆணவ முதலி ய மலங்களிருக்கிற சங்கரிக்கப்பட்ட தேதெனில்,—சித்துத்த யர்வொழி - மலசில மயக்கத்தைவிடு,—காரியங்களழியும்-காரி யப்பொருளொடுங்கும்,—காரணங் கிடக்கும் - முத றுணை நிமி த்தமெனகின்ற காரணத்திரய மிருக்கும் அதனால்,— பயிரு காரியங்களபின பணடுபோற் பண்ணுமீசன - சிவனிமித்தகார ணனாய் நின்று போசகபோக்கியங்களாக முனபழகிய காரியப் பொருள்களை முந்திய சிருட்டியிற் போல முதற்காரணத்தினி னறு துணைக்காரணத்தினுற் றோற்றுவிப்பன.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

இனி இறுசெய்யுளான் ஈறுமாகி மருவிடுமென்றதனை வலியு றுத்துகின்றார்

ஈறுசியோறு வீறெய்திய வுலகம் ஈறெய்தியவாறே யொழி யாது மீளவுமவனபானின்று தோன்றுதல் எற்றுக்கெனின ? மலபரிபாகம் வரும்பொருட்டுத் தோன்றும். அற்றேல், மீள வுந்தோன்றற்பாலது முன்னழியாது நிலைபெறவே யமையும். அவ்வாறன்றி அழித லெற்றுக்கெனின ? உயிரினிளைப்பு ஒழித்த

ற்பொருட்டு. முன் இளைப்பினைச் செய்துநின்ற காரியங்கள் அழியுமாகலான, அழிந்தவழியும் முனனை வினைததொடர்ச்சிக்குறிய வைாய்த த தகவ காரணங்களிற் கனமதத்தோடு பயினறு கிடகதினற அககாரியங்களை ஒடுங்கியவாறே உதிககச செய்வனென பதாம்.

ஆகக மவவவர் கனமமெல்லாங் கழிததிடல் என முனனர்க் கூறுவா ராகலின, அதற்குறியவிடைபு ரு ணடயுணர்த துவாா காரண மகிடககும பயிறருகாரியமபின பண்டுபோறபண்ணுமீசன என்ருர்.

உயிரவை உயிரோடுங் கூடிய உலகமென்றவாறு
ஏதெனபது எற்றுககெனனும் பொருட்டாய் நினறது.
சிததகததயர்வு அறிவினகணணதாகிய இளைப்பு
உழிபவெனனும் வினைபெசசததகரம் விகாரததாற்றெுக் கது
கிடக்குமென்பது பெயரெச்சம.
இதறகுப பிறரெல்லாஞ் சற்காரியத் தியல்பினவைதது க் கூறியதுகூறலெனனும் வழுப்படவுரைததாா.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

புத்தன உம்முடைய கர்ததாவினிடத்திலே யொடுங்கின ஆனமாககள மீளவுந் தோனறுவா னெனனெனறுசொல்ல, அவனைமறுத தருளிச் செய்கிருர்.

உயிரவையொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பாலென்னில் - கர்த்தாவினிடத்திலே யொடுங்கினவானமாக்கள் மீளவுந தோனறவேண்டுவானேனென்று நீ சொல்லில்,—செயிருறுமலத்தினுதும்-குற்றத்தைப் பொருநதினஆ ணவமலங் காரணதது

உண்டாகாநிற்கும், — சிதைந்ததேதெனின் - ஆன்மாக்களுக்கு மலங்களுக்கும் அழிவில்லையாயிருக்குமாகில் அந்தச் சங்காரத்தினால் சங்காரப்பட்டதேதென்று நீ சொல்லில், — சிந்தையாமொழி காரியங்களழியும் - ஆன்மாக்களுக்கு அநாதியே மறைப்பையுண்டாக்கி மடக்கிக்கொண்டு நிற்கிற ஆணவமலத்தின் சத்திகளை நீக்குகிற மாயையின் காரியமாகிய முப்பத்தொரு தத்துவங்களுமழியும், — காரணங் கிடக்கும் - அந்தக் காரியங்களையுண்டாக்கப்பட்ட காரணமாகிய மாயை கிடக்கும், — பயிருங்காரியமின் பண்டுபோற்றனுமீசன் - அந்தக் காரணமாகிய மாயைக் கிடக்கையினாலே அந்தக் கன்மங்களுக்கீடான தேகாதிப் பிரபஞ்சங்களைக் கர்த்தா மீளவும் முன்போலேயுண்டாக்குகிறவன்.

செயிருறு மலத்திலுள்ளென்று புகன்ற மறுத்தற்குப் பிரமாணம் சிவஞானபோதம் "இலயித்ததனி னிலயித்ததாமலத்தா லிலயித்தவாறுளதாவேண்டு-மிலயித்தத் தத்திதியிலெனி னழியாதவையழியது, சத்தியுமாதியுமாமங்கு" என்றும், பரபக்ஷம் "எப்பொருளு நித்தமென வியம்பினைநித்த மில்லதற்கோ வுளதற்கோ வுளதில்லதானதற்கோ, செப்பிடினிலதற்கில்லதென்றுமில்லை சென்றடைவதுள்ளதற்கே யுள்ளதென்றுமுண்டா, மப்படிகாணுளதிலதா மப்பொருளுக்கெனினுளதிலதாகா விலது முள்ளதாகா, திப்பொருளுக் கிறுதியிலை யென்றெனைக் காட்டா யெனிற்றோற்ற மும பொருணிலைநிற் கிறுதியாமே" என்னுமிது கண்டுகொள்க.

சிவ - போத - க - சூ, உ - செ.

சித் - பர - சௌ - மறு, கரு - செ.

இதனாற் சொல்லியது ஒடுங்கிய பிரபஞ்ச மலங்காரணமா யுண்டாமென்றும், ஆன்மாக்களுக்கு மறைத்தலுண்டானமையைப்

யை நீக்கின மாயாகாரிய மழியுமென்றும், மீளவு மாயா காரணத்திலேநின்றும் பிரபஞ்சத்தைக் கர்த்தா வுண்டாக்குவானென்னு முறைமையையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

ஈசன - ஈறாகியோருவன்.—ஒடுங்கியுயிரவை - ஈறெய்திய வுயிரோடுங்கூடியவுலகம் பின்னும் ஈறெய்தியவாறே யொழியாது மீளவும்,— அரன்பாலுதிப்ப தெனனெனில் - அரன்பாலின்று தோன்றுத லெற்றுக்கெனின்,—செயிர்று - குற்றமபொருந்திய,— மலத்திருக்கும் - மலபரிபாகம் வருதற்பொருட்டுந் தோன்றும்,—சிதைந்ததேதெனனில்-அற்றேல், மீளவுந் தோன்றற்பாலது முன்னழியாது நிலைபெறவேயமையும், அவ்வாறன்றி யழிந லெற்றுக்கெனின்?,—சிந்தத்தகுகாரொழிகாரியங்க ளழியும் - உயிரின் வினைபபொழித்தற் பொருட்டு முன்வினைப்பயனைச் செய்து நின்ற காரியங்க ளழியுமாகலான்,—காரணம்டயிருக்கும் - அழிந்த வழியு முன்னை வினைத்தொடர்ச்சிக் குரியனவாய்த் தத்துவகாரணங்களிற் கன்மத்தோடு டொன்றுகிடக்கின்,—கார்யப்பின் - அக்காரியங்களுடபினபு,—பண்டுபோற்பலனும் - ஒடுங்கியவாறே யுதிப்பச் செய்வனெனபதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.



பஞ்சராத்திரியுமது கர்த்தா கிருத்தியஞ் செய்யுமி
டத்து விகாரியாகாதோ வென்ன, அவிகாரியெ
ன்று திருட்டாந்தமிட் டுணர்த்துகிறார்.

தோற்றுவித் தளித்துப்பின்னுந் துடைத்தருள் டொ
ழில்கண்மூன்றும், போற்றவே யுடையனீசன் புகுந்த

து விகாரமென்னிற, சாற்றிய சுதிரோனிறகத் தாமரை யலருங்காந்தங், காற்றிடிய கனலைநீருங் காந்திடிய காசினிகக்கே. (௫௫)

(இ-ள்) தோற்றுவித்தளித்துப் பின்னுந் துடைத்தருளொழிலைமூன்றும் போற்றவே யுடையனீசன் — ஈசுரனே சிருட்டிமுதலிய மூன்று கிருத்தியங்களையுஞ் செய்தற்குரியனென்றெல்லாராலுங் கொண்டாடத்தக்க மகிமையையுடையன.

புகுந்தது விகாரமெனனில்? — விகாரியாவனென்று நீசொல்லில்? அவன் விகாரியல்ல, அவிகாரியே அஃதெனபோலவெனனில்?

சாற்றிய சுதிரோனிறகத் தாமரையலருங் காந்தங் காற்றிடிய கனலைநீருங் காந்திடிய காசினிகக்கே — இந்தப் பூமியினகணணே யவிகாரியாகியவாதித்தன சந்நிதியிலே சூரியகாந்தமணிவிடையுமிழாநிற்கின்றது, முகுளித மானமுளரியலராநின்றது, சலமானது மண்ணினகணணே சுவறிச் செலவாநின்றது, இந்தமுறையிலே காந்தா வவிகாரியாய்நின்று பரபஞ்சத்தை நடத்துவான் எ - று (௫௫)

உண்மை முற்றுமமை

இந்தத் திருப்பிரமாணம் விசுவசாரோத்தர மெனவறிக

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் சிவ னிர்விகாரியெனப துணர்த்துதல்.

தோற்றுவித்தளித்துப் பின்னுந் துடைத்தருடொழில்க ண்மூன்றும் போற்றவேயுடையனீசன புகுந்தது விகாரமென

யில் - சிருஷ்டி திதி சம்ஹாரமென்கிற மூன்றுகிருத்தியத்தையு மீஸ்வரன் பண்ணுவாராகில் அவனுக்கு விகாரமுண்டாயிற்றென்று சொல்லின,—காசினிக்கே சாற்றிபகதிரோனிற்கத் தாமரையலருங் காந்தங்கனலுமிழுங் கனலே நீருங்காந்திடும்-ஆதித்தனிரவிகாரியாய் நிற்க, விவ்வுலகினசட் டாமரையானது விகசிக்கும், சூரியகாந்தமான தக்கினையுமிழும், நீரானது சுவறிடும், இப்படிப்போலச் சிவனிரவிகாரியாய்நிற்கப் பிரபஞ்சநானாவிதமாக வவனசந்நிதிமாத்திரத்திற் காரியப்படுமெனவறிக

ததுக்தம் - யதார்கஸந்நிதௌ சோஷ்யாயாம் வஹ்நிமே ரூபகாருக்| ததா ஸந்நிதௌ தேந விகாஸ்யாத்வி வம் ஶிவ. ஐதி. கந்த்ராவி - யதாகுரஸ்ரீ ஸம்வ ஸங்ராக் பத்ம் பொடிய ஸஹாநகே - காமிவிக் வ் திமாஷ்யாதி ததாந் ந்ரானி நஜாதா விக்|ரா ஶ மெஷ மேஷா நவாகலேஸ் தமெஸ்ஸேஸ் நதளயத: ||

காரணையவருமென்றது- சங்கோசமாயிருக்கமாயை சிருஷ்டிகாலத்திற் றனுவாதிவிகாசமாதலுக்குத் திட்டாந்தம

காந்தமனலையுமிழுமென்றது- கன்மம ஸதிதி காலத்திற் பலோதயமாதலுக்குத் திட்டாந்தம

நீரைவறுமென்றது- சங்காரகாலத்திற் பிரபஞ்சமொடுங்குதற்குத் திட்டாந்தம.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

சிவன் கிருத்தியகிருத் தாலும் விகாரியல்லனென்று விளம்புகின்றார்.

தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தருள் தொழில்கள் மூன்றும்-சிருட்டி திதி சங்காரமென்கின்ற மூன்று கிருத்தியங்களையும், சொல்லாமல் சித்திக்கும் திரோபாவானுக்கிரகமென்கின்ற விரண்டு கிருத்தியங்களையும்,— ஈசன - சிவன,— போற்றவேயுடையன - பண்ணுதற்குரியன.—புருந்த துவிகாரமென்னில - குலாலாதிகளுக்குப் போல முன்னிருந்த முறைமைவிட்டு வேறொரு முறைமை யாகுதலாகிய விகாரிவந்ததெனில், அஃதில்லை,—சாற்றிய கதிரோனின் ரகத்தாமரையலரும காந்தங்காற்றிடு கனலை நீருங் கரந்திடு காசினிக்கே-உலகத்தினகண்ணே காரணமாகக் கற்பிக்கப்பட்ட சூரியன் முன்னின்ற முறைமையில் விகசிக்க கமலமலரும், சூரியகாந்தக் கல்லுந் தானும அசைவற்றிருந்து அக்கினியைக் கக்கும், காசினிக்கே யென வின்றுமெடுத்துப் பூமிக்குள்ளே நீருஞ்சுவறும

நீர்சொன்ன துபகருத்திட்டாந்தமன்று, சூரியனுக்குக் கமலமலரக்கடவது, காந்தங்கனலைக் கக்கக் கடவது, நீர் நிலத்திலே சுவறக்கடவது என்னுஞ் சங்கற்பமில்லை; காரியம் நிகழக்கண்டோம, இதுகொண்டு பூதங்காத்தா, பிரகிருதிகாத்தா, கன்மங்காத்தா, காலங்காத்தா என்கின்ற வாதங்கள் வந்தலாவ; புத்திமான் காத்தாவென்பது பொய்யாய்த் தூரம போயிற்று சத்திடம். நீசொல்லியது சூரியனுக்குக் கமனசங்கற்பத்தயாகுதிற்றற் கமலவிகாசாதி சங்கற்ப காரியமாமென்று காணுதலால் வேறுமாறில்லை

கடகாரியம் நிருமித்தலிலே குலாலனுக்கு விகாரமுண்டென்றீர், சகத்காரிய நிருமித்தலிலே சிவனுக்கு விகாரமில்லையென்றீர், சேதனப்பொருளாக விரண்டி லொன்றி லுமக்கு பட்சபாதமேன்? சத்தியமே நீசொன்னது. கடவிகிர்தியிலே குலா

லதூல சரீர விகிர்தி காரணம், குலால தூலசரீர விகிர்தியிலே குலாலஞ் சூக்கும சரீரவிகிர்தி காரணம், குலாலசூக்கும சரீரவிகிர்தியிலே விகிர்தியில்லாத குலால சிற்சத்தி யசலசங்கற்பமே காரணம். அவ்விடத்தும் விகிர்தியில் விகிர்தியுள்ள பொருள் காரணமென்னில் அநவஸ்தைவரும். குலாலதூல சூக்கும சரீரவிகிர்தித் துவாரத்திலேயே குலாலனுக்கு விகிர்தி சொன்னோம், சடசாக்ஷாத்சத்தி சரீரத்தில்லையென்பதே பரமார்த்தம்.

சிருஷ்டியாவது சாத்துவிக குணாதிகத்தாற் கர்த்திரு சங்கற்பத்தால் முதற்காரணத்திற் காரியப்பொருள் வெளியாதல்.

திதியாவது ராசத குணாதிகத்தாற் றோற்றிய அந்தந்தப் பொருள் அந்தந்தத்தொழிலி லமைந்து முதற்காரணம் பற்றாக நிற்றல்.

சங்காரமாவது தாமதகுணாதிக்கத்தாற் றனது தனது தொழில்களை விட்டு முதற்காரணத்தில் முழுகிமறைதல்.

திரோபாவமாவது மிகுதியும் நிந்திதமாகியபோகப்பொருளினு மிது நன்றென்று நழுவாதிருத்தல்.

அநுக்கிரகமாவது பாசநீக்கி சிவத்துவ விளக்கமென வறிக.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

ஒருகடவுண் மூன்று தொழி லிடையறாது செய்வானாயிற் பாரமெய்தி விகாரியாவான்போலுமென்பார்க்கு, அஃதில்லையென்பது; தனக்குரிய முத்தொழில் செய்யுமதுபற்றி விகாரமெய்தாத ஞாயிற்றினை வைத்து அறியப்படுமென்பதாம்.

காசினிக்கென்பது உருபுமயக்கம்.

இவையிரண்டு செய்யுளானும் புத்தர்மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்த தாறுமாகி மருவுவித்திடுமாறு வலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—௧—

பஞ்சராத்திரி இந்தக் கிருத்தியங்களை உம்முடைய கர்த்தா செய்யுமிடத்து விகாரியாகாரோ வென்றுசொல்ல, அவனை மறுத்தருளிச்செய்கிறார்.

சோற்றுவித்தளித்துப் பின்னுந் துடைத்தருள் தொழில்கண்மூன்றும் போற்றவே யுடையனீசன்-பிரபஞ்சத்தைச் சிருட்டித்துந் திதித்துஞ் சங்கரித்துஞ் செய்கிற விந்தக் கிருத்தியங்கள் மூன்றும் நீ சொல்லுகிறதாக உம்முடைய கர்த்தாவுக்கு அநாதியே யுண்டாயிருக்கில்,—புருடத்து விகாரமெனின்-ஆன்மாக்களைப்போலே கர்த்தாவுக்கும் விகாரமுண்டானதென்று நீ சொல்லில்? இந்தத் தொழில்களைச் செய்கைச்செய்தேயும் விகாரங்களிலகப்பட்டால், அதெனைப்போல வெனின்?—சாற்றிய கதிரோனிற்கத் தாமரையலருங் காந்தங்காற்றிடுமக் கனலைநீருங் காந்திடுங்காசினிக்கே - சொல்லப்பட்ட ஆதித்தன் சன்னதியிலே தாமரையானது அலராநிற்கவும், சூரியகாந்தக் கல்லானது அக்கினியை யுமிழாநிற்கவும், சலமானது சுவறாநிற்கவும், இந்தப் பூமியிலே மூன்று தொழிலும் ஆதித்தனாலே தொழிற்படுகைச் செய்தேயும் ஆதித்தனுக்கு விகாரமில்லாதிருந்தாற்போல; கர்த்தாவும் முன்சொல்லப்பட்ட கிருத்தியங்களைச் செய்கைச் செய்தேயும் விகாரமற்றிருப்பன.

இந்தக் கிருத்தியங்களைச் செய்கச்செய்தேயும் கர்த்தாவுக்கு விகாரமில்லை யென்பதற்குப் பிரமாணம். திருவண்டப்பகுதி, "படைப்போற்படைக்கும் பழையோன்படைத்தவை- காப்போற்காக்குங் கடவுள்காப்பவை-கரப்போன்கரப்பவை கருதாக-கருத்துடைக்கடவுள்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது கர்த்தா சிருட்டி திதி சங்காரமென்கிற மூன்று கிருத்தியங்களையுஞ் செய்கைச்செய்தேயும் விகாரமற்று நிற்பனென்னு முறைமை அறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

ஈசன் - ஒருகடவுள்,—தோற்றுவித்த் தளித்துப் பின்னுந் துடைத்தருந் தொழில்கண் மூன்றும் - தோன்றச்செய்து நிலைபெறுத்துப் பின்னு மிறுதியைச்செய்விக்கின்ற விம்முத்தொழிலும்,— போற்றவேயுடையன் - இடையறாது செய்வானா யின்,—புகுந்து விகாரமெனின் - பாரமெய்தி விகாரியாவான் போலுமென்பார்க் கஃதில்லையென்பது,— சார்த்திபகதிரோனிற்க - யாவரானும் புகழப்படுகின்ற ஞாயிற்றின் சந்நிதிக்கண்,— காந்தங்களைக்காற்றிடும் - சூரியகாந்தக் கல்லினங்கள் நெருப்பைக்காலச்செய்தலும்,—தாமரைபலரும் - தாமரையலரச் செய்தலும்,—காசினிக்கு - பூமியின்கண்,—நீருங்காந்திடும் - நீரைக்காந்திடச் செய்தலுமாகிய தனக்குரியமுத்தொழில்செய்தும் அதுபற்றி விகாரமெய்தாத ஞாயிற்றினைத் தறியப் படுமென்பதாம்.

இவை யிரண்டு செய்யுளானும் புத்கர்மகம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து ஈறுமாகி மருவிவித்திடுமாறு வலியுறுத்தப் பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



இதுவுமது.

உரைத்தவித் தொழில்கண்மூன்று மூவருக் குல
கமோத, வரைத்தொரு வனுக்கேயாக்கி வைத்தது
கெனையெனில், விரைக்கம லத்தோன்மாலு மேவ
லான மேவினோர்கள், புரைத்ததி காரசத்தி புண்ணிய
னணையாலே. (௧௪)

(இ-ள்) உரைத்தவித் தொழில்கண் மூன்று மூவருக் குலகமோத வரைத்தொருவனுக் கேயாக்கி வைத்ததென்னையெனில்

ஞாதாக்கள் இத்தொழில்கண் மூன்று மூவருக்கு முரித்தென்று சொல்லச் சிவனுக்கே யிம்மூன்று வகைக் கிருத்தியமென்று வரை யறுத்துக் கூறியதென்னையென்று நீசொல் லுசிருயாகில்?

விரைக்கமலத் தோன்மாலு மேவலான மேவினோர்கள் புரைத்ததிகார சத்தி புண்ணிய னண்ணையாலே

மேலான சிவனுடைய வதிகாரசத்தி, பிரம விஷ்ணுக்களுக்கு அவனுடைய வேவலினாலே பொருந்தி யவரவர் கிருத்தியங்களைச் செய்வார்கள். எ - று.

அதிகாரசத்தியாவது, முக்குணன்மிகையாகிய வாமை பிரமாவை யதிட்டிக்கை, சேட்டை மாயனை யதிட்டித்துக் கிருத்தியங்களைச் செய்கை.

உம்மை எண

ஏகார மீற்றசை.

இதற்கு விசுவசாரோத்தரமும் வாய்விய சங்கிதையும சு வசசநதமு மெனவறிக. (௩௪)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் சிவனுடைய வேவலாற் பிரமவிஷ்ணுக்கள கிருததியங்களைப பணணுவாகளெனப துரைததல்.

உரைதத விநதொழில்களமூனறு மூவருக்குலகமோத வரைதவொருவனுககேயாககி வைபபதிங கெனனையெனனில் - சொல்லாநினற சிருட்டி திதி சஙகாரமெனனு மிமமூனறுகிருததியமும பிரமவிஷ்ணுருததிரா மூவர்கரு முலகததார் சொல்ல,பிரமாதிகளிககி யொருவறகே மூனறுகிருத்தியமு மிவவிடததுச சொல்லுவானேனெனின,—விளாககமலததோன மாலு மேவலால் மேவினோர்கள - கமலோறபவனும்விஷடுணுவும, [உமமையினுலுஞ சநநிதியோக விசிஷடதையினுலுங காலருத்திரனும் இமமூவரும்] சிரீகண்ட பரமேஸ்வரனுடைய வேவலினுலிநதொழில்களைப பொருநதினபேர்கள் அஃதெங்கனெனின,—புரைததிகாரசததி புண்ணியனணலாலே - புணணியனுகிய பரமேஸ்வரனுடைய வதிகாரசததியானது, பிரமாசிருட்டிக்கவும விஷ்ணுவிரக்ஷிககவுங் காலருததிரன சங்கரிக்கவும பொருந்துகையலே,‡ அயோதஹத்தியென் ருற்போல சிவசததி யிவர்களை யதிட்டித்துசசெய்கையா லிவர்களே செய்ததெனப்பெறும். இப்பிரமாதிகளும் பதிபதார்த்தத்தி லந்தர்ப்பாவமெனவுமறிக. சிருஷ்டிகாலத்திற் ஸ்ரீகண்டபரமேஸ்வரர்

பிரகிருதியிற் சூக்குமசிருட்டியைத் தாமுண்டாக்கித் தூலசிருட்டியாதிக்குத் தம் அதிகாரசத்தியைப் பிரமாதிகளிடத்தில் வைத்து, ஸ்தூலமாயிருக்கிற சிருட்டிஸ்திதி சங்காரங்களைப் பண்ணுவிப்பர்.

‡ இரும்பு சுடுகிறது.

ததுக்தம் ஸ்ருதிஸூக்திவசனானி — யதா ஜ்யா ஜ்வல ஸ்ருஷ்டா விஸ்புலிங்கா: பாவகோஷ்மிண: । ஸோஹமத்ர கார்யத்ரிஷ்டா கர்த்ருத்வம் தத்ரஸ்தைஸ்ஸ விநாஸ்திதே ॥

அல்லதூஉம், பிரமவிஷ்ணுக்கள் அதிகாரசத்திக்குத் தக்க புண்ணியத்தைப்பண்ணிப் பெற்றவர்களென்று முன்மையாக்கமாகச் சொல்லுவார்கள். அதற்கு வேதாகமங்களில் பலவிரோதமுண்டு. அஃதன்றியு மிச்சாத்திரத்திலும் 'நவந்தருபேதமேக நாதனே நடிப்பன' என்பதற்கும் விரோதமாதலால் பிரமாவினிடத்திற் கிரியாசத்தி பதிந்து கருமப்பிரதானமும் ஞானமப்பிரதானமுமாயிருக்கும், விஷ்ணுவினிடத்தில் ஞானக்கிரியைகள் சமானமாய்ப் பதிந்து ஞானகருமசாமியமாயிருக்கும், காலருத்திரனிடத்தில் ஞானசத்தி பதிந்து ஞானப்பிரதானமாயிருக்கும். சிவன்மாயாதீதர். பிரமா சிருஷ்டித்த பிரபஞ்சத்தை விஷ்ணு பாலனம் பண்ணுவர், காலருத்திரர் சங்காரம் பண்ணுவர் ஆகையாலவர்கள் சாஞ்சனராகலிற் பிரகிருதியிற் குணத்திரயத்தை யதிஷ்டித்துக்கொண்டு பிரமாண்டவர்த்திகளாயிருப்பர்கள்

ததுக்தம் - ப்ரஹ்மாணம் ருத்ரஸாம்பம் ச விஷ்ணுமீஸ்வரம் ॥ ஸாத்த்விகம் ராஜஸம் தாமஸம் குணாஜ ஸதாஸிவ: । இதி.

வஸ்து பேதமில்லாதிருந்தும் ஞான தாரதம்மியத்தினும் ஸ்தான தாரதம்மியத்தினும் கிருத்திய தாரதம்மியத்தினும் பேதமாய் குருசிஷ்ய நியாயமாகவும் சுவாமி பிருத்திய நியாயமாகவு நடப்பதும் என்றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

சிருட்டி திதி சங்காரங்கள் பிரம விஷ்ணு காலாக்கினிருத்திர வியாசர்களுக்குச் சொல்லியிருக்க மூன்றுதொழிலும், ஸ்ரீகண்டமூர்த்திக்குச் சொல்லியதென்னையெனின்? அதற்கு உத்தரமுரைக்கின்றார்.

உரைத்தவிந்தொழில்கள் மூன்றும் மூவருக்குலகமோது- சிருட்டி திதி சங்காரமென்கிற கிருத்தியமூன்றும், பிரமவிஷ்ணு காலாக்கினிருத்திர வியாசர்களுக்கு உலகஞ்சொல்ல,—

வரைந்தொருவனுக்கேயாக்கி வைத்தது என்னையெனில் - குணத்தய நிலையராயும், பிரகிருதியக்கிர நிலையராயும், இராகாந்த நிலையராயிருக்கின்ற, ஸ்ரீகண்டமூர்த்தி யொருவருக்கே நியமித்துச் சொல்லியதேதென்னில்? முறைமையிற் சொல்லுவாம்.

பிரம மகாசிருஷ்டி காலத்திற் பரசிவன் சுத்தமாயையினின்றும் பொருட்பிரபஞ்சஞ் சொற்பிரபஞ்சமுமாயிருக்கும் சுத்தத்துவமஞ்சையுஞ் சுத்தாசுத்தவாசிகட்குச் சிருஷ்டித்ததில் புவனங்கள் சூக்குமதேகங்கள் தூலதேகங்கள் போக்கியப்பொருள்களிவைகளைப் பொதுச்சிறப்பாகப் படைப்பித்துப் பொருத்தி, சுத்த சுத்தாசுத்த வசுத்ததத்துவ வாசிகளெல்லார்க்கு

ம் வேறுவேறு நாதமாகிய பரதேகங்களைச் சிறப்பாகப்பண்ணி
ப்பொருந்தி, அந்தப் பரதேகத்துக்குள் ளிருக்கும் பிரணவக
லாபஞ்சகரூபமாகிய சிவதத்துவ மஞ்சையு மிருக்கப் பண்ணிக்
காத்து, மஹாப்பிரளயத்தின் முற்று மவாந்தரத்துஞ் சிலதேகா
திகளையுஞ் சங்கரிப்பர்.

பின்னந்த மஹாசிருட்டி காலத்திலநந்தேசுரர் அசுத்த
மாயையினின்றும் புவனக்கொத்தாயுஞ் சூக்குமதேகக்கொத்
தாயும் இருவகையா யிருக்கின்ற கலாதிபிருதிவியந்த தத்துவங்
களையுந் தூலசரீரங்களையும் போக்கியப் பொருள்களையும் பொ
துச்சிறப்பாகப் பண்ணிப் பொருந்திக்காத்து, மஹாப்பிரளயத்
தின் முற்று மவாந்தரத்துஞ் சில தேகங்களையும் ஸ்ரீகண்டா
தித் துவாரத்தினாலுந் தாமாயுஞ் சங்கரிப்பர்.

மத்தியம சிருஷ்டிகாலத்தில் ஸ்ரீமத் ஸ்ரீகண்டருத்திரர் பிர
கிருதியினின்றும் புவனாகாரக் கொத்துமாத்திரமா யிருக்கின்
ற குணாதி பிருதிவியந்த தத்துவங்களைப் பொதுவாகப் பண்
ணிப் போக்கியப் பொருள்களைத் தூலதேகங்களைப் பொதுச்சி
றப்பாகப் பண்ணிப் பொருந்திக் காத்து மத்தியமப் பிரளயத்
தில் முற்றுஞ் சங்கரிப்பர்.

அவரேவலால் குணநிலையர்களா யிருக்கும் பிரமவிஷ்
ணுக்களும், பிரமாண்டத் தனைநிலையாகளாயிருக்கும் பிரமவி
ஷ்ணுக்களும் குணாதிபிருதிவியந்த புவனங்களிற் றூலதேகங்களை
யும் போக்கியப்பொருள்களையும் பொதுச்சிறப்பாகப் பண்ணிப்
பொருந்திக் காப்பார்கள். பிரதமப்பிரளயத்தில் ஸ்ரீகண்டரேவ
லாற் றமதிருப்புதொடங்கிச் சுவர்க்கபரியந்தஞ் சங்கரிக்குங்
காலாக்கினிருத்திரரே அவாந்தரத்தும் பிரமாண்டத்துட் டூலச
ரீரங்களோடு போகப் பொருள்களைச் சங்கரிப்பர். ஆதலால்,—

புண்ணியன - பரசிவானுக்கிரகம் பெற்றுப் பரிசுத்தரா ய்ச் சிவனுயிருக்கு முன்சொல்லிய ஸ்ரீகண்டபரமேசுரன்,—

புனைந்ததிகார சத்தி நண்ணலாலே - பரசிவனிடத்தினி னறும் பரசிவனுக் கொடுத்திருக்கும் பிரகிருதிகாரிய சிருஷ்டியா தி கிர்த்தியஞ் செய்யுஞ் சாமாத்தியம் பெறலாலே, அவரோவுதற் காந்தர,—

விரைக்கமலத்தோன மாலு மேவலான பேவினோர்கள- காலாக்னிருத்திரரோடு பிரமவிஷ்ணுக்க ளியற்றுந்த காந் தாக்கள் ஆதலால், அவரொருவருக்கேயாக்கவைத்தது அதுவ னறி

புண்ணியன - ஸ்ரீம தநந்தேசுரானுக்கிரகம் பெற்றுப் பரி சுத்தராயச் சிவனுயிருக்கும் பிரமாணடத்துட் சிவலோக கை லாச மேருசிகர நிலையராகிய ஸ்ரீகண்டபரமேஸ்வரன்,

புனைந்ததிகாரசத்தி நண்ணலாலே-ஸ்ரீம தநந்தேசுரரிட த்தினின்று மநந்தேசுரருக் கொடுத்திருக்கும் பிரமாண்டத்துட் பிரமவிஷ்ணுமுதலோகளுக்கு நிக்ரஹானுக்கிரகம் பண்ணுஞ் சாமாத்தியம் பெறலாலே அவரோவுதற்காந்தர

விரைக்கமலத்தோனமாலு மேவலான மேவினோர்கள்-பிர மாணடத்துள்நிலையராகிய காலாக்னிருத்திரரோடு கூடியிரு க்கும் பிரமவிஷ்ணுக்களியற்றுந்த காந்தாக்கள். அது வனறி யும்,

புண்ணியன - பரசிவானுக்கிரகம் பெற்றுப் பரிசுத்தரா ய்ச் சிவனுயிருக்கும் ஈசுரதத்துவ நிலையராகிய ஸ்ரீகண்டபர மேசுரன்,

புனைந்ததிகார சத்தி நண்ணலாலே-பரசிவனிடத்தினின றும் பரசிவனுக் கொடுத்திருக்கு மநந்தேசுரரோடுகூடி மாயா

காரிய சிருட்டியாதி கிருத்தியஞ் செய்யுஞ் சாமர்த்தியம் பெறா
ல லே, அவர் ஸ்வயமாயுங் குணநிலைய பிரமாணடநிலைய விரு
ஸ்ரீகண்டருத்திரவாரத்தி லேயு மேவுதற் கர்த்தா,

விளைசகமலத்தோன மாலு மேவலான மேவினோர்கள்-கு
ணத்துள பிரமாணடத்து ளிருவகைப பிரமவிஷ்ணுக்களு மி
யற்றுசார காத்தாக்கள்,

இடபடி ஸ்ரீகண்டத் திரியம பிரேரகம், காலாக்கினி ருத்
திரரோடு பிரம விஷ்ணு சதுட்டயம பிரேரிடம் எனவறிக

பாசிவ ஜேவுதற்கர்த்தா, அநந்தேசுரரோடுகூட ஸ்ரீ
கண்டத்திரயம பிரமவிஷ்ணு சதுஷ்டயமெல்லா மியற்றுகற
கர்த்தாவாயிருக்கும

* இயவிடத்து ஞானப்பிரகாசர் ௯௯-௯௭-வது செய்யு
ட்களை வைத்து,௯௪-௯௫-வது செய்யுட்களை ௯௯-௯௭-வதாக
அமைத்து உரையாடம கூறியிருக்கின்றனா அது சிருஷ்டியா
திகளைக் கூறி அதனகாரண முணாத்தவேண்டு மெனபதுபோ
லு.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

அயனமாலிருவரும், புண்ணிய விசேடத்தான முதல்வனு
டைய அதிகாரசத்தி அவனதேவலாற் பெற்றுடையாரன்றி அத்
தொழிற்கு சுதந்திரரல்லராகலான, முத்தொழிலுஞ் செய்தற்
குறிய சுதந்திரமீறுமாகி யொருவனுக்கேயுண்டெனபதாம்

நல்வினைக்கண் வாழ்நாளின்மாலயனுகி" என்றார் புடை
நூலாசிரியரும். வேதம் புராணம்இதிகாச முதலியவற்றிற்கும்

இதுவே கருத்தெனபது சதுர்வேததாற்பரியசங்கிரக முதலிய வற்றுட் காண்க.

வரைந்து வரைதறென வலித்தது.

புரைததவெனனும பெயரெசசததகரம் விகாரத்தாற்றெ
சகதது

புரைதகல உயாகல்

---

# நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேலும பஞசராத்திரி இநத மூனறுதொழிலும் பிரம்மா விட்டுணு உருததிரன எனகிற மூனறுபோககு முளளதெனறு பெரியோர்கள சொல்ல, சிவ ஞெருவனுமே செய்வானெனறு சொல்லுவா னேனெனறுசொல்ல, அவனை மறுத தருளிச செய் கிருா.

உரைத்தவித தொழிலகள் மூனறு மூவருக குலகமோத - சொல்லபபட்ட விநதக கிருததியஙகள மூனறும பிரமமாவுக கும விட்டுணுவுககும உருததிரனுககும் உளளதெனறு ஞாதாக கள் சொல்ல,—வரைதநொருவனுககேயாககி வைப்பதிவகென னாபெனனில் - இநத மூனறு தொழிலுஞ சிவனொருவனுககுமே யுளளதெனறு நீ நியமிதது்ச் சொனன தெப்படியெனறு சொ ல்லுகிறுயாகில், சிருட்டிதிதி யிரணடும் பிரம விட்டுணுக்களு ககுச் சிவன கற்பிதத வதிகாரமாகையால், மூன்று தொழிலுஞ் சிவனுககேயுள்ளது அதெங்ஙனே பென்னில்,—விரைக்கமலத் தோன்மாலும் மேவலானமேவிஞேர்களபுரைத்ததிகாரசத்திபு

ண்ணிய னண்ணலாலே- மணம்பொருந்தின தாமரைப் பூவிலே இருக்கும் பிரம்மாவும் விட்டுணுவுங் கர்த்தாவினுடைய வேவலினாலே தனதாங் கிருத்தியங்களைச் செய்கிற வவர்கள், பொருந்தப்பட்ட புவனங்களிலுண்டான ஆஞ்ஞா சத்திகளை அநாதியே தமபிரானார் பொருந்தி நின்று அவரவர் கிருத்தியங்களை செய்விக்கையினாலே, அவர்களுக்கு ஒரு முதன்மையில்லை, சிவனுக்கே யெல்லா முதன்மையும்

வகுத்தொருவனுக்கே யாக்கியென்பதற்குப் பிரமாணம் திருவாசகம் -சதகம் "அயனொடு மறையவனு நீயேயாத லறிந்தியா னியாவரினுங் கடையனாய, நாயினேனுதலையு நோக்கிக்கண்டு நாதனே நானுனக்கோ ரன்பனென்பேன், ஆயினேனாதலாலாண்டுகொண்டா யடியாராதாமில்லையே யன்றிமற்றோர், பேயனேனிதுதானுன் பெருமையன்றே யெம்பெருமா னென்சொல்லிப் பேசுகேனே" என்றும், பரபட்சம நாரணனயனேயன்று மயனும் நாரணனேயன்றுங், காரணமொருவருக்கங் கொருவர்தாமிருவருக்கும், வாரணமுரித்தவனால் காரணமென்றுமன்றத், தாரண முறைகளுமபக்கத் தவர்களு மடைந்தாரன்றே." என்னுமதனுங் கண்டுகொள்க.

சித - பர - பாகு - மறு, எ - செ.

"விரைக்கமலத்தோன் மாலு மேவலாய்மேவினோர்கள், பரபுரைத்தக்கார சத்திபுண்ணியனண்ணலாலே" என்பதற்குப் பிரமாணம் திருப்பாட்டு "பாராழிவட்டம் பகையால் நலிந்தாட்டவாடி, பேராழியான திடாசண்டருக்ச் செய்தவாபேணி, நீராழிவிட்டேற நெஞ்சிடங் கொண்டவாகுப, போராழியீந்தபுகழும் புகழுறறதன்றே" என்றும், திருவாசகம் -சதகம். சாவமுன்னுட்டக்கன வேள்வித்தகர்தின்றுநஞ்சமஞ்சி, யாவவெந்தாவெ

ன் றவிதாவிடுகும் மவரவர்க்கே, மூவரெனறே யெம்பிரானொடு மெண்ணி விண்ணுலகாளுமேற், றேவரெனறேயிறுமாந தெனன பாவந திரிகவரே." என்றார், திருத்தோணோக்கம. "பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத், தங்கண்ணிடந்தரன சேவடி மேற் சாற்றுதலுஞ், சங்கரனெம்பிரான சக்கரமாற் கருளிய வா, றெங்ஙனுமபரவிநாந தோணோக்க மாடாமோ" என்றும், திருச்சாழல் "சலமுடையசலந்தரன றுடறடிந்தநல்லாழி, நலமுடையநாரணற்கன் றருளியவாறெனனேடீ, நலமுடைய நாரணனற னயனமிடந்தரனடிக்கீழ்லராக விடவாழி யருளின னகாண்சாழலோ." என்றும, பரபட்சம், "சீவனகளசனனம்போலச் சிலவபூ றறுசிததமாலைத, தேவெனறே யுலகங்காககச்சுவேச்சையால் சனிததானெனனீர், பூவனபின படைக்கமாட்டா சரனடிபோற்றவேதக, கோவநதுமுகததிற்றோனறிச் சிருட்டியைககொடுததல்கூறும்," என்றும், வானங்கிழமண்ணுமெல்லாமாயனே கததாவெனபாய், தானஞ்சுஞ்சலந்தரனற னுடல்கீணடசக்கரத்தை, யானஞ்சுமாடுவானயாற் பெற்றுலகளிதத வார்த்தை, தானெங்குமாகுமெல்லாஞ் சங்கரன காப்பேயாகும்," என்றும், அஞ்சியனறரிதாமோட வசுராசைக்குமரனமேல, தஞ்சிவிதகொருபெணணுமேல தாருகனுடறுணிபபித், தஞ்சிடப்புரந்தீமூட்டிச சலநதரனுடல்கீணடோச், நஞ்சினை யுண்டுமன்றே நாயகனுலகங்காததான." என்னுமதுங் கண்டுகொளக

சித் - பாஞ - மறு, சு - கூ - உஉ - செ

இதனுற் சொல்லியது சருவசிருட்டியில் மூனறுதொழிலும் சிவனே செய்வனென்றும, பிரம விட்டுணுக்களுடைய சிருட்டியுந் திதியுஞ் சிவனகொடுக்க வவர்கள் செயவார்களென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———0———

உரைத்த இதகொழில்களுமூன்றும் - சொல்லப்படுமிம்மு த்தொழில்களும்;—மூவருககுலகமோத - மூன்றுகடவுளு மியற் றுமென வுலகரு சொல்லாநிற்பவும்,—வரைத தொருவனுக்கே யாகசிவைத்ததிங கெனனையெனில்- வரையறுத தொருசடவு ளுக்கேமுததொழிலு சுதந்தரமெனப சென்னையெனில்?--விரை சுகமலத்தோனமாலும்-வாசனைபொருந்திய கமலத்தினகணுனை கினறஅயன மாலாரிருவரும்,—புண்ணிய நலனலலாலே - புண் ணிய விசேடத்தான,—புனைததிகாரசத்தி - முதல்வனுடைய உயர்நத அதிகாரசத்தி,—ஏவலான மேவினோரகள - அவனதே வலாற பெற்றுடையாரனறிச் சுதநதிரரல்லா ஆகலான் முத் தொழிலும செயதற்குரிய சுதநதிர மீறுமாகி ஒருவனுக்கே யுள்ளெடனபதாம.

---

## மறைஞானதேசிகர் உரை.

இதுவுமது.

இறுதியாங் காலந்தன்னி லொருவனே யிருவரு ந்த, முறுதியி னின்றுமீளவி லுற்பத்தி யுண்டாகா தா, மறுதியி லரனேயெல்லா மழித்தலா லவனுளி ன்னும், பெறுதுநா மாககநோககம் பேரதி கரணத் தாலே. (நுரு)

(இ-ள்) இறுதியாங் காலந்தனி லொருவனே எல்லாரு மொடுங்கிய சங்காரகாலத்தி லே சிவனொருவனுமே யுளன்.

இருவருந்த முறதிபி னின்ருரொனெனில் — உம்முடைய சிவனைப்போல விவ்விருவருங் காத்தாவாய்ச் சங்காரப்படார்களோவெனில?

இறுதிதானுண்டாகாதாம — அப்பொழுது ப்ரகிருதி மட்டு மழிகிற முக்கிணசங்காரமும, மாயைமட்டு மழிகிற மத்திமசங்காரமும, நாதமட்டுமழிகிற மகாசங்காரமுமாக இவை மூவிதமான சங்காரமுண்டாகமாட்டாது;

அறுதியிலரனே யெல்லா மழித்தலால். — இம மூவிதமான சங்காரத்தையுஞ் சிவனே சங்கரிக்கையால்

அவரு லினுமை பெறுதநாமாக்க நோக்கம பேரதி கரனது தாலே. — அந்தக் கர்த்தாதானே மேலுஞ் சிருட்டியுந் திதியு மவவிருவரையு மதிட்டித்துக் கொண்டு கிருத்தியங்களை யுண்டாக்காநிற்பன. எ - று

அதிகரண மெனபதற்கு லதிட்டித்து நடத்துவனென்னவறிக

இதற்குச சுவாயம்புவத்திலும காந்தபுராணத்திலுங் காண்க. (நரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

### இதவுமது

இறுதியாங்காலந்தன்னி லொருவனே - மஹாப்பிரளயத்திற் பரமேஸ்வர ஞெருவனேநிற்பன. [ஏகாரத்திஞற் பிரம

விஷ்ணுக்களு முபசம்மாரத்தைப் பொருந்துவர்கள்,]—இருவ ருந்தம முற்பத்தியின்றியொருவி விருத்திதானுண்டாகாதாம் - பிரமாவும் விஷ்ணுவுந் தங்கள பலத்திலுற்பத்தியாம வினருர்களெ ன்னில், சிருஷ்டி ஸ்திதி நிமித்தமா யுண்டானபேர் நிற்கிலசிரு ஷ்டியுந ஸ்திதியுமாயுள்ள பிரபஞ்சஞ் சம்மாரப்படாது. ஆகையா லம்மூர்த்திகளு முபசம்மாரப்படும். சிருட்டிஸ்திதி கர்த்தாக்களு முபசம்மாரப்படுகையால் மேல் சிருஷ்டியாதி கிருத்தியமின்றி ப் பிரபஞ்சஞ் சூனியமாமெனின்?—அநாதியிலரனேயெல்லா முத் த்கலா லவனு லினைமபெறுநா மாக்கநோக்கம்பேரதிகரண த்தாரே - தனக்கிறி லாகவரனே சிருஷ்டிஸ்திதி கர்த்தாக்களை யும் பிரபஞ்சத்தை யுஞ் சம்மாரித்து நிற்கையாலும், புனர்ச்சிரு ஷ்டியுண்டென்று கேட்கப்படுகையினுலும், பாரிசேஷப்பிரமா ணத்தினு லவ்வரனே சூக்ஷும சிருஷ்டியையுண்டாக்கி ஸ்தூல கிருத்தியத்திற்குப பிரமாதிமூர்த்திகள் திரயங்களையு முண்டாக் கி யம்மூர்த்திகளி லதுப்பிரவிஷ்டரா யக்கிருத்தியங்களைப் ப ண்ணுவா. ஆகையாற் றடையற்ற விச்சாஞானக்கிரியைகளை யு டைய பரமேஸ்வரனு லானமாக்களெல்லா முத்பத்தியாதி தரு மங்களைப் பெறுவர்கள் நாமெனகையால் சகலமொன நிதன பொருள்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

இம்மூன்று விருத்தமும் பாஞ்சராத்திமத நிராகரணம், அம்மதத்தின விஸ்தாரம பரபக்ஷத்திற் சொல்லிேனும கண்டு கொள்க.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆகையால் மகாப்பிரளயத்தில் பரசிவமொன்றுமே பதிகளுக்குட பாரிசேஷிகருமென்று படிக்கின்ருர்.

இறுதியாந காலந்தனனில்-மகாமபிரளயத்தில்,—

ஒருவனே - பரசிவனொருவேர, பதிகளிற் பாரிசேடித்து நிற்பா,—

இருவருந தாமுறுதியி னருெனனில் - பிரம விஷ்ணுககளிவரும், (தாமெனபது பவுராணிகமதப் பழக்கத்திற் படித்தது,) சிவசாஸ்திரீயத்திற்கு அநநதாதி அதிகாரகாத்தாககளிவருந்தமதுகிருத்தியஙகளோ டிருந்தாககளாகில்,—

இறுதிசானுமடாகாதாம்-மகாமபிரளயம் வாராதாகும. ஆதலால்,—

அறுதியில் - அத்திதிகால முடிவில்,—

அரனே-பரசிவனே,

எல்லா மழித்தலால் - சிவதத்துவமுதற் பிருதிவி தத்துவ பரியந்தம் பிரபஞ்சமுற்றுஞ் சஙகரித்துச சங்கரித்தலால்,—

அவனால் - அநதப்பரசிவனால்,—

பேரதி காரணத்தாலே-"அதபத்யுரதிஷடாநம்" என்று ஸ்ரீமன் மதங்காகமவசனத்தால் தாகான மியத்தினால் அந்தப்பர சிவனுக்குப்பெரிதா மிருப்பாருஞ் சததிகாரணத்தினாலே தானே.

திரும்பவெடுத்துக்கூட்டுக.

பேரதிகரணத்தாலே-பேரதிகரணத்தினின்றுமென (வேற்றுமைமாறுக) "நித்யாதிஷ்டேயரூபிணி" என்று பவுஷ்கரவசனத்திற் பரிக்கிரக சத்தியாதலா லந்தப் பரசிவனுக்குப் பெரிதாமிருப்பாகுஞ் சுத்தமாயையினின்று சிவத்தத்துவ மஞ்சுக்குமா

இன்னும்-இனிமேலும்,—

ஆக்கநோக்கம் பெறுதும்—சிருட்டி திதிகளைக் காண்போம

திரும்ப வெடுத்துக்கூட்டுக.

பேரதிகாரணத்தாலே - பரிக்கிரகசத்தியினால் அந்தப பரசிவனுக்குப பெரிதாயிருப்பாகு மியற்றுதற காரத்தாவாகும் அநந்தேசுரனாலேதான.

திரும்பவெடுத்துக் கூட்டுக

பேரதிகரணத்தாலே - தாதானமியத்தினாலந்த வநந்தேசுரருக்குப் பெரிதாமிருப்பாகு மநந்தவநந்தேசுரசத்தி கரணத்தினாலேதான

திரும்பவெடுத்துக்கூட்டுக

பேரதிகரணத்தாலே- (பேரதிகாரணத்தினின்றுமென வேற்றுமை மாறுக) பரிக்கிரகசத்தியினால் அநந்தவநந்தேசுரருக்குப்பெரிதாமிருப்பாகும அசுத்தமாயையினின்றுந் தானேகாலதத்துவமாதியாய்ப் பிருதிவி தத்துவமந்தமாகுந் தத்துவங்களுக்கு,—

இன்னும்,—

ஆக்கநோக்கம் பெறுதும்-திரும்பச் சிருட்டி ஸ்திதிகளைக் காண்பாம.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

சங்காரகாலத்தில் ஏனையிருவருந் தத்த மாற்றலோடு நிலை பெறுவாராயின உலகஞ் சங்காரமாதலின்மையான, அக்காலத்து அவ்விருவரும் உளரல்லரென்பது பெற்றாம். அல்லதூஉம், சங்காரகடவுளெனப்படுவோன, சிலவற்றை யொழித்துச் சங்கரிப்பானல்லன. அப்பெற்றியனாகிய சங்காரகடவுளை வேறு சங்கரிப்பாரில்லை யாகலான முழுவதுஞ் சங்கரித்தவழி அவனொருவனே எஞ்சிநிற்றல் பெறப்படுதலானும், ஒடுங்கியவுலகங் கட்குப் பெரிதோராதாரம அவனேயாகலானும், ஒடுங்கியவுலகத்தை மீளத் தோற்றுதற்கும் நிறுத்துதற்கும அவனேயுரிய னென்பது தானே போதருமென்பதாம

அறுதியிலரனென்னும பெயரடையானும் ஓரேதுக் கூறிய வாறு

இன்னும் மீளவும்.

ஆதாரமஅதிகாரமென்பன ஒருபொருட்கிளவி

பேரதிகரணமென விசேடித்தார், முதற்காரணமும் அதிகாரமாதலுடைமையின.

இவையிரண்டு செய்யுளானும் பௌராணிகர் மதம்பற்றி நிகழுஞ் சடாவை முறையே ஆகமவளவைபற்றியும் பொருந்து மாறுபற்றியும் பரிகரித்து, மேலது வலியுறுத்தப்பட்டது.

இதனானே பஞ்சராத்திரிமதம இரணியகருப்ப மதங்க ளைப் பரிகரித்தவாறுமாயிற்று.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

சிருட்டிகாலத்துக்குப் பிரமாவும் திதிகாலத்துக்கு விஷ்ணுவும் சங்காரகாலத்துக்கு உருத்திரனுமாகத் தந்தாங் கிருத்தியங்களைச் செய்கிறது கண்டிருக்கச்செய்தே, மூன்று காலத்துக்குஞ் சங்கார கர்த்தாவேயுள்ள னியாங்ஙனங் காணப்பட்டதென்ற பாஞ்சராத்திரியை நோக்கி மேலு மருளிச்செய்கிறார்.

இறுதியாங்காலந்தனி லொருவனே - சங்காரகாலத்தனில் சிவனொருவனுமேயுள்ளன். காக்கிறவனிருக்கக் காவலழியுமோ! ஆகையாலே,—இருவருந் நம் முறுதியாய் நின்றாரெனில் - அந்தச் சங்காரகாலத்திலும் பிரமவிஷ்ணுக்க ளிருவருந் தங்கள் பலத்தினாலே அழியாமல் நிற்பார்களென்று நீசொல்லில்,—இறுதிதானுண்டாகாதாம் - சங்காரமென்கிற கிருத்திய முண்டாகிறது நேராகவில்லையாம். ஆகையா லவர்களையும் அவர்கள் கிருத்தியங்களையும் அழிப்பன். கிருத்தியங்களை யழியாமற் கிருத்திய கர்த்தாக்களையு மழித்தால், மேல் கிருத்தியமுண்டாம்படி யெப்படி யெனில்,—அறுதியிலரனேயெல்லா மழித்தலா லவனாலின்னம் பெறுவதா மாக்கம் நோக்கம் - அந்தச் சங்காரகாலத்தில் சிவனே சருவத்தையும் சங்கரிக்கையினாலே அந்தச் சிவனாலே மேலும் சிருட்டி திதியும் நாமெல்லாரும் பெறத்தக்க தண்டாம். சங்காரகர்த்தாவாலே சங்காரமொழியச் சிருட்டி திதியுண்டாம்படி எப்படியெனில்,—பேரதிகரணத்தாலே - இந்தக் கிருத்தியங்களைக் கொடுக்கத்தக்க மேலான வதிகார சத்திகளைத் தனக்கு கருவிகளாக வுடையவனாகையினாலே.

இதற்குப் பிரமாணம் முன்னின்ற திருவிருத்தத்துக்கிட்ட பிரமாணங்களைக் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது சங்காரகாலத்திற் பிரம விஷ்ணுக்களையு மவர்களுடைய சிருத்தியங்களையு மழித்துத் தானொருவனுமேயாய் நிற்பனென்றும், சிருஷ்டிகாலத்திலே அவர்களையும் அவர்கள் தொழில்களையு முண்டாக்குவ னென்றும், திதிகாலத்தி லவர்களுடைய வதிகாரத்தையுஞ் சங்காரகர்த்தாவே கொடுப்பானென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

இறுதியாங்காலந்தனில்-சங்காரகாலத்தில்,—இருவருக்கும்முறுதியி னின்றொன்னில்-ஏனையிருவரும் தத்தமாற்றலோடு நிலைபெறுவாராயின்,—இறுதிகா ணுண்டாகாதாம் - உலகஞ் சங்காரமாதலின்மையா னக்காலத் தவ்விருவருமுளரல்லவென்பது பெற்றும்,—அறுதியி லரனே எல்லாமழித்தலான்-அல்லதூவுஞ் சங்காரக் கடவுள் எனப்படுவோன் சிலவற்றையொழித்துச் சங்கரிப்பானல்லன் அப்பெற்றியனாகிய சங்காரக்கடவுளை வேறு சங்கரிப்பாரிலைபாகலான் முழுதுஞ் சங்கரித்வழி,—ஒருவனே-அவ்வொருவனே எஞ்சிநிற்றல் பெறப்படுதலானும்,—பேரதிகரணத்தாலே - ஒடுங்கிய உலகங்கட்குப் பெரியதோராதார மவனே யாகலானும்,—ஆக்கநோக்க மவனுவினனும் பெறுதும் - ஒடுங்கிய உலகத்தை மீளத் தோற்றுதற்கு நிறுத்துதற்கு மவனே யுரியனென்பது தானேபோதருமென்பதாம்.

இவையிரண்டு செய்யுளானும் பவுராணிகர்மதம்பற்றி நிகழுங் கடாவை முறையே யாகமவளவைபற்றியும் பொருந்துமாறுபற்றியும் பரிகரித்து, மேலதுவலியுறுத்தப்பட்டது.

இதனானே பாஞ்சராத்திரிமதம் இரணியகருப்பமதங்களைப் பரிகரித்தவாறுமாயிற்று.

---

## மறைஞானதேசிகர் உரை.



இந்தத்தொழில்க ளென்னபயனைக்கருதிச் செய்
கிறு னென்றவனை நோக்கி யுணர்த்துகிறார்

சொன்னவித் தொழில்களென்ன காரணந் தோற்
றவெனின், முன்னவன் விளையாட்டென்று மொழி
தலு மாமுயிர்கட், கன்னிய புத்திமுத்தி வழங்கவு ம
ருளான் முன்னே, துன்னிய மலங்களெல்லாந் துடை
ப்பதுஞ் சொல்லலாமே. (௩௬)

| | |
|---|---|
| (இ-ள்) சொன்னவித்தொழில்களென்ன காரணந் தோற்றவெனின் | இக்கிருத்தியங்கள் கர்த்தாவானுடைய செய்கைகளுக்குக் காரணமென்னென்று நீ சொல்லில் |
| முன்னவன் விளையாட்டென்று மொழிதலுமாம் | அந்தக்கர்த்தா வொருப்ரயோசனத்தைக் கருதிச்செய்யாதபடியாலே யவனது விளையாட்டென்று சொல்லப்படும். |

இவ்விளையாட்டுச் சிறுபிள்ளைகளைப்போலப் பலத்தைக்கொடாதோவெனவில்?

| | |
|---|---|
| உயிர்கட்கன்னிய புத்திமுத்தி வழங்கவுமருளான முன்னே | அவனதருளாலான்மாக்களுக்கு நிலைபெற்ற பராபரபோகங்களைப் புசித்துத் தொலைத்தற்பொருட்டும், அநாதியே செறிந்துநின்ற மலங்களை யொழிக்கையின் பொருட்டும், |

துன்னிய மலங்க மோட்சத்தை யடைவிக்கைக்குக் காரண
ளெல்லாந் து மெனறுஞ் சொல்லலாகும். எ - று.
டைப்பதுஞ்சொ
ல்லலாமே

இதறகுச் சுவாயம்புவ மெனவறிக. (௩௯)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சிருட்டியாதி சூக்ஷமகிருத்தியங்கட் கேதுகூறல்.

சொன்னவித தொழில்க ளனைனகாரணந தோற்றவெண ணில் - கீழசசொல்லிப்போநத சிருட்டியாதிபஞ்சகிருத்தியத தையும் பணணுவதான கிரியை நிர்விகாரியான சிவனுடைய சத்தித்துவாரா வுணடாகவேண்டிய வேதுவேதெனின,—மன னிபவுயிரக கருணாரப்புத்திமுத்திவழங்கவும - அநாதியே யாண வாதிபாசங்களைப் பொருந்தித் துக்கிக்கிற வான்மாக்களுக்குக் கருணையினுன மாயையினினறுங் கலாதிகளையுணடாக்கி யாண வசத்திகளை பேகதேசநீக்கிப் போகததையு மாணவமாயைக ளையுஞ சாவானமநீக்கி யதனுன மோக்ஷத்தையுங கொடுப் பது, (உபமை யெண்ணும்மை) ஆகிறகர்த்தாவுககுப் பிரயாசமு ணடாமெனின? இல்லையெனபதற்காக,—முனனவனவிளையாட் டெனறு மொழிதலுமாம் - மூனறுபொருளகளுக்குங் முதத னபொருளாகிய பதியினுடைய லீலாமாத்திர மெனறு சொல் லலுமாம் (சொல்லலுமாமெனறது சநநிதி மாததிரத்திற் கிருத்தி ய முணடாமெனபது கருததது) நித்தியமாகிய வாணவமாயைக ளிற் சத்திசமூகங்களைச சிருட்டிகாலத்தி லுணடாக்கிச சங் காரகாலத்தி லொடுக்குவ ரென்று கீழ்ச்சொல்லிப போந்து, இவ்விடத்துக காரணங்களை நீக்குவ தென்ற தெவ்வாறெ னின?—ஆங்கேதுன்னிய மலங்களெல்லாந துடைப்பதுஞ்சொ

ல்லலாமே - அச்சத்திகளை நீக்கினதுபோல வநாதியே யான்மா வை நெருங்கியிருக்கிற வாணவமாயைகளையும வகையற நீக்கு வர்.

தடைப்பதும் எனறவும்மையாற் பக்குவான மாக்களிட த்திற் பாசங்களையெல்லா நீக்கியு மபக்குவானமாக்களிடத்திற் பாசங்க ணிற்கையாற் பாசங்களுடைய நித்தியமுங் கெடா தெனபது கருத்து. அல்லது ஏகமுத்தியிற் சர்வமுத்திப்பிரசங் கம வரும.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிருட்டி முதலியகிருத்தியமேதுநிமித்தி ப மியற்றுவதென் னப் பலம இரண்டு இநவிருத்தகதா லிசைக்கின்றார். தோற்ற வென்னகாரணமெனறு கூட்டுக. விளையாட்டெனபது சித்தாந்தது. இது வெளி-பொருள்

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

சங்காரகடவுள் இங்ஙனங் கூறிப்போந்த தோற்றமுத லிய தொழில்களைச் செய்தற்குக காரணம் யாதெனில், "கா த்தும படைத்துங் கரந்தும் விளையாடி" எனபது முதலிய தி ருவாக்குகள் பற்றி ஒருசாரார், அத்தொழிற்குக் காரணம் வி ளையாடற் கருகதெனபர். ஒருசாரார், "ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டி, னுய்வார்களுய்யுா் வகையெல்லா முய்க் தொழிந்தோம்," எனபது முதலிய திருவாககுகள்பற்றி. விளை

யாட்டென்றது, ஐங்கலப் பாரஞ் சுமத்தல் சாத்தனுக்கு விளையாட்டெனபதுபோல, அதந்துணை யெளிதிற்செயப்படுதலை நோக்கியேயாகலின அக்கருத்தும் உயிர்கட்குப் பெத்தகாலத்துச் சுவர்க்காதி போகமும பதமுத்திகளும, முத்திகாலத்து வீடுபேறுங் கொடுத்தற்பயத்தெனபா அவ்விரண்டுந தம்முன் முரணுமையான் உயிர்கண்மேற்சென்ற கருணையே ஆண்டைக்குக் காரணமெனபதாம.

மொழிதலுமெனனுமுமமை எதிரது தழீஇயது.

ஏனைய எண்ணுமமை

வழங்கவுமெனனுமுமமையோடு இயைதற்கேற்பத் துடைப்பதாகவுமென ஆக்கச்சொல் வருவித்துரைக்க

அருளாலெனபதனை மேலுங்கூட்டுக.

காரணமெனவேயெனக் கடாயினுர்க்குப் பயன்கூறிவிடுத்தல் செடபுவழுவாம் போலுமெனின, ஆகாது; அருளாலெனவே வழங்கவுமதுடைப்பவுமவைத்த அவ்வருள் காரணமெனபது தாற்பரியமாகலின. அற்றுயினும அநுக்கிரகமொழிந்த தொழிந்தொழில்களெல்லாம் பிறப்பிறப்புகளிற் படுத்துத் துயருறுத்துவனவாகலின, அவற்றைச் செய்வது அருளாமா றியாங்ஙமெனின? அதற்கன்றே வருஞ்செய்யு ளெழுந்ததெனபது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இந்தத் தொழில்களை என்ன பயனைக்கருதிச் செய்கிறார் உம்முடைய கர்த்தாவென்று புத்தன்சொல்ல, அவனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

சொன்னவித் தொழில்களென்ன காரணத்தோற்றவெ
னனில் முன்னவன் விளையாட்டென்று மொழிதலுமாம் - அந்
தக் கர்த்தாவினுடைய திருவிளையாட்டென்று சொல்லுமாம்.
ஆயினுமமுடைய கர்த்தாப் பாலரைப்போலப் பயனற்ற கா
ரிடஞ் செய்வானேனெனனில்? கர்த்தா அப்படிப் பயனற்ற
காரியஞ் செய்யான். அதெங்ஙனே யெனனில்?—உயிர்க்கு ம
ன்னிய புத்தி முத்தி வழங்கவு மருளால் முன்னே துன்னிய
மலங்களெல்லாம் துடைப்பதற்கு சொல்லலாமே - தன்னுடை
ய காருண்ணியத்தினாலே ஆன்மாக்களுக்கு நிலைபெற்ற போக
மோக்ஷங்களைக் கொடுக்கைக்கும், இதுவுமன்றி அநாதியே சகச
மாயிருக்கிற மலங்களைப் போக்குகைக்கும் காரணமாகச் செய்
தானென்று சொல்லலாம், பெரியோர்க ளப்படிச் சொல்லப்ப
டுகையால்.

முன்னவன் விளையாட்டென்றது இந்தத் தொழில்களைச்
செய்யுமிடத்துப் பாரமற்றின்றெளிதாகச் செய்தலெனக் கொ
ள்க. இதற்குப்பிரமாணம் திருவெம்பாவை "மொய்யார்
தடம்பொய்கை புக்குமுகே யென்னக், கையாற் குடைந்து கு
டைந்துன்கழல்பாடி, யையாவழியடியோம் வாழ்ந்தோங்கா
ரழல்போற், செய்யாவெண்ணீறாடி செல்வா சிறுமருங்குல்,
மையார்தடங்கண் மடந்தைமணவாளா, வையாநீயாட்கொண்
டருளும்விளையாட்டி, லுய்வார்களுய்யும் வகையெல்லா முய்ந்
தொழிந்தோம், மெய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பா
வாய்" என்றும் "ஆர்த்தபிறவித் துயர்கெட நா மார்த்தாடுந்,
தீர்த்தனற் றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடுங், கூத்தனிவ்வா
னுங் குவலயமு மெல்லோமுங், காத்தும்படைத்துங் கரந்து
ம்விளையாடி, வார்த்தையும்பேசி வளைசிலம்பவார்கலைக, ளார்
ப்பரவஞ்செய்ய வணிகுழன்மேல்வண்டார்ப்பப், பூத்திகழும்

பொய்கைக் குடைந்துடையானபொற்பாத, மேத்தியிருஞ்சுனை நீ ராடேலோரெம்பாவாய்," எனனுமதுங் கண்டுகொளக.

இதனாற் சொல்லிய கர்த்தா தனது காருணியத்தினாலே ஆன்மாக்களை இரட்சிக்கை காரணமாக பஞ்சகிருத்தியஞ் செய்தானென்றும்; இது செய்யுமிடத்து பாரமற நின்று செய்தானென்னு முறைமையையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சொன்னவித் தொழில்கள் - சங்காரக்கடவு ளிங்ஙனங் கூறிப்போந்த தோற்றமுதலிய தொழில்களை,—தோற்றககாரண மெனவில்-செய்தற்குக் காரணம யாதெனின,—முன்னவன விளையாட்டெனறு மொழிதலுமாம "காத்தும் படைத்துங் கரந்தும விளையாடி" எனபது முதலிய திருவாக்குகளபற்றி,(விளையாட்டெனபது ஐங்கலப்பாரஞ்சுமத்தல் சாத்தனுக்கு விளையாட் டெனபதுபோல) அத்துணை எளிதிற் செய்யப்படுதலை நோக்கியே யாகலின அக்கருத்தும்,—உயிர்க்குமுனனே - உயிர்கட்கு பெத்தகாலத்து,—மன்னிய புத்திமுத்தி- தங்குதற்கேதுவாகிய சுவர்க்காதி போகமும் பதமுத்திகளும்,—துன்னிய மலங்களெல்லா மருளாற றுடைப்பதும் - முத்திகாலத்துள் பொருந்திய மும்மலங்களு மருளானீங்குதலாகிய வீடுபேறும்,—வழங்கவும் - கொடுத்தற்பபத்தெனபர்,—அருளாற் சொல்லாமே - அவவிரண்டுந் தம்முன் முரணுமையா னுயிர்கண்மேற் சென்ற கருணையே யாண்டைக்குக் காரண மென்பதாம்.

## மறைஞானதேசிகர் உரை.



சிவனசெய்யும் பஞ்சகிருத்தியமு மான்மாக்க
ளுக்கு அனுக்கிரகமென றுணர்த்துகிறார்.

அழிப்பிளைப் பாற்றலாக்க மவ்வவர் கன்மமெல்லாங், கழித்திட நுகரச்செய்கை காப்பது கன்மவொப்பிற், றெழித்திட மலங்களெல்லா மறைப்பருட் செய்திதானும், பழிப்பொழி பந்தம்வீடு பார்த்திடி னருளேயெல்லாம். (௧௭)

(இ - ள்.) **அழிப் பிளைப் பாற்றல்** — சங்காரமாவது, சுத்தாசுத்தமாகிய மாயையிற் காரியங்களைத் தத்தங் காரணங்களி லொடுக்கி ஜநநமரணப்பட்டுத் திரியாமலானமாக்களை யிளைப்பாற்றுகை.

அஃதெங்ஙனமெனின்? பகலெல்லாம் வேலைசெய் திளைத்தவனிராத்திரி நித்திரைசெய் திளைப்பாறுமாறுபோல.

**ஆக்க மவ்வவர் கன்மமெல்லாங் கழித்திட** — சிருஷ்டியாவது, ஒடுங்கியிருக்கிற கருவிகளையு மநுஷ்யாதிமாக்களையுங் கூட்டி யவரவர் கன்மங்களை யநுபவிக்க, அவ்வவர் யோனிகடோறும் புகுந்துழன்று திரிகை.

**நுகரச்செய்கை காப்பது** — திதியாவது, அந்தக்கன்மபலங்களை யேறுமற் குறையாமற் றத்தம் விடயங்களைப் பொருந்திப் புசித்துத் தொலைக்கை.

**கன்மவொப்பிற் றெழித்திட மலங்களெல்லா மறைப்பு** — திரோபாவமாவது, கன்ம சாமீப மான்மாக்களுக்குப் பிறந்தகாலத்தும் பரிபாகமான மலங்களினது வீரியத்தைத் தடுத்தல்.

அருள்செய்தி அநுக்கிரகமாவது. ஆன்மாக்களுக்காணவ தானும் பழிப் முதலிய குற்றத்தைப் போக்கி ஞானத்தை பொழி பந்தமகீ க்கொடுத்து வீட்டை யடைவிப்பிக்கை
ே

பார்த்திடின இந்தப்பிரபஞ்ச கிருத்தியங்களும் விசாருளேயெல்லாம். ரிக்கி லநுக்கிரகத்தின பொருட்டாம். எ-று.

இதற்குச் சுவாயம்புவமும் மிருகேந்திரமு மெனவறிக. (௬௭)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

ஆன்மாக்களுக்குக் கிருபையினுற கிருத்யங்களைப் பண்ணுவரென்றதெங்ஙனம், சமஹாரமும் மறைப்புங் கிருபையோவெனின? அதுவு மாமெனறு கூறல்.

ஆக்க மவவவர்கன்மெல்லாங் கழித்திட-சிருஷ்டியில் தனுகரணாதிகளை யுண்டாக்குவது அவ்வானமாசகள் பண்ணிய கனமமெல்லாம் புசித்துத் தொலைப்பதறகு,--காத்திடல் நுகரச்செய்தல்-ஸ்திதிபண்ணுவ தவ்வககனமங்களைப் புசிபபிககிறதற்கு,—அழிப்பிளைப்பாற்றல்-சங்கரிப்பது சநந மரணத்திறுற் சகலாவஸ்தையிலுண்டாகிய விளைப்புநீங்கத் தத்துவங்களெல்லாமொடுக்கி யானமாக்ககளைக் கேவலாவஸ்தையிற கிடத்துகின்றது,—

தது-க்தம் ஸ்ரீமத்ரௌரவே — ஸம்ஹாரஸ்ய நிசாகல்ப க்ருபாகாரணஸம்ஸ்ரய | தச்சராத்ரிகராகர விஸ்ரா யாவதிஷ்டதே || ஸதிநாம் ஸம்பவிஜ்ஞாநாம் ஸவஸ்ஸம் தஹிதாயதஃ || ஸ்வாபாவஸாநஸாமர்த்யம்ஹ்ருதி.

மறைப்புக் கன்மவொப்பின் மலங்களெல்லாந் தெழித்திட-திரோதானம் பண்ணுகிறது கன்மசாம்மியத்தின் மல

ங்க ளெல்லாவற்றையு நீக்குவதாகையாற் கன்மசாம்ய மாம லவுங் கன்மபலத்திலே ஹேயபுத்திவாராமற் புசிப்பிக்கும்படி களுக் கன்மசாம்ய மானபொழு தத்திரோதான சத்தியே யனு க்கிரக சத்தியாம்;—

[illegible]

அருள்-அநுக்கிரகம் பண்ணுகிறது ஆன்மாவுக் குபாதியாயு ள்ள வாணவாதி பாசபந்த நிவிர்த்தித்துவாரா ஸ்வஸ்வரூபமா ன சச்சிதானந்தாபிவியக்தியாக்குவது,—பழி-பொழி-ஆகையா ற சங்காரம்பண்ணுகிறது தாமதகுணமென்றும், மறைக்கிறது வ ஞ்ஞானமென்றும், பஞ்சராத்திரி சிவதூஷணஞ் சொல்லுகின்ற தைத் தவிர்,—பார்த்திடிற் பந்தம்வீடெல்லாச் செய்திதானு ம ருளே-விசாரிக்குங் காலத்துக் கலாதி தத்துவங்களினு லான மாயகளேப பந்திக்கிறது மக்கலாதிபந்தத்தைச் சங்காரகாலத் தில் விடுவிப்பதுங் கிருபையினாற்செய்யுங் கிருத்தியமென் றித னபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—— o ——

அழிப்பு - சங்கரித்தல்,—இளைப்பாற்றல் - பூமியின் கண் ணே சரீரேந்திரியங்களோடே சநநமரணங்களிற்கூடுதல் பிரி தல், சுவர்க்கநரகபூமிகளிற் போதல் வருதல் முதற்றொழிற்க ளான வருத்தநோய்தீர்த்தல், சத்திகுன்றிய மாயைக்குத் திரு ம்பச் சாமர்த்திய முண்டாக்கலுமாம், . கன்மபாக நிமித்தமு

மாம்.—ஆக்கம்-இரும்பச்சிருட்டித்தல்,—அவ்வவர் கன்மமெல் லாங்கழித்திட - பிரளயத்திற் பக்குவப்பட்ட அவரவா கன்ம ங்கள் முற்றும் மலபரிபாகத்திற்கு நிமித்தமாய்ப் புசிப்பித்துத் தொலைக்க,—காப்பது - திதிசெய்வது,—நுகரச்செய்கை- கன் மபலத்தைப் புசிப்பித்தல்,— மறைப்பருள செய்தி தானும் - மலபாகம் வருமபொருட்டுக கனமபலபோக்கியப் பொருள்களி லமிழ்த்துதலாகிய திரோபாவகிருத்தியமும், தீக்ஷை யனுக லாகிய அநுக்கிரக கிருத்தியந்தானும்,—கனமவொப்பில்- மலப ரிபாகம்வர வரும் உபகாராபகாரகனமபலசமத்தில்,—மலங்க ளெல்லாந் தெழித்திட - மலமாயா கனமங்களை நீக்கிச் சிவத துவத்தை விளக்க, திரோபாவ கிர்த்தியத்தாற் கனம சமத துவம் வருவித்தல், அநுக்கிரககிருத்தியத்தால் மலம் நீக்கிச் சி வத்துவம் வருவித்தல் எனப்பொருள்கொளக பழிப்பொழி மு தல் பொருள் வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

ஒடுக்கந் தோற்றம் நிலை மறைப்பு அருளென்னும் ஐந்தும்; முறையே இளைப்பாற்றலும், கனமங் கழியுமுகத்தான மலபா கம் வரச்செய்தலும், கனமங் கழியுமாறு அவற்றை நுகர்வித்தலு ம், கன்மவொப்பு வருவித்து மலங்களை முதிர்வித்தலும், பக்கு ம் விடுவித்தலுமாகிய உறுதிப்பயத்தனவாகலான், ஐந்தொழி லுமருட்செயலேயாகலின், இவற்றுட் சில மறந்தொழிலேயே னுமெனப் பழித்தலையொழிவாயாக வென்பதாம்.

மேன் முத்தொழில் கூறி ஈண் டைந்தொழிலென்றன் ம [illegible]. பிறவெனின், ஆகாது; மறைப்பையு மரு[illegible]யும் நிலை வி

றிகளினடக்கி ஆண்டு முத்தொழிலென்றார், தம்முள் வேற்றுமையுடைமைபற்றி ஐந்தொழிலென்றாராகலின்.

இவையிரண்டு செய்யுளானும், சங்காரககடவுள் செய்யுந் தொழில் மறமாய் முடியுமெனனும நாத்திகர்மதமும், வீண்டொழிலெனனும் மாயாவாதிகள மதமும், தன்பொருட்டெனனும் பரிணமவாதிகள மதமும்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து, மேலது சிறப்பிக்கப்பட்டது

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

இப்படி ரட்சிக்கிற கர்த்தா சங்கரிப்பானேனென்றும் புத்தன்சொல்ல, அவனை நோக்கி மேலு மருளிச்செய்கிறார்.

அழிப்பிளைப்பாற்றல் - சஞ்சரிக்கிற காயத்திலுலே அலைப்புண்ணு மான்மாக்களை இளைப்பாற்றும்படி சிறிதுகா லமையிற்றைநீக்கிவிட்டு வைக்கிறது அப்படியிளைப்பாறிவிடாமல், ஆன்மாக்கள் துக்கத்தையநுபவிக்க மீளவுஞ் சிருஷ்டிப்பானேனென்னில்?—ஆக்கமவ்வவர் கன்மமெல்லாங் கழித்திட - சிருஷ்டிக்கிறது, மலம் நீங்காதபடியாலே மலநீங்குகைக் காரணமாக ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களைக் கொடுத்துக் கன்மத்தைத் தொலைவித்தல். அப்படி சிருஷ்டித்தாற்போல மலத்தைப் பாகம் வருத்தினது திருவடியிலே கூட்டிக்கொள்ளாமல் நெடுங்காலம் திதியென்று நிறுத்துவானேனென்னில்?—துகரச்செய்கை காப்பது - ஆன்மாக்கள் செய்தகன்ம மிகுதியாயிருக்கையினாலே, அந்தக் கன்மம் புசித்துத் தொலைப்பிக்க வேண்டி இரட்சித்து. இப்படிசெய்யிற் கர்த்தா மறைப்பிப்பானேனென்னில்?—கன்மவொப்பித்தொழித்திட மலங்களெல்லா

மறைப்பு - திரோபவிக்கிற அந்தபாகத்தைப் புசித்துத் தொலைப்பித்துக் கன்ம வொப்பிலே மலங்களெல்லாம் போக அநுக்கிரகமென்றது என்னில்,—அருளசெய்திதானும் பழிப்பொழி பந்தம்வீடு - அநுக்கிரக முறைமைதானும் குற்றத்தைப்பொருந்தியிருக்கிற பாச பந்தங்களைப் போக்கி முத்திநெறியைக் கொடுக்கை இதுவொழிந்த முனசொல்லப்பட்டவை அநுக்கிரக மல்லவோ வெனனில்?—பார்த்திடி லருளேயெல்லாம் - பார்க்குமிடத்தியனுககு நிக்கிரகமன்றி முன சொல்லப்பட்ட நாலுகாரியமும் அநுக்கிரகமென்றே சொல்லப்படும.

இந்தக் காரியமும் அநுக்கிரக மென்றதறகுப் பிரமாணம் தத்துவவிளககம, "கனமந்தனனைக் கனிவிககுங் காழிப்பிரான் கருணை, பனமைப்படுந்தொழி லைந்துபடைப்பு நிலைகொடுத்த, வினமையிழந்த வொளிப்புத் துயாநின றெடுத்தலெனப, வன மைபடாநிலைமை பெரியோனுக கமைந்தனவே." எனனுமதுங் கண்டுகொளக.

இதனாற் சொல்லியது ஆன்மாக்களை யிரட்சிக்கை காரண மாகக கர்த்தா பஞ்சகிர்த்தியங்களைச் செய்தானென்னு முறைமையை அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

அழிப்பு - ஒடுக்கமாவது,—இளைப்பாற்றல் - இளைப்பாற்றலும்,—ஆக்கம் - தோற்றமாவது,— அவ்வவர் கனமமெல்லாம் - அவரவர் கன்மங்கழியு முகத்தான,—கழித்திட - மலபாகம் வரச்செய்தலும்,—காப்பது - நிலையாவது,— நுகரச்செய்கை - கன்மங்கழியுமா றதனைநுகர் வித்தலும்,—மறைப்பு-மறை

ப்பாவது,— கன்மவொப்பின் - கன்மவொப்புவருவித்து,—மல ங்களெல்லாந தெழித்திட - மலங்களை முதிர்வித்தலும்,—அரு ள - அருளாவது,—பந்தம் வீடு -பந்தம் விடுவித்தலுமாகிய வுறு திப் பயத்தன வாகலான,—பார்த்திடின - பராவுமிடத்து,— எல்லாசெய்திதானு மருளே - ஐந்தொழிலும் அருட்செயலே யாத லின,—பழி-பொழி - இவற்றுட் சில மறதொழிலே போலு மெனப் பழித்தலை ஒழிவாயாக வெனபதாம்

இவையிரண்டு செய்யுளானும் சங்காரக்கடவுள் செய்யுந் தொழின் மறமாய்முடியுமெனனும் நாத்திகர் மதமும்,வீணடொ ழிலெனனு மாயாவாதிகள மதமும, தனபொருட்டெனனும் பரிணாமவாதிகள் மதமும பற்றி ஆசங்கித்தம பரிகரித்து; மேல தசிறப்பிக்கப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை.



இங்ஙனம் பஞ்சகிருத்தியம பண்ணுகிற கர்த்தா
வுக்கு வடிவு யாதெனறு வினவ, அவனை
நோக்கி யுருமேனி யெனற விருத
தமீருக வொரு தொடராக
வுணர்த்து கிறார்.

அருவமோ ருபாருப மானதோ வன்றிநின்ற, வு ருவமோ வுனக்குநாகத்தா வடிவெனக் குணர்த்திய கென்னி, லருவமு மருபாருப மானது மன்றிநின்ற, வுருவமு மூன்றுஞசொன்ன வொருவனுக் குள்ளதா மே. (௩௮)

(இ - ள்) அருவ உயிருடைய கத்தா நிட்களமோ, சகளநி மோ ருபா ட்களமோ, இவையல்லாத வெல்லாவவயவ

ரூப மானதோ வன்றி நிறைவு ருவமோ வுணா க்குங் கத்தாவ டிவெனக் குண ர்த திங் கென வில் — ங்சளுங் காணப்பட்ட சகளமோவென் றெனக்கு நீ ரறிவிக்க வேண்டுமெனறு நீ சொல்லில்,

அருவமு மரூபாரூப மானது மன்றிநிறைவுரு வமு மூனறுஞ் சொனன வொருவனுக் குள்ள தாமே. — முற்கூறிய நிரதிகாரியாகிய பரமகத்தாவுக்கு நீ முனனஞ் சொல்லிய மூவிதமூா திருமேனியாம் எ-று.

உம்மை எண்.
ஓகாரம் விஞவின்கண் வநதது
இதற்குச் சுப்பிரபேதமு மதங்கமுமெனவறிக (௩௮)

---

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

—o—

உபக்கிரமததிற் கர்த்தா சித்ரூபெமென றுபசம்மாரமு மவ்வாறே சமர்த்திப்பதான் மத்தியே பராமர்சை கூறுகின்றது.

அருவமோரூபாரூப மானதோவன்றிநின்ரவுருவமோவுணர்க்குங்கர்த்தா வடிவெனக் குணர்ததிங் கென்னில் — நீசொல்லுங்கர்த்தாவின் ஸ்வரூபம் அரூபமோ ரூபாரூபமோ வல்ல தருவத்தாலோ விவனெனக் கறிவியுமெனில்?—அருவமு மரூபாரூப

மானது மன்றிநின்ற வுருவமு மூனறுஞ் சொன்னவொருவனுக் குளளதாமே -முனசொல்லப்பட்ட மூனறுருபமு மொப்பற்ற பறமேஸ்வரனுககு லபபோகவதிகாரஙகளிற் சுவேச்சையினு லுளளதாம, அவன் ஸ்வரூபஞான சிதாநநதப் பிரகாசமே யெ ன றிதனபொருள.

தடுக்தா வாதலிஉெ — ஶிவதகூ஦ ஊஹா ஜெஸ நிஷெஹொகிதிக்கிலி தழு । ஸகஜொ மிஷெஹெனுகி ஸா ஊாவறிகி ஜொ வறெத ॥ ஊஜஹஶ஦ ஸகஜொவிஜா கிர வியாஜெ ஹவஙிஜெவகி.

# ஞானப்பிரகாசருரை வருமாறு.

இசுருவுங கர்தநாசசரீரியல்லனெனபது சொல்லப்பட் டு, சில வாதிகள சரீரியலலாத கர்நதாவுக்குக காரியகர்ததிரு ததுவங கூடாதெனறு சொல்லுவார்கள, அஃதெப்படியென று விருஉ, உததரமுரைக்கினருா.

இது வெளிபபொருள்

விருவின சிஷனகருததது இவை —கர்த்தா சரீரியோ, அ ன்றி யசரீரியோ,அனறிச்சரீரியசரீரியோ, அனறிச்சரீரியசரீரியல் லாதவரோ; இநத நாலு பக்ஷத்தள சரீரியசரீரி யல்லாதவரு கிற் சூனியபபொருளாய்ப் போவன, சரீரியசரீரியாகில் விருத் ததனமம் இரண்டுஞ் சீதமும் உஷணமுமபோல ஒருபொருளி லிரா. அப்படியிருக்குமாகிலுஞ் சரீரிகரும் அசரீரிக்குஞ் சொல் ப்போகிறகுற்றஞ் சொல்லாமறறுமே வரும்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இவ்வளம் ஆறுசெய்யுளான ாருமாகி மருவிடுமென்றதனை வலியுறுத்தி, இனி அநாதிமுத்த சித்துருவென்றதனை இருபத்திரண்டு செய்யுளான் வலியுறுத்துகின்றார்.

ஐந்தொழில் செய்யு முதல்வனுக்கு வடிவம் இன்றியமையாமையின், அவ்வடிவமாவது அருவமுதலிய மூன்றனுள் யாதெனின்? அவனுக்கு அம்மூன்றும் வடிவேயாமென்பதாம்.

இது சொற்பொருட்பின்வருநிலை.

உள்ளவென்றது அன்பெறாத வகரவீற்றுப் பலவறிசொல்.

சொன்னவொருவன் அநாதிமுத்த சித்துருவென மேற்கூறப்பட்ட வொருவன்

இதனானே அநாதிமுத்த சித்துருவாகிய சங்காரக்கடவுளுக்குத் தடத்த வடிவமிவையென்பது கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இங்ஙனஞ் சொல்லிப்போந்த கர்த்தாவினுடைய வடிவு அருவமோ உருவமோ அரூபாரூபமோ வென்று கேட்டவனை நோக்கி; மூன்று மவனுக்குள்ளதென றருளிச் செய்கிறார்.

அருவமோ ரூபாரூப மாவதோ வன்றி யின்ற வுருவமோவுனைக்குங்கர்த்தா வடிவெனக் குணர்த்திடுகெனவில் - நீர்சொல்லுகிற கர்த்தாவுக்கு வடிவு அருவமென்று சொல்லுமோ! உருவமென்று சொல்லுமோ! இவையிரண்டுமல்லவாய் நிற்கிற அரூபாரூபந்தானோ என்று எனக்கு விளங்கச் சொல்லவேணுமென்று நீ

சொல்லில்?--அருவமு மருபாருபமான து மன்றிநின் றஉருவமு மூ னறுஞ்சொன்ன வொருவனுக்குள்ளதாமே-அரூபமாயிருந்துள்ள திருமேனியும், அருபாரூபமாயிருந்துள்ள திருமேனியும், இவையிரண்டு மல்லவாய் நிற்கிற உருவமாயிருந்துள்ள திருமேனியும், ஆகயிவைமூன்று திருமேனியும முன்சொன்ன கர்த்தாவுக்கு அநாதியே யுள்ளதாயிருக்கும.

இதனுற சொல்லியது அருவம் உருவம் அருபாருப மென்றுசொல்லப்பட்ட இந்த மூன்று திருமேனியும் சிவனுக்கே யுள்ளதென்று முறைமையை யறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

உரைக்கும் கருத்தாவடிவு-ஐந்தொழில் எப்படி, முதல்வனுக்கு வடிவமின்றி யமையாமையி னவ்வடிவமாவது,— அருவமோவுருவருபமானதோவன்றி நின்றவுருவமோ-அருவாகியவடிவமோ அருவுருவாகிய வடிவமோ அவவிரண்டுமின்றி நின்றவுருவாகியவடிவமோ இம்மூன்றனு ள் இவ்வடிவென,—இங்கெனக் குணர்த்தெனனில் - இவ்விடத்து எனக்குணர்த்தவேண்டுமெனில்,— சொன்னவொருவனுக்கு - அநாதிமுத்த சித்துருவென மேற்கூறப்பட்டவொருவனுக்கு,— அருவமு முருபாருபமானது மன்றி நின்றவுருவமு மூன்றும - அருவும அருவுருவும் உருவுமெனகின்ற மூன்றும்,—உள்ளவாமே - வடிவாமெனபதாம்.

இதனுனே அநாதிமுத்த சித்துருவாகிற சங்காரக் கடவுளுக்குத் தடத்த வடிவ மிவையென்பது கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



முற்கூறியவற்று ளுருவத்தின முறைமை யுணர்த்துகிறார்

நண்ணிடு முருவமென்னி னமக்குள வுருவம்போலப், பண்ணிட வொருவன்வேண்டு மிச்சையேற் பலருமிச்சை, கண்ணிய வுருவங்கொள்ளேம் யாம்பெருங் கடவுடானு, மெண்ணிய யோகசித்தர் போலுரு விசைப்பனாறனே. (கக)

| | |
|---|---|
| (இ-ள்.) நண்ணிடு முருவமெனில் | அந்தக கர்த்தாவுக குருவந்தானே திருமேனியென்று சொல்லில்? |
| நமக்குள வுருவம போலப் பண்ணிட வொருவனவேண்டும | நமக்கொருவ ருண்டாக்கின வடிவுகள போல, அவருடைய சரீரமும் ஒருவனுண டாகக வேண்டும ஆதலா லநவஸ்தா தோஷமுண்டாம். |
| இச்சையேற் பலருமிச்சை | இச்சையினு லுமது கர்த்தா வடிவுகொள் ளுவனென்று சொல்லுகிறீராகில், ஆன்மாக்களெல்லாருந் தங்கடங்களிச்சையினாலே வடிவுண்டாக்கிக் கொள்ளவேண்டும். |
| கண்ணிய வுருவங் கொள்ளேம் யாம் | யாம நினைததொரு வுருக கொள்ளமாட்டோமாகையால், |
| பெருங் கடவுடானு மெண்ணிய யோகசித்தர் போலுரு வி | எல்லார்க்குங் கண்ணுற்காணவு முவமிக்கவு மளவிடவும் படாதேயிருக்கிற பெருமையினையுடைய யோகசித்தர் நினைத்தகோருருவைச் சமஷ்டிரூபத்தாற் கொள்ளுமா |

சைப்பன் ருனே றுபோல, கர்த்தாவுந் தனது காருண்ணி யததிருவே யானமாககளை யிரட்சிக்கையி னபொருட்டுத் தனககுவேண்டிய கோருரு வைத தானே கொள்வன எ-று. (௩௧)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

இவவாறு விருதத தருமமாயிருககிற ரூபமும ரூபாரூபமு மரூபமு மொருவனுக கு ளடைனின அநேகாநதிக தோஷமு ணடாமெனன, மேலு மூநபாதிகளை யொவவொனருகப் பூாவ பக்ஷத்தி லாக்ஷேபித்துச சித்தாநததில் சமாதானங் கூறல்.

நமணணிடுமுருவமெனனி னமககளவுருவமபோலப பணணி ட வொருவன வேணடும - பொருநதப்பட்ட ரூபவான பரமே ஸ்வரனெனின? நம்முடைய வுருவததை யொருவனுணடாக் கினதுபோல வவனுடையருபததை யுணடாககுவா னொருவன வேண்டும,—இச்சையேற் பலருமிச்சை-சுவேச்சையிஞ லுரூப ங்கொள்வரெனின? எல்லாருஞ சுவேசசையிஞ லுரூபங்கொள ளலாமெனின, அங்ஙனமலலறு — கணணிய வுருவங கொள்ளே மியாம் - நாமெல்லா நினைத்தவுருவங்களை யெடுககமாட்டோ ம,—பெருங்கடவுடானு மெணணிய வியோக சித்தர்போ லு ருவினைப்பன ருனே - மகாதேவராகிய கர்த்தாவும் யோக சித்தாக டாங்கணணினைதத வுருவமானது போலத் தமமுடைய விச்சையிஞல் ரூபத்தைப் பொருநதுவரெனறறி.

பாதஞ்செலவொடுவரவு மென்பதஞ லிசைவனென்பதற்கி சைப்பனெனறிருகாலத்தையுங் குறித்துச்சொல்லியதெனவறிக.

———

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சரீரியுமாம் அசரீரியுமாம் சரீரியசரீரியுமாம் என்று நாம் சொன்னோம், சரீரியசரீரியாகிற் சரீரிகளும் அசரீரிகளுஞ் சொல்லுங் குற்றம் வருமென்றது ஏதென்று குரு விஞ்ஞவசஷ்ன கூறுகின்றதற்குக் கூறுகின்றார்.

நண்ணிடு முருவமென்னில் - கர்த்தாவைச் சரீரம் வந்து பொருந்துமென்னில்,—நமக்குள வுருவம்போல - நம்போல்வார்க்குள்ள சரீரத்திற்குப்போல்,—பண்ணிடவொருவன் வேணும் - சிருட்டிக்க வேறொரு கர்த்தா விரும்பப்படுவன அப்படியாகி லவனுக்கும் வேறொருகர்த்தா வேண்டுமென்று அநவஸ்தை வரும்,—இச்சையேல் - தமது சங்கற்பத்தாற்ற மக்குச் சரீரத்தைப் பண்ணிக்கொள்வாரென்று நீர் படித்துப் பேசில், தாம்சரீரியாயிருந்து தமக்குச் சரீரத்தைப்பண்ணிக் கொண்டாரோ, அன்றி யசரீரியாயிருந்து பண்ணிக்கொண்டாரோ; சரீரியாயிருந்து தம திந்தச் சரீரத்தைச் சிருட்டித்தாராகில், அந்தச் சரீரத்தையுஞ் சரீரியாயிருந்து சிருட்டிக்க வருமென அநவஸ்தை வரும். அசரீரியாயிருந்து சங்கற்பத்தாற் றமது சரீரத்தைப் பண்ணிக்கொண்டாரென்னில், அப்படிச் சங்கற்பத்தாற் சர்வப்பிரபஞ்சத்தையும் பண்ணுவரென்று சரீரகற்பனை நிஷ்பலமாம். அப்படியாகிலும்,—பலரு மிச்சை-நாமெல்லாரும் நமது சங்கற்பத்தால் நமக்கு வேண்டிய சரீரங்களைப்பண்ணிக் கொள்வோம். அப்படி நீ சொல்லவேண்டியதல்ல,— யாம் - நாமெல்லாரும்,—கண்ணிய வுருவங்கொள்ளேம் - கருதிய திவ்விய சரீரங்களை மலாதி தகைந்த சாமர்த்தியர்களாதலாற் பண்ணிப் பொருத்திக்கொள்ளமாட்டோம்,—பெருங்கடவுளாலும்- பரமகர்த்தாத்தானும்,—எண்ணிய யோ

காசித்தர்போ லுரு விசைப்பன்காணே - எண்ணிக்கையாயிருக்கின்ற யோகர்கள சித்தர்களபோல வேண்டிய சரீரங்களை யெடுப்பன.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இவ்வுரையில் (௩௧௬) இரண்டு செய்யுளையும் ஒன்றாகமாக்கி உரையிட்டிருப்பதால் இச்செய்யுட்கு (௬௦) செய்யுளின் உரை வரிசையிற் பார்க்கவும்

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

உம்முடைய கர்த்தாவுக்கு ஒரு வடிவுண்டென்று சொல்லில், நம்முடைய வடிவுகளபோல அவனுடைய வடிவையும் ஒருவர் படைக்கவேண்டுமென்று சொல்ல, அவனது திருமேனி ஒருவர் படைப்பிலகப்படாதென்று அருளிச்செய்கிறார்.

நண்ணிடுமுருவமெனில் நமக்குளவுருவமபோலப் பண்ணிடவொருவனவேண்டும் - கர்த்தாவுக்கு உருவமுண்டென்று நீர் சொல்லில் நமக்குண்டான வடிவுகளைபோல அவனுடைய ரூபத்தையுமொருவருண்டாக்கவேணும். கர்த்தா சுவேச்சாவிக்கிரகனுகையாலே அவனுக்கு ஒருவடிவு ஒருவர் கொடுக்கவேண்டியதில்லை தன்னுடைய திருவுளத்துக்குப் பொருந்தின திருமேனி தானே யெடுத்துக்கொள்ளவனெனனில்?—இச்சைபேற் பலருமிச்சை - அவனது சுவேச்சையினாலே உருவங்கொள்ளுவனென்று நீர் சொல்லில்? சர்வானமாக்களுக்கும் தங்கள் தங்கள் இச்சையினாலே வடிவுகளை உண்டாக்கிக் கொள்வார்கள். —

கண்ணியவுருவங் கொள்ளேம்யாம் - இப்படி சருவான்மாக்களுக்குக் கர்த்தா மிச்சையினாலே தங்களுக்குக் கருதப்பட்ட வடிவுகளையுண்டாக்கிக் கொள்ளுவர்களென்று நீ சொன்னதை நாங் கொள்ளுவதில்லை ஆனாலுமுடைய கர்த்தா வடிவு கொள்ளுகிறபடி யெப்படியெனில்?—பெருங்கடவுடானுமெண்ணியயோகசித்தர் போலுருவினைப்பண்ணுநீன - எல்லார்க்கு மேலாய் மகத்தாயிருக்கிற கர்த்தா தானும், சொல்லப்பட்ட யோகசித்தர்கள் தங்களுக்கு வேண்டின வடிவு ஒருவர் கொடாமலிருக்கச் செய்தே தாங்களே யெடுத்துக்கொள்ளுகிற தனைப்போல; சிவனுந் தனக்குவேண்டின திருமேனி தானே கொள்ளுவான்.

நண்ணிடு முருவமென்றது, புத்தன் அவன் கர்த்தாவில்லையென்றும் உண்டானாலும் உருவமுமல்ல வருவமுமல்லவென்றுஞ்சொன்ன விதற்குப் பரபட்சம், அவன்மதம் "உருவொடுங்கினருவென்னி லுருவமுனபடைத்தாவேண்டு, முருவவனிச்சையெனி லுலகெலாமிச்சையாகு, முருவுலகத்துளோர்சட் குருவதுகனமாவெனனி, லுருவுடை யோகரெல்லா முற்றதுகன்மத்தாமே" என்றும், "அருவெனிற்பவத்தினிவ்று மெடுத்திடானாகாசம்போல், மருவினனிழல்போலெனனில் மாநிலர்க்காகுமாட்சி, பெருகியவறிவுண்டென்று பேசிடினேசத்தோடுங், கருதிடவுருவமவேண்டு மில்லையேற கருதலின்றே" என்னுமதுங்கண்டுகொள்க.

சித - பர - சௌ - மத - உரு - உகூ.

இதனாற் சொல்லியது கர்த்தாவினுடைய திருமேனி கன்மத்துக்கீடான ஆன்மாக்களுக்குள்ள வடிவுபோல ஒருவரால் சிருட்டிக்கப்பட்ட தென்றும், தன்னுடைய திருவுளத்துக்குப் பொருந்தினதொரு திருமேனியைத் தானே கொள்ளுமென்னு முறைமையையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---

(௯௧-௪0) செய்யுளிரண்டுமே மோர்முடிபாககி யுரையிட்டிருப்பதால் இவ்வுரை (௪0) செய்யுள வரிசையிறபின வைககப் படடது

---

## மறைஞானதேசிகர் உரை.

இதுவுமது.

வித்தக யோகசித்தர் வேண்டுருக கொளளுமா போ, லுத்தமன கொளவனெனனி லவாகளி லொருவ னுவ, னததகை யவர்களெலலா மாகருவ தருளாலாங கு, வைததது மாயையெனனில் வடிவெலா மாயையா மே. (௪0)

(இ-ள) வித்தக யோகசித்தா வேணடுருங் கொள்ளு மா போ லுததமன கொளவ னென னில் — யோக சித்தாகளைப்போலக காததாவுந தனககுவேணடியதோ ருருவததைககொள வனெனனில்?

அவர்களிலொருவனுவன — அந்தயோகசித்தர் ராகத்துவேஷத்துடன் கூடினவாகளாகையால், அவவியல்பினையுஞ் சியனுமுடையவனுவன.

அததகை யவர்களெல்லா மா — அததகைமைப் பாட்டினையுடைய யோக சித்தாகளெல்லாருஞ் சரீரத்தை யெடுக்கிற

வித்தகயோகர்சித்தர் வேண்டுருக் கொள்ளுமாபோ லுத்தமன் கொள்வனெனவில் அவர்களி லொருவனுவன் - அந்த வித்தகயோகர் சித்தர்களுக்குள்ளே யொருவனுவன். ஆனலேது? அவர்கள் பிராகாமிய சித்தியினலே தங்களுக்குச் செயற்கையாகிய திவ்வியசரீரங்களை யெடுத்துவிடுவார்கள்; தங்களியற்கையினுஞ் செயற்கையாகிய சரீரங்களைவிட்டு இயற்கையாகிய திவ்விய சரீரங்களை யெடுக்கமாட்டார்கள்,—அத்தகையவாக வொல்லா மாயகுவ தருளாலாங்கே வைத்தது மாயையெனவின - அறுவனறியு மயார்களா? ஆங்கே - அவ்விடத்து,— அத்தகையெல்லாம் - பிராகாமிய சித்தியினு லெடுக்குஞ் சரீரங்களினைத்து முபாதான காரணமறியுமுண்டாகாதென்ன,— அருளால் - சிவாஞ்ஞையினுஞ் காரியத்துவாரத்தினலே,— மாயைவைத்த தெனவில் - மாயையுமுண்டாக்கிக் கொடுத்ததென னுத்தரஞ் சொல்லவில், அதுகிருட்டாந்தம்போல் அச்சிவனுக்கும்,—வடிவெல்லாமாயையாமே - சரீரமுற்று மாயாமயமாமே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

இனி இரண்டாருஞ் பிறர் கூறுங் குற்றங்களைப் பரிகரிப்பாராய் உருவத்தினைக் கூறுங் குற்றம் பரிகரிக்கவே, ஏனையவும் பரிகரிக்கப்பட்டனவாமென்னுங் கருத்தான், உருவத்தின்கணுசங்கித்துப் பரிகரிக்கின்றார்.

முதல்வனுக்கு உருவமுண்டென்னின்? உருவமெல்லாம் ஒருபெற்றியவாகலின உருவமுடைய நம்மனோர்க்குள்ளதாகிய பரதந்திரம் முதல்வனுக்குமுளதாதல்வேண்டும்; அஃதன்றாயின் முதல்வனுக்குள்ளதாகிய சுதந்திரம் நம்மனோர்க்குமுளதாதல்வே

ண்டும். இனி, நம்மனோர்க்கும் யோகிகட்கும் உளதாகிய வேறுபாடு பெரிதாயினாற்போல, யோகிகண்முதலிய நம்மனோர்க்கும் முதல்வனுக்குமுளதாகிய வேறுபாடு பெரிதாகலின்; ஒப்புமை கூறுதல் பொருந்தாதெனின்? அங்ஙனமாயினும், உருவடிவெல்லாம ஒருபெற்றியாமையின் உருவத்தின் வேற்றுமையில் வழி அவ்வேறுபாட்டாற்போந்த பயன் என்னையெனபதாம்.

வித்தகயோகசித்தர் வேண்டுருக்கொள்ளுமாபோ லுத்தமன்கொளவென்னவின் என்றது அநுவாதஞ் செய்துகொண்டது.

இவையிரண்டு செய்யுளுந் தடை. (௩௧-௩௨)

## நிரம்பவழகியருரை வருமாறு.

இப்படி யுருமுடைய கர்த்தா யோகசித்தர்களைப்போல வடிவங் கொள்ளுவருகிலவாகலி னொருவனென்று சொல்ல அல்லவென்று மறுத்து மேலருளிச் செய்கிறார்.

வித்தகயோகசித்தர் வேண்டுருக்கொளுமாபோ லுத்தமன்கொளவென்னி லவர்களிலொருவனாகும் - சாத்திரஞ்சொன்ன முறைமையிலே சித்திபெறத்தக்க தபசுகளைப்பண்ணின யோகசித்தர் தங்களுக்கு வேண்டின வடிவுகளைக் கொள்ளுமாறுப்போல் சிவனும் அப்படி வேண்டின வடிவுகளைக் கொள்ளுவனென்னில்? இவனும் இந்த யோகசித்தர்களிலே ஒருவனாவன். அப்படி யல்லகாணும், சிவனுடைய வடிவு அந்த வடிவுகளுக்கு ஒன்றானதல்ல. அதேதென்னில்? அந்தவடிவுகள் சிவனுடைய காருணியத்தினாலே பெறுகிற வடிவுகளுமாய் மாயாதேகமுமாயிருக்கையினாலெனக் கொள்க.—அத்தகையவர்களெல்லா மாக

ருவத்தருளாலாங்கு வைத்ததுமாயை - அந்த முறைமையினையு
டைய யோகசித்தர்களெல்லாம் கர்த்தாவினுடைய வருளினு
லே வேண்டின வடிவுகொள்ளுவர்கள் அப்படிக் கொள்ளுகைச்
செய்தேயு மவர்கள் கொள்ளுகிற தேகங்களெல்லா மாயாதேக
மாயிருக்கும்,— எனனில் வடிவெலா மாயையாமே - என்னு
ஞ்சொல்லிற் கர்த்தாவாகிலும் வடிவுகொள்ளுவனாகி லந்த வ
டிவுகளெல்லா மாயாதேகமாம்.

இதனாற் சொல்லியது சித்தர் யோகிகளைப்போலச் சிவனு
ம் தனக்கு வேண்டின வடிவுகொண்டாலும், அந்த வடிவுகள்
போலச் சிவனுடைய வடிவு மாயாதேகமல்லவென்ன; அவனு
மொரு வடிவுகொள்ளுவ னாகையிலே வடிவுகளெல்லா மா
யாதேகமு மாமென் றவன்சொன்ன முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உருவங்கொளாதி யெனனில் - முதல்வனுக் குருவமுண்டெ
னவில்,—உருவங்கொளாதி போல - உருவமெல்லாமொரு பெற்றி
யவாகலி னுருவமுள - நம்மனோர்க் குளதாகிய பரதந்திரம்
போல,— பண்டு வொருவன் வேண்டிற் - முதல்வனுக்கு மு
ருவுண்டாதற் கொரு கருத்தாவுண்டெனப்பட்டு பரதந்திரமா
தல் வேண்டிற்,—இசையெல் - முதல்வ னினைத்த வடிவங் கொள்
ளுதல் சுதந்திரமெனனில்,— பலருமிச்சை - முதல்வனுக குளா
தாகிய சுதந்திர நம்மனோர்க்கு முளதாகல் வேண்டிற்,—யாங்க
ணணிய வுருவங் கொள்ளேம் - நம்மனோர் கருதிய வடிவமெடு
த்தல் முடியா,—பெருங் கடவுளதாலும்-முதல்வனும்,—யோக
சித்தாபோல் எண்ணிய வுருவிசைப்பனகாண - யோகிசித்தர்

| | |
|---|---|
| (இ-ள்.) மாயை தான் மல த்தைப் பற் றி வருவதோர்வ டிவமாகும் | நீசொல்லிய மாயை கன்மத்துக் கீடாக வடிவை யெடுப்பிப்பதன்றித் தனதொரு வடிவை வேறொன்று லெடுப்பிக்கமாட்டா மையால் மலத்தைச்சார்ந்து வருவதொரு வடிவைப் பொருந்தும். |
| ஆயவா ணவ மகன்ற வறிவொ டு தொழிலையா க்கும் | இப்படி யான்மாக்களைப் பொருந்திநின்ற வாணவ மலமானது அவர்களது ஞானக்கி ரியைகளைத் தடுத்துப் பிரகாசியாதபடி நிற் கும் |
| நாயக னெல் லாஞானத் தொ ழிலுமுத் தன னலாலே | ஆன்மாக்களைப் போலச் சிறிதுஞ் சிறுமைத்தை யு மறைப்புமில்லாத கர்த்தாவானவன் சர்வத்தையு மறிகையினாலுஞ் சர்வகிருத்தி யங்களைப் பண்ணுகையாலும் |
| காயமோ மா யையன்று | அவனது வடிவு மாயையினா லெடுக்கப்ப ட்டதாயி னவனு நம்மைப்போல வொருவ னாய் விடுவன , |
| காண்பது சத் தி தன்னால் | யாங்காணப்பட்ட திருமேனி யவனது ச த்தி சாமர்த்தியத்தாற் கொண்டது. எ-று. |

ஏகாரந் தேற்றம்

அவனுக்கு வடிவுண்டாகப் படுவது சத்தியா லென்றவா று (௬௧)

இதற்குக் கிரணாகமத்திலும் பார்க்கியையிலுங் காண்க.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் உத்தரங்கூறல்.

**மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவதாகும்.**

மாயையான தஞ்ஞான சம்பந்தியாயிருக்கிற வான்மாக்களைப் பற்றி வருவதொரு ரூபமாகும்,— ஆயவாணவ மகன்ற வறிவொடு தொழிலையார்க்கும் - அஞ்ஞானமாகிய வாணவம் பெரிதாகிய ஞானத்தையுங் கிரியையு மறைக்கும் அஃதன்றி,—நாயகனெல்லா ஞானத்தொழின் முக்கண்ணலாலே காயமோ மாயையன்று காண்பது சத்திகன்றல்-சர்வலோகநாயகனான சிவன் சர்வஞ்ஞனுஞ் சர்வகர்த்தாவு மாதலியினால் அவனுடைய தேக மாயையல்ல பின்னையேதெனின்? சிற்சத்தியேயென றிதனபொருள.

[illegible]

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——0——

ஏகதேசவுவமையில் முற்றுவமைக்குள்ளவுரை யுரைக்கப்படாதென றுரைக்கின்றார்.

மாயைதானமலத்தைப்பற்றி வருவதோர் வடிவமாகும் - ஆணவமல நிமித்தமாக வாராநின்றிருக்கும தூலசூக்குமசரீரமாகும். எதுக்காக?—ஆயவாணவம - அந்த ஆணவமலம பசு ஆன்மாக்களுக்கு,— அகன்ற வறிவொடு தொழிலையார்க்கும் - சிவனுக்குப்போல விரிந்த சர்வஞ்ஞத்துவஞ் சர்வகர்த்திருத்துவ மென்கின்ற சிவத்துவமாகிய பேறிவைக கட்டும. அதனாலதப் பசுவானமாக்களுக்கு மல பரிபாகம் வரும் பொருட்டுப் போகம்புசிக்கச சிற்றறி வுண்டாகச் சிவனருளால் மாயை து

வுமன்றி எல்லாவறிவும் எல்லாத்தொழிலும் எல்லா முதன்மையுமுடையன். இவ்வண்ணம் அவைகட்குத் தம்முள் ஏற்றத்தாழ்வுண்மையின், அதற்கேற்ப மலத்தைப்பற்றிய பசுக்களுக்கு அதனோடொட்டுடைத்தாய ஏகதேசவறிவைச்செய்யு மாயையுருவமும், அநாதிமுத்த சித்துருவாகிய பசுபதிக்கு மலநீங்கியவுயிர்களுக்கு வியாபகவறிவைச் செய்யுஞ் சத்தி யுருவமுமாதலே அமைவுடைமையின், அவற்றினிடை தம்முள் ஏற்றத்தாழ்வுண்மை இனிது விளங்குதலான், அதனையறியாது இச்சையேற பலரும் இச்சையென்றும், மாயையென்னில் வடிவெல்லா மாயையாகுமென்றுங் கூறுதல் அடாதென்பதாம்.

தானென்பது அநுவதித்தலையுணர்த்தி நின்றது.

பற்றியென்பதுபெயர் "ஒருங்கவிந்தாருயிற்றால்" எனபுழிப் போலப் பற்றிக்கொண்டு என்னும் நப்பு விரித்துரைக்க.

காயசமெல்லாஞானந் தொழின்முதனிறைவாலெனவே, உயிர்கள் ஒருஞானத் தொழின்முதலே நண்ணுவனவென்பது பெறுதும்.

அகறல் நீங்குதல்.

ஆதல் பொருந்துதல், அஃது உபசாரத்தாற் காரியத்தின் மேனின்றது.

ஓகாரம் சிறப்பின்கண் வந்தது.

ஏகதேசவறிவைச் செய்தல் ஏகதேசப்படுந் தகுதியுடைய பொருட்கேயன்றி ஏனையதற்குரித்தன்று, வியாபகவறிவைச்செய்தல் வியாபகப்பொருட்கேயன்றி ஏகதேசப்படுந் தகுதியுடையதற்கு உரித்தன்றாகலான் ஏகதேசத்திலறிவும் பசுக்களுக்கு ஏகதேசப்படுந் தகுதியுடைய மாயையே உருவமாயிற்று; வியாபகமாயறிவும் பசுபதிக்கு அதுபோலேகதேசப்படுந் தகுதியில்லாத சத்தியே உருவமாயிற்றெனக் கொள்க.

இனி, ஆணவமகன்றவறிவொடு தொழிலையார்க்கும் என்பதற்கு, வியாபகஞானத் தொழில்களை ஆணவமலந் தடுக்குமென் றுரைப்பாருமுளர். முன்னும் பின்னும் பொருளியைபுபடுத்தற்கேலாது நின்றுவற்றுமாகலின் அஃதுரையன்மையறிக.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மீளவும் புத்த நும்முடைய கர்த்தாவுக்கு மாயாதேகமல்லவோவென்று சொல்லில், எம்முடைய கர்த்தாவுக்கு மாயாதேகமல்ல, சத்திவடிவுகாணும். அப்பொழுது சத்திவடிவென்றும் மாயாவடிவென்றும் வேறுவயாதோவென்று சொல்ல, ஒவ்வாதென்று மறுத்தருளிச்செய்கிறார்.

மாயைதானமலத்தைப்பற்றி வருவதோர் வடிவதாகும் — மாயாதேகமானது ஆன்மாக்கள் செய்த கன்மத்துக்கீடாக ஆணவமலங் காரணமாகவுண்டாய் வருகிறவடிவுகளாகயிருக்கும். எம்முடைய கர்த்தாவுக்குச் சத்திவடிவு காணும். அப்போ சத்தியாலே கொள்ளப்பட்டவடிவு அப்படியல்லவோவெனின், அல்ல. அதெப்படியெனில்?— ஆயவாணவ மகன்றவறிவொடு தொழிலையாக்கும் நாயகன் — இப்படி அநாதியேயுண்டாய்வருகிற ஆணவமலத்தால் மறைக்கப்படாமல் மலாதீதனாயிருக்கிற ஞானசத்தியையுங் கிரியாசத்தியையுமுண்டாக்குகிற கர்த்தாவானவன்,— எல்லா ஞானத் தொழில்முதல் நண்ணலாலே காயமோமாயையன்று — அந்தக் கர்த்தா சருவஞ்ஞத்தையும் சருவ கிருத்தியத்தையும் சருவ முதன்மையையுமுடையவனாகையாலே அவனுக்கு வடிவு மாயையல்லவாகையாலே,— காண்பது சத்திதன்னால் — அவனுடைய வருளையவனுக்குத் திருமேனியாம் என்றறிவாயாக.

இதனாற் சொல்லியது மாயாசரீர மலசர்பந்தமாயிருக்கிற ஆன்மாக்களுக் கொழிந்து சிவனுக்கில்லையென்றும், அவன் மலர் தீதனாயிருக்கிறபடியினாலே தன்னது சத்தியே வடிவாகச் சகளீகரித்துப் பிரபஞ்சத்தை நடத்துவனென்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு·

---

இனி விடை.

நீ யிங்ஙனங் கூறுதல் பொருந்தாது, அச்சிறுதேவர்களேற்றத் தாழ்வாலங்கங்கள் ஏற்றத்தாழ்வுடையனவன்றித் தம்மு ளொப்பனவல்ல, அற்றேலவ்வேற்றத்தாழ்வுகளென்னை யெனிற் கூறுதும். போகிகளாம்மேனோரெல்லாரும் மலத்தைப் பற்றிக்கிடக்கும் பசுக்கள், அதுவன்றி ஒன்றையே யறிதலுமொன்றையே செய்தலுமன்றி மேலே முதன்மை யாதலுமாகிய அற்பஞானத் தொழில் முதலுடையராம் அப முதல்வருவான,—ஆபஞ்ஞவ மகன்ற - இவ்வாணவமலம் நீங்கிய,— அறிவொடு தொழிலையார்க்கு நாயகன் - அறிவிற்றாங்கி நின்றுணர்த்தவோனாகிய பசுபதி —எல்லா ஞானத்தொழின் முதன்மைகளானே - அதுவுமன்றி யெல்லா அறிவு மெல்லாத் தொழிலு மெல்லா முதன்மையு முடையன இங்ஙன மங்கிகட்குத் தம்முளேற்றத் தாழ்வுகளுண்மையின் அதற்கேற்ப,—மலத்தைப்பற்றிய பசுக்களுக்கு,—வருவதோர் மாயைதானவடிவமாகும்-அதனேடியை புடைத்தாயேகதேசஅறிவைச்செய்யு மாயை யுருவமாதலும், அநாதிமுத்த சித்துருவாகிய பசுபதிக்கு,—காயமோ மாயையன்று-வடிவ மேகதேசத்தைச்செய்யு மாயையல்ல ஆகலின,— சத்திதனாலே காண்பது - மலநீங்கிய வுயிருக்கு வியாபக அறி

வைச்செய்யும் சத்தியுருவமு மாதலே யமைவுடைமையின் அங்கஙாசளினுந் தம்மு ளேற்றத்தாழ்வு ண்மை இனிது விளங்குதலான அகனையறியாது இசசைசயேற பலருமிசசை யெனறும, மாயையெனனில வடிவெலா மாயை யாகுமெனறுகூறுதல் அடாதெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



அவனுக்கு வடிவுண்டாகப் பயிவது சத்
தியாலென வுணாததுகிறா

சத்தியே வடிவென்றாலுந் தானேபரி ணாமமாகு,நி
த்தமோ வழியுமத்தா னின்மல னருவேயெனனி, னத்
துவா மாக்கத்துள்ளா னென்வ னருமைதனனைப்,புத்
திதா னுடையைபோல விருந்தனை புகலககேளீ.(சஉ)

| | |
|---|---|
| (இ-ள்.) சத்தியே வடிவென்றாலுந் தானே பரிணாமமாகு நித்தமோ வழியு மத்தா னின்மல னருவே யெனனில | அநந்தசகர்த்தாவுக்குச் சத்திதானே வடிவாகாதோவெனனில்? அப்பொழுது பரிணாமமெனனுங் குற்றமுண்டாம அதற்கு நித்தியத்துவமில்லையாயவிடும அதனாலே நின்மலனாகிய சிவன ரூபமொழிந்து ரூபங்கொள்ளானென்று நீசொல்லில்? |
| அத்துவா மார்க்கத் துள்ளா னென்று | அரூபமாகி லான்மாக்களுக்குப் பாவனைக்கத் கூடாது. |

ஆகையால் வடிவுடையவனையே பாவித்துப் பூசிக்கையின பொருட்டு மயிர் தோல் முதலியவாறுங் கலைமுதலியவாறுக இ

ருமேனியாகையால்; அதத்துவாமூர்த்தியென்று வேதாகமங்கள் சொல்லுகிற தில்லையாய விடுங்காண

இவ னருமை நீ புத்தியை யுடையவாகளைப்போல விரு ந்தனைப் புத்தி கனையா லவனுடைய ஸ்வரூபத்தையும் வ் தா னுடைமை யாபகத்தையு முனக்குணாத்து நம அதனைக போலவிருந்தனை கேட்பாயாக எ - று.

புகலக்கேணி.

இந்றகு மதங்ந்தனிலுரு சுவாயமபுவத்திலு மறிக (சஉ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

சத்தியே வடிவெனறுனு கான பரிணாமமாகு நித்தமோ ஊழியும் - சத்தியே தேகமெனறும பொழுது தேகம பாலியாதி யவத்தையை யடைய வேணடும், அடைந்தபொழுதே பரிணா மியாய் நித்தியத்வ வானியுமவரும் —அத்தா லினமலனருவே யென்னி லத்துவாமாகத் துளளானனறு - அத்தனமை யுளள சங்கை பரிகாரமாகக காத்ரா வுருபமெனனில், சடத்துவாறுப பிரவிஷ்ட னல்லவாமெ னன, உதாரமாக,— இவனருமை தன் னைப் புத்திராவுடைடைபோல விருந்தனை புகலக்கேணி - இவ வாறு சங்கிதமாயுளள சிவஸ்வருபத்தி னருமையைச் சொல்லு கிறோம, நீபுத்தி யுடையவனைப் போ லிருக்கிறாய் கேளெனறு மேறகூறுதல்.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அப்போது பரிணாம தோஷம் வருமென்று சொல்லப் பரி கரிக்கின்றார்.

சத்தியே வடிவென்றாலுந் தான் - சிவனுக்குச் சிவசத்தியே சரீரமென்று சொன்னாலும் அகண்டித மூர்த்தியாகச் சொல்லலாம், கண்டிதமூர்த்தியாகச் சொல்லில்,— பரிணாமமாகும் - திரிவதாகும். அதனால்,— நித்தமோ வழியும் - நித்தியமென்கிறதுபோய் அநித்தியமாகும் மாயை கலாதி காரியமாவதுபோல ஏகதேசத்திற் கண்டித மூர்த்தியாமெனனில்? மாயைபோற் சடமாம்,— அதனால் - அந்தக்குற்றம் வருதலால்,— நின்மலனுருவே யெனனில் - நீர் சொன்ன வுருவமன்று, நீர்சொன்ன வுருவே யெனனில்?— அத்துவாமார்க்கத்துள்ளானென்று - சிவன் சடத்துவா மார்க்கத் துருவுருவாயிருக்கும் பொருள்போலல்லன, ஆமெனனில்,— இயன்றமை தன்னைப் புத்திதானுடைமைபோல விருந்தனை புலக்கேனி - மாறுபடுமென்பது சொல்ல நீ கேள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

அங்ஙனமாயினும் உருவமெல்லாங் கண்டிதப்பொருளாகலிற் பரிணமித்தழிவெய்துதல் சிவசத்திக்குத் தகாமையால், அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் முதற்கட் கூறப்படும் அருவப்பொருளாதன்மாத்திரையானே அமைவுடைத்தெனின்? அத்துவாவையுங் கடந்த பொருளை அவற்றோடொப்ப வைத்து அங்ஙனங் கூறுதல் பொருந்தாதென்பதாம்.

புத்திதானுடைமைபோல விருந்தனையென்பது இழித்தற்கண் வந்த குறிப்புமொழி.

அன்றென்பது பாடமாயின், அத்துவாமார்க்கத்துள்ளானென்பது. அத்துவாமார்க்கத்துள் ஒன்றாகக் கருதப்பட்டானெ

ன்றுரைத்து, அன்றியவனென்பது அவயவத்துவாக்கள் இயல்போ டு மாறுபட்ட இயல்பினன் வினைத்தொகையாக வைத்துரைக்க. அன்றுதல் அப்பொருட்டாதல் "அன்றினார்புரமெரித்தார்க் கு" என்பதனானுமறிக. அற்றேல், முதல்வன் அருவமேயெனில் அத்துவாக்களிலொருவனாய் முதல்வனென்றல் யாங்ஙனமெனி ன்? அது வருஞ்செய்யுளிற் கூறப்படும்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

தனு சத்தியே வடிவாதலால் ஒரு உருவமுண்டாம், உருவ முண்டானபொழுதே அதற்குக்கு அழிவுமுண்டாம், ஆகையா ல் சிவனுக்கு வடிவு அருவமென்று புறமுனசொல்ல; அருவமல்ல வென்று மறுத்து அருளிச்செய்கிறார்.

சத்தியே வடிவென்றாலும் ஞானபரிணாமமாகு நித்தியமாவ ழியும்-அந்த ஞானசத்தாவுக்குத் திருமேனி சத்தியேயென்று சொ ல்லினும் அதுக்குப் பரிணாம முண்டாகா நித்தியமென்கிற முறை மையும் இல்லையாயவிடும்,—அதனால் நின்மலனுருவேயெனில் தத் துவமாமாகத் துளளானென்று- அநாதி நிமலனே சிவன், அரு பியாயிருப்பான் காணுமென்று நீ சொல்லில், ஆறுவழிடாயிருக் குள்ள அத்துவாமோதத்தினென்று வேதாகமங்களே சொல்லுகிற முறைமையுண்டாகாது சிவனுடைய திருமேனி யுருவமானாலும் அதுக்கழிவில்லையென்றும், அத்துவாமோத்தி யாகையினால் அரு வமல்லவென்றுஞ்சொல்ல, இவையிரண்டு மல்லவென்னில்? பின் னையென்றுகேட்க,—மேலுமருளிச்செய்கிறார். இவனருமை தன்னைப் புத்திமானுடையைபோல விருந்தனை புகலக்கேளாய் - ஆகையால் நீ புத்தியுடையவர்களைப்போலே யிருந்தாய், அதைக்

கர்த்தாவினுடைய வருமையை நானுனக்குச் சொல்ல நீ கேட்பாயாக.

இதனாற் சொல்லியது சிவன் றனது சத்தியே வடிவாகச் சகளீகரித்தாலும், அது ஒரு காலத்திலு மழியாதென்றும்; அது அருபமாயிராதென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

சத்தியே வடிவென்றாலும் - அவனுக்குச் சத்திவடிவாயினும்,— தானருவமாகு நித்தனோ வழியும் - உருவமெல்லாங் கண்டிதப்பொருளாதலின் பரிணமித்தழிவெய்தும்,— அதுகால் -அதுசிவசத்துக்குத் தகாமையால்,— நின்மல னருவேயென்னில் - அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் முதற்கட் கூறப்பட்ட அருவப்பொருளாகிய மாத்திரை யென்றலே அமைவுடைத்தெனவில்,— அந்நியமார்த்துள்ளா னன்று - ஆறத்துவாவையுங் கடந்தபொருளை யவற்றோடொப்பவைத்து அங்ஙனங்கூறுதல் பொருந்தாதெனில்,— இவனருமை தன்னை - இவன்றன்மையை,— புத்திரனுடைய போல இருந்தனை - புத்திரியுடையாய்போல இருந்தவனே,— புகலக்கேண் - கூறுவாம் நீகேட்பாயாக என்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலதற்கோர் புறனடை யுணர்த்துகிறார்.

உலகினிற் பதார்த்தமெல்லா முருவமோ டருவ மாகி, நிலவிடு மொன்றொன்றாகா நின்றவன் நிலையே.

னுரு மருவமே யெனனில் - உலகத்திலுண்டான வஸ்துக்களெல்லா முருபமாகியு மருபமாகியுமுள்ளதாம் உருபமான தருபமாகாது, அருபமான துருபமாகாது,அது நின்ற நிலையேபோல வளவிறந்த ஞானஸ்வரூபியாகிய சிவனு மருபமேயென்று சொல்லில்,—ஆய்ந்து குலவிய பதார்த்தத் தொன்றுங் கூடியவன் - விசாரித்தறியப் படாநின்ற பிரபஞ்சத்திலுள்ள பதார்த்தங்களுக்கு வொன்றாகப் பொருந்துவன,—குறித்திடாயே - அப்படியன்றி யவன் சர்வவியாபியாகையா லெல்லா ரூபமுந் தானாகி நின்ற பதியினுடைய ஸ்வபாவ ரூபமானது சிற்பிரகாச மான தமது சமவாய சத்தியே

ததுக்தம் - ஸர்வத்ரவ்யாபிநம் ஸம்ஸக்தி க்ரமணாத்ஸூக்ஷ்ம | காந்தோஷேவ ப்ரகாஶஸ்ய ஸ்வாபாவிகீ ஶக்திகா || ப்ருத்வ்யப்ஸ்வனோ ஷாடோ விஶ்வாத்மா க்ராதிர்தேவஸா | ஸூக்ஷ்மோ தேவ ப்ரதாஸ்வாஸ்வோ ஜ்ஞ ஹி ஸ்வ நோ பாத்யதே இதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

மாறுபடுதலை வரைந்துரைக்கின்றார்

உலகினிற் பதார்த்தமெல்லாம உருவமோடருவமாகி நிலவிடும் - மாயை முதலிய வருவமும பூத முதலிய வுருவமுமாகி நிற்கும்,—ஒன்றொன்றாகா நின்ற வந்நிலையேபோல - அருவுருவாகாது,உருவருவாகாது நிற்கும அந்தமுறைமையேபோல,—அலகிலா வறிவனுரு மருவமே யெனனில் - ஒப்பற்ற ஞானமு

டைய சிவனு முருவில்லாப்பொருளென்று சொல்லில்,—ஆய்ந்து ஞலகிய பதார்த்தத் தொனுருய்க் கூடுவன் - விசாரித்துக் கொண்டாடப்பட்டனவாகிய மாயா மாயாகாரியப்பொருள்களினின்றும் அப்பொருள்களோடு கலப்பில்லாத கலப்பன,—குறித்திட்டாயோ - விசாரித்துப்பார்.

சித்தருவு சடவருவுபோலன்றென்று தாற்பரியம்.

---

## சிவஞானயோகிகளுரை வருமாறு.

—0—

ஆகாயமுதலிய அருவப்பொருள் உருவத்தினியல்புடையதாகாது, நிலமுதலிய உருவப்பொருள் அருவத்தினியல்புடையதாகாது, சந்திரன்முதலிய அருவுருவப்பொருள் அருவியல்பேயுடையதுமாகாது உருவியல்பேயுடையதுமாகாது இங்ஙனம் ஆராய்ந்துணரப்பட்ட பொருள்களெல்லாம் ஒன்று பிறிதொன்றினியல்புடையதாகமாட்டாது ஆகலான், அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனை அருவப்பொருளேயெனின்? அவனுமவைபோல மாட்டாமையுடையனெனப்பட்டு அவற்றுளொருவனாய் முடியுமென்பதாம்.

உருவமேயருவமெனப்பதனை இரட்டுறமொழிந்துரைத்துக்கொள்க.

ஒன்றினியல்பு ஒன்றுடைத்தாகாதென்பார், ஒன்றொன்றாகாவென வுபசரித்தார்; இவ்வாறுரையாதார்க்குச் சற்காரியவாதமுரணுமாறுணர்க.

இதனானே நின்மலன் அருவேயென்பார் மதமும், அருவுருவேயென்பார் பக்கமும் மறுக்கப்பட்டவாறுமாயிற்று. அங்ஙனமாக, சத்திவடிவென்றல் பரிணாமமாகவே அநித்த

மூமாய் விடுமெனக் கூறிய குற்றத்திற்குப் பரிகாரமென்னை யெனின், அது வருஞ்செய்யுளிற் பெறப்படும்.

## நிரம்பவழகியருரை வருமாறு.

அந்த முறைமையைத் தெளிய வெனக்குச்சொல்லவேணுமென்ன மேலருளிச்செய்கிறார்.

உலகினிற்பதார்த்தமெல்லா முருவமோடருவமாகி நிலவிடும் - பிரபஞ்சத்தி லுண்டான திரவியமெல்லாம் விளங்கப்பட்ட அருவமும் அதனுடனேயுருவமாயிருக்கும்,—ஒன்றொன்றாகா நின்றவந்நிலையேபோல - எந்தப் பதார்த்தங்களதான அருவ முருவமாகாமல் உருவ மருவமாகாமல் அருவமருவமாயும் உருவமுருவமாயும் நிற்குந்தன்மைபோல,—அலகிலாவீசனுரு மருவமேயென விலாய்ந்து-எண்ணிறந்த திருமேனிகளெல்லாந் தாரு ய்நிற்கிற பரமேசுரனையுமரூ பருவமெனறே யாராய்ந்துசொல்லில்,—குலவியபதார்த்தமொன்றாய்க் கூறுவன குறித்திடாயே- ஆகையா லந்தக் கர்த்தாவும் அம்மபோதத்தாலே அறிந்துசொன்னபட்டப்பட்ட பிரபஞ்ச பதார்த்தங்களிலே ஒன்றாய் விடுவன் இதனை யப்படி யாகாத படியினாலே கர்த்தா வருவமல்லவென்று புத்திபண்ணிக் கொள்வாயாக.

இதனாற் சொல்லியது பிரபஞ்சத்திலுள்ள பதார்த்தங்களெல்லா மாயாபதார்த்தருமா யருவமு முருவமுமா யிருக்கும், சிவன அவையிற்றி லொன்றாகாதபடியாலே அருவமல்லவென்னு முறைமையும் அறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

உலகினிற் பதார்த்தமெல்லாம - உலகிற்காணப்பட்ட பதார்த்தமெல்லாம்,—உருவமோ டருவமாகி நிலவிடும் - உருவும் அருவும் அருவுருவமாகி காணப்பட்டுநிற்கும்,—ஒன்றொன்றாகா நின்ற அந்நிலையேபோல - ஆகாயமுதலிய அருவப்பொருளுருவத்தி னியல்புடையதாகாது, நிலமுதலிய வுருவப்பொருள் அருவத்தி னியல்புடையதாகாது, சந்திரன்முதலிய அருவுருவப் பொருள் அருவியல்பேயுடையது மாகாது,உருவியல்பேயுடையது மாகாது, இங்ஙன மாறத்துவாவுட்பட்ட பொருள்களெல்லாம் ஒன்று பிறிதொன்ற னியல்புடையதாக மாட்டாதாகலான,—அலகிலா அறிவனொருவ னுருவமேயெனின் -அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனே அருவப்பொருளேயெனின்,—குலவிய பதார்த்தத்தொன்றுப்போல் கூடுவன - அவனுங் கொண்டாடப்பட்ட பதார்த்தங்களைப்போல மாட்டாமையுடைய னெனப்பட்டுவாறு ளொருவனாய் முடியும்,—ஆய்ந்து குறித்திடாயே - நீ சிந்தையாராய்ந் தறிவாயாக வென்பதாம

இதனானே நின்மலனை அருவேயென்பார் மதமும் அருவுருவேயென்பார் மதமும் மறுக்கப்பட்டவாறு மாயிற்று.

---

## மறைஞானதேசிகர் உரை.



அந்தக் கர்த்தாவினவடி வின்னதன்மையென்
றளத்தற்கரிதென் றுணர்த்துகிறார்.

பந்தமும் வீடுமாய பதபதார்த் தங்களல்லா, னந்தமு மாதியில்லா னளப்பில னாதலாலே, யெந்தைகா

னின்னனென்று மின்னதா மின்னதாகி, வந்திடானெ
ன்றுஞ்சொல்ல வழக்கொடு மாற்றமினறே.          (சுஎ)

| | |
|---|---|
| (இ-ள்.) பந்தமு ம் வீடுமாய பதபதார்த் தங்க ளல்லான் | ஆன்மாக்களைப் பந்திக்கப்படும் பந்தமும மவர்களை மேலானபதத்தை யடைவிக்கப்ப டு மோட்சமுமெனக் கூறிய சொலலும்பொ ருளு மல்லாதவன, |
| அந்தமு மாதி யில்லான | முடிவெனனும் பதத்தி னுடையவு முத லெனனும் பதத்தினுடையவும் பொருளல் லாதவன, |
| அளப்பிலன | அளவைப் பிரமாணங்களா லளவிடற் க ரியவன, |
| ஆதலால் | இத்தன்மையை யுடையனுகலாலே; |
| எந்தைதா னி ன்னனென்று மி ன்னதா மின்ன தாகி வநதிடா னென்றுஞ் சொ ல்ல வழக்கொடு மாற்றமினறே. | எமதுகர்த்தா வொருவராற சுட்டியறித ற் கரியனுகையாலு மினனதாகுமென றா விடற் கரிதாகையாலு மினனவனுகா னெ னறு சொல்லுதற கேதுவுடன கூடியதொ ரு சொல்லில்லை. எ - று. |

ஏகாரம் தேற்றம்.

உ-ம். மைப்படிந்த கண்ணளுந் தானுங்கச்சி மயானத்தா ன்வார்சடையான் மாசொனறில்லா, னொப்புடைய னல்லனொ ருவனல்ல னோரூரனல்ல னோருவமையிலலி, யப்படிய னவ்வு ருவ னவ்வண்ணத்த னவனருளே கண்ணுகக் காண்பதல்லா, லிப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழு திக் காடடொணுதே.          (சுஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சிவஸ்ரூபத்தை யத்த வியாவிருத்தியினாற் றொகுத்துக் கூறல்.

பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லான் - ஆன்மாக்களைப் பந்திப்பதுமா யானவத்துட னீங்குவதுமாய சத்தார்த்த ஸ்வரூபமான வாங்மயவிஞ்ஞான ரூபியென்று சத்தப் பிரமவாதி சொல்லுவதுமன்று.

இதற்குச் சம்மதி வாக்குக்களினொற்றத்தெழுதுகிறோம்.

சப்தமே ப்ரம்மமென்பதற்குச் சம்மதி.

[illegible]

அந்தமு மாதியில்லான - உற்பத்தி ஸ்திதிநாசத்தையுடைய தேக மில்லாதவன,—அளப்பிலனாதலாலே - காலதேச வஸ்துக்களினாற் பரிச்சேதிக்கப்படுகிறவ னல்லனாகையால்,— எந்தைதா னின்னனென்று மின்னதா மின்னதாகி வந்திடானென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்றமின்றே - எம்முடைய ஸ்வாமிதா னதிகார கர்த்தாக்களுக்கு ளின்னாரென்று மின்னதாவ ரென்று மின்னதாகாரென்றுஞ் சொல்லுதற்குச் சங்கையு முத்தரமுமில்லை.

இதனாற் சத்தமே பிரமமென்பவனையு மதிகாரகர்த்தாக்களு ளொருமூர்த்தி யென்பவனையு மறுத்தது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சாங்கரியமுண்டென் றுரைக்க வில்லையென்றும், பிரகாராந்தரத்தினா லுண்டென்று முரைக்கின்றார்.

பாதமும் விடுமாய பதபதார்த்தங்களல்லான் - மோகமும் போதகமுமாயிருக்கும் மாயா மகாமாயா காரியமாகிய சொற்பொருளாகும் பொருள்களல்லான,— அந்தமு மாதியில்லான் - நித்தியன,—அளப்பிலன - வியாபகன,— ஆதலாலே எந்தைதான - எமது சுவாமிதான,—இன்னனென்றும் - இக்குறியுடையனென்றும,—இன்னதாம - இப்படியாவதென்று சுட்டியறியப்படும பொருளாமென்றும,—இன்னதாகிவந்திடான -வியாபகத்தால் எல்லாந் தானதுவா யிருந்தலால் இப்பொருளாய் வாரான,—என்றுஞ் சொல்லவழக்கொடுமாற்றமின்றே - சங்கை யுத்தரங்களில்லை அனுமானாகமங்களில்லை யென்றுமாம.

## சிவஞானயோகியருரை வருமாறு.

அநாதிமுத்த சித்துருவாகிய எந்தை, கட்டு வீடென்னும் பதங்களையுடைய பசுபாச பதார்த்தங்களது இயல்புடையனல்லனாகலானும், எழுவாயிறுவாய் இலனாகலானும, அவையிலனாகவே அளவைகட் கெட்டாமையானும்,அருவம் உருவம் அருவுருவமென்னும் முக்கூற்றுள் இன்னனென்று தான் அம்முக்கூற்றும்படும் விருத்தி பரிணமம் விவாத்தனமெனபவற்றுள் ஒன்றிற் படுவன படானென்று தான கூறுதற் கோராசங்கையுமில்லை, ஆசங்கையின்மையின அதற்கு மறுமொழியாகிய பரிகாரமுமில்லையெனபதாம்

அருவமெல்லாம் உருவமாய்த் தோன்றுதலும் உருவமெல்லாம் அருவமாயழிதலு மொருதலை. அதுபற்றி அவை அளவைகட்கு வரம்பு படுவனவுமாம்.

அநாதிமுத்த சித்துருவாகிய எந்தைக்குத் தோற்றக் கேடுகளின்மையானும, அவை யின்மையின் அளவைகட்கு வரம்புப

டாமையாலும், அவன் மூக்கூற்று ளொருகூற்றிலும் வைத்து மொழியப்படா னென்பார், அந்தமுமாதியில்லா னளப்பிலனு தலாலே, யெந்தைதானிவனென்று சொல்ல வழக்கொடு மாற்றமின்றே. என்றும்; கட்டு வீடுகளிலனாகலின எவ்வாறுமாமென்பார், பந்தமும்வீடுமாய பதபதார்த்தங்களல்லான் இன்னனா மின்னதாகி வந்திடானென்றுஞ் சொல்லவழக்கொடு மாற்றமின்றேயென்றுங் கூறினார். எதிர் நிரனிறை "எந்தையாரவரவ்வகை யார்கொலோ" என்றருளிச்செய்த பாசுரமுமிது

பதபதார்த்தமென்றது குழைக்காதுபோல் இரண்டாம் வேற்றுமைத்தொகை பதம அவயவச்செவ்வி.

ஆதியுமென்னு மும்மை விகாரத்தாற்றொக்கது அற்றேல், உருவமுடையாரெல்லாம் விகாரப்படுதலும ஏகதேசமாதலுந் தொடக்குறுதலு முடையராதல் காணப்பட்டமையின், முதல்வனுக்கு உருவமுண்டாயின அவையு முளவெனப்படும் வழுவாமாலெனின, அவ்வாசங்கை நீக்குதற்கெழுந்தது வருஞ்செய்யுளெனபது.

## நிரம்பவழகியருரை வருமாறு.



இப்படிச் சொல்லப்பட்ட உம்முடைய கர்த்தாவினுண்மை எப்படியென்ன, அவனுண்மையை ஆன்மபோதத்தால் அறிந்து சொல்லப்படானென றருளிச்செய்கிறார்.

பந்தமும்வீடுமாய பதபதார்த்தங்களல்லான்-ஆன்மாக்கள் செய்த கன்மத்துக்கீடாக அவர்களைத் தொந்திக்கப்பட்ட பந்தங்களுமாய், அது புசித்துத் தொலைந்தால் விட்டு நீங்குவதாயிருக்கத்தக்க லோகங்களுமாய், அந்த லோகங்களிலுள்ள பொரு

ள்களுமல்லாத தத்துவாதிகளுமாய்,—அந்தமு மாதியில்லான்-மற்றுள்ள வடிவுகளைப்போலத் தனக்கொரு முதலு முடிவுமில்லாதவன் ஆகையினாலே,—அளப்பிலன் - ஒருவராலு மின்னபடியென் றளந்தறியப்படாதவன்,—ஆகலாலே எந்தைதானின்னனென்று மின்னதாமின்னதாகி வந்திடானென்றுஞ்சொல்ல வழக்கொடுமாற்றமின்றே - அப்படியிருக்கையினாலே எம்முடைய சுவாமிதான இன்னானென்று மின்னானாகானென்றும் இன்னதாமென்று மின்னதாகாதென்றும் இன்னதாகி வருவனென்றும் இன்னதாகி வாரானென்றும் சொல்லுகைக்கு அதற்குண்மையாதொரு வழக்குமில்லை அதற்கோ ருத்தரமு மில்லை.

எந்தைதா னின்னனென்று மின்னதாமின்னதாகி வந்திடானென்றுஞ்சொல்ல வழக்கொடு மாற்றமின்றே என்றதற்குப் பிரமாணம் தேவாரம், "மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சிமயானத்தான்வார்சடையான்மாசொன்றில்லா,னொப்புடையனல்லனொருவனல்ல னோரூரனல்ல னோருவமனில்லி, யப்படியவ்வுருவவவ்வண்ணத்த னவனருளேகண்ணாகக் காணினல்லா, லிப்படியனிவ்வுருவனிவ்வண்ணத்த னிவனிறைவனென்றெழுதிக் காட்டொணாதே." என்றுஞ், சிவபுராணம். "இன்பமுந் துன்பமு மில்லானேயுள்ளானே-அன்பருக்கன்பனே யாவையு மாயல்லையு மாஞ்-சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே-யாதியனேயந்த நடுவாகியல்லானே" என்றும், திருச்சுண்ணம். "வேதமும்வேள்வியுமாயினார்க்கு மெய்ம்மையும்பொய்ம்மையுமாயினார்க்குச், சோதியுமாயிருளாயினார்க்குத் துன்பமுமாயின்பமாயினார்க்குப், பாதியுமாய்முற்றுமாயினார்க்குப் பந்தமுமாய்வீடுமாயினார்க்கு, ஆதியுமந்தமுமாயினார்க்கு ஆடப்பொற்சுண்ணமிடித்துநாமே" எனவுமிதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது கர்த்தா சடசித்துக்க ளிரண்டினும் நிறைந்து அவை தானேயாய் நிற்கச்செய்தேயும் அவை யொன்றுடனுந் தோய்வற நிற்பன் ஆகையால், அவனுண்மையை அவ னறிவிக்க வறியுமதொழிந்து ஆன்மபோதத்தால் இன்னபடியெ ன்றுஞ் சொல்லப்படானென்னு முறைமையை யறிவித்தது.

'சொன்ன' 'அழிப்பு' 'அருவமோ' 'நண்ணிடும்' 'வித்தக' 'மாணபதான' 'சத்தியே' 'உலகினில்' 'பந்தமும்' ஆகத் திருவிருத்தம் ஒன்பதும் புத்தன.

அவன் கர்த்தா வில்லையென்றும், பிரபஞ்சம் ஒருவர் படைக்கவேண்டுவ தில்லை அநாதியேயென்றும் சொன்ன விதற்குப் பிரமாணம் பரபக்கம், அவன்மதம் "பெறுவதின் கெனப்படைத்துப் பெற்றதுவிளையாட்டென்னின், சிறுமழைவிளையாட்டாகுஞ் செய்திடுங்கன்மத்தென்னின், றுறுபெருங்கன்மஞ்செய்வோர் முன்புளராவருமுன்னம், யறிவுறுஞாலமெல்லா மநாதியென் றறிந் திடாயே" என்னுமதனாற் கண்டுகொள்க.

சித - பர - சௌ - மத, உஈ

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

எங்கைதான் - அநாதிமுத்த சித்துருவாகிய வெங்கை,— பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லான - கட்டுவீடென்னும் பகுதிகளையுடைய பசுபாச பதார்த்தங்களாகு இயல்புடைய னல்லனுதலானும்,—அக்கமுமாதி யில்லான-இறுவாயு முவாயிலனுகலானும்,— அளப்பிலனுதலாலே - அளவையிலனுகலானும்,— இன்னனென்றும் - அருவமுருவ மருவுருவமென்னு மூக்கூற்றுள் இன்னனுவனென்றுதான்,—இன்னதா மின்னதா

கிவநிடானென்று சொல்ல-அம்முக்கூற்றுப்படும் விருத்தி பணமம்விவர்த்தன மென்பவற்றுள் ஒன்றிற்படுவன படானென்றுதான கூறுவதற்கு,—வழக்கொடுமாற்றமின்றே - ஓராசங்கையுமில்லை, யாசங்கையின்மையி னதற்கு மறுமொழியாகிய பரிகாரமுமில்லையெனபதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.

மேல முடிந்தது முடித்தலெனுந் தந்திர
வுத்தியா லுணர்த்துகிறார்

குறித்ததொன் றுகமாட்டாக குறைவில னாதலா
லு, நெறிப்பட நிறைந்தஞானத் தொழிலுடை நிலை
மையானும், வெறுப்பொடு விருப்புத்தன்பா லேவு
தலிலாமையாலு, மிறுதியி னினைந்தமேனி நின்மல
னருளினாலே. (௫௫)

(இ-ள்) குறித்ததொன் றுகமாட்டாக குறைவில னாதலானும் — ஆன்ம போதத்தாற் குறிக்கப்பட்டன வெல்லாமாய் நிற்கின்ற நிறைவினையுடையனாதலானும்,

நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமையானும் — தன்னிடத்தொருக்காலும் பிரிவற்றிருக்கிற ஞானக்கிரியைகளை யுடையனாய் நிற்றலானும்,

வெறுப்பொடு விருப்புத்தன்பா லேவுதலிலாமையானும் — ஆன்மாக்களைப்போல ராகத்துவேஷாதிக டன்னிடத்தில்லாதவனாகையானும்,

நிருத்திடு நி— நிட்களனான சிவன் றனது காருண்ணிய னைந்த மேனி நி— தனினாலே தனக்குப் பொருந்தினதொரு நின்மல னருளினு ருமேனியைக் கொண்டருளுவன. எ-று. லே.

இதற்குச் சித்தியத் தனுசந்தானகிகையிலுங் காண்க (சுரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

ஆயினுஞ் சிவனுக்கு ரூபமுண்டென முகமங்களிற் சொல்லு வது முண்டேயென்னின்? உண்மை. அஃதெப்படி யெனின்?

குறித்த தொன்றுக்கொட்டாத குறைவிலனாகலானும்—ஆன் மாக்களைப்போலொன்று நினைத்து, அது கூடாதென்னுங் கு றைவில்லாதவனாகையினாலும்,—நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமையானும்—மாறுபாடில்லாத பூரணஞானக் கிரியை நித்தியமாக வுடையனாகையானும்,—வெறுப்பொடு வி ருப்புத் தன்பால் மேவுதலாமையானும் - கோபமான நிக்கிர கத்தையும் பிரியமான அநுக்கிரகத்தையும் பண்ணுகையினு மவை யாற் பாவபுண்ணியங்க டனவிடத்திற் பொருந்தாதவனாகை யானும்,—நிருத்திடுநினைந்தமேனி நின்மல னருளினாலே-நின்மல னாகிய சிவனென்று பாவிக்கும் ஜீவன்முக்தர்களுடைய தேகத்தைக் கிருபையினாற் றமது திருமேனியாக வதிஷ்டித்து க்கொண்டு நின்று கிருத்தியங்களைப் பண்ணுவன. இதனா லநந் தேஸ்வராதிகளை யநுக்கிரகித்த தர்மாத்துக்களை யதிஷ்டித்துக் கொண்டு கிருத்தியங்களைப் பண்ணுவன. பூமியினு மாசாரிய மூர்த்திகளை யதிஷ்டித்துக்கொண் டநுக்கிரகம்பண்ணுவனென் றிதன்பொருள்.

[illegible]

இயற்றுதற் கர்த்தாக்களாயிருந் தடதேசகர்த்தாக்களுஞ் சிரு
டிமுதலிய கிருத்தியகர்த்தாக்களுமா யிருக்கின்ற அனுசதா
சிவர் அநந்தேசுரா ஸ்ரீகண்டருத்திரபிரம விஷ்ணு புத்தர்
அருகர் கபிலா கணாதா முதலிய கர்த்தாக்களா சரீரங்களைச் சா
க்ஷாத்தும் பாரம்பரியமாயு மதிட்டித்தற் றனது சரீரமாகப்
பண்ணிக்கொண்டு அவர்களை பண்ணுவிக்குந்திருத்தியம் தனது கிர்த்தி
யமாய் முடித்தலால அந்த நமது சரீரமென்று,—குறித்த-சங்கற்
பித்த சரீரங்களுக்கு ளொரு சரீரமுமா னதல்ல வென்னுங் கு
றைவின்றி நிறைவாகி நிற்பவனாதலானும்,—நெறிப்பட நின்ற
ஞானத் தொழிலுடைமையாலும் - எல்லாமாக்கத்தக்க
செல்லப் பூரணமாகிய சிற்சத்தியாகிய சிறப்பு சபசத்தியுடைய த
னமையனாதலானும்,—வெறுப்பொடு விருப்புத் தனபால்மே
வுதலிலாமையானும் - இராகத் துவேஷ் விஷயம் தனனிடத்
தில்லாமையானும்,—அருளினால் - தன்ற சத்தி சங்கறபத்தா
ல்,—நினைந்தமேனி - சங்கற்பித்த காரியத்திறகேற்ற அனு ச
தாசிவா முதலோர திருமேனியை,—நிறுத்திடும் - தனது திரு
மேனி போலத் தரிக்கும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

விகாரப்படுதற்குக காரணம் பரதந்திரம், ஏகதேசமாதற்கு
க் காரணஞ் சிற்றுணர்வு சிறுசெயல்களும், தடக்குறுதற்கு
காரணம் விருப்புவெறுப்புகளுமேயாகலின், அநாதிமுத்த சி
த்துருவாகிய முதல்வன்மாட்டு அவ்வுபாதிகளின்மையின்; அக்
குற்றங்களுக்குச் சேயனாகிய அவன், ஆணவமகன்ற வறிவொடு
தொழிலையார்த்து நிற்றலின், தானினைந்ததோரு திருமேனி
யைத் தனதாகக்கொண்டருளுவனென்பதாம்.

குறித்ததொன் றுகமாட்டாக் குறையே பரதந்திரமாவ தெனவறிக.

அற்றேல், அக்குற்றங்களிலனாகிய முதல்வன் உருவமின்றி நின்றே எத்தொழிலுஞ் செய்ய வல்லுமாகலான, உருவங் கோடலாற் போந்த பயனென்னையெனின், அஃதுணர்த்துதற் கன்றே வருஞ்செய்யு ளெழுந்ததெனபது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.



உமமுடைய கர்த்தாவினுடைமையை அவனறிவிக்க வறியும தொழிந்து ஒருவராலு மறியபபடாதென்ன, சகளீகரித்துப் பிரபஞ்சத்தை நடத்த வேண்டுகையினால் அவனையு மொருவர் படைக்கவேண்டுமென்ற பஞ்சராத்திரியை நோக்கி, அவனொரு வராற்படைப்பி லகப்படானென்று அருளிச்செய்கிறார்

குறித்ததொன்றுகமாட்டாக குறைவிலனாதலானும- அனமபோதத்தால் அறிவித்தவென்று சுட்டி யறியப்படாத குறை வற்று நிறைந்த ஞானமே தனக்குத் திருமேனியாக வுடையவனா கையாலும,—செறிப்படநிறைந்த ஞானத் தொழிலுடைநிலைமை யானும் - போந்துசெய்யாமல் எப்பொழுதும் ஒருதன்மையாயி ருக்கிற சருவஞ்ஞத்தையும சருவகிருத்தியத்தையு ம ஒருமை த னக்குள்ளவனாகையாலும்,—வெறுப்பொடுவிருப்புத் தனபால் மேவுதலிலாமையானும-பிரியாப்பிரியங்கள் தனனிடத்துப் பொ ருந்தப்படாதவனாகையாலும்,—நிறுத்திடுநினைந்தமேனி நினம னருளினாலே - இங்ஙனஞ் சொல்லிப்போந்த முறைமைகளையு டையவனாதலா லவனுக்கொருவ ரொருவடிவு கொடுக்க வே ண்டுவதில்லை; தனக்கு வேண்டின வடிவு தானே யெடுத்துக் கொள்ளுவன் மலரகிதனாகையால்.

குறித்ததொன்றாகமாட்டாவென்றது, முன்னமைகேழல் காரசிங்கம் ஆதியாயுள்ள தசாவதாரமும் எனக்கொள்க.

வெறுப்பொடு விருப்புத்தன்பால் மேவுதலிலாமையானு மென்றது, அவன் பசுமுதல்லவெனக்கொள்க.

இன்னுஞ் சொல்லியது அன்றிப்போந்ததால் சுட்டியறிய வொண்ணாத முதலாகையானே, சகளீகரிக்கு மிடத்துத் தனக்கேற்ற திருமேனி தானே படைத்துக்கொள்ளுமதொழிந்து பிறரொருவரால் படைக்கப்பட்டவனன்றென்னு முறைமையையறிவித்தது. இதற்குப் பிரமாணம் தேவாரம் "அண்டமாரிருளூடு கடந்தும்பர், உண்டுபோலுமோரொண்சுடர் அச்சுடர், கண்டிங்காரறிவாரறிவார்க்கெலாம், வெண்டிங்கட்கண்ணி வேதியனென்பரே." என்றும் "விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேதவிதியல்லர் விண்ணுநிலனுந், திரிதருவாயுவல்லர் செறுதீயுமல்லர் தெளிநீருமல்லர் தெரியில், அரிதருகண்ணியாளையொருபாக மாக வருள்காரணத்தில்வருவார், எரியரவாரமார்பரிமையாருமல்லரிமைப்பாருமல்லரிவரே" என்னுமதனுங் கண்டுகொள்க.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

குறித்ததொன்றாகமாட்டாக் குறைவில் முதலானும் - நானினைந்த தொன்றாகமாட்டாது விகாரப்படுதற்குக் காரணமாகிய பரதந்திரமில்லாகிய தன்வயத்த முதலானும், — நெறிப்பட்ட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமையானும் - முறைமைப்பட்ட ஏகதேசமாதற்குக் காரணமாகிய சிற்றுணர்வு சிறுசெயல்களின்றி முற்றுணர்வு மளவிலாற்றலுமுடைய முதலானும், — வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதலிலாமையானும் - தொ

டக்குறுதற்குக் காரணமாகிய விருப்பு வெறுப்புக்கள் தன்மாட்டிலனாகிய பொருளுடைய னாகலானும்,—நின்மலனருளினுலே - அத்தன்மைத்தாகிய அநாதிமுத்த சித்துருவாகிய முக்கண கருணையான,—நினைந்தமேனி நிறுத்திடும் - நினைந்த தொரு திருமேனியைத் தனதாகக் கொண்டருளுவன

---

## மறைஞானதேசிகர் உரை.



சிவஞானமாகவுள வாகமங்களை யநுக்கிரகஞ்
செய்கையின் பொருட்டுத் திருமேனி
கொண்டதென வுணர்த்துகின்றார்

ஆரண மாகமங்க ளருளினா லுருவுகொண்டு
காரண னருளானன்றிக் கழிப்பவ ரில்லையாகு
நாரணன் முதலாயுள்ள சுரர்நரர் நாகர்க்கெல்லாஞ்
சீரணி குருச்சந்தானஞ் செய்திடுஞ்சென்னிடாமே. (சரு)

(இ-ள்) ஆரண மாகமங்க ளருளினா லுருவுகொண்டு காரண னருளானன்றிக் கழிப்பவ ரில்லையாகும் — சிருட்டிகாலத்திற் சதாசிவதேவநாயனார் தமது காருணியசத்தியினாலே திருமேனியைத் தரித்துக்கொண்டு வேதாகமங்களை யருளிச்செய்தாரில்லையாகில், அவரைப்போலச் சருவஞ்ஞத்துவ முடையவர்களா யவையிற்றைச் சொல்லுதற்கு வேறொருவரு மில்லையாகும்.

நாரணன்முதலாயுள்ள சுரர்நர நாகர்க்கெல்லாஞ் சீரணிகுரு — ஆகையா லப்பொழுது மாயன் முதலாகவுள்ள தேவர்களு மானுடரும் பாதாளத்திலிருக்குஞ் சேடனிவாக ளெல்லார்க்குஞ் சிறப்பினைப் பொருந்திய குருபரம்பரை சமூஹி

உருத்திரபேதத்துக்கு-௫௯, ஆக-௬௬-௨-ம், இல்லையென்பது கருத்து

இதற்கு வாதுளம் கிரணம் (௪௯)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

மேல் அப்பரமசிவன் அனந்தாதிமூர்த்திகளையும் பூமியிலாசாரிமூர்த்திகளையுந் தனது திருமேனியாக வதிஷ்டித்துக் கொண்டு நிற்பானென்னில்? வேதாகமங்களை யநுக்கிரகம் பண்ணிக் குருசிஷ்ய சாம்பிரதாயப் பிரவிர்த்தியைப் பண்ணுவித்து அத் தத் த்வாரா போகமோக்ஷங்களைக் கொடுப்பதாக வென்பது கூறுகின்றது.

(அந்வயம்) காரணனருளினா லுருவுகொண்டாரணவாகமங்கள் ஞானமுதலாயுள சராசரங்கட்கெல்லா மருளானுகிற கற்பவரில்லையாதலால் சீரணி குருசந்தானஞ் செய்தியுஞ் சென்றிடாவே - பரமகாரணனாகிய சிவன் கிருபையினா லனந்தேஸ்வர ஸ்ரீகண்டேஸ்வராதி மூர்த்திகளைத் திருமேனியாகக் கொண்டு நாராயணாதி தேவர்களுக்குஞ் சனற்குமாராதி தேவருஷிகளுக்கும் வசிஷ்டாதி மனுஷ்யருஷிகளுக்குஞ் சேஷன் முதலிய சர்ப்பராஜாக்களுக்கும் வேதாகமங்களை யுபதேசியாதிருந்தாற் சொல்லுவாரு மறிவாருமின்றிக் குருசிஷ்ய சம்பிரதாயப்பிரவிர்த்தியு மின்றித் தருமார்த்த காமமோக்ஷமென்னுஞ் சதுர்வித புருஷார்த்தங்களையு மடைவாரற்றுப் போமென்றி தன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

இப்படி குருக்கள் அதிஷ்டித்துத் தீக்ஷோபதேசஞ் செய்யாதிருந்தால், முத்தராவரல்லரென்று குருசந்தானமும் கடவாதென்று கூறுகின்றார்.

காரணன் - சிவன்,—அருளின் உருவுகொண்டு - தன்னுடைச் சங்கற்ப மாத்திரத்தா லுருவு கொண்டு, இத்தன்மைத்தென்று குருக் கங்களைக் குறித்துச் செலுத்தி,— ஆன்மாக்கட் காகமங்க ளருளாராகில் - வேதாகமங்களை யுபதேசியாராகில்,— கதிப்பவரில்லை - முத்தராவாரில்லை

மற்றது வெளி - பொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

உயிர்க்குத் தனுவுடம்பை இடக்குதற்கண் வேறோ ருருவம் வேண்டாமைபோல, அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனுக்குத் தனுருவமாகிய உலகத்தைத் தொழிற்படுத்தற் பொருட்டு வேறோருருவம் வேண்டப்படுவதன்றாயினும், பிரளயாகலர் சகலரென்னும் பசுவர்க்கமிரண்டும் முறையே முன்னிலையினும் நின்றுணர்த்தினலன்றி உணரமாட்டாவாயின, உயிர்வர்க்கங்கள் பொருளியல்புணர்ந்து வீடுபெறுமாறு வேதாகமங்களைக் கோவைப்படச் செய்தற்பொருட்டும், அதனைக் குரு பரம்பரையின்கண் வைத்தற்பொருட்டும், திருமேனி ஒருதலையான வேண்டப் படுமென்பதாம்.

கதித்தல் கதியடைதல்.

அற்றேல், இவ்வாற்றால் அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனுக்குத் தனுவுண்டாகவே தனுவிற்குரிய தொழில் சரணம் புவனம் போகங்களு முளவாமாகலின், அவைபற்றி நம்மனோர் போலச் சுட்டியுணரப்பட்டு வாக்குமனாதீத னென்றல் வழுவாம்போலுமெனின்? அவ்வாசங்கை நீக்குதற்கெழுந்தது வருஞ் செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——0——

உமமுடைய கர்த்தா சகளீகரித்து இந்தக் கிருத்தியங்களைச் செய்யவேணுமோ! நிட்களமாய் நின்று செய்யவொண்ணாதோவென றவனைமறுத்து மேலருளிச் செய்கிறார்.

ஆரணமாகமங்க ளருளினாலுருவுகொண்டு காரணனருளானாகிற் கதிப்பவரில்லையாகும் - கர்த்தா தனது காருண்ணியத்தினாலே ஞானமே திருமேனியாகக்கொண்டு வடவிருக்ஷத்தின் கீழே எழுந்தருளியிருந்து நாலுவேதங்களையும் இருபத்தெட்டாகமங்களையும் அவையிற்றிலே விரிந்த பொருள்களையும் அருளிச் செய்தா னில்லையாகில்,அவனை யொழிந்து மற்றொருவரிந்த இரண்டு நூல்களையுஞ் சொல்லத்தக்கவ ரில்லையாகும் —நாரணன் முதலாயுள்ள சுரர்நராநாகர்க்கெல்லாஞ் சிரணிகுருசந்தானச் செய்தியுஞ்சென்றிடாதே - பிரம விஷ்ணுக்கள் முப்பத்து முக்கோடி தேவர்கள் மற்றுமுள்ள தேவர்களாயுள்ளவர்கள் நாக லோகத்தி லுள்ளவர்கள் இவர்களுக்கெல்லாஞ் சனன மரணங்களைப் போக்குவதாயுள்ள சிறப்புப்பொருந்தி யிருக்கப்பட்டநின்ற குருபாரம்பரியத்தின் முறைமையு முண்டாகமாட்டாது.

இதனாற் சொல்லியது கர்த்தா சகளீகரித்திருந்தே வேதாகமங்களை அருளிச்செய்யாதபொழுது மற்றொருவரால் சொ

ல்லப்படாதெனறும், அதுவனறியும் சருவாக்குவ குரு பாரம்பரி யமுண்டாகாதெனனு முறைமையையு மறிவித்தது.

இதற்குப் பிரமாணம். திருவாசகமாவன, "பாரார்விசும்புள ளார் பாதாளத்தாராபுறத்தார், ராராலுங்காணடற் கரியானெம கசெளிய, பேரானனறெனனன பெருந்துறையானபிசசேறறி, வாராவழியருளி வந்தெனனுளமபுகுந்த,வாராவமுதா யலைகடல் வாய்மீனவிசிறும, பேராசைவாரியனைப பாடுதுங்காணம்மானாய்" எனறும, திருவெணபா, "மூவருமுப்பத்து மூவருமற்றொழிந்த, தேவருங்காணச் சிவபெருமான-மாவேறி,வையகத்தேவந்திழிந்த வாரகழுங்காவந்திங்க, மெய்யகத்தேயினப மிகும்" எனறும், திருக்களிற்றுப்படியார், "ஆகமங்களெங்கே யறுசமயந்தானெங்கே, யோகங்களெங்கே யுணாவெங்கே-பாகத், தருளவடிவுங்காணுமாயானடிலனே லந்தப, பெருவடிவை யாரறிவார் பேசு" எனனுமதுவ கண்டுகொளக

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(உயிர்க்குத் தனனுடமபை யியக்குதற்கண வேற்றுருவ மவேணடாமைபோல,அநாதிமுத்த சித்துருவாகிய முதலவனுக குத் தனனுருவமாகிய உலகத்தைத் தொழிறபடுத்தற்பொருட்டு வேற்றுருவம் வேணடப்படுவதனறயினும) —காரணனருளினு ஆருவுகொணடு -முதல்வனருளா லுருக்கொண்டு,—ஆரணமாக மங்களருளானுகில் - வேதாகமங்களை கோவைப்பட அருளிச் செய்திலனேல்,—கதிப்பவரில்லையாகும - பிரளயாகலர் சகலர் என்னும பசுவர்க்கமிரண்டு முறையே முன்னிலையினும் படர்க் கையினு நின்றுணர்த்தினு லன்றி யுணரமாட்டாமையின;உயிர்

வாசகங்கள் பொருளியல்புணாதது வீடுபேறடைதலில்லை யாகு ம —நாரணன முதலாயுள்ளசுரா - அதுவுணறித திருமாளமு தலிய தேவாகளும்,—நரா - மானுடாகளும்,—நாகாகலெலா ம - நாகாமுதலியோ ராகளும்,—சீரணி குருசநதானச செய்தியு ம - சிறப்புப பொருநதிய குருபரமபரையின வைததருளுத லும்,— செனறிடாவே - செலலாமையின, திருமேனி யொருத லேயான வேணடப்படும்.

---

## மறைஞானதேசிகர் உரை.



சிவனொருவனுமிருநது, சிருட்டிமுதலிய கிருததிய
நிமிததமாகத் திருமேனி கொணடதெல்லா ம
நுககிரகமென றுணாததுகிறா

உருவருள குணஙகளோடு முணாவரு ளுருவிற் றோன்றும், கருமமு மருளானறனறன கரசர ணுதிசா ஙகங், தருமரு ளுபாயகமெல்லாந தானரு டனககொன் றின்றி, யருளுரு வுயிருககென்றே யாகுவ னமலன்று னே. (சஎ)

(இ-ள) உருவருள — சிருட்டிமுதலா தி யைநதும் திதிமுதலா தி யைநதும சஙகாரமுதலா தி யாறுமாகப் பதி னைநது திருமேனிகொணடது மநுக்கிரகததி ன பொருட்டு பிரவு மெனவறிக.

குணஙகளோடு முணர்வருள — அவன கிச்சாஞானமு மநுககிரகம்

உருவிற்றோன் றுங கருமமு மருள — சிருட்டிமுதலிய பஞ்சகிருததியஙகளு ம ருளே

> அரன்றன் கர சரணாதி சாங்கந் தருமருள

அவனது பாதம் பாணி யங்குலி சடைஞ் செவி நாசி கண்ட மகுடமுதலான சாங்கமு மருளே.

> உபாங்க மெல்லாந் தானருள

பரிவட்டம் பூணூல் மாலை ஆயுதங்கள் ஆபரணங்கள் சந்தன கங்காபவானி ஆசனம் முயலகன் நாகம் ஆமை இவைமுதலாயின வெல்லா வுபாங்கங்களையுந் தரிக்குமது அருளே

> ஏனைக் கொன்றின்றி

இவைகளைத் தரித்ததெல்லாந் தனக்கொரு பிரயோசனத்தைக் கருதிக்கொண்டதன்று. அது விடகாரணமோ வெனனில்?

> அருளுருவுயிருக்கென்றே யாக்குவ னமலனே

நிட்களனாகிய சிவனானது காருணியத்தினாலே ஆன்மாக்களை யீடேற்றுகையின் பொருட்டுத் திருமேனிகொண்டது எ-று

சாங்கமென்பது—அங்கத்துடன் கூடிய வுறுப்புக்க ளென வறிக.

உபாங்கமென்பது—அவனைவிட்டு நீங்காமற் சமீபத்திலிருக்குமது

ஒடு எண்.

தான் அசை

ஏகாரம் தேற்றம்

இதற்கு வாதத்துங் காரணத்துங் காண்க (௪௭)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——௧——

மேல் கர்த்தாவானவனுக்கு ரூபாதிகளில்லை எனவில் நினைக்கவும்போகாததாமாகையால் அவனைவழிபட்டுப் பிழைப்பதெவ்வாறெனின்? உத்தரம்.

உருவருளாய் - சிவனுடைய வங்கமுமானமாக்களின் அநுக்கிரகார்த்தமாகச் சிற்சத்தி ஸ்வரூபமானதே,—கரசரணாதியருள் - கரசரணாதியான பிரத்தியங்கமுங் கிருபையினாலான ஞானஸ்வரூபமே,—குணங்களோடு சாங்கமுணர்வருள் - தேசகுண ஸ்வரூபமான சாங்கமுங் கிருபையாலுண்டான ஞானஸ்வரூபமே,—உபாங்கமெல்லாந் தானருளாய் - உபாங்கமானவைகடானுமருளினாலுண்டான ஞானஸ்வரூபமே,—உரைவிறந்தோருறுங் கருமமுமருள் - இத்திருமேனியிற் றேவாகணமுதலானவைரைத் தோற்றுவிப்பதுங் கிருபையினாலேயே,—தனக்கொன் றின்றி யருளுரு வுயிருக்கென்றே யாக்குவ னசிந்தனன்றே-இங்ஙனமான திருமேனிக்கு மாயோபாதியு மில்லாமற் றனக்கொரு பிரயோசனமு மில்லாம லான்மாக்களின் போகமோக்ஷார்த்தமாகப்பண்ணுந் திவ்யபூசையின்பொருட்டுக் கிருபையினாலுண்டாகிய பாவரூபசைதந்ய விக்கிரகத்தை யுடையவனாகையினாற் சிந்திக்கப் படாதவனென் றிதன்பொருள்.

அங்கமாவன.—சிரசு முகமு மிருதயமுமாம்.

பிரத்தியங்கமாவன —வக்ஷஸ்ஸு கண்டமும் ஸ்தனங்களுந் தோள்களு நாபியு முதரமுங் குஹ்யமு நேத்திரமு நாசியுஞ் சுரோத்திரங்களு மஸ்தகங்களும் பாதங்களு மங்குலிகளு மூருக்களு முழந்தாள்களுங் கணைக்கால்களுமாம்.

சாங்கமாவது —குணமூர்த்திகளான பத்தும். அவையாவன? ஆரிஸ்வணியாதி குணத்திரயம்-திரிசூலம், சத்தியம்-பரசு,

பிரதாபம்-கட்கம், துரபேதநியம-வச்சிரம், அநுக்கிரகம - அபய முத்திரை, ருத்தியாதிசுத்தாாயை - நாகம், அகோரமாயை-பாசம், விவாணம அங்குசம, சதந்நாதம - கண்டை, பாசசங்கா ரம் - அக்னி.

உபாங்கமாவன — ஸிரம் உபவீதம் மாலை கந்தம் ஆபரணம் ஆசனம் ஆயாணம இவையேழுமாம்.

* [illegible]

ஶிவஸ்ய ஹ்ருதயாஜ்ஜாதா ருத்³ரா: கோட்யம்ஶ ஸம்ப⁴வா: |
விஷ்ணுர்ப்³ரஹ்மா ச பார்ஶ்வாப்⁴யாம் நேத்ராப்⁴யாம் ஸூர்யஸோமாக்³னய: ||
ஸம்ஹாரருத்³ரா: ஸம்ஹார ஶக்த்யா ஸார்த்³தா⁴நாம் ஹ்ருத³ஸ்ஸா
ஶக்தய: | ஸர்வதே³வ க³ணாஶ்சைவ ஸர்வே ம
ஶாஸ்த்ராணி ஜஜ்ஞிரே || ஸர்வா வக்த்ர ஶாஸ்த்ர ஸம்ய
ஸாஹஸ்ரம் பு⁴ஜா | கூஸ நாப³ணஶ்சைவ உ பாம்ஶ
ஜ்ஞாதிகீர்த்திதா: || இதி.

இவ்வாறு கிருபையினாற் கொண்ட சதாசிவரிடத்திலுண்டான மகேசுவரனுடைய திருமேனியி லிருதயத்தினின்று சகசிராமசமாக ருத்திரதேவர் தோன்றுவர் கோடி யம்சமாகவர் மத்தியிற் பார்சுவங்களில் விஷ்ணுவும் பிரமாவுந் தோன்றுவர்கள். நேத்திரங்களிற் சூரியசோமாக்னி தேவர்கள் தோன்றுவர்கள் பிராணனில் வாயுபகவான் றோன்றுவன் சுரோத்திரங்களின் மந்திராதி சாஸ்திரசங்கமான கிலகந் தோன்றும் முகத்தில் வேதாதி சாஸ்திர ரூபமான வபரஞானந் தோன்றும் கண்டத்திற் கணேசுவரர் தோன்றுவர் இருபக்கத்திற் சுப்பிரமணியர் தோன்றுவர் நாபியி லிந்திர யம வருண குபேரர் தோன்றுவர்கள் பிருஷ்டத்திற் பஞ்சாசத் கோடி தேவர்களுந் தோன்றுவர். உரோம கூபங்களிற் கோடிருஷிகள் தோன்றுவர்கள்.

முப்பத்து முக்கோடி தேவர்களென்றும் நாற்பத்தெண்ணாயிர மிருடிகளென்றும் மிகவுங் கேட்கப்பட்டிருக்கையி லதிகசங்கையாகச் சொல்லுவானென்னையெனின்?

அதிகசங்கையெல்லாம் கண்டத்திற்குப் புறம்பென் றறிக

சூரிய சோமேந்திராதி தேவர்களுக்குக் காசியபாதத்திரியாதிகளிடத்தி லுற்பத்தியென்றிருக்க மகேஸ்வரனிடத்தி லுற்பத்தியென்றதென்னேயோவெனின்? காசியபாதியுற்பன்ன சூரியாதிதேவர்கள் விஸ்வராமீகோற்பன்ன தேவர்களுக்கு அதிஷ்டேய ஸ்தானமென்றறிக.

ஈஸ்வராமீகோற்பன்னரான தேவர்கள் சுத்தாத்துவ வாசிகளாயிருந்து அசுத்தாத்துவ வாசிகளாயிருக்கிற விந்துதேவர்களை யதிஷ்டித்துக்கொண் டிருப்பார்கள்.

இப்படி விஸ்வேஸ்வரனிடத்தி லுருத்ராதி சகல தேவர்களு முண்டாகிறதுபோல, விஸ்வரியாளிடத்திலு மும்மாதி சமஸ்த தேவதாசத்திகளுங் கோடிசத்திகளு முண்டாமென வறிவாயாக.

[illegible]

பொக்ஷ வைச்சிக்ஷ்ருவாஞ் | ஸூநாந்நாந்த்ரா ஸஹஸ்ராம்சா:
ஸமாவீஜா தஜிக்ஷவ்ர மூர்த்திஸ்: || ஸ்ரீஸர ஸாரஸ்வதீ க்ஷமா
உமாதேவ்யவ ப்ருஹாசமா | ஸ்வீ ஜேஷ்டா வ க்ஷ்மீ ச
கௌமாரீ ப்ராஸ்வ ஸக்தய: | வசாதேவ்ய கோடிஸ
தீஸ்ர ஜெளமீதஹ வச்சிக்ஷ்ருவா ||

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

இப்படிச் சிவனுக்கு வாஸ்தவ தேகமில்லாமையால் இபாணபூசாதி நிமித்தங்கள் காரியப்பட்ட தேகம், அனுசதாசிவாதி தேகங்களைப் போலக் கற்பிக்கவேண்டும் அதைத் திருத்திக் கற்பிக்க வேண்டுமென்று வினவ, அவன்றன் சத்தியாற் றிருமேனி கற்பிக்கப்படுமென்று சாற்றுகிறார்.

நிரவயவிகளாய், நிருபிகளாய், நிரம்ச நிர்ப்பேதவஸ்துகளாய், நிஷ்காமங்கைகளாய், நிஷ்ப்ரபைகளாய், நிஷ்கலைகளாயிருக்கின்ற சாந்த்யாதி பராசக்தியந்த பஞ்சசக்தி சமுற்பன்ன சத்தியாதி அஷ்டத்ரிம்சத் கலைகளாயிருக்கும் முன்பின் மூலாகக்கிரகங்களில் முறைமையிற்சோதக ஞானசத்தி இச்சாசத்திமத்தாகிய கிரியாசத்தி கலைகள் விண்ட அகண்ட பிண்டாசல சிவசரீரம் சாவயவிகளாய், சருபைகளாய், சாம்சபேதவஸ்துகளாய், சகாமங்கைகளாய், சப்ரபைகளாய், சகலைகளாயிருக்கும் மாயாகலைகள் விண்ட கண்ட பிண்ட சல சுபசரீரம்போல், அயஸ்காந்தம்போல் அசைவறநிருந்துங் கிருத்திய கிர்த்தாதலால், கடினகண்டித சலிதசரீரமாக உபசரிக்கப்பட்டது.

ணமும் அருள்வடிவே, கைகால் முதலியவுறுப்புக்களும் அருள வடிவே, உபாங்கமாகிய புவனபோகங்களு ம அருளவடிவே, இவ் வருள்வடிவெல்லாம் உயிர்களின பொருட்டனறித் தனபொரு ட்டன்மையான் இவைபற்றிச சிந்திதருயினும் அசிந்தித்தே னெபதாம்.

அருளுரு முன்னையதுவினைத்தொகை, ஏனையது இருபெய ரொட்டுப் பண்புத்தொகை.

குணம் வாய்மை முதலியன. அவையேஅவனுக்குச சூல மழுமுதலிய படைக்கல மாகலின அவை கரணமெனப்ப ட்டன.

கரசர ணாதிசாங்கந் தருமருளெனபது முன்னவைகற்பா லதாயினும் செய்யுளாகலின முறைபிறழ வைத்தார

ஆதிமென்றதனால் ஏனையங்கப் பிரத்தியங்கங்களுந் தழு வப்பட்டன. இவற்றைச் சாங்கமென்றது உபசாரம

அசிந்தனென்னும் வடசொல் அனமொழித் தொகை

அன்றே அசை

இவையெனபது செய்யுளானும் முதல்வனுக்கு உருவத் தி ருமேனியுண்டெனபது பிறர்கூறுங் குற்றங்களா னிகந்துபடா மைக காத்து வலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவகிழயருளை வருமாறு.

---

இப்படியும்முடைய கர்த்தா வடிவுகொண்டது எனனபய னைக் கருதி என்றவனை நோக்கி; யவனுக்கொரு பயன வேண்டுவ தில்லை, ஆனமாக்களை இரட்சிக்கைப் பொருட்டாகத் தனது கா

ருவணியமே திருமேனியாகக் கொண்டதென றருளிச் செய்கி ருர்.

உருவருள் - அவனுடைய திருமேனி காருண்ணிய மூர்த்த ம,—குணங்களோடு முணர்வருள - குணங்களும் அதனுடைய ஞானங்களும ஞானம,—உருவிற்ரேன்று மங்கருமமு மருள-அவ னுடைய திருமேனியாலே செய்தனவாகப்பட்ட கிருத்திய ங்களும் அந்த ஞானந்தான,—அரனறன கரசரணுதி சாங்கந ருமருள - காதகாவியுடைய கரசரணமுதலான சாங்கவு ந ங்களும் அவனாலே உண்டான ஞானமாம,— உபாங்கமெல் லாந்தானருள - இந்தத் திருமேனியிலுண்டான இரண்டாமங் கமான வடையாளங்களு மற்று முள்ளவையும இந்த ஞானந் தானும,—தனக்கொன றின்றே- இப்படிச் சாவத்திலும தோய் ந்திருந்தாலும தனக்கொரு விகாரமற்று நிற்பன —அருளுருவு யிருக்கென்றே யாகுவ னமலனன்றே.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

அரனுருவருள - அரனறனுரு அருளாகலான,—உணர்வரு ளுருவிற்ரேன்றும - உயிர்கட் குணர்வளிப்பதாய அவ்வவுரு விற்ரேன்றும,—கருமமும குணங்களோடு மருளுரு - தொழி லகளும வாய்மை முதலியகுணங்களுமாகிய காணமும் அருளா கியவடிவே,—கரசரணுதி சாங்கந் தருமருளுரு - கைகானமுத லிய உறுப்புகளு மருளாகிய வடிவே,—உபாங்கமெல்லாந் தா னருளுரு - உபாங்கமாகிய புவனபோகங்களும் அருளாகிய வ டிவே —அருளுருவுயிருக்கென்றே - இவ்வருள்வடிவெல்லாமு யிர்களின பொருட்டன்றி,—தனக்கொன்றின்றி யாக்கின னசி

ங்கனன்றே — தன்பொருட்டன்மையா னிவைபற்றி சித்திதரு யினும் அசிந்திதனேயென்பதாம்

இவை ஒன்பது செய்யுளானும் முதல்வனுக் குருவத்திருமேனி யுண்டென்பது பிறர்கூறுங் குற்றங்களான் இகந்துபடாமைகாத்து வலியுறுத்தப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



உலகினை யிறந்துநின்ற தாருரு வென்பதோரார்,
உலகவ னுருவிற்றோன்றி யொடுங்கிடு மென்பதோரார்,
உலகினுக் குயிருமாகி யுலகுமாய் நின்றதோரார்,
உலகினி லொருவனென்ப ருருவினை யுணராரெல்லாம். (சஅ)

(இ-ள்) உலகினை யிறந்துநின்ற தாருரு வென்பதோரார் — இந்தப் பிரபஞ்சத்தைக் கடந்திருக்கையினா லிந்தப் பிரபஞ்சத்திற்கு மதீதமாயிருக்கு மவனுடைய திருமேனியென்று மறியார்,

உலகவ னுருவிற்றோன்றி யொடுங்கிடு மென்பதோரார் — இந்தப்பிரபஞ்ச மந்தக்கர்த்தாவின துருவிலே தோன்றி யருவிலே யொடுங்கு மென்று மறியார்,

உலகினுக் குயிருமாகி யுலகுமாய் நின்றதோரார் — பிரபஞ்சத்திலுள்ள வான்மாக்களுக்குப் பிராணனுமாய்ப் பிரபஞ்சத்திற்கு ப்ரபஞ்சமுமாய் நிற்குமென்று மறியார்,

உலகினி லொருவனென்ப ருரு — அப்படிப்பட்ட கர்த்தாவினுடைய ஸ்வரூபஸ்வபாவத்தை யுணராதவர்களெல்லா ம

வினை யுணராரெ வனையு மிந்தப்பிரபஞ்சத்திலே யொருவனெ
ல்லாம் ன்றுசொல்லாநிற்பர். எ-று. (௬௮)

---

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

——0——

மேல் விஸ்வமூர்த்தியும் அந்தர்யாமியும் விஸ்வகாரண னும் விஸ்வாதீதனுமாய் நிற்பனெனப துணர்த்துதல்.

(அநவயம்) உலகுமாய்நின்றதோரா ருலகவனுருவிற் றோ ன்றி பொடுங்கிடுமெனறுமோரா ருலகினுக்குயிருமெனறோரா ருலகினை யிறந்துநின்ற தரனுரு வென்பதோரா ருலகினிலொருவ னென்ப ருருவினையுணராரெல்லாம்-சிவனுடைய திருமேனியான சிற்சத்தி அபினனோடு நிமித்தோபாதானமாகையினாலே விஸ்வாத் மகமாக நின்றதையும், சிவனுடைய திருமேனியாகிய சிற்சத்தி மாயையைப் பதிந்தபொழுது ப்ரபஞ்சந்தோன்றி சத்திபராமு கையானபொழுது பிரபஞ்சம் ஒடுங்குமென்பதும், பிரபஞ்சானு பிரவிஷ்டையினாலே பிரபஞ்சத்துக்கு நியந்தாவாகிய உயிராய் நின்றதும், அசமகோசர ஜிந்தையினாலே விஸ்வாதீதனாக நின்ற தையும் அறியார்கள், சிவனுடைய ஸ்வரூபமாகிய அகண்டா கார சச்சிதானந்தத்தை யறியாதபேர் உலகத்தில் பிரம்மாதி தேவர்களைப்போலே யொருவனெனபர்களென றிதனபொருள்.

ததுக்தம் ச ஜ்ஞாநஸாரே — விஸ்வாத்மகம் ஸர்வஸம்
தத்நகோசரம் விஸ்வஸாரம் ஸர்வகாரணம் ஸ்வயம் | வி
ஸ்வாதிகம் ஸர்வகாரணகாரணம் ஹீநம் நித்யம் நிரஸ்த
விஷமம் ஸர்வாத்மகம் | விஜ்ஞேயம் ஸ்வயம் ஸ்வம்
த்யம் ஸர்வாத்மகம் தத் நிர்மலம் ஸிவமிதிச.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—ヮ—

சிவன ஸ்ரீகண்டப் பிரேரகராகும் அநந்தேசுரராகிய மூர்த்தியானமாவி லநந்தரானமாவாய்த் திரும்ப வநந்தஅநந்தேசுரராகிய மூர்த்தியானமாவைப் பிரமாண்டாநந்தராதிபதியாகும் ஸ்ரீகண்டராகிய மூர்த்தி யான்மாவி லநந்த ரானமாவாக்கி யந்தஸ்ரீகண்டசரீரசரீரியாய்ச சத்தியகாடிந்ய கண்டிப்புடைய காயகரணகலைகளாற சகளராயிருந்து பிரமவிஷ்ணு முதலோர்க்கும், ஸ்வேதோயமனவியப் பிரபிருதிகட்கும், கிருஷ்ணார்ச்சுனாதியர்க்கும, அறுபத்துமூவா முதலோர்க்கும், நிக்கிரகா நுக்கிரகங்களைப்பண்ணி விளையாட்டு விளைத்துப் பின்னகம் பிரதமர்களும் அற்பசொற்ப அத்தியற்புதப் பிரசாத ப்ரதராயிருந்து சரிக்குஞ் சரித்திரங்களிற் சிறிது பவுராணிக மதம் பாஷியபதற் குபக்கிரமிக்கின்றார்.

அரனுரு - ஸ்ரீகண்டசரீரமாகிக கண்டிப்புப் பொருந்திய சிவசரீரம்,—உலகினை யிறந்துநின்றது - சீவான்ம கிருத்தியவிலக்ஷண கிர்த்தியங்களை யுடையது,—என்பது ஓரார் - விசாரியார்,—உலகு-பிரபஞ்சம்,— அவனுருவிற் றோன்றி யொடுங்குமென்று மோரார் - அந்தச் சிவனது கண்டிப்பில்லாச் சமவேதசிற்சத்தி சரீராதிட்டித வகண்டித பரிக்கிரக மஹாமாயா மாயாசத்தி சரீரத்தில் நின்றும் பிறந் திறந்திருக்குமென்பதும் விசாரியார்,--உலகினுக்குயிருமாகி யுலகுமாய் நின்றதோரார்-சிதசித் பிரேரகராய் வியாபியாயிருப்பது முணரார். இப்படியிருக்கும்,— உருவினையுணரரெல்லாம்-விவேகித்தறியா ரனைவரும் ஸ்ரீகண்டரூபியாயிருக்கின்ற சிவன் அதிஷ்டாகாரராதலால்,-- உலகினிலொருவ னென்பர்-நம்மைப்போலே யொருவனென்று சொல்லுவார்கள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

இனிச் சிந்திதனும் அசிந்திதனேயென்றதனை வலியுறுத்து முகத்தான் அவ்வுருவடிவின் பேதங்களும் அவற்றினைக் கண்ட முந் தொழில்களும் அவற்றானுய பயன்களுந் தொகுத்துணர்த்துகின்றார்.

சிந்திதனாயினும் அசிந்திதனே யென்பதற்கு, வேதத்துள் உருத்திரன் விசுவாதிகனென்றும், விசுவகாரணனென்றும், விசுவசத்திற கர்த்தரியாயியென்றும், விசுவரூபியென்றுங் கூறுஞ் சுருதிகளே சான்றெனப்படும்.

மாயையிற் றோன்றியொடுங்குமுலகம் அதற்காதாரமாய் நின்ற முதல்வனுந்தியிற் றோன்றி யொடுங்கியதூஉமாமென்பது, கிழங்கினின்றுந் தோன்றிய தாமரையைப் பங்கயமென்பதனானறிக.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

உலகினையிறந்துநின்ற தரனுருவென்றுமோரார் - ப்ரபஞ்சத்திற் கப்பாற்பட்டு நின்று சிவனுடைய உருவமென்று இங்ஙனஞ் சொல்லி விசாரித்தறியவு மாட்டார்கள்,—உலகவனுருவிற் றோன்றி யொடுங்குமென்றுமோரார் - இந்தப் பிரபஞ்சம் கர்த்தாவருளினாலே தோன்றி யொடுங்குமென்று நிரூபித்தறியவு மாட்டார்கள்,—உலகினுக்குயிருமாகி யுலகுமாய்நின்றதோரார் - பிரபஞ்சத்திலுள்ள சருவான்மாக்களுக்கும் பிராணனுமாய் விசுவத்துக்கு விஸ்வரூபியுமாய் நிற்பனென்று நிரூபித்த

றியவு மாட்டார்கள்,—உலகினி லொருவனென் பருருவினையுணரா ரெல்லாம - அவனுடைய சொரூபத்தை ஆராய்ந்து அறிதற் குப் போதமில்லாதவர்களெல்லாம அவனையு மிகப் பிரபஞ்சத் திலுள்ள வானமாக்களைப்போல வொருவனென்று சொல்லு வார்கள்

இதனாற் சொல்லியது விஸ்வாதிகசனுமாய், விஸ்வந் தோ ன்றுகைக்கும நிமித்தகாரணனுமாய், விஸ்வத்திலுண் டான வானமாக்களுக்குப் பிராணனுமாய், விஸ்வரூபியுமாய் நின்ற கர்த்தாவினுண்மை அறியமாட்டாதவர்கள், அவனையும் விஸ்வத்திலே ஒருவனென்று சொல்லுவார்களென்று முறை மையை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அரனுரு - சித்திகளாயினும அசித்திரனே யென்பதாகு வேதத்து ளுருத்திரனுருவா,—உலகினை யீந்து நின்றதெனப கோரார் - விசுவாதிகனென்று கூறுஞ் சுருதியினையு முணரா ர்,— அவனுருவில் - அவனவடிவத்தில், - உலகுதோன்றி யொடு ங்குமென்று மோரார் - உலகந்தோன்றி யொடுங்குதலால் வி சுவ காரணனென்னுஞ் சுருதியினையு முணரார்,— உலகினுக்குயி ருமாகி நின்றதோரார்-விசுவத்திற் கந்தரியாமியென்று கூறுஞ் சுருதியினையுமுணரார்,—உலகுமாய் நின்ற தோரார்-விசுவரூ பியென்று கூறுஞ் சுருதியினையுமுணரார்,—உருவினை யுணராரெ ல்லாம் - இங்ஙனங் கூறுஞ் சுருதிகள் சானருசவுந திருமேனியி யல்புணராரெல்லாம்,—உலகினி லொருவனென்பர்-உலகத்திலு ள்ளார் கூறுங்கடவுளரி லொருவனென்பதாம.

## மறைஞானதேசிகர் உரை.



உமது கர்த்தா தேவர்களு ளொருவனென்ன
அனறென றுணர்த்துகிறார்.

தேவரி னொருவனென்பர் திருவுருச் சிவனைத்
தேவர், மூவராய் நின்றதோரார் முதலுருப் பாதிமா
து, ராவது மறியராகி யரியயற் கறியவொண்ணு, மே
வரு நிலையுமோரா ரதனுரு வினைவுமோரார். (௬௪)

(இ - ள்) தேவரி னொருவனெ பா திருவுருச சிவனை: இப்படி திருமேனி யெடுத்திருக்கிற சிவனை யந்த முப்பத்து முககோடி தேவர்களுக்குள்ளே யொருவனென வறிவில்லாத வாகள சொல்லா நிறபர்கள்.

தேவர் மூவராய் நினறதோரார்: அந்தத் தேவர்களுட் சிறப்பினையுடைய மும்மூர்த்திகளையு மவனதிட்டித்துக்கொண்டு நின்று தந்தாங்கிருத்தியங்களையு மறியார்கள்.

முதலுருப் பாதிமாதராவதும றியார்: மகேஸ்வரவிக்கிரகத்திற் றோன்றிய விருபத்தஞ்சி லத்தனு ரீசுரமா யிரண்டாய்நின்ற முறைமையினையு மறியார்கள்.

ஆகி யரியயற் கறியவொண்ணு மேவரு நிலையுமோரார்: சகலத்துக்கு மாதியான வமூர்த்தி சாதாக்கிய மனற் றம்பமாய்ப் பிரமவிட்டுணுக்களுக் கடிமுடிகாணப தரிதாய்நின்றது மறியார்கள்.

அதனுரு வினைவுமோரார்: அந்தத் தழற் பிழம்பிற்றோன்றிய லிங்கோற் பவமூர்த்தியென் றறியார்கள் எறு

இதற்குச் சுப்பிரபேதத்தும் வாயவ்யத்துங் காந்தத்துங் காண்க. (சக)

---

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

—o—

மேலிதுவுமது.

திருவுருச் சிவனேதந்தேவர் தேவரி லொருவனென்பார்-ஞானஸ்வரூபியான சிவனை ப்ரம்ம விஷ்ணு ருத்திரனென்னும் மூர்த்திகளுக்குள்ளே யொருவனென்பர்,—தேவர் மூவராய் நின்றதோரார் - ஸத்தியோ முக்த ப்ரவாத்தரனாறும் லயபோகாதிகார ஸ்தானங்களிலே சிவன் சதாசிவன மஹேஸ்வரன் எனநின்ற மூன்று ஸ்வரூபத்தையும் அறியாதபேர்,—முத லுருப்பாதிமாத ராவது முணரார் - ஸ்ருஷ்டாதியிலே சத்தி சிவாத்மகமாக இந்திரதனுசுப்போல நீலமும் பொனமையுமாய் நின்றது மறியார்,—ஆதி அறியயற் கறியவொண்ணு மேவுருங்லையுமோரார் - சகளத்துக் காதியான அமூர்த்தி சாதாக்கியம் அநல் ஸ்தம்பமாய் ப்ரமவிஷ்ணுக்களுககு மடிமுடி காண்பரிதாய் நின்றது மறியார்,—அதனுரு விலைவுமோரார் - அநதமூர்த்தி சாதாக்கியத்திலே சகலப்ரபஞ்சமு முண்டாகிறது மொடுங்குகிறது மறியார் என்றிதன்பொருள்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஸர்வாஹ்ருத் ஸமுத்தா உத்தீர்ணோத்தாரதி ரிதோச்யதே || இதி.

ஜகதீசு திவ்ய விக்ரஹாத் உத்ப்ரஸம்ஹ திதோச்யதே ஸ்ரீசைவகம் ஸத்வஞானம் ப்ரஸித்தம் ப்ரோச்யதே || ஸ்ருஷ்டிஸம்ஹார ஜநகோத்யம் ஸ்ரீமா நாத ஸம்போச்யதே ||

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

இதனுட்

திருவுருச்சிவனை - ஸ்ரீகண்ட சரீரியாயிருக்குஞ்சிவனை தேவர் மூவாகளாசசெலுத்தி அவரவராய்த் தியானம் பண்ணப்படுவ தெனபதறியார்,— முதலுருபபாதி - சத்திசிவானமகம்,— மேவுருநிலை - இலிங்கத் தம்பாகிருதி,— அதனுருவிளைவு - சதாசிவரூபம்.

மற்றது வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

விச்சுவாதிக னென்பது முதலிய நான்கு சுருதிகளையும் முறைபே வலியுறுப்பனவாய், அரியுமயனும் அடி முடி தேடியறியாவண்ணம நீண்ட திருவுருவி லிலகுறும் புராணவசனமும், மும்மூர்த்திகளுந் தனனுருப்பிற்றோன்றி நின்ற வடிவினியல்பு கூறும் புராணவசனமும், அவனவடிவிலே விளங்தவன்னை

மே உலகிற்கு விளைவு கூறும் புராணவசனமும், அர்த்தநாரீசுர வடிவு கூறும் புராணவசனமுமாகிய இவையுமதற்குச் சான்றென்பதாம்

இவையிரண்டு செய்யுளும் அசித்திகனென்றதற்கு உரையனவை காட்டியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

உம்முடைய கர்த்தாவும் தேவர்களுக்குள்ளே ஒருவருப்பிறந்து வேறே ஒருவனென்று சொல்லவேண்டியதில்லை என்றவனை மேலாறுகதருளிச் செய்கிறார்

தேவரிலொருவனென்பர் திருவுருச்சிவனை - ஞானமே திருமேனியாகவுடைய பரமேசுவரனை மாயையே வடிவாகவுடைய பிரம்ம விஷ்ணுக்களுடனே கூட்டி அவனையுமவர்களைப்போல ஒருவனென்று சொல்லுவார்கள் போதஹீனராயுள்ளவர்கள் இப்படிச் சொல்லுவார்களை அறிவற்றவர்களென்பானேனெனில்—தேவர் மூவராய் நின்றதோரார்-பிரம்ம விஷ்ணுக்களுக்கு பிராணனுமாய் இவர்களுக்குக் கர்த்தாவுமாயிவர்களுடனே கூட்டி எண்ணப்பட்டமுறைமையுமறியார்கள் அதுகொண்டேயாயிருக்குமறிவற்றவர்களென்றது இதுவன்றியும்,—மூன்றுருப்பாதிமாதராவதுமுணரார்,—அந்தக் கர்த்தாவினுடைய திருமேனி அர்த்தநாரீசுரமாகவிருந்த காரணமும் ஏதுக்கென்றறியார்கள்—அரியயற்கறியவொண்ணா மேவருநிலையுமோரார்-பரமேஸ்வரன் பிரம்ம விஷ்ணுக்களுக்குமறியப்படாததழற்பிழம்பாய் நின்றது ஏதுகாரணமென்றுமறியார்கள் இதுவன்றியும்,—அவனுருவிளைவுமோரார் - அவனுடைய திருமேனியாலுண்டான பிறையோசனங்களையுமறியார்கள்.

இதற்குப் பிரமாணம். திருச்சதகம், "தேவர்கோவறியாத தேவதேவன் செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை, மூவர்கோனாய்நின்ற முதல்வன்மூர்த்தி மூதாதைமாதாளும் பாகத்தெந்தை, யாவர்கோனென்னையும்வந் தாண்டுகொண்டா னியாமார்க்குங் குடியல்லோ மியாது மஞ்சோ, மேவினோமவ னடியா ரடியாரோடு மேன்மேலுங் குடைந்தாடி யாடுவோமே" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது பரமேஸ்வரனுக்குத் திருமேனி ஞானமே யாகையினாலுஞ் சத்தி சிவானமியமாமிருந்து ஆன்மாக்களுக்குப் போகமோட்சங்களைக் கொடுக்கிறவனாகையாலும், பிரம்ம விஷ்ணுக்களா லறியப்படாதவனாகையாலும் தேவர்களி லொருவ னல்லவென்னு முறைமையை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஆதியரிபயற்கறிய வொண்ணு மேவுருநிலையுமோரார்-விசுவாதிகனென்பது முதலிய நான்கு சுருதிகளையு முறையே வலியுறுப்பனவாய் அரியுமயனு மடி முடி தேடி யறியாவண்ணம் நீண்ட திருவுருவி னிலைகூறும் புராணவசனத்தினையு முணரார்,—தேவர் மூவராய்த் திருவுருநின்றதோரார் - மும்மூர்த்திகளுந் தன்னுருப்பிற்றோன்றி நின்றவடிவி னியல்புகூறும் புராணவசனத்தினையு முணரார்,—அவனுரு விளைவுமோரார்-அவன்வடிவிலே விளைந்தவண்ணமே யுலகிற்கு விளைவுகூறும் புராணவசனத்தினையு முணரார்,—முதலுருப் பாதிமாத ராவதுமோரார் - அர்த்தநாரீச்வரவடிவு கூறும் புராணவசனத்தினையு முணரார்,—சிவனைத் தேவரி லொருவனென்பர்-இங்ஙனங் கூறும் புரா

வைவசனங்கள் சான்றாகவும் இவ்வுண்மை யறியாதவர் சிவபிரானை க கடவுளரில் ஒருவன என்பர் என்பதாம்.

இவையிரண்டு செய்யுளானும் அசிந்திதனென்பவர்க்கு உரையளவை காட்டியவாறு.

## மறைஞானதேசிகர் உரை.



இதவுமது.

போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரித
லோரார், யோகியா யோகமுத்தி யுதவுத லதுவுமோ
ரார், வேகியானாற்போற் செய்த வினையினை வீட்ட
லோரார், ஊகியா மூடரெல்லா மும்பரி லொருவனெ
ன்பர். (௫0)

| | |
|---|---|
| (இ-ள்) போகியா யிருந் துயிர்க்குப் போகத்தைப்புரிதலோரார் | சிவன்றான் போகியாயிருந் தான்மாக்களுக்குப் போகத்தைக்கொடுக்குந் தன்மையுமுணரார்கள் |
| யோகியாயோகமுத்தி யுதவுதலதுவு மோரார் | சிவன்றான் யோகியாயிருந் தான்மாக்களுக்கு யோகசாதனையாற்பெறு முத்தியின் முறைமையு மறியமாட்டார்கள் |
| வேகி யானாற் போற்செய்த வினை யினை வீட்டலோரார் | இராகத் துவேஷ மில்லாத சிவன்றானுங் கோபமுடையவர்களைப்போல வான்மாக்கள்செய்த குரூரகன்மங்களை யறிந்த தற்கேற்ற துயரங்களைத் துய்ப்பித்த ததனை விஷிப்பிக்கு முறைமையு மவன் செயல்களென வுணரார். |

ஊகியா மூடரெல்லா மூமடரிலொருவ னென்பர்.

இப்படி நாலுவிதமாக வுபகரிக்குஞ் சிவனது மகிமையை யுள்ளபடி விசாரித் தறிய மாட்டாதவர்கள் தேவரி லொருவனென்று கருதுவார்கள் எ - று. (௫௦)

---

## சிவாக்ரயோகிபருரை வருமாறு.

——0——

மேலியவாறு நிர்க்குணத்தை ப்ரதிபாதித்து சகலர்க்கு முபாஸ்யமூர்த்தியாய பரவரத்தகாபேதமாய கலாமஸ்தகத்திலே யிருந்து ப்ரக்ருதி மண்டல சிருஷ்டியாதிகளைப் பண்ணும் ஸ்ரீகண்ட பரமேஸ்வரனை ப்ரமம விஷ்ணுவாதிகள் அபேக்ஷையாக பரனென்று கூறுகின்றார்.

போகியாயிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார் - உமாமஹேஸ்வர மூர்த்தமாயிருந்து உலகத்தி லான்மாக்களுக் கெல்லாம ஸ்ரீபுருஷ ஸம்யோக மோகத்தை யுண்டாக்குவது நிமித்தமென்றும்,— யோகியாய் யோகமுத்தி புரிவுதலுஞ் செய்வோரார் - க்ஷிசகைவனத்தில் யோகாசனத்திலே யிருந்து போகிகளுக்கெல்லாம போகசாமர்த்திய முண்டாசித் தத்பலமாகிய மோக்ஷத்தைக் கொடுப்பதென்றும்,— வேகியாய்த் தீயோர்செய்த வினைவினை விடலோரார் - கோபத்தை யுடையவராகப்போலே யானமாகசனைத் தண்டிக்கிறது அவர்கள் பண்ணின பாவமேனமேலும் வளராம லொழிக்கிறதென்றும்,— ஊகியா மூடரெல்லா மூமடரிலொருவ னென்பர் - விசாரியாத அஞ்ஞானிகளெல்லாம் இந்தச் சரித்திரங்களைக் கொண்டே தேவர்களி லொருவனென்றே சொல்லுவார்கள் என்றிதன் பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

இதுவுமது

போகியாய் - தேவி தேவனாயிருந்து,— யோகியாய் - தக்ஷிணாமூர்த்தியாயிருந்து,— வேகியானதுபோல் - கோபியானதுபோல்,—ஊகியார் - விசாரியார்.

மற்றது வெளிப்படை.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

முதல்வன் கொண்ட திருமேனிகளிற் சிலதிருமேனி போகவடிவமும், சிலதிருமேனி கோரவடிவமும், சிலதிருமேனி யோகவடிவமுமாகக்கொண்டது; முறையே உயிர்கட்குப் போகம் புரிதற்பொருட்டும், வினையினை வீட்டுதற்பொருட்டும், யோகமுத்தியுதவுதற்பொருட்டுமாமென்பதாம்.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

உம்முடைய கர்த்தா சத்தி சிவான்மியமாயிருந்து போக மோட்சங்களைக் கொடுப்பா னென்றவனை நோக்கி, மேலருளிச் செய்கிறார்.

போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலாலார் - பரமேஸ்வரன் தான் போகசொரூபியாயிருந்து ஆன்மாக்களுக்குப் புசிப்புகளைக் கொடுக்கிற முறைமையு மறியார்கள்,—யோகியா யோகமுத்தி யுதவுதலதுவு மோரார் - தானே யோகசத்தி

லேயிருந்து ஆன்மாக்களுக்கு யோகமுண்டாக்கி யதனால் மோட்சத்தையும் கொடுப்பது மறியார்கள்,—வேகியானுற்போற்செய்த வினைகளைவிட்டலோரார் - தான கோபமுடையவர்களைப் போல விருநது ஆனமாககளுக்குக் கோபங்களையு முண்டாக்கி அவரவர் முனசெய்த கனமத்துக் கீடாக வுண்டாக்கிய சுகதுக்கங்களைப் புசிககச்செய்தே உண்டாகிய பிரியாப் பிரியங்களினாலே ஆகாமியத்தையும் ஏற்றுவித்து, இப்படிப் புசிப்பித்துத் தொலைககிற முறைமையையும் அறியார்கள்.—யூகியாமூடரெல்லா மும்பரிலொருவனென்பர் - இங்ஙனம் பரமேஸ்வரன் ஆன்மாககளுக்குச் செய்கிற உபசங்காரங்களை விசாரித்துப் பாராத புத்தியீனரெல்லா மிவனையுந் தேவர்களிலே ஒருவனென்று சொல்லாநிற்பர்.

இதனுற் சொல்லியது ஆன்மாக்களுக்கு அதுக்கதுக்குத் தக்க திருமேனியாயிருநது போகமோட்சங்களைக் கொடுக்கிற சிவனை தேவர்களி லொருவனென்று சொல்லப்படாதென்னு முறைமையை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்-முதல்வனகொண்ட திருமேனிகளிற் சிலதிருமேனி போகவடிவங்கொணடது உயிர்கட்குப் போகவடிவம் புரிதற்பொருட் டென்பதனையு முணரார்,—வேகியானுற்போற் செய்தவினையினை விட்டலோரார் - கோரவடிவங்கொண்டது உயிர்கள்செய்தவினையினை விட்டுதற் பொருட்டெனபதனையு முணரார்,—யோகியா யோகமுத்தி யுதவுத லதுவுமோரார் - யோகவடிவக்கொ

ண்டது உயிர்கட்கு யோகமுத்தி யுதவுதற் பொருட்டெனபத னையு முணரார்,—ஊகியா மூடரெல்லாம்-இவவாறு திருமேனி கொளளு முறைமையினை யாராய்ந தறியுமறிவில்லோர,—உம பரி னொருவ னெனபா - தேவரின ஒருவனெனபா எனபதாம.

## மறைஞானதேசிகர் உரை.

இப்படி மஹேசவிகரஹ நானாவிதமா யிருககு மென றுணாததுகிறுா.

ஒன்றொடொன் றுவவாவேட மொருவனே த ரித்துககொண்டு, நின்றலா லுலகநீங்கி நின றனே னெனே றுமோரார, ரன்றியவ் வேடமெல்லா மருளபுரி தொழி லென்றோரார், கொனறது வினையைகொனறு நிலற வக குணமெனறோரார். (ருக)

(இ-ள) ஒனறொ டொன றொ வவா வேட மொருவனே தரி ததுக கொண்டு நின றலால் — ஒரு வடிவுக கொருவடிவு மாயுதங்களு மொவவாம விருபததைநது விககிரக மாக வொருககதாததானே தரிததுககொணடு நிர்கையால்

உலகநீங்கி நி னறனனெனறு மோரார் — சிவன ப்ரபஞசததுககு வேறு யதனைநீங் கி நினறுனெனற முறைமையினையு மறியார் கள்.

அனறியவ வே டமெல்லா மரு — இங்ஙனங் கூறிய வடிவினறி வேரேயுண் டாககப்பட்ட திருமேனிகளெல்லா மான

ளபுரி தொழிலென ரோரார்

மர்களுக் கருளைக்கொடுக்கையின பொருட்டென்று மறியார்.

கொனறது வினையைக் கொன று நினறவக குணமென ரோரார்

அரன திரிபுரமுதலியவற்றைச சங்கரித்ததெல்லா மநதநதவானமாக்களை யீடேற்றுகையினபொருட் டவாகள்செய்த கனமங்களைப் புசிப்பித்துத் தொலைப்பித்ததனறி யிச்செயலன்றென்று நல்வினை யடைவிப்பித்ததென்று கருதவுமாட்டாாகள எ-று

இதற்கு வாயவயபசங்கிரை யெனவறிக. (ருக)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———0———

மேலிதவு மதற்கே புறநடை.

ஒனறொடொன றொவ்வாவேட மொருவனே தரித்துக் கொணடு நினறலா லுலகுநீங்கி நினறனனென்று மோரார்-பரம்ம விஷ்ணு ருத்திரனென்னு மூன்று விக்ரஹங்களு மொன றோடொன றொவ்வாததாய், ஒருவனே ஏககாலத்திலே தரித்துக்கொண்டு நிற்கையால்; காமக்குரோதாதிகளுக்குக் காரணமாகிய மாயா பரபஞ்சத்திற்கு அந்யமாகநினறதையும்,— அனறியவவேடமெல்லா மருளபுரிதொழிலென ரோரார் – அனறியந்த விக்ரஹங்களெல்லாங் கருணையினாலே பண்ணப்பட்ட க்ருத்யங்களுக் கென்றும விசாரியார். கிருபையினாலே பண்ணுகிற க்ருத்தியத்திற்குச் சங்கரிப்பானே னென்னில்?—கொனறது வினையைக்கொன்று நின றவக்குணமென்றோரார் - அந்தச் சம்ஹார குணமானது ஆன்மாக்கள் பண்ணின கர்மத்தையே நசிப்பித்ததென்று விசாரியார் என்றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இதுவுமது.

ஔன்றொடொன் றெவ்வாவேடம் - கிரீடாதி விக்கிரகபேத ஆயுதபேதங்களை,—கொன்றது - தக்ஷ மதனாதி சங்காரம்,—வினையைக்கொன்றது - இருவினையும் பாவத்தைப புசிப்பித்து நாசமாக்குவது.

மற்றது வெளிப்படை

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அங்ஙனம் போகவடிவுங் கோரவடிவும் யோகவடிவுமாய்த் தம்முண் மாறுபட்ட பலவடிவம் ஒருவனே கொண்டுநிற்றலும், தம்முண் மாறுபட்ட அப்பலவடிவங்களும் அங்ஙனம் போகமும வீடும் யோகமு முகவுமுகத்தான அநுக்கிரகமொன்றற்கே ஏதுவாதலும், தீமைசெய்வது நன்மையைப் பயத்தலும, உலகத்தின வைத்தறியப்படாத வதிசய நிலையாகலான; இதுவுமதற்குச சானறெனபதாம்.

உலகினை யிறந்துநின்ற தாணுருவ மென்பதூஉம் ஈண்டினிது விளக்கியதூஉமாயிற்று.

நிற்றல் நின்றலென விகாரம்.

அன்றியவெனனும் பெயரெச்சவீறு விகாரத்தாற் றொக்கது.

இவையிரண்டு செய்யுளானும் அசித்திரனுதற்கு ஏதுக்காட்டியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---0---

உம்முடைய கர்த்தா ஒருவனென்றால் வடிவமொன்றாயிருந்து பலவாகச் சொல்லவேண்டுவதில்லை என்றவனை நோக்கிப் பலவடிவு அவனுக்குண்டென்றருளிச்செய்கிறார்.

ஒன்றொடொன்றுவமையிலாதவனுருவமல்ல வுருவம் அறியாமைக்கண் நின்றவனுலகநீங்கி நின்றனன் என்றறிமோர்கள் — ஒன்றைப் பொன்றுருவமாகப் பலவாகக் கர்த்தாகக்கொண்ட திருமேனிகளெல்லாம் ஒருவர் கொடுத்ததல்ல, தன்னிச்சையாலே தானே உண்டாக்கிக்கொண்டு நிற்கிறவன்;ஆகையால் பிரபஞ்சத்தை நீங்கிநிற்பானென்கிற முறைமையையு மறியார்கள். இப்படித் திருமேனி பலவாக வேண்டுவானேனென்னில்?—அன்றியவவேட மெல்லா மருளபுரிதொழிலென்றோரார் – இதுவன்றியும் அப்படி பொன்றையொன்றோராத திருமேனிகளெல்லாம் ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம்பண்ணுகைப் பொருட்டாகக்கொண்ட திருமேனியென்று மறியார்கள். அப்படி யநுக்கிரக மூர்த்தியாயிருக்கிறவன் சங்கரிப்பானேனென்னில்?— கொன்றது வினைபைக் கொன்று நின்றவக் குணமென்றோரார்-திரிபுரதகன முதலாகச் சொல்லப்பட்ட கொலைகளெல்லாம் ஆன்மாக்கள் கன்மத்துக்கிடான சரீரங்களையெடுத்து சுகதுக்கங்களை யநுபவிக்கிறது யாதனை நீக்கி யிளைப்பாற்றிவைத்தது குற்றமல்ல, குணமென்று விசாரித்தறியவு மாட்டார்கள்.

இதனாற்சொல்லியது கர்த்தா எண்ணிறந்த வடிவுகள் கொண்டது ஆன்மாக்களை யிரட்சிக்கை நிமித்தமாகவென்றும், அவன்செய்கிற நிக்கிரகமும் அநுக்கிரகமே யாமென்னு முறைமையை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஒன்றுடொன் றெவ்வாவேட மொருவனே தரித்துக்கொண்டு நின்றலால்-அநயனம் போகவடிவும கோரவடிவும் யோகவடிவுமாய்த தமமுண மாறுபட்ட பலவடிவு மொருவனே தரித்துககொண்டு நிறறலால்,—உலகநீங்கி நின்றன னென்று மோரார்-உலகத்தின வைததறியப்படாத அதிசய நிலையனெனபதனையு முணரார்,--அனறி யயவேடமெல்லா மருள்புரி தொழிலெனறேரார் - தம்முண மாறுபட்ட அபபலவடிவஙகளும் அநயனம் போகமும் விடும் யோகமும உதவுமுகததா னநுக்கிரக மொனறற்கே யேதுவாமெனபதனையு முணரார்,—கொனறது வினையைக்கொனறு நினறஅக் குணமெனறு ஓரார்-கொல்லுதலாகிய தீமைசெய்வதும வினையைக கெடுததலாகிய நனமையைப் பயததலாகிய குணமெனபதனையு முணரார்.

இவை யிரணடுசெய்யுளானும அசிஙதிதனே யெனபதற்கேது கூறியவாறு

---

## மறைஞானதேசிகர் உரை.



இதுவுமது.

நாயகன் கணணயபபா ளுயவிபுதைப்பவெஙகும்,
பாயிருளாகிமூடப பரிந்தல னுககுநெற்றித், தூ
யநேத திரததினாலே சுடரொளி கொடுத்தபண்பிற,
றேயமா ரொளிகளெல்லாஞ சிவனுருத் தேசதென்
னார். (௬௨)

(இ-ள்.) நாயக கைலாயததின் கண் இரத்தினப் பிரத்தன் கண் மென்னுந் தாழ்வரையிற் கணங்களெல்லாங்

ணயப்பா ஞய கிபுதைப்ப — தோத்திரஞ்செய்யப் பார்வதியாருடன் சிவனெழுந்தருளியிருக்கிற வவதரத்தில் நிருத்தமுதலிய லீலைகளைப்பண்ணி யெழுந்தருளியிருக்கிற சமயத்திலே, பார்வதியார்விநோதார்த்தமாகச் சிவன திரு நயனததைப புதைக்க,

எஙகும் பாயி ருளாகிமூட — உலகமெங்கும் பரந்தவிருளாற் றேவர்களெல்லாரையுந தேவவருடததிற் கோடிவருட மறைக்க; அப்பொழு தவர்க டோததிரஞ்செய்ய,

பரிந் துலகினுக்கு — உலகத்திலுண்டான வானமாக்களுக் கெல்லாந துயருறுவதனைககண் டது நீக்குகையினபொருட்டுக கிருபைசனித்து

நெற்றித் துய நேத் திரத்தினு லே சுடரொளி கொடுததபண்பின — பாலததின ஞானககண்ணுற் சுடர்பொருந்திய ப்ரகாசத்தைக் கொடுத்த முறைமையாலே,

தேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேசதென்ருர் — தேசங்களிற் பொருந்தப்பட்ட ப்ரகாசங்களெல்லாஞ் சிவன தநுக்கிரகத்தா லுண்டான ப்ரகாசமேயென்று விசாரியார்கள். எ – று.

இதற்குச் சைவபுராணத்தி லேகாதச வுருத்திர சங்கிதையி லெனவறிக.

உ-ம். தேவாரம். "மலைமடந்தை விளையாடி வளையாடு கரத்தான மகிழ்ந் தவனகண் புதைத்தலுமே வல்லிருளா யெல்லா, வுலகுடனருன மூடவிரு ளோடும்வகை நெற்றி யொற்றைக்கண் படைத்துகந்த வுததமனூர்வினவி, லலையடைந்த புனல்

பெருகி யானைமருப் பிடறி யகிலொடுசந் தந்திவரு மரிசிவின
றென கனாமேற், கலையடந்து கலிகதடியந் தணமோமப புகை
யாற் கணமுகில்போன றணிகிளருங் சலையநல்லூரா சாணே"
எனவறிக. (ருஉ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் ப்ரபஞ்சத்தில் பரகாசமெல்லாம சிவனுடைய நேத்
ரங்களின பரகாசமெனப துணாதது தல்.

ஸாவலோக நாயகனுகிய பரமேஸவரனுடைய திருநயன
ங்களிலே லோகநாயகியாகிய பாாவதியாா விநோதத்திருலே
மூட வெல்லாலோகங்களும் அந்தகாரமாகையிருலே, லோகங
களுக்கு கிருபையிருலே நெற்றித் திருநயனததிருலே ப்ரகா
சததைக கொடுதத பரிசிருலே; லோககளிலுணடான பா
காசமெல்லாஞ் சிவனுடைய திருநயனங்களின ப்ரகாசம என
அறி எனறிதனபொருள.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

இதுவுமது.

வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

அவ்வேடமெல்லாம் அருள்புரி தொழிலெனபதற்கு முதல்

வி திருக்கண்புதைதத திருவிளையாட்டினக ணிகழ்ந்த நிகழ்ச்சி யே சானறெனபதாம.

நயப்பு மகிழசசி
பாப்கல் பரததல.
தேயம உலகம.

---

# நிரம்பவழகியருரை யருமாறு.

—o—

இப்படி உம்மூடைய சாததா பிரபஞசததை இரட்சிப்ப னென றெஙகேகாணபபடடதென றவனைநோககி மேலருளிச செயகிருர.

நா பகனகண்ணயப்பால் நாயகிபுதைப்ப - பரமேஸ்வரனு டைய திருநயனஙகளைப பரமேஸவரி விநோதமாக செயததகத தாலே மறைகக,—எஙகும்பாயிருளாகிமூட - எவவிடமுமிரு ளானது பாாத்து சாவதனைய்யு மூடிககொள்ளப் பரிநது பரமே ஸ்வரன ஞானமாககளுககாக விரஙகித திருவுளம்வாழ்ந்து உல கினுககு,—தூயநேததிரததினுலே சுடரொளி கொடுததப்பண பில் - பிரபஞசததுககு நெற்றியிலுணடான சுததமான திருநய னததாலே விட்டு விளஙகாநினற சுடர்பொருநதின பிரகாசத தைக கொடுதத முறைமையாலே,—தேயமாரொளிகளெல்லா ஞ சிவனுருத தேசதெனறுர் - பிரபஞசத்தி லுணடான சநதி ராதிததாக்கினி நட்சததிர முதலான பிரகாசங்களெலலாம பரமேஸவரனுடைய திருமேனிப் பிரகாசததினுலே காரியப்ப டுகிற வொளிகளெனறு இந்த முறைமையை உளளபடி யறிந்து சொல்லுகிருர்களில்லை. அதேதெனனில்? தங்கள் அகங்காரங் களால்.

இதற்குப பிரமாணம். தேவாரம், "மலைமடந்தை விளையாடி வளையாடுகரத்தால் மகிழ்ந்தவன்கண் புதைத்தலுமே வல்லிருளாயெல்லா, வுலகுடனறுனமூடவிருளோடும்வகைநெறி யொறறைககண படைத்துகந்த வுத்தமனூர்வினவில், லலையடைந்தபுனலபெருகி யானைமருப்பிடறி யகிலொடுசந்துந்துமரிசிவினறெனகரைமேல், கலையடர்ந்து கவிககடியந் தணரோமப் புகையாற கணமுகில்போன றணிகிளருங கலையநல்லூர காணே" எ-ம, திருவாசகம். நீததல்விணையபம, "களிவந்தசிந்தையொ டுனகழல்கண்டுங கலந்தருள, வெளிவநதிலேனை விடுதிகணடாய் மெயசசுடருககெல்லா, மொளிவந்தபூங்கழ லுததரகோசமங கைககரசே, யெளிவந்தவெநதைபிரா னெனனையாளுடை யெனனபபனே". எனனுமதுங கண்டுகொளக.

இதனாற் சொல்லியது பரமேஸ்வரன திருநயனத்தைப் பரமேஸ்வரி மறைககப பிரபஞசமெல்லாம் அநதகாரமாய்விடப பரமேஸ்வரன நெற்றிககணணாலே அநத வந்தகாரததைப் போககுகையால்; எல்லாப பிரகாசஙகளும பரமேஸ்வரனுடைய திருமேனிப் பிரகாசமெனனு முறைமையு மறிவிததது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(அவ்வேடமெல்லா மருளபுரி தொழிலெனபதற்கு) நாயகி நயப்பால - முதல்வி மகிழசசியால்,—நாயகன கணபுதைபப - முதல்வனது திருககண்புதைதத திருவிளையாட்டினகண்,—எங்கும்பாயிருளாகிமூட - எவ்விடத்தும்பரவிய இருளாகிப்போர்ககவும்,—பரிந்துலகினுக்கு - பரிவுற்றுலகினுள்ளார்ககு,—தூய நெற்றி நேத்திரததினாலே - தூய்தாகிய நெற்றிக்கண்ணால்,—

சுடரொளிகொடுத்த பண்பின் - மிகுந்தபிரகாசத்தினை யளித்த ருளி யதனைமையால்,—தேயமா ரொளிகளெல்லாம - உலகினுள்ள வொளிகளெல்லாம்,— சிவனுருதரேசனெனௌர் - சிவனற்ற திருமேனிய பிரகாசமென றுணரார்.

---

## மறைஞானதேசிகர் உரை.



இதவுமது

கணனுதல் யோகிருப்பக் காமனின் றிடவேட்கைக்கு, விண்ணுறு தேவராதி மெலிந்தமை யோரார்மாறு, னெண்ணிவேண் மகனையேவ வெரிவிழித் திமவானபெற்ற, பெண்ணினைப் புணர்ந்துயிர்க்குப பேரின்பமளித்ததோரார். (௫௩)

(இ-ள்.) கண்ணுதல் யோகிருப்ப — சிவ னிமவானிற் ருழுவனாயிற் றேவதாருமரதத்தினிழலிலே வேதிகையிற பரியங்கமெனனு மியோகாதனமாக வெழுந்தருளியிருந்த வவதரத்தில்

காம னின்றிட வேட்கைக்கு விண்ணுறு தேவராதி மெலிந்தமை யோரார் — தேவலோகத்திருக்கும் தேவர்கண் முதலாயினோர்க்குக் காமவிகாரமின்றி யதனாலவர்கள் வருத்தமுற்ற முறைமையினையு மறியார்.

மாறு னெண்ணி வேண்மகனை யேவ — மாயனுனவன் றேவர்களுக்குத் துயரத்தை நீக்குதல் காரணமாகத் திருவுளத்தடைத்துத் தன்பிள்ளையாகிய காமராசனை யழைத்து திக்தச் சிவ னியோகத்தி லிருக்கையா லா

ன்மாக்களுக்குச் சுகமில்லாமற் றுயருறுகிறார்கள்; ஆகையா னீ பேர யிந்தயோகத்திற சிவன கருத்தைத திருப்பென்ன, அவனு மப்படியே யதனைக குலைக்க,

| | |
|---|---|
| எரிவிழித்து | சிவனு மிப்படி வருவானென்று விசாரித்த ப்பொழுது நெற்றிக்கண்ணு லவ னெரிந்து போமபடி விழித்துபபார்த்து, |
| இமவான பெற்ற பெண்ணினைப் புணர்ந்துயிர்க் குப் பேரின்ப ம ளித்ததோரார். | மேனையுட னிமவான கூடிப்பெற்ற பா ரவதியாரைச் சிவன திருககலியாணம்பண் ணி யருளினபின்பு, சர்வான்மாக்களுககு மி குந்த போகத்திற சுருதத்துண்டாககிக காத் தா கொடுக்க, அதனைபபெற் றநுபவிக்கு மு றைமையினையு மறியாாகள். எ - று. |

இதற்குக் காலோத்தரத்தற் காலங்கத்துங் காண்க (௫௩)

---

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

—o—

மேல் காத்தாவினுடைய யோகபோக ரூபங்கள் ஆன்மாக் களின பொருட்டல்லது தனககில்லையென் றுணர்த்துகின்றது.

கணணுதல் யோகிருப்பக் காமனின்றிட வேட்கைககு வி ண்ணுறுதேவராகி மெலிந்தமையோரார் - நெற்றியிலே நயன த்தையுடைய பரமேஸ்வரன ஸகிதேவியாரை நீங்கி யோகத்தி லிருக்கவே ஸ்ரீபுருஷர்களை விகாரமுண்டாக்கிக் கூட்டுங் காம னுணடாயிருக்கவும், தேவர்கள் முதலான பேர்கள் ஸ்ரீபோக மில்லாமல் துககிதரானதையும் விசாரிபார்.—மாறு னென்னி வேள்மகனையேவ வெரிவிழித் திமவான்பெற்ற பெண்ணினைப் புணர்ந் துயிர்க்குப் பேரின்ப மளித்ததோரார் - திருமால்தான பரமேஸ்வரன யோகாசனத்தி லிருககையிலுலே யெல்லாச்

கரும போகமில்லை யாசசுது, அநத யோகத்தை விலக்கெ ன்று வேளாகிய தம்முடைய பிள்ளையை யனுப்ப; அவனபோய் புஷ்பபாணததைத் தொடுப்ப, அவவளவில் பரமேஸவரன நெ ற்றி யனல்விழியாலே யெரிததுப் பினபு இமவானமகளாகிய பாாவதியார் தபசுபண்ண அததபசினாலே சநதோஷிததத தி ருககலயாணம பணணிககூடி, ஆனமாககளுககு அமைவுபெறுத விஷய சுகததைக கொடுததை விசாரியார் எனறிதன பொ ருள

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

இதுவுமது.

வெளிப் பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

பல்வேறுவகைப்பட்ட அருளபுரிகொழிலும் அவ்வேடததை யினறியமையாமைககுக கண்ணுதல யோகிருநதுழி உலகத்தின க ணைகழநத நிகழசசியே சானறெனபதாம.

உலகினுக்குயிருமாய் நினறவற்றை இவ்விருவகைத் திருவி ளையாட்டினவைத்து இனிது விளககியதூஉ மாயிற்று. ஒனறு டொன ருவவாவேட மொருவனே தரிததுக்கொணடதும் இ தனுட் கண்டுகொள்க

இவையிரண்டு செய்யுளானும் மேலதனைக் கண்கூடாகத் தெளிவித்துச் சிந்திதனுயும் அசிநதிதனேயென்றதனை வலியுறு த்தியவாறு.

ஸ்ரீகண்டருத்திரர்க்குரிய வடிவங்களும் பெயர்களுந் தொழில்களும முதல்வனுக்கும ஒப்பவுளவென்பது வாயுசங்கிதையுட்கூறபபடுதலின, ஈண்டுக் கூறியனவெல்லாம் முதல்வனுக்குரியனவே யாமெனக்கொள்க.

அற்றேலினனறே ஈண்டுக் கூறியவடிவங்களெல்லாம் மகேசுரமூர்த்தமிருபத்தைந்தனுள வைத்தெண்ணபபட்டனவெனபது.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

மோட்சத்தையனறிப போகமு சிவனே கொடுக்கவேணுமெனகிற முறைமையை யருளிச்செய்கிறுர்

கண்ணுதலியோகிருப்பக் காமனினறிட வேட்கைக்கு விண்ணுறு தேவராதி மெலிநதமையோரார்-பரமேஸவரன யோகத்திலே எழுநதருளியிருக்கக் காமராஜனுஞ் சித்திரம்போலே நிறக,இனபததுசசுததெயவலோகததிலேயுளளதேவர்களபுவிலோகததிலுளளவர்கள நாகலோகததிலுளளவர்கள் இததனைபேருமிகவுமெலிநது வருததபபட்டது மறியார்கள —மால்தானெனனி வேளமகனையேவ - விஷ்ணுவானவர் பரமேஸவரன எழுநதருளியிருந்த யோகத்தைக கலைப்பதாக நல்ல விசாரம விசாரித்துத் தனனுடைய பிளளையாகிய காமராஜனையேவ,—எரிவிழுந்து - அந்தக் காமராஜன் வெநது பஸ்மமாய் போம்படி திருநயனத்தாலே பார்த்து,—இமவானபெற்ற பெண்ணினைப் புணர்நது – ஆனமாக்கள்படுகிற வருததத்தைக் கண்டு பரமேஸ்வரன தானே திருவுளம் வாழ்ந்து பருவதராஜன புத்திரியைக கலியாணம் பண்ணிககொண்டு யோகத்தையநுபவித்து,—உயிர்

ச்குப்பேரின்பமளிதகதோரார் - ஆன்மாக்களுக்குச் சிவனுள்ள வனறே தொடங்கி அவன் திருவடியைப் பெறுமளவும் விடடு நீஙகாத மிகுநத மாயாபோகத்தைக கொடுததது மறியாாகள்.

இதற்குப் பிரமாணம. திருசசாழல், "மலையரையனபொற் பாவை வாணுதலாளபெண்டிருவை, யுலகறியததீவேடடா னென்னுமது வெனனேடீ, யுலகறியததீவேளா தொழிநதனனேலுலகனைததுங், கலைநவினறபொருளகளெல்லாங கலஙகிடுங்காண சாழலோ" எனனுமதுங கண்டுகொளக.

இதனாற் சொல்லியது பரமேஸவரன போகியாயிருந்து சர்வானமாக்களுககும் போகததைப் புசிபபிக்கிறவன, யோகத திலேயிருந்து சாவானமாககளுக்கும் போகததுக்குமமிகுதியா கவருநத; அது கண்டு மிகுதியும தானே போகியாயிருநது சர்வா னமாககளுககும் போகததைக கொடுக்கானெனனுமமுறை மையை யறிவிததது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(பல்வேறுவகைப்படட அருள்புரி தொழிலுமவவேடத்தை யின்றி யமையாமைக்கு) கணணுதல்யோகிருப்ப - நெற்றிககண் ணுடைய சிவபெருமான யோகிருநதுழி,— வேட்கைககுககாம னின்றிட—வேட்கைகுக்காரணமாய்காமனிருக்கவும்,— விண்ணு றுதேவராதி—மேலிடத்துள்ள தேவர்கண்முதலியோர்,—மெலி நதமையோரார் - மெலிவுற்றது மறியாராய்,—மாறுனஎண்ணி வேணமதனைஏவ - மாயனுங்கருதிகாமனையேவுதல் செய்ய,— எரிவிழித்து - விழிதெரித்து,—இமவான்பெற்ற பெண்ணினை ப்புணர்ந்து - உமாதேவியைக்கலந்து,—உயிர்ச்குப் பேரினபம

ளித்ததோராா - உயிர்களுக் கின்பநிகழ்ச்சி யருளிச்செய்ததும் சானறெனபதுணரரர்.

இவையிரண்டுபாட்டானு மேலதனைக் கண்கூடாகத் தெரிவித் தச சிகதிதனுயினும அசிநதிநனேயெனறதனை வலியுறுததியவாறு

---

## மறைஞானதேசிகர் உரை.

சிவ னநுககிரகஞ் செயயு முறைமையைப் பலவாகக்கூறி,
மே லவற்றை யிரண்டு விருத்தததான முடிநதது
முடிததலெனனுந் தநதிர வுகதியா
லுணர்த்துகிறுர்.

படைப்பாதி தொழிலும்பத்தர்க கருளும்பா வனையுநூலு, மிடப்பாக மாதராளோ டியைநதுயிர்க இன்பமென்று,மடைப்பாறு மதுவுமுத்தி யளித்திடும் யோகும்பாசந், துடைபபாறுந தொழிலுமேனி துடககானேற சொல்லொணுதே. (ருச)

(இ-ள) படைப்பாதி தொழிலும் — அழிப்பினைப்பாற்றலெனனும் பஞ்சகிருத்தியததின முறைமையினையும்,

பத்தாககருளும்பாவனையும் — எறும்புமுதற் றேவர்க ளீறுயுள்ள வான்மாக்களைத திருக்கண சாததி யிரட்சிககிற பெருமையினையும்,

நூலும் — ஆரண மாகமங்களென்னு மாகமங்களுண்டா யதுவருங் குருமரபின முறைமையினையும்,

இடப்பாக மாதராளோ டியைந் துயிர்க்கின்ப மென்று மடைப்பாறு மதுவும் — கண்ணுதல் யோகிருப்ப வென்பதனால் அந்தநா ரீசுரனாகச் சிவன் பார்வதியாரைப் பொருந்திப் போகத்தை யான்மாக்களுக்குக் கொடுக்கு முறைமையினையும்,

முத்தி யளித்திடும் யோகும் — யோகியாயிருந்தென்றும் யோகத்தின் முத்தியின்பத்தைப் பெற்றிருக்கு முறைமையினையும்,

பாசந் தடைபபாறுந் தொழிலும் — ஞானதீக்ஷையைச் செய்த்தரு லடையு முத்தியினையும்,

மேனி தட்க்கானேற் சொல்லொணுதே — சிவன் திருமேனி தரித்துக்கொண்டு சிருட்டிமுதலிய தொழில்களைச் செய்யாதிருப்பானாகில்; கிருத்தியங்க ளுண்டென்றுஞ் சொல்லப்படாது எ-று

ஆன சாரியை.

உம்மை எண்.

இதற்குக் காமிகங் கிரணம் மகுடத்திறகாண்க. (௫௪)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் ஸ்ரீகண்ட பரமேஸ்வரன் திருமேனியைச் சிவனதிட்டித்து நில்லாதபொழுது ப்ரகிருதியில் ஸ்ருஷ்டியாதி கிருத்தியங் கூடாதென்ப துணர்த்துகின்றது.

படைப்பாதித் தொழிலும் பத்தர்க்கருளும் பாவனையு நூலு மிடப்பாக மாதராளோ டியைந் துயிர்க் கின்பமென்று ம

டைப்பாரு மதுவும — ஸ்ருஷடியாதி ச்ருததியங்களைப் பண ணுவது பகதஜநஙகள தயாநபூஜைகரும வேதாகமங்களை ய ருளுவதும், இடதுபாகததி லீஸ்வரியாருடனே கூடியிருநது ஆ னமாககளுசகு எபபொழுதும் விஷயசுகததைச சேரசசிறது ம,—முததி யளிததிடும யோகும பாசந துடைபபாருந தொழி லுமமேனி தடக்கானேற் சொல்லொருகே - பததிமுதத்தை க கொடுககும யோகமும, அஞ்ஞானததை யொழிககும அநுக கிரஹமாகிய கிருததியமும், ஈதெல்லாம ஸ்ரீகணடபரமேஸவர ன திருமேனியை அதிஷடியாதபொழுது ஆமெனறு சொல்லொ ருதெனறிதனபொருள்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சுததாததுவ சிருட்டி திதி சங்காரஙகள போற் பிர கிருதிகருள் உளளே அவாநதரகிருததியம, பிரமாணததிலுமுள்ள அவாநதர கிருதயம, சாக்ஷாத சிவகிருதய மாசட்டுர, சிக ண்ட ரேகமறைவிறுற் சிவனுக்குக கிருததியமெனபது வே ண்டாம அது னறனறு சகரவாததியாயிருககின்ற விராசா வுககு அநதரஙக கிருததியம பகிரஙக கிருததியமபோல , சிவ னுசகு மப்படி யநதரஙக கிருததியம பகிரஙக கிருததிய மிர ண்டும் முறைமையிற் சாக்ஷாத தனாலும பிறரைச செலுத்தி யவர் தாலுகி மறைவாலும் நடசகுமெனறு கூறுகினறா.

முறைமையிற் பிரதம மஹாசிருஷ்டியில் சிவன சிவததது வ பஞ்சக சிருட்டிபண்ணிப் பின னநநதேசுர சரீரசரீரியாய் அசுத்தமாயையி லின்றும் காலதத்துவ முதற் பிருதிவி தத்து வ மநதமாகிய தத்துவ தாததுவிகஙகளை யுணடாககி, உருததிர

ரை இருதயத்தினின்றும், விஷ்ணுவையும் பிரமாவையும் பாரிச ங்களினின்றும், சூரிய சோமாக்கினிகளை வல திடது நெற்றி நேத்திரங்களினின்றும், விக்கினேஸ்வரரையுஞ் சுப்ரமணிய ரையுங் கண்டத்தினின்று மிருதயத்தினின்று மிப்படி வாதுளத் திற் சொன்னபடி, மற்றமற்ற அங்கங்களினின்றும் தேவர்களி ருடிகள் வேதசாஸ்திரங்கள் மற்றுமுள்ளன வுண்டாக்குவா.

நடுவே நடுவே வரும அவாந்தர சிருட்டியில்

மேனிதட்டக்காணேல் - பிரகிருதிநிலைய ஸ்ரீகண்ட சரீரசரீர யாயும், பிரமாணடநிலைய ஸ்ரீகண்டசரீரசரீரியாயும இராநின்ற தால,—படைப்பாதிதொழிலும்-மத்தியமப்பிரளய முடிவினி ற் குணதத்துவமுதற பிருதிவி ததவமீறுகும் தத்வதாதவிக சி ருட்டி ஸ்திதி சங்காரங்களும்,—பத்தர்ககருளும் பாவனையும்- தீக்ஷாவானகளா யிருக்கும் சிஷ்டருக் குபதேசித்துக் காணபி கரும நிராலமப சாலமப சிவத்தியானமும்,—நூலும - சிவாக மோபதேசமும;--இடபபாக மாதராளோ டியைந் துயிர்க்கின பமொனறும அடைப்பானுமதவும - உண்டாக்குவதும,—முத தியளிததிடுமியோகும - உபதேசித்துக்காண்பிக்கும் சாலம்ப நி ராலம்ப சிவத்தியானமும்,—பாசந்துடைப்பானுந் தொழிலு ம-தீக்ஷையைப் பண்ணுவதும்,—சொல்லொணாதே - ஆமென்ற றையபபடாதே.

சூரியனைக் காசிபர் புத்திரனென்பதும, சந்திரனை அத்திரி புத்திரனெனபதும், ருஷிகளைப் பிரமா முதலோர் புத்திராக ளெனபதும, வேதசாஸ்திரங்களைப பிரமா முதலோர் சொன னதெனபதும், சுப்பிரமண்ணியர் விக்கினேசுர ரிவர்களை ஸ்ரீக ணட புத்திரர்க ளெனபதும, இவைமுதலிய பலவும்; அவாந் தர சிருஷ்டியில்.

முன் சொல்லியபடி மஹா சிருஷ்டியில் மகேசுர புத்திரர்களே.

மாந்திரசாத்திரம் சதாசிவ மாசலால் லௌகிகாதி அதிமார்க்காந்த சாஸ்திரங்கள் சாக்ஷாத்தும் பிராகாராந்தரத்திலும் வந்தாலும் மகேசுர சாத்திரங்களே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

ஆரணமாகமமெனனுஞ் செய்யுளிற் கூறிப்போந்த உபதேச மாத்திரைக்கேயன்றி, உலகவனுருவிற்றோன்றி யொடுங்குமென்பது முதலாக, இங்ஙனங் கூறிப்போந்த தோற்ற மறைப்பு நிலையருளிறுதியெனனும ஐந்தொழில்செய்தற்கும; அவ்வடிவம இன்றியமையாச் சிறப்பினவாய் வேண்டப்படுமெனபதாம்.

படைப்புக்கு வாதுளாகமத்திலோதியவாறே இயங்கியற்பொருளும நிலையியற்பொருளுமாகிய உலகங்கள, முதல்வனது திருமேனியில் ஒவவோருறுப்புக்களினின்று தோன்றுமாறுசெய்யவேண்டுதலானும், மறைப்புக்கு ஊனநடன மியற்றவேண்டுதலானும், திதிக்கு மாதராளோடியைய வேண்டுதலானும், அநுக்கிரகத்திற்கு யோகிருந்து காட்டவேண்டுதலானும், சங்காரத்திற்குத் தோன்றின முறையே அவ்வவ்வுறுப்புக்களின ஒடுக்கவேண்டுதலானும, உபதேசமாத்திரைக்கேயன்றி இவற்றிற்கும் உருவத்திருமேனி இன்றியமையாச் சிறப்பினவென்பதுகண்டுகொள்க.

ஐந்தொழில்களைக் கிளந்து கூறுதலிற் படைப்பாதியென்பதற்குப் படைப்பாகிய ஆதித்தொழிலென்றுரைக்க.

பத்தர்க்கருளும் பாவனையெனபது பததாக்கு இருவினை யொபபின அருளுதர்பொருட்டுச செய்யும பாவனையெனத, தி ரோதானததொழிலையுணர்ததிறறு. பாவனையென்றா, அஃ்த வனுககு இயல்பனமையின

நூல் எனபது நூலைசசெய்யுமெனப் பெயரடியிற் பிறந்த பெயரெசசவினையாய் இடைப்பாகமாதராளுககு அடையாயி றறு இவவாறனறி எனனுமமை யேறற சொலலாகவே வை தது, மேற்கூறியபோகத அரணவாகமஙகளைப் பிரித்துககூட்ட லெனனுமுததியால் எணடுமுடனவைதது எனனிறுறெனறு ரையபினுமாம

பாசந தடைப்பர்ளுந தொழிலெனறது ஈணடுச சங்கா ரததினமேறறெனபது, கொனறது வினையைக கொன்று நி னற வகருணமெனபதுளுன அறிக

அடைபபான தடைப்பானெனபன பானீற்று வினையெ ச்சம செய்யுளாகலின முறைபிறழ வைததார.

இவையனைததுஞ சுததமாயையிற படுங் காரியங்களை நோ ககிக கூறிடதெனறுணர்க.

உலகினையெனபது முதல் இவவேழுசெய்யுளானும், மேலைச் செய்யுளின அசிந்திதனெனறதனை வலியுறுத்துமுகத்தான அவ் வருளுருவின,பேதஙகளும்,அவற்றுறுய தொழில்களும் பயனும், அவையினறியமையாச சிறப்பினவாமாறும், தொகுத்துக கூற பபட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

சர்வஞ்ஞனுமிருக்கிற உம்முடைய கர்த்தா அரூபமாயிருந் து ஆனமாககளுககுப் போகத்தைக கொடுககமாட்டானே! உ

ருவமேன் கொள்ளுகிரு னெனறவனே நோககி மேலருளிச் செய்கிறார்.

படைப்பாதிததொழிலும் - சிருட்டி முதலாகிய கிருததியங்களும,—பததர்ககருளும் பாவனேயும - சிவபததாகளுககு அநுககிரகமபணணுமு ஒருமையும,—நூலும - சாததிரங்களும,—இடப்பாகமாதராளோ டிசைநதுயிற்கினபமெனறு மடைப்பாணுமதுவும - பரமேஸ்வரன தனனுடைய இடபபாகததிலே பரமேஸ்வரியை வைததுககொண்டிருநது ஆனமாக்களுக்கு எப்பொழுதும போகததைககொடுககிற அநத முறைமையும,—முத்தியளிததிடுமியோகும்- ஆனமாககளுககு மோட்சததைக கொடுககிற சிவயோகமும,—பாசநதுடைப்பானுர்தொழிலும-ஆனமாககளுடைய பககுவாபககுவ மறிநது ஆசாரியனுக எழுநதருளிவநது பாசஙகளைபபோககுகிற தீட்சைகளும,—மேனிதொட்ககானேற சொல்லொணுதே - இஙஙனஞ் சொல்லப்பட்ட இவையெல்லாம் பரமேஸ்வரன தனது காருணணியததினுலே திருமேனிகொண்டானில்லையாகின, ஆனமாக்களுககுப போகமோட்ச முணடாகாதெனனு முறைமையை யறிவித்தது

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(ஆரணமாகம மெனனுஞ்செய்யுளில் கூறிப்போந்த வுபதேசமாததிரைககே யனறி) படைப்பாதிதொழிலும-படைப்பாதிய ஆதிததொழிற்கு வாதுளாகமததி னேதியவாறே இயங்கியர்பொருளு நிலையியற்பொருளுமாகிய வுலகங்கள் முதல்வனது திருமேனியி லொவ்வோ ருறுப்புககளி னினறு தோனறுமாறுசெய்யவேண்டு மாதலானும்;— பத்தாக்கருளும் பாவனேயும்-பத்தர்களுக் கிருவினேயொப்பின அருளும்பொருட்டுச் செய்யும்

பாவனையாகிய திரோதானத்தொழிற்கு ஊனநடன மியற்ற வேண்டுதலானும்,—உயிர்க்கின்பமென்று மடைப்பனுமதுவும்-உயிர்களுக்கின்பத்தைச் செய்வதாகிய திதிக்கும்,—நூலுமாத ராளோடிடப் பாகமியக்து - இடையினுக்கு நூலையொப்பாகச் செய்யுந் தேவியோடிடைப்பாகத் திமையவேண்டுதலானும்,—முத்தியளித்திடும் யோகும் - முத்தியளிப்பதாகிய அநுக்கிரகத்திற்கு யோகிருந்து காட்டவேண்டுதலானும்,—பாசந்தைப்பாறுந் தொழிலும - பாசநீங்குவதாகிய சங்காரத்தொழிற்குத் தோன்றினமுறையே யவ்வவ்வுறுப்புகளி னுடுக்கைவேண்டுதலானும,—மேனிதொடக்கானேற சொல்லொணாதே- இவற்றிற்கு மவ்வடிவமின்றியமையாச சிறப்பினவாய் வேண்டப்படுமென்பதாம்.

உலகினையெனபது முதலிவ்வேழுசெய்யுளானு மேலைச்செய்யுளின அசிந்திதனென்றதனை வலியுறுத்துமுகத்தான அவ்வருளுருவின பேதங்களும், அவர்முறைய தொழில்களுமபயனும் அவையின்றி யமையாக சிறப்பினவாமாறுந தொகுத்துக் கூறப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேற் றலைதடுமாற்றமெனனுந் தந்திரவுத்தி.

உருமேனி தரித்துக்கொண்ட தென்றலு முருவிறந்த, வருமேனி யதுவுங்கண்டோ மருவுரு வானபோது, திருமேனி யுபயம்பெற்றோ மெப்பிய மூன்றுநந்தய,கருமேனி கழிக்கவந்த கருணையின் விளைவுகாணே. (௫௫)

(இ-ள்) உருமே னி தரித்து க்கொண்ட தென்றாலும் — மெய் வாய் கண் மூக்குச் செவி யிவைக ளையுடைய சகளமே சிவனுக்குத் திருமேனி யென்றது

உருவிறந்த வ ருமேனி யதுவுங் கண்டோம — கலைகளுடன் கூடாத நிட்களமான திரு மேனியின் முறைமையு மறிந்தோம,

அருவுரு வான போது திருமே னி யுபயம பெற றேும — முற்கூறிய வுருவமு மருவமும் ஒன்றுகக் கூடித் திருமேனி கொண்டவிடத்துச் சகள நிட்களமான திருமேனியின் முறைமையுங் கணடோம்,

செபபிய மூன று நநதங் கருமே வ கழிக்கவந்த கருணையின் விளை வுகாணே. — இபபடிச்சொலலிய மூவிதமான திருமே னியுஞ் சனன மரணப்பட்டு வரு நாநது வ டிவைப போக்கும்படிக்கு அவனது கிருபை யினு லுணடாயதென றறிவாயாக. எ-று.

இதில் நிட்களம் பரமென்றும், அபரஞ் சகளமென றும, பராபரஞ் சகளநிட்களமென்றும் பெறும.

அஃதெனபோல வெனனில்? சகளம் மரமானதுபோலவு வும், நிட்களம நிழறபோலவும, சகளநிட்களம் பூவும் பூவினது மணம்போலவு மறிக

ஒருபொருட் கிரண்டுதனமையு முண்டெனனில்? சிதகா ந்தத்துக்கு விருத்தமான அநைகாந்திகமென்னுங் குற்றமுண் டாம். உருவமாயிருக்கிற புட்பத்தினிடத் தருவமாயிருக்கிற கந் தமாயிருக்கிற கந்தமாச்ரயமாயிருத்தலாற் குற்றமில்லை யென வறிக. (ஙிரு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் மூன்று ரூபமும் அநுக்கிரஹார்த்தமென் றுணர்த்துதல்

உருமேனி தரித்துக்கொண்ட தென்றலு முருவிறந்தவருமே னியுங்கண்டோம் - சர்த்தா ரூபத்தைத் தரித்துக்கொண்டா ரென்கையில் உருவில்லாம லருவமென்பதறிந்தோம்,— அருவுரு வானபோது திருமேனி யுபயம் பெற்றோம் - கண்ணாடி நிழல்போலக் காணவுண்டாய், தீண்டுதற்கு இல்லையாயிருக்கும் ரூபாரூப மானபோது; இந்தன்மையாயிருக்கும் திருமேனியைக் கண்டோம்— செப்பியமூன்றுநந்தங் கருமேனிகழிக்க வந்த கருணையின் வடிவுகாணே -சொல்லப்பட்ட ரூபம் அரூபம் ரூபாரூபமென்னு மூன்றுதிருமேனியும் நம்முடைய கன்மசார ணனால் வருந்தேஹங்களை மாற்றவந்த கருபாசத்தியின் வடிவென்றறி யென்றிதன்பொருள்.

நந்தம் என்றது சகலரைச் சொன்னது

ஆகில் ஒருமூர்த்தியாக வநுக்கிரகம்பண்ணுவ ரென்னாமல் மூன்றுமூர்த்திகளினாலே அநுக்கிரகஹம்பண்ணுவரென்று சொல்வது கல்பனாகௌரவமென்னில்? அதல்ல சக்ஷுராதி தீக்ஷை பண்ணுவதற்காக ரூபமூர்த்தியாயும், தயானபூஜார்த்தமாக சகளாகள மாகியும், அந்தர்யாமியாயிருந்து அஞ்ஞானத்தை ஹரிப்பதற்காக அரூபமாகவும் சொல்லவேணும்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

இப்படி மூன்று திருமேனியு முகிக்கப்பட்டதென்றுணர்த்துகின்றார்.

உருமேனிதரித்துக்கொண்டதென்றலும் - ஸ்ரீகண்ட சகள சரீரத்தைத் தனது சரீரமாய்ப் பரித்திருக்குமென்று படித்தமா த்திரத்தில், தரிக்கப்படுவது உரு, தரிப்பது அரு, என்று இரண் டுபொருள் சித்தித்தலால்,—உருவிறந்த அருமேனியதுவுங் கண் டோம - உருவாதீதமாய் அருவாயிருக்கும நிட்கள சரீரமனுமிதி த்திநதோம,—அருவுருவானபோது - அருவுமுருவுமாயிருக்கு மிசுரசரீரமென்று,—திருமேனியுபயம் பெற்றேம-சகளநிஷ்கள சரீரமுந் தியானிப்போம்,—செப்பிய மூன்று நந்தங் கருமேனி கழிக்கவந்த கருணையின வடிவுகாணே-அசலம சலாசலம சலம என்றும, பரம் சூக்குமம் தூலமென்றும, சாற்றிய மூன்று சரீர மும, பாசரீர சூக்கும சரீரதகோடுகூடப பிதா மாதிரு சுக்கில சுரோணிதஙகளினுண்டாகிய ஸ்தூல சரீர சமசாரத்தை நீக்கவ நத சிவசத்திவடிவாயும சிவசத்தி யபிவியத்தி வடிவாயு மிருக்கி ன்றதுதானே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

திருமேனியெல்லாம் ஒருநிகரனவாகலின, ஏனைய வருவத திருமேனி அருவுருவத்திருமேனிகளதுணமையும; அவையும அவ வியல்பினவாமாறும, உருவத்திருமேனிக்கோதிய நயமேபற்றி அறியப்படுமெனபதாம.

உருவமெனப்படுந தூலப்பொருடெல்லாம் அருவமெண ப்படுஞ சூக்குமவவத்தை ஒருநிலையானுண்டென்றுஞ் சற்காரி யத்தினியல்புபற்றி, உருமேனி தரித்துக்கொண்டதென்றலு மு ருவிறந்த வருமேனியதுவுங்கண்டோமென்றும்; அவ்வருவமெ னப்படுஞ் சூக்குமப்பொருள் பின உருவமெனப்படுந் தூலாவத் தையெய்துமபோது அவவிரண்டற்கும பொதுவாயதோரவத்

தையும் உண்டென்பது தானேபோதருமெனபது பற்றி அரு வுருவானபோது திருமேனியுபயம பெறறேமெனறும, வேறு பொருளனமையான அவையும் அவவுருவடிவோ டொககுமெ னபதுபற்றி மூனறு னாநதங கருமேனி கழிககவநத கருணையி ன வடிவெனறும, கூறினார்.

இஙஙனே ஏனைத திருமேனிகளிரணடினது உண்மையும் அவற்றதியல்பும உருவத் திருமேனியோடுளதாகிய இயைபுபற றிச சாதிககப்பட்டன.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

—o—

உம்முடைய கர்ததாவுககு உருவமொழிநது அருவம் அரூ பாரூபம காணப்பட்ட தில்லையெனறவனை மறுதது மே லருளி சசெய்கிறார்.

உருமேனி தரிததுக்கொணட தெனறலு முருவிறநத வரு மேனியதுவுங கணடோம-பரமேஸ்வரன சகளமான திருமேனி யெடுத்துக்கொண்டா னெனறபொழுதே சகளமுமனறியே நிட் களமான திருமேனி உணடெனறு மறிநதோம.—அருவுருவான போது திருமேனி யுபயம்பெற்றோம்- நிட்களமானபோதே திரு மேனி சகள நிட்களமெனறு முறைமையு மறிந்தோம். இப்படி ஒருவனுககு மூனறு திருமேனியாகச் சொல்லுவானே னெனனி ல்?—செப்பியமூனறு நாதங் கருமேனி கழிககவநத கருணையி னவடிவுகாணே - இங்ஙனஞ் சொல்லப்பட்ட மூனறு திருமே னியும் நமக்குள்ளதாகிய கர்ப்பாசயத்திற் றொக்கனை அநாதியே யொழியாமல் வரப்பட்ட தேசாதிகளைப் போக்குதறகு வநத காருண்ணியமான திருமேனியென் றறிவாயாக.

இதனுற் சொல்லியது ஆன்மாக்களுக்கு அநாதியே யொழியாமல் வரப்பட்ட சனன மரண துக்கங்களைப் போக்குவது காரணமாகப் பரமேஸ்வரனுக்கு சகள நிட்களம் சகளநிட்களமென்னு மூன்று திருமேனியும் அநாதியே யுள்ளதென்னு முறைமையும் அறிவித்தது.

'குறித்ததொன்று' 'ஆரணம்' 'உருவருள்' 'உலகினை' 'தேவரில்' 'போகியாய்' 'ஒன்றேயொன்று' 'நாயகன்' 'கண்ணுதல்' 'படைப்பாதி' 'உருமேனி' ஆகத் திருவிருத்தம் - கக-ம், பஞ்சராத்திரி அவன் சிருஷ்டி திதி சங்காரமென்கிற மூன்று தொழிலும், திதி கர்த்தாவே செய்வன் என்றதற்குப் பிரமாணம். பரபட்சம், அவன் மதம். "உந்தியி லயனையீன்று மவனைக்கொண் டுலகுண்டாக்கி, வந்தமிழுலகழிக்க வரனையுமாக்குவித்து, தந்திடுஞ் சகத்தினுக்குத் திதிகர்த்தாதானேயாகி, வந்திடுந் தோற்றமீறு நிலைமையும் பண்ணுமாயன்." என்றும், அவன் மறுப்பு. "அயன்றனைப் பயந்தானென்றாய் டரியயன் சிரஞ்சேதிப்பப், பயந்திடான்றலைமாறுனும் படைத்திடான்சிரத்தைக்கிளரும், சயந்தருமரனைத்தந்தா னயனெனக்கைதப்பேயன்றோ, தியங்கிடா துணைராயெல்லாஞ் சிவன்செயலென்றுநேர்ந்தே." என்றும், "அழிப்பரியேவலென்று யரிதனையழிக்குமன்றங், கழிப்பதுதவிர்க்கமாட்டா னங்குமழிந்தேபூண்டா, னழிப்பரியேவலென்றங் கறைந்ததுமழிந்ததன்றோ, வழித்திடுமரனேயாக்க நோக்கமுமாக்குவானே." என்னுமதுங் கண்டுகொள்க.

சி - பா - மத-உ, மறு - ரு - அ.

அருவமேயென்ற திருவிருத்தத்துக்கு வியாக்கியானம் உருமேனியென்ற திருவிருத்தமீறாக வந்து முடிந்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

உருமேனி தரித்துக்கொண்ட தென்றாலும் - உருவமெனப்படுந் தூலப்பொருட்கெல்லாம் அருவமெனப்படுஞ் சூக்கும அவத்தை யொருதலையானுண்டென்னுஞ் சற்காரிய வாதத்தினியல்புபற்றி யுருவத்திருமேனி தரித்தமையால், — உருவிறந்த அருமேனி யதுவுங் கண்டோம் - உருவிற்குக் காரணமாகிய அருவத்திருமேனியுண்மையுங் கண்டோம், — அருவுருவானபோது திருமேனியுபயம் பெற்றோம் - அவ்வருவமெனப்படுஞ் சூக்குமப்பொருள் பின்னுருவமெனப்படுந் தூலாவத்தையெய்தும்போது அவ்விரண்டிற்கும் பொதுவாய வோரவத்தையுண்மையி னிரண்டாகிய அருவுருவத்திருமேனி யுண்மையும் பெற்றோம், — செப்பிய மூன்றும் - இங்ஙனங் கூறிய மூன்று திருமேனியும், — நந்தங்கருமேனி கழிக்கவந்த - நாங் கருவில் வீழாவண்ணங் காத்தற்குக் கொண்ட, — கருணையின் வடிவுகாணே - கருணை வடிவென்பதாம்.

இதனானே யேனைத்திருமேனிக ளிரண்டின் றன்மையு மவற்றதியல்பு முருவத்திருமேனியோ டுளதாகிய வியைபுபற்றிச் சாதிக்கப்பட்டன.

## மறைஞானதேசிகர் உரை.



மேற்றொகுத்துப்போந்தவற்றை விரித்
துணர்த்துகிறார்.

அத்துவா மூர்த்தியாக வறைகுவ தென்னையென்னி, னித்தனாய் நிறைந்தவற்றி னீங்கிடா நிலைமையா

னும், சித்துட னசித்துகளெல்லாஞ் சேட்டித ஞதலா
னும், வைததநதா மத்துவாவும் வடிவென மறைகளெல்
லாம். (ருகூ)

(இ-ள்.) அதற ஆறத துவாவுஞ் சிவனுக்குத திருமேனியா
வா மூறத ன தெபபடியென று நீ கேடகிறுயாகில்?
தியாக வ
றை றுவ தென்
னை யெனனில

நிததனுய் நி அநதசசிவ ஞெருகாலதது மழிவினறி யி
றைந தவற்றி னீ ருககிறவனுமா யெககும பூரணனுமா யநத
ங்கிடா நிலைமை வா றத துவாககளிலும வயாபிததறகு மேற
யானும படடுநிறகையாலும

சிததுட னசி சித தசிததாகிய விரண்டினையு மநாதியே
ததுக கெல்லாஞ் யுளளபடி யறிந ததனைச சேட்டிப்பிததுக
சேடடித ஞத கொணடு நிற்கையாலும்
லானுஞ்

வைதததா ம வேதாகமங்கள சிவனுக் காறத்துவாவுந்
ததுவாவும வடி திருமேனியெனறு சொல்லுங்காண. எ-று.
வென மறைக
ளெலலாம

யாதொருவனுக்கு நிததியததுவமாக விலககணமில்லாம
லிருக்கினறது அவனுககுச சிததசிததுககளினது சேடடை கூ
டமாடடாதாதலால் நிததியத்துவம் பதம்வைத்ததென வறிக.

அத்துவா வடிவான முறைமை யெங்ஙனமென்னின? சா
ந்தியாதீதகலை திருமுடி, சாநதிகலை திருமுகம், வித்தை மார்பு,
ப்ரதிஷடை குய்யம், நிவிர்ததி முழந்தாளும் பாதமும், இப்ப

டிப பஞ்சகலைகளு மங்கமாகவும்; புவனங்கள் உரோமம்,வன்னங்கள் தோல், மந்திரங்கள் சோரி, பதங்கள் நரம்பு,தத்துவம் எனபுந்தசையும, இப்படி யாறத்துவாவும் சதாசிவர்கருத் திருமேனியாகவும், பிராணபூதம் பரமசிவ னெனவுமறிக.

இதற்கு வாதுளதநும் ப்ரம சமபு பததியினுங் காண்க.

உ - ம. "அவயவங் கலைகளாகு மாதிய புவனரோமஞ், சுவையுறு துவககுவன்னஞ் சோரிமந் திரமதாகுந, தவமுறு பத நரமபு தத்துவந் தாதுவாகுஞ், சிவமுயர் சதாசிவர்கருச் சிற ந்தவா றுறுப்புந்தானே." எனவறிக. (௫௩)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

மேல்சிவன ஷடத்வமூர்த்தியென்று வேதங்களிலேசொல்ல, இவவிடத்துசித்ரூபனென்று சொல்லுவா னேனெனபதற்குஉத்தரம.

அத்துவாமூர்த்தியாக வுரைகுவதெனனையெனில் - மந்தர பத வாண புவன தத்துவ கலையெனகிற வாறத்துவாவும் கர்த்தாவுககு தேகமென்று வேதங்களசொல்ல, நீ சிற்சத்தியே மூர்த்தியென்று சொனன னெனனவெனனில்?—நித்தனுய் நிறைந்து வற்றி னிங்கிடாநிலைமையானும் - சர்த்தாவானவன நித்தியனுமாய் பரிபூரணனுமாய் அந் தத்வாக்களைப் பிரியாத நிலையுடையவனுகையாலும்,— சித்துடனசித்துகளெல்லாஞ் சேட்டிக்குந்தலானும் - சித்தாகிய வானமாக்களுக்கு மசித்தாகிய மாயாகாரியங்களுக்கும் பிரேரகனுகையாலும்,—வைத்ததாமத்துவாவும் வடிவென மறைகளெல்லாம் - அத்துவாவும் கர்த்தாவுக்கு தேகமென்ன வேதாகமங்கள ஸ்தாபித்ததென்றிதனபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

செப்பியது நன்றுதான. அவ்வள விவ்வளவில், ஈசானி பூரணி ஆாதநி வாமை மூர்த்தி எனனும பஞசசத்தி புரவுருவு டைததாய், ஆரணி சனனி ரோதயிததிரி எனனுந திரிசத்தி உள ளுருவுடைததாயிருககும் கிரியாசததி சரீரப் புறவுருவி லுந்தக சசினியாதி யஷடததிரிமசத கலைகளினது பிரவிாததி நிவிாததி பிரவிருததிநிவிாததி வடிவாயிருககும சகளவுருச சரீரம, சகள நிஷகள வருவுருசசரீரம், நிஷகள வருசசரீரம, சொரூபமென று முனசொனனீர, திரும்ப அநுவனறி மூனறுள சகளசரீரமா ததிரஞ சததிகலா சாசித்தியதததிலுலே சகளமாதலால், மாயா கலா ராகித்தியததிலுலே நிஷகளமாதலால், சகள நிஷகளமெ னறு முனசொனனீர. திரும்ப வதுவனறி இப்போது ஸ்ரீகணட தேகதேகியா யிருககினற சிவனுககு ஸ்வரூப தடதசங்களிலே நி ஷகளம் சகளநிஷகளம சகளமாயும் சரீரஞ்சொனனீர். திரும் ப அநுவனறி அததுவா மூர்த்தியாக ஆகமங்கள சொல்லுவதே தென முூங்கிகக உததரஞ் சொல்லுகினமுா.

அததுவாமூர்ததியாக வறைகுவது என்னையென்னில் - ஏதெனறு நீ வினவிலுல்,—நிததனுய் நிறைநத வறறி னீஙகி டாநிலைமையானும் - நித்தியனுய் இடைவிடாது வியாபித்துய பிரியாதிருததலானும,—சித்துட னசிததுகசெல்லாஞ் சேடி தனுதலானும்-சேதனசடபதாாததங்க ளனைததிற்கும் பிரேரக னுதலானும்,—அததுவாவும் - ஆறுமாாக்கமுஞ் சிவனுக்கு,— வடிவென - சரீரமாக,—மறைகள்எல்லாம் - சிவாகமங்கள,— வைத்ததாம் - சொன்னதாம்.

அப்படி யனறே. ஆனமாக்களுக்குச் சலையென்றும், அசலை யெனறும் மூர்த்தி யிரண்டு.

அவற்றுள் அசலேயாவது-முன் பிரபஞ்சித்திருக்கின்ற ஞானக்கிரியாரூப சிற்சத்தி மூர்த்தி. அது தனது சங்கற்பத்தால் தானசைவின்றி அசைவினுற் கட்காரிய நிகழ்ப்பண்ணும். அதனுல் மூர்த்தியென் றுபசரிக்கப்பட்டது

சலேயாவது முன்பிரபஞ்சித்திருக்கின்ற பிரணவ கலாபஞ்சக ரூபமாய், நாதத்து ளஞ்சாயிருக்கும் சிவதத்துவ தாத்துவிக பரதேக மூர்த்தியாயும், ஏழு இருபத்துநாலா யிருக்கும் வித்தியாதத்துவ ஆன்மதத்துவ தாத்துவிக சூக்குமதேக மூர்த்தியாயும், பௌவன தூலதேக மூர்த்தியாயும் இருக்கும்

அசலேயென்று முன்சொன்ன ஞானக்கிரியாரூப சிற்சத்திமூர்த்தி, சங்கற்பத்தால் அசைந்து சஞ்சரித்துக் காரியப்படும். அதனுல், இஃதொன்றுமே நிருபசரித வாஸ்தவமூர்த்தி.

கரசரணுதியாயும் கரசரணுதி சம்பந்தமாயுங் காணப்படுதலால் அப்படிச் சிவன திரண்டு மூர்த்திகளில் அசலேயாவது? ஞானக்கிரியாரூப சிற்சத்திமூர்த்தி. அது தனது சங்கற்பத்தாற் றனசைவன்றி அசைவினுற் சட்காரியம் நிகழ்ப்பண்ணும், அதனுல் மூர்த்தியென்று உபசரிக்கப்பட்டது

சலேயாவது சுத்தாத்துவ பரதேக மூர்த்தியாயும், சுத்தாசுத்தாத்துவ சூக்குமதேக மூர்த்தியாயும், அசுத்தாத்துவ தூலதேக மூர்த்தியாயும் இருக்கும்.

அசலேயென்று முன் சொன்னஞானக்கிரியாரூப சிற்சத்தி; மூர்த்தி சங்கற்பத்தால் அசைந்துசஞ்சரித்துக் காரியப்படும். இதனுலும், விங்கத்திற் கலாதி சட்தத்துவ வியாசம்பண்ணுகலானும், வாஸ்தவபாக மூர்த்தியல்லாதிருந்தாலும், மூர்த்தியென் றுபசரிக்கப்பட்டது.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

ஏனையோ கூறியவாற்றான் முதல்வனுக்குக் கருணைவடிவேயன்றி மாயை வடிவு இல்லையாயின், ஆகமங்களின் அத்துவாக்களாறும் முதல்வனுக்கு வடிவமென்றதென்னையெனின்? அது எல்லாமாகி யல்லவா யுடனுமா மியல்புடைய முதல்வனுக்குத் தனது திரோதானசத்தியா னவற்றோடுளதாகிய இயைபு நோக்கிக் கூறும் உபசாரமேயாமென்பதாம்.

அத்துவாவும் என்னுமும்மை உபசாரவடிவென்ப துணர்த்தி நின்றது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

உருவ மருவ முருவாருப மென்னும் பரமேஸ்வரனுக்குத் திருமேனியாயிருக்க, அத்துவாமூர்த்தியென்று வேதஞ் சொல்லுகிறது எப்படியென்ற மாணாக்கனை நோக்கி, மேலருளிச்செய்கிறார்.

அத்துவா மூர்த்தியாக வுரைக்குவ தென்னையென்னில்-பரமேஸ்வரனுக்கு மந்திரம் பதம் வன்னம் புவனந் தத்துவங் கலையென்கின்ற ஷடாத்துவாக்களே திருமேனியாக வேதஞ்சொன்ன தெப்படியென்று கேட்கிறாயாகில்?—நித்தனாய் நிறைந்தவற்றை நீங்கிடா நிலைமையானும் - அழிவில்லாத சம்பூரணனாய நந்த அத்துவாவிலே நிலைபெற்று நிற்கிற முறைமையையுடையனாதலானும்; அத்துவனைத்தும்,—சித்துட னசித்துக்களெல்லாஞ் சேட்டித்தலானும் - அநாதியே சித்தாகிய ஆன்மாக்களையும் அ

சித்தாகிய பாசத்தையுஞ் சேட்டிப்பனுகையாலும்,— வைத்த த்ர மத்துவாவும் வடிவென மறைகளெல்லாம் - பரமேசுவரனுக்கு அத்துவாவே திருமேனியென்று வேதாகமங்கள் சொல்லப்பட்டது.

இதனாற்சொல்லியது அநாதியே பரமேசுவரன் சடசித்துக்களிரண்டிலும் நிறைந்துநின்று அவையிற்றைச் சேட்டிப்பிக்கையால் அத்துவாவே திருமேனியென்று வேதாகமங்கள் சொல்லுமென்ற முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

(ஈண்டுக்கூறியவாற்றா லிறைவனுக்குக் கருணைவடிவேயன்றி மாயைவடிவில்லையாயின்),— மறைகளெல்லாம் - ஆகமங்களெல்லாம்,— அத்துவாமூர்த்தியாக அறைகுவதென்னையெனில் - அத்துவாக்களாறு முதல்வனுக்கு வடிவமாகக் கூறுதலென்னையெனின்,— நிறைந்தவற்றி னீங்கிடா நிலைமையானும் - நிறைவுற்றவத்துவாக்களினுங் கலந்து எல்லாமாகி நிற்றலானும்,— நித்தனாய் - அவையல்லனாய் நிற்றலானும்,— சித்துடனசித்துக் கெல்லாஞ் சேட்டிதனாதலானும் - சடசித்துக்களையெல்லாம் செலுத்தியுடனுமாய் நிற்குமியல்புடைய முதல்வனுக்கு,— அத்துவாவும் வடிவெனவைத்ததாம் - தனது திரோதான சத்தியானவற்றோ டொன்றாகிய வினையைப்போக்கிய அத்துவாவும் வடிவெனக் கூறுமுபசாரமேயாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



ஆறத்துவாவினிடைச் சிறந்த மந்திரமே திருமேனியென் றுணர்த்துகின்றார்.

மந்திர மத்துவாவின மிகுத்தொரு வடிவமாகத்
தந்தனென் றுரைக்கின்ற சகத்தினுக் குபாதானங்கள்
விந்துமோ கினிமான் மூன்றும் வற்றின்மே லாகிவிந்துச்
சிந்தைபா ரத்தமான சிவசத்தி சேர்ந்துநிற்கும். (௫௭)

(இ-ள்) மந்திர மத்துவாவின மிகுத் தொருவடிவமாகத் தந்தேனெனக்கெனின்

ஆறத்துவாவினுள் மந்திராத்துவாவே சிவனுக்குத் திருமேனியென்று வேதாகமங்கள் சொல்லியதென்று நீ கேட்கின்றாயாகில்,

சகத்தினுக்குபாதானங்கள் விந்து மோகினி மான்மூன்றும

ப்ரபஞ்சோற்பத்திக் குபாதானகாரணங்கள் மூன்றாயிருக்குங் குண்டலி யென்றும அசுத்த மாயையென்றும் ப்ரகிருதியென்றும். அம்மூன்றுந் தன்னிலொக்குமோ வென்னில?

இவற்றின்மேலாகிவிந்துச் சிந்தைபா ரத்தமான சிவசத்தி சேர்ந்து நிற்கும.

இங்ஙனங் கூறிய மூன்றினும், மேலாகிய சுத்தமாயை சுத்தமாயிருந்தகலாலு மான்மாக்கண் மனத்தாற் சிந்தித்தற் கரிதுமாய் நிட்களமுமாயிருக்கும் பராசத்தி யதனை யதிட்டித்துக்கொண்டு வாக்குண்டா யிறந்தோற்றிய மந்திரங்களே சுத்தனுக்குத் திருமேனியாகா நிற்குமென் றறிவாயாக. எ-று.

இதற்கு வாதுளோத்தரத்திற் காண்க. (௫௭)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

### மேல் மந்தர ரூப முணர்த்துதல்.

மந்திரமத்துவாவின் மிகுத்ததோர் வடிவமாகத் தந்ததெனரனுக்கென்னில் - அத்துவாக்களுக்குள்ளே மந்திராத்துவாவே முக்கியமான மூர்த்தியாக வரனுக்குச் சொன்னதென்னையெனில்,—சகத்திற்குபாதானங்கள் விந்துமோகினிமானென்று மிவற்றின்மேலாகிவிந்து சிந்தையாதீதமான சிவசத்திசேர்ந்து நிற்கும் - பரபஞ்சத்துக் குபாதானமானது விந்துவென்றும் மோஹினியென்றும் மஹானென்றும் மூன்றும் இந்த மூன்றுபாதானத்திற்குள்ளே உத்தமமான விந்துவிலே சிந்திக்கப்படாத பராசத்தி பொருந்தியிருக்கும்.

யாதொன்று ஜடமு மநேகமுமாயுள்ளது அஃதெல்லாங் காரியமும் அசத்துமென்னு மநுமானத்தால் ஜடமாக, ஜகத்துபாதான காரணம் மூன்றென்று சொல்லுகையால் காரியமும் அசத்துமாம். இதனால் சைவம் சற்காரியவாதமென்பதற்கு விரோதமென்னில்? மேயமஹாமாயையென்ப தொன்றே முதற்காரணம். அந்த மஹாமாயை சத்ரூபையசத்தி க்ஷோப்தம்பண்ண, அந்த க்ஷோப்தப் பிரதேசம் பரகாசமென்றும் மோஹகமென்றும் ஆருளுகமென்றும் த்ரிவிதமாம். அதற்கே பரியாயமாக சுத்தமென்றும் சுத்தாசுத்தமென்றும் அசுத்தமென்றும் பிந்துவென்றும் மோகினியென்றும் மஹானென்றும் இத்யாதி நாமங்களுண்டு. இந்த உபாதானங்களுக்குள்ளே பிந்துவிலே நின்று முண்டான சுத்தாத்வா ப்ரபஞ்சத்திற்கு சாந்தாதம

கமென்றும், மோஹினியிலே யுண்டான மிச்ராத்வா ப்ரபஞ்சத்திற்குக் கோராத்மகமென்றும், மஹாமாயையிலே யுண்டான அசுத்தாத்வா ப்ரபஞ்சத்திற்கு மூடாத்மகமென்றும் பெயராம். பரமோபாதான காரணம் குண்டலினி மஹாமாயாதி நாமத்தையுடையதொன்றே அபரவிந்து மோஹினி மஹானென்னுமிம்மூன்றும் மூலோபாதானமான குண்டலியிலே நின்று முண்டான குணாத்மகங்கள் இக்கருத்தே "விந்துவின் மாயையாகி மாயையினவ்வியத்தம் வந்திடும்" என்றதும்.

குண்டலினி மூலோபாதான மென்பதற்குச் சம்மதி.

பௌஷ்கரே — ஸாசகுண்டலினீ ஸம்ஹோஸாத்விகா ஸாஜஸாத்மிகா| உபாதானக்ஷ தோ ஹே தோ: குண்டலினீ த்ரிகாத்மிகா

குணத்ரயம் உண்டான விஸ்வம் மூன்றுவிதமாயிருக்கும் என்பதற்கு சம்மதியும் அதில்தானே

விஸ்வம் குணாத்மகம் ஸாத்வம் ராஜஸம் தாமஸாத்மகம்|

மோகினியே நித்யம் என்றதூஉம், ஆமோக்ஷஸ்தாயி யாகையினாலும், குண குணி பேதோபசாரத்தினாலும், ஆகையினாலே மூலோபாதான காரணம் மஹாமாயை ஏகமே யென்பதற்குச் சற்காரிய வாதத்திற்கும் விரோதமில்லை என்றதன் பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

வாச்சிய மந்திரமும் அந்தச் சத்தி சரீரமென்று சாதித்ததனால் சங்கிக்கப்படுவ தன்றென்று வாசகமந்திரத்தை மனசில் வைத்துச் சங்கித் துத்தர முரைக்கின்றார்.

அத்துவாவில — ஆறத்துவாவுக்குள்,—மந்திரம்—மந்திராத்துவா,—அணுக்கு — சிவனுக்கு,—மிக்கதொருவடிவமாக — மிகுதியும் ஒப்பற்ற மூர்த்தியாக,—தந்ததென்னெனில் — சொன்னதேதென்று நீ சொல்லில்,— சகத்தினுபாதானங்கள் — உலகத்துக்கு முதற்காரணங்கள்,—விந்துமோகினி மானமென்னும் — மகாமாயை மாயை பிரகிருதியென்று மூன்று வகையாம்,—இவற்றில் — இம்முதற்காரண மூன்றனுள்,—விந்து — மகாமாயையானது,—சிந்தையாரதீதமான சிவசத்தி சேர்ந்து நிற்கும் — சித்தத்தை வியாபித்துக் கடந்திருக்கும் சிவசத்தி சாட்சாத் சன்னிதிப்பட்டிருக்கும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

இவ்வுரை ஐம்பத்தெட்டாவது செய்யுளின் உரையுடன் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

பரமேஸ்வரனுக்கு அத்துவாக்களாறும் திருமேனியாயிருக்க மந்திர மூர்த்தத்தை விசேஷமான திருமேனியென்றது,எப்படியென்றவனை நோக்கி மேலருளிச் செய்கிறார்.

மந்திரமத்துவாவின் மிக்கதொருவடிவமாகத் தந்ததேனணுக்கெனனில் — ஷடாத்துவாக்களிலும் வைத்துக் கொண்டு மந்திராத்துவாவை பரமேஸ்வரனுக்கு சேட்டமான திருமேனியென்றும் வேதாகமங்கள் சொன்னபடி யெப்படியென

னில்?—சகத்திற்குபாதானங்கள் விந்துமோகினிமான் மூன்றும் - பிரபஞ்சத்துக்குபாதானங்கள் சுத்தமாயை யென்றும் அசுத்தமாயை யென்றும் பிரகிருதியென்றும் மூன்றுவகையாம — இவற்றின் மேலாகி விந்துசசிந்தையாரதீதமான சிவசத்தி சேர்ந்துநிற்கும் - இவையிற்றுக்கெல்லா மேலுமாய் சித்தாதீதமான சிவனுடைய பராசத்தியை மாமாயை யென்று சொல்லப்பட்ட விந்துப் பொருந்திநிற்கும்.

விந்துவென்றது விந்துவை, மோகினியென்றது அசோமையை, மானென்றது காரியமாயையாகிய பிரகிருதியை விந்துசசிந்தையா ரதீதமான சிவசத்தி சேர்ந்து நிற்குமென்றது, சிவனுடைய சத்தியைப்பொருந்தி நிற்கிற சுத்தமாயையிற் றோற்றின மந்திரங்களாகையால், மந்திரமூர்த்தமே விசேஷமென்றதெனக் கொள்க.

இன்றற சொல்லியது எல்லாவற்றிற்கும் மேலாயிருக்கிற சிவசத்தியைவிட்டு நீங்காத விந்துவிற் றோன்றின மந்திரங்களே சிவனுக்குத் திருமேனியா யிருக்கையினால், அத்துவாமூர்த்தத்திலு மந்திரமூர்த்தமே விசேஷமென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு·

இவ்வுரை ஐம்பத்தெட்டாவது செய்யுளின் உரையுடன் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

## மறைஞானதேசிகர் உரை.



மேலதற்கோர் புறநடை யுணர்த்துகிறார்.

சுத்தமாம் விந்துத்தனிற் றோன்றிய வாதலா
னாலு, சத்திதான பிரேரித்துபபின் றானதிட் டித்துக
கொணடே, யத்திறை புத்திமுத்தி யளித்தலா லரனு
க்கென்றே, வைத்ததா மந்திரங்கள் வடிவென மறைக
ளெல்லாம். (ரு௮)

(இ - ள) சுத்தமாம விந்துத தனிற் றோன்றிய வாதலானும — மந்திரயோனி மகாமாயாவெனனும வாக்கியமுண்டாதலால் விந்துவினகண் டோற்றமுண்டாகையாலும,

சத்திதான பிரேரித்துப்பின றானதிட்டித்துக்கொணடே — அந்தமந்திரங்களைப் பராசத்தி தானே தோற்றுவித்து, பினபதனைச சத்திதானே யதிட்டித்துக்கொணடே நிற்கையாலும,

அத்திறால் — அந்தக் காரணத்தினாலே

புத்திமுத்தி யளித்தலால் — இந்த மந்திரங்கொணடே சிவபூசை யக்ஷிகாரியரு சபமுதலியவற்றால் வழிபடடவானமாக்களுக்குப் போகமோடசங் கொடுக்குஞ் சாமாத்திய முணடாகையினாலே,

அரனுக் கென்றே வைத்ததா மந்திரங்கள் வடிவென மறைகளெல்லாம். — வேதாகமங்களெல்லாஞ் சிவனுக்கு மந்திரமே திருமேனியென றறுதியிட்டுச் சொல்லாநிற்கும. எ - று.

அத்து சாரியை
இம்மந்திரத்தின பகுதியை விரிக்கிற் பெருகும்.
இதற்கு வாதுளோத்தரத்திற் காண்க. (ருஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

சுத்தமாம விந்துதனனிற் ரோன்றிய வாதலானும் - சுத்த மாயையென்று பெயரையுடைய விந்துவிலே தோன்றினகாகை யாலும்,— சத்திதானபிரேரித்துபபின் ருனதிட்டித்துக்கொண டே யதியாருபுத்திமுத்தி யளித்தலால் - சிவசத்தியானது ம ந்திரஙகளைத் தோற்றுவித்து அநுப்ரவிஷ்டமாய் மந்திரங்க ளை யதிஷ்டாநமாய் நின்று பிரேரித்து உபாஸகாகருப் போக மோக்ஷத்தைக் கொடுத்த லுண்டாகையால,—அரனுக்கெனறே வைத்ததா மந்திரஙகள வடிவெனமறைகளெல்லாம-அரனுக்கு மந்திரரூபமென்று வேதஙகளாற் சொலலப்பட்டது எனறித னபொருள.

———

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

அதனால் ஏதெனனச சமபந்தஞ் சாதிக்கின்ருர்.

சுத்தமாம்விந்து தனைிற்ரோன்றிய வாதலானும் - சுத்த மாயையினின்றுஞ் சிவசத்தி சங்கர்பதகாற்ரோற்றிய காரணத் தினுலும்,— சத்திதானபிரேரித்துப்பின் ருனதிட்டித்துகசொ ணடே - அந்தச்சிவசத்திதான தனது சங்கற்பத்திலுண்டாகச் சுத்தவித்தையிலிருக்கும அநத ஆதிதைவிக திவ்வியாக்கினிசம

மந்திரங்களைப் பிரேரித்து மாந்திரிகனுச்சரிக்குங் கிரிசைகொத்த ஆத்திபானமிக மந்திரங்களிலே செலுத்திப் பற்றுவித்து அவைகளிற்சானித்திய மாய்த்தானே,—அதனில் - மாந்திரிகனுலே சபிக்கப் பூசிக்கப்பட்ட அந்தமந்திரங்களினுலே,— புத்திமுத்தியளித்தலால் - சித்திமோக்ஷங்களைக் கொடுத்தலால்,—அரனுசனென்றே வைத்தகாமந்திரங்கள் வடிவெனமறைகளெல்லாம்-சிவனுக்கு மந்திரங்கள் சரீரமென்று சிவாகமங்களனைத்துஞ் செப்பியதாம்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அத்துவாக்களுளெல்லாம் மந்திரவடிவத்தைச் சிறந்தெடுத்தோதியது, தலைமையும் பயனும்பற்றி விசேடவுரிமையாதலானென்பதாம்.

சகத்தினுக்குபாதானங்கள் விந்து மோகினி மான மூன்று மென்றது அநுவாதம்.

ஆர்த்தும பண்புத்தொகை

சோந்து சேரப்பட்டு

விந்துத்தனிற் றோன்றின வென்பது விந்துத்தனபால வைகரியாதி எனக்கூறிப் போந்தவாற்றானறிக.

பிரேரித்தல் சாதகராவார் கணிக்குமாறு செலுத்துதல்.

அதிட்டித்தல் கணித்தபின் பயன்கொடுத்தற்பொருட்டு அவரை வாயிலாகக் கோடல்.

விசேடவுரிமையாதல்பற்றி அரனுக்கென்றே வைத்தனெனுர். (௫௭ - ௫௮)

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

மந்திரமோதத்தின் விசேஷ மேது மருளிச்செய்கிறா சுத்தமாமவிந்துதனிற் றோன்றியவாதலானும - இப்படிச் சிவசத்தியைப் பொருந்தி சுத்தமாயிருக்கிற விந்துவிலேதோன்றப்பட்ட தாகையினாலும்,—சத்திதான் பிரேரித்துப் பின்ருனதிட்டித்துக்கொண்டு - அந்தப் பராசத்தியானது இந்த மந்திரங்களிலே யதிட்டித்து இந்த மந்திரங் தாருக நின்று,—அத்தியாற் புத்திமுத்தி யளித்தலால் - விருப்பத்துடனே அந்த மந்திரங்களாலே ஆன்மாக்களுக்குப் போகமோக்ஷங்களையுங் கொடுத்து நிற்கையினாலும்,—அரனுக்கென்றே வைத்த மந்திரங்கள் வடிவென்மறைகளெல்லாம - இப்படியிந்த மந்திரங்களிருக்கையினாலே பரமேஸ்வரனுக்குமந்திரமே திருமேனியென்று வேதாகமங்கள் சொல்லாநின்றது.

இதனாற் சொல்லியது சிவசத்தியானது சுத்தமாயையிலே நின்று மந்திரங்களைத் தோற்றுவித்து, அந்த மந்திரங்களை யதிட்டித்து, அவை தாருக விருந்து மவையிற்றினாலான்மாக்களுக்குப் போக மோட்சங்களைக் கொடுத்த,இப்படி யிருக்கையினால் இந்த மந்திரங்களே சிவனுக்குத் திருமேனியென்று வேதாகமங்கள் சொல்லுமென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

அரனுக்கு - முதல்வனுக்கு,—அத்துவாவின் மந்திரமொரு வடிவமாக - அத்துவாக்களுளளுமந்திரத்தை யொருவடிவமா

க,—மிருத்துத்தந்தனெனென்னில்-சிறந்தெடுத்தோதிய தெனவேயெனின,—சகத்தினுக் குபாதானஙகள-உலகிற்கு முதற்காரணஙகள்,—விந்துமோகினிமானமூனறும-சுத்தமாயை,—அசுத்தமாயை பிரகிருதிமாயையென மூனறும்,—இவற்றினமேலாகிவிந்து-இமமூனறின மேலாகிய விநதுவினகண்,— சிநதையாதீதமான - மனாதீதமாகிய,—சிவசததிசோநது நிறகும-சிவசததிசேரப்பட்டு நிற்றலானும்

சுத்தமாம் விநதுதனனில் - சுத்தமாயையில்,— தோனறியவாதலானும - தோற்றியதலைமையானும,— சததிதானபிரேரிதது-சததிசாதகராவார கணிககுமாறு செலுததியும,— பினமுனதடித்துககொணடே - கணிததபின பயன கொடுததற்பொருட்டு அவறறை வாயிலாகக்கொணடு,— அததிறுற புததிமுததியளிததலால்- அதனுற் போகமோக்ஷத்தை யளிததலாகிய பயனும்பற்றி. - மறைகளெல்லாமஅரனுககு-ஆகமஙகளெல்லா முதல்வனுககு,—மநதிரஙகள வடிவெனவைதத தெனறேயாம - மநதிரவடிவம விசேட வுரிமையாதனுககிக கூறியனவேயாமெனபதாம. (௫எ-௫அ)

## மறைஞானதேசிகர் உரை.



மேற் சிறப்புவிதி யுணாததுகிருர்.

மந்திர மதனிறபஞ்ச மந்திரம் வடிவமாகத்
தநதிரஞ் சொனனவாறு கெனனெனிறசாற்றக்கேணீ
முநதிய தோறறத்தாலு மந்திர மூலத்தாலு
மநதமில் சத்தியாதிக மிசைத்தலு மாகுமனறே.(௫௬)

(-இ ள) மநதி சுத்தாத்துவாவிற் றேற்றிய மந்திரங்க
ர மதனிற் ளநேகமுளவாயினு மீசானமுதலிய வைந

| | |
|---|---|
| பஞ்ச மந்திர ம் வடிவமாகத தாதிரஞசொன னவாறிங் கென னெனின | து மந்திரங்களுமே திருமேனியெனறு திவ வியாகமங்கள கூறியதெனனெனறு நீ கே டகிறுயாகில, |
| சாறறககேணீ | அதனை யாம் விளங்க வுனககுச் சொல் வாங் கேட்பாயாக |
| முநதிய தோ ற்றததாலு ம | சிவனமுனே சுத்தமாயையிற் றேற்றுவி க்கையாலும, |
| மநதிர மூலத் தானும | சதநகோடி மஹாமநதிஙகளுககு மீசான முதலிய மநதிர மைநதுமே ப்ரதானமாகை யாலு ம |
| அங்கமில் சத் திபாதிக கிசைத தலு மா குமன றே. | ஆதியாகிய சதாசிவதேவர் முதலாயிஞ ர்ககு ஈசானி பூரணி ரவுததிரி வாமைமூா ததி சேடடையு மிடடிததுககொணடு ப ஞசகிருததி யங்களை நடததிநிற்கையாலு மி நத வைந்து மநதிரமுமே சிவனுககுத திரு மேனி எ - று. |

இதற்கு மறுகேநதிரத்தும மகங்கத்துங் காண்க.

சிவன முதற்கண பஞசமநதிரங்களைத் தோற்றுவித்துப் பினபு பதமநதிரஙகளை யுணடாககுகையால் மநதிரமூலமென ச் சிறபபிததா ரெனவறிக

மநதிரங்களெல்லாஞ் சத்தியின் சொரூபமாயே யிருக்கு மென்று ரதநத திரயததி லோதிஞ ரெனவறிக. (௫௬)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் பஞ்சமந்திர தனுவென் றுரைத்ததற்கு

மந்திரமதனிற் பஞ்சமந்திரமே வடிவமாகத் தந்திரஞ்சொன்னவாறிங் கெனையெனிற் சாற்றக்கேணீ - சப்தகோடி மஹாமந்திரங்களிலும் பஞ்சப்ரம மந்திரமே சிவனுக்குத் திருமேனியாக வாகமம் சொன்னதென்னையெனிற் சொல்லக்கேள்,—முந்திய தோற்றத்தாலும் மந்திரமூலத்தாலும் பந்தமில்சத்தி பாதிக்கின்றதனாலுமாகுமன்றே - பராசத்தி முதலாகிய பஞ்சசத்திகளால் சுத்தமாயையிலே பஞ்சமந்திரங்களு முதற்றோன்றுகையினாலும், நின்ற மந்திரங்களுக்கெல்லாம் இந்த மந்திரங்களுமே காரணமாகையினாலும், முடிவற்ற பஞ்சசத்திகளை விக்ரஹத்துக்காதியாகிய சதாசிவத்திற்குத் திருமேனியாகக் கூட்டி நிற்கையாலும், பஞ்சமந்திரங்களை சிவனுக்குத் தனுவாகச் சொன்னதென் றறிவாயாக என்றதன்பொருள்.

சிவனுக்கு மந்த்ரதனுவு மாயாதனுவு மில்லாமல் ‡சித்ஸ்வரூபமேயாயிருக்கவும், சாதகருடைய த்யானபூஜைகணிமித்தமாகச் சொல்லப்பட்ட பஞ்சமந்திரதனு வுபசாரமல்லது ஸ்வயமல்ல. பஞ்சமந்த்ரமாவது அநுக்ரஹ திரோதான சம்ஹார ஸ்திதி ஸ்ருஷ்டாத்மகமாக, ஈசானம் தத்புருஷ அகோர வாமதேவ சத்யோஜாதங்கள் மூர்த்தா வக்த்ர ஹ்ருதய குஹ்ய மூர்த்திகளாகச்சொல்லப்பட்டது ‡சித்ஸ்வரூபம்-ஞானஸ்வரூபம்.

தான் சர்வோத்க்ருஷ்டமுமாய் சதபதத்தை ஆன்மாக்களுக்குக் கொடுக்கையினாலே ஈசான மூர்த்தாவென்றது.

பிந்துநாத வருத்தியான சப்தஜாலங்களை ஜகத்திலே பூரிக்கையினாலே தத்புருஷ வக்த்ரமென்றது.

கோரமென்றது - அஞ்ஞானம், தத்விரோதியா யிருக்கிற ஞானம் அகோரம். அகோரம் ஹிருதயபரியாய மாகையால் அகோரம் ஹிருதயமென்றது.

சர்வான்மாக்களுக்கும் பிரவிருத்தியாகிய விஞ்ஞானக் கிரியைகளை யுற்பவிக்கையாலும், இது சூக்ஷ்ம கருத்தியமாகையினாலும் வாமதேவ குஹ்யமென்றது.

விஞ்ஞானந்த கோசமாகிய காரணசரீரத்தை ஆன்மாக்களுக்கு முந்துண்டாயுள்ளவில் மனோமயாதி கோசத்திரயமான சூக்ஷ்ம ஸ்தூல சரீரங்களைத் தம்முடைய இச்சாமாத்திரத்தினாலே மந்த்ரேஸ்வர மந்த்ரங்களை அதிஷ்டித்துடனே யுண்டாக்குகையினாலே சத்யோஜாத மூர்த்தியென்றது.

இந்த மந்த்ரங்களாகும் ஐந்து சத்திகள்.

ஹாரணி ஜநநி ரோதயித்ரி என்னும் மூன்று சத்திகளும் பரிக்கிரஹ சத்திகள்.

ஆக சத்திகள் எட்டு.

இதில் ஹாரிணியானது —ஆன்மாக்களுடைய தனுகரணாதி சர்வத்தையும் மாயையிலே உபசம்ஹாரம் பண்ணுவதுஞ் செய்து, பக்வமலரை பரசிவத்திலே யடைவிப்பிக்கையுஞ் செய்யுமாகையால், சம்ஹாரமும் அநுக்கிரஹமும் ஹாரணியினுடைய கருத்தியமாயிருக்கும்.

ஜநநியானது.—ஜகதுற்பத்தியைப் பண்ணுகிற ஸ்வபாவமாயிருக்கும்.

ரோதயித்திரியானது —ஸ்திதிகாலத்திலே ஆன்மாக்களுக்கு போக நியமனத்தையும், பராயத்திலே சகலர் ப்ரளயாகலர் விஞ்ஞானகலர் இவர்களை மாயாதோ பாகத்திலும் மாயாமத்தகையிலும் மாயோ பரியிலும் வாசநியமத்தையும் பண்ணிவிக்கும்.

ததுக்தம் — ஜ்ஞாயதே ஜ்ஞாநரூபேண க்ரமேண ஷாஷ்ட்யவஸ்திதி.

ஆகையால் ஸ்திதியும் திரோதானமும் ரோதயிந்திரியினுடைய கருத்தியமாயிருக்கும்

இஃதன்றியும் ஹிருதயாதி அங்கங்களும் மூர்த்தாதிகளைப் போல உபசாரமே.

அவையாவன ?—

அஸ்தித்வம் அஃதுலைமையான சுபாவசத்தி, அது ஹிருதயம்.

ஸர்வோத்கிர குணமாகிற நிதயத்ருப்தியாகிற சத்தி சிரசு.

மாயையிற் சாவரையும் வசீகரித்துக்கொண்டு தனக்குத்தானாருக்கும் வஸவருத்தி யாகாமலிருக்கிற சத்தி சிகையுமாம்.

தன்னையுந் தானே ரக்ஷித்துக்கொண்டு அடியரையும் ரக்ஷிக்கிற சத்தியே கவசம்.

சாவஜ்ஞத்திற்கு மூலமாயிருக்கிற சத்தி நேத்திரம்

பக்தருடைய அஞ்ஞானங்களை ஹரிக்கிற பரதாப சத்தியே அஸ்திரம்

இவ்வா றுபசார கல்பனையொழிய சிவனுக்கு வாஸ்தவமாகச் சரீரமில்லை.

ததுக்தம் வாதுலே — யோகிநாஞ்ச யதீநாஞ்ச ஜ்ஞாநிநாம் ஸங்கீர்ணாநாம் ததா । ஜ்ஞாநபூஜா விதிஜ்ஞாய இஷ்டம் ஸகலம் ஹரேத் ॥ ஸர்வ பாப விநிர்முக்தா ஷாட்குண்ய வாஜ்ஞாதாதிகா: க்ருதா: । ஸ்வதா: ஸதா ஶிவாவஸ்யாத் ॥

[illegible]

ஸாவ ஜகத்திற்கு மேலாயிருக்கிற யாதொரு குணத்தினாலே லோகங்களுக்கெல்லா மீஸ்வரனாயிருக்கிறார்; அதனாலே ஈசானனென்று நாமமாம்.

மூர்த்தாவென்று சொல்லப்பட்டதொழிய சாக்ஷாத் அவயவமல்ல.

தத்புருஷம் — [illegible]
[illegible]
[illegible]

தேவநராதி தேஹாவச்சின்னராயிருக்கிற ஆன்மாக்களிடத்திலே அந்தர்யாமியா யதிஷ்டித்துக்கொண் டிருக்கையினாலே தத்புருஷனென்னு நாமமாம்.

தத்புருஷம் - [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஆன்மாக்களை தாமமார்த்த காமங்களினாலே வஞ்சித்து அதோமாயையிலே கவிழ்க்கையினாலே வாமா, பரகாசஸ்வபாவராகையினாலே தேவா; ஆனபடியினாலே வாமதேவர் என்றது

[illegible]

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

மேற்சிறப் புணர்த்துகின்றார்

மந்திரமதனிற் பஞ்சமந்திரம் வடிவமாக - மந்திரங்களுக்குள்ளே விசேஷித்து ஈசானமுதலிய மந்திரமும் சரீரமா

க,—தந்திரஞ்சொனனவாறிங்கென்னெனில் - சிவாகமஞ் செப்பிய தேதெனனில்,—சாற்றககேணீ-சொல்ல நீகேள்,—முநதிய தோற்றத்தாலும் - பிரகமசிருட்டியாதலாலும்,—மநதிர மூலத்தாலும்- மந்திரஙகளிற் பிரதானங்க ளாதலானும், விசேஷித்து வடிவென று செப்பியது மநநத திராண தனமிததுவம, சிவ சததிககும் சிவனுககுமே நாதாகருதிவாசகங்கள் மநதிரஙகளென றெப்படிச் சொல்லப்படும , சததியநதானே!—அந்தமில்சததியாதிக கிசைததலு மாகுமனறே - நிதத யாஷடத்திரம்சத்கலாபேத ஈசானியாதி மூாத்தியநத சததிபேத சிவசததிககும், ஆதியெனனும் ஈசானியாதி சததியோ சாதாநத சிவபேத சிவனுககும, மநதிர மெனபது முககியமாய்ச சொல்லலாகும ; மநநத் திராணதனமிததுவஞ சாடசா திருககையால்,சிவம் சததியாகிய வாசசிய மநதிரஙகளுக்கு நாமமாதலால், வாசக மந்திரங்களுக்கு மநதிரமெனபதுபசாரம.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

மநதிர வடிவுள்ளும யஞசப்பிரம வடிவைச் சிறந்தெடுத்தோதிபது, ஏனைய மநதிரஙகடகெல்லாம் முறபடத் தோனறி முற்படககொண்ட வடிவாதல்பற்றி யெனபதாம்.

தந்திரம் ஆகமம்.

இக்ஙனங்கூறிய அத்துவாமூர்த்தி மந்திரமூர்த்தி பஞ்சப்பிரம மூர்த்திகளெல்லாம், அவறறைச் செலுத்திநிற்குந் திரோதான சததிககிசையச் செய்த உபசாரவடிவென்பார்; சத்தியாதிககிசைத்தலு மாகுமென இறுதிக்கட் கூறினார்.

சத்தியாதியென்பது முனபினருகத தொக்க இருபெய ரொட்டுப் பண்புததொகை.

ஆதிசத்தியெனினுந் திரோதான சத்தியெனினு மொக் கும்

உம்மை சிறப்பினகண் வநதது.

இவைநானகு செய்யுளானும் முதல்வனுககு உபசாரத்திரு மேனி இவையெனபது கூறபபட்டது.

'அருவமோ' எனபதுமுதல் இதுகாறுந் திருமேனியி னியல் புகூறுமுகத்தால் 'அநாதிமுதத சித்துருவாதலைத' தெரிததுணர ாததியவாறு.

அற்றேல் அயன முதலியோரையும் அததுவாமூர்த்தி மா னகளாக வைததுத தததமெல்லை யளவும அவரவர்வடிவின அத்தவநியாசஞ் செய்யுமாறும ஆகமஙகளின் விதிததலின், அவ ருருவும அரனுருவோ டொக்கும் போலுமெனின? அதற்கு விடை வருஞ்செய்யுளிற் பெறபபடும்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

முனசொனன மந்திரங்களெல்லாம் சிவனுக்குத் திருமே னியாயிருகக அநத மந்திரங்களுககுள் ஐநது மந்திரததைத் திருமேனியெனற தெப்படி யெனறவனை நோக்கி மேலருளிச் செய்கிறர்

மந்திரமதனிற் *பஞ்ச மந்திரம் வடிவமாகத் தந்திரஞ் சொன்னவாறிங் கெனனெனிற் சாற்றக்கேணீ - மந்திரங்கள் பலவற்றி னுள்ளும் ஐநது மந்திரமே சிவனுக்குத் திருமேனி யெ

ன்று சாத்திரங்கள் சொல்லுகிறபடி எப்படியென்று நீ சொல் லுகிறாயாகில்? நாமுனக்குச சொல்லக் கேட்பாயாக —முந்திய தோற்றத்தாலும் - எல்லா மந்திரங்களுக்கு முன்னே இந்த ஐந்து மந்திரங்களுந் தோற்றப்பட்ட தாலையாலும்,—மந்திர மூலத்தாலும - ஈசானம் தற்புருடம் அகோரம் வாமம் சத்தி யோசாதம் என்னு மிவை ஐந்துமந்திரமும் மூலமாகையாலும், இஃதன்றியும்,—அந்தமிலசத்தியாதிக கிசைதலுமாகுமன்றே - இங்ஙனம இந்தமந்திரங்க ளிருசையிலேலே முடிவில்லாத சத் திகளுக்குக கர்த்தாவாகிய தம்பிரானுக்கு ஈசானதி மந்திர ங்களைந்தும திருமேனியாகச் சாத்திரங்கள சொல்லும.

இதனுற சொல்லியது மந்திரங்க ளெல்லாவற்றிற்க குள்ளு ம் ஈசானதி ஐந்து மந்திரமும முந்தத் தோன்றுகையினாலும, மந்திரஙகளுக்கும் மூலமாகையினாலும், பரமேஸ்வரனுக் கிந்த ஐந்து மந்திரமே திருமேனியென்று சாத்திரஞ் சொன்னதெ ன்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

தந்திரம் - ஆகமங்களில்,—மந்திரமகனிற் பஞ்சமந்திரவ டிவமாக - மந்திரவடிவுள்ளும் பஞ்சப்பிரம மந்திரத்தை வடி வமாக,— சொன்னவா றிங்கெனனெனில் - சிறந்தெடுத்தோ திய தென்னையெனில்,—சாற்றக்கேணீ - கூறுவது நீ கேட்பா யாக.—முந்திய தோற்றத்தாலு மந்திரமூலத்தாலும் - ஏனைமந் திரங்கட்கெல்லாம் முற்பட்ட தோன்றி முற்பட்டுக் கொண்ட வடிவாதல் பற்றியும்,—அந்தமில் சத்தியாதிக்கு - அவற்றை ச் செலுத்திநிற்கும் ஆதிசத்தியாகிய திரோதான சத்திக்கு,—இ

சைத்தலு மாகுமனறே - இசையச்செய்தல் வடிவென்பதாம்.

அருவமோ எனபதுமுத லிதுகாறுந திருமேனியி னியல்பு கூறு முகததான் அகாதிமுதத சிததுருவாதலைத் தெரிந்துணர்த்தியவாறு.

☞ க-சூ, உ-அ-ம், முடிந்தது.

## மறைஞானதேசிகர் உரை.



இங்ஙன மநதிரஙகளை யதிட்டித்த சத்தி, கிரு
ததிய கர்ததாககளிடத் ததிட்டதது நிற்
குமென றுணர்த்துகிருர்.

அயன்றனை யாதியாக வரனுரு வென்பதென்னை,
பயந்திடுஞ சத்தியாதி படைத்தலாற் படைப்புமூல,
முயன்றன ரிவரோயாகின் முனனவ னெனனை முறறு,
நயந்திடு மவனிவர்கரு நண்ணுவ தொரோவொன்று
மே. (௬0)

(இ-ள்.) அயன்றனை யாதியாக வரனுருவென்பதென்னை — பிரமாமுதலிய கிருததியகர்த்தாககளைச் சிவனெனறு சொல்லுகிற தெப்படியெனனில்?

பயந்திடுஞ் சத்தியாதி பூதிதலால் — சிருட்டிமுதலிய கிருத்தியங்களைச் செய்யுஞ் சிவசததி பிரமாமுதலாயினு ரிடத்துப் பதித தவர்களு முலகங்களெல்லாத்தையுஞ் சிருட்டியுந் திதியுஞ் சங்காரமு முவனுடைய

பிரோரகத்தி லிவர்களுந் தொழிலைச் செய்கையால், இவர்களையுஞ் சிவனென வெண்ணப்படும்?

அஃதென்னபோலவெனனில்? ஆசாரியனை யந்தச்சிவனது சத்தி யதிட்டித்துக் கிரியையை நடத்த, அவனைச் சிவனென்றே கருதுமாறுபோ லெனவறிக

படைப்புமூல முயன்றன ரிவரோயாகின் முனனவ னென்னை

சிருட்டிமுதலிய கிருத்தியங்களை யிவர்களே செய்வார்களாயின பின்னைக் கர்த்தா வேணுமென்று கருத வேண்டுவ தில்லையென்று நீ சொல்லில

முற்று நயந்திடு மவனிவர்க்கு நண்ணுவ தொரோ வொன்றுமே

பஞ்ச கிருத்தியங்களையு மந்தக் கர்த்தாவே செய்தற்குரித்தாதலால், அந்தக்கர்த்தாவே பிரமன் மால் உருத்திரன் ஈசுரன் சதாசிவனென்னு மிவர்களுக் கொவ்வொரு கிருத்தியங்களைப் பிரித்துக்கொடுக்க வந்தந்தக் கிருத்தியங்களையே யவர்கள் செய்தற்குரித்து எ-று.

ஏகாரந் தேற்றம்.

இதற்கு வாயவ்யசங்கிதை யெனவறிக. (௬௭)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

மேல் சர்வக்ருத்யத்திற்குஞ் சிவனே கர்த்தாவென்பது ணர்த்துகின்றது.

அயனறனையாதியாக வரனுருவென்பதென்னை - சிவனுடைய விக்ரஹங்கள பரம்மாவே யாதியாகச்சொல்ல, நீர் சதாசிவத்தை யாதியாகச் சொன்ன தென்னையென்னில்,— பயந்திடுஞ்

சத்தியாதி பதிதலாற்படைப்புமுலம் - ச்ருஷ்டியாதி க்ருத்திய த்திற்கு ஆதியாகிய பரமேஸ்வரனுடைய சத்தி பொருந்துத லால் ஐந்துபேரும் ஐந்து கருத்யம் பண்ணுவார்கள், ஸ்ருஷ்டி யை முதலாக வெண்ணுகையினாலே தொழின் முதனமையினா லே ப்ரம்ஹாவை முதலாக வெண்ணப்பட்டது,—முயனரனரி யரோயாகின முன்னவனென்னே - ஐந்துபேருமைந்து தொழிலை யுஞ் செய்யில இவைவர்க்கு முன்னவனாகி லயாவஸ்திதனாகி ஹரனென்னு நாம முடையவர் செய்கதெனனெனில்,—முற்று நயந்திடுமவன - பரிக்கிரஹ சத்தியாகிய சுத்தமாயையை காரி யோனமுகமாக க்ஷோபம்பண்ணியும், ப்ரளயத்திலே அனமாக களுடைய கர்மங்கள சம்ஹாரரூபமாக மாயையிலேயிருந்தத னைப பலோனமுகமாககியும், திரோதானம பணணு யோகயனை த் திரோதானம்பண்ணியும், விருஞானகலரில் அதிபக்வாசகுச ச சிதாநந தாவப சாக்ஷாதகாரததைத தரிசிபபித்தும், இவவா று பஞ்ச க்ருத்யங்களும ஏகவவாருகவேணு மவவாறு திருவு ள்ளத்து நோக்கியிருப்பர் இங்ஙனம சூக்ஷமமாகிய கருததியங் களைச செய்து ஸ்தூல கருததியங்களுக்கு,—இவர்க்கு நண்ணு வதோரோவொனறுமே - சதாசிவர் மஹேஸ்வரர் ருத்ரர் வி ஷ்ணு ப்ரம்ஹா என்னும் பஞ்சமூர்த்திகளுக்கும அநுக்கிரஹ திரோதான ஸமஹார ஸ்திதி சிருஷ்டியென்னு மைந்து க்ருத்தி யங்களு மொவ்வொரு கர்த்தாவுக் கொவ்வொரு க்ருத்தியம் ஸ்வதந்தரமாகவும், நின்ற நாலு க்ருத்தியமும் அநுஷங்கிகமா கவும்பரமசிவனது சக்தியாலே பொருந்துமென்றிதனபொருள்.

தஜ்ஞம் உர்மெமெ — ஸாவெ வரவெ

வொயயு ரொயயொமரது ரொஸரது ரஷயு

[illegible]
[illegible]

இந்த விருத்தத்தில் ப்ரம்ஹாதி காரணேஸ்வரரிடத்திலே சிவனுடைய சத்தி பதிந்துநின்று கருத்யங்களைப் பண்ணவேணுமென்றதற்கு, சத்திகளநேகமாகில் சத்திமானு மநேகராகவேணுமாகில் அநேகேஸ்வரத்வம் வரும் என்று, மேல் விருத்தத்திலே சங்கைபண்ணி சத்தியொன்றே யென்பது முதலான உத்தரம் கூறுகின்றது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பிரமாதி சாஞ்சன நிரஞ்சனனு மந்திரங்களை நிரஞ்சன சாம்பவ மந்திரரூபங்களாகச் செய்புவ தேதென ஆசங்கிக்க வுத்தர மூரைக்கின்றார்

அயனரனை யாதிபாக வரனுரு வென்பதென்னை - விதிமுதற் பஞ்ச காரணமூர்த்தி வடிவன சிவனென்று சிவாகமஞ் செப்புவதேதெனனின்?— பயந்திடுஞ் சத்தியாதி பதிதலால்-சனி ஆரணி ரோதயித்திரி என்கின்ற சிவசத்திகளதிஷ்டித்து, அவர்களைக்கொண்டு பஞ்சகிர்த்தியம் பண்ணுவித்தலாலே,— படைப்புமுதல மயனரனிவரேயாயின் முன்னவனென்னை-(என்னின்) - சிருட்டிமுதலிய பஞ்சகிர்த்தியம்பண்ணுவ திவராகிற சிவனேதுக்கு, கற்பனை வுரவ தோஷம்வருமாதலால் வேண்டுவ தன்றென்று நீ சொல்லில்? அப்படிச் சொல்லவேண்டாம்.— முற்று நயந்திடுமவன - சாம்பசதாசிவன் சுத்தமாயா கிர்த்திய மஞ்சும் சாக்ஷாத்காரனாயும், அசுத்தமாயை ப்ராகிருதி கிர்த்தியமஞ்சும் அநந்த ஸ்ரீகண்டாதித் துவாரத்தினாலேயும் ப

ன்ணுவன்.—இவர்க்கு நண்ணுவது - இவ்வணு சதாசிவ னன ந்தேசுரன ருத்திரன விஷ்ணு பிரமா இவர்களுக்குப் பொருந் துவதாகிய கருத்தியம்,—ஒரோவொன ருமே - ஒவவொன்று தானே.

அவர்க்குள், அணுசதாசிவனுக்கு அனுக்கிரக கிருத்தியமொ ன்றுமே, ஈசுரனெனனு மநந்தேசுரனுககு சுத்தமாயையிற றி ரோதான கருத்தியம நடவாநிருந்தாலும அசுத்த மாயா கிர்த் தியம் அஞ்ஞம நடந்தாலும் திரோதான கிர்த்தியம பிரதான ம், உருத்திர னெனனுஞ் சீகண்டருக்குப் பரகிருதிக்குமேற் ச ஙகாரகிருத்தியம் நடவாதிருநதாலும ப்ரகிருதி கிருத்திய மை ந்தும் நடநதாலும் சங்கார கிருத்தியம ப்ரதானம், குணநில ய விஷ்ணுவுக்கும் பிரமாணட நிலய விஷ்ணுவுககும பரகிருதி க்கு மேல் திதிகருத்தியம் நடவாதிருநதாலும பரகிருதிக்குட் டேசரீர போககியபபொருட டிதிகிருத்தியம் ப்ரதானம், குண நிலய பிரமாவுக்கும் ப்ரமாண்ட நிலய ப்ரமாவுககும் பரகிரு திககுமேல சிருஷடி கிருத்தியம் நடவாதிருநதாலும ப்ரகிரு ததிககுட் டேசரீர போக்கியப பொருட்சிருட்டி கிருத்தியம் ப் ரதானம் ; ஆதலால், ஒரோ வொனறெனற தெனவறிக.

சத்தி மூன்றுகில், பஞ்சகிர்த்திய மெப்படி பண்ணும்? எப் படிபண்ணுவிக்கும்? சத்திமந்தானே! ஜநநிக்குச் சிருட்டிகிருத் தியமொனறுமே, ஆரணிக்குச் சங்கார கிருத்தியமும் அநுக்கிர ஹக்ருத்தியமும,ரோதயித்திரிக்குத் திதிகிருத்தியமும் திரோபா வ கிருத்தியமும்,என்பதனுல் விரோதமனறு. ஆரணி ரோதயித் திரி ஜநநி மூனறும் சத்திசரீர கற்பனையினுலே சிவனுக்குச் சூ க்குமதேகம்; ஈசானி பூரணி ஆர்த்தி வாமை மூர்த்தியெனனும் பஞ்சசத்தியும் அநுக்கிரகமுதல ஐஞ்சு கிர்த்தியத்தையும் அடை

விற் பண்ணுகின்ற சத்திசரீர கற்பனையினாலே சிவனுக்குத் தூலசரீரம் எனப்படுகிறது.

இருதயாதி யாறுமந்திரமும் சரீரகற்பனைக் குள்ளதன்று, சரீரமும் சரீரியும் சம்பந்தமான விடத்துப் பிரபாவ ஸ்வரூபமாயிருக்கும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

இங்ஙனம் 'மண்ணினிற்கடாதி' என்பது முதன் 'மந்திரம தனில்' என்பது ஈறாகிய முப்பத்தொரு செய்யுளானும், முதற் செய்யுளின் 'ஈறுமாகி மருவிடுமநாதி முத்த சித்துரு மன்னினின் றே'என்ற இரண்டாங் கூற்றை, அவ்வவ் மதமபற்றி ஆசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தி; இனி 'தானமுதல்' என்ற மூன்றாங்கூற்றை அவ்வாறு வலியுறுத்துகின்றார்.

அயனுருவம் அரியுருவ முதலியவற்றையும், அரனுருவோடொத்த உருவாக வைத்து, வேதாகமங்களிற் றத்தமெல்லையுளவும் அத்துவநியாசம் மந்திரநியாசம் முதலாயின விதித்தலின்; சங்காரக் கடவுளோடொப்ப அவரும் முதல்வராவார் செல்வர்போலுமெனின் மலைபறக படைப்பாதிதொழில் செய்யுஞ் சனிமுதலிய சிவசத்திகள் ஒரேவொன்று அவர்மாட்டுப்பதிந்து நின்று செலுத்துதலான, அவ்வியைபுபற்றி வேதாகமங்களின் அவ்வாறு உபசரித் தோதப்பண்டன வெனபதாம்

அற்றேல் ஒருதொழிற் கிருவராதல் எற்றுக்கென்பாரை நோக்கி, அமைச்சர் முதலாயினோற்க்கு அரசனையின்றியமையாமைபோல, அயனரிமுதலாயினோர்க்கு அரனருளையின்றி யமையாமை தருக்கமுகத்தான் விளக்குவார்,படைப்புமுல முயன்றனரி

வரேயாயின் முனைவனென்னை, என்றும். அரசனுக்கு அமைச்சர்முதலாயினுறபோல அரனுக்கு அயனரி முதலாயினரும் வேண்டப்படுவரெனபது ஏதமுடைத்தான விளக்குவார், முற்றுணர்விடைய னிவர்க்கு நண்ணுவதொரோவொன்றுமே என்றுங் கூறினார்.

உவமை வருஞ்செய்யுளிற் பெறப்படும்

ஐ அழகு. அஃதாகுபெயரான அழகுடை யுருவத்தின் மேனின்றது. இரண்டனுருபாக வைத்துரைப்பார், முடிக்குஞ்சொல்லொடு இயைபின்மை நோக்கிலர்.

ஆக வரனுருவென்னு முவமைத்தொகை பையரவல்குல் போனின்றது.

ஆகம் உடம்பு.

பயத்தல் படைத்தல்.

படைப்பு மூலம படைப்பாதியென்க

பயந்திடுஞ் சத்தியாதி பதிகலை பிரிந்துவைத்துக் கூறுகின்றமையின், இவரோபெண்ணு மேகாரம பிரிநிலைக்கண் வந்தது.

உரைத்தவித் தொழில்களென்னுஞ் செய்யுள், பௌராணிகரை நோக்கி இயைபின்மை மாத்திர நீக்கி 'ஈறுமாகி மறுவிடும்' என்றதனை வலியுறுத்தியது

இஃது அநேகேசுரவாதிகளை நோக்கிப் பிறிதினியைபு நீக்கி 'தானமுதல' என்றதனை வலியுறுத்தியது.

இவை யிரண்டற்குந் தம்முள் வேற்றுமை.

அற்றேல் அநேகேசுரவாதம் பரிகரித்தற்பொருட்டுப் பயந்திடுஞ் சத்தியாதியெனச் சத்திக்குப் பனமை கூறவே, சத்திமா னொருவனுதல் செல்லாமையின், இது தேளுக்கஞ்சிப் பாு

ந்தள்வாயின் விழுந்தா லொப்ப, மறித்தும் அநேகேசுரவாதமா ய் முடியும்போலுமெனின? அவவாசங்கை நீக்குதற்கன்றே வ ருஞ் செய்யு ளெழுந்ததெனபது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

முனசொன்ன ஐந்து மந்திரமுமே பரமேஸ்வரனுக்குத் திருமேனியென்று சொல்லில்? பிரம்மா முதலாகப் பரமேஸ்வர னுடைய திருமேனி யென்றது எப்படி யென்றவனை நோக்கி மேல் மறுத் தருளிச செய்கிறார்.

அயனறனையாதியாக வரனுருவெனபதெனனை - பிரம்மா முதலாகப் பரமேஸ்வரனுடைய திருமேனியென்று சொல்லுகி றது எப்படியெனனில்?— பயந்திடுஞ்சத்தியாதி பதிதலால் - விசுவததையெல்லா மூனறுசகுகிற கிரியாசததி முதலான சத் திகள பொருநதுகையாலே,—படைப்புமுல முயனறனரிவரோ - சிருஷடி முதலாகிய கிருததியஙகளை இவர்களே நடததுவர்க ள,—ஆயின முனனவனெனனை - இவர்களே நடத்துவார்களா யின உம்முடைய கர்த்தா வேறுககெனறு நீசொல்லில்,—முற்று ம்நயந்திடுமவனிவர்களு நணணுவதொரோவொனறுமே-சிருஷ டி திதி சங்காரமெனகிற மூனறு தொழிலும் பரமேஸ்வரனே யுடையவன. இவையிற்றிலே ஒவ்வொருதொழில்களையுந்தப் பர மேஸ்வரன கொடுக்க, அநத வதிகாரததினாலே பிரம்ம விட்டு ணுககள சிருஷடியுந் திதியுஞ் செய்யா நிற்பர்கள்.

இதனாற் சொல்லியது, பிரம்மாவை சிவனுடைய திருமே னியாக முநதச் சொல்லவேண்டினது, சிவன் பஞ்சகிருததியஞ் செய்யுமிடததுச சிருஷ்டி முந்துகையினாலே அவன் சிருஷடிகர்

த்தா வாகையிளுலென்றும், பிரம்மாவுக்கும் விட்டுணுவுக்குஞ் சிருஷ்டியுந் திதியுஞ் சிவனுடைய சத்தி கொடுக்கச் செய்வாராக ளென்றும், சிவன் எல்லாக கிருத்தியங்களையுந் தானே செய் வனென்னு முறைமையு மறிவித்தது.

'குறித்த தொன்று' என்ற திருவிருத்தத்தில் 'நிறுத்தி நி ளைந்தமேனி நின்மல னருளினுலே' என்ற பதத்துக்கு வியாக் யானம் இவ்வளவும் வந்து முடிந்தது

குறித்ததொன்றென்ற திருவிருத்த முதல் அயன்றனை யெ ன்ற திருவிருத்த முடிவாக பதினுறு திருவிருத்தமும் பாஞ்ச ராத்திரி சிருஷ்டி திதி சங்கார முறைமையுஞ் செய்கிறவன் சங் கார காத்தாவல்ல, திதி கர்த்தாவே யென்று அவன் சொன்ன தற்குப் பிரமாணம். பரபட்சம் அவன் மதம். "உந்தியிலயனை யீன்று மவனைக்கொண்டுலகுண்டாக்கி, யந்தநல்லுலகழிக்கவர னையுமாக்குவித்தத், தந்திடுசகத்தினுக்குத் திதிகாத்தாதா னேயாகி, வந்திடுந்தோற்றமீறு நிலைமையும்பண்ணுமாயன" என்றும், மறுப்பு. "அயனானைப்பயந்தானென்று யரியயனசிர ஞ்சேதிப்ப, பயந்திடானறலோருனும் படைத்திடானசிரத் தைக்கிளருஞ், சயந்தருமரனைத்தந்தா னயனெனைத்தபேய னரே, தியங்கிடாதனராயெல்லாஞ் சிவன்செயலென்றுநேத ர்ந்தே" என்றும், " அழிப்பரியேயலென்று யரிதனையழிக்கும ணறங், கழிப்பதுதவிரமாட்டா னங்கமுமழித்தேபூண்டா, ன ழிப்பரியேயலென்றங் கறைந்ததுமழிந்ததனரே, வழித்திடுமர னேயாகக நோக்கமுமாக்குவானே." என்னுமதுங் கண்டுகொ ள்க.

சித் - பர - மத - உ, மறு - ரு - அ.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

இங்ஙனம் 'மண்ணினில் கடாதி' என்பது முதல் 'மந்திரமதனில்' என்பதீறாகிய முப்பத்தொரு செய்யுளானும் முதற்செய்யுளின் 'ஈறுமாகிமருவிடு மொருதிமுதற் சித்துரு மன்னிநின்றே' என்ற இரண்டாங் கூற்றை அவ்வவர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தி, இனி 'தான முதல்' என்ற மூன்றாங் கூற்றை அவ்வாறு வலியுறுத்துகின்றார்.

அயன்றனையாதி - அயனுருவ அரியுருவ முதலியவற்றையும்,— ஆக அரனுருவென்பதென்னை - அரனுருவோடொத்த வுருவாக வைத்து வேதாகமங்களில் தத்த மெல்லையளவுட் அத்துவநியாச, மந்திரநியாச முதலியன விதித்தலின்ற சங்காரக்கடவுளோடொப்ப, அவரு முதல்வனாவான செல்வர்போலுமெனின் மலையற்க,—பயந்திடுஞ் சத்திபாதி - படைப்பாதித் தொழில் செய்யும் சனனிமுதலிய சிவசத்திகள்,—பதிதலால் - ஒரோவொன்று அவ்வாமாட்டுப் பதிந்துநின்று செலுத்துதலான் அவ்வினைப் புரிதி வேதாகமங்களினவ்வாறு உபசரித்தோதப்பட்டன.— படைப்புமுலமிவரோ முபன்றனராயின் - அற்றேல், படைப்பாதித்தொழில்களை அயனரிமுதலாயினார் முதல்வனருளின்றியுந் தாந்தாநினைந்தவாறே செய்பவரெனின்,— முன்னவனென்னை - முதல்வனேற்றிறன்?— முற்றுநயந்திடுமவன் - ஐந்தொழிலுஞ் செய்யுமுதல்வன்,—இவர்க்கு நண்ணுவதோரோ வொன்றாமே- இவர்கட்கு ஒவ்வொரு தொழிலியற்றச் செய்தல், அரசனுக்கு அமைச்சர் முதலாயினார்போல வேண்டப்படுமென்பதாம்.

# மறைஞானதேசிகர் உரை.



இவர்களை யதிடடிகருஞ் சததி யொன்ருே பலவோ
வெனன, அதற் குகாரணமிட்
டுணர்ததுகிருர்.

சத்திதான் பலவோவென்னிற் ருஞென்றே ய
நேகமாக, வைத்திடுங காரியத்தான் மந்திரி யாதிகளெ
ல்லா, முப்த்திடு மொருவனசத்தி போலர னுடைய
தாகிப், புத்திமுத் திகளையெல்லாம் புரிநதவ னினைந
தவாறும். (சுக)

(இ - ள.) சத்தி தான பல வோவென னில் — அவர்களிடத்திற் பதிந்த சததி யொன ருே பலவோ வென்னில்?

தாஞென்றே — அந்தச்சத்தி சிவனிடத்தில் விடடு நீஙகாம லககினிக குட்டணம்போலச் சமவேதமா யிருககிற சத்தி யொனறுதானே!

அநேக மாக வைத்திடுங காரி யததான — சிவசததி யொன்ருயிருக்கவும் காரியபே தததா லவனது கிருபையினுலே கிரிபாசத தி யொனறுதானே மூனருகிய வாமை சேட்டை ரவுததிரியெனப் பிரிந்து பெயரைப் பெறும்.

ஒன்றுதானே பலவாகக காரியப்படுவ தெங்ஙனமெனில்?

மநதிரி யாதிக் கெல்லா முப்த் திடு மொருவன்ச த்தி போல் — இராசாவின தாககிஞ சத்தி யொனருயி ருநது மநதிரி முதலாயிஞரிடத்துப் பலவா க சகத்திற் காரியப்படு மதுபோல,

அரனுடைய வாமைமுதலிய ஒன்பதுசத்தியும் பிரமர்
தாகிப்புத்தி மு முதலாயினவை யதிட்டிப்பித்த தத்தனவழித்
த்திகளை யெல் தாய்நின் றனமாசகடகுப் போகமோட்ச
லாம புரிந்தவ ஙகளை யெல்லா மவரவர்செய்த விருவினையி
ளினைந்தவாரும் ன பலத்தைக் கொடாநிற்பன எ-று

ஏகாரந் தேற்றம்.

இதற்குச் சுவாயம்புவத்து மிருகேந்திரத்துங் காண்க (௯௧)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

சத்திதானபலவோவெனனில் - ப்ரம்ஹாதி காரணேஸ்வரரிடத்திலே பதிந்து கருத்தியங்களைப் பண்ணும் சத்தியெனகையால் சத்தி யநேகமாகவேணும், சத்தி யநேகமாகில், சத்திமானுமநேகமாய் அநேகேஸ்வரத்வம வரும அலலது சக்தனொருவனே! சத்தியநேகையெனனில்? அநேயோந்ய விருத்தமாத கிரியாசத்திகள் ஒருவனுக்கு சமவேதமாகிறபொழுது விகாரித்வம் வரும எனனில? அப்படி வாராதெனறும உத்தரம.—மந்திரியாதிகளெல்லா முய்த்திடுமொருவன சத்திபோ லரனுடையதாகி சத்திதானொனறே காரியத்தா லநேகமாய் வைத்திடும - ராஜாவினுடைய ஆஞ்ஞாசத்தியானது மந்த்ரி சேனாபதி க்ராமபாலகன் முதலான பேர்களிடத்திலே யிருந்து தனித்தனி தொழில்களைப் பண்ணிவைக்கிறப்போல, ஹரனுடையதாகிய சத்தி யொனறே கருத்திய பேதஙகளைச் செய்யுமெனறு சொல்லப்படும அப்படிச் சொல்லப்படுவதும்,— புத்திமுத்திகளையெலலாம புரிந்தவனினைந்த வாறும் - போகமோக்ஷத்தைக் கொடுக்கப்பட்ட ஹரனுடைய சத்தியானது அந்த ஹரனினைவின பேதத்தி

ஞாலே க்ருத்ய பேதததால் பேதமாகத் தோனறும் என றிதன பொருள.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இபபடிச் சத்தி யநேகமாகிற் சத்திமானு மநேகமாமெ னனுஞ சஙகைக குததர முரைககினறா.

(ஞானக கிரியேசசாசததி மூனறினுட கிரியாசததி ஈ௯ ணியாதி ய௫சு, ஆரணி யாதி மூனறு, ஆகச்சததி யெட்டாயிரு கரு மெனறதனால்,) சததிதான பலவோ வெனனில தாநொன றே - ஒருசத்திதானே,—காரியததால்-வியாபார பேதததினு ல்,—அநேகமாக வைததிடும் - அநநதமாகச சொல்லபபடும்,— மநதிரி யாதிககெல்லாம் - மநதிரி சேனாபதி ஊர்சகாவலன மு தலோரிடததில்,—உய்தகிடு மொருவன சததிபோல் - ஒனறு யிருநது செலுதது மிராசாவின து ஆஞ்ஞாசததி யொப்ப,—அ ரனுடையதாகி - சிவசம்பநதியாகி,—அவனினைநதவாறு - அந த சிவன செலுததினபடி,—புததிமுத்திகளை யெல்லாம் புரிந தவ நினைநதவாறும் - போகமோட்சஙகளைக கொடுததிருபப தாம.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அரசன் சக்திபொனறே யமைசசர் படைத்தலைவர் பாடி காவலர் முதலாயினுர் மாட்டு நினறு செய்யுங் காரியவேறுபா ட்டாற் பலவேறு வகைப்பட்டாற்போல, சிவசத்தியொன்றே

அவ்வவர் மாட்டு நின்றுசெய்யுங் காரியவேறுபாட்டாற் சனனி முதலியவாய்ப் பலவேறுவகைப்படும் சிவசத்தி யொன்றே யென்பதும், அதுவே கடவுள்மாட்டு நின்று நடாத்துமென்பதும், அமைச்சர் முதலாயினோர் எவையெவை செய்யினும் அரசனினைத்தவாறன்றி யாகாமைபோல, போகம் வீடுபேறுகளெல்லாம் அரனினைத்தவாறன்றி யாகாமைபற்றி அறியப்படுமென்பதாம்.

தானொன்றே யரனுடையதாகிக் காரியத்தால் அநேகமாக வைத்திடு மெனவியையும்.

அரனினைத்த வாறன்றி யாகாமை, தக்கனவேள்வி மார்க்கண்டிவாழ்நாள் ஆலாலர் தோற்றரவு முதலியவற்றால் இனிது விளங்கக் கிடத்தலின், வருத்தாது கூறாராயினார்.

அற்றேல் ஈண்டுக் கூறியவாற்றால் சனனிமுதலிய பேதமெல்லாஞ் சிவசத்திக்குத் தடத்தமெனமுயவழிச் சொரூபமெனையோவெனின? அஃதுணர்த்துதற் கன்றே வருஞ் செய்யுளெழுந்ததென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———ɔ———

முன்சொன்ன சத்தி ஒன்றாயிருக்குமோ பலவாயிருக்குமோ என்ற மாணாக்கனை நோக்கி அருளிச்செய்கிறார்.

சத்திதான் பலவோவென்னில் - சிவனுடைய சத்தியானது இப்படிப் பலபேதமாயிருக்குமோவென்று நீ சொல்லில்,— தானொன்றே யநேகமாக வைத்திடுங் காரியத்தால் - பராசத்தியொன்றுமே எப்பொழுது முள்ளது. இப்படித் தானொன்றாயிருந்தும் பெருந்தொழிலும் பலவானது பிரபஞ்ச காரியங்களு

க்கிடாக. அதென்போலவென்னில்?—மந்திரியாதிக்கெல்லாமுய்த்திடு மொருவன் சத்திபோல - காரிபப்பொழுகாலாகிய இராசசியத்திலுள்ள வதிகாரங்களுக்கு மற் றுண்டானவர்களுக்கும் இராசாவினுடைய ஆஞ்ஞாசத்தியானது நின்று முறைமைகளிலே நடத்துகிறுப்போல;—அரனுடையதாகி - அந்தப் பராசத்தியும் பரமசிவனுக்குள்ளதாகி,—புத்திமுத்திகளையெல்லாம் புரிந்து - சருவானமாக்களுக்கும் போக மோட்சங்களையும் கொடுத்து,—அவனினைத்தவாறும - அந்தப் பரமசிவன திருவுள்ளத்தடைத்ததயாதொனறு, தானுமதுவாய் நினறு பஞ்சகிருத்தியங்களைச செய்யும்.

இதனாற் சொல்லியது பரமேஸ்வரனுடைய சத்திதானே பெருந்தொழிலும் பலவாய்த் தானொன்றாயிருக்கு மெனறும், அவனுடைய திருவுள்ளப்படியே ஆனமாக்களுக்குப் போகமோட்சங்களைக் கொடுக்கு மெனனு முறைமையும் அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

சத்திதான் பலவோவென்னில் - சத்திக ளநேகமோவென்றிடின,—ஒருவன்சத்தி - அரன் சத்திபொனறே,— மந்திரயாதிக்கெல்லாம் உயத்திடும்போல - அமைச்சர்படைத்தலைவர் பாடிகாவலர் முதலாயினோர்மாட்டு நினறு செய்யுங் காரியவேறுபாட்டாற் பலவேறு வகைப்பட்டாற்போல,—தானொனறே-சிவசத்தியொனறே,—அரனுடையதாகிக் காரியத்தாலநேகமாக வைத்திடும் - அவரவர்மாட்டு நின்று செய்யுங் காரியவேறுபாட்டால் சனனிமுதலியவாய்ப் பலவேறுவகைப்பட்டும் சிவசத்தி யொன்றேயென்பது மதுவே கடவுளர் மாட்டுநின்று நடாத்து

மெனபதும்,—புத்திமுத்திகளை யெல்லாம் புரிந்தவனினைந்தவா றும் - அமைச்சர் முதலாயினா எவை எவைசெய்யினும அரச னினைநத வாறனறி யாகாமைபோல போகம் வீடுபேறுகளெல லாம அரனினைநத வாறனறி யாகாமைபற்றி அறியப்படும்.

அரனினைநதவாறனறி யாகாமை தக்கனவேள்வி மார்க்க ண்டி வாழநாள ஆலால தோற்றரவு முதலியவற்று னினிதுவி ளங்கக்கிடத்தலின விரித்துக்கூறாராயினா.

## மறைஞானதேசிகர் உரை.



மேற் சத்திரூப முணர்த்துகிறார்.

சத்திதன் வடிவேதென்னிற் றடையிலா ஞான
மாகு, முய்த்திடு மிச்சைசெய்தி யிவைஞானத் துள
வோவென்னி, லெத்திற ஞானமுள்ள தத்திற மிச்சை
செய்தி, வைத்திடு மறைபின்ஞான மருவிடுங் கிரி
யையெல்லாம். (௬௨)

(இ-ள) சத்திதன் வடிவேதென்னின — அந்தச் சத்தியினுடைய வடிவேதென்று கேட்கிறாயாகில்?

தடையிலா ஞானமாகும். — மலத்தினால் மறைப்புண்டு பின்விளங்கினது போலன்றிப் பூரணமான ஞானமாயிருக்கும்.

உய்த்திடு மிச்சைசெய்தி யிவைஞானத் துளவோ வென்னில — இப்படி யுண்டாய விச்சையுங் கிரியையு மந்தஞானசத்தியினக ணுண்டோவென்று கேட்கிறாயாகில்?

எத்திறஞான யாதோரிடத்திலே ஞானமுண்டவிட
முளளதததிற த்தி லிச்சையுங் கிரியையுமதோன்றிக காரி
மிசசை செய்தி யபபடுவகாண,
வைத்திடும்

மறைபின்ஞா மறைப்பில்லாத ஞானசத்தியினது சா
னமருவிடுங்கி மாாதசியததாலே இசசையுங கிரியையும்
ரியையெல்லாம். பொருநதி காரியபபடுவகாண. எ-று

ஓகாரம விறு.

இதற்குச் சிநதியாகமம் (௬௨)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேலந்தச் சததிஸவரூப மேதெனபதற்கு உததரம்.

சததிதன வடிவே தெனனிற் றடையிலா ஞானமாகும,— சததியினுடைய ஸ்வரூப மேதெனனில்? ஜீவானமஞானமபோ லத தடுககப்படாமல் எக்காலததும் மெததேசததும ஸவபபிர காசையாயிருக்கும்,—உய்த்திடு மிசசைசெய்தி யிவைஞானத் தா லேவோவெனனில்-பொருநதப்பட்ட விசசையானது குணம, சரி யையானது வயாபாரம், இவைகள் ஞானததிற்குணடோ வெ னனில்?—எத்திறஞானமுள்ள ததிறமிசசைசெய்தி வைததா லால் - ஞானமெவவளவுணடு அதன குணமான இச்சையுங கிரி யையு மவவள வுணடெனறு சாஸ்தரசித்த மாகையினாலே,— மறைப்பில்ஞானுல் மருவிடுங் கிரியையெல்லாம் - சததியானது அநிவாரிக ஸ்வரூபை யாகையினாலே சர்வ காத்ருதவ சாமாத் யத்தையும் ததகுணமான விச்சையையும் அடையாதாமாகில்; ஞானுதி யிச்சாத் திரியப்பிரயகதா எனனும் கிரம ஞாயததினு

லே அறிந்ததை யிச்சிக்கவேணும், இச்சித்ததைப் பண்ணவேணு ம் ஆகையால் ஞானேச்சாக்கிரியை யென்றும கிரமஞ் சொல் ல வேணும். இதனறியும,

ஜ்ஞாநேச்சாக்ரியாஜ்ஞாநா ஸஜ்ஞாநவிஷயகம் ஸஜ்ஞாநாஶ்ரயஸ்வஜ்ஞுமியதஜ்ஞிதிந ந்யாயாத் .

மூன்று மின்ன ஸ்வரூபமுமாய் ஏகாச்ரயமுமா யிருக்கவே ணும. ஆகையால இச்சையாதியாக மூன்று மொன்றே யென று சொல்லுகிறது விரோதமெனனில்? சத்யம [சத்யமென்றது அாதகாங்கீகாரம் ] ஒன்றை யறிந்து அதையிச்சித்து அதிலேப் ரவர்த்திக்கிறது ஜீவான்மாக்களுக்கே! சிவனுக் கப்படியல்ல வென்பது மேற்கூறுகின்றது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

ஞானக்கிரியேச்சா ரூபி சத்தியென்றீர்! அதுவிருத்தம் தட த்தமு முச்சொருபமாயிராது. இருக்குமெனனில் ? சத்தியெ னப தெடுபட்டுப் போமென்று மனசிலெண்ணிச் சங்கைபண் ணி, உத்தர முரைக்கின்றார்.

சத்திதன வடிவேதென்னில்- சத்தியினது ரூபமேதென்று கேட்கிறாயானல்?—தடையிலா ஞானமாகும் - மறைப்பில்லாத வறிதற்றொழிலைப் பண்ணுமறிவாகும்.— உய்த்திடு மிச்சைசெய் தி யிவைஞானத்துளவோவெனனில் - பண்ணுதற்றொழிலாகும் சங்கற்ப முத்தியோக மிவைகள் வேற்றுத தொழிலாதலால் ஞானசத்தியி லுண்டோவென்று நீ கேட்கில்?— எத்திறஞான முள்ளது - இது காரண மிதுகரண மிதுகாரிய மிதுபிரயோசன

மென் றறிதற்றொழிலால் யாதொரு பிரகாரம் ஞானசத்தித் தொழிலாகிய ஞானமிருந்தது,—அத்திறம்-அந்தப்பிரகாரம்,— இச்சை - இஃதின்னதாகக் கடவதெனு மிச்சாசத்தித் தொழிலாகி யுத்தியோகத்திற் பின்னாகி வருஞ சங்கற்ப ஞான விசேஷமாகவும,—செய்தி - கிரியை,—இதைப்பண்ணு நிற்பேனென்று கிரியாசத்தித் தொழிலாகிய சங்கற்பத்தின்முன்னாக வரும உத்தியோக ஞானவிசேஷமாகவும,—வைததலால்-சிவாகமம் சொல்லி நிச்சயித்ததனுல்,—மறைப்பினனுல் - தடையற்ற ஞான விசேஷசத்தி சங்கற்பத்தால்,— எல்லாம்-காரிய சடபதார்த்த முற்றும்,—கிரியை மருவிடும்-உற்பத்தி திதி நாச சலனத் தொழிலோடு பொருந்தும்.

சலனத்தொழிலுக் கேதுவாயிருக்கும் ஞான விசேஷ நிச்சல நித்திய சத்திய சங்கற்பங் கிரியை யென்றுச் சொல்லப்படும.

---

## சிவஞானயோகியருளா வருமாறு.

உயிர்கட்கு அநுக்கிரகமாத்திரங் குறித்துப் பொதுவகையா னறிந்தும் அறிவித்து நிற்பதாகிய ஞானமொன்றே சிவசத்தியின சொரூபம். அதுவே பராசத்தி யெனப்படும். அந்தஞானம் உயிர்கட்கு மலபாகம் வருதற்பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்துச் சிறப்புவகையான வியாபரிக்குங்கால், ஒருகூற்றானே திரோதான சத்தியென நின்று, இச்சா ஞானக் கிரியையென முத்திறப்பட்டு வியாபரிக்கும். ஆகலான் இச்சைகிரியைகளும் ஞானத்தின் வேறன்மையாற் காரியத்தால் அநேகமாகிய சனனிமுதலிய வியாபாரசத்திக ளெல்லாம்

முற்கூறப்பட்ட பராசத்தி ரூபமாகிய ஞானமொன்றுன உள் வாவனவேயாமெனபதாம.

தடை தடுத்தல்; மறைப்பென்றதும் அது.

தடுத்தற்குச்செயப்படுபொருள வருவித்துரைக்க.

தடையிலாஞானமெனவே, தடைசெய்யு ஞானமுமுண் டெனபது போதத்தையின, அதுவே திரோதானசத்தி யென ப்படும்

இதனுற் பஞ்சசத்திகளுங் கண்டுகொளக.

ஞானத்துளவெனபுழி, நீக்கப்பொருட்கண வரும் இனனு ருபு விரித்துரைகக

உளவாதல் ஈண்டுத் தோனறுதனமேறறு

ஏனைடபோலத் தோனறினவல்லவெனபார், எத்திறஞா னமுளள தத்திறமிச்சை செய்தியெனருர் ஞானத்தின வியா பார விசேடஙகளே அவையெனபதாம நீடுபரா சத்திநிகழிச சாஞான நிறைசிரியை கர என்றதூஉம் "கிரியையறி விச்சை கிள த்தசத்தியேதோ-பெரியபரா சத்தியெனப் பேசாய்" எனறதூஉ மிகசருத்தே நோக்கியெனக.

ஞானமெனபது அம்முசகெட்டுருபேற்று ஞானுலென நி னறது அம்முக கெடுதல் "பெற்றுன றுயர்த்த பெருமான" "கோனுகணையான" எனருர போல்வனவறறுளுங் காணக. அத்துச்சாரியை விகாரத்தாற் றெக்கதெனினுமாம்.

கிரியை வியாபாரம்.

இதனிற்போநதபொருளொனனை யெனின்? அது வருஞ் செ ய்யுளிற் கூறப்படும்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படி முன் சொல்லப்பட்ட சத்திக்கு வடிவேதென்ற வினை நோக்கி மேலருளிச் செய்கிறார்.

சத்திதனவடிவேதென்னிற் றடையிலாஞானமாகும் - அந்தப் பராசத்தியினுடைய திருமேனி யேதென்று சொல்லிற் பரிபூரணமான ஞானமேயாயிருக்கும்.—உய்த்திடு மிச்சைசெய் தியிவைஞானத் துளவோவெனனில் - முன்னே பிரபஞ்சத்தை நடத்துமென்று சொல்லப்பட்ட இச்சாசத்தியும் கிரியாசத்தியும் இவையிரண்டும் ஞானசத்திக் குள்ளேயோ வெனனில்?—எத்திறஞானமுள்ள தத்திறமிச்சைசெய்திவைத்தலால்-எவ்வளவு ஞானசத்தியினது நிறையுண்டானது அவ்வளவும் இச்சாசத்தியினது நிறைவுங் கிரியாசத்தியினது நிறைவும் உண்டென்று வேதாகமங்கள் சொல்லுகையால்,—மறைப்பில்ஞானால் மருவிடுங் கிரியையெல்லாம் - ஆன்மாவி னறிவுபோல ஆணவமலத்தால் மறைக்கப்படாத ஞானசத்தியினாலே கிரியாசத்திக்குள்ள தொழில்களெல்லாம் பொருந்திக் காரியப்படும்

இதனாற் சொல்லியது பராசத்திக்கு வடிவு ஞானமென்றும், அந்த ஞானத்தினாலே இச்சாசத்தியும் கிரியாசத்தியும் காரியப்படுமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சத்திதன்வடிவேதென்னில் - சிவசத்தியின சொரூபம் யாதெனனில்,—தடையிலா ஞானமாகும்,—உயிர்கட் கநுக்கிர

சு மாத்திரம்குறித்துப் பொதுவகையானறிந்து மறிவித்து நிற்ப தாகிய ஞானமொனறேயாம். அதுவே பராசததியெனபபடும். தடையிலாஞானம,—உய்ததிடும்- அந்தஞான முயிர்கட்கு மல பாகம வருதற்பொருட்டு ஐநதொழில் செய்தலைகுறிததுச் சிற டபுவகையான வியாபரிகருங்கா லொருகூற்றுனே திரோதானச த்தி யெனநின்று இச்சாஞானககிரியையென முததிறட்பட்டு வி யாபரிக்கு மாகலான,—இசசைசெய்தி யிவைஞானததுளவோ வென்னில்-இச்சைகிரியையெனகிற இவைகள ஞானத்தினின்று தோனறுவன வுளவோவெனின?—ஞானமெததிற முள்ளது- ஞானமெவ்வா றுள்ளதோ,—அததிறமிச்சை செய்திவைததலா ன-அவவாறே யிச்சைகிரியைகளு நடததலின, அவ்விரண்டு ஞா னததின வியாபாரவிசேடங்களேயனறி வேறனமையான,—கி ரியையெல்லாம் - காரிபததா லநேகமாகிய சனனிமுதலிய வி யாபாரசததிகளெல்லாம்,—மறைப்பின ஞானமருவிடும்,—மு ற்கூறபபட்ட பராசத்திருபமாகிய ஞானமொனறு ளுளவாவ னவேயா மெனபதாம.

---

## மறைஞானதேசிகர் உரை.



அம்மூன்றினது கிருததிய முணர்த்துகிறுர்.

ஒன்றதா யிச்சாஞானக் கிரியையென் றொருமூன்
றுகி, நின்றிடு சத்திபிச்சை யுயிாககரு ணைசமாகு,
நன்றெலா ஞானசத்தி யானயந் தறிவாறுத, னன்றரு
ட் கிரிைைதன்று லாக்குவ னகிலமெல்லாம். (௬௩)

(இ - ள்) ஒன்று சிவனிடத்தி லவிநுபாவமாயிருக்கிற சம தா யிச்சா வேதசததி முகற்கட் பராசத்தி யொன்று ஞானக் கி ய்,அதுதானே யிச்சாஞானக் கிரியையென்று

ரியையென் றெ மூவிதப்படடு நித்கும். இவை யிற்றுக்குத் ருமூன ருகி நின் தொழிலியாதெனனில் ? றிடுஞ சதநி

இச்சை யுயிர்க் கரு ணேசமாகு ம் — அவற்று ளிச்சையாவது சிவன் சர்வான் மாககளையு மோடசததை யடைவிககவே ணுமென றவர்களிடதது வைத்த கிருபை யாகும்.

நன்றெலாஞா சைதநி யானய ந் தறிவஞதன — ஞானசத்தியாவது சிவஞன்மாக்கள் செ ய்த விருவினைப் பலஙக ளெல்லாத்தையு ம வர்கள புசிதறுத் தொலைக்கையினபொருட் டு விருப்பி யறியாநிற்பன.

அன் றருட் கிரி யைதின்ஞ லாக் குவ னகிலமெல் லாம். — கிரியாசத்தியாவது அப்பொழுது காது நா தனது காருண்ணியமாகிய கிரியாசத்தி யாலே சகசிருட்டி முதலிய காரியங்களை ல்லாத்தையு நடதநிடுவன எ-று.

இதற்குச் சுவாயம்புவதது மிரததினத் திரயத்துங் கா ண்க. (சுரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



ஒன்றதாயிச்சாஞானக கிரியையென் றெருமூன் ருகி நின் றிடும் - பரமசிவனுடைய ஸ்வரூமாய் ஸ்வடிரப் பிரகாசையான பராசத்தி யொனறே யாயிருந்து, அதனுடைய வ்ருத்தி பேதத்தி ஞலே யிச்சாஞானக கிரியையென்று மூன்ருகத்தோன்றும்,— சதநியிச்சை யுயிர்க்கருணேயமாகும் - இச்சாசத்தி யான்மா க்களை யநுக்கிரகம் பண்ணவேணுமென்று இச்சித்த வவசரமா ம்,—நன்றெலா ஞானசத்தியால் நயந்தறிவஞதன் - ஆன்மாக்

௬ளபண்ணின புண்ணியங்களையெல்லா மென்றதனாற் பாபங்களையு மதப் புண்ணியபாபாது குணமான தநுகரண புவனபோகங்களை யும் இத்தகிதுவென்று காததாவானவன பகுததறிவது ஞான சததியால் —அனறருட கிரியைதனை லாகருவனகிலமெல்லா ம-அநாதியே கருமைபயினுலே முனசொனன தநுகரணுதி பரப ஞசங்களை யுணடாகருவது கிரியாசததியாலே கிரியாசததியெ னறது தனனுடைய ஸபரிசமாததரததிலே பிநறவிலே கரியையு ணடாககுகையிஞலே கூறப்பட்டதனறி சசதிஸ்வயம சரியாவ தியென்று சொனனதலல ஆகையாற சததி பொனறேயெண று இதனபொருள.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

சததி ஒனறுதானே அறிகல் டண்ணுகல் இசசிததலென் னும் வியாபார பேததகால் மூனறெனறும, அவாநதர வியா பார பேததகால் அநநகமெனறும சொனனீா ; தனமபேதத தாற் றனமி பேதிககும், காரிய பேதததாற் காரணம் பேதிசகு ம எனனும நியமததால் சததிபேதிககும. அநநதமாயிருககின ர ஞானககிரியைகள சததிககுச் சகசதனமமாய் சகசகாரியமா ய நீபசததிககுதது தாகபபிரகாசம் போலிருத்தலால், ஞானுந் தியங் கிரியாநந்தியமுமில்லை, ஞானமெனறுங் கிரியையெனறு ம இரண்டு தொழிலில்லை; ஆதலால சததியொனறெனனில் ஞா னககிரியா நநதிய சாஙகரியம பிரமாதிகளாலுந தடுககபபடா ததாய் வநதது சாருமெனறு சொல்லச சாற்றுகினறார்.

ஒனறதாயிச்சாஞானக் கிரியையென றெருமூன்றாகி நின றிடுஞ் சததி - ஞானங் கிரியை யிச்சையெனனுஞ் சத்திததொ

தொழில்கள் பிரிப்பாய்ப் பேதமா யிருக்குமென்று நாம பேசவில்லை, அவை மத்தியத்திற்கு மநந்தஞானமநந்தகிரியை யநந்தவிச்சையெனுமாநந்தியமும் பிரிந்துபின்னமாயிருக்கு மென்றுநாம்பேசவில்லை, தாகப்பிரகாசங்கள் போலப் பிரிப்பின்றிப் பேதமாயிருக்கும் பிரிப்பைக்குறித்த தபேதமாயிருக்கும், ஆகையால் அந்ததொழில்களுக்குக் காரணமாகுஞ் சத்தியேகமாய இச்சாசத்தியென்றும், ஞானசத்தியென்றும், கிரியாசத்தியென்றும், அநந்தசத்தியென்றும் பிரிப்பின்றி,மூன்றனந்த பேதமா யிராநிற்கும் சத்திமானாகிய சிவனும், ஏகனாய இச்சிதாவென்றும், ஞாதாவென்றும், கர்த்தாவென்றும், அநந்தனென்றும் பிரிப்பின்றி மூன்றனந்த பேதமாயிருப்பன அநந்தசத்தி சத்திமானகள் பண்ணுந் தொழில்களுக்குள்,—

இச்சை - நியாமிகை என்னுமிச்சாசத்தி பண்ணுந்தொழில் நாமபேசவில்லை,—

உயிர்க்கருணைசமாகும்-இதிப்படியாம, இதிப்படியா காது, என்பதுமுதல் நியமித்தற் சித்சித்கிருபையாம,—

நாதன -சிவன,—

நன்றெலாம்- கிருத்தியத்துக் கிணங்கும் பொருளெலாம் இதுகாரண மிதுகரண மிதுகாரியம் இது பிரயோசனமென்று,—

ஞானசத்தியால் - ஞானத்தொழிலைப்பண்ணும் ஞானசத்தியால்,—

நயந்தறிவன - விரும்பிப்பார்ப்பன.

கிரியாசத்தித் தொழில் கிரியையாதலால், இதை நான்பண்ணுநிற்கின்றேனென்றுதயோகிப்பன,—

அன்று அருட்கிரியை தனனுல் - கிரியாசத்தியின் றுத்தர

கோடியாயிருக்குஞ் சங்கற்பமித்திரியென்னு மிச்சாசத்தி இஇ படியாகக கடவதெனனுஞ் சஙகறபததால்;—
அகிலமெல்லாம் - சகததனைததும், —
ஆககுவன - சிருட்டிப்பன.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

பராசத்தியாவது, தடையிலா ஞானமெனப் பொதுமை யாசென்றும், இச்சாஞானக கிரியையென வியாபார பேதத் தான மூனறும், அவையே மற்று மவவகககாரியபேதததாற் பல திறப்படும். அமமூனறும் முறையே உயிர்கட்கு மலததைநீககிச சிவத்தையளித்தறகண் ணுளதாகிய கருணையும, அதற்குச் செய் யக கடவதான உபாயஙகளை யெல்லாம அறியுமறிவும, அவற் றை யவவாறே சஙகற்பிததுச செய்யுஞ் சஙகற்பமுமா மெனப தாம்.

"உள்ளியதெல்லாம்" என்றார்போல நன்றெலாமெனபது ஒருமைப்பனமை மயககம்.

நன்மைஉபாயம்.

அன்று அறிநதபோதே யென்க.

இவைநானகு செய்யுளானும், அயன்றனையாதியாக வரனு ருவெனறல் பற்றியும், சத்திபலவாதல் பற்றியும், தானொருவனே முதற்கடவு ளென்றல் செல்லாதெனனும் அநேகேசுரவாதி மத ததனை ஆசங்கித்துப் மறிகரித்து; 'தான்முதல்'என்றது வலியுறு ததப்பட்டது.

---

## நிரம்பவழகியருளா வருமாறு.

பராசத்தி யொன்று இச்சாஞானக் கிரியை யொன்றும் தன்னிற் பின்னமாயிருக்குமோ என்றவனை நோக்கி, மேலருளிச் செய்கிறார்.

ஒன்றதாய் - பராசத்தி யொன்றே யெப்பொழுது முள்ளதாய்த் தான் சகளீகரிக்கு மிடத்து,—இச்சாஞானக் கிரியை யென்றொருமூன்றாகி நின்றிடுஞ்சத்தி - இந்தப் பராசத்திதான் ஆன்மாக்களை யிரட்சிக்கை நிமித்தமாக இச்சாசத்தி யொன்றும் ஞானசத்தியொன்றும் கிரியாசத்தியொன்றும் மூன்று சுபாவத்தை யுடைத்தாயிருக்கும். அதெங்ஙனே யெனின்,—இச்சை யுயிர்க் கருணைசமாகும்-இச்சாசத்தியாலே ஆன்மாக்களுக் கநுக்கிரகம் பண்ணவேணுமென்கிற சிநேகமேயா யிருக்கும்,—நன்றெலா ஞானசத்தியால் நயந்தறிவ னாதன் - அந்தப் பரமேஸ்வரனானவன் ஆன்மாக்கள்செய்த கன்மங்களையெல்லாததையு முறைபிறழாமல் நன்றாக ஞானசத்தியினாலே விரும்பி யறியாநிற்பன —அன்றருட் கிரியைதன்னா லாக்குவ னகிலமெல்லாம் - அநாதியே சுவகாருணியமான கிரியாசத்தியாலே ஆன்மாக்களுக்குக் கன்மத்துக் கிடாகத் தேகாதிப்பிரபஞ்சத்தை யெல்லா முண்டாக்கா நிற்பன்.

இதனாற் சொல்லியது பராசத்தி தானே இச்சாஞானக் கிரியையென்று மூன்றாம். இச்சாசத்தியாலே சர்வான்மாக்களிடத்திலும் அநுக்கிரகத்தைச் செய்தும், ஞானசத்தியாலே ஆன்மாக்கள் செய்த கன்மங்களை யறிந்தும், கிரியாசத்தியாலே ஆன்மாக்கள் செய்த கன்மத்துக் கிடாகத் தேகாதிப் பிரபஞ்சங்களை உண்டாக்கியும்; இப்படி இந்த மூன்று சத்தியும் சிவனுக்குக் கருவியாய் நிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

சத்தியொன்றதாய்-பராசத்தியாவது தடையிலா ஞானமெனப் பொதுமையா னொன்றாய்,—இச்சாஞானக்கிரியையென் றொருமூன்றாகிநின்றிடும் - இச்சாஞானக்கிரியையென வியாபாரபேதத்தான் மூன்றுகூறாயவையே மற்றுமவ்வவ்வக் காரியபேதத்தான் பலதிறப்படும்,—இச்சை யுயிர்க்கருணையமாகும்-அம்மூன்றனு ளிச்சாசத்தியாவது உயிர்கட்கு மலத்தைநீக்கிச் சிவத்தையளித்தற்கண்ணதாகிய கருணையும்,—நன்றெலா ஞானசத்தியால் நயந்தறிவன்-ஞானசத்தியாவது அதற்குச் செய்யத்தக்கவதான வுபாயங்களையெல்லா நயப்பானறியுமறிவும்,—அருட்கிரியை தன்னாலன் றகிலமெல்லா நாதனாக்குவன் - அருளின் வேறல்லாத சத்தியாவது அறிந்தபோதே யவற்றை யவ்வாறே முதல்வன் சங்கற்பித்துச் செய்யுஞ் சங்கற்பமுமாம்.

இவைநான்கு செய்யுளானும் அயனரனையாதியாக அரனுருவெனல்பற்றியும், சத்திபலவாதல் பற்றியும், தானொருவனே முதற்கடவுள் என்றல்செல்லாதென்னும் அநேகேசுரவாதி மதத்தையாசங்கித்துப் பரிகரித்து; 'தான முதல்' என்றது வலியுறுத்தப்பட்டது

---

## மறைஞானதேசிகர் உரை.

மேற் சிவசமவாதி, உமது சிவனுக் கிச்சாஞானக் கிரியைமூன்று முண்டென்றீ ராயின, அம்மூன்று மான்மாவுக்கு முண்டாகையால், அவ்விருவருமொக்குமென்று சொல்ல; அவனை மறுத் துரைக்கிறார்.

சிவனு மிச்சாஞானக் கிரியையாற் சிவனையொப்ப, னுவனென நிடிலநாதி மலமிவற நினைமறைகருங,காவ லனிவன்செய்கனமத் தளவினிற கொடுப்பக்காண்ப ன, பாவியாம் புத்திமுத்திப் பயன்கொளும் பண்பிற றுகும். (௬௪)

(இ-ள) சிவனுமிச்சா ஞானக கிரியையாற் சிவனை யொப்ப னுவ னென்றிடில் — ஆன்மாவுக்கும் இச்சாசத்தி யுளவாதலா ற் சிவனோடு நிகர்வனென்று நீ சொல்லில்?

அநாதிமல மி வற்றினை மறைக கும — இந்த வானமாவினுடைய விச்சாஞானக் கிரியைகளை அநாதியாகிய மலமறைக்கப்படு கையால்,

காவல னிவன செய்கனமத தளவிற் கொடு ப்பக காணபன — கத்தா வானமாக்கள் செய்த கன்மபலத் துக்கீடாக விருவிதமான போகங்களை யே ருமற் குறையாம லவகளைப் புசிப்பியாநிற்ப ன. அதற்கேதியாதெனில்?

பாவியாம் புத திமுத்திப் பயன் கொளும் பண்பி ற்றுகும் — இவன் றனக்கென வொரு சுதந்தரமில் லாதவனுகையாற றனுப் போகமோட்ச ங்களை யறிந்து கொள்ளு முறைமையில்லை யாகையாற் சிவனுக் கிவனெவ்வகே யொப்பெ னறபடி. எ-று.

இற்றுகும் எ - து. வலித்தவழி மெலிக்கும் வழியாகிய முறைமையால் இனறுகு மென்றகாம்.

இதற்குப் பார்சசிபை பெணவறிக. (௬௮)

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

———o———

மேல் பரமேஸ்வரனு மானமாவும ‡ ஸ்வாமி பூத்யபாவ மெனப துணாக்துதல்.

‡ ஸ்வாமி பூதயபாவம் - ஆணடானடிமைததிரம்.

சிவனுமிச்சாஞானக கிரியையாற சிவனையொப்ப னுவனெனறிடில்-ஆனமாவுமிச்சாஞானக கிரிபாவானுகையாலே சிவனுககுச சரியாகையால் ஸவதநதரனுவனெனறு சொல்லில்?—அநாதிமல மிவரறிவினை மறைககும - அநாதியே அஞ்ஞானமானது ஆனமாவினுடைய இச்சாஞானக கிரியைகளைத தகைநதுகொணடிருககும,—காவலனிவனசெயகனமத தளவினிறகொடுபபககாணபன - ரக்ஷிதாவான சிவன, இநத ஆனமாபணணின கர்மாநுகுணமாக ஞானததைப பரகாசிபபிகக அநதப் பிரகாசிதமான ஞானததினலே விஷயஞாதாவாவன,—பாவிபாம புததிமுததி படைகொணும்பணிபிரனுககும - உணடாவதான போக மோக்ஷமாகிய புருஷார்ததததைச சிவன கொடுகக அநுபவிககு முறைமையாவது, சிவன ஸ்வதநதரனுன ஸ்வாமியும, ஆனமா ஈஸ்வராக்ஞெ வயாபாரனுகிய பூத்யனுமாம எனறிதன் பொருள

பூத்யன் என்பதற்குப் பொருள வேலைசெய்து கூலி பெறுவதாகையால், இவ்விடத்து ஆனமாச் செய்கிற கன்மமே வேலையும், அநத கனமாநுகுணமாகச் சிவன கொடுக்கும் பலமே கூலியுமென வறிக.

# ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

முற்பக்ஷம் ஞானக்கிரியேச்சாவான சகத்கர்த்தா வென்று சொன்னீர், புருஷனும் ஞானக்கிரியேச்சாவா னாகலால், அவனே கர்த்தாவாகட்டும், அப்பிரத்தியட்சமா யிருக்கு மீசுரன் வேண்டுவ தில்லையென்று மீமாஞ்சகன் சொல்ல, மறுத் துணர்த்துகிறார்

சீவனும் இச்சாஞானக் கிரியையால் சிவனை யொப்பனாவ னென்றிடில் - விசுவகர்த்தா வாவனென்னில்? விஞ்ஞானகலப் பிரளயாகலாவத்தைகளிலே அநாதிமலம்,—இவற்றினை - இச்சாஞானக் கிரியைகளை,—மறைக்கும் - தன்வசமாகப் பண்ணும்,—ஆகையால் அவர் இருவரும் கர்த்தாக்களன்று, சகலன் கர்த்தாவென்னில்?—காவலன் - சிவன்,—அவன் செய் கன்மத் தளவினில் - அந்தச் சகலான்மா பண்ணின கன்மத்துக்கீடாய்ப் பரிமிதமா யிச்சாஞானக் கிரியைகளை,—கொடுப்பக்காண்பன் - ஏகதேசத்திற் கலைகொண்டு விளக்க, அகப் பராக்காயிருக்குஞ் சிற்சத்தி விர்த்திரூப விச்சாஞானக் கிரியைகளைக் கொண்டு பதார்த்தங்களையும், பிரத்தியக்ஷாய்த் தானிருக்குஞ் சிற்சத்தி விர்த்திரூப இச்சாஞானக் கிரியைகளைக்கொண் டந்த இச்சாஞானக் கிரியைகளையும் பார்ப்பன.— பாவியாம் புத்திமுத்திப் பயன்கொளும் பண்பிறகும் - வருவதாம் போகமோக்ஷ பலமடையு முறைமையறுவன

சத்தியம்! இஃதிருக்க முத்தான்மா சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்துவ சியத்துவாபி வியத்தியினாலே, சிவனோடே முற்றுபமனாதலால், அவன்போல விசுவகர்த்தா வாகட்டுமென்று சிவசமவாதி அநேகேசுரவாதி முதலோர் செப்புவார்கள்; அஃதறிவி

ணமை. சிவனநுக்கிருபா சங்சித்த பஞ்சகிர்த்தியத்தோ டியின்று வர்ச்சனீய சங்சித்த பஞ்சகிருத்தியாதி காரண முதலென்று ரேலுதரிக்கையால் விசுவகர்த்தாவன்று; சிவனே விசுவகர்த்தா.

## சிவஞானயோகியருரை வருமாறு.

---0---

இச்சை முதலிய மூன்றும் முதல்வனோடொப்ப உயிர்க்கு முளவென்பது மாத்திரையேபற்றி, உயிர்களும் முதல்வனோ டொக்கும் போலுமென மலையற்க. இவை அவைபோலன்றிக் கேவலத்தின் மூலமலத்தான் மறைபடுதற்குரிய தன்மையும், சகலத்திற் கன்மத்தளவின ஏகதேசப்பட்டு நிகழ்தற்குரிய தன்மையும், அக்கன்மத்தால் வரக்கடவதாகிய போகப் பயன்போலச் சுத்தத்தின் அதனின் வேறாகிய முத்திப் பயனும், முதல்வன் கொடுப்பவே கொள்ளு முரிமைத்தன்மையும் உடைமையான், இத்தன்மைகளில்லாத முதல்வனுடைய இச்சாஞானக்கிரியைகளோடு இவற்றிடை வேற்றுமை பெரிதாகலின் என்பதாம்.

பண்பு தன்மை.

பாவி வடசொல்.

புத்திபோலென்னுமுவமவுருபு விகாரத்தாற்றொக்கது.

இங்ஙனமுணராதார் கன்மத்தளவினிற் கொடுப்பக் காண்டலே புத்திப் பயன்கோடலென்ப துணர்ந்திலர்.

இதனானே, சிவசமவாதிமதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து, மேலது வலியுறுத்தப்பட்டது.

அற்றாயினும், ஆகமங்களின இரயசிவன் போகசிவனஅதி காரசிவனெனச் சிவப்பனமை கூறுதலின்; தானமுதலென்று ஒரு பொருண்மேல் வைததோதுதல் அமையாதுபோலுமெனின், அஃதுணர்த்துதற்கன்றே வருஞ்செய்யுட்க ளெழுந்தனவென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—()—

இப்படிச் சிவனுக்குண்டான இச்சாஞானக கிரியை மூன்றும் ஆன்மாவுக் குண்டாகையால், ஆன்மாவுஞ் சிவனுக் கொப்பனென்று சமவாதி சொல்ல; அவனைமறுத தருளிச செய்கிறார்.

சிவனுமிசசாஞானக கிரியையார் சிவனையொப்ப னுவனென்றிடில் - ஆன்மாவுக்கு இச்சையு மறியுந்தொழிலு முடையனுதலாலே இவனும் சிவனுக் கொப்பாவானென்று நீ சொல்லில்? ஆன்மாவினுடைய இசசாஞானக் கிரியைகள் சிவனுடைய இச்சாஞானக் கிரியைகளைப்போலல்ல. அதெப்படி யெனனில்?— அநாதிமல மிவற்றினைமறைக்கும் - ஆன்மா வுள்ளவனறே அநாதியாயுள்ள ஆணவமலம் இவனுடைய விசசாஞானக கிரியைகளை அக்கினியைக் காட்ட மறைததாற்போல மறைததுக்கொண்டு நிற்கும். இதுவனறியும்,—காவலனிவனசெய் கன்மத்தளவினிற கொடுப்பககாண்பன பாவியாம்புததி - காததாவானவன ஆனமாக்கள் செய்ச கன்மத்துக் கீடாகத் தன்னுடைய இச்சாஞானக் கிரியைகளைககொண்டே ஆணவமலததை பொதுக்கி இவனுடைய இச்சாஞானக் கிரியைகளை எழுப்ப எல்லாத்தையும் அறிகத பொருந்தி தனக்கு முறைமையான போகங்களைப்புசிப்பன்,—முத்திப்பயனகொளும்பண்பிற்றுகும்-மோ

டசத்திலுள்ள பிறையோசனங் கொள்ளு முறைமையு மித்தனமை

'காவலனிவனசெய் கனமக் தளவிற் கொடுப்பககாண பன' எனறது, ஆனமா சிறறறிவுடைமையால் இவனுடையவிசசாஞானக கிரியைசகுப பேரறிவுணடாகாதெனபது கருதது

இங்ஙனம சமவாதியை மறுததகற்குப் பிரமாணம். சங்கற்ப நிராகரணம, "அவனிவனாகி யிவனவனசெய்தி, யெனறு செய்வானெனறியமலததா, வெல்லாமறிதல்செல்லா தயிர்கள, சிறறறிவெனுமிசசொற்றவருகும" எனனுமதனுங் கணடுகொளக

இதனாற் சொல்லியது ஆனமாவுககு இச்சாஞானக கிரியைக ளுணடாயினு மலததினாலே மறைககப்படுகையினால இவனுடைய இசசாஞானக கிரியைகளுககுச சிற்றறிவொழிநது சிவனுடைய விசசாஞானக கிரியைகளுககுள்ள பேரறிவுண்டாகாதெனறு மாகையால்; சிவனும ஆனமாவும் தனனிற் சமமல்ல வென்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

இச்சாஞானக்கிரியையால் - இச்சாஞானக்கிரியை மூனறும்,—சிவனை யொப்பனவென சிவனுமெனறிடல்-முதல்வனோடொப்ப வுயிர்க்கு முளவெனபது மாத்திரையேபற்றி யுயிர்களு முதல்வனோடொக்குமபோலுமெனமலைபற்க,—அநாதிமல மிவற்றினை மறைக்கும்-இவையவைபோலனறிக் கேவலததின் மூலமலத்தான மறைபடுகறறுரிய தன்மையும்,—காவலனிவன்செய் கனமத்தளவினிற் கொடுப்பக்காண்பன்-சகலத்தின முதல்வனிவன செய்கனமத்தளவிறகேற்ற பயனளிததலி னேகதேசப்பட்டு

நிகழ்தற்குரிய தன்மையும்,—பாவியாம்புத்தி - அக்கன்மத்தான் வரக்கடவதாகிய போகப் பயன்போல,—முத்திப் பயனைகொ ளுமபண்பிற்றுகும் - சுத்தத்தி னதனினவேறுகிய முத்திப்பய னை முதல்வனகொடுப்பவே கொள்ளுமுரிமைத்தன்மையு முடை மையான, இத்தன்மைகளில்லாத முதல்வனுடைய இச்சாஞா னகிரியைகளோ டிவற்றினவேறறுமை பெரிதாகலின எ-ம்.

இதனுனே சிவசமவாதி மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரி த்து மேலது வலியுறுத்தப்பட்டது

---

## மறைஞானதேசிகர் உரை.



சிவ னிச்சாஞானக் கிரியா சொரூபனென்பதனை யுணர்த்தி மேற் சுத்தமாயா காரிய முணர்த்துகிருர்,

ஞானமே யானபோது சிவனெருறின் ஞானமோ
கஇ, லினமில் சதாசிவனபே ரீசனுந தொழிலதேயி,
ஞானமேற கிரியைவித்தை யொளி சிவ னிலயபோக,
மானபே ரதிகாரத்தோ டதிகர ணத்திறுமே. (சுரு)

(இ-ள)ஞானமே கர்த்தாக் கேவலஞான ரூபமாகவே யிரு யான போ ககிரு னப்பொழுது சிவதத்துவமெனப் பெ து சிவம் ரும்.

இந்த ஞானசத்தியான தவனுடனே யிரண்டற வக்கினிக் கு வெம்மைபோலப் பிறிவறறு நிறறலாற் பிறித்துச் சத்தி தத்துவமெனக் கூறிற்றிலர். அஃது சிறுபானமை பெரும்பா ன்மையாகவே ஞானமெனனவே யொழிபினுல் கிரியையான போது சத்திதத்துவ மெனபாரு முளர்.

| | |
|---|---|
| தொழின் ஞா னமொக்கி லீன மில் சதாசிவன பேர் | ஞானசத்தியுங் கிரியாசத்தியுமா மிரண்டு மொத்த வவதரஞ் சாதாக்கிய தத்துவமெ னப் பெறும். |
| ஈசனுந் தொ ழி லேறின | ஞானங்குறைந்து கிரியையேறிய வவதர மீசுரதத்துவமெனப் பெறும். |
| ஊனமேற்கிரி யை வித்தை | கிரியைகுறைந்து ஞானமேறின வவதரஞ் சுத்தவித்தை யெனப் பெயர்பெறும். |

பெயரொனபது முற்றுங் கூட்டுக.

| | |
|---|---|
| ஒளிசிவ னில ய போக மான பே ரதிகாரத் தோ டதிகரண ததினுமே. | ஞானப் பிரகாசமே திருமேனியாகவுடை ய சிவன, இலயியெனவும் போகியெனவும் ம திகாரியெனவும், சிவன சதாசிவன் மகேசுர ராக விம்மூவருங் கிருத்தியங்களுக் கேற்ப ப் பெயர்களைப்பெற்று; அந்தந்த கிருத்திய ங்களை நடத்துவர்கள். எ-று. |

அதிகரணமென்பது - வடமொழி. அஃதாவது ஒருவரைப் பரமசிவ னதிட்டித்தல்.

இலயியென்பதனாற் சிவதத்துவமுஞ் சத்தி தத்துவமுமாக விரண்டு மடங்கும்.

போகியென்பதனாற் சதாசிவ தத்துவ மடங்கும்.

அதிகாரியென்பதனாற் சுத்தவித்தையு மீசுரமு மடங்கும்.

ஆக வைந்து மூன்றிலடங்குமென வறிக.

இவனைச் சத்தனெனவும் உத்யுத்தனெனவும் பிரவர்த்தனெனவும், ஈசர் சதாசிவன் சாந்தனெனவும், ஆகமங்களிற் கூறும்; ஆண்டாண்டு வந்துழிக் காண்க.

உருத்திர னிலயபோகமெனப் பாடமோதிற் பரமனிட்பெ

யர்க் கர்த்தமன்றென வறிக. சிவனுக்கே யிலயமுதலிய கிருத்தியங்க ளுரியதெனவறிக. ஆதலா லுருத்திரனெனபதுகூடாது.

அனுசதாசிவனுக்கு மலமுண்டாதலா லீனமில் சதாசிவனெனச் சிறப்பித்தார்.

இந்தச் சிவதத்துவத்தைப் பரமகாரணமென்றும் நித்தியமென்றும் மாமாயையென்றுஞ் சொல்லுவர்கள்

இதற்குப் பௌட்கரத்தும் சிந்திய விசுவசாதாக்கிய மென்னு மாகமத்துங் காண்க. (௬௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் கர்த்தாவுக்குச் சத்திபேதத்தால் மூர்த்திபேத முணர்த்துதல்

ஞானமேயானபோது சிவன்—ஞானஸ்வரூபமேயாய்நின்றபோது சிவனென்னு நாமம்,—தொழில்ஞானமொக்கி லீனமில்சதாசிவனபேர் - ஞானக்கிரியை சமமாய் நின்றபோது சதாசிவனென்னும் பெயராம்,—ஈசனுக்குத்தொழிலதேறின - கிரியை யதிசமாகில் ஈஸ்வரனென்னும் பெயராம்,—ஊனமேற் கிரியைவிகதை யுருத்திரன - கிரியைக்குறையில் சுத்தவித்யாதி பதியான ருத்ரனென்னும் பெயராம்,— இலயபோகமான பேரதிகாரத்தோ டதிகாரணத்தனுமே- லயபோகாதிகாரஸ்தானமான பரநாதம் சாதாக்கியம் மஹேஸ்வரமெனனும் ஸ்தானங்களை யதிஷ்டித்துக்கொண்டு க்ருத்யங்களைப் பண்ணுவர் என்றதனபொருள்.

இவ்விடத் திச்சாசத்தியைச சொல்லாதிருந்தது ஞானக்கிரியை யுள்ளவிடத்தில் இச்சாசக்தி சித்தம். மூன்றிடத்திலு மிச்சாசக்தி யுண்டாயிருக்குமென வறிக.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

*சிவசத்திக்கி லயதத்வம், போகதத்வம், அதிகாரதத்வ முதலிய பேர்வருமா றுணர்த்துகின்றது*

*ஞானமே யானபோது* - சிவனது கிரியாசத்தி மகாமாயையிலே மகாப்பிரளயத்திலே மகாமாயா காரியமெல்லாமொடுக்கி யொழிந்ததாய், ஞானத்தொழில் மாத்திரத்தைப் பண்ணி ஞானசத்தி ரூபியாயிருந்துள்ளளவில்,—*சிவன்* - சிவதத்துவமென்றும் லயதத்துவமென்றும் சுத்ததத்துவமென்றும் நிஷ்களதத்துவமென்றும் பேர்பெற்றுநிற்கும்,—*தொழிலை ஞானமொக்கில்* - திரும்ப மகாமாயாகாரியப் பிரசவாபிமுகியாகிய சிர்த்தியத்திலே யுத்தியுத்தையா யிஃதிப்படியா மிஃதிப்படியாகாது இதுகாரண மிதுகரண மிதுகாரிய மிதுபிரயோசனமெனுமிச்சாஞானத்தைப்பண்ணு மிச்சாசத்தி சவிகற்ப ஞானசத்தியிற் பின்னிணை நானப்பண்ணு நிற்பேனென்று ஞானக்கிரியாத்தொழிலொத்த கிரியாசத்தித் தொழிலைப்பண்ணிக் கிரியாசத்திரூபியாயிருந்துள்ளளவில்,— *ஈனமில சதாசிவன்பேர்* - ஒத்த சதாசிவதத்துவமென்றும், போகதத்துவமென்றும், உத்தியுக்தத்துவமென்றும், சகள நிஷ்களதத்துவமென்றும் பேர்பெற்று நிற்பன.—*தொழிலதேறில்* - திரும்ப மகாமாயாகார்யோற்பத்தியிலே பிரவிர்த்தியாய், இப்படியாகக்கடவதென்று கிரியாத்தொழிலேறி ஞானத்தொழில்குறைந்த சங்கற்ப விசாரதொழிலைப்பண்ணி யிச்சாசத்திரூபியாயிருந்துள்ளளவில்,—*ஈசனும்* - ஈசுரதத்துவமென்றும், அதிகாரதத்துவமென்றும், பிரவிர்த்திதத்துவமென்றும், சகளதத்துவமென்றும் பேர்பெற்றுநிற்பன,—*ஊனமேற்கிரியை* - அந்தவிச்சைக்குத்தானே ஞானமேறிக்கிரியை குறைந்தகாலையில் அந்தவிச்சாசத்திரூபியா யி

ருந்துள்ளளவில்,—வித்தை - வித்தியாதத்துவமென்றும், தூ லவீசுரதத்துவம் தூலாதிகாரதத்துவம் தூலப்பிரவிர்த்தித்த துவம் தூலசகளதத்துவ மென்றும் பேர்பெற்று நிற்பன,— உருத்திரன்,—சிவன் - இப்படிச் சமவேதசத்தியிற் பிரிப்பின்றி ப் பேதமாய்த் தோற்றும்,— இலயபோகமான பேரதிகாரத் தோடுகூடி அதிகரணத்தனுமே - சமவேத சத்தியென்னு மிருப்பு டையனாய்க்கொண்டந்தச்சத்தி யிருப்புத்துவாரத்தினாலே ம காமாயா பரிக்கிரகசத்தியென்று மிருப்புடையனுமே!

ஆதலால், சிவனுஞ் சிவனென்றும், இலயனென்றும், சத்த னென்றும், நிஷ்களனென்றும், சதாசிவனென்றும், போகனெ ன்றும், உத்தியுக்தனென்றும், சகளநிஷ்களனென்றும், ஈசுர னென்றும், அதிகாரனென்றும், பிரவிர்த்தனென்றும், சகளனெ ன்றும் பன்னிரண்டுபேரும் முறைமையிற் பெற்றுநிற்பன சத்தத் தனமாகிய மகாமாயையும் சிவதத்துவமென்பது முதல் சக ளதத்துவமென்பதீறாகச் சத்திபோலப் பன்னிரண்டுபேரு மு றைமையிற் பெற்று நிற்குமென்பதறிக.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற்கூறிப்போந்த சிவசத்தி மூன்றனுள் யாண்டுமொரு பெற்றித்தாய் வியாபரிக்கும் இச்சையையொழித்தொழிந்த ஞா னங்கிரியைகளிரண்டும் தனித்தனி வியாபரித்தலானும், ஒத்து வியாபரித்தலானும், தம்முளேறிக் குறைந்து வியாபரித்தலானு ம்; சிவஞ் சத்தி சதாசிவம் மகேசுரஞ் சுத்தவித்தையென்று ஐ வகைப்பட்டு, இலயம் போக மதிகாரமென மூன்றுமடங்கு மவ த்தைகளையும், அவத்தைக்கேதுவாய் அங்ஙனம் வேறுபட்ட

ஆகாரங்களையுமுடையனாய். உருத்திரனொருவனே அவ்வப்பெயா பெற்று நிற்பனெனபதாம்.

உருசதிரனொ'ன வினையும்.

ஈணடு உருததிரனென்றது மாசங்காரக் கடவுளாகிய பரமசிவனே, அவனுககும் உருததிரனெனனும பெயருணமையின அவவிலயபோகமெனச் சுட்டு வருவிததுரைகக.

ஆனபோ தெனபதனையும் பிரிநிலையேகாரத்தையுந் தொழிலெனபதனேடுங் கூட்டுக

பின வநத ஞானஞ சத்திககுப் பரியாயப்பெயராய நினறது.

ஒககிலெனபதற்கு இவ்விரணடுமென எழுவாய் வருவித துரைகக.

பேரீசன் மகேசனெனனும் பொருட்டு

ஆதாரம அதிகரணமெனபன ஒருபொருட் கிளவியெனப து மேலுமுரைததாம; கடைப்பிடிகக

அற்றேல், அவவிலயபோகவதிகாரஙகட்கு ஏதுவாய் நின அதிகரணஙகளியாவை, அவற்றியல்பெனனையோவெனின ? அது வருஞ செய்யுளிற் கூறப்படும.

## நிரம்பவழகியருரை வருமாறு.

இநத இச்சாஞானக கிரியைகளை சிவகத்துவம் ஐர்கையும் பொருநதி, இலயபோகததி லதிகாரமாக அதிட்டித்துககொண்டு, சிவனுககுத திருமேனியா யிருக்குமென்ற மாணுக்கனை நோக்கி, மேலருளிச் செய்கிறார்.

ஞானமேயானபோதுசிவம் – ஞானசத்திபொன்றுமேயாய் நிற்கிறவவுதரம் சிவதத்துவமாம். எனனவே கிரியையேயா

னவவதரம் சத்திதத்துவமாம்.—தொழில் ஞான மொக்கி லீ னமில் சதாசிவம் - இந்த ஞானக்கிரியைக ளிரண்டுந் தனவி லொத்த வவதரம குறறமில்லாத சாதாக்கிய தத்துவமாம்.—பேரீசனுந்தொழிலகேறில் - ஞானங்குறைந்த கிரியையேறின வவதர மகேஸ்வரனும—ஞானமேற்கிரியைவிதகை - கிரியைகுறைந்து ஞானமேறின வவதரம சுத்தவித்தை இந்தச் சிவதத்துவங்க ளைந்தும சிவனுக்குத் திருமேனியாய் நிற்கிற முறைமை யருளிச்செய்கிருர்.— உருத்திரநிலயபோக மானபேரதிகாரத் தோடதிகாரணத்தனுமே - சிவனுக்குச் சிவமுஞ் சத்தியும நிட்களமாயுள்ள திருமேனி, சதாசிவம் சகள நிட்களமாயுள்ள திருமேனி, ஈஸ்வரனு முருத்திரனுமான விரண்டு மிக்கவதிகாரத்துடனே கூடியிருக்கிற கரசரணங்களோடே கூடியுள்ள சகளமான திருமேனியாம்

பேரீசனுந தொழிலதேறி னென்றது தத்துவங்களுக்குந தத்துவ கர்த்தாக்களுக்கும் பினனமில்லை யென்றெனக் கொள்க.

இதனாற் சொல்லியது சுத்தமாயையிற் ருேன்றின தத்துவங்களுக்கும் தத்துவ கர்த்தாக்களுக்கும பினனமில்லை யென்றும. இந்தத் தத்துவங்கள் இச்சாஞானக் கிரியா சொரூபமாயிருக்கிற சிவனுக்குத் திருமேனியாயிருக்குமென்னு முறைமையும அறிவித்தது இதற்குப பிரமாணம், தத்துவவிளக்கம். "போற்றும்பரத்திற் பொதிகின்றஞானம்கிரியையொத்தத்,தோற்றுஞ்சதாசிவ முன்னதஞானங் கிரியைகுன்றிற், றேற்றிபவித்தை யவத்தினதிவு பகேசனமையால், மாற்றுஞ்சிரபுரத் தெங்கோனெறியில் வகுத்தனரோ." எனனுமதுங் கண்டுகொள்க.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(மேற்கூறிப்போந்த சிவசத்தி மூன்றனுள் யாண்டு மொருபெற்றித்தாய் வியாபிக்கு மிச்சையொழிந்தது,ஒழிந்த இரண்டினுள்) ஞானமேயானபோது சிவனும் - ஞானமேயாய் வியாபிக்கிற சிவமெனவும்,—தொழிலஞானமாம் - கிரியையாய் வியாபிக்கிற சத்தியெனவும்,—ஒக்கிலீனமில் சதாசிவனும - ஞானங்கிரியையிரண்டு மொத்துவியாபிக்கிற சதாசிவமெனவும,—தொழிலதேறிற பேரீசனும் - ஞானங்குறைந்து கிரியையேறின மகேசுரமெனவும்,—கிரியை யூனமேல் வித்தையாம - கிரியை குறைந்து ஞானமேறிற் சுத்தவித்தையெனவும ஐவகைப்பட்டு,—இலயபோகமான பேரதிகாரத்தோடு - அவ்விலயபோகம பெரிதாகிய அதிகாரமென மூன்றுமுடனாகு மவத்தைகளையும,—அதிகரணத்துருத்திரனும் - அவத்தைக்கேதுவா யங்ஙன மவேறுபட்ட ஆதாரங்களையு முடையனும் உருத்திரனொருவனே அவவப்பெயாபெறறு நிறபனெனபதாம.

---

## மறைஞானதேசிகர் உரை.

—o—

இந்தச் சூத்திரத்துவங்க ளைந்துஞ் சிவனுக்குத்
திருமேனியென் றுணர்த்துகிறார்

வித்தையோ டீசர்சாதாக் கியஞ்சத்தி சிவங்களைந்துஞ்,
சுத்தத் துவஞ்சிவன்றன் சுதந்தர வடிவமாகு,
நித்தமென் றுரைப்பர்கால நீங்கிய நிலைமையாலே,
வைத்திலா முறைபிறப்பு வருவித்தார் கருமத்தாலே. (௬௬)

(இ-ள்.) வித்தை சுத்தவித்தை யீசுரஞ் சாதாக்கியஞ் சத்
யோ டீசர் திசிவமெனனு மிவவைந்துஞ் சுத்தமாயை

சாதாக்கியஞ்சத்தி சிவங்களாந்து சுத்ததத்துவஞ் சிவன்றன் சுதந்தர வடிவமாகும்

யிற் றோற்றியதாதலாற் சிவனுக்குச் சுதந்தர விக்கிரகமதாகும்.

நித்தமென்றுரைப்பா காலநீங்கிய நிலைமையாலே

அந்தச் சிவதத்துவமானது காரியமின்றி மாயையைப்போல நிற்றலால் அறிவாளுபாகதோர் அதனை நித்தியமென்று சொல்லுவார்கள்.

வைத்திலர் முற்பிற்பாடு

இவை சத்தியினது கிரியா பேதத்தாற் றோற்றியதாதலால் வியாதிருக் கடைவுபற்றித் தோற்றஞ் சொல்லப்பட்டதில்லை

ஆனாற் சொல்லுவானேனெனின்?

வருவித்தார் கருமத்தாலே.

காரியப்பாட்டினாலே முறைபிறழாமற் கூறியதெனவறிக.

சிவதத்துவத்தை முதற்கட் கூறாது சுத்தவித்தையைக் கூறியதெனனெனின்? தலைதடுமாற்றமென்னுந் தந்திர உத்தியாற் கூறியதெனவறிக.

சுதந்தரமென்பது-வடமொழி

அஃதாவது.—சுவம், தான, தந்தரமென்பது-தொழில்; ஆதலாற் சுத்தமாயாகிருத்தியமெல்லாஞ் சிவசிருட்டியெனவறிக.

இதற்கு மதங்காகமம்.      (சுசு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் மூர்த்திலக்ஷண முணர்த்துதல்.

வித்தையோடீசர சாதாக்கியஞ் சத்தி சிவங்களென்றும் சுத்தத்தத்துவம் - சுத்தவித்தை ஈஸ்வரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்று சொல்லப்பட்ட வைந்தும் சுத்தமாயையிற் றோற்றப்பட்ட தத்துவங்கள் —சிவன்றன் சுதந்தரவடிவதாகும் - சிவன்றானே சுத்தமாயையிலே யுதிப்பித்து அதிலே அநுப்பிரவிஷ்டமாம் விக்கிரஹம், —நித்தமென் றுரைப்பர் காலங்கடந்த நிலைமையாலே - காலாதீதனான சிவனுக்கு அதிஷ்டேயஸ்தான மானதுகொண்டும் அசுத்தமாயா காலத்தினால் அபரிச்சேத மாகையாலும் நித்தமென்றுஞ் சொல்லுவார்கள், —வைத்திலா முற்பிற்பாடு வருவித்தார் கருமத்தாலே - இந்தப்பஞ்சதத்துவங்களுக்கும் கருத்தியபேதமாதி முற்பிற்பாடு அல்லது, வஸ்துத முற்பிற்பாடில்லை

தத்த்வம் தத்வப்ரகாசே — வஞ்ஞாநாக்யே வ்ருஷா ஞஹ்ரிக் ஜாஸ்த்ஹ காஹித்வாக் வ்ரா வா ஙவ ஶாஷாம் விஹிதாவ கஷு நாஶாஹஸ்தி.

சிவதத்துவம் சத்திதத்துவமிரண்டும் சிவனுக்கும் சத்திக்கும் அதிஷ்டேய ஸ்தானமாயிருக்கும், சாதாக்கிய தத்துவம் சதாசிவதத்துவத்திற்கு அதிஷ்டேய ஸ்தானமாயிருக்கும், ஈஸ்வரதத்வ மஹேஸ்வரனுக்கு அதிஷ்டேயஸ்தானமாயிருக்கும், சுத்தவித்தை ருத்ரதேவருக்கு அதிஷ்டேய ஸ்தானமாயிருக்கும் என்றதன் பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இப்படிச் சத்திதத்துவத்தைச் சிவதத்துவத்தோடொக்கியிருத்தலாற் காரணசிவதத்துவமுமைந்தெனக் காணப்பித்துக் காரியசிவதத்துவமுமைந்தெனக் காணப்பிக்கின்றார். காணப்பிக்குமிடத்துக் காரியசிவதத்துவமைந்துஞ் சிருஷ்டமென்றுஞ் சிருச்சியமென்று மிருவிதமாம்.

சிருஷ்டமாவது சிருச்சிய சிவதத்துவமைந்தையும் பற்றிப் பரிணதித்துச் செய்யப்பட்ட பண்ணியங்களாலும், தனதிடத்தில் விரித்த பரிணதி விவர்த்தமென்றியன்ற பிரிப்பில்லா வைந்து பேதமான தனது வியாபார பேதத்தினாலும் அப்படிப் பிரிப்பில்லா வைந்துபேதபின்னமாகிய சிவசத்திப்பஞ்சகமுஞ் சிவபேதமாகும்.

சிருச்சிய சிவபேதத்துவமாவது 'வித்தைகள் வித்தையீசர்' என்ற விருத்தத்தாற் கூறிய மகாமாயா பரிணதிபேதப்பிரிப்புள்ள வைந்து பேதபின்ன சிவதத்துவமாகும்.

அந்தச் சிருட்டமுஞ் சிருச்சிய மிரண்டனுள், சிருச்சியம் 'வித்தைகள்' என்ற விருத்தத்தால் முன் சொல்லப்பட்டபடியால், சிருட்ட சிவதத்துவமாத்திரஞ் செப்பிக் காணப்பிக்கின்றார்.

வித்தையோடீசர் சாதாக்கியஞ் சத்தி சிவங்களைந்துஞ் சுத்ததத்துவஞ் சிவன்றன் சுதந்தர வடிவமாகும்- இந்தச் சிருஷ்ட சிவதத்துவமைந்துஞ் சமவேத சத்திரூபமாதலால், சிவனுக்குச் சிறந்தசரீரமாக வுபசரிக்கப்பட்டது,—முன் சொன்ன சிருச்சிய சிவதத்துவம் பரிக்கிரக சத்தி ஸ்வரூபமாதலாற் பொதுச்சரீரமாக உபசரிக்கப்பட்டது, இந்தச்சிருஷ்ட சிவதத்துவமைந்தும்,—காலநீங்கிய நிலைமையாலே-விர்த்தி பரிணதி விவர்

தத ரூபமில்லாமையாற் காலவரையறையைக் கடந்திருத்தலா ல் பெரியோர்,—நித்தமென றுரைப்பர் - நித்தியமென்று சொலலுவாாகள. அதனால்,—முறபிற்பாடு வைததிலா - முனபின னெனகினறது சொல்லார். ஆகிற் சொல்லுவானேன?—வருவி ததார்கருமததாலே - சிருசசிய சிவதததுவததைப பறறிய சிவ சததி வியாபாரக கிரமததால் சொனனாாகள.

இதனாற் சிருசசிய சிவததுவ மகாமாயா பரிணதிரூபமா யசசுததகாலவரையறைக குளளாதலால், அநித்தியமெனறும முனபினனெனறும சொல்லபபட்டது.

சிருஷடம சிருச்சிய மிரண்டுககும் பொதுவாகுஞ சிவதத துவமுஞ, சததிததததுவமுஞ, சிவததுவமெனறும, லயதத துவமெனறும, சுததததுவமெனறும, நிஷகளததத்துவமென றும, காரண சிவததுவ சததிததததுவப் போபெறறு, கார ணவிலய போகாதிகாரஙகள மூனறினுள ளிலயததுககுக கற பிககப்பட டிலயததடஙகும.

சதாசிவததுவம - சதாசிவதத்துவமெனறும், போகதத துவமெனறும், உததிபுததததததுவமெனறும, சகளநிஷகளத ததுவமெனறும், காரணசதாசிவ ததுவததுககுரைதத பேர் பெறறுப் போகத்துககுக் கறபிககபபட்டுப போகததடஙகும

ஈசுரதத்துவஞ் சுததவித்தியா ததுவததோடுகூட ஈசு ரததுவமெனறும், அதிகாரததுவமெனறும, பிரவிருததத துவமெனறும், சகளததுவமெனறும், காரணவீசுர தததுவ ததுககுரைதத பேர்பெற்று அதிகாரததுக்குக் கற்பிககபபட் டதிகாரததடங்கும.

ஸ்ரீ மதஙகாதிகளிற் சத்திதத்துவம் போகத்திலும், சதா சிவததுவ மதிகாரததிலுமடங்குமென்று சொல்லியது மறிக.

காரியசிவனு மிதனோடு பொருந்திச் சிவனென்பதாதியாய்ச் சகளனென்பதந்தமாய்க் காரண சிவனுக்குரைத்த பேர்பெற்றாக் கிரமத்திற் காரணவிலய போகாதிகாரங்களுக்குக் கற்பிக்கப்பட்டுக் காரணவிலயபோகாதி காரங்கட் குள்ளடங்குவன.

இம்மூன்றும் பொன்பதா யிருக்கின்ற காரிய இலயபோகாதிகாரங்கள் காரணாதி காரத்துட் கற்பிக்கப்பட்டதறிக

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

அவ்வ வியாபாரங்கட்கு இடமாய் ஐவகைப்பட்டு மேற்கூறிப்போந்த அவ்வப்பெயரே பெயராக வுடையனவாறு சுத்தத்துவ மைந்தும், அவ்விறைவனுக்குச் சுதந்திரமாகிய வதிட்டானமாம். முன்பின்னாக நிகழும் ஞானசத்தி கிரியாசத்திகளின் வியாபாரபேதம்பற்றி இவற்றிற்கு முற்பிற்பாடு கூறப்படுனும, இவைவந்து தோன்றிய பின்னர்த் தோன்றுவதாய காலதத்துவம் இவற்றது தோற்றத்திற்கு ஏதுவாகாமையின், காலம்பற்றி முற்பிற்பாடு கூறுதல் செல்லாது; காலவரையறையைக் கடந்து நிற்றலால் அதுபற்றி இவை சிவனுக்கு நித்திய வதிட்டானமெனவுரைக்கப்படுமெனபதாம.

அநந்ததேவர் முதலியோர் வாயிலாக நின்றதிட்டிக்கப்படும் ஏனை மாயையம் போலன்றித் தானே யதிட்டிக்கப்படுதலின் இவை சுதந்திர வடிவமெனப்பட்டன.

அதிட்டானத்தை வடிவமென் றுபசரித்தார்.

தோற்றக்கேடுக ளுடையனவாய் தத்துவங்கள் இறைவனுக்குச் சுதந்திரவடிவமாமாறு யாங்ஙனமென்னுங் கடாவை

யாசங்கித்து நிகதமென் றுரைப்பரென்றும், நித்தமாகற்கே துக் கூறுவார் காலநீங்கிய நிலைமையாலென்றும், அற்றேற் கா லநீங்கியவழி இவற்றினை ரேற்றத்திற்கு முற்பிற்பாடு கூறுதல் செல்லாதெனபாரை நோக்கி ஈண்டு முற்பிற்பாடு கூறியது கா லம்பற்றி யன்றெனபார் வைத்திலா முற்பிற்பாடு வருவித்தார் கருமத்தாலென்றுங் கூறினார்.

ஈண்டுக் கருமமென்றது மேலைச்செய்யுளிற் கூறிய வ்யா பாரபேதங்களை

அந்த வ்யாபாரங்கட்குக் காரணங் கலைவித்தியிரெனப் பெயர்பெற்றுக் காலத்தானமாய் நிற்குஞ் சிவசத்தியேயாகலி ன, ஆண்டுக் காலமின்மைபற்றி முற்பிற்பாடின்மைக்கு இழுக் கின்மையு மறிக.

அற்றேல் இலயசிவன்முதலிய மூவருந் தம்முள் வேறென் ஞது சுத்தசிவ னொருவனே இவ்வதிகாரங்களைப பற்றிய வ் யாபார பேதத்தால் அங்ஙனம் மூன்றவத்தை எய்துவனெ னின், விகாரியாவான் போலுமெனின? அவ்வாசங்கை நீக்கு தற் கெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

---

இப்படி முன் சொல்லப்பட்ட தத்துவங்களை சுத்த தத்து வமென்ற தெப்படி யென்றவனை நோக்கி, மேலுமருளிச் செய்கி றார்.

**வித்தையோடீசர் சாதாக்கியஞ்சத்தி சிவங்களைந்துஞ் சுத் தத்தத்துவம் - சுத்தவித்தையு மீசுரோ டீசுரதத்துவமும் சாதா**

க்கிய தத்துவமுஞ் சத்திதத்துவமுஞ் சிவதத்துவமு மெனகிற தததுவஙகள் ஐநதிலும பரமேஸ்வரனுடைய ஞானக் கிரியைக ள அதிட்டிக்கையிருலே யிவையிற்றுக்குச் சுத்ததத்துவ மெனறு பேராம்,—சிவனறனசுதநதர வடிவமாகும் - இவைதான சிவனுடைய விககிரகஙகளுககு சுதந்தரமான திருமேனியாயிருககும்,—நிததமெனறுரைப்பா கால நீங்கியநிலைமையாலே- இந்தத தததுவங்கள காலஙகளிற்படாது; ஆகையாலே யிவையிற றை நிததியமென்றே ஞாதாககள சொல்லாநிறபாகள நிததியமாயிருககிற தததுவஙகளுககு முற்பிற்பாடு வருவானேனெனனில்?—வைததிலர் முறபிற்பாடு வருவிததார் கருமததாலே - ஆகையாலே முனனே தோனறினது முந்தினதெனறும், பினனே தோனறினது பிந்தினதெனறும சொல்லுவாரில்லை; இப்படிச் சொல்லபபட்டது கிருததியஙகளுக கீடாக.

இதனுற் சொல்லியது சிவததததுவங்களை சுத்ததத்துவமெனறது சிவனுடைய ஞானககிரியைகள அதிட்டிசகையிருலெனறும், காலாதீதமா யிருககையிருலே நித்தியமெனறும், இநதத தததுவங்களுககு முறபிறப்பாடில்லை யெனறும், கிருததியஙகளுக கீடாக முறபிறபா டானதெனறுஞ் சொல்லுவார்க ளெனனு முறைமையும் அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

வித்தையோடீசர் சாதாக்கியஞ்சத்தி சிவங்களிந்துஞ் சுத்தத்துவஞ் சிவன்றன சுதநதிர வடிவமாகும்-அவ்வவியாபாரங் கட்கிடமா யைவகைப்பட்டு மேற்கூறிப்போந்த அவ்வப்பெயரே பெயராகவுடையனவாஞ் சுத்ததத்துவ மைந்து மவ்விறைவனுக்

குச சுதந்திரமாகிய அதிட்டானமுமாம்.— கருமத்தாலே வரு வித்தார் - முனைப்பின்றிக்கும் ஞானசத்தி கிரியாசத்திகளின வியாபார பேதமபற்றி யிவற்றிற்கு முற்பிற்பாடு கூறப்படினு ம,—கால நீங்கிய நிலைமையாலே-இவ்வைந்துந் தோன்றிய பின ன்றாந் தோன்றுவதாகிய காலத்தத்துவமியற்றத் தோற்றத்திற் கேதுவாகாமையில்,— முற்பிற்பாடு வைத்திலா - காலம்பற்றி முற்பிற்பாடு கூறுதல் சொல்லாது,—நித்தமென வுரைப்பா - காலவரையறையைக் கடந்து நிற்றலா லதுபற்றி யிவை சிவனு க்கு நித்திய அதிட்டானமென றுரைக்கப்படும.

---

## மறைஞானதேசிகர் உரை.



*மேலிந்தச் சுத்தத்துவங்களை யதிட்டித்திருந்தாலு மதற்கு வேறுபாடு நிற்குமதற் குதாரணமிட டுரைத்துகிறா*

ஒருவனே யிராவணாதி பாவக முற்றாற்போலத்,
தருவனிவ் வுருவமெல்லாந் தன்மையுந் திரியானாகும,
வருமவ் வெல்லாஞ்சத்தி சத்திதான் மரமுங்காழ்ப்
பு, மிருமையும் போலமன்னிச் சிவத்தினோ டியைந்து
நிற்கும். (கூஎ)

(இ - ள்.) ஒருவனே யிராவணாதி பாவக முற்றாற்போல — கூத்தாடி யொருவனுயிருந் திராவணன் முதலிய பலகோலங்களையுங் கட்டி நடித்தானேயாயினு மவன் றன்னுடைய தன்மை குன்றும லதுவதுவாய் நடித்தாற்போல,

தருவனிவ் வு
ருவமெல்லாந் த
ன்மையுந் திரியா
னாகும்

கர்த்தாவுஞ் சுத்த தத்துவங்கடோறும் பிருந்தானேயாயினுந் தனது தன்மை குன்றாமல் அத்தத்துவமாய் நின்றதற்கு வேறுபட்டு நிற்பன்.

வருவடி வெல்
லாஞ் சத்தி

அவனியாதொரு வடிவு கொள்ளுகிறானோ அவ்வடிவெல்லாஞ் சத்தியினது சொரூபமே!

அவ்விருவருங் கலந்துநிற்கு முறைமையாதெனில்?

சத்திதான் ம
ரமுங் காழ்ப்பு மி
ருமையும் போல
மன்னிச் சிவத்தி
னோடியைந்து நி
ற்கும்

எப்படி மரமும் வயிரமு மபின்னபாவமா யிருக்குமப்படியே யிந்தச் சத்தியுஞ் சிவனுடன் பிரிக்கப்படாமல் நிலைபெற்று நிற்கும். எ - று

ஏகாரந் தேற்றம்.
உம்மை எதிர்மறை.
இதற்கு மதங்காகமம்.    (கூஎ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் கர்த்தா அநேக மூர்த்திகளைத் தரித்தும் ஏகரூபமான தன்மை பிறழானென்ப துணர்த்துதல்.

ஒருவனேயிராவணாதி பாவகமுற்றுப்போலத் தருவனிவ் வுருவமெல்லாந் தன்மையுந் திரியானாகும் - கூத்தாடியொருவனே இராவணாதிகளைப்போல ரூபத்தையும் அபிநயத்தையும் பிறர்க்குக் காட்டித் தான் றன்னுடைய ஸ்வரூபத்தைக் கெடாது

நின்றதுபோல, கர்த்தாவும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட பஞ்ச கிருத்தியத்திற்காக விப்படி யநேக விக்ரஹங்களை அதிஷ்டித்துக்கொண்டிருந்து கிருத்தியங்களைப் பண்ணியும், அகண்டாகார சச்சிதாநந்த ஸ்வரூப மாறுபாடாகான. அஃதெவ்வாறெனில்?—வரும்வடிவெல்லாஞ் சத்தி சத்திதான மரமுங்காழ்ப்பு மிருமையும்போலமன்னி சிவத்தினோடிசைந்து நிற்கும் - இங்ஙனம வரப்பட்ட திருமேனியெல்லாம் சிற்சத்தியே அந்தச் சத்தியானது மரமும வயிரமும்போலப் பிரிக்கப்படாததாய்ச் சிவத்துடனே பொருந்தி நிற்குமென்றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—ஈ—

இப்படிச் சடபதார்த்தங்களையெல்லாந் தனக்குச் சத்தித்துவாரத்தினாலே சரீரம்போலப் பண்ணிக்கொண்டு செலுத்தி யசைத்து வேற்றுமைப்படுத்திக் காரியப்படுத்தினாலும், சிவனுக்குஞ் சிவசத்திக்கு மசைவு வேற்றுமையில்லையென்றறைகின்றார்

காழ்ப்பு - வயிரம்.

மரமுங் காழப்பும் என்றதில் காழ்ப்பு பிரத்தியக்ஷரூபம், மரம் பரக்ஷரூபம், அப்படிச் சிவமுஞ் சத்தியுமென்றிதன்பொருள்.

மற்றது வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

ஒருவன் கூத்திற்குரிய பலவேடங்கட்டி நடித்தானாயினுந் தன்றன்மையிற் சிறிதுந் திரிபாமைபோல, முதல்வன் ஐந்தொழிற் குரியனவாய் இங்ஙனங் கூறிப்போந்த பேதமெல்லாமெய்தியும் அவ்வேறுபாடெல்லாந் குணகுணிபாவமாயுடனிற்குந் தனது சத்தியிற் காணப்படுவனவாகலின், அதுபற்றித் தன்றன்மை வேறுபட்டு விகாரியாவா னல்லனென்பதாம்

ஏகாரந் தேற்றம்.

தன்மையுமென்னுமும்மை சிறப்பின்கண் வந்தது.

இருமையென்றது ஈண்டெண்ணினமேனின்றது

சத்தியிற் காணப்படுவனவற்றைச் சத்தியென் றுபசரித்தார்.

அற்றேல், தனது சத்தியிற் காணப்படுவது தனக்காமாறு யாங்ஙனமெனின்? அது வருஞ் செய்யுளிற் கூறப்படும்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

கர்த்தா வொருவனாயிருக்க விப்படி திருமேனி பலவானதெப்படியென் றவனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

ஒருவனே யிராவணாதி பாவக முற்றுற்போலத் தருவனிவ் வுருவமெல்லாம் - கூத்தாடி யொருவனாயிருக்க இராவணனமுதலான பல கோலங்களையுங் கட்டி நடித்தாற்போல, இந்தரூபமெல்லாங் கர்த்தாதானே கொள்ளாநிற்பன். இந்தத்திருமே

னிகளதோறும் கர்த்தாவும் பலபேதப்பட்டு நிற்பரோவெனி
னில?—தன்மையும் திரியாருகும் - இப்படிப் பலதிருமேனிகொ
ண்டு பிரபஞ்சத்தை நடத்தும்செய்கையும் தன்னுண்மையுங்
குன்றாமல் ஒருதன்மையாய் நிற்பன. அதெங்ஙனேயெனில்? வ
ரும்வடிவெல்லாஞ்சத்தி - ஆகையால் சிவன் கொள்ளப்பட்ட
வடிவுகளெல்லா மிவனுடைய சத்தியே! சத்தியென்றுஞ் சிவ
மென்று மிரண்டா யிருக்குமோவெனில்? சத்திதான் மரமு
ம்காழ்ப்பு மிருமையும் போலமன்னிச் சிவத்திற்றே டிசைந்துநி
ற்கும - அந்தச் சத்திதான் மரமும் வயிரமு மென்னு மிரண்டு
மபோல் நிலைபெற்றுடையதாய சிவனுக்குத் திருமேனியாகவே
ஒருகாலத்திலும் விடுநீங்காமல் நிற்கும

இதற்குப் பிரமாணம் திருக்களிற்றுப்படியார் "பொன
னிறை கட்டியினும் பூணினு நின்றாற்போ, லந்நிற வண்ணனும
மயிசையுஞ்—சென்னிறத்த, னென்னிறத்த னாயிருப்ப னெங்க
ள சிவபதியு, மன்னிறத்த னாயிருப்ப னங்கு" என்னுமதுங் க
ண்டுகொள்க. * திருக்களிற்றுப்படியார்—எக - செ

இதனாற்சொல்லியது சிவன் கொள்ளப்பட்ட வடிவுக
ளெல்லாம தனது சத்தியாகிய வடிவென்றும் சத்திசிவ மிரண
டும பின்னமில்லையென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஒருவனே யிராவணாதி பாவகமுற்றாற்போல - ஒருவன்
கூத்துக் குரிய விராவணாதி பலவேடங் கட்டி நடித்தாலுயினு
ந் தன்றன்மையிற் சிறிதும் திரியாமைபோல,—தருவனிவ் வுரு

வமெல்லாம் - முதல்வனைத்தொழிற் குரியவாய் இங்ஙனங் கூறிப்போந்த பேதமெல்லா மெய்தியும்,—வரும்வடி வெல்லாம்-அவ்வடிவு வேறுபாடெல்லாம்,—சத்திதான மரமுங்காழ்ப்பும - சத்தியுந் தானு மரமும் வயிரமுமாகி,—இருமையும் போலமன்னி - அவ்விரண்டும்போல நிலைபெற்று,—சிவத்திற்கு டியைந்துநிற்குஞ் சத்தி - குணகுணி பாவமா யுடனிற்குந் தன்து சத்தியிற் காணப்படுவனவாகலின்,—தன்மையுந் திரியாது கும - அதுபற்றித் தன் றன்மை வேறுபட்டு விகாரியாவ னல்லன

---

## மறைஞானதேசிகர் உரை.



அச்சிவன் றனது தன்மை திரியாமற் சத்தி
காரணமாய் நின்று தானுங் காரண
னென்ற றுணர்த்துகின்றார்.

பொன்மைநீ லாதிவன்னம் பொருந்திடப் பளிங்
கிவற்றின், றன்மையாய் நிற்குமாபோற் சத்திதன் பேதமெல்லா, நின்மலன் றனைத்தோன்றி நிலைமையொன் றுயேநிற்பன், முன்னருட சத்திதன்பான் முகிழ்க்குந்தான் முளையானன்றே. (கூஅ)

(இ-ள்) பொன் படிகமானது பொன்மை நீலமுதலிய பன்மைநீலாதி ஞ்சவன்னங்களையும் பொருந்தின விடத்து

வன்னம் பொருந்திடப் பளிங்கு வற்றின் றன்மையாய் நிற்குமாபோல்

த தன்னிறத்தைக் காண்பியாம லந்தவன் னத்தி னிறமாய் நின்றாற்போல,

சத்திதன் பேதமெல்லா நின்மலன் றனாய்த் தோன்றி நிலைமையொன்றே நிற்பன

உண்டாக்கப்பட்ட ரூபங்களெல்லாந் தனது சொரூபத்தைக் காட்டாம லந்தச் சத்தியினுடைய ரூபத்தை யதுவது வாகவே பொருந்தி நின்றனவேயாயினுந் தனது சொரூபத்தைப் பிறழாது நிற்பன.

முன்னருட் சத்திதன்பால் முளைக்குந் தானமுளையானன்றே.

சிருட்டிகாலத்திற் றன்னிடத்திலே சத்தியை யுண்டாக்குவதன்றித் தனக்கொருகாரண மில்லாதபடியாலே தானொன்றிற் றோன்றான. எ - று.

சிவன் சத்தி யாதாரமாய் நில்லான, சத்தி சிவனை யாதாரமாகக்கொண்டு நிற்குமென்பதெனவறிக.

இதற்குச் சுப்பிரபேதமு மதங்கமு மெனவறிக. (௯அ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிதுவுமது வென் றுணர்த்துதல்.

பொன்மை நீலாதிவன்னம் பொருந்திடப் பளிங் கவற்றின் றன்மையாய் நிற்குமாபோல்- பொன்மையாதிவன்னங்களா

கிய வொருவஸ்து சுத்தஸ்படிகத்திலே சம்பந்தித்தபொழுது, அந்தஸ்படிகமும் அந்தநிறமாகவே பார்ப்பார்க்கு தோன்றினுற்போல,—சத்திதன்பேதமெல்லா நின்மலன்ருனுயத் தோன்றி நிலைமையொன்ருயே நிற்பன - சத்திகளபேதமாகிய விக்கிரஹங்களெல்லாம் தானேயாய்க் காணப்பித்தும் பேதமன்றித் தானொரு தன்மையாயேநிற்பன அந்த சத்தி யாதோவெனின்?—முன்னருட சத்திதன்பான் முகிழ்க்குந் தானமுளையானவன்றே - அந்தக்கர்த்தாவினிடத்திலே முந்தலே கிருபையாகிய பராசத்தி உதித்து அநேகபேத சத்திகளாம். தானொன்றிலு முதியாதவனுகி அநாதியே சர்வகாரணத்திற்கும் பரமகாரணனுக நின்ருன என்றிதன்பொருள்.

தஉ-க்நாரதந்த்யெ—வாரநவெக்ஷ ர-ஞவெயசு
விஜ்ஞாநம் ஸிவஸஜீக்ஷழ || தஸ்யஸக்திஃ வாரா வெக்ஷா
ரஞவெஜாஹ-விழவஸ்ரீதஃ | கூகாரநுயஸம் வி-
வெதநரவெஸஷஸ்யாவி வஸதஃ || வாராநவெவக்ஷா
வெக்ஷாஹ்யாம் சுவிஸகி ஸீவாஸ்யா ||

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மேலிதுவுமது.

பொன்மை நீலாதிவன்னம் பொருந்திடப் பளிங்கிவற்றின் றன்மையாய் நிற்குமாபோற சத்திதன பேதமெல்லாம் - இஃதேகதேச திட்டாந்தம். சிருச்சிய சிவதத்துவங்க ளாந்துமுதலான ஞேயகாரியங்கள சிவசத்தியிலே பிரதிவிம்பித்தாற் சிவ

சத்தியுஞ் சடமாய்ப் போமாதலால் விம்பப் பிரதிவிம்பத்துவ ம பரிணத சடங்களுக்கல்லாமற் சித்துக்களுக்கில்லை யென்று பவுஷ்கரத்திற் சொல்லப்பட்டது அதனால், ஞானசத்தி ஸ்வரூபமாயிருக்கின்ற சிவசத்திக்குத் திருச்சிய சிவதத்துவ முதலான ஞேயபதார்த்தங் களுக்கும் ஞாப்யஞாபக பாவ சம்பந்தமாத்திரம், கிரியாசத்தி ஸ்வரூபமா யிருக்கின்ற சிவசத்திக்கு மந்தச் சிருச்சிய சிவதத்துவ முதலான காரிய பதார்த்தங்களுக்குஞ் சங்கற்ப சமுத்திரேக விஷய விஷயீபாவ சம்பந்தமாத்திரம், பிரதிவிம்ப சம்யோக சமவாயாதிகள் சித்துக்குச் சடத்தன்மை வருமாதலாற் சொல்லப்படாது என்று சொல்லிய விரண்டு சம்பந்தமாத்திரத்தினாலே சிவசத்திக்குப் பிரிப்பில்லா வந்தரங்க வானந்தியம் இயற்கையாய், நிருபசரிதமாயும் பிரிப்புள்ள பகிரங்கவானந்தியஞ் செற்கையா யுபசரிதமாயு மிருக்கு மென்றப்படியே சிவசத்திக் கானந்தியமென்று சொல்லப் பட்டவணந்தபேதமறிக,—

நின்மலன தானாய்த்தோன்றி நிலைமையொன்றாயே நிற்பன - அநந்த சத்தி பேதாபேதனா யிருந் தந்தரங்க பேதஞ் சொரூபமாயும், பகிரங்கபேதந் தடஸ்தமாயு மிருத்தலால்; ஏகஸ்வரூபவானாகத் தானாயிருப்பன.—

முன்னருட்சத்திதன்பான முகிழ்க்கு மந்தான் முளையானன்றே - மகாப்பிரளயமாயப் பிலசுவபாவகாலத்திலே தூலபஞ்ச கிருத்தியத்திலே உதாசீனையாய், நிருவிகற்ப ஞானரூபியாய், இலய சிவனிடத்திலே யிருந்த கிரியாசத்தி, திரும்பிச் சூக்கும பராசத்தி வியத்தி யோக்கியதை முதலாகிய சூக்குமபஞ்ச கிருத்தியங்களைப் பண்ணுநின்று, மகாசிருஷ்டி வருமிடத்துத் ஸ்தூல பஞ்ச கிருத்தியம் பண்ணும்படி,—

[தன்பால் - சிவன்பால்,— முன்னருட்சத்தி - முந்தவந்த ஸ்தூல பராசத்தி ரூபியாய்,—முகிழ்க்கும் - சிவன்செலுத்த இச்சாசத்தி சவிகற்பஞானசத்தி கிரியாசத்தியாகிய போகரூபியாய்க்கொண் டுத்தியுத்தையாம்,— தான்முளையானவரே - சிவன் சத்தியா லேவப்பட் டுத்தியுத்தரானோன், சத்தியையேவியந்த சத்தித் துவாரத்தினாலே யுத்தியுத்தனாயிருப்பன ]

[பின்னுமிதனபொருள்].—தன்பால்-தற்பொருளறிவாகிய சுத்தசிவனிடத்தில்,—முன்னருட்சத்தி - வைபோகாதி காரணகலைக் கடந்த புறப்பொருளறிவாகிய முந்திய சுத்த சிவசத்தியானது,—முகிழ்க்கும் - திருசயமின்றித் திருக்கு ரூபியாய வஸ புரித்தத் தோற்றியறியப்படும் புறப்பொருளறிவாகிய அந்த சிவசத்தியிலே;—தான் - சிவன்,—முளையானவரே - தான் ஸ்புரித்துத்தோற்றுன், தானப்படி ஸ்புரித்துத்தோற்றியறியப்ப டுவானாயின் புறப்பொருளாய்ப்போவனென்றுமாம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

பொன்மை நிலாதிகளைத் தன்னிறமே பற்றத் தானும் அத்தன்மைக ளனைத்துமாய்த் தோன்றி வேறறுமையின்றி நிற்கும் படிகம்போல, முதல்வனுந் தனது சத்தியிற் காணப்பட அப்பேதமெல்லாந் தானாகத் தோன்றி வேற்றுமையின்றியே நிற்பன ; அவன் யாண்டு சத்தியினிடமாகவே தோன்றுவானன்றித் தானாக வேறு தோன்றுவானலா னென்பதாம.

வன்னம் படிகநிறம.

ஏகாரந் தேற்றம்.

தனையென்றது இடைச்சொல், கிரியைதனை லாக்குவன் என்றாற்போல.

ஆகவென வருவித்துரைக்க.

இவை நான்கு செய்யுளானும் சிவபேதவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்துப் பரிகரித்து மேலது சாதிக்கப்பட்டது.

இம்முத்திறத் தொன்பது செய்யுளும் 'தானமுதல்' என்றதனை வலியுறுத்தியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

பரமேஸ்வரன் சத்தியாலே கொள்ளப்பட்ட திருமேனிகளெல்லாம் தான் பலபிரகாரமாய்நின்று நடத்துகைச் செய்கை தனதுண்மை குன்றாமல் ஒன்றாய்நின்ற தெப்படியென்றவனை நோக்கி ஒருதிட்டாந்தமிட் டருளிச்செய்கிறார்.

பொன்மை நீலாதிவன்னம் பொருந்திடப் பளிங்கிவற்றின் றன்மையாய் நிற்குமாபோல-பொன்மையுங் கறுப்புமுதலான பஞ்சவன்னங்களும் படிகத்திலே சென்று பிரதிவிம்பஞ் செய்ய, அந்தப் படிகமானது அந்தவன்னங்களைத் தனனிடத்திலே வலித்துக்கொண்டு அதுவதுவாய் நிற்குமுறைமைபோல,—சத்திதன் பேதமெல்லா நின்மலன் றானாய்த்தோன்றி - அந்தச் சத்தியினுடைய வேறுபாடுகளெல்லாம் நின்மலனாகிய சிவன் றானாகவே தோன்றி,—நிலைமை யொன்றாயே நிற்பன் - இப்படிக் கூடிநிற்கைச் செய்தேயும் தன்னுண்மை குலையாமல் ஒன்றாயே நிற்பன்,—முன்னருட் சத்திதன்பால் முகிழ்க்குந் தான முளையானன்றே - முற்பட்ட பராசத்தி அந்த பரமேஸ்வரனி

டத்திலே தோன்றுநிற்கும்; தானந்தப் பராசத்தியி னிடத்திலே தோன்றும்.

இதனாற் சொல்லியது படிகமானது பஞ்சவன்னங்களோடே கூடி யதுவதுவாய் நிறக்கச் செய்தேயும் தன்னுண்மை குன்றாமல் நின்ற தன்மைபோல், சிவனும் தனது சத்திகளுடனே கூடி அது வதுவாய் நிறக்கச்செய்தேயும் தன்னுண்மை குன்றாமல் ஒன்றாய் நிற்பனென்றும்; பராசத்தி தன்னிடத்திலே தோன்றுமென்றும், தானதில் தோன்றுமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

பொன்மை நிலாதியன்னம் பொருந்திட - பொன்மைநிலாதிகளின் தன்னிறமே பற்ற,—அவற்றின் றன்மையாய் நிற்கும் பளிங்குபோல - தானு மத்தன்மைக ளனைத்துமாய்த் தோன்றி வேற்றுமையின்றி நிற்கும் படிகம்போல்,—நின்மலன் சத்திகளின் பேதமெல்லாம் - முதல்வனுந் தனது சத்தியிற் காணப்படும் பேதமெல்லாம்,— தானாய்த் தோன்றி நிலைமை யொன்றாயே நிற்பன் - தானாகத்தோன்றி வேற்றுமையின்றியே நிற்பன்,— முன்னருட் சத்தியினபான முகிழ்க்கும் - அவன் யாண்டுஞ் சத்தியி னிடமாகவே தோன்றுவானன்றி,— தான் முளையானன்றே - தானாக வேறு தோன்றுதலான

இவை நான்கு செய்யுளானுஞ் சிவபேதவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்துப் பரிகரித்து மேலது சாதிக்கப்பட்டது.

இம்முத்திறத்து ஒன்பதுசெய்யுளுந் தானமுத லென்றதனை வலியுறுத்தியவாறு.

## மறைஞானதேசிகர் உரை.



*இப்படி யைக்கியமாயிருக்கிற சிவசத்திகள் விசுவத்தின கணே பேதமாய நிற்குமுறைமை யுணர்த்துகிறார்.*

*சத்தியுஞ் சிவமுமாய தன்மையிவ் வுலகமெல்லா, மொத்தொவ்வா வாணும்பெண்ணு முணர்குண குணியுமாக, வைத்தன னவளால்வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லா, மிதனையு மறியாரீட லிங்கத்தி னியல்பு மோரார்.* (சுஅ)

(இ-ள்) சத்தியுஞ் சிவமுமாய தன்மையிவ் வுலகமெல்லாம் — இந்தப் பிரபஞ்சமெல்லாஞ் சத்தியுஞ் சிவமுமாகிய முறைமையை யுடையது;

ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முணர்குண குணியுமாக வைத்தனன் — சிவ ஞான பெண்ணென்னும் வடிவொத்தாண் குறியாகிய கோசமும் பெண்குறியாகிய யோனியு மொவ்வாதென் றறியப்பட்ட குணமுங் குணியுமாகிய பதார்த்தங்களாக வைத்தனன்;

அவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லாம் இதனையு மறி — ஆகலா லிந்தப் பிரபஞ்சமாகிய சராசரங்க ளாணெல்லாஞ் சிவனாகவும், பெண்ணெல்லாஞ் சத்தியாகவும் வியாபியாநிற்கு முறைமையெல்லாம், இந்தச் சத்தியினுடைய சா

யிருப்பனேவெனின்? உதாரணம்,—அக்கரங்கடோறுஞ் சென்றிடு மகரம்போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே - அக்கரங்களுக்கு மகாரத்துக்குஞ் சமவாய சம்பந்தத்தினாலே தாதான்மியம்,— அநாதி முத்தபதிக்கும் ஆதிமுத்த பதி பசுக்களுக்கும் முன்சொன்னபடி சாயுச்சிய சார்ந்த சம்பந்தத்தினாலேயும், வியாப்பிய வியாபகபாவ சம்பந்தத்தினாலேயும் தாதான்மியமில்லாமையால் ஏகதேசவுவமை முற்றுவமையன்றெனப் படுக.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

வேதாந்தநூல் ஆன்மா ஏகனேயென்பதற்குப் பிரமாணமா யொருவனே யென்பது தாற்பரியமாகலான் அதுபற்றி முரணுதலின்மையான மேற்செய்யுளின் வேறுயென்றதூஉம், ஒன்றாகிய அகரம் பலவெழுத்துக்களின் விரவிநிற்றல் காணப்படுதலின் ஒருவனாகிய பரமான்மா பலவுயிர்களின் விரவிநிற்றல் யாங்ஙனமென்னு மாசங்கைக்கு இடமின்மையான், உள்ளுமாடென்றதூஉம், அமைவுடையனவென்பதாம்.

உவமை சிறப்பின்கண் வந்தது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

வேதம் ஒன்றென்று சொல்லுகச்செய்தே நீர் பலவாகச் சொன்னதென்ன என்ற மாயாவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

ஒன்றென மறைகளெல்லா முரைத்திட வுயிர்களொன்றி நின்றன னென்றுபன்மை நிகழ்த்துவ தென்னையெனின் - ப

ரபிரம மொன்றுமே யுள்ளதென்று வேதங்களெல்லாஞ் சொல்லுகச்செய்தே ஆன்மாக்களுடனே பொருந்தி அதுவாக நின்றேனென்று பலவாகச் சொல்லுகிறபடி எப்படியென்று நீ சொல்லில்,—அன்றவை பதிதானொன்றென்ன றறையும் - அநாதியே சாதநா வொருத்தனென்றே வேதஞ்சொன்னதும தனக்கு ஒப்பிலாதவ னென்றதற்காம். அப்படி வேதமொன்றென்று சொல்லுவானேனென்னில் ?—அக்கரங்கடோறுஞ் சென்றுநின் றகரம போல நின்றனன் சிவனுஞ்சேர்ந்தே - அகரமாகிய வக்கர மொன்றுமே எல்லா யக்கரங்களிலுஞ் சென்று பொருந்தி யந்த வக்கரங்களுக் கெல்லா முயிராய்நின்ற தன்மைபோல, பசுபதியினுடைய திருவடி சாவான்மாக்களுக்கும் பிராணனாய் நிற்கிறபடியு மிந்த முறைமையென்று வேதஞ்சொல்லும்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம் "ஒன்றென்றதொன்றேகா ணொன்றே பதிபசுவா, மொன்றென்ற நீபாசத்தோடுளைகா-ணொன்றின்றா, லக்கரங்களின்றா மகரவுயிரின்றே, லிக்கிரமத் தென்னு மிருக்கு" என்றும், பண்ணையு மோசையும் போலப் பழமதுவு, மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா-மண்ணலருள், ளத்துவித மாத லருமறைக ளொன்றென்று தத்துவித மென்றுரையு மாங்கு" என்னுமதனாற் கண்டுகொள்க.

சிவஞானபோதம் - உ - கு, உ - ரு-வெ

இதனாற் சொல்லியது பதிமுத லொன்றென்றும், எல்லா வக்கரங்களுக்கும் அகாரமுயிரான தன்மைபோல சாவான்மாக்களுக்கும் சிவனே யுயிராய் நிற்பனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

மறைகளெல்லாம் - வேதங்களெல்லாம்,— ஒன்றென வுரைத்திட - ஆன்மா வொருவனென் றுரைத்திடவும்,— யுயிர்களொன்றி நின்றனனென்று - உயிர்களோடு கலந் தொன்றாய் நின்றானென்று,— பன்மை நிகழ்த்துவ செய்யுளெல்லாம் - பன்மை கூறுவதியாதெனின்?— அவை பதிதானொன்றென்றதையும் - வேதத்துள் ஆன்மா வேகனேயென்பதற்குப் பரமான்மா வொருவனேயென்பது தாற்பரியமாகலின்,— அன்று - அதுபற்றி முரணுதலின்மையான், மேற்செய்யுளின் வேறுபட வுரைத்தாம்,— அகரவுகரங்களொன்றாய் நின்றிடும் அகரம்போல - ஒன்றாகிய அகரம் பலவெழுத்துக்களில் விரவி நிற்றல் காணப்படுவது போல,— சிவனுஞ் சேர்ந்து நின்றனன் - ஒருவனாகிய பரமான்மா பலவுயிர்களின் விரவி நிற்றல் யாங்ஙனமென்று மாசங்கைக் கிடமின்மையான உண்மை யாமென்றது உண்மையுடையனவென்பதாம்.

மறைஞானதேசிகர்.



அந்தப் பிரமம், ஆன்மாக்க ளனைத்துந் தானாய்க்
கலந்து நின்றதேயாயினு மந்தவான்மா
விறக்கும் வேறாய்நிற்கு முறைமையு
ணர்த்துதற்கா.

உருவொடு கருவியெல்லா முயிர்கொடு நின்று வேறாய, வருவது போலவீச னுயிர்களின் மருவிவாழுவன், றருமுயி ரவனையாகா வுயிரவை தானுமாகான், வருபவ னிவைதானும் வேறுமாய் மன்னிநின்றே. (உ)

ம்மாறுகுணமான சுகதுக்கபோகங்களைப் புசிப்பிப்பன,—உயிர்க
ளின மருவி யிவைதாமும் வாழ்வன—ஆன்மாக்களை வே
றறக்கலந்து ஜீவஸ்வரூபந் தோன்றாத் தன்மையாக வாழ்வன.
ஜீவான்மாக்கள்தாம் மலநீங்கிச் சிவனாவதென்ன ஆதாரத்தா
லெனனில்?—கருமுயி ரனையாகா — சிவனாற் பிரகாசிப்பிக்க
ப்பட்ட வறிவையுடைய வான்மா சிவனை வியாபியாது அதே
னைபோல வெனனில்?—உருவொடு கருவியெல்லா முயிரொடு
நின்று வேறாய வருவ துயிரவைதானு மாகாபோல — தேகேந்
திரியாந்தக் கரணங்களை ஆன்மா தானாக வபிமானம் பண்ணி
க்கொண்டு நின்று, அதற்கு அந்நியமாய வருவது அவ்வாறு கூடி
நின்ற காலத்தும் தேகேந்திரியாதிக ளான்மா வாகாததுபோ
ல இவைதாமும் வேறுமாய் என்ற இரண்டுமையும் சிவ
னை ஜீவான்மாக்களு மல்ல அவையிற்றுக்களுக்கு அந்நியமுமல்ல
தாதாந்மியமே' என்றது. இருவர் கூடிவாழ்த லின்புறும்புண
ர்ச்சி யென்றிதன்பொருள்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சிவனுக்கு மான்மாவுக்கு மிப்போது சொல்லிய சம்பந்தத்
திறலே யொரு பிரகார மத்துவைத மறிவிக்கப்பட்ட தானாலு
ம,வஸ்துவினாலே பேதப்படுமென்ப துரைக்கின்றார்.

உயிர் — ஆன்மா,— உருவொடு கருவியெல்லாங்கொடு நின்
று — தூலதேக சூக்குமதேக பரதேக மிவைகளைக்கொண்டு நி
ன்று, தனது சங்கற்ப ரூபை சந்நிதி மாத்திரத்தாற் செலுத்
தித் தொழில்களைப் பண்ணுவித்து நின்று,— வேறாய்வருவது
போல — உயிர்வேறு சரீரம் வேறென்று நின்றாற்போல,—ஈச
னுயிர்களின மருவிவாழ்வன — ஆன்மாக்களிடத்துச் சம்பந்தித்

தாத் தனது சங்கற்ப ரூப சந்நிதிமாத்திரத்திரத்தினாலே செலு த்தி நிற்பன. அமூர்த்தமாய், வியாபகமா யிருக்கின்ற வா ன்மாக்களைச் செலுத்தும் வகை யெப்படி யெனின்?சரீரத்தில வயவங்களை யங்கங்குப் பிரேரித்த தானமாக்களிடத்தி லறிவு தொழில்களை யுத்தச் சரீரத்தி லவயவங்களைக்கொண்டு விளக்கி க் காரியம் நிகழப்பண்ணுவதே செலுத்துவதெனறபடி. ஆதலா ல்,—தருமுயிரவனேயாகா வுயிரவை தானுமாகான - செலுத்த ப்படும் பொருளாகிய ஆன்மாக்களும், செலுத்தும் பொருளாகிய சிவனும் ஒருபொருளாகா,— வருமவனிவைதானுயும் வேறுமா ய மன்னிநின்றே - அந்தச்சிவன் முன்சொல்லிய வியாப்பியவி யாபக சம்பந்தத்தினாலே இந்தஆன்மாக்களாயும், வஸ்துவினா லே வேறுபட்டு தனித் தொருபொருளாயும் இருப்பன,—முத்தா ன்மாக்கள் நிரஞ்சனர்களாதலால், சிவன்போலச் சிவப்பிரே ரியர்களன்று.

"வஸ்யோநாவிர்த்த கீர்யாஸ்ய
ஸவதயேவாபிமோக்ஷஞாத"

என்று மோக்ஷ பரியந்தம் சிவனுக்கு வசியனென்னும் பெ யர் மிருகேந்திர வசனத்தினாலே காணக.

## சிவஞானயோகியருரை வருமாறு.

முதல்வன் அங்ஙனம் வேறாகியும், உலகெலாமாகி நிற்றல் அனாவுடைத் தெனபது உடம்பின் கண்ணதாகிய உயிரியல்பி ன வைத்துக் கண்டுகொள்க வென்பதாம.

ற சாரியை

அவை பகுதிப்பொருள் விகுதி.

நின்று வருபவ னெனவினையும்.

இவையிரண்டு செய்யுளானும் பேதவாதம் பேதாபேதவாதம் அபேதவாதமாகிய முக்கூற்று மதங்களையும் பரிகரித்து, 'உலகெலாமாகி வேறா யுடனுமாய்' என்ற முதற்கூற்றுப் பொருள் வலியுறுத்தப் பட்டது.

இன்னும் இதன்கட்படுங் கடாவிடைகளெல்லாம் முன்னர் விரித்துக் கூறப்படுமென்பதுபற்றி ஈண்டு விரித்திலா.

இனி ஒளியாயோங்குதற் கட்படுங் கடாவிடைகளே மேலைச் சூத்திரத்து ளிவைபற்றிக் கூறியபோந்தமையின் ஈண்டுத் தெரித்திலா.

அஃதங்ஙனமாக, முதனூற்பொருளை முதனூலிற் கிடந்தவாறன்றித் தொகுத்தல் முதலிய நால்வகையாப்பினு ளொன்றுபற்றிச் செய்தலன்றே வழிநூலாவது, அவ்வாறன்றி, 'அன்றவை பதிதாமென்றென் றுறையும்' எனவும், 'உருவொடு கருவியெல்லாம்' எனவும், பிறாண்டுஞ் சிலவற்றை முதனூலிற் கிடந்தவாறே கூறுதல் வழிநூற்கு மரபன்று போலுமெனின்?—"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கு—முன்னோரின், வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் லென்பதற்குங், கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்" என்பவாகலின், அப்பயன்பற்றி யொரோவழி யங்ஙனங் கூறுதலும் வழிநூற்கு மரபாமென விடுக்க.

இதனானே கூறியது கூறலென்னும் வழுவின்மையுங் கண்டுகொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

இந்தப் பரப்பிரமத்தைப்போல் நீர் சொல்லுகிற வான்மாவைக் காணப்பட்டதில்லையே யென்ன, மேலருளிச்செய்கிறார்.

உருவொடு கருவியெல்லா முயிரொடு நின்று வேறாய் வருவது போல - ஆன்மாவானது இந்திரியங்கள் கரணங்கள் முதலான கருவிகளெல்லாங் கூடினதொரு சரீரத்தை யெடுத்துக்கொண்டு நிற்கச்செய்தே, இந்தச் சரீரத்துக்குள்ளபேரைச் சொல்லியழைக்க, இவையிற்றோடுள வியாபகத்திலே யிவையிற்றை யுள்ளடக்கி யிவையிற்றுக்கு வேறாயிருக்கிறதானவந்த ஏனென்றுபோல,—எச்சவுயிர்களின் மருவியாழ்வன-சிவஞானமாயிருந்துள்ள வியாபகத்திலே ஆன்மாவை யுள்ளடக்கித் தான்பிரகாசித்து நிற்பன் ஆன்மாத் தானே அந்தக் கர்த்தாவாய் நிற்பனென்னில்?—கருமயி ரவனையாகா - உண்டாக்கப்பட்ட வான்மாவும் சிவத்தோடே கூடியிருந்தாலுமிறைச் சிவனாக மாட்டான். அந்தக் கர்த்தாத்தானே ஆன்மாவாய் நிற்பனென்னில்?—உயிரவை தானுமாகா-அந்தக் கர்த்தாவும் இப்படி ஆன்மாக்களுடனே கூடியிருந்தாலுமிந்த ஆன்மாக்களாகிறானல்லன் ஆனாலிரண்டுஞ் சமமென்னில்?—வருபவ னிவைதானாயும் வேறுமாய் மன்னினன்றே-சிவனான்மாக்களுமா யவையிற்றுக்கு வேறுமாய் வரத்தக்க சத்தியை யுடையனாய் நிற்பன். அதெனைப்போல, ஆன்மாச் சரீரமுமா யதற்குவேறுமாய்நின்ற தன்மைபோல.

இதற்குப் பிரமாணஞ் சிவஞானபோதம் "கட்டு முறுப்பு கரணமுங் கொண்டுள்ள, மிட்டதொரு பேரழைக்க வென்னென்றுங்—கொட்டி, யவனுளமா கில்லா னுளமவனா மாட்டா, னவனுளமா யல்லனுமா மங்கு" "என்றும், "அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ, லுருக்கி யுடங்கிருந்து நின்று—பிரிப்பின்றித், தானே யுலகாந் தமியே னுளம்புகுதல், யானே யுலகென்ப னின்று" என்னுமதுங் கண்டுகொள்க.

சிவஞானபோதம் - உ - சூ, க - ச - வெ.

இதனாற் சொல்லியது ஆன்மாச் சரீரத்தை யுள்ளடக்கித் தானே பிரகாசித்து நின்றாற்போலப் பரமேஸ்வரனும் ஆன்மாக்களை யுள்ளடக்கித் தானே பிரகாசித்து நிற்பனென்றும், பரமேஸ்வர னான்மாவுமா யல்லவுமாய் நிற்பனென்று முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உயிருருவொடு கருவியெல்லாங் கொடுநின்று-உயிர்நரம்பு முதலியவற்றாற் பிணிக்கப்படுந் தனுவோ டைம்பொறி முதலிய கருவிகளையுந் தன்கொண்டு நிற்றலாயினவாம்,— வேறுபட்ட வுருவதுபோல்-அவ்வாறுடலாய வழியு முயிருயிரே யுடம்புடம்பே யுயிருடம்பா மொழியா துடம்புயிராகமாட்டாததுபோல,—ஈச னுயிர்களின் மருவிவாழ்வன-முதல்வ னுயிர்களோ டபேதமாய்க் கலந்து நிற்பன,— தானுமுயிரவையாகான தருமுயிரவனாகா-அவ்வாறுகலந்து நின்றவழியு முதல்வன் முதல்வனே! உயிருயிரே! முதல்வனுயிரா யொழியான், தரப்பட்ட வுயிர் முதல்வனாகமாட்டாது அவ்வாறாயினும்,—இவைகாணும் வேறுமாயு மன்னின்னிறே வருபவன-உயிரவ்வுடம்பின் வேறுசியும் அதுவாகிநிற்றல் காணப்படுதல் போல, முதல்வன் அங்ஙனம் வேறாயு முலகெலாமாகி நிற்றலமைவுடைத்தெனக.

இவையிரண்டு செய்யுளானும் பேதவாதம் பேதாபேதவாதம் அபேதவாதமாகிய மூன்றுமதங்களையும் பரிகரித்து, 'உலகெலாமாகி வேறு யுடனுமாய்' நின்றமுதற் சூத்திரப் பொருள் வலியுறுத்தப்பட்டது.

☞ உ-சூ, க-அ, முடிந்தது.

## மறைஞானதேசிகர் உரை.



இப்படி யான்மாக்களிடத் திரண்டற்று நிற்கு
ங் கர்த்தா, விருவினைப் பலன்களைக் கொ
டுக்கு முறைமை யுணர்த்துகிறார்

இருவினை யின்பதுன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து,
வருவது போவதாகு மன்னிய வினைப்பயன்க, டருமன்
றரணியோடு தராபதி போலத்தாமே, மருவிடா
வடிவுங்களும பலன்களு மறுமைக்கண்ணே. (௪)

(இ - ள) இருவினை யின்பதுன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து வருவது போவதாகும் — இவ்வான்மா புண்ணிய பாவங்களுக் கிடாகப் பிறந்துவருவது மிறந்துபோவதுமாகும், கன்மரூ சடமாதலாற் றானுகச் சரீரத்தினை யெடுக்கவற்றோ வெனில்?

மன்னிய வினைப்பலன்க டருமன் — ஆன்மாக்கண் முற்சனனத்தி லார்ச்சித்த கன்மபலத்துக் கீடாக நிலைபெற்ற விருவினைப் பயன்களை பேருமற் குறையாமற் கர்த்தா வறிந்து கொடுப்பன. அஃதெனபோலவெனனில்?

தரணியோடு தராபதி போல — விசுவத்தி லான்மாக்களுக் கதிபனுயிருக்கிற விராசாவானவர்கள் செயல்களுக் கீடாக நிக்கிரக மநுக்கிரகஞ் செய்யு முறைமை போல;

தாமே மருவிடா வடிவுங்கள — இப்படியொழிக் தான்மாக்களுக்கு வருகிற சுகத்துக் கேதுவாகிய சரீரமு மத

ம பலன்களு மறு ற்கேதுவாகிய கனமபலங்களுந தாமேவந் மைகககணுேண. து பொருநதமாட்டாது,ஆதலா லொருகாத தாக கூட்டிக காரியபபடுததுவன. எ - று.

ஓடு இடைச்சொல்.

'இருவினை' முதல் 'பேறிழ' ஈருக நாலு மொருதொடர். இதற்குப பாாக்கியையெனனு மாகமம (ரு)

## சிவாகரயோகியருளை வருமாறு.

—o—

மேல மாறிப்பிறநது வருமா றுணாததுதல்.

இவவுயி ரிருவினை யினபதுனபதது பிறநதுவருவது மிற நதுபோவது மாகும-புணணிய பாபததின பலமாகிய சுகததை யும துககததையும புசிப்பதாக பூமியிலே வநது பிறப்பதும ஸ வாசகததிலே புணணியபலமே புசிபபதாகவும நரகததிலேபா பபலமே புசிபபதாகவும் இறநது போவதுமாம,—மனனிய வி னைபபயனக டருாரன - இவவாறு பொருநதிய புணணியபா ப பலஙகளை ஒறறனே கொடுபபன. எவவாறெனனில்,— தரணி யோடு தராபதிப போல-பூமியானது விகாரமனறி நினறு அவ ரவா பணணின காஷுஜாதிகளுககு ஏறறபலததைககொடுககிறு பபோல காமபலஙகளை யுணடாககிப பூபதியானவனஅவ்வவ ா பணணின கிருஷயாதி பலனகளை யவவவர்ககேயாகச செலு ததுமாபோல அவவவாபணணின காமபலததை அவவவரை யே புசிககபபணணுவன. காமமே பலததைககொடுககுமல்லது காமாநுகுணமாக மாயையே பலததைக கொடுககும, இதற் கொரு கர்ததா வேணெனனில் ?—தானே மருவிடாவடிவுங கனம பலஙகளு மறுமைக் கண்ணே - மாயை ஜடமாகை யால் தானே யுருவாகவறியாது, கனமயானது செய்தவுட

னே நாசமாகையால் அநந்தக்கனமத்திலே ஒரு அதிருஷ்டத்தை ஜநிப்பித்து அதை ‡அதிஷ்டானம்பண்ணி மறுமைக்கண்ணே பலங்கொடுப்பதாகையால கருமந்தானே பலங்கொடுக்க மாட்டாது, ஆகையால் ஈஸ்வரனே கருமபலத்தைக் கொடுக்க வேண்டுமென்று இதன்பொருள்.

‡ அதிஷ்டானம் - வழியிலிருப்பது.

இவ்வுயிரென்பது சகலரென்னவறிக.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

மேல்வினையால் மாறிப்பிறந்து வருமாறு உணர்த்துகின்றார்.

தரணியோடு தராபதிபோல - பூமியோடு கூடிய விராசா கிருஷிபாதிபலங்களை யவரவர் செய்தியறிந்து கொடுப்பதுபோல,— அரன் - மாயையோடு கூடியசிவன்,—மன்னியவினைப்பயன்கள் தரும - அவனவனுக்குப் பொருந்திய சுகதுக்க மோகங்களைக் கொடுப்பன.

தரணியாகிய முதற்காரணமின்றித் தராபதி பலன் கொடுக்கமாட்டான் தராபதியன்றித் தரணியறிவின்மையாற் பலன் கொடுக்கமாட்டாது கிருஷித்தொழிலும்மப்படியே அப்படிச் சிவனும் மாயையும் கன்மமும் மூன்றும்பிரிந்து பலன்கொடாது.

இருவினையின்பத்துன்பத் தென்றவிடத்து இருவினைகளாலென்ன விரிக்க.

இன்பத்துன்பத்து - சுகதுக்க காரண யோனிகளில் வருவது போவது சுவர்க்க நரகங்களில்.

மற்றதுவெளிப்பொருள்.

இருவினை யின்ப துன்பத் திவ்வுயி ரிறந்திரந்துவருவது போவதாகும் - முற்சென்மத்திற் செய்த புண்ணியபாவங்களுக்கிடான சுகதுக்கங்களை யநுபவிக்கைக்கு இந்தவான்மாக்கள் சனனமரணப்பட்டுச் சொர்க்கநரகங்களிலே போவதும பூலோகத்திலே வருவது முடைத்தாயிருக்கும். இந்தச் சுகதுக்கங்க ளிவனுக்கு வந்துகூடுகிறபடி யெப்படியெனனில்?—மன்னிய வினைப்பலன்கடருமரன்-ஆன்மாக்களுக்கு கநாதியேநிலை பெற்றுள்ள புண்ணிய பாவங்களின் முறைமைக்கிடான சுகதுக்கங்களைப் பரமேஸ்வரன் கொடாநிற்பன் அதெனபோலவெனில்?—தரணியோடுதராபதிபோல- இராஜாவானவன விசுவத்தி லுள்ளவர்களவரவர்செய்த புண்ணிய பாவங்கள் தானே அதற்குத்தக்க பலன்களைக்கொடுக்கு மதொழிந்து கர்த்தா வேண்டுவ தில்லையென்ற பட்டாசாரியனை மறுத்து மேலருளிச் செய்கிறார் —தாமேமருவிடாவடிவுங் கன்மபலன்களு மறுமைக்கணனே - இப்படி யொழிந்து வருகிற சநந்துக்குண்டான சரீரமும், புண்ணியபாவங்களுக்குண்டான இன்பதுன்பங்களும், இவை யசேதனமானபடியினாலே தானேவந்து பொருந்தமாட்டாது, ஆகையால் கன்மங்களையும் ஆன்மாக்களையும் பரமேஸ்வரனே அறிந்து கூட்டவேணும்

இதற்குப பிரமாணம சிவஞானபோதம் "உள்ளதேதோற்ற வுயிரணையுமவ்வுடலி, னுள்ளதா முற்செயவினை யுள்ளடைவே—வள்ளலவன, செய்பவாசெய்திப் பயனவிலைக்குஞ் செய்யேபோல், செய்ப செயலணையா சென்று" என்னுமதுங் கண்டுகொள்க.

சிவஞானபோதம - உ - கூ, ரு-வெ.

இக்குற் சொல்லியது ஆன்மாக்கள கன்மத்துக் கிடாக சநந மரணப்பட்டுச் சொர்க்கநரகங்களிலே போவார்களென்

றும், மீளவும் பூமியினகணணே வருவாரகளெனறும், அநதக கனமஙகள சடமானபடியாலே ஆனமாககளைத தாஙகச செனறு கூடாதெனறும, ஆனமா தனககெனன வறிவில்லாதது கொணடு தானசெய்த கனமஙகளை யறிநது கூடடமாடடாது; ஆகையால் அவவிரணடையும பரமேஸ்வரனேயறிநது கூடடு வனெனனு முறைமையு மறிவிததது

‘உலகெலாம’ ‘ஒனறென’ ‘உருவொடு’ ‘இருவினையினபட’ ஆகத திருவிருததம - ௪, மாயாவாதி இவவினைமறுதது ஆனமா வுணடெனறும புணணியபாவஙக ளுணடெனறும சொலலுகி றது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

இவவுயிர் - மேறகூறியபோநத வுயிர,— இருவினை - முன பிறவியிற செய்யப்பட்டுக் கிடநத விருவினைக ளோடாக, இனபது னபதது - இபபிறவியின வரும இனபதுனப நுகாசசியான மேலும வினைபெறுதலின,— பிறநதிறநது - அநநுண மீளமீ டபிறநதிறததலும,— வருவது போவதாகும - துறககநிரயங ளிற செனறு மீடலுமுடைததாகலான,— மனனியவினைபபல னகள - உடமபோடு நிலைபெறு மவவினைப பயனகளை,— தா னியோடு தராபதிபோல-மருநதுவனும வேநதனும போல,— அரனறரும - முதலவனே யவவுயிாகருத தனதாளையாற கூ ட்டுவன,—வடிவுங் கனமபலஙகளும-இயவாறனறியுருவுஙகன மபயனுஞ சடமாகலின,—தாமே மறுமைக கணணே மருவி டா - மறுமைககணணே வநது கூடமாடடா தெனபதாம.

இதனானே முதல்வ னவ்வாறு மூவகையுமாய் நிற்றலானு யப்பய னிருவென்பதுணர்த்து முகத்தா னிரண்டாங் கூற்றின் கட்படு மியல்பெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேல் லோகாயத னின்பதுன்ப மென்ப தொ
ருவா தரவேண்டுவதில்லை, அவ்விரண்டுமி
யல்பாக வான்மாக்களுக் குண்டா
மென்பதனை யுணர்த்துகின்றா

இருவினை யென்னையின்பத் துன்பங்களியல்பதெ
ன்னி, னொருதன்மை யியல்புகளுள தொருவனுக் கி
ரண்டுசெய்தி, வருவதென மலருநீயு மருவினை வா
சமெம்மை, தருவதென வீரொன்செய்து தானியல்
பாகுமன்றே. (௫)

| | |
|---|---|
| (இ-ள்) இருவினை யென்னை யின்பத் துன்பங்க ளியல்ப தென்னின் | ஆன்மாக்களுக்குச் சுகதுக்கமாகிய விருவினையுஞ் சுபாவத்திலே தானே யுண்டாம, ஒருவன் கொடுப்பனென்பானேன, அவ்விரண்டுந் தானே யுண்டாமென்று நீ சொல்லில்? |
| ஒருதன்மை யியல்புகுள்ளது | நீ யஃது இயல்பென்று சொல்லுவையாகில் அஃதொருப்பட் டிருக்கவேணுங்காண் |
| ஒருவனுக் கிரண்டுசெய்தி வருவதென | இப்படி யியல் பொன்றுயே யிருப்பதொழிந் தான்மாக்களுக்குச் சுகதுக்கமென்ப திரண்டாய்வருகிற தெப்படியென்னின்? |

| | |
|---|---|
| மலருந்தியு மருவலின் வாசம் வெம்மை தருவதென னீரென செய்து | நீரானது மலரைப் பொருந்தினபோது வாசனையுண்டாம், அக்கினியைப் பொருந்தின போது வெம்மையுண்டாவானேன், அஃதென்ன கன்மத்தைச்செய்ததற் குண்டாயிற்று |
| தானியல் பாகுமன்றே. | ஆகையா லான்மாக்கள் சுகியாயிருக்கிறது துக்கியாயிருக்கிறது மொருவன் கொடுக்கவேண்டாம், சுபாவங்களாலும் எ-று (ரு) |

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——0——

மேல் லோகாயதன் புண்ணியபாபங்களென்ப தொன்று மில்லை, சுகதுக்கங்கள் தேகத்துக்கு ஸ்வபாவமென்பதை பனிரண்டு விருத்தத்தினாலே அநுவதித்து நிராகரித்தல்

இருவினையென்னையிங்குத் துன்பங்க ளிபலபதென்னில்-புண்ணிய பாபங்களென் றிரண்டுண்டென்று சொல்லுவானேன், சுகதுக்கங்கள் ஸ்வபாவமே யென்னில்,—ஒருதன்மை யியல்புக்குள்ள தொருவனுக்கு இரண்டுசெய்தி வருவதென் - ஸ்வபாவமான தொரு பகுப்பா யிருப்பதன்றி யொருவனுக்கு சுகமும் துக்கமு மிரண்டுவகையா யிருப்பதேதென்னில்,— மலருந்தியு மருவலின் வாசம் வெம்மை தருவதென னீரெனச்செய்து தானியல்பாகுமன்றே-புஷ்பமானது பொருந்தினபொழுது வாசனையையும் அக்கினிபொருந்தினபோது உஷ்ணத்தையும் உண்டாக்குகிற நீரானது என்னபுண்ணிய பாபத்தைப்பண்ணிற்று, ஆகையாலெல்லார்க்கும் சுகதுக்கங்கள் ஸ்வபாவமே யென்னில்

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——0——

உ. லோகாயதன் மதமாசங்கித்துத் தூஷிக்கின்றார்

இருவினையென்னை - பாவபுண்ணிய மென்பதேது,—பிரத்தியக்ஷப்பிரமாண மொன்றுக்குமே விஷயமாகக் காணப்படாததினாலும் அதிஷ்டப்பிரயோசனம்,—இன்பத்துன்பங்க ளிப்படித்தென்னில் - சரீரத்தைத் தவிர ஆன்மாவில்லை, சரீரான்மாவுக்குச் சுகதுக்கங்களைச் சுபாவமென்று நீசொல்லில்,— ஒருதன்மையிலப்புக்குள்ளது-சீதத்துவம் ஜலத்துக்கியற்கை,— ஒருவனுக்கிரண்டு செய்திவருவதென - ஒருபுருஷனுக்குச் சுகதுக்கானுபவமிரண்டும் வருவதேது,— மலருந்தீயும் மருவலின் வாசம் வெம்மை தருவதென்னீதென் செய்ததான - ஜலம் என்ன கந்தத்தைப் பயந்தித்தான புஷ்பவாசனைகள் பொருந்தியவிடத்து மணஞ்சூடு கொடுப்பது. ஏது காரணம். இல்லை, - இப்பாகு மன்றே - பொருளியற்கைதானே

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——0——

இவ்வுரை - சு - செ, சேர்க்கப்பட்டிருப்பதைக் காண்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——0——

உள்ள தொன்றல்ல, பின்னை யுள்ளதேதது? இந்தச் சரீரத்துக்குச் சுகதுக்கங்க ளிரண்டு மியல்பாக வுண்டாமென்ற உலகாயதன்மத மருளிச் செய்கிறார்.

ருநதமென்று உலகாயுதன் தன்மதஞ் சொன்னனென்று மு றைமையை அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

இவ்வுரை - சு - செ, சேறகப்படிருபபதைக் காண்க.

---

## மறைஞானதேசிகர்.



முனசொனன லோகாயதனை மறுததுணர்த்துகிறுர்.

தன்னியல் பொழியபபூவுந் தழலும்வந தணையநீ
ரின், மன்னிய திரணடுசெய்தி வருமிரு வினையினுனு,
முன்னிய வின்பத்துன்ப முறுமுயி ருணர்விலாத,துன்
னிய வசித்தையினபத் துனபயகள்சூழ்ந்திடாவே.(சு)

(இ-ள) தன்னியல் பொழியப்பூவுந் தழலும்வந தணையநீரின் மன்னிய திரணடுசெய்தி — நீரானது தனக்கியல்பாகிய தடபததை யொழிந்து, மணததையும வெம்மையும பொருந்தியதற்கிரணடு குணமுணடாய தாகையால்,

வருமிரு வினையினுனு முன்னிய வினபத துனபத முறுமுயிர் — ஆன்மாக்கள் செய்யப்பட்ட விருவினையி ஞலு மவரவருககுத தகக சுகதுககபலங்களைப பொருநதும்.

உணர் விலாத துன்னிய வசித் — நெருங்கின பூதங்க டனக்கென்ன வறிவி லாமையானுஞ் சடமாதலானு மதனை யினபு

ரை யின்பத் துன் துன்பங்கள் பொருந்தாதான் எ - று.
பங்களை சூழ்ந்தி
டாவே. (சு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

இதற் சூத்திரம்.

தனியல் பொழியப் பூவுந் தழலும் வந்தணைய நீரில்மன னிய திரண்டுசெய்தி-நீருக்குத் தனக்கு இயல்பான குளிர்ச்சி நீங்கப் பூவும் நெருப்பும் பொருந்திட மணமும் வெம்மையும் பொருந்தித்து, அப்படியே,— வருமிருவினையினுறு முனனிய வினைப்பயனகள - புண்ணியபாபங்களென்று சொல்லப்பட்ட விரண்டுதொழிலினாலும் சுகதுக்கங்களாகிய கருமபலமானதுவரும —உறுமுயிர்-அந்தசுகதுக்கங்களை ஆன்மாவானது பொருந்தும்,—உணர்விலாத துனனியவசத்தை யின்பத்துனபங்களை சூழ்ந்திடாவே- அறிவில்லாததாய ஆன்மாவிற்கு போகாயதனமாயிருக்கிற தேகத்தை சுகதுக்கங்கள் பொருந்தாது, நீரிற்பொருந்தின வாசனையுமுஷ்ணமும் நீருக்கின்றி அந்த நீரை ¶ஸ்வீகரிக்கிற பேர்க்கானதுபோல தேகத்தில் பொருந்தின சுகதுக்கங்கள் தேகிக்கல்லது தேகத்துக்கில்லை.

¶ ஸ்வீகரித்தல் - அங்கீகரித்தல்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

நீ சொன்ன திஷ்டாந்தத்தி லானமாவிற்குச் சுகதுக்கங்களியற்கை யன்று, செயற்கை யென்றுதானே சித்தித்ததென்றுசெப்புகின்றார்

தனியியல்பொழிய-தனதியற்கைச் சிற்குணமறைய,— பூ வந்த பூழும் வந்தனைய - பொருந்த,— நீரினமணலிய திரளை செய்தி-மண்ணொடுகூட்டென்னனுஞ் செயற்கைக்குண மிரண்டும வந்துசோந்தன, அப்படி,—வரு மிருவினையினாலும்-புத்தியில் பொருந்திப புண்ணியபாவங்களினாலும்,— உன்னியவினபத்துனபம் - உண்டாகிய செயற்கைச் சுகதுக்கங்களை,—உயிருறும - ஆன்மா வநுபவிப்பன,— உணர்விலாத துன்னியவசித்தை யினபதுனபங்கள் சூழ்ந்திடாவே - ஆன்மாவைபபொருந்திய சரீரேந்திரியாதிகள் அறிவின்மையாதலா லந்தச் சுகதுக்கங்களை யநுபவியாது,அசித்தைப பொருந்தி யிராதென்றுரை பண்ணலாகாது.

சுகதுக்கங்கள் புத்திதத்துவத்தி லுண்டாய்ப் பொருந்தி யிருத்தல்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

ஒருபொருட்குத் தம்முன் மாறுபட்ட விரண்டுதன்மை காரணத்தானன்றி உளவாகாமையானும், தண்ணீருக்கு வாசமும வெப்பமுஞ் செயற்கையானுளவானவாகலின அதுவெயினடைக்கு உவமை யாய முடிதலானும், இன்பத்துன்பங்கட்கு சித்துக்கன்றிச் சடத்துக்குக் கூடாமையானும். அவ்வின்பத துன்பமிரண்டற்குங் காரணம வேண்டப்படு மாகலான, இருவினையெனப்படுஞ் சஞ்சிதமே ஆணடைக்குக் காரணமென்பதாம.

என்னையென்னும் வினா இன்மை குறித்துநின்றது.

அதுவெனனும பகுதிப்பொருள விகுதி அப் பண்பினமே னின்றது

தனியியல்பு உடபம

உணாவிலாத வசிததெனறது "அடியனைநானருபது" என்றார்போலக் கொள்க (ரு—கூ)

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—௦—

இப்படிச்சொன்ன உலகாயுதனை மறுத்து மேலருளிச் செய்கிறார்.

தனியியல் பொழிப்ப பூவுந் தன்னுமவந் தனையரினின மன்னிய திரண்டிசெய்தி - தன்னுடைய சுபாவமொழியப் பூவும் அக்கினியும் பொருந்த சலத்துக்கு இரண்டு குணமுண்டாயது அத்தன்மைபோல,—வருமிரு வினையினுறு முன்னிய வினைபத்துன்ப முறுமுயிர் - அநாதியே யுண்டாக்கப்பட்ட புண்ணியபாவங்களிரண்டினாலும் உள்ள நினைவுகளிடாக வாத்தக்க சுகதுக்கங்களை ஆன்மாப் பொருந்தி அநுபவிக்கும் அப்படி நீசொல்லுகிற வான்மாவை எங்கேயுண்டென்று காணப்பட்டது இந்த உடம்பு காணும் சுகதுக்கங்களை யநுபவிக்கிறது என்று நீ சொல்லில்?—உணாவிலாத துன்னிய வசித்தைபின்பத் துன்பங்களை சூழந்திடாவே - பிரஞ்ஞையில்லாத பூதங்களினுடைய காரியமுமாய சேதனமுமா யிருக்கிற சரீரம், நன்மை தீமைகளை யறியாது, ஆனபடியாலே யந்தச் சரீரத்தைச் சுகதுக்கங்கள் வந்து பொருந்தாது. ஆகையால் சேதனனாயிருக்கிற வான்மாவே யின்பதுன்பங்களை யறிந்து புசிக்கும்.

இதற்குப் பிரமாணம் பரபக்ஷம் அவன்மறுப்பு" கந்தமெவெம்மை கலந்திடும்புனல் கனமென்செய்த தென்றனை, சந்தண

ந்தழல் சாரகீரிரு தன்மையுற்றிடு மாறுபோற், தந்துகன்ம மிர ண்டணைந்து தருஞ்சுகத்தொடு துக்கமுஞ்,சிந்தியாவெழு சிவனு ற்றிடும் வேறுடற்கிலை தேறிடே.” எனுமதுங் கண்டுகொள்க.

சித்-பர, லோகா-மறு, கசு-செ.

இசனாற் சொல்லியது உலகாயுதன சுகதுக்கங்க ளுடலு க் கொழிந்த ஆனமாவுக கில்லையெனன, அவனை மறுத்து ஆன மாவே சுகதுக்கங்களை யனுபவிக்குமெனனு முறைமை யறிவித் தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

இருவினையென்னை - இருவினை யெனபவே யில்லை,— இன பத்துனபஙகளியல்ப தெனனில - இனமதுனபஙக ளியல்பே யாகுமெனின,—இயல்புக கொருதனமையுளளது இயல்பினுக் கொருதனமை யுளளதனறி,— ஒருவனுககிரணடு செய்தி வருவ தென,— ஒருபொருடகுத தமமுண மாறுபட்ட விரணடுதன மை வருவதுயாது,—மலருநதீயுமருவவின-போதுமனலும பொ ருந்துதலான,—வாசம வெமமை- மணமும் வெப்பமும்,—நீரெ னசெய்துதருவது - தண்ணீர் யாது காரணத்தாற் றரப்பட்ட து,—தானியல்பாகுமனறே- தானேயியல்பாகுமெனின?--நீரின றனியல்பொழிய-தணணீாககியற்கையாகிய தட்பமொழிய,-- பூவுநதழலும் வநதணைய - மலருந் தீயும் பொருந்துதலான்,— இரணடுசெய்தி மனனியது - வாசமும வெப்பமும் செயற்கையா னவாயின. ஆகலின் துவே யீண்டைக குவமையாய்முடிதலா னும்,— உனனியவினபதுனப முமிருறும்-கருதிப இனபதுன்ப நுகர்ச்சி யுயிராகிய சித [illegible] றனறி,—உணர்விலாத-உணர்வில்லா

னவாகிய,— தன்னியவசத்தைசூழ்ந்திடாவே - நெருங்கியசட த்திர்குக்கூடாமையானும்,—இனபதனபங்க ளிருவினையினுனு ம வரும் - அவவினபததனப பிரணடிர்குக காரணமவேனட ப்படுமாகையால் இருவினையெனப்படுமெ சஞ்சிதமே யாணடைக குகாரணமெனப்படுமெ எனபதாம. (ரு—சு)

---

## மறைஞானதேசிகர் உரை.



அவன மீளவுமிமமையிற் றொழில் செய்ததனாலே
பொருடேடிப் போகங்களையு மிசசனனததி
லனுபவிககும தொழிநது, மறுமைபபயனி
ல்லை யெனபதனை யுணாததுகிறா.

இம்மையின் முயறசியாலே யிருநிதி யீட்டியின்ப, மிமமையே நுகாவாசெயதி யிலாதவர் பொருளுமி னமி, யிமமையே யிடருழபபர் வேயிரு வினையதுண டே, லிம்மையின முயற்சியினறி யெயதிட வேணடுமி ஙகே. (எ)

(இ-ள்) இம்மையின முயற்சியாலே யிருநிதி யீட்டி — ஆன்மாக்களிந்த வுலகிற் றமது முயற்சியிற் பிரயாசப்படடுப பெருகப பொருளை யாாசசித்து

இனபமிம்மையே நுகர்வர் — இம்மையிலே தானே சுகத்தை யநுபவிப்பார்கள்

செய்தி யிலாதவர் பொருளுமினறி யிம்மையே யிடருழப்பர் — இஃதனறி மடிமையை யுடையோர்கண் முயற்சியினமையாற் பொருளும்பெறு திம்மையிற் றனே கமககில்லாதே போயிற்றெனறு துனபததையு முறுவார்கள்.

வேறிரு வினை யதுணடேல் — இன்ப துன்பங்கட்குக் காரணமாகிய ம டியு முயற்சியுமின்றி முற்சநநங்களி லார்ச் சித்த விருவினைப்பலன்கள் வேறுண்டாகில்,

இம்மை யின முயற்சியின்றி யெய்திட வேண்டுமிங்கே — அந்த விவ்விடத்து முயற்சியு மடியுமில் லாதிருக்கவும் பொருளுண்டாக வேணுங் காண் எ-று (எ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

மேல்சங்கை

இந்தத்தேகத்திலுடைய உச்சாகத்தினாலே பகுவான திர வியத்தைத் தேடி, அதினாலே இந்தத்தேகத்திலே தானே சுகத் தையு மனுபவிப்பார்கள் உச்சாக மில்லாதவர்களுக்குப் பொ ருளில்லாம லிங்கேதானே துக்கத்தை அனுபவிப்பார்கள். இ ந்த உச்சாக மடிமை யென்கிற விரண்டுமல்லாமல் வேறே புண் ணியபாபங்களென்கிற இரண்டு முண்டாமாகில் உச்சாகமன்றியி லே யிப்பொழு திவ்விடத்துண்டாக வேணுமே

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

காரணமாகக் காணப்பட்ட பொருளைக் காரணமாக விலக் கமையுமென்று, கற்பிப்பதே முக்கியம், காணாத காரண கற்ப னை நிஷ்பிரயோசனமென் றுசங்கிக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இவ்வுரை - அ - செ, சோகக்கட்டப்பட்டிருப்பதைக் காண்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—o—

மேல்வரும் இம்மையிலே தொழில்களைச் செய்து பதார்த்தங்களை யுண்டாக்கி யதனா லுண்டான போகங்களை யிந்த சகத்திலே யனுபவிக்கும் தொழிற்கு மறுமைப்பய னில்லையென்கிற உலகாயதன மதமே லருளிச் செய்கிறார்.

இம்மையின் முயற்சியாலே யிருந்த பீடு - இந்த சகத்தி லுண்டாகிய உற்சாகத்தாலே மிகுவிப்பாகத் தனங்களைச் சேகரித்து,—இன்பம் இம்மையே துகர்வர் - அந்தப் பதார்த்தங்களி லுண்டாய போகத்தை யிந்த சகத்திலே புசியாநிற்பார்கள்,—செய்தி யிலாதவர் பொருளுமின்றி யிம்மையே யிடருழப்பர் - ஒரு தொழிலுஞ் செய்ய மாட்டாதவர் தனங்களு மில்லையாய் இம்மையிலே துயரத்தோடே கூடி அழுந்தப்படாநிற்பார்கள்,—வேறு நிலையுந் தன்றேல் - இதுவொழிந்து வேறே முற்சந்மத்தில் வாசித்த புண்ணியபாவங்களுண்டாமாகில்,—இம்மையின் முயற்சியன்றி யெய்திட வேண்டுமிங்கே - இந்த சகத்திலே ஒருதொழிலுஞ் செய்யாமலிருக்கச் செய்தேயுந் திரவியமுண்டாக வேணும், அப்படி யுண்டாகாது அதுகொண்டே மறுமைப்பய னில்லை யாகையால், இந்த சகத்திலே செய்த தொழிலா லுண்டாகிய பயனை இங்கே யனுபவிப்பன.

இதனாற் சொல்லியது, உலகாயதன இம்மையிலே தொழில்களைச்செய்து அதனா லுண்டாகிய திரவியங்களைக் கொண்டு

இம்மைப்பயனை யனுபவிக்கிற தொழிந்து மறுமைப்பயனில்லை யென்றுன எனனு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---o---

இவ்வுரை - அ - செ, சோக்கபபட்டிருப்பதைக் காண்க.

---

## மறைஞானதேசிகர் உரை.

அவனை மறுத்துணாத்துகிறுர.

இருவினைச் செயல்காணிம்மை யிரும்பொரு ளின்பம்வேண்டி, வருவினை செய்யுங்காலை மடிவரு மடியு மின்றித், தருவினை யதனிலத்த தானறுந் துயரந்தங் கு, மொருவினை செய்யாதோரு முடையரிவ் வுலகந் துளளே. (அ)

(இ-ள) இருவினைச் செயல்காண — நீ முற்கூறிய மடியு முயற்சியு மிருவினையால வருஞ் செயதிகாண, ஆனமாகக் டமது முயறசியா லுண்டாவதல்ல அஃதெங்ஙன மெனனில்?

இம்மையிரும பொரு ளினபம வேண்டி வருவினை செய்யுங்கால மடிவரும் — இம்மைக்கண் ணொருவன மிகவும் பொருட்டே வாசைப்பட் டதற்கேற்ற வினைசெய்யுங் காலத்தி லவன முற்சனனத்தி லாச்சித்த நலவினைப்பய னுண்டாகாவிட்த தமமுயற்சி நீங்கி மடிமைவந்து பொருந்தாநிறகும

மடியுமின்றித் தருவினை யதனி — மடிமைவந்த காலத்து மடிமை நீங்கிப பொருளவரவிற கேதுவாகிய வைகளா லீட்

லத்தற் தானாறுந் துயரந்தங்கும்

டியதனுமொரோவழி பொருந்தும். முற்சநநத்தி லார்ச்சித்த சற்கனமமில்லையாகிற் களவுமுதலியவற்றாற் பொருள் போனவாற்றே துன்பமடையாநிற்கும்

ஒருவினை செய்யாதோரு முடைய ரிவ்வுலகத் துளளே.

ஆகையா லிப்படிப்பட்டதொரு முயர்ச்சி செய்யாதிருக்கவும், பூர்வத்தி லார்ச்சித்த கனமபலத்தாலே பொருளையு மின்பத்தையு முடையரா யிருப்பார்கள் எ-று

உம்மை யுயர்வு சிறப்பு (அ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——0——

இதற்குத்தரம்.

இருவினைச் செயல்காண-சுகதுக்கங்கள் வருவதெல்லாம் புண்ணியபாபங்களுடைய தொழிலினாலல்லது இம்முயற்சியால வாராதுகாண், அதெவ்வாறெனனில்?— இம்மையிரும் பொருளின்பம் வேண்டி வருவினை செய்யுங்காலை மடிவரும் மடியுமின்றித் தருவினை யவனி லத்தந் தானாறுந் துயருந்தங்கும்- இம்மையிலே அதிகமான பொருளைத்தேடி சுகத்தை யனுபவிக்கவேண்டிப் பொருளவருமுயாச்சியைச் செய்யுங்காலத்து மடிமைவரும். மடிமையைத் தவிர்ந்து உச்சாகத்தைப் பண்ணினும் மற்றுப் பொருளுமில்லாமல் போனாலும் போம். பொருளில்லாததனறி அபாயம் வரினும்வரும்,— ஒருவினைச் செய்யாதோரு முடைய ரிவ்வுலகத் துளரே-பிராரத்த மல்லது வாராதென்னும் முறைமையை யறிந்த பெரியோர், அயாசிதவிருத்தமாக பூமியினகண்ணே யிருக்கவும் அவர்களுக்கு சீவனம் நடக்கவும் கண்டோம்.

---

## ஞானப்பிரகாசனார் வருமாறு.

—0—

இம்மைமயின் முயற்சியாற் செய்யுங்கன்ம மோரிடத்திற் பலத்தைப் பொருந்தி யோரிடத்தி னீங்கி வியபிசரியாதாதலா லவ்வியபிசரித்த விடத்துக்கரணுத் காரணங் கற்பிக்க வேண்டு மென்று காண்பிக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—()—

அற்றேல் அக்காரணமாவது முயற்சியேயாமென்பது உடம்பாட்டினு மெதிர்மறையினு மைந்தூக கண்கூடாக வறியக் கிடத்தலின் அதுவேயமையும், வேறுமோர் காரணங் கோடன் மிகையா மென்றது பொருந்தாது அஃதொரோவழிப் பிற முதலுர் அவ்விருதிறத்தினு மைந்துதறியக் கிடத்தலின் நியத காரணம் வேறுண்டென்பது பெறப்படுதலால், அதுவே ஆணைக்குப் புலனாகாத சஞ்சிதவினை யென்று அறியப்படுமென்பதாம்

ஒருவினை செய்யாதோரு முடையராதல் கிழியீடு நேர்பட்டுப் பெற்றா முதலாயினாமாட்டுக் காணப்படும்

ஈண்டியவென்றது செய்வினை. இஃது 'உடையார்முனில்லார்போல்' என்பதனானுமறிக

இவைநான்கு செய்யுளாலும் உலோகாயதர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்துச் சஞ்சித மெனப்படு மிருவினையுண்மை, காரியவேதுவின் வைத்துச் சாதிக்கப்பட்டது.

அற்றேல், இருவினையொப்பு மலபரிபாகமு மாகலின் "முயற்சி திருவினையாக்கு முயற்றின்மை- யின்மை புகுத்தி விடும்" எனப்படுமா றிச் செய்யும் மனமுயற்சிக்குப் பயனில்லை போலுமெனின்? அது முன்னறக் கூறப்பட்டது (எ—அ)

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—()—

மேலும் அவனைநோக்கி மறுமைப்பயனு மடைமென்று மறுத் தருளிச் செய்கிறார்

இருவினைச் செயல்காண் - நீ முன்னமே சொன்னவையெல் லாம் முற்சன்மத்திலே செய்த புண்ணியபாவங்களினுடைய முறைமைகாண்,—இம்மை யிருவினைபாரு பரிபக்குவமேயன்றோ-இந்த சன்மத்திலே மிக்க பரிபாகத்திலேயுண்டாகிய போகத்தை விரும்பி,—வருவினை செய்யுங்காலை மடிவருமா - இப்பிறவியிலுண்டாகத் தக்க தொழில்களிலே நின்று உதாசீனமாயிருந்தாலும், முற்சன்மத்திற் செய்த புண்ணியபாவங்களுண்டாயவதற்குக் கூடுதலில்லையாகில், உதாசீனத்தையுடையராயிருந்து இதற்கு மறுமையிலாகிய மடிமையைக் கூடாநிற்குமே இதனையறியுமா,—மடியுமின்றித் தருவினை யதனிலதனைத் தானுமன்றுத் தீருமது—போர் தமு மடியாமலிருந்த விருப்பத்துடனே திரவியமுண்டாகத் தக்க தொழில்களைச் செய்தாலும் முற்சன்மத்திலே இவன்செய்த புண்ணியகன்மமில்லையாகில், இவன் கையிலுள்ள திரவியத் தனாணமே போய், மேல்வருகிற ஆக்கமு முண்டாகாமல், வியாகுலமே யுண்டாகாநிற்கும்—ஒருவினை செய்யாதோரு முண்டே யறிவுலகத்துள்ளே-இப்படி முன்சொல்லப்பட்ட தொழில்களுக்குள் ஒருதொழில்களுஞ் செய்யாதிருந்தவர்கள் முற்சன்ம

த்திலே செய்த புண்ணிய கன்மங்களுக் கீடாக மிகுந்த சிங்கா ரணபக்கியா யிருப்பார்கள், பிரத்தியட்சமாக இந்தப் பூலோகந் தனக்குள்ளே

இங்ஙனம் சொல்லியது இம்மையிலுண்டான பதார்த்தங் களு மந்தப்பதார்த்தங்களா லுண்டாகிய புசிப்புகளுஞ் சாவு மு மறுமையிலுள்ள புண்ணியபாவங்களுக் கீடாக வருகிறதொ ழிந்து, இம்மையிலுள்ள தல்லவென்று, உலகாயதனை நோக்கி ம றுத்தருளிச் செய்தாரென்னு முறைமை யறிவித்தது

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

அற்றேல்-அக்காரணமாவது முயற்சியே யாமெனபது — முயற்சியாலே யிம்மையின் - முயற்சியா லிம்மைக்கண்,—இரு ந்தியீட்டி,—மிகுந்தபொருள்களை யீட்டுதல் செய்து,— இன்ப மிம்மையேநுகர்வர் - இன்பத்தையு மிப்பிறப்பின் கண்ணே ய நுபவிப்பரென வுடன் பாட்டினும்,—செயதியிலாதவர் பொரு ளுமின்றி-முயற்சி யிலாதவர் பொருளீதலின்றி,—இம்மையிற் றுன்புழப்பர்-இப்பிறப்பின்கட் டுன்பத்தினை யெய்துவரென எதிர் மறையினுமெய்த்துக் கண்கூடாக அறியக்கிடத்தலி னதுவே யன்றியும்,— வேறிருவினையதுண்டேல்-அதுவன்றி யிருவினையெ னபதொன்றுண்டென வேறுமோர் காரணங்கொள்ளின,—இ ம்மையின் முயற்சியின்றி-இப்பிறப்பின்கண் யாதொரு முயற்சி யின்றியும்,—இங்கேயெய்திட வேண்டும் - இவ்விடத்துப் பொ ருள் கைக்கூடவேண்டும். அஃதின்மையா னதுபொருந்தாதெனி ன,— இம்மை யிரும்பொருளின்பம் வேண்டி - இம்மைக்கட் பெரிய பொருளின்பங்கள்கருதி,—வருவினைசெய்யுங்காலை மடி

வரும் - வருகின்றவினை செய்யுமிடத்துச் சோம்பலுண்டாதலா னும்,—மடியுமின்றி - சோம்பலேயன்றி,—தருவினை யதனிலுந் தந்தானும் - தருகின்ற முயற்சிக்கண் பொருளின்றிப் போத லானும்,—துயருந்தங்கும்-அதனாற்றுன்ப மெய்துதலானும்,— இவ்வுலகத்துளோ-இவ்வுலகினகண்,—ஒருவினை செய்யாதோ ரு முடையா-யாதொரு முயற்சி செய்யாதோருஞ் செல்வரா யத் தங்குதலானு மாகிய பிரமசிய மவ்விருதிறத்திலும் வை த்தறியக்கிடந்த வினையக்காரணம் வேறுண்டென்பது பெறப் படுதலால்,—இருவினைச்செயலகாண் - அதுவேயாமுடைக்குப் புலனாகாச் சஞ்சிதவினையென் றறியப்படு மென்பதாம்.

இவைநான்குஞ்செய்யுளானு முலகாயதமதம் பற்றி யாசங் கித்துப் பரிகரித்துச் சஞ்சிதமென்னப்படு மிருவினையுண்மை கா ரியவேதுவினவைத்துச் சாதிக்கப்பட்டது. (எ—அ)

## மறைஞானதேசிகர் உரை.



ஆன்மா முன்சன்மத்தி லார்ச்சித்த கன்மபலத்துக்கீடாக
விச்சந்தெடுக்கும் காலத்திற் பேறுமுதலிய வாறு
வகையா லனுபவித்துத் தொலைக்கு முறைமை
யுணர்த்துகிறார்.

பேறிழ வின்பமோடு பிணிமூப்புச் சாக்காடென்
றாறு, மாறுமுன் கருவிற்பட்ட தவ்விதி யநுபவத்தா,
லேறிடு முன்புசெய்த கன்மமிங் கிவற்றிற்கேது, தே
றுநீ யினிச்செய் கன்ம மேலுடற் சேருமன்றே. (கூ)

(இ-ள்.) பேறிழ சங்கமுதலிய வாறு மானமாச் சுக்கில
வின்பமோ சுரோணிதத்துடனும் வாயுவுடனுங் கூடிச்

தேணிறைப்புச் சாக்காடென்னு மாறு முனகருவி றபட்டது — சுக்குமசரீரத்துடன் கருப்பாசயத்திற் றங்குடிபொழுது சிவஞானலககாலத் தமைந்ததாகும்.

அவ்விதி யனுபவத்தா லேறிடும — இங்ஙனம் விதிக்கப்பட்டவிதி யனுபவித்தே தொலைக்கப்படும்.

முனபுசெய்த கனமமிங கிவற்றிற்சேதது — முற்சந்நதத்தி லானமாக்க ளார்ச்சித்த விருவினைகளு மிப்பொழு திவவிட்டத் தனுபவிப்பதானவற்றிற்குக் காரணமாம்.

சேருநீ யினிச்செய்மகனமமே யுடற் சேருமனறே — நிகழ்காலத்திற் சரீரிசெய்கிற கனமங்களும் வருகிற சநதத்துக்குக் காரணமாயிருந் தாரத் தேகத்திற் கூடுமென்று நீதெளிவாயாக எ-று.

இருவினையெனவினையெனனும் விருத்தமுதல் விநான்கு மொருதொடர்.

சுப்பிரபேதத்திற் பேதித்துக் கூறிய தாகம பேதமெனவறிக.

கருவுட்பட்டனவென்று பன்மை கூறு தொருமை கூறியது, "ஒருமையிற் பனமையும் பனமையிலொருமையு மோரிடம் பிறவிடந் தழுவலு முளவே" எனபதனாற கூறியதெனவறிக.

" அட்டகவுலகத்தோடே யுயிர்பிதாவருந்தனனுதி, தொட்டவனுதாநதொகைக்குச் சுக்கிலத் துடனேதோனறிப், பட்டனைபபசததிற்பட்டுக் கருட்டையிற்பதிந்துமூர்த்திச், சட்டகமெனனத்தோனறித் தரணியிற்றரங்கிச்சாயும் "எனவறிக. (௬)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேலும்.

பேறு-ஒன்றுண்டாகிறது,—இழவு-போறது,—இன்பம்-சுகம்,—பிணி-துக்கம்,—(ஒடு-இடைச்சொல்)மூப்பு-நரைதிரை,—சாக்காடு-மரணம,—என்னுமாறு முன கருவுட்பட்டது-இப்படிச்சொல்லப்பட்ட ஆறும் கருவிற பதிக்கிறபோழுதே முன செய்த கருமத்தில் பசகுவமானவை பிராரப்தகமாகப பொருக்கப்பட்டது,—அவவிதி யனுபவததால் ஏறிடு,— அநதபிராரப்தத்தினுடைய சுக துககானுபவத்தினுமேல் ஏகாமயமேறிடும்,—முனசெய்த கனமமிலகிதனுககேது-பூாவததிலே செயத கருமஙகளிநதேகததிலே யனுபவிககிற சுகதுககஙகளுககேது,—தேறு நியினி-செய கனமமேலுடற்சேருமனறே-இநததேகததிலே செயகிற புணணியபாபஙகளினுமேல் தேகாநிக கூனப பொருநதுமெனறு தெளிவாயாக

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

பிராரத்தம புசிக்குமிடத் தாகாமிய மேறுமுறைமையும், அது சஞசிதத்தோடு கலநது காலாநதரததிற் பலன கொடுககு மெனபதும், பல மாறுணடெனபதும படித்தறிவிக்கின்றா

பேறு - தனககு யோககிய போக்கியப் பொருளைப் பொருநதுதல்,—இழவு - நியமிதத காலாநதரததி லகைப்பிரிதல்,—இன்பமோடுபிணி - சுகதுககம்,—மூபபு - நரைதிரை,—சாக்காடு-மரணமெனகினற,—ஆறு முன கருவுட்பட்டது-சரீரத்தடைத்தது,—அவ்விதி யனுபவத்தால் - நியமித்தகாறின

தனுபூதியால்,—ஏறிடும் - ஆகாமிய கன்மம் வந்துபொருந்தும்,—முன்புசெய்த கன்ம மிங்கிதனுக்கேறு - முன் சன்மங்களிற்பண்ணிச் சஞ்சிதமாய்க் கட்டுப்பட்ட கன்மத்துட் பக்குவப்பட்டவாகிய பிராரத்த கன்ம மிவ்வாக்குறுங் காரணம். கண்டகாரியானுமானத்தாற் காணாத காரண மநுமிக்கப்பட்டது,—தேறநீ - இப்படி யநுமித்துத்தெளிநீ,—ஒனிச்செய் கன்ம மேலுடற் சேருமன்றே - இப்போதேறு மாகாமியகன்ம மேற் சஞ்சிதத்தோடு கலந்து சில பக்குவமாய்ப் பிராரத்தகன்மத்தோடு கூடி மேல்வருஞ் சன்மங்களி லெடுக்குஞ் சரீரங்களிற் பேறிழவின்பமுதலாய பலத்தோடும் பொருந்தும்,—கண்ட காரணானுமானத்தாற் காணாதகாரிய மனுமிக்கப்பட்டது

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

எடுத்ததோருடம்பின் வரக்கடவனவாகிய இன்பத்துன்பங்கட்கு ஏதுவாகிய செல்வ வறுமைகளும், அவற்றான் வரும் உயர்விழிவுகளும், அவற்றானாய இன்பத் துன்பங்களுமாகிய வாறுமமுன்னே தானே சூக்குமமாய்க் கருவினுள்ளே யடங்கிக் கிடந்தனவன்றி, அப்போதைப்போது உளவாவனவல்ல அவைபயின்னாத் தூலமாய்வந்துகூடுதல் அவற்றையனுபவித்தற்குத் துணையாகிய முயற்சியானும். அங்ஙனமனுபவித்தற்குத் துணையாகவெழுந்த, முயற்சியும் அவ்வளவினொழியாது மறறொருடம்பிற் படும் அவ்வறுவகைக்கும் வித்தாய வினைபெறும். முற்பிறவியினீட்டு முயற்சி இப்பிறவியின் வருமவ்வாறிற்கு ஏதுவாயினாற் போலுமதுதனையேமுயற்சியானுகைக்கடவது பிறிதில்லையென்பதாம்.

பிணியெனபது ஈண்டுத் துன்பயாதிரையேயுணர்த்தி நின்றது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முற்சனநத்திற் சரீரத்தா லுண்டான புண்ணிய பாவங்க ளந்தச் சரீரம விடும்பொழுது அதுவும ஒக்கபபோம், அது இந்தச்சனநதத்தில் வந்து பொருந்துகிற முறைமை யெப்படியென்ற வினை நோக்கி அருளிச்செயகிறார்.

பேறிழ வினபமோடு பிணிமூப்புச் சாச்காடென்று மாறு முன் கருவுடபடடது - இவன பொருட சாரவு உயிரசசார்வு என்று சொல்லப்பட்ட விரண்டையும பெறுகிறது, இவையி ரண்டை யிழந்துவிடுகிறதும, ஒருசுகதுக்கத்தை யநுபவிக்கிறதும், அசசேறு வியாதிமுதலான துக்கங்களை யநுபவிக்கிறதும, விருத்தாப்பியத்தால் வருகிற துக்கங்களும், மரணமும, என்று சொல்லப்பட்ட இந்த ஆறுகாரியமு முற்சனநதத்திற் செய்தது; இப்பொழுது மாதாவினுதரத்தி லுண்டாகிய கருப்பையிலே ஆணமா வணுவாகச் சென்று பதிந்த வவதரத்திலே யிவையுங் கூக்கமாகச் சென்று கூடிப் பதியாநிற்கும் —அவ்விதி யனுபவத்தா லேறிடும்-அந்தமுறைமை பரமேசுவரன விதித்தபடியே யநுபவித்துத் தொலைந்துபோம். இதற்குக் காரணமேதெனனில்?—முன்புசெய்த கன்மமிவை கிவற்றிறகேது-முற்சனநதத்திலார்சசித்த புண்ணியபாவம இவ்விடத்து இந்த அனுபவத்துக்கும் அதுவே காரணமாம். இந்தவுடலிலே இப்பொழுது செய்கிற கன்மம அநுபவிப்ப தெப்படியெனனில?—தேறுநீ யினிச்செய்கன்ம மேலுடற சேருமனறே - இந்த முறைமைபோல இப்பொழுது நீசெய்கிற கனமங்களும் வருகிற சனநதத்தில் எடுக்கிற தேகத்திலே கூடுமென்று புத்திபண்ணுவாயாக.

இதனாற் சொல்லியது முற்சனநத்திற் செய்த புண்ணிய பாவம இந்த சனநத்திற் பொருந்துகிறபடி யெப்படி யென்ற

வனுக்கு அதுவந்து பொருந்துகிற முறைமையும்; அதனாலுள்ள சுகதுக்கங்களை இந்தவுடலிலே யநுபவிக்கச் செய்தே ஆர்சித்த புண்ணியபாவங்கள் மேலெடுக்கிற வுடலுக்கு அநுபவமாமென னு முறைமையு மறிவித்தது

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

பேறிழவு - எடுத்ததோருடம்பின் வரக்கடவனவாகிய இன்பதுன்பங்கட்கேதுவாகிய செல்வம்வறுமைகளும்,—றூப்புச்சாக்காடு-அவற்றின்வரும் உயர்விழிவுகளும்,—இன்பமொடு பிணி - அவற்றானாகிய இன்பதுன்பங்களும்,—எனனுமாறும்- ஆகிய ஆறும்,—முன்செருவுபட்டது - முன்னேதானே சூக்குமமாயச் கருவினுள்ளமைந்து கிடந்தவன்றி யடப்போகப்போதுள வாவனவல்ல,—அவ்விதி யனுபவத்தாலேறிடு-அவை பின்னர்த் தூலமாய் வந்தெடுத்த லவற்றை யனுபவித்தற்குத் துணையாகிய முயற்சியானும்,—முன்புசெய்தகன்மம்மிக்கிழனுக்கேது-அங்ஙன மனுபவிக்கிறதற்குத் துணையாக எழுந்த முயற்சியும் அவ்வள விலொழியாது மற்றோருடம்பிற்படும் அவ்வாறுவகைக்கும் வித்தாய்நிலைபெறும்,—இனிச்செய்கன்மமேலுடற்சேருமன்றே-முற்பிறவியினிகழ்ந்த முயற்சி யிப்பிறவியினவரும் அவ்வாறிற்கு மேதுவாயினாற்போலு மத்தன்மைபெ முயற்சியானுக்கக்கடவது பிறிதில்லையென, நீதேறு-நீதெரிவாயாக.

---

## மறைஞானதேசிகர் உரை.

இக்கன்மம் பிறவாகாராதி யொன்பதற் குகார
ண பூர்வமாக வுணர்த்துகின்றா

உடற்செயல் கன்மமிந்த வுடல்வந்த வாறென்
னென்னில், விடப்படு முன்னுடம்பின் வினைபிறக்க வு

டல்வினைக்கும், தொடர்ச்சியா லொன்றுக்கொன்று
தொன்றுதொட் டநாதிவித்தி, னிடத்தினின் மரமர
த்தின் வித்தும்வந் தியையுமாபோல். (க0)

(இ-ள்) உடற்செயல் கன்மமிந்த வுடல்வந்த வாறென்னெனில் — இவ்விருவினைகளு முடலின் காரியமாக வேண்டும், இனியிவ்வுட லுண்டாதற்குக் காரணமியாதென்று கேட்கிறாயாகில்,

விடப்படு முன்னுடம்பின் வினையிந்த வுடல் வினைக்கும் — முற்சன்மத்தில் விடப்பட்ட தேகத்தினின்று செய்த கன்ம மிந்த சந்ததையை யுண்டாக்குமென்று நீசொல்லில்? இதரேதரா சிரயமென்னுங் குற்றமுண்டாமென்று,

தொடர்ச்சியா லொன்றுக்கொன்று தொட்டநாதி — இந்தமுறையே கன்மமு முடலுமொன்றுக்கொன்று காரணமாய்த் தொடர்ந்து தொடர்ந்து சந்தானகடோறும் வருகையா லிவை பிரவாகாநாதியாகும் அஃதெனைபோல வெனில்?

வித்தி னிடத்தினின் மரமரத்தின் வித்தும்வந் தியையு மாபோல். — வித்தினிடத்து மரமுண்டாய் மரத்தினுக்கு வித்துண்டா யிப்படி யொன்றுக்கொன்று காரணமாய் வந்து தோன்றுமாறு போல் எ-று.

பிரவாகம் என்பது இடையறாமல் வரும் பெருக்கென்றறிக.

பிரவாகாநாதி, அநாதியென்பதில் தலைக்குறைத்த லாகினர்.

இதற்குச் சித்தியமும் பார்க்கியையு மெனவறிக. (கா)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



உடற்செயல் கன்மமிந்தவுடலவந்தவா றெங்ஙனெனில்-உடலினாலே புண்ணியபாபங்கள் செய்யப்பட்டது, இந்தவுடல் புண்ணியபாபங்களினாலே வந்ததெனனில்? அன்னியோன்னியாசிரயமாகக்கூறு, ஆகையால் தேகோற்பத்தியாதி யுற்பத்திக்குக்காரணமேதெனனில்?— விடப்படு முன்னுடம்பின் வினையிந்த வுடல்வினைக்குந் தொடர்ச்சியா மொன்றுக்கொன்று தொன்றுதொட்டநாதி - முன்னேவிடப்பட்ட தேகத்தினாலே பண்ணினகருமமிந்த வுடலுண்டாகக்கூறும், இப்படியே தொன்றுதொட்டு ஒன்றுக்கொன்று ¶ த்வந்தமாய் பிரவாகாநாதியாயுள்ளது எவ்வாறெனனில்?—வித்தினின்றும் மரமும் மரத்தினின்றும் வித்துமுண்டாயதுபோல் - ஒருநிலமானதிலே ஒருவிருக்ஷமுண்டாகி அந்தவிருக்ஷத்திலே அநேகவிருக்ஷங் காரணமாக அநேகவிருக்ஷங்களுண்டாம், அவ்வாறுகருமமானது பிரவாகாநாதியாய் முன்மலத்தொன்றாய் புண்ணியபாபஸ்வரூபமாய்அத்துவரிஷ்டமாய் இருவினைகளுக்குக்காரணமா யிருத்தலால் இவ்வாறுதேகங்களுங் கருமங்களுமுண்டாம், *அன்னியோன்னியாசிரயதோஷமில்லை.

¶ த்வந்தம்-இரண்டு.

* அன்னியோந்நியாச்ரயம்-தன்னையறிய அதனறிவையும் அதைஅறியத்தன்னறிவையு மபேட்சிக்கிற ஒருகுற்றம்



## ஞானப்பிரகாசருரை வருமாறு.



சரீர கன்மப் பிரபந்தம் பிரவாகாநாதியென்று பேசினார்.

சரீராந்தரங் கன்மாந்தரம், கன்மாந்தரஞ் சரீராந்தரத்து க்குக் காரணமாதலால், இதரேதராசரய தோஷமு மில்லை யென நிருத்தயம்

வெளிப்பொருள்.

—

## சிவஞானயோகியருரை வருமாறு.



அங்ஙனம் உடலும் வினையும், வித்தும் மரமும்போலத், தம்முட் காரண காரியமாய்த் தொன்றுதொட்டுப் பிரவாகாநாதியாய் வருதலின், அவற்றிற்குத் தம்முண் முறைபிறழ்பாடு முடியாதென்பதாம்.

அற்றேல், வரம்பின்றியோடி அநவத்தையாய்ப் போலுமெனமலையற்க, அவ்விரண்டற்கும் மூலமாகிய சூக்குமவுடம்பு வேறுண்மையின.



## நிரம்பவழகியருரை வருமாறு.



கன்மங்களெல்லா முடலாலே யுண்டானது, இந்தவுடல் தானே யதாலே யுண்டானது என்றவனை நோக்கி; மேலருளிச் செய்கிறார்

உடற்செயல் கன்மமிந்த வுடல்வந்த வாறேதென்னில் - கன்மங்களெல்லா முடலிலே நின்று செய்யப்பட்டதா யிருக்கது, எனக்கு இந்த வுடம்புவந்து கூடினமுறைமை எப்படி யெனில்,—விட்டபடு முன்னுடம்பின் வினையிந்த வுடல்வினைக்கும் - முற்சன்மத்தில் விடப்பட்ட சரீரத்திலே நின்று செய்த கன்மம் இனிமேல் ஒருடலை யுண்டாக்கும். இப்படியே,—

தொடர்ச்சியாய் ஒன்றுக்கொன்று தொட்டு - ஆகையாலே ஒருதேகத்திற் செய்த கன்மம் ஒருதேகத்தை யுண்டாக்கப்பட்டு இப்படி தொண்டு தொட்டு வாராநிற்கும் அதெனபோல என்னில்,—அநாதி வித்திலிடத்தின்ன மர மரத்தின வித்தமயங்க திசையுமாபோல் - அநாதியே விதையினிடத்திலே மரமும அந்தமரத்திலே விதையுமவந்து தோன்றுகிறுபபோல.

முன்னுடம்பு பின்னையிந்த வுடல்விளைக்கும், கன்மமென்ப தொன்றில்லையென்ற உலகாயதனை நோக்கி, கன்மமுண்டென்று மறுத்து அருளிச்செய்ததெனக் கொள்க

அதாவது யோனிபேதங்களாகவும் இந்திரியங்க ளேற்றக் குறைவாகவும் சாதிபேதங்களாகவும் இப்படி பலபேதப்பட்டு கன்மத்துக் கிடாகையால், கன்மமுண் டென்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் பரபக்ஷம் "ஐந்துநானகொரு மூன்றிரண்டொ டொன்றதா யுடலங்களின், வந்திடாவுனா விந்திரியங்களும் வன்ன பன்மையு மின்மையாம், புந்தியோடிய வன்னபோக குணங்கள்பூத புணர்ச்சிதான், நந்திடாதிவை பேதமாயிட வந்தவாவினை தந்தவா.

சித-பர-உல-மறு, கூ-செ.

தொடர்ச்சியா லொன்றுக்கொன்று தொண்டுதொட்டநாதி, இமையிற் செய்தது இமையிலே யனுபவிக்கிற தொழிந்து முன்புள்ள தல்லவென்றவனை நோக்கி மறுத்தருளிச்செய்ததெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் பரபக்கம் "அநாதியே லனாவினரெனின மலமாயைகனம மனுச்சிய, அநாதிகனம மனுக்கள் செய்ய வறிந்துகனம முடரசெயா, வநாதிகாரிய மாமுடத்க

ளேச்சனமப்பணை யாவறிந்,தநாதியாதி யமைக்கவேண்டு மமைப் பிறிது மநாதியே" என்றாறறு கண்டுகொள்க.

சித-பர-உல-மறு, சஅ-செ.

இசன்றை சொல்லியது வித்திலிட்டத்திலே மரமுண்டானாற்போலவு மீளவு மரத்திலே வித்துண்டானாற்போலவும், கன்மத்திலே யுடலுண்டாயு மீளவு முடலிலே கன்மமுண்டாயுர, இப்படி சரீரமுங் கன்மமும் அநாதியே தொண்டு தொட்டு தொடர்ச்சியாய் வருமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உடற்செயற்கன்மம் - தனுவினைச்செய்தற்பாற கன்மமுண்டாம்,— இந்தவுடல்வந்த வாறேதெனில்-இந்தத்தனுஉண்டாதற்குக் காரணமியாதெனில்,—விட்டபடு முன்னுடம்பின்வினை-நீக்கப்பட்டு முற்றானுவினைக்கன்மம்,— இந்தவுடல்விக்கும்-இந்தத்தனுவைவிளைவிக்கும்,—வித்திலிட்டத்தினின்மரம் - வித்தின்கண்மரமும்,— மரத்தின்வித்தும் வந்திடையுமாபோல்-மரத்தின்கண் வித்தும் வந்துபொருந்து மாறுபோல,—ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாய் - தம்முட்காரணகாரியமாய்,—தொன்றுதொட்டநாதி-தொன்றுதொட்டுப்பிரவாகாநாதியாய் வருதலின்வராநிற்குந் தம்முறமுற்பிறபாடு முடியாதெனபதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படி யுடலெடுத்துத் திரிகிறவனுக் காகாமி யமேறுமா றுணர்த்துகின்றார்

முற்செயல் விதியைப்பிந்த முயற்சியோ டனுபவி
த்தா, லிச்செயல பலிக்குமாறெ னிதமகி தங்கண்முன்

ன, ரச்செய லானுவிக்கு மனைசெயின் மேலைக்காகும், பிற்செயா தனுபவிப்ப தின்றுபின் றொடருஞ்செயதி. (கக)

(இ-ள்.) முற்செயல் விதிமை யபிந்த முயற்சியோ டனுபவித்தா விச்செயல் பவிக்கு மாறென — முற்சந்மங்களி லார்ஜிதத்த கன்ம மிந்தச் சந்மத்தின் முயற்சியாற் பிராரத்தமாய் புசித்துவிட்டா லப்பொழு திங்கே யநுபவித்து விடுகிறதொழிந்து மேலுமொரு சந்மத்துக் காகாமியமாகக் கூடுமுறைமையே யெப்படியென்று கேட்டிருப்பாயாகில்,

இதயசித்தங்கள் — மறுமைக்குண்டாம் வினை யீண்டதனைப் புசிக்கு மவசரத்தி லியான் பிறரையோ மயினேன் பிறரெனக்குத் தீமைசெய்தாரென்று மிதாகிதங்கள்

முன்னரச்செயல் — முற்சந்மத்து விதாகிதஞ் செய்ததனாலுண்டாய கன்ம மிப்போ தனுபவமாகும்,

ஆனுவிக்கு மனைசெயின் மேலைக்காகும் — இப்படிப் பிராரத்தம் புசிக்கையிலுண்டானதாகையா லிப்பொழுது மதனைப் புசிக்கிற காலத்துண்டாகிற விதாகிதமும் வருகிற சந்மத்துக்கேதுவாகா நிற்கும்

பிற்செயா தனுபவிப்பதின்று — ஒருகாலத்து மிவனுக் காகாமிய மேற்றும் புசிப்புண்டாக மாட்டாது,

பின்றொடருஞ்செயதி — இப்படியே சந்மங்கடோறுந் தொடர்ந்து தொடர்ந்து வராநிற்கும் எ-று.

முற்செயலென்றதுமுத லைந்துக்குஞ் சிந்தியாகம மெனவறிக. (கக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———0———

முற்செயல்வினையை யிந்தமுயற்சியோ டனுபவித்தா லிச்செயலயிற்குமாறெனை-பூர்வத்திற்செய்த புண்ணியபாவங்களை யிந்தத்தேகத்தில் யத்தினத்தினாலே புசிக்கிறதேயானால், இதனால் மேல்கருமமேறும்படி யெப்படியெனனில்?—இதமகிதங்கள-விருப்பு வெறுப்பாம,— முன்னர்ச்செயலானால்-பூர்வத்திலும புசிக்கையில விருப்பு வெறுப்பா லாகாமிய மேறுகையால்,—இங்கு மனைசெயினமேலைக்காகும-இவ்விடத்தது மந்தவிருப்புவெறுப்பைபண்ணினால மேல்சந்ததிக்க கேதுவாம்,—பிற்செயா தனுபவிப்பதினாறு-சிவா னுக்கிரகத்தினாலே ராகத்துவேஷ நிருமூசுதனுககொழிய ஆகாமியமேறுதபடி புசிக்கிறதுகூடாது, ஆகையா லாகாமியம பொருந்த அனுபவிப்பதில்லாமையால்,— பின்றொடருஞ்செயகி - செய்யப்பட்ட தொழிலானது புண்ணியபாவங்களால் சனம தொடர்ச்சியாய்வரும்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

ஆகாமியம வந்தேறுமாறு கூறுகின்றார்.

முற்செயல் வினையை - முற்சனனத்திற பண்ணின கன்ம பல சுகதுககங்களை,— இந்தமுயற்சியோடு - அந்தச சுகதுககங் களுககு முகற்காரணமாகிய போககிய கனம சுகதுககமாய்ப் பரிணமித்தற்கு நிமித்தமாய்ச் சனகந் தாரகமாகி யந்த முற்செயலுட் டானே யிருக்கும் போசக கனம மிப்பிரயத்தனத்தையுண்டாககி யதனேடு கூடியுண்டாகக, அந்தச் சுகதுக்கங்களை,—அனுபவித்தால் - புசித்தால்,— இச்செயல் பலிக்குமாறெனை - இவ்வாகாமியம் வருதற்குக காரணமேது,—முற்செய

லெப்படி வந்தது,—இதமகிதஙகளால் - எனனில்; இதமகிதங்கள,—முனனர் - முனனாக,— அச்செயலானல் - அநதமுற்ஜனம கனமமுண்டாமானல்,—அவைசெயின மேலைக்காகும - அநத இதமகிதங்களை யிப்போது பணணினால் மேலைக்காகும,மேல் மறுசனமததிற் சுகதுககக்காரணமாகு மாகாமிய மேறும, இதமகிதமும ஏவுதற்காதகா ணெனனுவிக்கு முறகனமபலம பணணனரோ, பினனாகாமிய மியற்றுபற காததாவாயிருககு மிவனாககுணடாகற்குக காரணமேது? சததியம' விவேகமினறி நானே பணணுகிற்கினறே னெனனுங் காவ ராக பயாவேசததாற கூதநதர கனம கர்ததாவாயப் பலனகொளபவனுமியும, தனககுததானே தோற்றியிருததலால்,ஆகாமிய மிதறமுனறுகாரணததாலேறும,—பிறகெயா தனுபவிபப தினறு - முறபணணைத்து பினனனுபவிப்ப தினறு,—செய்தினை தொடருமசெய்தி-மனேவாக்குககாயஙகளிற சமவாய சமபநதியாய் வருமிதமகிதமெனகிற வியாபாரதுலதனமம், கிருஷி கனமம்போற ஞெழிலாதலால் இஙகேகெட்ட தெஙகே போயப பினவநதுகான பலநதரும், கிருஷி கனமததொழில் கெடடாலும் அதனாற் பூமியிலுணடாகும சமஸ்காரமபோல, மனோவாககுக காயததொழிலு—னே கெட்டாலும் கெடும், முறகணததிற் ஞெழிலினல் புததிததுவத்திற் சமவாயசமபநதியாய் வைககபபட்டுப் பலபரியநத மிருககுஞ் சமஸ்காரமாகிய அதிருஷடமெனனும் பெயாசகுககுமகனமம்,— பினறுடரும்-சொாக்கநரக பூமிகளிற சூக்குமதேகத தேரிலிருநது போமவரும்.

## சிவஞானயோகியருரை வருமாறு.



அற்றேல் இத்துணையுங் கூறியவாற்றுன முன்புசெய்தகன்மம் இக்கிவற்றிற்கேதுவென்பதூஉம், அவற்றையனுபவித்தற

குத துணையாதன மாத்திரையே முயற்சியென்பதூஉ மொக்கு மாயினும், அவ்வாறு வினைப்பயனுக் கிடாக வருகின்ற முயற்சி மேலுடற் சேர்தற்குரிய வினையாமாறு யாங்ஙனமெனின்? நன்று சொன்னாய், முன்வினையெனப்படு மிதமகிதமாவன? முற்பிறவியினவ்வாறு நிகழ்முயற்சியேயன்றி வேறின்மையான், அதனை யுடம்பட்டாய்க்கு அந்நயம்பற்றி இவ்வுடம்புமுயற்சி நிகழ்ந்தால் அது மேலைக்கு வினையாமென்பதூஉமே போதரும் அற்றேல் ஒரோவழி முயற்சியின்றி யிருப்பார்க்கு மேல் வரக்கடவதொன்று இல்லைபோலுமெனின்? அற்றன்று, அனுபவமாவது முயற்சியைப் பொட்டியே நிகழ்வதொன்றாகலிற் பிராரத்தவினையனுபவமுள்ளளவும் முயற்சியும் ஒருதலையானுண்டென்பது பெறப்படுதலின், அனுபவமுள்வழி மேலைக்கு வரக்கடவதொன்றில்லையென்றல் யாண்டையதென்றொழிகவென்பதாம்.

ஒருவினை செய்யாதோரு முடையரென்றதூஉம் வருந்திச் செய்யவேண்டாது எளிதிற் பெறுவது நோக்கியே பிறிதன்றென்பது கருத்து.

மரங்கள் முதலியவற்றிற்கு தண்ணீர் முதலியவற்றை ஏற்றுக்கோடற்குரிய சூக்குமமுயற்சி யுண்டென்பது உணர்ந்துகொள்க.

யாண்டும் பிறழாமை யுணர்த்துதற்கன்றே பிற்செயாதனுபவிப்பதின்று என எதிர்மறை முகத்தான் வரைசெய்து கூறினாரென்பது.

ஆறேலென்பது தெளிவின்கண் வந்தது; காண்பவன்சிவனேயாவ என்றாற்போல.

அற்றேல் ஒன்றன்பொருட்டு வந்தது மற்றொன்றன்பொருட்டாதல் கண்டிலமாதலின், இதமகிதங்கள் முன்னர்ச்செய

இதனாற் சொல்லியது தான மேற்கப்பட்டவர்களும் தானமிடப்பட்டவர்களும் அநதந்கத் தானஞ்செய்த திரவியங்களு மிங்கே யழிநதுபோகையினாலும்; ஆன்மாதான்செய்த கனமத்துக்குத தககபயனை யறிந்து கூட்டிப் புசிக்கைக்குத் தனக்கென்ன வறிவில்லாதபடியாலும், சர்வஞ்ஞனுயுள்ள பரமேஸ்வர னறிந்து கனமத்தையுமா னமாவையுங் கூட்டிப் புசிப்பிப்பனென்னு முறைமையு மறிவித்தது.

'இறைவனி வரு' என்ற திருவிருததமுதல் 'தானஞ்செய்' என்ற திருவிருதத மீறாக எடுடும் பட்டாசாரியன். இதற்குப பிரமாணம் பரபட்சம அவனமதம் " செயறரும் வினைகணமாய்ந்து சிநதையிற் சோகதுநின்று, பயனொடு பலியாகிறகும் பலாலமுந் தனழுமெல்லாம், வயறனின மருவிநாசம் வநதபின பலத்தைவநதிய, கியல்பொடு தந்தாற்போல வெனறுமபிலிய ம்புகினறுன." எனறும்.

சித - பர - பட்டா - மத, கo - செ.

அவனமறுப்பு " அழிகினற தால்வினைக ளாகின்றவாறெனரு வநமங்கியானபரிசே, லொழிவின்றி யோதனமு மறவுண்ணநாம்வினைக ளுறுகினறவாறதெனலாங், கழிகினறகாலறிவு வினைதந்திடாவினைஞர் கருமங்க ளுடியுறவோர், பழுதினறி யேயுதவு மதுபண்பதாகவருள் பரமனக ளுருமவினையே " என்றுமதுங் கண்டுகொள்க.

சித் - பர - பட்டா - மறு, கூ - செ.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

**(அற்றேல், அவ்வச்செய்தி யவ்வச்செயப்படு பொருளிற் கிடந்து பின்னர்ப் பயன்றருமெனக் கோடுமெனில்?) தானஞ்செய்**

பொருள்-தானமளித்த பொருளும்,—தரித்தோர் - அதனையேற்றோரும்,—செய்தவர் - ஈந்தவரும்,—தக்கசெய்தி-தக்கசெய்தியுமாகிய அனைத்தும்,— ஊனம்பிறுறவேகாண்டும் - நிலைபேறின்றிக் கெட்டொழிவனவேயாகலான,—பலமுறுவிப்பானவேண்டும்-நிலைபேறுடையனாய்ப் பயனருது முதற்கடவுள் வேறுவேண்டப்படும். அற்றேல் முதற்கடவுள பயனருதற் கியைபுயென்னையெனின்?— ஈனமில்செய்தி - குறைவில்லாதமுயற்சியாவது,—ஈசனிடும்பணி-முன்னைவினையநுபவித்தற்பொருட்டுத் தரப்படு முதல்வனது ஏவல்வினையாகலான,—இவைநாளுசெய்தால் - அதனைநாமாக முனைந்து நின்றுசெய்தால்,—வினைநோய்தீர - அதுதீர்தற்பொருட்டு அச்செயதிபாலுய பாவபுண்ணியங்களையறிந்து அவை தீர்தற்குறிய,—நூனங்களதிகநோக்கி நுகர்விப்பன,— தக்கபயனருதலவவேவுயானுக்குக் கடப்பாடென்பதாம்.

---

## மறைஞானதேசிகா உரை.



மேலதற்கோர் புறநடை யுணர்த்துகிறார்.

உலகுடல் கரணங்கால முறுபல நியதிசெய்தி, பலமிவை கொண்டுகன்மம் பணணுவ துண்பதானு, னிலவிடா விவைதானுசென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா, தலகிலா வறிவனாணை யணைத்திடு மருளினாலே. (உஉ)

(இ-ள்.) உலகுடல் கரணங் கால முறு — புவனமும், தனுவும், கரணமும், காலமும், அதனு லுறுவிக்கும் விடயத்தையும், அவனி டயத்தை வரையறுத்துப் புசிப்பிக்கு நியதி

பல நியதிசெய்தி தத்துவமும், இவையிற்றின் ரொழிலும், அத்

பலமிவை கொ தொழிலினாற் பலனும்,இப்படி யெண்விதமா

ண்டுகன்மம் பண் ன கரணங்களைக் கொண்டு சிவ ஞானமாக்

ணுவ துணபதா களைக் கனமஞ்செய்விப்பதஞ் செய்த கன்

னால் மபலங்களைப் புசிபபித்தலும்.

அஃதென்போல வெனவில்? "வினையே செய்பவன் செய

ப்படும்பொருளே-நிலனேகாலங் கருவியெனாஅங்-கினனதற்கிது

பய னதுவெனஅ-மனனமரபி னிரண்டொடுந் தொகைஇ - யா

யெட்டெனப தொழினமுதனிலையே" என்னு மிலக்கணத்தா

னொருவன் ரொழில் செயயுமிடத் திவவாறு காணக.

வினையெனப தானமாக்கள செய்யுந தொழில்

செய்பவ னனமா.

செயப்படுமபொரு ளிருவினை.

நிலனெனபது அவாக ளிருக்கும்புவனம்.

காலமுக நாலததையு முண்டாகவும் காலதத்துவம்.

கருவி முப்பத்தாறு ததுவம்.

இனனதற்கெனப திருவினைப்பயன்களைப் புசிககவேண்

டிய காரணம.

இதுபபனெனப திச்சுக துக்கங்களைப் புசித்துத் கொலைத

தபின் கன்மக்ஷயம்பிறந்து மோக்ஷதததையடைகையெனவறிக.

நிலவிடாவி இவை சடமாதலா லானமாவைச் சென

வைதாஞ் சென று தானே பொருநதமாட்டாது.

று

நினைந் துயிர் ஆன்மாவுந் தனக்கெனச் செயலில்லாதப

நிறுத்திக் கொள் டியாலே நாமிநத கன்ம மார்ச்சித்தற்குரிய

ளாது தல்லோவென் றறிந் தக்கனமங்களைக் கூ

ட்டிக காரியப்படுததவு மாட்டான்.

அலகிலா வறி எண்ணிறந்த ஞானத்தையுடைய சிவன்ற

வனாணை யினைத் னதாக்கின சத்தியாலே தனுவாதிகளையு மா

திடுமருளினாலே. ன்மாவையுங் கூட்டிப் போகங்களைப் புசிப்

பிந்தத் தொலைப்பித்து மோட்சத்தை ய
டைவிப்பன. எ - று.

இதற்குப் பார்க்கியையிலு மறிக. (௨௨)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

உலகு-காசியாதி புண்ணிய க்ஷேத்திரங்களிலே,—காலம் - சூரியோ†பராகாதி புண்ணியகாலங்களிலே,—உடல்-காயவியாபார வசனாதிகளினாலே,—கரணம்-ஞானேந்திரியாந்தக்கரணங்களினாலே,—உறும - பொருந்தப்பட்ட,—பலவியற்றிசெய்தி-அநேகமாகிய அனுஷ்டானக்கிரியைகள்,—பலவினைகொண்டு கன்மம்பண்ணுவதானதால் - இவை பலவற்றையும் புக்திபண்ணிக்கொண்டு கருமங்களைப்பண்ணி யந்தக்கருமபலங்களைப்புசிப்பதானால்,— நிலவிடாதிவை தாஞ்சென்று நினைந்துயிர் நிறுத்திக்கொள்ளா-கீழ்ச்சொல்லிப்போந்த தேசமும் காலமும் தேகமும் கரணமும் தொழிலும் சடமாகையால் தாஞ்சென்று பலமாய்ப்பொருந்தவறியாது ஆன்மாக்கள் பூர்வஜன்மங்களிலே செய்த கருமமிது அதற்குப்பலமிதுவென்றறிந்து கருமபலத்துக்குத் தேகாதிகளை மாயையிலே யுண்டாக்கி நிறுத்திக்கொள்ள வறியாதாகலால்,— அலகிலாவறிவனாணை யணைந்திடுமருளினாலே- சர்வஞ்ஞனாகிய பரமேஸ்வரனுடையகிரியாசத்தியானது,மாதாவானவள் பிள்ளைக்கு வியாதிவந்தகாலத்துக் கசப்பாதிகளையும், நின்றகாலத்திற் பால்முதலான மதுரபதார்த்தங்களையும், கிருபையுடனே கொடுக்குமாபோல; சுகதுக்கங்களைச் சேர்க்கும்.

†உபராகம் - கிரஹணம்.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

கன்மத்துக்குச் சுவதந்திரம் இல்லாதிருந்தால், கன்ம கர்த்தாவாகியபுருஷனே றுனே பொருந்திப் புசிப்பனென்பதனை மறுத்துணர்த்துகின்றார்.

உலகு - புவனம்,—உடல் - தூலசரீரம்,—கரணம் - சூக்குமசரீரம்,—காலம் - நிகழ்காலம்,—உறும்பலன - திரவியமுதலியவும் சுகதுக்கங்களுமாம,—நியதி - சுகதுக்கங்களையு மிடமுதலியவற்றையும நியமிக்கும் நியதிதத்துவம்,—செய்தி - மனோவாக்குக்காயங்களினது தொழிலாகிய தூலகன்மம்,—பலவினை கொண்டு-இவவிடமுதலிய வெகுசாதனங்களை கொண்டு,—கன்மம் பண்ணுவதன்பகாலை-புத்தி தத்துவத்தில சமஸ்காரரூப சூக்குமகன்மத்தை யுண்டாக்குவது. திரும்ப வது சுகதுக்கமாய்ப் பரிணமிக்க வரைப புசிப்பனாகில்,—நிலவிடா வினை தாஞ்சென்று - சுவர்க்கநரகங்களில போகம புசிக்கு மிடத்து, இடமுதலிய வினைகளை தாமேயாய் உயிரேயுறுது,—உயிரும்,—வினைதனை நிறத்திக்கொள்ளாது-சங்கற்பித்தலைவகளை யுண்டாக்கி அவைகளோடு கூடமாட்டாது ஆகையால்,—அலகிலா வறிவனானை யணைத்திடு மருளினாலே - சாவருஞானகிய சிவனது கிரியாசத்தி கிருபையினாலே சிருட்டித்தப்பொருத்தும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

**வினைமுதற்காரணமாகிய வுயிர், ஏனையேழு காரகங்களும் தனக்குத் துணையாகக்கொண்டு வினைகளை யீட்டலும் நுகர்தலு**

முடைத்தென்பது எல்லார்க்குமொப்ப முடிந்தமையின்; உயிரை யின்றி யமைந்து தொழிற்படமாட்டாத சடமாகிய அக்காரகங் களாதல் அவற்றையின்றி யறியமாட்டாத சிற்றறிவுடைய அவ் வுயிராதல் தாமேகூடமாட்டாமையின, பாரிசேட வளவையா னே சுதந்திர வறிவனுகிய முதல்வனே தனதாணையாகிய திரு வருளால் அவற்றை யவ்வுயிர்க்குப் பொருத்திச் செய்விப்பனெ னபது பெறபபடுதலின, அசசெயலெல்லாம் அவனபணியேயா மெனபதாம்.

ஆதலாலச்செயலெல்லா மவன்பணியேயெனபது குறிப் பெசசம்.

ஈணடு உலகென்றது உயிர்களை.

இன்னதற்காக இதுபயனுகவெனனும் இரண்டுகாரகங்க ளையும் நியதியெனபதனுற் றழீஇயினர்.

பண்ணுவ துண்படெனனு மொருமைகள அதுதொழின்மே னின்றது.

அற்றேல் அப்பணி நூனங்க ளதிகமாமாறு யாங்ஙன மெ னின? அதுவருஞ்செய்யுளிற் பெறப்படும.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---o---

மீமாங்கிசன் கன்மமலமோ சடம், ஆன்ம வறிவல்லோ தானசெய்த கன்மத்தைத் தானறிந்து கூடிப் புசிக்கும், ஆகை யால் கர்த்தா வேண்டுவதில்லையென்று சொல்ல; கன்மத்தைச் செய்து கன்மத்தைப் புசிப்பிக்கையினுலும், ஆன்மா பாசசம்ப ந்தியா யிருக்கையினுலும், கன்மத்தை யறிந்து புசிக்கமாட்டா ன். கர்த்தாவே யறிந்து கூட்டவேணுமென் றருளிச்செய்கிறுர்.

உலகுடல் கரணங்கால முறுபல நியதிசெப்தி பலவினை கொண்டுகனமம் பண்ணுவ தண்பதாஞல் - அநதக்கன்மங்களு க்குத் தக்க புவனங்களும அந்தச் சரீரங்களு ம அந்தக் கரணங் களும் காலதத்துவமும பொருநதத தகக காலவிஷையங்களு ம் கனமத்துக இடாக வேறுமல் குறையாமல் புசிப்பிக்கிற நி யதிதத்துவமும் செய்யபபடட தொழில்களும் எனறு இபபடி பல இவையிறரையுங் கூடிநினறு ஆனமாக கனமங்களைச செய் து புசிப்பிபபதாஞல் இவை கூடுகிறபடியை விசாரிக்கில்,—நில விடா திவைதாஞ்செனறு - கன்மஞ் சடமானபடியாலே தா ஞகசசெனறு ஆனமாவைப் பொருநதமாடடாது. கனம மல மல்லோ சடம், ஆனம வறிவே ஆனமாவறிந்து இவை யிற்றைக கூடுமெனறு நீ சொல்லில்?— நினைநதுயிா நிறுதகிக் கொளளா - ஆனமா தனக்கெனன வறிவில்லாதபடியாலே தாஞக வினை நமககுள்ள தல்லோவென றறிநது கூடடிக் கொள்ளமாட்டாது. ஆஞலிவையிரண்டுங் கூடிக் காரியப்படு கிற முறைமை யெப்படியெனனில்?—அலகிலா வறிவனுணை ய ணைதநிடு மருளிஞலே - எணணிறநத ஞானத்தையுடைய சிவ னதாககினை யிவையிற்றைக் கூடடிக் காரியப்படுத்தும் தனது காருண்ணியத்திஞலே.

நிலவிடா திவைதாஞசெனறு நினைநதுயிர் நிறுத்திக்கொ ள்ளா வெனறது மீமாங்கிசன. இதற்குப் பிரமாணஞ் சிவஞா னபோதம் "அவ்வினையைச செய்வதனி லவ்வினைஞா தாஞ்செ ன்றங், கவ்வினையிற் காநத பசாசம்போ—லவ்வினையைப், பே ராம லூட்டும் பிராணி ஞகாரோ, லார்தாமறிந்தணைப்பாராங் கு., எனனுமதுங் கண்டுகொள்க.

சிவஞானபோதம் - உ - சூ, கூ - வெ.

இதஞற் சொல்லியது கன்மஞ் சடமானபடியாலும் ஆ ன்மாத் தனக்கென்ன வோரறிவில்லாத படியாலும் இவை தா

னுக வொருசரீரத்தை யெடுக்கவுங் கன்மத்தைச் செய்யவு மாட்டாதாகையால் பரமேஸ்வரன் தனது காருண்ணியத்தினுலே இவையிற்றைக் கூட்டிக் காரியப் படுத்துவனென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உலகு - வினைமுதற்காரகமாகியஉயிர்,—உடல் - இடமாகியவுடலும்,—கரணம் - கருவிகளாகியகரணமும்,—காலம் - முக்காலங்களுள்ளொன்றாகியகாலமும்,—உறுபலம்-செயப்படுபொருளாகிய பொருந்தியபலமும்,—நியதி - இன்னதற்காக இதுபயனாகவென்பவைகளாகிய நியதியும்,—செய்தி - செயலாகிய செய்தியும்,— பலவினைகொண்டு - ஆகியவேழுகாரகங்களுந் தனக்குத் துணையாகக்கொண்டு,— கன்மம்பண்ணுவ துண்டுதானால் - வினைகளையீட்டல் நுகர்தலுமுடைத்தென்பது எல்லார்க்கு மொப்பமுடிந்தமையின், — சென்றுநிலவிடா வினைதான் - உயிரையின்றியமைந்து தொழிற்படமாட்டாத சடமாகியஅக் காரகங்களாதல்,—நினைந்துநிறுத்திக்கொள்ளாதுயிர் - அவற்றையின்றி யறியமாட்டாத சிற்றறிவுடைய அவ்வுயிராதலுமே கூடமாட்டாமையிற் பரிசேடஅளவையானே,—அலகிலா அறிவன் - அளவிட்டறிதற்கரிய சுதந்தர அறிவனாகியமுதல்வனே,—ஆணை அருளினாலே - தனதாணையாகிய திருவருளால்,—அணைத்திடும் - அவற்றையவ்வுயிர்க்குப் பொருந்தச்செய்விப்பனென்பது பெறப்படுதலி னவன்செயலெல்லாம் அவன்பணியேயாம்.

## மறைஞானதேசிகர் உரை.



ஆதலா லான்மாக்களுக் கனுக்கிரகஞ் செய்தற்பொ
ருட்டு நல்வினை யாரச்சிப்ப தனாதநுகிருர்

ஒழுக்கமன் பருளாசார முபசார முறவுசீலம், வழுக்கிலாத் தவந்தானங்கள் வந்தித்தல் வணங்கலவாய்மை, யழுக்கிலாத் துறவடக்க மறிவொடர்ச் சித்தலாதி, யிழுக்கிலா வறங்களானா லிரங்குவான் பணியறங்கள். (உசு)

| | |
|---|---|
| (இ - ள) ஒழுக்கம் | தத்தஞ் சாதிக்கேற்ற வாசாரத்துட னடத்தல். அஃதாவது, சாத்துவிக பாவத்தையுடையது. |
| அன்பு | சிவனிடத்து வைத்த பத்தி |
| அருள் | எல்லாரிடத்தும் வைத்த கிருபை |
| ஆசாரம் | வேதாகமங்களிற் கூறியவற்றை யனுட்டித்தல் |
| உபசாரம் | பெரியோரிடத் துனக்கியனற யாதானுமோ ருபசாரஞ் செயல் |
| உறவு | பெரியோ ரிடத்தில் வைத்த மித்திரபாவம் |
| சீலம் | ஒருநெறிப்பட்ட நல்லறிவு "ஞானமுஞ் சீலமு நல்லறிவாகும்" |
| வழுக்கிலாத்தவம் | இந்திரிய விடய மிவற்றின்வழி செலுத்தாது கிருச்சிர சாந்திராயண முதலிய விரதங்களை யனுட்டிக்கை |
| தானங்கள் | சற்பாத்திரத் திடத்திற் பொருளைச் செலுத்துவது. |

உத்தமாதி பேதத்தான் மூவிதப்படும்.

அவையாவன?" பெரியோ ரிருக்குமிடந் தேடிப்போய்த் தன க்கியன்றது கொடுத்த லுத்தமம்.

சற்பாத்திரத்தைத் தன்வாய்தலி லழைப்பித்துக் கொடு த்தல் மத்திமம்.

பாத்திரவான் றன்னை வந்து கிட்டிக்கேட் டிருக்கையினு மின்று நாளையென்று கண்ணழித்துப் பின்பு கொடுக்கை யத மம்.

| | |
|---|---|
| வந்தித்தல் | பெரியோர் முதலாயினோரைத் தோத்திரஞ் செய்தல் |
| வணக்கம் | தான வணங்குதற் குரியாரை வணக்கஞ் செய்தல் |
| வாய்மை | ஒருக்காலுந் தவறுசொல்லாது சத்தியமே சொல்லுதல் |
| அழுக்கிலாத் துறவு | "ஏந்திழையார் தஞ்சயனத் தெய்தித்தன மெய்தொடினுங், காய்ந்துவாதத வேதுறவுகாண" என்னுந் துறவு |
| அடக்கம் | தவங்குல நிலைமைகல்வி முதலியவற்றாலுண்டாகுஞ் செருக்கறுத்தல் |
| அறிவோர்ச்சித்தல் | ஆகமத்தை யோதி யதனவழி தவறாது பூசித்தல |
| ஊதி | அக்கினி காரியங் கபிலபூசை சிவாலயசேவை முதலாயின |
| இழுக்கிலா வறங்களானவை யுங்குவான் பணியறங்கள் | இவைகளெல்லாங் குற்றமற் றிருக்குமாகிற் சிவனைக்குறித்துச் செய்யிற் சிவதன்மமேயா யவன தனுக்கிரகத்துக் கேதுவாம். எ-று. (உக) |

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

ஒழுக்கம்-குலதருமம் வழுவாமை,—அன்பு-மாதாபிதாக்களிடத்தில் பத்தி,—அருள்-சர்வபூததயை,— ஆசாரம்-வர்ணாச்சிர+மோசிதமான சௌசாசமனஸ்நானாதிகள்,—உபசாரம்-அதிதி‡சத்காரம்,—உறவு-ஞாதிமுதலான பந்துக்களிடத்திலே சிநேகம்,—சீலம்-சாத்விகபாவம்,— வழுக்கிலாத் தவந்தானங்கள்-நியமித்த விரதம் விடாத்தபசு திரவியசுத்தியும் சிரத்தையுமுடைய தானங்கள்,—வந்தித்தல் வணங்கல்-பெரியோர்களிடத்திலே §நைச்சியம் பகர்தல்,—வாய்மை-சத்தியமே சொல்லுகை,—அழுக்கிலாத் துறவு-மனம்பற்றில்லாத சன்னியாசம்,—அடக்கம்-குலதன வித்தி†யாதிக்கத்தா லகங்காரமன்றி×விநயபரனாயிருக்கை,—அறிவோடர்ச்சித்தல் - பூசா ¶விதானத்தை நன்றாகவறிந்து பூசைபண்ணுதல்,— இழுக்கிலாவறங்களானால்-இவ்வாறு குற்றமிலாத தருமங்களைப் பண்ணினால்,—ஆதி-பரமேஶ்வரன்,—இரங்குவான் பணியறங்கள் - நாமிட்ட பணியாகிய தருமங்களைப்பண்ணினானென்று கிருபைபண்ணுவானென வறிக.

+ உசிதம் - தக்கது, ‡ சத்காரம் - பூசித்தல், § நைச்சியம் - தாழ்வு, † ஆதிக்கம் - மேன்மை, × விநயபரன் - வணக்கமேபிரதானமாகவுடையவன், ¶ விதானம் - விதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

தேவதாப் பிரசாதத்தினாலே சகலமும் வருவதென்று சாற்றுகின்றார்.

ஒழுக்கம்-அகதந்த சாதியாசாரம் வழுவாது நடத்த ல்,—அன்பு - மாதா பிதா குரு தேவதாபத்தி,—அருள் - சர் வானமாக்களிலும்வைத்த விரக்கம்,—ஆசாரம்-வருணாசிரமங்க ளுக்கேற்ற சௌசாசமனுதிகள்,—உபசாரம் - அதிதி சமஸ்கா ரம்,—உறவு-ஞாதி முதலான பந்துக்களிடத்திலே சினேகம்,— சீலம் - ஒருநெறிப்படப் பிறரையுபகாஞ்செய்விக்குங் குணம்,— வழுக்கிலாத்தவம் - சாந்திராயண முதலிய நியம விரதம்,— தானங்கள் - சற்பாத்திரத்திற் றனதேடிய பொருளைச் செலு த்தல்,—வந்தித்தல் - குரு ஜனங்களை நமஸ்கரித்தல்,—வணங் கல்- பெரியோரிடத்தில் தாழ்ந்த தன்மை காண்பித்தல் — வாய்மை - உள்ளது சொல்லுதல்,—அழுக்கிலாத்துறவு - சர்வ சங்க பரித்தியாகம்,—அடக்கம் - குலங் கல்வி நிறைவாயிரு ந்தாலும் காயமடங்கியிருக்கல்,—அறிவொடாராசித்தல்-அவரவர் சாத்திர சூத்திரங்களி னோதியபடி யவரவர் கொண்ட தேவ தையைப் பூசித்தல்,—ஆதி-இவை முதலானவை,— இழுக்கிலா வறங்களானால் - குற்றமற்ற கன்மங்களாகச் சாத்திரங்கொ ண்டு நிச்சயிக்கப்படுமானால்,—இரங்குவானபணியாங்கள் - ப ரமேஸ்வரன் கற்பித்த புண்ணிய கன்மங்கள்,இவற்றிற்கு மா றாய் வருவன பாவகன்மங்கள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

ஒழுக்கமுதலிய பதினாறும் மற்றுமவைபோல்வனவுமாகி ய நன்மைகள் ஒருவனுக்குளவாயின, இரங்குவானது பணியாகி ய அம்முயற்சி அறமாய் முடியுமென்பதாம்.

எனவே, இவ்வொழுக்க முதலியவற்றை மறுதலைத்த தீ மைகள் ஒருவனுக்குளவாயின், அம்முயற்சி பாவமாய் முடியுமெ ன்பதூஉம் பெற்றாம்.

ஒழுக்கமென்றது ஈண்டு உலகத்தோடொட்ட வொழுகுதலே.

ஈண்டுத் துறவென்றது எல்லாநிலையினுஞ் சேறற்குரிய பிறர்மனை விழையாமை, வரைவின்மகளிர்விழையாமைமுதலிய.

ஆண்டகைமையே யெனறுரைாததுவார், அழுக்கிலாவென விசேடித்தார.

அறிவாவது தக்கனவுந் தகாதனவும் பகுத்தறிதல்.

"இனமலர் கையிற்கொண்டங் கிச்சித்ததெய்வம் போற்றி,,என முனவருதலின, ஈணடுவந்தித்தல் வணங்கல் அர்ச்சித்தலென்பன தன்னின மூத்தார்மாட்டுச் செய்வனவற்றை யெனக்கொள்க.

ஒடு எண்ணின்கண் வந்தது.

இவ்வொழுக்க முதலியவெல்லாம் இயமநியமமென்னும் இருவகையுமடங்கி அறஞ்செய்வார்க் கெல்லாம் பொதுவகையான வேண்டப்படுமங்கமாதலின, இவற்றை வேறெடுத்தோதினார்.

---

## நிரம்பவழகியருளா வருமாறு

—o—

இப்படி சொல்லப்பட்ட புண்ணியபாவ மிரண்டினும் புண்ணியத்தின் முறைமை யெப்படியென்ற மாணாக்கனுக்கு, புண்ணியம் சிவபுண்ணியமென்றும் பசுபுண்ணியமென்று மிரண்டாயிருக்கும்? இந்த விரண்டினுஞ் பசுபுண்ணியத்தின முறைமை யருளிச்செய்கிறார்.

எப்பொழுதுமோ ரொழுங்காய் நடக்கையும், பத்தியும், இருடையும்; அசாசாரங்களன்றி யாசாரமும், நல்லோர்களிடத்தி

லுபசாரமும், அயிக்கமும், சாத்துவிதமான குணமும், தவறுப டாமல் எப்பொழுது மொருதன்மையாயிருக்கிற தவசும், சாத் திரஞ்சொன்ன முறைமையிலே கொடுக்கப்பட்ட தானமும், வழிபாடுசெய்கையும், சிவனடியாரை அட்டாங்க பஞ்சாங்க மாகத் தண்டனை பண்ணுகையும், அசத்தியமின்றியே சத்தியஞ் சொல்லுகையும், சற்றுங் குற்றமில்லாத துறவும், யானென்ற தற் றிருக்கிற வடக்கமும், பிரஞ்ஞையுடனே பூசிக்கையும் என்று சொல்லப்பட்ட விவைமுதலான குற்றமில்லாத தன்மங்களை யிப்படி சொன்ன முறைமையிலே செயவனாகில், அது சர்வரிட ததிலு மனுக்கிரகஞ் செய்யப்படாநின்ற பரமேஸ்வரனாலே ய ருளிச்செய்யப்பட்ட சிவபுண்ணியமாம்

இதனாற்சொல்லியது, இங்ஙனஞ் சொல்லப்பட்ட வொழு க்கமுதல் சிவபூசை யீறாக விந்தவாசாரத்தை யனுட்டிக்கிறது பரமேஸ்வரனாலே யருளிச் செய்யப்பட்ட பசுபுண்ணியமா மென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

ஒழுக்கம் - உலகத்தோரொடொட்ட வொழுகுதலுடைமையு ம்,—அன்பு - யாவரிடத்துங் காதலுடைமையும்,—அருள் - யா வரிடத்துங் கருணையுடைமையும்,—ஆசாரம் - வேதாகமங்களி ன் விதித்தவாறனுட்டித்த லுடைமையும்,—உபசாரம் - தக் கோர்மாட்டுச்செய்யு முபசரிப்புடைமையும்,— உறவு - யாவரிட த்துங் கலப்புடைமையும்,—சீலம் - நற்குணமுடைமையும்,—வ ழுக்கிலாத்தவம் - வழுவுதலில்லாத வைம்பொறியடக்கல் விரத மகாத்தல் முதலியதவமுடைமையும்,—தானங்கள் - தக்கோர்

ரிடத்து வகையோடுசெய்யுந் தானங்களுடைமையும்,—வந்தித்தல் - தன்னின்மூத்தார்மாட்டு வழிபாடுடைமையும்,— வணங்கல் - தன்னின்மூத்தார் மாட்டு வணங்குதலுடைமையும்,—வாய்மை - மெய்மையுடைமையும்,—அழுக்கிலாத்துறவு - குற்றமிலாத பிறர்மனைநயவாமை வரைவின்மகளிர் விழையாமைமுதலிய வாண்டகைமையுடைமையும்,—அடக்கம் - தீநெறிக்கட்செல்லாதடங்குதலுடைமையும்,—அறிவு - தக்கனவிவை தகாதனவிவையெனப் பகுத்தறிதலுடைமையும்,— அர்ச்சித்தலாதி - தன்னின்மூத்தாரமாட்டர்ச்சித்தலுடைமையுமாகிய பதினொரும்,மற்றுமவைபோல்வனவுமாகிய,—இழுக்கிலாஅறங்களாளும் - குற்றமில்லாத நன்மைகள ஒருவனுக்குளவாயின,— இரங்குவான்பணி - இரங்குவானது பணியாகிய வம்முயற்சி,—அறங்கள - அறமாய்முடியுமெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேற்றொருத்துபபோந்த சிவனை வழிபடவே, புத்தியு முத்தியு முண்டென றுணர்த்துகிறார்.

மனமது நினையவாக்கு வழுத்தமந் திரங்கள்சொ
ல்ல, வினமலர் கைபிற்கொண்டங் கிச்சித்த தெய்யவ
ம்போற்றிச், சினமுத லகற்றிவாழுஞ் செயலற மானா
ல்யார்க்கு, முனமொரு தெய்வமெங்கு ஞ் செயற்குமு
ன் னிலையாமன்றே. (உச)

(இ-ள்.) மனம மனதானது வேண்டியதொரு வடிவை நினைய வா தியானிக்க, வாக்கானது தோத்திரஞ்செய்க்கு வழுத்த ய, மந்திரங்களை யுசசரிக்க,காயமானது கை

மந்திரங்கள் சொல்ல வினமலர் கையிற்கொண்டங் கிச்சித்த தெய்வம போற்றி

யிலை பலவாகிய மலரைக்கொண்டு தான்வழிபடுந தெய்வத்தைய ருச்சனைசெய்து,

சினமுதலகற்றி வாழுஞ செயலற மானுல்

காமக்குரோத முதலியவற்றை விட்டு,நாடோறும வழிபடவே, அபபொழு தஃதெல்லாஞ் சிவதனமமேயாப் போகமோட்சங்களை யடைவி லடைவிப்பிககுமானுல்,

யார்சகு முனமொரு தெய்வமெங்குஞ் செயற்கு முனனிலையாமனறே.

சாயதேவாகளுககு மேலாய சர்வகர்த்தாவுமாயிருக்கிற சிவனே யாதொருவர் காமிதத யலஙகளைக் கொடுப்பதற்கு முனனிற்பன. எ - று.

யாதொருவன யாதொரு தெய்வத்தை யிட்டகாமிய பலத்தைக் குறித்து வழிபடுகையால்; இச்சித்த தெய்வமெனச் சிறப்பித்தா ரெனவறிக. (உச)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மனமது நினைய வாக்குவழுதத மநதிரங்கள்சொல்ல வினமலர் கையிற்கொண் டங்கிச்சித்ததெய்வம் போற்றிச் சினமுதலகற்றி வாழுஞ்செயலறமானுல் - காமக்குரோதம் முதலானவைகளைத் துவிர்த்து,மனசிலே தியானித்து,வாக்கிலே மந்திரங்களைச் சொல்லிவாழ்த்தி,ஶ்ரீ சுவேதாதி புஷ்பங்களைமிச்சிரம்பண்ணுமல்† தத்தத்வர்க்கங்களையே கையிற் கொண்டு அவ்வி

டத்துத் தனக்கு இஷ்டதேவதையை பூசித்துவாழுந் தருயினி ரிலையக்கு,—யார்க்கு முன்மொரு தெய்வ மெங்குஞ்செயற்கு முனனிலையாமன்றே - எல்லாத் தேவர்களுக்கு முன்னோனாகிய ஒருவனே ருத்திரனென்று வேதங்கள்சொல்லுமகாதேவனே§ உத்தேஸ்யனாக நின்று பலத்தைக் கொடுப்பன

¶சுவேதம் - வெள்ளை.

×தத்தத்வர்க்கம் - அந்தந்தகூட்டம்

†உத்தேஸ்யன - முககிரன.

சுவேதாதி புஷ்பங்களை மிச்சிரம்பண்ணுமலென்றதற்கு சம்மதி

காமிகே — ஸுகந்தைஸ்து ப்ரதமா ஶ்ரேஷ்டா வி
மிஶ்ரிதா | மத்யமைர்மத்யமா ஸ்யாத் ஜகந்யேஷு
ஜகந்யா விமிஶ்ரிதா || புஷ்பவர்ஜைஃ க்ருதாஸா
ஶா க்ஷிப்தா ஸா கநீயஸீதி |

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

ஆகையாலவரவாகொண்ட தெய்வம் அவரவர் செய்யுங் கன்மங்கட்கு முன்னிலையாய் நின்று பலங்கொடுக்கும், கன்மந் தானாய்ப் பலங்கொடாதென்று சாற்றுகின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

அவ்வொழுக்கமுதலிய நன்மைகளையுடையரும் அவற்றை மறுதலைத்த தீமைகளை நீக்கியொழுகுவா னொருவனுக்குத் தன்

கருத்திற் கியைந்ததொரு கடவுளை மனமொழிமெய்களான் வழிபட்டு வாழுஞ்செயலாகிய அறமுமுளதாயின், முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளாகிய சிவபிரானே அத்தெய்வத்தினிடமாக நின்று அச்செயலைப்பேற்றுக்கொண்டு பயனுதவுமென்பதாம்.

போற்றி வாழுஞ் செயலென வினையும்.

அகற்றியென்பது பெயர்.

அகற்றிக்கென்று நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது.

சினமுதலகற்றுதல் கூறவே ஒழுக்க முதலியன வுடைமை பெற்றாம்

மேற்கூறிய வொழுக்க முதலிய வங்கங்கட்கு ஈண்டுக்கூறியவறம் அங்கியாகலின் உடனெடுத்தோதினார்.

அற்றேல், வழிபட்டார்க்கு வழிப்படப்பட்ட அவ்வத்தெய்வமே பயன்கொடுக்கு மென்றற்படும் இழுக்கென்னை யென்பாரை நோக்கியெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன்சொல்லப்பட்ட பசுபுண்ணியங்களு மனவாக்குக் காயங்களினாலே யுண்டானது, இப்பொழுது சொல்லப்பட்டசிவபுண்ணியங்களுண்டாம்படி யெப்படியென்ற மாணாக்கனுக்கு; அதுவு மனவாக்குக் காயங்களினாலே யுண்டாமென்னு முறைமை யருளிச்செய்கிறார்.

**மனமது நினைய** - மனமானது பரமேஸ்வரனுடைய திருவடியை நினைக்க,— **வாக்குவழுத்த மந்திரங்கள் சொல்ல** - வாயானது தோத்திரங்களைச் செய்யவு மந்திரங்களை ஜபிக்

கவும்,—இனமலர் கையிற்கொண் டங்கிச்சித்த தெய்வம்போ ற்றி - காயமானது பலதிருப்பள்ளித் தாமங்களைக் கரத்தினா லே யெடுத்துக்கொண்டு தாங்கள விருமபப்பட்டதொரு தெய் வத்தைப் பூசித்து,—சினமுதலகற்றிவாழுஞ் செயலற மாறு ல்-கோபமுதலான பொல்லாத தொழில்களெல்லாம் போக்கி கனமையுடனே கூடிககொண் டிருக்கிற முறைமைகளெல்லா ம் தனமமாகையினால்,— யார்க்கு முனமொருதெய்வ மெங்கு ஞ் செயற்கு முனனிலையாமனறே - சாவாக்கும அநாதியே யொவவொரு தெய்வம எவவிடத்திலு மவாகள தொழிலுக்கு முனனிலையாம்.

இக்கூற சொல்லியது கோபமுதலாயுள்ள பொல்லாத தொழில்களை விட்டு மனவாக்குக காயங்களினாலே தங்களுக குப் பிரியமான தொருதெய்வத்தை நினைத்தும வாழ்த்தியும் வணங்கியும் அாச்சிக்கவேணுமெனகிற பாக்கியத்தை யுடைய வர்களுக்கு, அவரவர் பக்குவத்துக்குத் தக்கதாக வெவ்வொரு தெய்வம் எவவிடத்திலு மவந்து முனனிலையாமெனனு முறை மையறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சினமுதலகற்றி - அவ்வொழுக்கமுதலிய நனமைகளையு டையனு யவற்றைமறுதலைத்த தீமைகளைநீக்கி பொழுகுவா னொருவனுக்கு,—இச்சித்தசெய்வம் - தனக்குருத்துக் கியைந்த தொருகடவுளை,—மனமதனினைய - மனததானினையவும்,—வா க்குவழுத்த மந்திரங்கள்சொல்ல - வாக்காற்றுதிக்கவும மந்தி ரங்கள்சொல்லவும்,—கையி லினமலர்கொண்டு போற்றி - கை

களாவினமாகிய மலர்களைக்கொண் டர்ச்சித்து வணங்கியும்,—வாழுஞ்செயலறமாகுல் - வழிபட்டுவாழுஞ் செயலாகிய அறமுமுளதாயின,— யாதாகுமொன்மொரு தெய்வம்-யாவர்க்குமுனைப் பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளாகிய சிவபிரானே,—எங்குஞ்செய்தற்கு முன்னிலைபாமன்றே - அத்தெய்வத்தினிடமாகநின்று அச்செயலையேற்றுக்கொண்டு பயனுதவுமென பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

பஞ்சாத்திரி யாதுசிவன முத்திகொடுக்க வே
ணடுவதில்லை, எமது புநட்டோதகமேனே
யென்ன, மறுத் துணைரக்கிறா

யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வ மாகியங்கே, மாதொரு பாகனார்தாம் வருவர்மற் றத்தெய்வங்கள், வேதனைப் படும்மிறக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யு, மாதலா லிவையிலாதா னறிந்தருள் செய்வனன்றே. (உரு)

(இ-ள்.) யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகியங்கே மாதொரு பாகனார் தாம் வருவர — சிந்தாமணியானது தானொன்றாயிருக்க, யாதொருவன காமித்ததெல்லாங் கொடுக்கிறது போல, சாதகனானவனெந்தெந்த தெய்வத்தை மனதினகண் ணினைந்துக்கொண்டு வழிபட்டான,அந்தந்த தெய்வமாகியவவிடத்துப் பார்வதியாரை யொருபக்கத்திலே யுடைய தம்பிரானார் தாமே யவர்களவர்களகோட்பாட்டுக் கேற்ற மூர்த்தியாய் வந்திருந்து பலன்களைக் கொடாநிறபர்.

இவர் கொடுக்கவேண்டுமோ அந்தந்தத் தெய்வங்களா னே யவர்க ளவர்களுக்கேற்ற பலத்தைக் கொடாதோவெனி ல்?

மற்றத் தெய்வங்கள் — வேறே தெய்வமுண்டென்று நீ சொல்லுகிற தெய்வங்களெல்லாம

வேதனைப் படுமிறக்கும் பிறக்கும் மேல் வினையுஞ்செய்யும் — பிருகுமுனி சாபத்தினாலே தசாவதார மெடுத்ததற்பொருட்டு சரீரத்தை யெடுத்து க்கிலேசமுற்றுப் பின்புஞ் சநந்தத்தை யெடுத்துக் கனமபலந் தொலைந்தவாறே மரணத்தையு மடைவே பொருந்தி மேலுமொரு புண்ணியங்களையும் பண்ணுநிற்கும.

ஆதலா லவையிலாதா னறிந்தருள புரிவனனே — இப்படி சனித்து மரித்து வருகையினாலே குற்றந் தனக்கொன்று மில்லாத பரமேஸ்வரனை யறிந்து வழிபடவே சாவானமாகளுக்கு மனுக்கிரகியா நிற்பன. எ-று.

இதற்குக் காமிகமனறிந் சாவசுரோத்த சாரசங்கிரகத்துங் காசிகபுராணத்து மறிக. (உரு)

---

## சிவாக்ரயோகியருளாவருமாறு.

—o—

வேதத்தி லிந்திராதிபான அநேகதேவர்களை யர்ச்சிக்கச் சொல்லியிருக்க இவ்விடத்து நீசிவனொருவனே உத்தேஸ்யனென்று சொல்லுவானேனென்று பண்ணுஞ் சங்கைக் குத்தரம்.

யாதொருதெய்வங்கொண்டீர் ரத்தெய்வமாகி யங்கேமாதொரு பாகனார்தாம்வருவர்-யாதொருதெய்வத்தை உத்தேசி

த்துக்கொண் டர்ச்சிக்கிறீர் அந்ததெய்வத்தை சிவன்தம்முடைய சமவாயசத்தியினாலே அதிஷ்டித்துநின்று அந்தப்பூசையைக் கண்டு பலத்தைக்கொடுப்பர் அந்தபூசிக்கப்பட்டதெய்வமோவெனனில்?— மற்றத்தெய்வங்கள வேதனைப்படு மிறக்கும் பிறக்குமேல்வினையுஞ் செய்யும் - பரமேஸ்வரனே யல்லாத தெய்வங்கள ஒவ்வொருகாலத்திலே துக்கங்களையு மநுபவிக்கும, இறப்பதும பிறப்பதுஞ் செய்யும், பிறந்ததனமே லிருவினைகளையுஞ் செய்யும். ஆதலால்,— இவையிலாதா னறிந்தருள் செய்வனன்றே - ஆகையினாலே சுகதுக்கமும் பிறப்புமிறப்பும் புண்ணியமும் பாபமுமில்லாத பரமேஸ்வரனே இவன்செய்த பூசையை யறிந்து பலத்தைக் கொடுப்பன. அந்தபிரமேந்திராதி தேவர்களும சிவனையே யாசசிப்பார்கள். அந்தச்சிவனே பிரதமோத்தேஸ்யன.

ததுக்தம் கூர்மபுராணே ஶிவகீதாயாம்— [illegible]

[illegible]

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பரமேசுரன் கர்த்தாவென்னு முன்படித் திப்போது பிரமா விஷ்ணு அருகதேவதை பௌத்ததேவதை இந்திரன் சந்திரன் சூரியன் முதலுள்ளோரில், ஓரொரு கர்த்தா ஓரொருவர்க்குக் கன்ம சாக்ஷியாய்க் கன்மபலத்தைக் கொடுப்பானென்று சொல்லியதேதென, ஏவுதற்கர்த்தா இயற்றுதற் கர்த்தாவென்னு முறைமையினாற் சொல்லியதென்று சொல்லுகின்றார்.

வேதனைப் படும் பிறக்கும் இறக்கும் மேல்வினையுஞ் செய்யும் என்றது, பிரமாதிகளுக்குத் தாங்களிருந்த தானத்துக்கு ஊர்த்துவகதியன்றி யதோகதி யில்லாமையா லவர்க்கு ளற்பதெய்வங்க ளென்றுபொருள்.

மற்றதுவெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

நால்வகை யோனியுள் ஒருயோனிவாய்ப்பட்டுப் பிறப்பன யாவை, அவையெல்லாஞ் சீவவர்க்கம். அவ்வாறு பிறத்தலில்லா

துயாத அதுபதிப்பொரு ளென்னு மிதுவென்றே வினைச்செயல்களான வேறுபாடுமையறிய வாராத வவ்விரண்டற்குந் தம்முள் வேற்றுமையறிய நிற்பதாகலின, வினைத தேவரெல்லாம் அங்ஙனம் பிறநதிறததல் கேட்கபபடுதலானும, சிவனொருவனே வினையயததனுகலினறி அவவததேவரிடமாக நின்று உயிர்கட்கு அவற்றையறிந்து கூட்டவல்லுவன, வினைதேவா அதுசெய்ய மாட்டாரெனபது தானேபோதருமெனபதாம.

மற்று வினைமாற்று

பொதுவகையானெடுத்துக் காட்டிச் சிறப்புவகையாற் கூறினாராகலிற் பால்வழுவின்மையுணர்க

அர்றேல ஒருவரை வழிபட மற்றொருவர் பயனகொடுத்தல் உலகததிற் கண்டிலமெனபாரை நோககி அது காட்டுதரகெழுநதது வருஞ்செய்யுளெனபது.

---

## நிரம்பவழகியருரை வாருமறு.

---o---

இப்படி சொல்லப்பட்டிருக்கிற தெய்வங்களைப் பூசித்தால் அந்தந்தத் தெய்வங்களுதானே முத்தியைக்கொடுக்கும, பரமேஸ்வரன வேண்டுவதில்லை யென்ற பஞ்சராத்திரியை நோக்கி யருளிச்செய்கிறா.

யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகி யங்கு மாதொரு பாகனார்தாம் வருவர் - எந்தெந்த தெய்வமாகிலும உங்களுக்குப பிரியமானதொருதெய்வததைக கர்த்தாவாக கொண்டு வழிபடுகிறவர்களே அநதநதத தெய்வங்களாகி, எல்லாவிடத்திலும் பரமேஸ்வரியை யொரு கூறாகவுடைய தம்பிரானார் தாமே யெழுநதருளி வாராநிற்பர். முன்சொல்லப்ப

ட்ட தெய்வங்களோ வென்னில்?—மற்றத் தெய்வங்கள் வேத னைப்படி யிறக்கும் பிறக்கு மேல்வினையுஞ்செய்யும் - முன்சொல் லப்பட்ட வநந்தத் தெய்வங்களெல்லாவ கன்மத்துக் கீடாகச் சுகதுக்க வேதனைகளையு மனுபவித்து சனனமரணங்களையு முடை த்தாய் மேலும் புண்ணியபாவங்களையு மபணுந்திருக்கும் அநா தியே இந்தக்குற்றங்களை யுடைய தெய்வங்கள் தங்களை வழி பட்டவர்களுடைய பக்குவா பக்குவங்களை யறிந்து சனனமரண ங்களைப் போக்கமாட்டாது—ஆதலா லிவையிலாதா னறிந்த ருள செய்வனன்றோ-அப்படி யிருக்கையினாலே யிங்ஙனஞ்சொ ல்லப்பட்ட குற்றங்களெல்லாந் தனக்கில்லாத பரமேஸ்வரன ஆன்மாக்களுடைய பக்குவா பக்குவங்களைத் தானே திருவுள ளத்தடைந்து அனுக்கிரகஞ் செய்யாநிற்பன.

இதனுற சொல்லியதற்குப பிரமாணம காளததிபந்தாதி "இவரோ முற்றோவ ரெல்லார்க்கு மிக்கா, ரிவரல்ல வென்றிரு க்க வேண்டாங்—கவருதே, காதலிக்கொன றேதத்திறோ காளத்தி யாளவாரீ, ராதரித்த தெய்வமே யாம்." என்னு மதனு ங் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது ஆன்மாக்கள் தங்கள் தங்கள் போ தத்துக்குப் பொருந்தினதொரு தெய்வத்தை வழிபட, அந்தத் தெய்வங்கள் தானேயா யங்கங்கே பரமேஸ்வர நிற்பனென்று ம், அந்தந்தத் தெய்வங்களுக்குச் சுகதுக்கவேதனையுஞ் சனனமர ணமு முண்டா யிருக்கையாலே தங்களை வழிபட்டவர்களை ய றிந்து அனுக்கிரகிக்க மாட்டாதென்றும், பரமேஸ்வரன் தன் னை வழிபட்டவர்களை யன்றியே மற்றுள்ள தெய்வங்களை வழி பட்டவர்களையு மறிந்து அனுக்கிரகஞ் செய்வனென்று முறை மையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(நால்வகையோனியு ளொருயோனியினவாய்ப்பட்டுப் பிறப்பனயாவை, அவையெல்லாஞ் சீவவாககம் அவவாறு பிறத்தலில்லாததது யாது, அது பதிப்பொருளென்று மிதுவெனறே ஏனைச் செயல்களான வேறறுமையறிய வாராத அவ்விரண்டறகு நதம்முள்வேற்றுமையறிய நிற்பதாகலின,)—மற்றத தெய்வங்கள்-ஏனைததேவரெல்லாம்,—வேதனைப்படும-வேதனையுறறு,—இறககுமபிறககும-இறத்தலுமபிறததலும,—மேல்வினையுஞ் செய்யு மாதலான-வினைசெய்தலுங் கேட்கப்படுதலானும்,— இவையிலாதான-சிவனுககவையுணடெனபது யாண்டனுங் கேடகப்படாமையானும்,—மாதொருபாகனார்தாம-சிவனொருவனே வினையயத்தருகலினறி,—யாதொருதெய்வங்கொண்டீர் - நீர்யாதொருதெய்வததைப் பொருளாககொளளினும,—அததெய்வமாகியாங்கே வருவர்,—அவவததேவரிடமாக நினறு,—அறிந்தருள் செய்வனனறே - உயிர்சடகவற்றையறிநது கூட்டவல்லுவன.

ஏனைததேவரதுசெய்ய மாட்டாரென்பதுதானேபோதரும்.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேலதற்குக் காரணமிட டுணர்த்துகிறார்.

இங்குநாஞ் சிலர்ககுபபூசை யியற்றிஞ லிவர்களோவந, தங்குவான் றருவாரன்றேலத்தெய்வ மத்தன்மைககா,ணெங்கும்வாழ தெய்வமெல்லா மிறைவனுணை யினினிற்ப, தங்குநாஞ் செய்யுஞ்செய்திக் காணைவைப் பாலளிப்பன். (உசு)

(இ - ள்.) இங்கு காஞ் சிலர்க்குப் பூசை யியற்றினு லிவர் களோவந் தங்கு வான் ருவார் — யாஞ்சிலர்க் கிவ்விடத்துப் பூசைபண்ணி னு லிவர்களல்லவே மறுமைக்கண் வந்து பலத்தைத் தருகிறவர்கள்.

அன் றே லந் தெய்வ மதத்தன் மைக்காண் — இவர்களல்ல வாகையால் நீ சொல்லிய தெய்வமு மம்மரியாதிகாண்.

எங்கும் வாழ தெய்வ மெல்லா மிறைவ னுணையி னுனிற்பது — எவ்விடத்து முண்டாய பிரமன்முதலிய முப்பத்துமுக்கோடி தேவர்க ளனைவோரு மங் கர்த்தாவி னுக்கினையாகிற சத்தியைப் பொருந்தித் தங்கடங்கள் கிருத்தியங்களைச் செய்திருப்பர்கள்

அங் கு நா னு செய்யுஞ் செய்தி க் கா னை வைப் பாலளிப்பன். — ஆதலா லிம்மைக்கணன்றி மறுமைக்க ண்ணும் யாஞ்செய்யும் வழிபாடுக்கேற்ற பதங்களி லுண்டாய போகங்களைத் தனது சத்தியாலே சிவன் பயனைக் கொடுப்பன்கா ண். எ-று.

ஓகார மெதிர்மறை. (உகூ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேலிதற்குதாரணம்.

**இங்குநாஞ்சிலர்க்குப் பூசையியற்றினுலிவர்களோவந் த ங்குவான் ருவார் - இந்தபூமியின்கண்ணே நாம்பிரமனாதிகளு க்குப் பூசைபண்ணினுல், இவர்களேயோ அந்தஸ்வர்கத்திலே**

பலத்தைக்கொடுக்கிறவர்கள்—, அன்றே - அல்லவே. ஆகையா ல்,—அத்தெய்வமத்தனைககாண்-அந்தத்தெய்வங்கள் நாம்பண்ணும் பூசையாகிய போகத்தை யனுபவிப்பார்களொழிந்து பலத்தைக்கொடுக்கமாட்டார்கள்,—எங்குமவாழ் தெய்வமெல்லா மிறைவனாணையினாலிருந்து-எங்கெங்கே யிருந்து பூசை கொள்ளுந்தேவர்களும் தேவஸ்வாமியாகிய சிவனுடைய அதிகாரசத்தி அதிஷ்டிதரா யிருப்பார்கள்,— அங்குநாஞ் செய்யுஞ் செய்திக்கானை வைப்பாலளிப்பன-அவர்களுக்கு நாம்பண்ணும் பூசைத்தொழிலுக்கு பலத்தைத் தன்னுடைய அதிகாரசத்தியை அந்த தேவதைக ளிடத்திலே வைத்திருக்கையால் சிவனேகொடுப்பன.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

எல்லாச் செய்திக்கும சிவனே பரமகாரணமெனப துரைக்கின்றார்.

இங்கு - இந்தலோகத்தில்,—சிலர்க்கு - சில பிராமணருக்குச் சிலசங்கமாகக்,—நாம பூசை யியற்றினால் - அன்னபான தாம்பூலாதிகள் தானம்பண்ணினால்,—இவர்களோவந் தங்கு வானருவார் - இந்தப்பிராமணர்கள் சங்கமர்களோ சுவர்க்க சிவலோகங்களைத்தருவார்கள்,—அன்றேல் - அல்லவாமென்று சொல்லில்,—அத்தெய்வ மத்தனைககாண் - அந்தத் தெய்வங்களந்தமரியாதி காண். அஃதெப்படிச் சொன்னீர், இவ்வுலகத்தில் ஐயன் தர்க்கை சனங்கள் பூசை கொண்டு பலங்கொடுப்பது கண்டோம், அவ்வுலகத்தும் பிரமேந்திராதிகள் பலங் கொடுப்பது கேட்டோம். சத்தியம்!—எங்கும் வாழ் தெய்வமெல்

லாம் - இவ்வுலகத்திற் றெய்வங்களெல்லாம்,— இறைவனாணை வழிநிற்பன - சிவனது சத்தியாலேவப்பட்டுக் கொண்டிருக்கும். ஆகலால்,— அவருக்கு நாஞ் செய்யுஞ் செய்திக்கு - அந்தத் தெய்வங்களிடத்தில் நாமயன்றும் பூசைக்கு,— ஆணையைப் பால் - தன்னாணையாஞ் சத்தியைச் செலுத்தலின் இசைவித்தலால் பலங்கள்,— அளிப்பன - அந்தத்தேவதைகளாகக் கொண்டு கொடுப்பன.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

பசுப் பாசத்தனைத்தாய முதலாயினாரை இம்மைக்கண் வழிபட்டார்க்கு அவ்வந்நிறு மறுமைக்கட் பயனருந் கடவுளர் வேறென்பது எல்லார்க்கு மொப்ப முடிந்தமையின்; ஈண்டு மவ்வாறு தலையும் அரசேல் தம்மை வழிபட்டார்க்கு அவ்வத்தேவரே எதிர்தோன்றி நின்று பயன்கொடுப்பாரெனவும், ஆண்டாண்டுக் கேட்கப்படுதலின்; அவரு மதற்கு வல்லுவர் போலுமெனின் மலைவற்க. அரசனுழையிய அமைச்சர் முதலாயினோர் மாட்டு நின்று பிறர்க்களிக்குமாறுபோல, முதல்வனே தனதாணையைத் தன்னேவல்வழி நிற்கும் அவ்வக்கடவுளர் மாட்டு வைத்துப் பயன்கொடுப்பன. அவ்வாறன்றித் தாமே வினைத்தொடக்கிற்பட்டுப் பரதந்திரராய் நிற்கு மக்கடவுளர், பிறர்க்குப் பயன்கொடுக்குமாறு யாண்டையதெனபதாம்.

அற்றேல் அவ்வக்கடவுளர்மாட்டுச் செய்யும் வழிபாடுஞ் சிவபிரானே ஏற்றுக்கொண்டு பயனளிப்பனாயிற் பசுபுண்ணியமுஞ், சிவபுண்ணியமாவன செல்லும்போலுமெனின்?— பசுபுண்ணியஞ் சிவபுண்ணியமெனப் பாகுபட்டது செய்வோர் கரு

ருள

த்துவகையானனறிக கொள்வோர் கருத்துவகையா னன்றுக லாற் செல்லாதெனவிடுகக.

நிற்பதெனனுமொருமை அத்தொழினமேனின்றது.

இவை நானகுஞ்செய்யுளானும ஏசனிடமபணி நாஞ்செய் தலான நூன யளநிகமாமாறும,அவைநோசகிநுசாவிசகுமாறு ம, பொதுவகையானுஞ் சிறபபுவகையானுந் தெரிததுணாததப் படடன.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.

---

மீளவு முனசொல்லபபடட தெய்வங்களை வழிபட்டவர் களுககு, அவரவாககுத் தககபலனகளை யநதநதத தெய்வங்கள தானே கொடுககும தொழிநது,சிவன கொடுககவேணடுவ தில் லையென்று பஞசராததரி சொல்ல; அவனை மறுதத தருளிச்செய் கிறார்.

இங்குராஞ் சிலாசகுப்பூசை யியற்றிநுல் - இவ்விடத்தி லே மூாததிகரிதது இருசகிற மூாததிகளசிலனை நாமர்ச்சனை பணணிநுல்,— இவாகளோவந தங்குவான றுவார் - இந த மூர்த்திகளெல்லவே யவவிடததிலே வநது நமமைச சுவர்கத திலே வைக்கிறவாகள,—அன்றே லததெய்வ மததனைக்காண் - அப்படியல்ல வாகையால், நீ சொல்லுகிற வநததெய்வஙகளு ம் அதிகாரியென றறிவாயாக. அப்படி யிருககையிநுல்,— எங குமவாழ் தெய்வமெல்லா மிறைவ னாணையிநுல நிற்பது - எவ் விடத்திலும் அவரவரிடததிலே யிருநது பூசைகொள்ளுகிற தெ ய்வங்கள் சர்வமும் பரமேசுரனுடைய வாஞ்ஞையாலே கா ணிப்பது. அப்படி யெங்கும் பரிபூரணனாயிருககிற சிவனுக்கு அ

ங்கங்கே யந்தந்தத் தெய்வங்களை வைக்கவேண்டின காரண மேதுக்கெனவில்?—அங்கு நாஞ்செய்யுஞ்செய்கைக் காலைவை ப்பா லளிப்பன - ஆகையாலே அவ்விடங்களிலே நாஞ்செய்கி ற பூசைகளுக்கெல்லாஞ் சிவனுடைய யாஞ்ஞையாலே யவையவி த்துக்குத் தக்க பலன்களைத் தரவேண்டுகையினால், அந்தந்தத் தெய்வங்களை யங்கங்கேவைத்தது, அந்தந்தற்குத் தக்க பலனை ப் பரமேசுரன் தருவன.

இதனாற் சொல்லியது, ஓவ்விடத்திலே யானமாயசனுக் காகச் சகளீகரித்த தொரு திருமேனியை யாசிந்தகால, இந்தத் திருமேனியல்ல வவ்விடத்தும் வந்து பூசாபலத்தைத் தருவது. இத்தன்மைபோல் எவ்விடத்திலு மிருந்து பூசைகொள்ளுந் தெய்வங்களும், பரமேசுரனுடைய வாஞ்ஞையாலே யிருத்தகை யினால, அந்தந்தத்தெய்வங்களை வழிபட்டவர்களுக்குரிய ப லன்களையும் பரமேசுரனே யறிந்து கொடுப்பனென்னு மு றைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——০——

சிலர்க்கிங்குநாம் பூசையிபற்றினுல்- பசுப் பார்ப்பார் தந் தை தாய்முதலாயினுரை இம்மைக்கண்வழி பட்டார்க்கு—இ வர்களோவந்து தந்துவான றருவாரனறேல்-அஃதிந்து மறுமை க்கண் பயனருங் கடவுள வேறெனப தெல்லார்க்கு மொப்ப முடிந்தமையின,— அததெய்வமதகளைக்காண் - ஈண்டுமெவ்வா றுதலையும் அற்றேல் தம்மை வழிபட்டார்க்கு அவவத்தேவ ரே யெதிர்தோன்றிநின்று பயன்கொடுத்தாரெனவும், ஆண்டா ண்டு கேட்கப்படுதலின் வரு மதற்கு வல்லுவர்போலு மென

மலையற்க. அரசனாணையே யமைச்சர்முதலாயினார் மாட்டு நின்று பிறர்க்களிக்குமாறுபோல,— இறைவனாணையினா லெங்கும் வாழ்தெய்வமெல்லாநிற்பது - முதல்வனே தனதாணையைத் தனதேவல்வழிநிற்கும் அவ்வக்கடவுளர்மாட்டு வைத்து,— ஆங்கவர் நாஞ்செய்யுஞ்செய்திக்கு - அவ்விடத்து நாஞ்செய்யுஞ் செய்திக்கு,— ஆம்பரிசு வைப்பாலளிப்பன - தக்கபயன்கொடுப்பன. அவ்வாறன்றித் தாமே வினைத்தொடக்கிறப்பட்டுப் பரதந்திரமாயினாரு மக்கடவுளர் பிறர்க்குப் பயன் கொடுக்குமாறு யாங்ஙனமென்பதாம்.

இவைநான்கு செய்யுளானும் மேல்விதித்தபணி நாஞ்செய்தலாயவறங்க ளிவையாமாறும், அவைநோக்கி நுகர்விக்குமாறும், பொதுவகையானுஞ் சிறப்புவகையானுந் தெரித்துணர்த்தப்பட்டன.

## மறைஞானதேசிகர் உரை.



தனக்கொரு விருப்பமில்லாத சிவன், முற்கூறிய வறங்களில் விருப்புடையனோ வென்னில், ஆன்மாக்களிடத்தில் வைத்த கிருபையதி னென்றுணர்த்துகிறார்.

காண்பவன் சிவனேயாவ லவனடிக் கன்புசெய்கை,
மாண்பற மரன்றன்பாத மறந்துசெய் யறங்களெல்லாம்,
வீண்செய லிறைவன்சொன்ன விதியறம் விருப்பொன்றில்லான்,
பூண்டனன் வேண்டல்செய்யும் பூசனை புரிந்துகொள்ளே. (௨௭)

| | |
|---|---|
| (இ-ள்.) காண்ப வன் சிவ னே யாகு லவனடிக் கனபு செய்கை மாண் பரம | காணொரு தெய்வத்தைக் குறித்துச் செய்யும் பூசைமுதலிய வழிபாடுகளெல்லாத் தையுமறிந் ததற்கேற்ற பலங்களைச் சிவனே கொடுப்பனெனறிராகில், அவனது திருவடியிற் பூசைபுரிதலே பரமமான தனமம |
| அரனறன் பாதமறந்துசெய் மறங்களெல்லாம் வீண்செயல் | நீயரனது சீர்பாதத்தைக் கூடாது பிறிதோரிடத்திற செய்யு மறங்களெல்லாம் பயனற்ற செயல்கள். அதற்குப் பயனாளிபா றோவெனில்? |
| இறைவன சொன்ன விதியறம் | சிவனருளிச்செய்த நியமவியாகமங்களின வழி நிறறலு நடத்தலே சிவதனமம. |
| விருப் பொன றில்லான | தனக்கொரு விருப்பமுஞ சிறிதில்லாதவன |
| பூண்டனை வேண்டல் செய்யும் | யாதாமொருவன் யாதொரு பலத்தை யிச்சித்துச் சிவனைப் பூசைசெய்வோனாக அதற் கதற்கேற்ற பலங்களைக் கொடுப்பனகாணை. |
| பூசனை புரிந்து கொள்ளே. | ஆகையால் நீயுஞ் சிவனையே பூசையைவிரும்பிச் செய்வாயாக எ-று (உஎ) |

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேலான்மாக்கள் பண்ணுங் கருமங்களையெல்லா மறிந்து பலத்தைக் கொடுக்கிறவன் சிவனேயாகையால் சர்வகர்மமுஞ் சிவனையுத்தேசித்தே பண்ணுவது புத்தியென்பது உணர்த்துதல்.

காண்பவன்சிவனேயாகி லவனடிக் கன்புசெய்கைமாண்பறம் - எவ்வழிப்பட்டதேவர்களை வழிபடினு மதைக்கண்டுபல

ங்கொடுப்பவன் சிவனேயாகையால், அந்தச்சிவனுடைய பாதாரவிந்தங்களிலே பத்திபண்ணுகிறதே சிறப்புடைய தருமம்.—அரனைப்பாத மறந்துசெய்யறங்களெல்லாம் வீண்செயல் - சிவனே பிரதானமாகவும், பிரமாதிதேவர்கள் அங்கமாகவும், சிவாஞ்ஞையால் × சௌராதி பூசைகளைப் பண்ணுகிறோமென்றும் பண்ணாமல், சிவன் பரத்துவமென்பதை மறந்து தந்தாம்பூசைபண்ணும் தேவனையே பரத்துவமென்று விசாரித்துப் பண்ணில்; பண்ணின பூசாபலம் விபரீதமாம் —இறைவன் சொன்ன விதியறம் விருப்பொன்றில்லான் பூண்டன்ன வேண்டல் செய்யும்—கர்த்தாவானவன் விருப்புவெறுப்பு ஒன்றுமில்லாதவனாயினும் தான்சொன்ன வேதாகமத்தின்படி பூசையைச் செய்வோர் பத்தியைத் தரித்தவன். அதனால் பத்தர்கள் வேண்டிய போகமோக்ஷங்களைக் கொடுப்பவனாதலால்,— பூசனைபுரிந்து கொள்ளேற்கும் சிவபூசையைச்செய்து அபிஷ்டத்தை வேண்டிக்கொள்வாயாக.

†சௌரம் - சூரியசமயபந்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

அந்நியதிரமற்ற தேவதா பூசாபலத்தையுஞ் சிவனே கொடுப்பவனாகையால், சிவ பூசாபலந் திரமாதலால், சிவ பூசையே செய்யவேணுமென்று செப்புகின்றார்.

காண்பவன் - பலமுண்டாக்குபவன்,— விருப்பொன்றில்லான் - விருப்பில்லானாயினும்,—பூண்டன்ன வேண்டல் செய்யும்-அனுக்கிரக நிமித்தியம் பூசைக்குட்பட்டவனாய விருப்பஞ் செய்யும்

மற்றவை வெளிப்பொருள்.

---

காண்பவன் சிவனேயாகி லவனடிக் கன்புசெய்கைமாண்பறம் - எவ்விடமும் அவனுடைய வாக்கினையா யிருக்கையினால் நாஞ்செய்கிற பூசைகளெல்லா மறிகிறவன் சிவனேயானால், எவ்விடத்து மவனுடைய சீர்பாதத்தை நினைத்துப் பத்திபண்ணுகிறதே மாட்சிமையுடைத்தாயிருக்கிற சிவபுண்ணியம். சிவனை மறந்து செய்யப்பட்ட புண்ணியங்க ளெல்லாம் புண்ணியமல்லவோவெனனில்?—அரனடிபாத மறந்துசெய் யறங்களெல்லாம் வினைசெயல் - பரமேசுரன் சீர்பாதத்தை மறந்து செய்யப்பட்ட புண்ணியங்க ளெல்லாம் பிரயோசன மற்ற தொழில். தன்மத்தைச் செய்கிறதெல்லாம் நன்மையல்லவோவெனனில்? தன்னிடம் வந்தவனுக்குச் சுகபோசனமாக விட்டது ஒரு சிவஞானிக்குப் பிச்சையிட்டது ஒவ்வாது ஆகையால்,—இறைவன் சொன்ன விதிப்படி - பரமேசுரன் வேதாகமங்களிலே நியமித்ததே தன்மமென்று சொல்லப்பட்டது.—விருப்பொன் றில்லான் பூசனைகொள்வன - ஆகையால் தான்சொன்ன முறைமையிலே யிந்தத் தன்மங்களைச் செய்தவர்களை யிரட்சிக்க வேணுமென்று தனக்கொரு விருப்பில்லாத பரமேசுரனுந் திருவுளமபற்றிக் கொண்டிருந்து அநுக்கிரகஞ்செய்வன.—வேண்டல்செய்யும் பூசனை புரிந்துகொள்ளே - ஆகையாலே நாமவேணுமென்ற பிரயோசனங்களைத் தாராநிற்பன, பத்தியாலே யர்ச்சனையை விரும்பிச் செய்வாயாக.

இதனாற் சொல்லியது, எவ்விடத்து மர்ச்சித்தவர்களுக்கு அதற்கதற்குத் தக்கபலனைப் பரமேசுரனே கொடுக்கிறவனாகையால், அவனுடைய சீர்பாதத்தை நினைத்து அர்ச்சிக்கிறதே யர்ச்சனையென்றும், அல்லாதது அர்ச்சனையல்ல வென்றும், கான்விதித்தபடியே யர்ச்சித் தவர்களுக்குத்தப்பாம லதற்குற்ற

பலனைக் கொடுப்பனுகையால்; சிவனை யர்ச்சிக்கிறதே பய
னெனனு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——0——

காரணபவன் சிவனேயாதலால் - இதனையுங் கூறியவர்தரு
ல் ஏனைக்கடவுளர் மாட்டுச்செய்யும் வழிபாடுகளையுமேற்றுக்
கொண்டு அளிப்பவன் சிவபிரானென்பது பெறப்பட்டவே,—அவ
னடிச்சனபுசெய்கை-அவனைவழிப்படுதே,— மாணப்பாட்டு-நல்ல
தோற்றமாம்.—அரனாரையபார மறந்துசெய் யாகமெல்லாம்-
அவன திருவடியை மறந்து செய்கிற ஆகுவவெல்லாம்,—வினை
செயல்-வினையென்பதுபோதருதலாலும்,— அறம-புண்ணியமாய
துசொன்ன இறையருள் விதி - வேதாகமங்களினயவிறைவனு
ல் விதிக்கப்படும விதிப்பாகலாலும்,—விருப்பொன்றிலான -ஒ
ன்றிலும்விருப்பிலனாயினும்,— பூசனையைவேண்டல்செய்யும்-உ
யிர்களைமாட்டுக் கருணையாலு விருப்பஞ்செய்யும்,—பூசனை புரி
ந்துகொள்ளே - அவ்விறைவனதிருவடிப் பூசனையே யொருதலை
யாகச் செய்யற்பாற் றென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



அச்சிவனை வழிபடுமிட முணர்த்துகிறார்

தாபரஞ் சங்கமங்க ளென்றிரண் டுருவினின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்ப
னீபரன் றன்னைநெஞ்சி னினைவையே னிறைந்தபூஜை
யாய்பரம்பொருளைநாளுமர்ச்சிநீயன்புசெய்தே.(உஅ)

தாபரஞ் சங்கமங்க ளென்றிரண் டுருவி னின்று மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்

(இ-ள்) மகத்தாகிய சிவன் சிவலிங்கத்தினிடத்துஞ் சிவதீக்கையினையுடைய சிவபத்தர்களிடத்துமாக விரண்டிடத்து மிருந்து கொண்டு நின்றதி லொருமைப்பாட்டையுடைய வான்மாக்களுக்கு அனுக்கிரகத்தைச் செய்வன்.

இவ்விரண்டையும் வழிபடவேண்டுமோ, ஒன்றையே வழிபடலமையாதோ வெனின்? யாதாமொருவர்கள் தாபரத்தில் வழிபட்டுச் சங்கமத்தை வழிபடா தவமானஞ்செய்யில்; இவன் றாபரத்திற்செய்ததும் பலியாதென் றாகமங்கள் சொல்லுதலால், அவ்விரண்டினையும் வழிபடவேண்டும்.

நீ பரன் றன்னை நெஞ்சி னினைவையே னிறைந்த பூசை

அவ்விரண்டுமின்றி நீ பரமமான சிவனை யகங்காரத்துடன் தியானம் பண்ணிக்கொண்டிருப்பாயாகில், அவனுக்கு உவப்பதாகிய பூசையாகாது.

ஆய பரம்பொருளை நாளு மர்ச்சி நீ யன்பு செய்தே.

ஆதலா லிவ்விடங்க ளொன்றை நீ யாராய்ந்துகொண்டு சிவனை நாடோறும் பத்தியுடனே பூசிப்பாயாக எ-று.

தாபர சங்கமமென்பது வடமொழி.
இருக்கிறதே நிலையாகையாற் றாபரமென்றார்.
போக்குவரவை யுடைத்தாகையாற் சங்கமமென்றார்.
இதற்குச் சிவஞானமதத்தி லறிக. (உ-அ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

**சிவன் தேஹேந்திரியாதி ரஹிதனாகையால் சிவனைப்பூசை பண்ணுவ தெவ்வாறென்னில்? மேலுத்தரங் கூறுகின்றார்.**

தாபரஞ் சங்கமங்க ளென்றிரண் டுருவினின்று மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்பன்—சிவலிங்கமுதலாகிய அசலமூர்த்திகளிலும், சிவபத்தராகிய சரமூர்த்திகளிடத்திலும் மகத்தியமாகநின்று, பத்தர்களபண்ணும் பூசையையேற்றுக்கொண்டு, பூசைபண்ணினபேர்க்கு மனோரதவா கிருபைபண்ணுவார்,—நீ பரனறனை நெஞ்சிலுன்னையேல நினைந்தபூசை—அந்தச்சிவனை இருதயத்திலே தியானித்து மானசபூசை பண்ணுவாயாகில் பாஹ்கிய பூசைபோல ¶ நியூநாதிரேகங்களும் இரவையு மசுசியும் குற்காதிதோஷங்களும் காயக்கிலேசமுமில்லாத குறைவற்ற பூசையாம்.

ததோ²க்தம் ஶ்ரீயோக³ஜே தந்த்ரே — ஸ்வதே³ஹாயதந [illegible] ஸ்தா²ப்ய ஶங்கரம் | [illegible] த்⁴யாநயஜ்ஞேந பூஜயேத் | த்⁴யாநயஜ்ஞ: [illegible] ஸர்வதோ³ஷவிவர்ஜித: || [illegible] | ஹிம்ஸாதி³தோ³ஷ [illegible] || த்⁴யாநயஜ்ஞ: [illegible].

இந்தமானசபூசை கூடாதிருக்கில்,—

ஆய்பரமபொருளோராறு மாசகன்றியன புரிசெய்தே—அந்தஞான பூசை கூடும்படிக்கு விசாரித்து சிவலிங்கத்தி னிடத்தும் மஹேஸ்வரரிடத்தும் பத்தியுடனே நாடோறும்பூசைபண்ணுவாயாக.

¶ நியூநாதி - குறைந்தது.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

அருவாகிய சிவனைப் பூசிக்குமவகை போதிக்கின்றார்.

தாபரம்-இலிங்கம்,— சங்கமம்-மெய்யடியார்கள்,—என்றிரண்டுருவினின்று மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க்குக் கருணைவைப்பன்,—நேயரானதனை நெஞ்சினிலே வையேல்-இருதயகமலத்திலே மனசை விட்டு பராசத்தியைச் சத்தியால் விளக்கப்பட்ட சிற்சத்தியாகிய மனசினாற் றியானம்பண்ணுதற் றியானம்பண்ணுவையாகில்,—அந்தரங்கப்பூசை-போகபூசை சாதிப்பாய், அது ஞானபூசையுமாம் அதுவன்றி,—ஆகமப்பொருளை-சிவாகமவாக்கியங்கொண்டு திரிபதார்த்த விவேசமபண்ணி பசுபாச பதார்த்தத்தினின்றும் விலக்கு னொருக்கத் தியான நிமித்தமுமாம், அதுவும் நினைந்தபூசை அல்லாய்,—நாடோறுமாகச் சீரியனபுசெய்கை-பத்தியோடுகூட—திருநந்தினந்தோறுஞ் சொன்னவப்பிரகாரம் கிரியாபூசை யோக பூசை ஞானபூசைகளினாற சிவனைப்பூசை பண்ணு.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

சதாசிவதத்துவத்தின் வைகுமிறைவன் புறத்தே திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியுந் திருவேடமுமாதாரமாகக் கொண்டு நின்றும், அகத்தே சமயிடமாகக் கொண்டு நின்றும், கண்டுள்ளார் செய்யும் பூசைகொண்டருளுவனாகலான்; அஃதறிந்து அவ்விடங்களின் வழிபடுகவென்பதாம்.

---

## நிரம்பவழகியருளா வருமாறு.

———0———

இப்படி யெவ்விடத்திலும் நிறைந்துநிற்கிற பரமேசுரனைப் பூசிக்கிற முறைமை யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி, மேலு மருளிச்செய்கிறார்.

தாபரஞ் சங்கமங்க ளென்றிரண்டுருவினின்று மாபரன பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்பன - அசைவற்றுநிற்கிற சிவலிங்கப் பெருமானென்றும், அதையுடனே கூடியிருக்கிற மயேசுரனென்றும் சொல்லப்பட்ட விரண்டு வடிவிலும், மகத்தான பரமேசுரன் எழுந்தருளியிருந்து பூசைகொண்டு, அநாதியே தன்னிடத்திலே நிலைபெற்று நிற்கிற ஆன்மாக்களுக்கு அனுக்கிரகத்தைச் செய்வன் இந்தப் புறப்பூசை யொழிந்து உட்பூசையுஞ் செய்யலாம் அதெங்ஙனே யெனில்—நேயனை நெஞ்சில் நினைவையேல் நிறைந்தபூசை - அந்தப் பரமேசுரனை யுன்னுடைய விருதயத்திலே தியானிப்பையாகில், அது அவனுக்கு மகாபூசையாம — ஆய்ப்பரம பொருளை நாளு மர்ச்சிநீ யன்புசெய்தே - ஆகையால் இப்படி யாராய்ந்து அறியப்பட்ட பரமேசுரனை நாடோறும் பத்தியுடனே பூசிப்பாயாக.

இதனாற் சொல்லியது, சிவலிங்கப் பெருமானிடத்திலும் மயேசுரரிடத்திலும் பரமேசுரன் எழுந்தருளியிருந்து பத்தியுடனே பூசித்தவர்களை இரட்சிப்பனென்றும், அந்தப் பரமேசுரனைத் தங்க ளிருதயத்திலே தியானித்தவர்களை அதுதானே மகத்தான பூசையாக வங்கீகரித்து இரட்சிப்பனென்னு முறைமையு மறிவித்தது.

—

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மாபரன் - சதாசிவதத்துவத்தினகண் வைகுமிறைவன்,— தாபர சங்கமங்களென்றிரண்டுருவினின்று - புறத்தேதிருக் கோயிலிலிருக்குந் திருமேனியுந் திருவேடமுமாகிய விரண்டையு மாதாரமாகக்கொண்டுநின்று,—பூசைகொண்டு மன்னுயிர்க்கரு ளையைப்பன - நிலைபெற்ற ஆன்மாக்கள்செய்யும் பூசையைக்கொண் டருள்செய்வன்,— நீபரன்றனைநெஞ்சில் நினைவை யேல் - நீ பரமசிவனை யகத்தேசிந்திப்பையாயின்,— நிறைந்த பூசை - அவ்விறைவனவ்வகத்தே யுயிரிடமாகக் கொண்டுநின்று அந்நிறைந்தபூசையைக் கொண்டருளுவன் ஆகலான்,— ஆய்பரம்பொருளைநாளும் - அங்ஙனந்தராய்ந்த பரம்பொருளை நாடோறும்,— நேயமொடர்ச்சி - நீ அவ்விடங்களிலர்ச்சித்து வழிபடு என்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

முற்கூறிய வன்புள்ளார் சிறப்பும், அன்பில்லாதார் சிறப்பின்மையு முணர்த்துகிறார்.

அரனடிக் கன்பர்செய்யும் பாவமு மறமதாகும்
பரனடிக் கன்பில்லாதார் புண்ணியம் பாவமாகும்
வரமுடைத் தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி
நரரினுட் பாலன்செய்த பாதகநன்மையாயத்தே. (உகூ)

(இ-ள்.) அரனடிக் கன்பர்செய்யும் பாவமு மறமதாகும் - பதியுள்ளவர்கள் சிவனிமித்தமாகப் பிரமகத்தி செய்ததுந் தருமமாம்.

தக்ஷப்பிரஜாபதி, மஹாவிஷ்ணுமுதலான தேவர்களை கூட்டிப் புண்ணியங்களுக்கெல்லா மதிகமாகிய யஞ்ஞத்தை சிவனை யன்றிப் பண்ண; அந்த யஞ்ஞமு மழிந்து † யஜமானனுக்குத் தலை போய், யஞ்ஞத்திற் வந்திருந்த தேவர்களுக்கும் ¶ பராபவமும் × அங்கச்சேதமும் வந்தது. மனுஷரிலே பிரமசாரியா யுள்ள சண்டேஸ்வரநாயனார் சிவபத்தியினாலே சிவாபராதியாகிய தம்முடைய பிதாவை மழுவினாலே வெட்டப் பித்ருவதமும் பிரமஹத்தியென்கிற தோஷமும் பொருந்தாமல் அந்தத்தேஹத்திலேயே சிவசாரூப்பியத்தைப்பெற்றார். இந்த § அந்வய + வ்யதிரேக திருஷ்டாந்தத்தினாலே சர்வகருமங்களும் சிவனையுத்தேசித்தே புத்திமான் பண்ணக்கடவன்.

† யஜமானன் - யாகஞ்செய்கிறவன்.

¶ பராபவம் - அவமானம்

× அங்கச்சேதம் - சரீரக்குறைவு.

§ அந்வயம் - உண்மை.

+ வியதிரேகம் - இல்லாமை

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

நிரீசுரவாதிபா யிருக்கின்ற மீமாம்சக முதலோர்க்கும் சத்தமுதற்றேவதை கன்மசாக்ஷியாதலால், சிவனைத் தான் கன்மசாக்ஷியாய்ப்பண்ணிக்கொண்டு, சிவனுக்கு மாறுபாடு மனசினினையாமல், சிவனிடத் ததிகாரம்பெற்ற விஷ்ட தேவதாசாக்ஷியாகத் தான் பண்ணிக்கொண்டு பண்ணுத கன்மம், பலங்கொடாது. அப்படிப்பண்ணின கன்மம் பாவகன்மங்களைப்பானும் பலங்கொடுக்குமெனபதற் குதாரணம்.

வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அறம்பாவங்கள் பயனறருவது கொள்வாரது வன்மைமென்மைபற்றியன்றிச் செய்வாரது வன்மைமென்மைபற்றியாதலால் செய்வினைகளது வன்மை மென்மைபற்றியாதலன்றென்பதற்கு, உடம்பாட்டினு மெதிர்மறையினுந் தக்கனுந் தண்டீசநாயனாரு மேசானறாகலானும்; சிவபிரானையே அர்ச்சிக்கற்பாறென்பதாம.

இவை மூன்றுசெய்யுளாறும் ஞானங்களிகநோக்கி முகர்வித்தறகட் படும விசேடங்கூறப்பட்டது.

இதனுணையும மீமாஞ்சகர் மதம்பற்றியாசங்கித்துப் பரிசரித்து இருவினைகளதியல்பு கூறுமுகத்தானும், அவை இறைவணிபாமாறு கூறுமுகத்தானும், அவற்றை நாஞ்செய்யுமாறு கூறுமுகத்தானும, அவை பயன்படுமாறு கூறுமுகத்தானும, 'தாமே மருவிடா வடிவுங் கனம பலன்களு மறுமைக்கணே' என்றது னை வலியுறுத்தியவாறு.

—

## நிரம்பவழகியருரை வாருமாறு.

—o—

இவ்வனஞ் சொல்லிப்போகத வுட்பூசையாகவும் புறப்பூசையாகவும் பூசித்துப பரமேஸ்வரர் சீபாதத்திலே பத்தியையுடையவர்கள் பாவங்களைச் செய்தார்களாயினும் புண்ணியமாமென்றும்; பத்தியில்லாதவர்கள் புண்ணியஞ் செய்தார்களாயினும் பாவமாமென்றும் மேலருளிச்செய்கிறார்.

அரனடிக்கன்பர்செய்யும் பாவமு மறமதாகும் - பரமேசுரனுடைய சீர்பாதத்திலே மிகுத்த பத்தியை யுடையவர்கள

ஒவ்வொரு பாவங்களைச் செய்தார்களாமாகிலும், அதுவு மன் பாவேவிடு — பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும் - அந்தப் பரமேசுரனுடைய சீர்பாதத்தி லேதுக்கும் பத்தியில்லாதவர்கள் புண்ணியங்களைச் செய்தார்களாயினும், அதுவு மத்தான பாவங்க ளாகாநிற்கும் அதெப்படியெனில்?—வரமுடைத் தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி நரரினிற் பாலன்செய்த பாதகம் நன்மையாய்த்தே - வரப் பிரசாதத்தை யுடைய தட்சப் பிரசாபதி செய்யப்பட்ட பெரிய வேள்வியானது குற்றமாய்விட்டது மனிதரிற் சிறுபிள்ளைசெய்த மஹாபாதகமும் புண்ணியமாய் விட்டது ஆகையால் பத்தியுள்ளவர்க ளசெய்த பாவமும் புண்ணியமாம். பத்தியில்லாதவர்கள் செய்த புண்ணியமும் பாவ மாகாநிற்கும்.

பத்தியுள்ளவர்கள் செய்த பாவமும் புண்ணியமாமென்ற தற்குப் பிரமாணம் தேவாரம். "கடிசேர்ந்த போதுமலரா னைக்கொண்டு நல்ல, படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதைபண்டு, முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கணமூர்த்தி, யடிசேர்ந்த வண்ண மறிவார்சொலக் கேட்டுமன்றே." என்றும், திருவாசகம். "தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச், சாதியும் வேதியன் றாதைதனைத் தாளிரண்டுஞ், சேதிப்ப வீசன் றிருவருளாற் றேவர்தொழப், பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்." என்னுமதுவுங் கண்டுகொள்க

திருக்களிற்றுப் படியார் ௧௩-செ. "பாதக மென்றும் பழியென்றும் பாராதே, தாதையை வேதியனைத் தாளிரண்டு—சேதிப்பக், கண்டீசர் தாமாம் பதியளித்தாய் கண்டாயே, தண்டீசர் தஞ்செயலாற் றூன." என்னுமதுவுங் கண்டுகொள்க.

சிவபத்தி யில்லாதவர்கள் செய்த புண்ணியமும் பாவமு மாமென்றதற்குப் பிரமாணம் திருவாசகம். "சந்திரனைத் தே

ய்த்தருளித் தக்கன்றனை வேள்வியினி, லிந்திரனைத் தோணெரித்திட் டெச்சன் றலையரிந்த, சந்திரனைச் செலவுமலர் கதிரோன பற்றகர்த்துச, அந்தித் திசைதிசையே தேவர்களை யோட்டிச்சந்து, செந்தார் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான், மந்தார மாலையே பாடுதுமகா ணம்மானாய்" என்றும், திருக்களிற்றுப்படியார். ௬௩-செ. "விட்டிலே சென்று வினையொழிந்து நிற்பவென, நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென—கூட்டிலவாட, சாதியே நின்றிலையே றநக்கரா வேள்வி செய்த, மாத்திரமே யாயுக்கண்டாய வந்து." என்றும் துவக்கண்டுகொள்க.

இங்ஙனம் சொல்லியது பரமேசுரனிடத்தில் பத்தியுடையவர்கள் செய்த பாவமும் புண்ணியமாமென்றும், பரமேசுரனிடத்தில் பத்தியில்லாதவர்கள் செய்த புண்ணியமும் பாவமாமென்றும், இப்படியானது சண்டேசுரநாயனார் பூசையினும் தக்கன்வேள்வியினும் கண்டோமென்று முறைமையு மறிவித்தது

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(அறம்பாவங்களாயன றருவது கொள்வாரது வன்மைமென்மைபற்றியன்றிச் செய்வாரது வன்மைமென்மை பற்றியாதல் செய்வினைகளது வன்மைமென்மைபற்றியாதல் லன்றாகலின்) அரனடிக்கன்புசெய்யும் பாவமு மறமாகும்-முதல்வன் திருவடிக்கு அன்புடையார் செய்யும் பாவச்செய்கையும் அறமாய்முடியும்,— பரனடிக்கன்பிலாதார் புண்ணியம்பாவமாகும்-முதல்வன் திருவடிக்கு அன்பிலார்செய்யும் புண்ணியச்செய்கையும்பாவமாய் முடியுமென்பதற்கு,— வரமுடைத்தக்கன் செய்தமா

வேள்வி தீமையாகி - வரப்பிரசாதம்பெற்ற தக்கனசெய்த நன்மை பொருந்திய பெரியயாகமுன தீமையாய் முடிந்ததாகிய உடனபாட்டானும்,—நாரினிற்பாலனசெய்த பாதகம் நன்மையாய்த்தே - மாறுடைப்பிறவியிற் சிறந்த தண்டீசநாயனூர் செய்தகொலைப்பாதகமும புண்ணியமாய் முடிதலாகிய எதிர்மறையானும் அவ்விருவருமே சானருகலின, சிவபிரானையே யர்ச்சிக்கற்பாறறெனபதாம.

இவைமூன்று செய்யுளானும் ஞானங்களுகநோக்கி நுகர்விககப்படும விசேடஙகூறபபட்டது.

இதனுனையு மீமாஞ்சகர்மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து இருவினைகள இயல்பு கூறுமுகத்தானும், அவையிறைபணியாமாறு கூறுமுகத்தானும், அவற்றைநாஞ்செய்யுமாறு கூறுமுகததானும, அவை பயனபடுமாறு கூறுமுகத்தானும், 'தாமே மருவிடா வடிவும் கனமபலனகளு மறுமைக்கண்ணே' எனறதனைவலியுறுததியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை.



விதிவாத முணர்த்துகிறுர்.

மறைகளீ சன்சொலச்சொல் வழிவரா வுயிரை
வைகுஞ், சிறைகொண்மா நிரயபிட்ட பணிசெய
வோா செல்வத்தோடு, முறையுமா பதிகளும்ப ருலக
ஙகள யோனிக்கெல்லா, மிறைவனு ணையினுலினபத து
ன்பங்க ளியைவதாகும். (௩௦)

(இ-ள்.) மறைக — வேதாகமங்கள் சதாசிவநாயனு ரருளிச்
ளீசன்சொ — செய்த திருவாக்கு. இது விப்பிரலம்ப வா
ல் — க்கியங்கள் போன்றதன்று. அஃதெக்காரண

த்தாலெனில்? இராகத்துவேட மில்லாமற் சருவத்தையு மறிந்தவனுதலாலே!

அச்சொல் வழியரா வுயிரை வைகுஞ் சிறைகொணமா நிரயம — அந்த வேதாகமமாகிய விரண்டு நூலின் வழியினின் றனுட்டியாத வானமாக்களை யெரியாய் நரககுழியினகட் கொண்டுபோய்வைக்கும்.

இட்ட பணிசெய்வோர் செல்வந்தோடு முறையுமா பதிகளும்ப ருலகங்கள — அந்தச் சிவவாக்கியத்தைப் பிரமாணித்து தனவழி வழுவாதுநின் றனுட்டித்தவாகள் செய்த பிரயாசத்துக் கிடாக, சுவர்க்க முதலிய வபரபோகங்களையு மேலான செல்வத்தையுடைய பரமுத்தியையு மடைவர்கள்.

யோனிச்கெல்லா மிறைவனுணையினுலினபத்துனபங்க ளியைவதாகும். — எழுவகை யோனியிற் றேற்றிய வானமாக்களுக்கெல்லாங் காததனுகிய சிவன றன து சத்தி சாமர்த்தியத்தான் முறைமையிற சுகதுக்கங்களைப் புசிப்பிக்கும். எ-று.

சொல் - எழுவாய்.

வைக்கும் - பயனிலை.

இதற்குத் தந்திரசாரத்துஞ் சிதம்பர மகாமியத்துங் காநததது மறிக (கூ0)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

**மேல்வேதமார்க்கத்திலே நடந்தோரையும் நடவாதோரையும் ஸ்வர்க்கநரகங்களிலே சிவன்சேர்ப்பனென்னும் முறைமையுணர்த்துதல்.**

**மறைகளீசன்சொ லச்சொல்வழி வராவுயிர்களைக்குஞ் சிறைகொண்மாநிரயம்**-வேதங்கள் சிவனுடையவாக்கியம். அந்தச்சிவனுடைய வாக்கியமானவேதத்திலே செய்யச்சொன்னதைச் செய்யாமலும், தவிரச்சொன்னதைத் தவிராமலும் நடந்த ஆன்மாக்களைச் சிறைசாலையில் நரகங்கள்,—இட்டப்பணி செய்வோர் செல்வத்தோடுறையுமா பதிகளும்பருலகங்கள்—சிவன் வேதத்தில் அநுக்கிரகம்பண்ணினபடியே நடந்த ஆன்மாக்கள், ஐசுவரியத்துடனே பொருந்தும் ஸ்தலங்கள் இந்திரலோகாதிகள். கேவலம்பாபமே பக்குவமாயின நரகமும், புண்ணியமே பக்குவமாயின் சுவர்க்கமுமடைவார்கள் புண்ணியபாபங்கள் துவந்துவமாயினர்க்கு இம்மையிலேசுகதுக்கங்களைப் புசிப்பதாக யோனிஜாதராவார்கள்,—யோனிசெல்லா மிறைவனாணையினுலினபத் துன்பங்களிசைவதாகும்-யோனிஜாதமாகிய மத்தியலோகத்தவர்க்கும் புரியஷ்டகரூபத்திலுண்டான யாதனா சரீரத்தை யுடைய நரகஸ்தருக்கும் சூக்குமதேகத்திலே நின்றும் பூதசாரசரீரத்தையுடைய கருமதேவர்களாகிய ஸ்வர்க்கவாசிகளுக்கு சுகமும், நரகவாசிகளுக்கு துக்கமும், மத்தியலோக வாசிகளுக்கு சுகதுக்கங்களும், ஈஸ்வராஞ்ஞையினாலே யுண்டாம்.

[illegible]
[illegible]
[illegible] ||

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

**வேதாகமங்கள் பரம்பரையினாலும் சாக்ஷாத்தாகவும் சிவபணி விதிவாக்கியம் ஆதலால், அகதப்பணி விதிவழி நடப்**

போர்க்கும் கடவாதோர்க்கு நிக்கிரகமனுக்கிர மிதுவென்று நிகழ்த்துகின்றார்.

வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

இனி ‘தாரணிபோடு நராபதிபோல’ என்ற உவமைப்பொருளாற் தெரித்துணாத்துகின்றார்.

மேற் கூறியவாற்றான் இருவினை முதலாயின அழிவெய்துவனவாகலானும், இதமகிதங்களெல்லாஞ் சிவபிரானே ஏற்றுக் கோடலானும், அவனேயின்பதுன்பங்களீயவனென்பது போந்தது. அதுவன்றியும், வேதாகமங்களாவன? சிவபிரான் கற்பித்தருளிய வாய்மொழியே. நரகமாவது அம்மொழிவழி நடவாதாரைத் தண்டித்தற்பொருட்டு அவனாலாக்கப்பட்ட சிறைக்களமே! துறக்கவுலகமாவது அம்மொழிவழி நடப்போரை வாழ்வித்தற்பொருட்டு அவனாலமைக்கப்பட்ட போனகரமேயாகலானும்; உயிர்கட்கு இன்பதுன்பங்கள் அவனாலாகற்பாலனவேயென்பதாம்

இயைவதென்னுமொருமை அத்தொழின்மேனின்றது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

‘ஒழுக்கம’என்ற திருவிருத்தமுதல் ‘அரனடி’என்ற திருவிருத்தமீறாக ஏழு திருவிருத்தமுஞ் சிவபுண்ணிய மருளிச்செய்து,மேல் பரமேசுர னருளிச்செய்யப்பட்ட வேதத்தின் வழி ய

ந்தவர்களுக்குச் சொற்கமென்றும், அந்தவழி வாராதவர்களுக்கு நரகமென்றும் மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

மறைகளீசன் சொல-வேதாகமங்களைப் பரமேசுரனாலே யருளிச் செய்யப்பட்டது,—அச்சொல்வழி வாரா வுயிரவை கருஞ் சிறைகளாமா னிரயம் - அந்த வேதஞ்சொன்ன முறைமையிலே வாராத ஆன்மாக்களை யிட்டுவைக்கிற சிறைச்சாலைகள் மகத்தான நரகங்களாயிருக்கும்.—இட்ட பணிசெய்வோர் செல்வத்தோடு முறையுமா பதிகளும்ப ருலகங்கள் - பரமேசுரன் அருளிச்செய்த வேதஞ்சொன்ன முறைமையி லுண்டான தன்மங்களைச் செய்கிறவர்களா யிருக்கும் புண்ணியவான்கள், அவர்கள் மிகுந்த ஐஸ்வரியத்தோடேயுங் கூடியவர்க ளிருக்கிற பதங்களே' தெய்வலோகங்கள் முதலாயுள்ள மகாலோகங்கள் முன்சொன்ன முறைமையிலே புண்ணியபாவங்களுக் கீடாக சொற்கநரகங்களை யநுபவித்து வருகிறது ஒருவர்க்கல்ல,—யோனிக்கெல்லா மிறைவனாணையினு லின்பத் துன்பங்களிசைவதாகும் - மற்றுமுண்டான சர்வ யோனியிலுள்ள ஆன்மாக்களுக்குப் பரமேசுரனுடைய ஆக்கினையினாலே சுகதுக்கங்களவந்து பொருந்தாநிற்கும்.

இதனாற் சொல்லியது, பரமேசுர னருளிச்செய்த முறைமையிலே தன்மங்களைச் செய்தவர்கள் மகத்தான சொர்க்காதி பதிகளிலே யிருப்பரென்றும், அந்தமுறைமை செய்யாதவர்கள் கொடிய நரகத்திலே கிடப்பர்களென்றும், சர்வ யோனியிலுள்ள வான்மாக்களுக்கும் பரமேசுர னாக்கினையினாலே சுகதுக்கங்கள் வந்து பொருந்தா நிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(மேற்கூறியவாற்று னிருவினை முதலாயின அழிவெய்துவன ஆகலானும், இதம் அகிதங்களெல்லாம் சிவபிரானேயேற்றுக் கோடலானும், அவனே யின்பதுன்பங்களீவனெனப்படு போந்தது) மறைகளெனச்சொல் - அதுவன்றியும வேதாகமங்களாவன? சிவபிரானறைபித்தருளிய மொழியே!—மாநிரயம் - பெரிய நரகமாவது,—அச்சொல்வழி வாராவுயிரை - அம்மொழிவழிநடவாதாரை,—வைகருஞ்சிறைகள் - தண்டித்தற்பொருட்டவனாலமைக்கப்பட்ட சிறைகளமே!—உம்பருலகங்கள - துறக்கவுலகமாவது —இட்டபணிசெய்வோர் - அம்மொழிவழிநடப்போரை,—செல்வத்தோடு முறையுமாபதிகள் - செல்வத்தோடு வாழ்விததற்பொருட்டு அவனாலமைக்கப்பட்ட பெரியதோர் நகரமேயாகலானும,— யோனிக்கெல்லா மின்பத்துன்பங்கள - உயிர்கட் கின்பதுன்பங்கள,—இறைவனாணையா லியைவதாரும் - அவனாணையாலாகிறபாலனவேயென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



முற்கூறிய சிவசத்தி நடத்துமதற் குதாரண மிட் டுணர்த்துகிறார்.

ஆணையா லவனிமன்ன னருமறை முறைசெய்யா ரை, யாணையிற் றண்டஞ்செய்து மருஞ்சிறை யிட்டும் வைப்ப, ஞானையின் வழிசெல்வோருக் கரும்பதி செல் வநல்கி, யாணையும் வைப்பனெங்கு மாணையே யாணை யேகாண். (கூக)

(இ - ள்.) ஆணையா லவனி மன்ன னருமறை முறைசெய்யானை யாணையிற் றண்டஞ்செய்து மருஞ்சிறையிட்டுமை வைப்பன — பூமியின்கண் வாழாநின்ற ராசாவானவ னரிய வேதத்தின் வழியாகிய மனுமுதலிய மிருதிகளிற் கூறப்பட்ட சாமபேதந் தான தண்டமென்னு நால்வகையினுள் தகுணமாகவே தனதாக்கினையாற் சிலரைத் தண்டித்துந் தன் காவலில்வைப்பதுஞ் செய்வன்.

ஆணையின் வழி செய்வோருக் கருமபதி செல்வ நல்கி யாணையும் வைப்பன — இராசா கற்பித்தவழி நடப்போருக்குப் பெறுதற்கரிய இராசவரிசையுண்டானதுவுங் கொடுத்த இராசசியபாரத்தி னிறைவியே யவனுந் தனதாகவிருக்கசத்தியுங் கோடாமற் செலுக்கொண்டு நடத்தாநிற்பன.

எங்கு மாணையே யாணையேகாண. — அந்த ராசாவினுடைய வாக்கினுக்குச் சந்திரனே யவனுடைய தேசமெங்கு முன்னமையாகவே யவனாணை நடக்கும். எ-று.

இராகுத சந்திரசார மெனவறிக (கூக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———0———

மேலு மதற்கே உதாரணம்.

ஆணையா லவனிமன்ன னருமறை முறைசெய்யானை யாணையிற் றண்டஞ்செய்து மருஞ்சிறை யிட்டுவைப்பன-சிவனுடையவனு க்ஞாசத்தியானது பொருந்துகையால் பூபதியாயுள்ளான் வேதத்திலுடையவழியிலே வர்ணாச்ரமதருமமானது நடவாதபே ரை சிவாஞ்ஞையான வேதத்திலே யின்னஅபாரதத்துக்கு இன்

னதண்டம் இத்தனைனாளின்னபடிச் சிறைவைக்கவென்றுசொன்னபடியே தண்டித்துச் சிறையிலும்வைப்பன.— ஆணையினவழிசெய்வோருக் கருமபதி செல்வநல்கி யாணையும்வைப்பன் - சிவாஞ்ஞையாகிய வேதமாகமத்திலே நடக்கச்சொல்லி ராசாவானவன் கட்டளையிட்டபடியே நடப்பவருக்கு, அவர்களுக்கு முன்னரிதாயிருந்த கிராமாதிகளையுங் கொடுத்து, ஐசுவரியத்தையுங்கொடுத்துத் தன்னுடைய அதிகாரசத்தியையும் வைத்து பிரபுவாகப்பண்ணுவன் ஆகில ராசாவும் நிக்கிரகானுக்கிரக கர்த்தாவாகையால் ஈஸ்வரனுக்கு சர்வநியந்திருத்துவ மில்லையெனில்? உத்தரமாக,—எங்குமாணையே யாணையேகாண-எவ்விடங்களிலு மிருக்கு மதிகாரசத்தியெல்லாம் சிவனுடைய ஆஞ்ஞாசத்தியாமென்றறிக.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

மேலக்கு குதாரணம்

ஆணையும் வைப்பன - சிட்டர்களை அனுக்கிரகம் பண்ணுவோம் துஷ்டர்களை நிக்கிரகம் பண்ணுவோம் என்று தனதிடத்திருக்கு மாஞ்ஞாசத்தி சாமர்த்தியத்தை யுலகத்துக் கறிவிப்பன இப்படி இராஜாவிற்கு நிக்கிரகானுக்கிரக கர்த்திருத்துவம் சொன்னூற் சிவனுக்குச் சர்வ கர்த்திருத்துவம் கெடுப்டுப்போம். அதுஇல்லை,— எங்கு மாணையே யாணையேகாண- இராஜாக்கள் முதலோரிடத் திருக்கு மாஞ்ஞாசத்தியே சிவன தாஞ்ஞாசத்தி.

மற்றவை வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

உலகத்து வேந்தர் ஆணையாற் கிளந்த தமது மொழிவழி நடவாதாரை ஒறுத்துச் சிறைக்களப்படவும் வைப்பர். அம் மொழிவழி நடப்போரை வாழ்வித்துத் தங்கீழதிகாரமுஞ் செய்யவைப்பர். அமைச்சர் முதலாயினோர்மாட்டு அவ்வாறு காணப்படுமாணையும் அவ்வேந்தராணையேயாம். அதுபோல முதல்வன்மாட்டுங் கண்டுகொள்கவென்பதாம்.

ஈண்டு மறையென்றது மொழிமாத்திரையையுணர்த்தி நின்றது.

ஏகாரம் முன்னையது தேற்றம், பின்னையது அசைநிலை.

இஃது ஒட்டென்னுமலங்காரம்.

அற்றேல், அரசனாணை வேறுள்வழி இறைவனாணையே யாண்டுமென்றல் செல்லாதென்பாரை நோக்கி; அஃதுணர்த்துதற் கெழுந்தது வருஞ் செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---o---

பரமேசுரனுடைய ஆக்கினையு மிப்படி இருக்குமென்று ஒரு திட்டாந்தமிட் டருளிச்செய்கிறார்.

ஆணையா லவனிமன்ன னருமறை முறைசெய்யானை யாணையிற் றண்டஞ்செய்து மருஞ்சிறை யிட்டுவைப்பன் - பொதுவற விராச்சியம் பண்ணுகிற விராசாவானவன் தன்னுடைய வாக்கினையாலே யரிய வேதத்தின்வழி வாராதவர்களை யந்த வாக்கினையாலே தண்டித்துச் சொல்லுதற்கரிய துயரத்தைப்

பொருந்தியிருக்கிற சிறைச் சாலையிலே யிட்டுவைப்பன்,—ஆணையின் வழிசெய்வோருக் கரும்பதி செல்வநல்கி யாணையும் வைப்பன - தனதுடைய வாக்கினையின வழியிலே தப்பாமல் நடக்கிறவர்களுக்குப் பெறுதற்கரிய விராச்சியத்தையும் ஐஸ்வரியத்தையுங் கொடுத்துத் தனதுடைய வாக்கினைக்குங் காரதராக வைப்பன,—எங்கு மாணையே யாணையேகாண-இந்தமுறைமை போல, எவ்விடத்தும் சத்திபமே பரமேசுரனுடைய வாக்கினையென றறிவாயாக.

இதனாற் சொல்லியது உலகியல்பு வேத நூலொழுக்கமாகையால், இராசாவானவ னந்தநூலின வழியிலே வந்தவாகளுக்கு வேணடுதற்க பாக்கியங்களைக் கொடுத்தும், அந்தநூலின வழி வாராதவர்களை யருஞ்சிறையிலே யிட்டுவைத்துத் தண்டிக்கிற முறைமைபோல; பரமேசுரனுடைய வாக்கினையுமித்தன்மைத்தென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அவனிமனனன - உலகத்துவேந்தர்,— ஆணையாலருமறைமுறைசெய்யானை - ஆணையார்கினந்தமது மொழிவழிநடவாதாரை,—ஆணையிற்றண்டஞ்செய்து மருஞ்சிறையிட்டும் வைப்பன்-ஆணையிறுத்து அரியசிறைக்களபபடவும் வைப்பா.—ஆணையினவழி செல்வோர்க்கு - அம்மொழிவழி நடப்போரை,—அரும்பதிசெல்வநல்கி - அரியபதியுஞ்செல்வமுமீந்து வாழ்வித்து,—ஆணையுமவைப்பன - தனகிழதிகாரமுஞ் செய்யவைப்பன்,—எங்குமாணையே யாணையேகாண்-அமைச்சர்முதலாயினோர மாட்டவ்வாறுகாணப்படு மாணையு மவவேநதர தாணையேயாம்; அதுபோல முதல்வன்மாட்டுங் கண்டுகொள்க.

## மறைஞானதேசிகர் உரை.



*சிவ ஞானமாக்க ளிருவினைப்பலத்தைத் துய்ப்பித் தநுக்கிரகஞ்செய்யு மதற் குதாரணமிட் டுணர்த்துகின்றார்.*

அரசனுஞ் செய்வனீச னருளாவழி யரும்பாவங்
க, டரையுளோர் செய்யிற்றீய தண்டலினை வைத்துத்த
ண்டத், துறைசெய்து தீர்ப்பனப்பின்பு சொல்வழி நடப்
பாரும்போர், நிரையமுஞ் சேராரந்த நிரையமுந் நீர்மை
யிற்றாம். (௫௨)

(இ-ள்.) **அரசனுஞ் செய்வனீச னருளாவழி** — இராசாவானவ னான்மாக்கள் செய்த கன்மபலத்துக் கீடாக நிக்கிரகஞ்செய்வது மநுக்கிரகஞ்செய்வதுஞ் சிவனதாக்கினை யாயினாற் றானமாக்களை யுறுவிப்பது மநுக்கிரகமாமோவெனில்?

**அரும்பாவங்கடரையுளோர்செய்யில்** — பூமியினக ளான்மாக்கள் பரதாரகமன முதலிய பாவங்களைப் பிறரறியச் செய்யின,

**தீய தண்டலினை வைத்து** — இன்னபாவஞ் செய்தவர்களுக் கின்ன வபராதமென்னு மனுநூல் விதிப்படி யறிந்தத் தற்கேற்ற தண்டத்தைக் கொண்டு விடுவன.

**தண்டத் துறைசெய்துதீர்ப்பன** — சிலர்செய்த பாவத்துக் காக்கினையிட்ட தனு லதனை யிம்மைக்க ணனுபவிப்பித்துத் தீர்ப்பன்.

**பின்பு சொல்வழிநடப்பர்** — இராசாவாற் புத்தி கற்பிக்கப்பட்ட பின்னும் பாதகத்தைச் செய்யா தின்னமுந்

ண்டிப்பனெனப் பயந்தவர்கள், வேதாகமங்களில் விதித்தபடியே நடப்பார்கள்.

தூயோர்க்கிடையூறு சேரா

ஆதலாற் சுத்தரும் பாவங்களைச் செய்யாது நடக்கவே நரகத்திற் றுக்கமுறார்கள்.

அந்த நியாய மிந்நியாயமேயா ம.

சிவனே யிந்த வான்மாக்களை நரகவாதனைப்படுத்தித் துயருறுவிப்பது கருணையானே றபோல, இந்த ராசாவு மிந்தவான்மாக்களைத் துயருறுவிப்பது மத்தன்மைத்தது என்று

அரசனுமென்ற வுமமையாற் புண்ணியவான்களா யிருக்கிறவர்கள் செய்த தீவினையை யறிந்த தாசாரியன் பரிகாரஞ்செய்து தீராநிற்பன.

இராசாவுங் குருவுமாக விவ்விருவரு மறியாமற் செய்த பாவத்தை யியமதன்மராசன் போக்குவது மவன்றருள் வழியென்றறிக.

இதற்குச் சிவதன்மோத்தர மெனவறிக. (௩௨)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலிதற் குதாரணம்

அரசனுஞ் செய்வதீச னருளாவழி யரும்பாவங்கள் தனையுளோர்செய்யில் - ராசாவானவன் செய்கிறதும் சிவனுடைய ஆஞ்ஞாசத்தி பிரேரணையால். அதெவ்வாறெனில்? தங்களாற்றீர்த்துக் கொள்ளுவதற்கு அரிதாகியபாவங்களை பூமியிலேயுள்ளபேர்கள்செய்தால்,—தீயதண்டலின்வைத்துத் தண்டத்தைசெய்து தீர்ப்பன-தண்டிக்கச்சொன்ன வுரையின்படியே பொல்லாததாகிய வருத்தத்தைச்செய்து அவர்கள் பண்ணின

பாபத்தைத்தீர்ப்பன,—பின்பு சொல்வழிநடப்பர் தூயோர்-சுத்தரானவர்கள் முன்னாமின்னபடி அபராதத்தைச் செய்து இனிதண்டப்படமாட்டோமே, மேலேவேதாகமங்கள் சொன்னபடியே நடக்கவேணுமென்று நடப்பார்கள் — நிரையமுஞ்சேரார் - முன்பண்ணினபாபம் ராசதண்டத்தினாலே போகையினாலும், மேல் பாபத்தைப்பண்ணாதிருக்கையினாலும், அவர்கள் நரகத்தைச்சேரார்கள் பாபம்பண்ணினபேர்க்கு நரகாநுபவமென்று முன்சொன்னீரே யெனின்?— அந்தநிரைய முன்னீரையீதாம்-அந்தநரகத்தில் தண்டமும் இந்த ராசதண்டம்போலாகையால்.

இந்த ராசதண்டம் பட்டவர்களுக்கு நரகயாதனையில்லை. அதெவ்வாறெனின்? ஆதியிலேகர்த்தாவானவன் பூமியின்கண்தான அருளினவேதநீதி வழுவினோர்க்கு மூன்றுவகையாக பிராயச்சித்தங் கற்பித்தார்

வர்ணாசிரமதர்மத்திலே நடக்கிறபேர்க்கு ¶ பிரமாதாத் பாபம்வந்தால் குருவினாலே பிராயச்சித்தாதி யநுஷ்டானத்தினாலே சுத்தி.

துர் ஆனமாக்களா யிருக்கிறபேர்கள் பண்ணினபாபத்திற்கு ராசதண்டத்திலே சுத்தி

ராசாவினாலறியப்படாத பாபத்துக்கு யமதண்டத்தினாலே சுத்தி.

¶ பிரமாதாத - அபுத்திபூர்வமாக

[illegible] ஶிவயோகேந்த்³ரை꞉ [illegible]
ஶாஸ்த்ர ஶாஸ்த்ரார்த²ஜ்ஞ [illegible] | [illegible]
பாபானாம் [illegible] ॥

சாரியையுள்வழித் தன்னுருபு நிலையாது வருதல் இலேசா ற் கொள்க.

மோனை யெதுகைக்கேற்பத் தண்டமாகிய துரையைச்செ ய்தெனிறுமையும

துரை மருதிப்பாடு, அது "என்னுடைய துரைமாண்டவா பாடி" என்பதனுலுமறிக

முன்னிலை ஏவற்பெயரோடு முடிந்த வினைத்தொகை.

ஈமையுடையதனை ஈமையென றுபசரித்தார்.

இவை மூன்றுசெய்யுளானுந் தாடகிபோலத் தருமாறு விரித்துக் கூறப்பட்டது

அற்றேல், பாவமாத்திரையேயன்றிப் புண்ணியத்தையுந் தீர்க்க வேறுமுண்டெனின்? அது முன்னாகக் கூறப்படும்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

இங்ஙனஞ் சொல்லப்பட்ட விராசாவினுடைய வாக்கினை போல பரமேசுரனுடைய வாக்கினையுமென்றது எப்படியென்ற மாணாக்கனை நோக்கி, மேலருளிச்செய்கிறார்.

அரசனுஞ் செய்யத் தீசனருள்வழி - இராச்சியம்பண்ணுகி ற இராசாசெய்கிற வாக்கினையும் பரமேசுரன் கற்பித்த முறை மையாயிருக்கும். அதெங்ஙனமெனனில்?— அருமபாவங்கள் தனையுமோரா செய்யில் - அனுபவிக்கைக்கு அரிதாயிருக்கத்த க்க மிகுத்தபாவங்களைப் பூமியிலுள்ள வானமாக்கள் செய்தா ர்களாகில்,—தீய தண்டலின வைத்து - பொறுக்கவொண்ணா த கொடிய தண்டங்களைப் பண்ணி,—தண்டிக் கவைசெய்து

தீர்ப்பன் - செய்த குற்றத்துக்குத் தக்க தண்டங்களை
ச் சொல்லிக் கற்பித்து விதனமுமடுத்திப் பின்பந்தக குற்றங்
களையுந் தீராநிற்பன —பின்பு சொல்வழிநடப்பர் ஆயோர் - பி
ன்பு சுத்தரானவர்கள் இன்னமும் குற்றஞ்செய்தால் விதனம
வருமென் றறிந்து கற்பித்த முறைமையிலே நடவாநிற்பார்க
ள்;— நிரையமுரு சேரார்-அவர்கள் பூமியிலே பிரத்தியட்சமா
யிருக்கிற விதந்த சிறையிலும் பொருந்தார்கள்.— அந்த நிரைய
முதிரைமையிக்காம - பரமேசுரனருளிச்செய்த வேதாகமத்தின
வழியிலே வாராதவர்களை யிடமிழைக்கிற அந்தகாரமும் இந்த
முறைமையினை யொக்கும்.

இதனாற் சொல்லியது, இராசாவானவன இராச்சியத்தி
லுள்ளவர்கள் குற்றஞ்செய்தால் அந்தந்த குற்றங்களுக்குத் தக்
கதண்டங்களை தண்டித்துப் புத்தி கற்பித்தால் புத்தியுள்ளவர்க
ள அந்த முறைமையிலே நடந்துவருவார்கள். அதுபோலப் பர
மேசுரனும் ஆன்மாக்கள் செய்த பாவங்களுக்குத்தக்க இயம
தண்டங்களையும் பண்ணுவித்து பிறகேயும் அனுக்கிரகிப்பனெ
ன்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

தனையுரைரா ருமபாவங்கள் செய்யிற்-இவ்வுலகத்துள்ளா
ரரிய பாதகங்கள் செய்தில்,— நியதண்டவினைவைத்து-அரச
னானவன் நியமனவாகிய தண்டஞ்செய்து,—தண்டத்தைச் செய்
தும் தீர்ப்பன்-மேலும் பாவஞ்செய்யி லிதனையின்றி யின்
னுங்கொடிதாகச் செய்வலெனத் தண்டத்தையெடுத்துச் சொ
ல்லி யச்சுறுத்தியொழிப்பன்.—ஆயோர் பின்புசொல்வழி நட

ப்பர் நிரயமுஞ்சேரார்-அறிவுடையார் பின்பு விதிவழிநடந்து நிரயத்தினுமழுந்தார்,—அந்தநிரய முன்னீராமையீதாம்-அந்தநரகதண்டமும் ராசதண்டம்போலாம. இங்ஙனம் ராசதண்டம் வைத்து நரகதண்டம வாராமற் பாதுகாத்தற்பொருட்டு நரகதண்டத்தை யறிவுறுத்தற்பொருட்டு மாகலான,— அரசனுஞ்செய்வதீச னருளவழி-அவ்வரசனுணையு முதலவனுணை வழித்தாவ தன்றிச் சுதந்திரமனறெனபதாம.

இவை மூன்றுசெய்யுளானுந் தராபதிபோலத் தருமாறு தெரிந்துகூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.



இராசாவைப்போலச் சிவனுக்கும பட்சபாத மில்லையென் றுணர்த்துகிருர்.

அருளினு லுரைத்தநூலின் வழிவரா ததன்மஞ்
செய்யி, னிருளுலா நிரையத்துன்பத் திட்டிரும் பாவ
ந்தீர்ப்பன், பொருளுலாஞ் சுவாக்கமாதி போகத்தாற்
புணியந்தீர்ப்பன்,மருளுலா மலங்கடீர்க்கு மருந்திவை
வயித்தியநாதன். (௫௭)

(இ-ள்.) அருளி னு லுரை த்தநூலின வழிவரா ததன மஞ்செய்யின — ஆனமாக்கள் சநநமரணக் கடலைவிட்டுக் கரையேற்றுகையின பொருட்டுத் தனது கருணையினுற் றிருவுளளஞ்செய்த வேதாகமங்கள்வழி நடவாமற் பாவத்தைச்செய்யின,

இருளுலா நிரையத் துன்பத் — இருள்பொருந்திய நரகவேதனையிற் கிடந்து துயருறு மகத்தாகிய பாவங்களைப்புசி

இட்டிரும் பாவ ப்பித்துத் தொலைந்தவாறே, யதனைத் தீர்ப்
ந்தீர்ப்பன பன.

பொருளலா அந்த நூலிலரங்கூறிய முறையினடைந்து
ஞ் சுவர்க்கமாதி மவாகளைப போகத்துக கேதுவாகிய பொ
போகந்தாற் பு ருள்க ளனைத்தையுமுடைய சொர்க்கமுதலி
ணியந்தீர்ப்பன ய போகங்களைப புசிப்பித்துத் தொலைபபியா
நிற்பன இவவிரண்டு நாசததாற் பயனியா
தெனில்?

மருளுலா மல வயித்தியநாதனுகிய சிவன மலமாயாதி
ங்கடீர்க்கு மருந யாகிய வியாதியை யானமாக்களுக்குப பட
திவை வயித்திய சபாதமினறியே போக்காநிறபன எ-று.
நாதன.

வயித்தியநாதன - எழுவாய்.

தீர்ப்பன - பயனிலை.

இதற்குக காரணுகமும் வாயவயசங்கிதையு மெனவறிக.

"விணணுளார நரா மற்றை விலஙகுமோ, பணணும பா
வ பலததைக கொடுப்பவ, நிணணமே யமன றேசிகன நீதத்
டும், பணணிற் பாவ விதஞசிவ பததரும்" "பிணககற தனனையு
ம் பெறறவா தமமிடைக, கணககி லாணையுங களவாக டம்மை
யும், வணககு வானமனனன மறறையர் தங்களை, பிணககுவா
னர சதது ளிபமனே" எனவறிக. (௩௩)

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

———o———

மேல் வைத்யனே யுகாரணமாகக் கூறுதல்.

அருளினுலுரைத்தநூலின்வழிவரா ததனமஞ்செய்யின்-ப
ரமேசுரன் ஆன்மாக்களுக்கு தருமார்த்த காமமோக்ஷமாகிய அ

தர்விதபுருஷார்த்த சித்தியின்பொருட்டுக் கருணையினாலே ய ருளிச்செய்த வேதத்தின்வழிநடவாமல் அதர்மத்தைச்செய்யி ல்,—இருளலா நிரையத்துன்பத்திட்டிரும்பாவந்தீர்ப்பன-அ ந்தகாரம்பொருந்தியிருக்கிற நரகத்திலேயிடும் பெரியதாகிய பாபத்தையொழிப்பன,—பொருளலாருசுவர்க்கமாதி போகத் தாற புண்ணியந்தீர்ப்பன-எல்லாப்பொருளுமுண்டாகிய சுவர் க்காதிலோகங்களில் போகத்தினாலே புண்ணியத்தையொழிப் பன,—மருளாமலங்கடீர்க்குமருந்திவை-† துச்சமாயிருக்கிற விஷயசுகத்திலே பரமசுகபுத்தியாக மயக்கத்தைப்பண்ணுவ தாயிருக்கிற கருமங்களாகிய மலங்களையொழிக்குமருந்து இந் தஸ்வாகமங்கள் — வைத்தியருமிவனே-இவனே

ஸ்வாகமங்களாகிற ஔஷதத்தைக் கொடுத்துக் கருமங்க ளாகிய வியாதிகளினீக்கும் வைத்தியனுமிவனென்றது-தேகத்தி ல்வியாதியைப் போக்குகிறவனுக்கு வைத்தியனென்ற பேராகை யால், தேகத்துக்குக்காரணமாகிய கருமத்தைப் போக்குகை யால் வைத்தியருக்கும் ஸ்வாமியென்பது தோன்ற வைத்திய னென்றது.

† துச்சம் - நிஷ்பலம்.

௬௨-ஸூத்ரம்-സംസാരവൈദ്യസ്സർവജ്ഞസ്സർവൌഷധിഃ.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

பின்னு முதாசரிக்கின்றார்.

அருளினுலுரைத்த நூல் - வேதாகமங்கள்,—இருளலாநி ரயம் - அந்தகாரம் பொருந்திய நரகம்,—மருளலாமலம் - மயக்

க்கம்பொருந்திய பாவபுண்ணியங்கள்,— மருந்து - நரகசுவர்க்கம்,—சிவன்றனே,—வைத்தியன் - பண்டிதன் மற்றதுவெளிப்பொருள்.

## சிவஞானயோகியருளை வருமாறு.

——()——

வேதாகம நூல்வழி சிவஞான பாவம், நூல்வழி நின்று அருள்வழி சிவயோகம் புரிந்து விடம் இரண்டறவாரா ஞானயோகியராவர், அவர்தாம் பசுமுருமைபெற்றாருடனே சிவபோகானுப வைத்தியன் இன்பத்துன்பங்களாகிய மருந்தை நுகர்விப்பனென்பதாம்.

இஃது ஏகதேச உருவகம்.

## நிரம்பவழகியருளை வருமாறு.

——()——

ஆன்மாக்களுக்குப் பரமேசுரன் இங்ஙனஞ் சொல்லிப் போகாத பாவகன்மத்தைப் போக்கும் சொழிந்து, புண்ணியகன்மத்தைப் போக்கவேண்டுவ தில்லையென்று சொல்ல; அவனே போக்கிப் பக்குவான்மாக்களுக்குப் புண்ணியகன்மமு மாகாது: ஆகையால் அதுவும் போக்குகிற முறைமை யருளிச்செய்கிறார்.

அருளினு லுரைத்த நூலின் வழிவரா ரதனமஞ்செய்யி னிருளுலா நிரயத்துன்பத் திட்டிடும் பாவந்தீர்ப்பன - பரமேசுரன் தனது காருண்ணியத்தினாலே யருளிச்செய்த வேதாகமத்தின் வழியிலே வாராமல் தன்ம மல்லாதவையிற்றைச் செய்திறவர்களே, மயக்கம்பொருந்தி இருக்கப்படாநின்ற நரகவே

னையிலே யிட்டுப் பெரிய பாவங்களைப் போக்குவன — பொரு ளலாரு சுவர்க்கமாதி போகத்தாற் புண்ணியந்தீர்ப்பன - மிகுத்த பதார்த்தங்களை யுடைத்தா யிருக்கப்படாநின்ற சுவர்க்க முதலான போகங்களைப் புசிப்பித்தே புண்ணியங்களையும் போக்காநிற்பன, — மருளுலா மலஞ்சுடாக்கு மருந்திவை வயித்திய நாதன் - அஞ்ஞானமே பொருந்தி யிருக்கப்படாநின்ற மலங்களைச் சுவர்க்க நரகமென்கிற அவுஷதங்களைக் கொண்டு போக்குவன, ஒருத்தராலுந் தீர்த்தற்கரிதாகிய பிறவிப் பிணியைப் போக்குகைக்கு வயித்திய நாதனாகிய பரமேசுரன்.

இன்னுஞ் சொல்லியது, பரமேசுரனருளிச்செய்த வேதாகமத்தின் வழி வாராத பாவிகளை நரகத்திலே யிட்டுத் தண்டிப்பித்துப் பாவங்களைப் போக்குவனென்றும், புண்ணியஞ்செய்தவர்களைச் சுவர்க்காதி போகங்களிலே வைப்பித்துச் சுகத்தை யநுபவிப்பித்துப் புண்ணியங்களைப் போக்குவனென்றும், இந்தப் புண்ணியபாவமென்கிற விரண்டு விஷயத்தாலும் அஞ்ஞானமே பொருந்தி யிருக்கப்பட்ட மலங்களைப் போக்குவனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

(வேதாகமநூல்வழி நில்லாமைபாவம். நூல்வழிநின்றும் அருள்வழி நில்லாமைபுண்ணியம். அவ்விரண்டுநோயாகலான),— அருளினாலுரைத்த நூலின வழிவராது - உயிர்கட்குக் கருணையாலளித்தருளிய வேதாகமநூல்வழி யொழுகாது, — அகன்மஞ் செய்யின - பாவஞ்செய்யின், — இருளுலா நிரயத்துன்பத் திட்டு - இருணிறைந்த நரகத்துன்பத்தினைக் கொடுத்தவித்து, — இரும்பாவந்தீர்ப்பன் - பெரிய பாவத்தினைத் தீர்ப்பன், — பொரு

சூலாஞ்சுவர்க்கமாதி போகத்தால் - பொருள்கள்தங்கிய சுவர்க்காதிபோகததால்,—புண்ணியநதீர்ப்பன - புண்ணியத்தினைத்தீர்ப்பன,—வயித்தியநாதன - சிவபிரானாகிய வைத்தியன்,— மருளூலாமலங்களை - மருட்சியுண்டாதற் கேதுவாகிய மலநோய்களை,— தீர்க்குமருநதிவை - போக்கு மருநதுகளிவையெனபததனையங்களாமெனபகாம்

---

## மறைஞானதேசிகர் உரை.



சிவவாககியத்தினவழி நடப்பாரசகும் நடவாதோர்க்கும் உதாரண முணாததுகிறா

மருத்துவ னுரைத்தநூலின் வழிவரிற் பிணிகள் வாரா, வருத்திடும் பிணிகடப்பிற் றப்பிய வழியுஞ்செயத், திருத்துவன் மருந்துசெய்யா துறும்பிணி சென்றுநீப்பப, னுரைததநூற சிவனுயினபோ யுறுங்கன்ம முடித்திடப்பன். (நச)

(இ-ள்.) மருததுவனுரைத்தநூலின — தனவந்தரிசமகிதைமுதலிய வாகடத்தின வழி நடக்கு மவாகருப் பிணிகளவநதுபொருந்தாவாம

வழிவரிற் பிணிகளவாரா

வருத்திடும் பிணிகடப்பில் — அந்நூலினவழி நடவாமல் அபத்தியமாய் நடக்கிறவாகளை யநத வியாதி வருததாநிற்கும.

தப்பிய வழியுஞ்செய்யத திரு — அந்தவயித்தியன் சொன்னபடி நடவாத பத்தியமாக வொன்றைச்செய்யி னதற்கே

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

வாகட நூல்வழி யொழுகாது தப்பியவழியொழுக, அங்ஙன் மானசிகத்தானும் பௌதிகத்தானும் வரும் பிணிகளை அதற்குத் தக்க மருந்துகளைத் திருத்தியும், தப்பியவழியொழுகாதிருப்பவுந் தைவிகத்தான் வரும் பிணிகளை அவற்றிற்குத் தக்க உபாயங்களிலே செலுத்தியும், தீர்த்திடுவன மருத்துவன். இவ்வாறே, சிவபிரானும் உயிர்கட்கு வரும் இருவினையைப் பலதிறத்தானு மூட்டித் தீர்ப்பனென்பதாம்.

மேலுருவகஞ் செய்ததனைத் தெரிந்துணர்த்தியவாறு.

தப்பியவழியுமென்றவும்மை இழிவுசிறப்பின்கண் வந்தது.

திருத்தியென்பது முற்றெச்சம்.

நன்மருந்தென்பதூஉம் பாடம்.

சென்றும் உம்மை இறந்தது தழீஇயிற்று.

சென்றுமென்புழி விவ்விகுதி விகாரத்தாற் றொக்கது; "குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும்" என்றாற்போல.

அவற்றிற்குத்தக்க வுபாயங்களிலேயென்பது அவாய்நிலையான் வந்தது.

அவ்வுபாயங்களாவன, தானம் பூசை யோமமுதலாயின.

செய்யாதென்னு மெதிர்மறை செயவெனெச்சத்திரிபு.

அற்றாயினும், துன்பநுகர்ச்சியேயன்றி இன்பநுகர்ச்சியும் மருந்தோடொக்குமாறு யாங்ஙனமென்பாரை நோக்கி; அஃதுணர்த்துதற்கெழுந்தது வருஞ் செய்யுளென்பது.

———

## நிரம்பவழகியருரை வாருமாறு.

——o——

மேலும் வயித்தியன சொன்ன நூலினவழி வந்தவர்களு க்கு வியாதி வாராதெனறும, அந்த நூலினவழி வாராதவர் களுக்கு வியாதி வருமெனறும, நடக்கிற தனமைபோல, ப ரமேசுர னருளிச்செய்த வேதாகமத்தின வழிசெய்தவாகளு க்கும் செயயாதவர்களுக்கு முனசொனன முறைமைபோல வெனறு தோனற அருளிச் செயகிறூா.

மருததுவ னுரைதத நூலின வழியிற் பிணிகள வாரா- வாகட சாததிரததினபடியிலே வயித்தியனசொனன முறை மையிலே செய்தவாகளுக்கு வியாதிகளுணடாகாது.—வருந திடும பிணிகடப்பிற் றபபிய வழியுஞசெய்யத் திருத்துவன-அந தச் சாததிரததினபடிக்குத தபபுவநத விடததும் ஔஷதரு செய்யு முறையையுந திருநதச்சொல்லிவைத்தனன — மருநது செய்யா தறுமபிணி சென்று தீர்ப்பன-ஔஷதஙகளுக்கு மட டுப்படாத வியாதிகளையும அதுக்குததக்க வுபாயங்களினாலே சென்று தீராநிறபன.— உரைததநூற் சிவனுமனனே யுறுங்க ணம மூட்டித தீாப்பன - வேசாகமஙகளை யருளிச் செய்யப்ப ட்ட பரமேசுரனும இநத முறைமையிலே பொருநதத்தக்க சு கதுக்கங்களைப் புசிப்பித்துத தொலைப்பியா நிற்பன.

இதற்குடபிரமாணம் சிவஞானபோதம் உ-சூ, எ-வெ.“நெ ல்லிற் குமியு நிகழ்செமபி னிற்களிம்புஞ், சொல்லிற் புதிதனறு தொன்மையே—வல்லி, மலகனம மனறுளவாம் வள்ளலார் பொனவா, ளலர்சோகஞ் செய்க மலததாம்”, என்னுமதுங் க ண்டுகொள்க.

இதனாற் சொல்லியது வயித்தியன கற்பித்த சாத்திர த்தின் கிரமததிலே வந்தவர்களுக்கு வியாதி வாராதென்

அண்ணலு மெனறவும்மை - எதிரது தழீஇய வெச்சம்.

இதற்கு மிருகேந்திரமும் வாயவ்ய சங்கிதையு மெனவறிக. (௩௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிதற்குதாரணம்

மண்ணுளே சிலவியாதி மருந்தவனருந்தியோடே திண்ணமாவறுத்துத்தீர்ப்பதுந் தீர்த்தஞ்சிலநோயெல்லாம - பூமியினகண்ணிலே வைத்தியனானவன வியாதி தீரவேணுமெனனும் பிரியத்தாலே கூச்சமற அறுத்துமக காய்கோல்போட்டுஞ் சிலவியாதிகளை நீக்குவன —கன்னியகட்டிபயாலுங் கலந்துடனகொடுத்துத தீர்ப்பன-இச்சையாய் கருதபபட்ட கருப்புககட்டி பாலுடனே கலந்துகொடுத்துச சிலவியாதிகளை நீக்குவன இவவாறே,—அண்ணலுந துன்பவினைப மருத்தியேவினையறுப்பன-ஸ்வாமியும் சுகதுக்கங்களை புசிப்பித்தே வினையொழிப்பன.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இன்பத துன்ப மூட்டி யிருவினை தொலைத்தற் குதாரணம்.

வெளிப்பொருள

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அவ்வந்நோய்கட்கேற்ப மருத்துவன்செய்யு மிருவேறுவகையும் மருந்தாதல் உலகத்துக் காணப்படுதலின், அவ்வாறே

முதல்வனுகர்விக்கு மின்பத்துனபமிரண்டும் மருந்தாக வுணர்ந்துகொள்க வெனபகாம்.

இவை மூன்று செய்யுளானுந் தரணிபோலத் தருமாறு தெரித்துக் கூறப்பட்டது

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

பரமேசுரன் ஆனமாக்களசெய்த கனமதனை சுகதுக்கமாகிய ஔஷதங்களைக் கொண்டு போக்குகிறபடியென்ற மாணுக்கனை நோக்கி, ஒருதிட்டாந்தமிட்டு அருளிச்செய்கிருர்.

மன்னுளே சிலவியாதி மருந்துவ னருந்தியோடுந் தின்னமா யறுத்துக்கீறித் தீர்த்திடும் - விசுவத்திலே சிலவியாதியை யாசையுடனே வயித்தியஞனவன் செய்து கைகண்டபடியே நிச்சயமாக வறுத்துங் கீறியும் பரிகாரஞ்செய்துதீராநிற்பன — சிலநோயெல்லாங் கன்னிய கட்டிப்பாலுங் கலந்துடனேகொடுத்துத் தீர்ப்பன - சிலவியாதிகளுக்கெல்லாங் கருகப்பட்ட கருப்புக்கட்டியும் பாலுங் கலந்துகொடுத்துத் தீராநிற்பன. அத்தன்மைபோல,— அண்ணலுந் துன்பமின்ப மருந்தியே வினையறுப்பன - பரமேசுரனு மப்படியே ஆனமாக்கள்செய்த புண்ணியபாவங்களுக் கிடாக சுகதுக்கங்களைப் புசிப்பித்துக் கனமங்களைத் தொலைப்பிப்பன.

இதனுற்சொல்லியது, பிரவஞ்சத்திலே வயித்தியஞனவன் வியாதிகளைத் தீர்க்குமிடத்து விப்புரிதிமுதலான விபாதிகளையறுத்துக்கீறிப் பரிகரித்தும், பித்தமுதலான வியாதிகளைக் கருப்புக்கட்டியும் பாலுங் கலந்துகொடுத்துப் பரிகரித்தும் செய்கிறமுறைமைபோல; பரமேசுரனும் ஆன்மாக்கள் செய்த புண்

ணியபாவத்துக்குத்தக்க சுகதுக்கங்களைப் புசிப்பித்துக் கன்மங்களைப் போக்குவனென்னு முறைமையு மறிவித்தது.

'தாபரம்' 'அரனடி' 'மறைகள்' 'ஆணையால்' 'அரசனும்' 'அருளிறல்' 'மருந்துவன' 'மண்ணுளே' ஆக எட்டுத் திருவிருத்தமும் சிஷயன.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மருத்துவன - மருத்துவனுவான,— மணணுளே சிலவியாதி - இவவுலகத்துள்ளார்க்குணடாகிய சிலவியாதிகளை,—அருத்தியோடுத் திணணமாய் - ஆதரவோடுமுறுதியாய்,— அறுத்துக்கீறித்தீர்த்திடும - அறுத்துக்கீறித் தீர்த்திடவுஞ்செய்வன,—சிலநோயெல்லாம்-சிலவியாதிகளை,— கண்ணியகட்டிப்பாலும் - கருதிய சர்க்கரையும்பாலும்,—கலந்துடன கொடுத்துத்தீர்ப்பன-கலந்துக் கொடுத்துத்தீர்ப்பன,—அண்ணலுமினபதுனப மருத்தியே - அவவாறே முதல்வனு மினபதுனபமாகிய மருந்தை நுகர்வித்து,—வினையறுப்பன-இருவினையாகிய நோயைத் தீர்ப்பன.

இவை மூனறுபாட்டானுந் தரணிபோலத் தருமாறு தெரித்துக் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படிக் கன்மம் புசித்துச் சரீரம்போனு லா
ண் டனுபவிப்ப தேதென்று வினவ; மே
லுணர்த்துகிறுர்.

பூதனு சரீரம்போனாற் புரியட்ட ரூபந்தானே,யா
தனு சரீரமாகி யின்பத்துன் பங்களெல்லா, நாதனு ரா
ணையுய்க்க நரகொடு சுவர்க்கந்துய்த்துத், தீதிலா வணு
வாயோனி சேர்ந்திடுஞ் சீவனெல்லாம். (௫௬)

(இ-ள்.) **பூதனு சரீரம்போனால்** — இருவினைக்கீடாக வெடுத்த பஞ்சபூதமயமான தூலவுடல்விட்டு நீங்கினால், அங் கனுபவிக்குஞ் சரீரம் யாதெனில்?

**புரியட்ட ரூபந்தானே** — கலைமுதலிய வசாதாரணமாகிய தத்துவங்கண் முப்பதும், ஆன்மாக்கடோறுந் தனித்தனியாய்ச் சிருட்டிதொடங்கிச் சங்காரமளவு மத்து தானேநின் றங்கங்குள்ள சுகதுக்கங்களை யனுபவித்தற்கு

**யாதனு சரீரமாகி இன்பத்துன்பங்களெல்லா நாதனு ராணையுய்க்க நரகொடு சுவர்க்கந் துய்த்து** — சிவனதாக்கினாசத்தியானது செலுத்த, ஆன்மாக்கள் புண்ணியகன்மத்துக்கீடாக பூதசாரமென்னுந் தனுவை யெடுத்துச் சுவர்க்கபலங்களைப் புசித்தும், பாவபலத்துக் கீடாகிய பூதமென்னுந் தனுவை யெடுத்து நரகமுதலிய வாதைகளைப் புசித்துத் தொலைந்தவாறே

**தீதிலா வணுவா யோனிசேர்ந்திடுஞ் சீவனெல்லாம்.** — குற்றமில்லாத வான்மா புரியட்டதேகியாய்ச் சுக்கில சோணிதங்களுடன் கூடிப் பூதபரிணாமமாகிய சரீரத்தைக் கன்மானுகுணமாகக் கர்த்தாவினதாக்கினையா லந்தப்புரியட்டகமே யோனிகடோறு மதற்கதற்கேற்ற சரீரத்தை யெடாநிற்கும். எ-று.

தான் - அசை.

ஏகார மீற்றசை.

உய்க்கல் - செலுத்தல்.

இதற்குக் காரணகமதனுஞ் சிவதருமோத்தரத்து மறிக.

"புரியட் டகமே புரிந்தங்கங் குண்ண-வுரியவுட றனனே விளைக்கும்" எனவும், "அருந்துயாக் குழியிருழவா ராகமே பாவத்தாகும், பொருந்திய பூதத்தாலே யிமைத்திடும் போதுதன னுட, புரிந்தவின் புகுவாராகம புண்ணியத் தாலேயாகும்,பொருந்திய பூதசாரத் தொருகணப் போதுதனனில்." "புண்ணிய பாவத்தாலே பூதத்தின பரிணமத்தா, மண்ணிடை மனிதராக மற்றைய வடிவமெல்லாம" எனவறிக. (௩௬)

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

———o———

மேலிந்த ஸ்தூலதேகமவிட்டால் ஸ்வர்க்கநரகத்துக்கு தேகமுண்டாம்படியும், காயத்திலேபதியும்படிபடியு முணர்த்துதல்.

பூதருசரீரம்போனுற் புரியட்டரூபந்தானே யாதனுசரீரம்-இந்தஸ்தூலதேகம்விட்டால் சூக்குமமாகிய பஞ்சதன்மாத்திரையும் மனோபுத்தி யகங்காரமாகிய புரியஷ்டகத்திலேதானே நரகானுபவத்துக்கு யாதனுசரீரம்உண்டாம், ஸ்வர்க்கானுபவத்துக்கு பூதசாரமாகிப் பிரகாசரூபமாகிய சரீரமுண்டாம்,—இன்பத்துனபங்களெல்லா நாதனுராணையுக்க நரகொடு சுவர்க்கத்துய்த்து-நரகத்திலும் சுவர்க்கத்திலும் துன்பத்தையு மின்பத்தையும் கர்த்தாவினுடைய சக்தியினலே பொருந்தப் பட்டுப்புசித்து,—தீதிலாவணுவா யோனிசேர்ந்திடுஞ் சீவனெல்லாம்-பரமாணுவெனனுந் தன்மையும் மத்தியமபரமாணுவெனனுந் தன்மையுமாகிய குற்றமன்றியில் சூக்குமரூபியாய், பூமியிலே கிருமத்துக்கிடான கர்ப்பத்தையடையும்.

ஆன்மாக்கள் தேவதேகமுண்டாமென்று மூலத்திற்சொல்லாதி ருக்கவும் சொன்னது, ஸ்வர்க்கநரகத் திலனுபவஞ்சொல்லுகை யால் நரகத்துக்குயாதநாசரீரம் சொல்லப்படுகையால், சுவர்க் கத்துக்கு தேவசரீரமழைத்துககூட்டிப் பொருளுரைததல்.

யாதநாசரீரம்பூதசரீரமெனபதற்கும, பூதபரிணாமம் மனு ஷ்யசரீரமெனபதறகும, பூதசரீரம் தேவசரீரமெனபதற்கும்ச ம்மதி

ஶிவயோகீந்த்ரே — ஸுகநாரகிணாம் பும்ஸாம்
யாதநா தேவ தேஹமாஸ் | க்ஷணஸ்தாயீ ஹ்ருதே
ஸூக்ஷ்மஶரீரஸம்பவத்வதே || ததஸ்தேஷாம் ஸ்வர்கேஷு
தேவாநாம் ஸாம்பவாதிகம் | ஸத்ய: ப்ரஜாயதே திவ்யம்
ஶரீரம் ஸூக்ஷ்மஸாரத: || நாரகாணாம் ஶரீரஞ்ச
ஶரீரஸ்தூலதா | ததஸ்ஸூக்ஷ்ம பரிணாமேந விஜ்ஞேயம்
ஸ்ம்ருதி.

இவ்விடத்து பூதபரிணாம மென்றது தேகமானது பால் யாத் யவஸ்தாந்தரங்களை யடைகையினாலே தேகத்துக்குச் சொன்னது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

கன்மபலத்தையனுபவிக்கு முறைமையை யறிவிக்கின்றார்.

பூதனு சரீரம் போனல் -பஞ்சபூத பரிணாம சமுத்பூதமா ய தூலசரிரம் விட்டால்,—புரியட்ட தேகந்தானே - சூக்கும சரீரந்தானே,— காதனாரீயைக்க - சிவாஞ்ஞை செலுத்

து,—யாதனு சரீரமாக - பூதோத்பூத நரக சரீரத்தைத் தான், பூதசாரசமுத்பூத சுவர்க்க சரீரத்தைத் தான் பொருந்த, அவற்றோடு பொருந்தி,—சீவனெல்லாம் - சகலான்மாக்களும்,—இன்பத்துன்பங்களெல்லாம் - சுகதுக்கங்களைத்தும்,—நரகொடு சுவர்க்கநுய்த்து - நரக சுவர்க்கங்களி னனுபவித்து, பின்னர் யாதனு சரீரம் விட்டு,—தீதிலா வணுவாயோனிசேர்ந்திடும் - குற்றமற்ற சூக்கும தேகியாய்ப் பூலோகத்திற் பூதபரிணாம சமுத்பூத தூல தேகத்தில் வந்து பொருந்தும்.

இப்படியன்றி, யாதனு சரீரமாக வென்கின்ற பாடங் கொள்ளாமல், யாதனு சரீரமாகி யென்று பாடங் கொண்டாற் பொருளிசையா தெனபதறிக. புரியஷ்ட தேகந்தானே யாதனு சரீரமாக வெனபதற்கு, சுத்த மாயையில் அசுத்த மாயை தோன்று மெனனுஞ் சைவ பவுராணிக மதானுசாரியா யிருக்கு மாசாரியர் கருத்துக்கு யாதனு சரீரமாய்ப் பரிணமிக்க வென்று பொருள் கொள்க. சுத்த சைவ சித்தாந்தியாகிய வாசாரியர் கருத்துக்கு யாதனு சரீரத்தைப் பொருந்த வென்றுபொருள் கொள்க.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனி, அன்னலருத்துமவ்வின்பத்துன்பங்களை உயிருந் துமுறைமை எவ்வாறெனபார்க்கு; இன்பத்துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து வருவதுபோலவதாமாறு கூறுகின்றார்.

இத்தூலவுடம்பு கழிந்தவழித் தானுமுடன்கழிதலின்றி, நிலைபெற்றுள்ளதாகிய சூக்குமவுடம்பினிலும், அவ்வினைப்பயு

ன்களை அனுபவித்தற்குரிய வெவ்வேறுடம்புகளுளவாதலான, உயிர்களவ்வுடம்போடு நாதனுராணை செலுத்தச சென்று நற க்கநிரயத் தினபத்துனபங்களை நுகர்நது, பின்பு அவ்வினைச் சேடமனுபவித்தற்பொருட்டுச் சூசகுமஉடம்போடு நிலததிற் சென்று கருப்பாசயத்தைத் தலைப்படுமெனபதாம்.

ஆகியெனபது காரியகாரணப் பொருள்பறறி வருஞ செய வெனெச்சத்திரிபு

பொன்விலங்குபோறலின நறக்கவுடம்பையும் யாதனு சரீரமென்முர்.

நிலவுலகத்துக்கு வரும்போது அணுவாயோனி சேர்நதிடு மெனவே, நறககநிரயங்களிற் செல்லுமபோதும் யாதனுசரீர த்தைப்பற்றியே சொல்லுமெனபது பெற்ரும்.

இங்ஙனம் பூதனுசரீரம் போனவழி யாதனுசரீரத்தைப் பற்றுதற்கும், யாதனுசரீரம் போனவழிப் பூதனுசரீரதனைப் ப ற்றுதற்கும், காலமிடையீடில்லைபோலுமெனின, அஃதுணாதது தற்கனறே வருஞ்செய்யு ளெழுநததெனபது.

---

## நிரம்பவழகியருளை வருமாறு

———o———

பரிபூரணமாயிருககிற வான்மாவுக்கு ஒருவன் சுகதுக்கங் களைப் புசிப்பித்துக் கனமங்களைப் போக்கினுனெனற தென னென்ற பட்டாசாரியனை நோக்கி மேலருளிச்செய்கிருர்

பூதனு சரீரம்போனல் - ஆன்மாவுக்கு இந்தப் பூமியிலுள் ள புசிப்புத் தொலைந்த பூதங்களினுடைய காரியமாய்வருகிற தேகம்போனுல்,—புரியட்ட தேகக்தானே யாதனு சரீமாகி-சூ க்குமசரீரந் தானே அநுபவிக்கைக்-கொருதேகமாகி,—இன்பத்

துன்பங்களெல்லா நாதனு ராணையுய்க்க நரகொடு சுவர்க்கந் துய்த்து-சுகதுக்கங்களெல்லாம் பரமேசுரனுடைய வாக்கினை செலுத்த நரகத்திலுஞ் சொர்க்கத்திலு மனுபவித்து,—நீதிலா வனுவா யோனிசோந்திடுஞ் சீவனெல்லாம்-அங்குள்ளது தொலைந்தால் மீளவுங் கன்மசேஷம் புசிக்கத்தக்கதாகக் குற்றமற்ற சூக்ஷுமரூபியாய் பின்பு கன்மங்களுக் கிடான யோனி † வோரங்களிலே ஆன்மாக்களெல்லாம் வந்து பதியாநிற்கும்.

† வோரம் - சரீரம்.

புரியட்ட ரூபந்தானே யாதனு சரீரமாகிஎன்றது இப்படி கன்மத்துக் கிடாகச் சுற்றிக்கொண்டு வருமென்றதற்குப் பிரமாணம் தத்துவவிளக்கம் "பற்றியசத்தப் பரிசமுருவ மிரதகந்த, மற்றமனம்புத்தி யாங்காரமென றிவை வலவினையாற், சுற்றியமைந்த புரியட்டகமென்று சொல்லுவர்வான, பெற்றியமைந்த பிரமபுரந்தொழப் பெற்றவரோ." என்றும், சிவஞானபோதம். ௨-சூ, அ-வெ. "கண்ட நனவை கனவுணர்விற் றுன மறந்து, விண்படா தந்துடு வினையிறுற் — கண்செவிகெட், டுள்ளதே தோற்ற முளமனுவாய்ச் சென்றுமனந், தள்ள விழுங் கருவிற் றுன" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனுற சொல்லியது, ஆன்மா தூலதேகத்தை விட்டுச் சூக்குமதேகத்தோடும் போய்ச் சொர்க்க நரகங்களிலுள்ள விஷயத்துன்பங்களையு மனுபவித்து; மீளவுங் கன்மத்துக் கிடாக வொரு சரீரத்தை யெடுக்கும் என்னு முறைமை யறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

பூதனுசரீரம்போனல் - இத்தூலவுடம்பு கழிந்தவழி,— புரியட்டரூபந்தானே - தானுமுடன கழிதலின்றி நிலைபெற்று

ளதாகிய சூக்குமஉடம்பினின்றும்,—யாதனுசரீரமாகி - அவ்வி னைப்பயன்களை யனுபவிக்தற்குரிய வெவவேறுடம்புகளுளவாத லான்,—சீவனெல்லாம் - உயிர்களெல்லாம்,—நாதனுராணையுய்க்க - அவ்வுடம்போடு நாதனுராணை செலுத்தச்சென்று,—அவ ர்க்கா(ட)கொடுமினபதுனபங்களெலலாம் துய்த்து-துறக்க நிரையத் தினபத்துனபங்களை நுகாந்து,—திதிலாவணுவாய்-பி னபவவினைச்சேட மனுபவித்தறபொருட்டுக குற்றமிலலாத சூக்குமவுடம்போடு நிலததிறசென்று,—யோநிசேர்ந்திடும்-கருப் பாசயத்தைத் தலைப்படும.

---

## மறைஞானதேசிகர்உரை



இந்த வானமா தனமாதனமத்துக் கிடாக
சனிக்கு முறைமை யுணர்த்துகிறார்.

உடல்விடா யோனிபற்றி யுதிப்பினு முதிக்கு மொன்றிற, படர்வுறு துறும்பாவத்தாற பாடாணம் போறகிடந்து, கடனதாங காலனுசென்றுற் கடுநர கத னில்வீழ்நதங, கிடருறு முருவாயகன்மத் தளவினி லெ டுக்குமன்றே. (கஎ)

(இ-ள்.) உடல்விடா யோனி பற்றி யுதிப் பினு முதிக்கும் — இநதப் பூதத்தா லுண்டாகிய தூலவுடலை விட்டு, சாணளப்பான புழுப்போல வந்த வான்மா வககணமே வேறொருடலைக் கனமத்துக் கிடாகப் பூமியிற் பற்றினுலும் பற்றும். அன்றிக் கனமபரிபாகமில்லாவிடத்து

ஒன்றிற் படர் வுறு துறும்பாவ — சூக்குமதேகத்தட னொருவினையு முறுமற் பாவமிகுதியால் வேறொரு யோனியையும்

த்தாற் பாடா 'ணம் போற்கிட ந்து

சென்று பொருந்தாம லதிகப்பட்டுப் பந்டாணம்போலச் சிறிதுகாலங் கிடந்து,

கடனதாங் காலஞ்செனமுற் க ரேக கதனில்வீழ் ந்தங் கிடருறும்

இப்படிக் கிடந் தந்தக்காலந் தொலைந்த வாறே பாவபலம் பாகம்வந்தால், அககண த்தினிற்றுனே கொடிய நரகத்தில் வீழ்ந்த திலுள்ள துயரத்தைத் துய்க்கும்.

உருவங் கனமத் தளவினி லெடுக்குமனறே.

ஆகலாற் பழம்புடைவையைப் போட்டு நவமான வத்திரத்தை யெடுக்குமாறுபோல; மீளவுங் கன்மததுக கிடாகப் பூகபரிணும தேகததை யெடாநிற்கும். எ-று.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்-பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக-கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்-வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச் - செலாஅநின்ற வித் தாவர சங்கமத்து-ளெல்லாப் பிறப்பும் பிறந் திளைத்தே னெம்பெருமான" எனவறிக. திருவாசகம் சிவபுராணம்.

உம்மை எண்.

இதற்குச் சிவதன்மோத்தரம் சுப்ரபேதமுங்காண்க.(கூஎ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேலிதுவுமது.

உடல்விடா யோகிபற்றி யுதிக்கினும் உதிக்கும் - இந்த ஸ்தூலதேகம் விட்டவுடனே கருவிற்பதிந்து பிறக்கினும் பிறக்கும்;— ஒன்றிற்படர்வுறு துரும்பாவத்தால் - பூமியில் ஜனிக்

க்கவும் ஸ்வர்க்கநரகத்திற் செல்லவுமொண்ணாத பாபமானதுபக்குவமாயின்,—பாடாணம்போற் கிடந்தகடனதாங் காலஞ்சென்றுற் கடுநர கதினில்வீழ்ந்தங் கிடருறும் - புரியஷ்டகரூபியாய் பாஷாணம்போல ஸ்பரிசவேதனையே யொழிந்து ஒருணர்வுமில்லாமல்கிடந் திருக்கவேண்டுங்காலங் கிடந்து இறுதியில் கொடியநரகத்தில் வீழ்ந்து துக்கத்தை யனுபவிக்கும். துக்கானுபவகாலந் துலைந்தளவிலே,— உருவங்கனமதகளவினியெடுக்குமன்றே - பக்குவமானவினைக் கிடானதேகத்தையெடுக்கும்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சூக்கும தேகத்தோடுங் கூடிய வுடல்விட் டுடனுட னெடுக்கு மென்றும், தூல சரீரத்துக் கேற்ற கன்மம் பரிபக்குவ மில்லாதிருந்தாற் சூக்கும சரீரத்தொடுங் கூடி யறிவின்றி யாகாசத்தைப்பற்றி யந்தரானமாவா யிருந்து கன்ம பரிபாகத்திற் காலாந்தரத்தி லுடலுறு மென்று முரைக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

அவ்வவ்வினைகளது வன்மைமென்மைகட்கேற்பப் பூதனுசரீரம் போயவாறே யாதனுசரீரத்தையெடாது, மற்றுமோர் பூதனுசரீரத்தை யெடுத்தலுமுண்டு. யாதனுசரீரம் போயவாறே பூதனுசரீரமெடாது, மற்றுமோர் யாதனுசரீரத்தை யெடுத்தலுமுண்டு. இவையெல்லாம் இடைவிடாது நிகழ்தலுமுண்டு; இடைவிட்டுநிகழ்தலுமுண்டென் பதூஉம்.

உம்மை எதிரது தழீஇயது.

பாவப்பயன் கூறவே, இனம்பற்றிப் புண்ணியப்பயனுமவ்வாறுதல் பெறப்படும்.

அற்றேல் இறந்தவுயிர் தானே மீளப் பிறக்குமெனின்? உடம்பு முதலியனவு மிறந்தவைதானே மீளத்தோன்றுமெனல் வேண்டும்; அஃதின்மையின், அதுவுமில்லையெனக் கிரீடாப்பிரமவாதி முதலியோர் கூறுங் கூற்றை யாசங்கித்து உவமை முகத்தாற் பரிகரித்தற்கெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படி தூலதேகத்தை விட்டுச் சூக்கும் தேகத்தோடும் போய்ச் சொர்க்கநரகங்களி லுள்ள பயன்களை யநுபவித்துத் தொலைந்தால், மீளவு மொருதேகத்தை யெடுக்கும தொழிந்து; இந்தத் தேகம் விட்டவுடனே வேறே யொருதேகத்தை யெடுக்கிறது முண்டோவென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

உடல்விடா யோனிபற்றி யுதிப்பினு முதிக்கும்-இந்தத்தேகம் விட்டவுடனே சொர்க்க நரகங்களிற் போகாமல் கன்மத்துக் கீடாக மீண்டு மொருயோனியிலே வந்து சனிக்கிலுஞ் சனிக்கும். அதுவன்றியும்,—ஒன்றிற் படர்வுறு துறும்பாவத்தாற் பாடாணம் போற்கிடந்து - ஒருயோனியிலுஞ் சென்று பொருந்தாமல் மிகுத்த பாவத்தினாலே கல்லுப்போலே கிடந்து,—கடனதாங் காலஞ்சென்றால்-இந்தப் பாவத்துக்கு விதிக்கப்பட்ட

காலங்களெல்லாம் அநுபவித்துத் தொலைந்தால்,—கடோரநரகத்தி ல்வீழ்ந்து - கொடிய நரகங்களிலே விழுந்து,—அங்கிடருறும்- அதிலேயிருக்கத் துயரத்தை யநுபவியாநிற்கும்.—உருவங்கன்ம த்தளவினி லெடுக்குமன்றே - அப்படி அநுபவிக்கிற கன்மந் தொலைந்தவாறே மீண்டுங் கன்மத்துக் கிடான தொருதேகத் தை யெடுத்துக் கொள்ளாநிற்கும்.

இதனாற் சொல்லியது, ஆன்மா தூலதேகத்தை விட்ட வுடனே யோனியிலே சென்று பதிந்து ஒருதேகத்தை யெடுக்கி னு மெடுக்குமென்றும், ஒரு யோனியிலே சென்று பதியாமல் க ல்லுப்போலே எண்ணிறந்த காலங் கிடந்து அது தொலைந்தா ல் கொடிய நரகத்திலே விழுந்து துயரத்தை யநுபவிக்குமெ ன்றும், அது தொலைந்தால் கன்மத்துக் கிடாகத் துயரத்தைப் பொருந்தின தொரு தேகத்தை யெடுக்குமென்னு முறைமையு ம றிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

கன்மத்தளவினில் - அவ்வவ்வினைகளது வன்மைமென் மை கட்கேற்ப,—உருவமெடுக்குமென்றே - பூதனுசரீரம் போ யவாறே யாதனுசரீரத்தை யெடாது மற்றுமோர் பூதனுசரீர த்தை யெடுத்தலுமுண்டு. யாதனுசரீரம் போயவாறே பூதனு சரீரமெடாது மற்றுமோர் யாதனுசரீரத்தை யெடுத்தலுமு ண்டு.—உடல்விடா தியோனிபற்றி - இவ்வுடம்பினை விட்டு ம ற்றொரு டம்புக் சேதுவாகிய மற்றொரு யோனியிற்றங்கி,— உதி ப்பினுமுதிக்கும்-உதித்தல் இடைவிடாது நிகழ்தலுமுண்டு,— ஒன்றிற்படுருது-ஒருயோனியிற்றங்காது,— உறும்பாவத்தா

ல்-பொருந்தியபாவத்தால்,—பாடாணம்போற்கிடந்து-பாடாணம்போற் சிறிதுகாலந்தங்கி,— கடனதாங்காலஞ்சென்றால் - அக்காலஞ்செல்லுங்கால்,—கடுநரகதனில்வீழ்ந்து - கொடியநரகதனிலகண்வீழ்ந்து,— அங்கிடருறும் - அவவிடத் துன்புறுதலாகிய இடைவிடாது நிகழ்தலுமுண்டு.

---

## மறைஞானதேசிகர் உரை.



அசசரீரயக ளெடுக்குமிடத் துதாரணமிட் டுணர்த்துகிருர்.

பன்னக மண்டசங்கள பரகாயந் தன்னிறபாயவோர், துன்னுதோன முட்டையாக்கை துறந்துசெல்வதுவேபோல, வுன்னிய வுயிர்கடேல வுடல்விட்டு வானினூடு, மன்னிடு நனவுமாயிக் கனவினை மருவுமாபோல். (௬அ)

(இ-ள்.) பன்னக மண்ட சங்கள பரகாயந் தன்னிற்பாய்வோர துன்னு தோன் முட்டையாக்கை துறந்து செல் வதுவே போல — பஞ்சபூத பரிணாம சரீரத்தை விட்டுசூக்குமதேகத்தோடே போகிற தெப்படியெனனில்? பாம்பானது தோலை யுரித்துப்போட்டும் அண்டசங்கண்முட்டையைவிட்டுப்புறப்படுவித்தும் பரகாயப் பிரவேசம் பண்ணுவோர்க ளந்தக கூட்டைவிட்டு வேறொரு சரீரத்திற் பிரவேசிக்கு மாறுபோலவும் போகிறததுக் குவமித்தது.

உன்னிய வுயிர்கடேல வுடல்விட்டு வானினூடு மன னிடு நனவு — ஆனமா வொன்றைவிட் டொன்றைப்பற்று மிடத் தக்கவுறிவுடனே போமோ மயங்கிப்போமோ வென்னில்? தூலவுடலாகிய பூதபரிணாம வுடலைவிட்டுப் பூதசாரமான சூக்

மாறிக் கனவின் சூமவுடலைப் பொருந்திப் போகாநிற்பர்கள், மருவுமாபோல்.

அப்போது சாக்கிராவத்தை சற்றுந தெரியாமற் கனவைப் பொருநதிநிற்கு முறைமைபோல். எ-று.

இதற்குக காரணுகமம். (ருஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் ஆனமா ஸ்தூலதேகததைவிட்டு சூக்குமதேகத்துடனே தேகாந்தரத்தை யடையுமபடி யுணாததுதல்.

பன்னகமண்டசங்கள பரகாயநதனனிற்பாய்வோர் தனனுதோன முட்டையாகதைதுறநது செல்வதுவேபோல-ஆனமா ஸ்தூலதேகததைவிட்டு சூககுமதேகியாய்ப்போமாறு பாம்புதோலுரித்துப்போட்டுப் போனுற்போலவும் பட்சியானது முடடையினினறும்புறப்பட்டுப போனுற்போலவும் யோகசித்தாக்கள் தங்கள்தேகததைவிடடு அநநியதேகததிற் செல்லுமாபோலும்,—தனனியவுயிாகள தூலவுடல்விட்டு வானினூடு மனனிடு கனவுமாறிக் கனவினைமருவுமாபோல் - தேகஙகளிலே பொருந்தியிருக்கிற ஆன்மாக்களானவைகள ஸ்தூலதேகததை விட்டு சூக்குமதேகததோடே ஆகாசததேபொருந்தும்; சாக்கிராவஸ்தையொழிநது ஸ்வப்னவஸ்தையிலே வந்தபோது ஸ்தூலதேகானு பவமின்றி சூககும தேகானுபவமேயாய் சாககிராவஸ்தையில் நினைவில்லாததுபோல வென்றிதன்பொருள

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

தூலதேகம்விட்டுச் சூக்குமதேகத்தோடு போய்த் தூலதேகாந்தரத்தைப் பொருநதுதற் குவமையுரைக்கின்றார்.

பன்னகம் - பாம்பு,—அண்டசங்கள் - பக்ஷிகள்,—பரகாயநதனனிற் பாய்வோர் - வேறொருவர் சரீரத்திற் பிரவேசிக்கும் யோகிகள், இவர்கட்குப பொருத்திய தோல் முதலிய மூன்றும் நிரனிறையாகக்கொள்க.

மற்றது வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

முன்னைத் தோன்முதலியவற்றை விட்டுச் சென்று மற்றொன்றனைப் பற்றும் பாம்புமுதலியனபோல, உயிர்களும் முன்னுடம்புவிட்டு வானெறிச் சென்று மற்றோருடம்பினிலைபெறும் நனவுநாவு மாறிக் கனவுநாவைத் தலைப்படுமாறுபோல அறிவு வேறுபட்டென்பதாம்.

சென்றென்பது சொல்லெச்சம்.

அறிவுவேறுபட்டென்பது அவாய்நிலையான் வந்தது.

நனவுகனவென்பன ஆகுபெயர்.

பன்னகமுதலிய நான்கும் தானவேறுதலின்றியுந் தனனுடலும் இடமும் அச்சும அறிவும வேறுதற்கும, முறையே உவமையாயின.

இவைமூன்று செய்யுளானும் இவ்வுயிர் பிறந்திறந்து வருவதுபோவதாமாறு வகுத்துக் கூறப்பட்டது.

இவ்வாறு 'இருவினையென்னை' என்பது முதல் 'பன்னகமண்டசம்'என்பதீறாகக் கிடந்த முப்பத்துநானகு செய்யுளும், 'இருவினையினபத்துன்பத்து' என்னு மேலைச்செய்யுளிற் கூறிய பொருள்களை; அவ்வமதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தி வகுத்துக் கூறினவெனக் காண்க.

---

இவைமூன்று செய்யுளானு மிவ்வுயிர்பிறந்திறந்து வருவது போவதாமாற்று வகுத்துக் கூறப்பட்டது.

இவ்வாறு 'இருவினை' என்பது முதல 'பனைக் மண்டசம்' என்பதீறாகக்கிடந்த -௫௪- செய்யுளும், 'இருவினையின்பதுன்ப ஆக்கு' என்னு மேலைச்செய்யுளிற் கூறியபொருள்களை யவ்வம் மேற்றியாசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தி வகுத்துக்கூறின வெனக்காண்க.

---

## மறைஞானதேசிகர் உரை.

இயனங் கன்மவிருத்தியை யுணர்த்தி யக்கன்
மவிலக்கண முணர்த்துகின்றார்.

தன்மமோ டதன்மமாகித் தானிரு பயனுந்தந்து
நன்மைதீ மையினிற் றுன்பின் னாடிக்காணா
முன்னமே யான்மாவின்றன் மும்மலத் தொன்றதாகிக்
கன்மமு மூலமாகிக் காமிய மலமாய்நிற்கும். (௫௧)

(இ-ள்) தன்மமோடதன்மமாகித் தானிருபயனுந்தந்து — ஆன்மாக்கள் சங்கற்பத்தோடு மானசிகத்தால் வரப்பட்டநின்ற கன்மங்கள் புண்ணியகன்மமென்றும் பாவகன்மமென்று மிருவிதமாய், அவ்விரண்டினது பிரயோசனங்களையு முண்டாக்கி,

நன்மை தீமையினிற் றுன்பின்னாடிக்காணா — பேறிழவாகிய நன்மை தீமையினும், இவையிடமாகவந்து சாக்ஷாத்தா னனுபவிக்கப்பட்ட சுகதுக்கங்களினும், பாவபுண்ணியமுண்டென்றறிமையைக்கண்ணே குறித்தறியப்படும்.

முன்னமே யான்மாவின்றன் — அநாதியே யான்மாக்களுக் குண்டாகிய மலத்திரயங்களிற் றொன்றாகி,

ன மும்மலத்தொ
னற தாகி
ஜன்மமு மூல
ங்காட்டிக் காமி
ய மலமாயிற்று
ம.

மனோவாக்குக் காயங்களா லியற்றப்படு கைபாற ஜன்மமென்ற பெயர்பெற்றிருக்கிற பலங்களைப் புசித்துத் தொலைக்கு மளவுந் தான் கெடாமற் சரீரமெடுத்தற்குக் காரணமாயநாதியாய்க் காமியமென்னும் பெயரைப்பெற்றுக் கர்த்தாவினுக்கன்னியாற் புசிக்கப்படாநிற்கும் எ-று.

ஓடு - உடனிகழ்ச்சி.
ஏகாரந் தேற்றம்
ஜன்மசம்பந்த மாதலாற் காமியமென்றார்
இதற்குக் காரணந் தனு ஸ்வாயம்புவசூத்ர மறிக (௩௧)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

இவ்வாறு கருமானுகுணமாக ஈஸ்வரனே தேகாதிகளையுண்டாக்கி ஸ்வர்க்கநரகங்களைப் புசிப்பிப்பனென்பதும், ஆன்மா ஸ்தூலதேகத்தைவிட்டு போமுறைமையும், காயத்திற்பதியுமுறைமையும் உரைத்து, மேல்சிஷனுக்குக் கருமத்தினுடைய லக்ஷணமிரண்டு விருத்தத்தினாலே கூறுகின்றது.

ஜன்மமோடு ஜன்மமாகி - கர்மமானது சத்தியமாகிய ஆன்மஞானமும் அசத்தியமாகிய மாயாகாரியமும் கூடினவிடத்திலே உண்டானதாகையால், புண்ணியபாபஸ்வரூபமாகி; பிரளயகாலத்திலே ¶ சமஸ்காரா ‡வஸ்தையாய் மாயையிலேயிருந்து சிருஷ்டிகாலத்திலே ஆன்மாக்களுக்கு தநுவாதியுண்டாவதற்கு உபயோகமாவதாம்.

¶ சமஸ்காரம் - மறைந்திருத்தல்.

‡ அவஸ்தை - தசை.

𑌤𑌥𑌾 𑌚 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 — [illegible]
[illegible]
[illegible] 𑌇𑌤𑌿.

இந்தகர்மமென்பது ஒன்றுவேண்டா' ஈஸ்வரப் † பிரசாதத்தினலேதான, § பராகிருதபுத்திகர்ப்போவாதியிருலேதான சுகதுக்கபோக முண்டாமெனபவனை பூர்வபக்ஷம்பண்ணி சித்தாந்தங்கூறுவாம். போக கர்த்ருத்துவமானது எல்லார்க்கும் சரியாயிருக்கையிலே சிலர் ஸ்வர்க்கானுபவிகளாகவும், சிலர் நரகயாதநா நுபவிகளாகவும உண்டாகையினலே, இதற்கு ஏதுவாகவொருகர்மம்வேணடும்.

† பிரசாதம் - அநுக்கிரகம்.

§ ப்ராகிருதம் - ப்ரகிருதியிலுண்டானது.

𑌤𑌥𑌾 𑌚 𑌪𑍌𑌷𑍍𑌕𑌰𑍇 — [illegible]
[illegible] । [illegible]
[illegible] 𑌇𑌤𑌿.

இதனறியும், கருஷ்யாதி பண்ணுகிற பேர்களுடைய கருஷ்யாதிகக்கிரியைகள் சமமாயிருக்கையிலும் ஒருத்தனுக்கு அதிகபலமும் ஒருத்தனுக் கற்பபலமுமாயிருப்பதற்கும் ¶ பூர்வதன க்ரமமே காரணம்.

¶ பூர்வதனம் - முன்னிருக்கிறது.

𑌤𑌥𑌾 𑌚 𑌦𑍈𑌵𑍇 — 𑌉𑌭𑌯𑍋𑌃 [illegible]
[illegible] । [illegible]
[illegible] 𑌇𑌤𑌿.

ஈஸ்வரப்ரசாதரமே காரணமென்னில்? ஈஸ்வரனுக்கு ¶வைஷம்ய நைர்க்ருண்யகுண மில்லாதிருக்கையால் ஈஸ்வரனுங் கர்மாநுகுணமாகவே ஸ்வர்க்கநரக சுகதுக்கங்களை புசிப்பிப்பான். ப்ராக்ருத புத்திகர்மாதியே காரணமெனனில்? ப்ராக்ருதங்களுக்குப் புசிக்கப்படுவதாய் நிற்பதன்றிப் புசிப்பிக்கிறதாதாதல் கூடாது. ப்ரக்ருதிஜந்யமாக புத்திதர்ம ரூபமாயிருக்கிறகாமம், †பாவரூபமாக போக்கியம், கருமரூபமாக போசகமெனனில்? ஒருவஸ்துவிலே போக்கியத்துவமும் போஜகத்துவமும் கூடாது §ஸ்வாத்மநி க்ரியாவிரோதம். அது எந்தசமர்த்தனான கூத்தாடியாகிலும் தனதோளிலே தானேயிருந்து கூத்தாடப்போகாததுபோல,—

¶ வைஷம்ய நைர்க்ருண்யம் - பக்ஷப்பிரதிபக்ஷம.

† பாவரூபம் - கனமரூபம.

§ ஸ்வாத்மநி - தனனிடத்தில்.

தது³க்தம் பௌஷ்கரே — நாத்ர ப்ரக்ருதிர்ஹே-
துஸ்ஸம்ஹாரத்வேந விரோத⁴த: | யஸ்மாத் ஸம்ஸாரபோ-
ஜகமேகைகஸ்ய ஸத்வாத் கர்மாநுரூபதோ ப்⁴ருசம் | ப்ரக்ரு-
தே: பரிணாமோ வா போகோ ஹாயாஷ்டகாத்மக: ||
ஸத்வாத் கர்மாணோ நாஸ்யா ஸம்ஹாரஸ்யாபி ப்ரவ்ரு-
த்திரேவதி: | தத்பூர்வாக்ஷம் ஹாயாநாம் ப்ரவ்ருத்யா ஸ்தி-
தாயத: || ப்ரவ்ருத்யாஸ்தேச விவியா: ஸ்ருஷ்ட்யாதேர்வ-
ணஷ்டஸ்வஸ்வயா | நஸ்ஸாஸ்த்ர கேநாபி ஸைத்த-
நா ஸாவ்யோப்ரஜ: || நசஸ்வயம் ஸ்வசேஷ்டித்ரேஷ
த்தஸ்ய நவ்யஸிதேஸிதி.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

மேலு மதற்கோர் புறனடை.

விதிப்படி சூக்குமத்தே யுருவரும் வினையால் - கனமானு சாரமாய்ச் சிவசங்கற்பத்தினபடி சூக்குமதேகத்தி லின்றாக தூலசரீர முண்டாம் — உதித்திடா வுருவமாக - சூக்கும சரீரத்தானே இரிந்து தூலசரீரமாகாது.— இங்கே யுருவரும மரங்கள் வித்திற் கதித்தெழும் - இவ்விடத்து வடிவுற்ற விருக்ஷங்கள் பீசத்தி லுண்டாம. அந்த,—மரமும் வித்துங் கழியும,— (அப்படிச்) சூக்குமம் பினனழியும் - சூக்குமதேக முருக்குனறிக் கெட்டுப்போம ஆனாலப்படியன்று,—மதிக்கெழு கலைகள போல வருவது போவதாமே - சூக்குமசரீரத்தி னின்றும் தூலசரீரங்கள ஒருகலைபாய்ச் சேடித்த சந்திரனிடத்தே தினறு முதிக்கும மற்றுள்ள கலைகளபோல உண்டாய்த் தாமே கெடும

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

மரந்தோன்றுதல் வித்தையின்றி யமையாதவாறுபோல, அத்தூலவுடம்பு தோன்றுதற்குந் தனக்கொரு முதலில்வழிக் கூடாதென்னும அருத்தாபத்தியால் அஃதுண்டென்பது அறியப் படுமென்பதாம்

சூக்கும வுடம்புண்மைக்குப் பிரமாணங் கூறியவாறு.

ஆண்டுத்தோன்று மாசங்கையை நீக்குதற்பொருட்டு மதிக்கெழு கலைகளபோல வருவது போவதாமெனவு முடன்கூறினார்.

அற்றேல், தூலவடிவுக்குக் காரணம் ஐம்பெரும் பூதமே யமையும் சூக்குமவடிவு எற்றுக்கெனின்? அறியாது கூறினாய்.

தூலமாயிருக்கிற தேகாதிப்பிரபஞ்சந் தோன்றுது: தூலத்திலே நின்றுந் தூலமுண்டாகவேணும். அப்படிச் சொல்லுகிறது அர்த்தமல்ல. சூக்குமத்திலே நின்றே தூலந் தோன்றவேணும். அதெப்படியெனில்?—மரங்களவித்திற் கதித்தெழும் – வித்திலே நின்று மரங்களானது ஓங்கியெழுகிற முறைமைபோல், சூக்குமத்திலே நின்றுந் தூலமுண்டாகாநிற்கும்; அப்படித் தோன்றில் இரண்டுஞ் சேரவழியும் அதெனபோல,—மரமும் வித்துங் கழியும் பின் ஒழியுஞ் சூக்கம்–மரமும் விதையுஞ் சேர வழிந்துபோகையாலே தூலமழிந்து போம்பொழுது சூக்குமமுஞ் சேரவழிந்து போங்காணும் தூலமழியுமொழிந்து சூக்குமமழியாது. அதெனபோலவெனில்?—மதிகளெழு கலைகளபோல; வருவது போவதாமே – சந்திரனுக்குக் காரணமாகிய கலையென்பதொரு கலை யெப்பொழுது மழியாமல் நிற்க, காரியக்கலைகள் ஒவ்வொரு விடங்களிலே யொடுங்கிக் கூடுகிற முறைமைபோலக் காரணமாகிய மாயை நிற்கவே காரியமான சூக்குமதேகமென்று சொல்லப்பட்ட தத்துவங்க ளொடுங்கிக் கூடும், இக்கலையொழிந்த ஸ்தூலதேகங்களபோல வழியாது ஆகையால் காரணகாரியங்களுக்கு அழிவின்றியே யிருக்கவே காரியப்பட்ட தேகங்களுண்மையிறுதியிலே யுண்டாகாநிற்கும்.

இதனாற் சொல்லியது, சூக்குமமாகிய மாயையிலே நின்று ஸ்தூலமாகிய தேகாதிப்பிரபஞ்சம் பரமேசுரனாலே கன்மத்துக் கீடாகத் தோன்றுமென்றும், உருவத்திலே நின்று முருவந் தோன்றாமல் அருவத்திலே நின்று முருவந் தோன்றுமென்றும், அதுக்குவமை சந்திரனுக்கு ஒருகலை காரணமாய் நிற்க மற்றுள்ள கலைகள் ஒன்றுக்கொன்று ஸ்தூலமாகத் தோன்றியும் ஒடுங்கியும் வருகிற தன்மைபோலும் என்னு முறைமையும் அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

உருவரு மரங்கள்-உருவமாய் விளங்குகின்ற மரங்கள்,—வித்தித் கதித்தெழும் - தனக்கு முதலாகிய வித்தினகண்ணே தோன்றி யெழுதல்போல,— வினையால் விதிப்படி-வினைக்கேற்ப விரைவலு(?)னையால்,— உரு - நீத்துவவுடம்புகள்,— சூக்குமத்தே வரும்-தனக்கு முதலாகிய ஸூக்குமவுடம்பி னின்று தோன்றும்,—மரமுமவித்துங் கழியும் - மரமழிந்தவழி யதற்கு முதலாகியவித்து முன்னழிப்பக்காணடலின்,—பின்னழிவுஞ் ஸூக்ஷமென்னின்-அதுபோலத் தூலவுடம்பு கெட்ட வழி யதற்கு முதலாகிய ஸூக்குமவுடம்பு மழிவனபோலுமெனின்? அற்றன்று. ஸூக்குமத்திற் றூலந்தோன்றுதன் மாத்திரைக் கொருபுடை யொப்புமையலலது முற்றுவமை யன்மையான,—மதிக்கெழு கலைகள்போல வருவது போவதாமே-சந்திரனுக்குளவாகிய கலை பதினாறிற் காரணமாகிய வொருகலை யழியாது நிற்க மற்றக்கலைக டோன்றுதலு மொடுங்குதலு மாகுதலின், இங்கே வுருவமாக வுதித்திடா,—மரந் தோன்றுதல் வித்தையின்றி யமையாதவாறுபோல வத்தூலவுடம்பு தோன்றுதலுந் தனக்கொரு முதலில்வழிக் கூடாதென்னு மருத்தாபத்தியா னஃதுண்டென்ப தறியப்படுமெனபதாம், ஸூக்குமவுடம்புண்மைக்குப் பிரமாணங் கூறியவாறு.

இவை மூன்றுசெய்யுளானுஞ் ஸூக்குமவுடம்பு மூதற்காரண மாமாறுணர்த்திக் தானபல பேதங்காட்டியதேல் பற்றிச் சற்காரியவாதத்திற் கிழுக்கின்மை கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



ஆன்மாக்க ளிச்சரீரத்தை யெடுக்குமிடத்து ஸூக்குமமே காரணமோ, அஃதன்றிக் காரணம் பல

வுளவோவென்று வினவுமாயையுமுதலோ
ன்றுக்கொன்று காரணமா யிருக்கு
மெனபதூஉங் குண்டலி சரு
வோபாதானமென்பதூஉ
உமுணர்த்துகின்றார்

தூலமா முருவினுக்குச் சூக்குமமுதலதற்கு, மூலமா மதற்குமூல மோகினி யதன்முதற்று, மேலதாம் விந்துசத்தி சிவமிவை மிசையாமெல்லாஞ், சாலவின் றருகுமானமாச் சிவத்தினைச் சார்ந்தபோது. (௯௦)

| | |
|---|---|
| (இ-ள்) தூலமா முருவினுக்கு சூக்குமமுதல் | பஞ்சபூத பரிணாமமான தூலசரீரத்திற்குப் புரியட்டதேகமான சூக்குமசரீரமே மூலம். |
| அதற்கு மூலமான | அந்தச்சூக்குமதேகத்துக்குக் காரணம் மூலப்பிரகிருதி. |
| அதற்கு மூலமோகினி | அப்பிரகிருதிக்குக்காரண மாயை. |
| அதன் முதற்று மேலதாம விந்து | அந்த அசுத்தமாயைக்கு மேலாய பரமமான வுபாதானமாயிருக்குங் குண்டலி. |
| சத்தி சிவமிவை மிசையாம் | இந்தக் குண்டலிக்கு மேலாஞ் சத்தி. இவையிற்றுக் கெல்லா மேலாய்ப் பரமகாரணமா யழியாமனிற்குஞ் சிவம். |
| எல்லாஞ் சாலவின் றருகுமானமாச் சிவத்தினைச் சார்ந்தபோது. | ஆன்மா யாதொருபோது சகலவுபாதிவாச்சிதமான பிரமத்தைப் பொருந்தினபோது, இந்தப் பேதங்களெல்லாந் தோற்றமில்லையாம். எ-று. |

சூக்குமதேகத்திற்கு முதற்காரணம் பிரகிருதி. (தன்மாத்திரை யைந்து, மனம் புத்தி அங்காரமுமாக எட்டெனும் வசனத் தாற்குப் பிரகிருதி முதற்காரணம். எட்டிகைகொத்தென்று கொள்ளுமிடத்துப் பூதக்கொத்து, தன்மாத்திரைக் கொத்து, கன்மேந்திரியக் கொத்து, ஞானேந்திரியக் கொத்து, அந்தக்கரணக்கொத்து, குணக்கொத்து, பிரகிருதிக்கொத்து, கலாதிஐந்தொருகொத்து, ஆக எட்டும் புரியிற சூக்குமதேசத்தில் அட்டகம். புரியட்டகமென்று கொள்ளுமிடத்துப் பிரகிருதிமாயை இரண்டும் முதற்காரண மெனவறிக)— அதற்கு மூலமோகினி - அந்தப் பிரகிருதிக்கு முதற்காரணம் அசுத்தமாயை,—அதனைமுதற்றும் மேலதாம் விந்து-அந்த அசுத்தமாயைக்கு முதற்காரணம் உபரியாயும் சுத்தமாயை,—சத்தி சிவாவை மிசையாம் - அந்தச் சுத்தமாயையைச் செலுத்தும் பராசத்தியும் பராசத்தியைச் செலுத்தும் பரசிவமும் மேலாய் விரியும்,—எல்லாம் - இப்போது சொல்லிய பிரபஞ்ச பிரபஞ்சிகளெல்லாம்,—ஞானமாச் சிவத்தினைச் சார்ந்தபோது - தன்னு சொரூபமாகிய சிவத்துவாபி வியத்தியைப் பெற்றபோது,—காலவின் றுகும - பகுதிப்பிக்கும் முறைமையை விட்டிருக்கும்.

மதங்க பாரமேசுரத்தில் சிவத்துவம் பெற்ற முத்தான்மாவைக் குறித்துச் சிவன் பிரேரகரல்லர், சிவனைக்குறித் தவனும் பிரேரியனல்லனென்று பேசப்பட்டது.

"பச்சார்த்தத்தே சிவத்வேஞ்ஞே, சாரணத்வேந காரணம்;
நதம்பிரதிகதாசித்ஸ்யாத், ஸோபிகார்யத்வ கோசராத்;
அதீத. பரிபூர்ணச்ச ஸவதந்திரஸ் ஸர்வதோமுக."

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

தூலவுடம்பிற்கு முதற்காரணஞ் சூக்குமவுடம்பு, அதற்கு முதற்காரணம் மூலப்பகுதி, அதற்கு முதற்காரணம் மோகினி, அதுவே பரம முதற்காரணமெனப்படும். ஏனைக் குண்டலி விசத்தியோவெனின்? அது சுத்தமாய், இவையிரண்டற்கும் வியாபகமாய் நிற்கும். இவ்விருவகைப்பிரபஞ்சமும் ஆன்மாக்கள் சிவத்தினைச் சார்தற்கேதுவாகிய பக்குவகாலஞ் சார்தற்பொருட்டு இப்பொழுது காலத்தனவாயின வென்பதாம்.

அதனை முதற்குறிப்பது அம்மூலப்பகுதிக்கு முதலாகிய தாயென இருபெயரொட்டுப் பண்புத்தொகையாய் மோகினியின்மேனின்றது.

அதனை முதனின்றுவழித்து மேலதாமெனப் பரம முதற்காரணமாகக் கூறப்பட்டது.

இவ்வாறன்றி முதலென்றதனை எழுவாயாக வைத்துரைப்பாருக்கு, ஈகரவிரட்டித்தல் பொருந்தாமையுஞ் சித்தாந்தத்திற்கு ஒவ்வாமையுமுணர்க.

சிவமென்றது முன்னையது சுத்தமென்னும் பொருட்டு

சாலவாகுமென வியையும்.

சாலுதல் அமைதல்.

சார்ந்தவென்னும் பெயரெச்சம் ஏதுப்பொருட்கொண்டது.

இதனானே மேலதன்கணிகழுமாசங்கை நீக்கி வருஞ்செய்யுட்குத் தோற்றுவாயுஞ் செய்யப்பட்டது.

'இருவினையின்பம்' என்னுஞ் செய்யுண்முதல், இதுகாறும் முதற்செய்யுளின் 'அலகிலாவுயிர்கள்கன்மத்தாணையினவையாகச் செல்ல' என்ற விரண்டாங் கூற்றை வலியுறுத்தியவாறு.

—

# நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

இப்படிச் சந்திரனுக்குக் காரணகாரியம் பலவாயிருக்கிறதனைப்போல மாயாகாரணகாரியமும் பலவாயிருக்குமோ வென்றவனை நோக்க, அப்படிப் பலவாயிருக்குமென் றருளிச்செய்கிறார்.

தூலமாமுருவினுக்குச் சூக்கமாமுதல் - தூலகாரியமான தூலதேகத்துக்குப் புரியட்டகமான சூக்குமதேகம் காரணமாயிருக்கும் — அதற்குமூலமால் - அந்தப்புரியட்டகதேகத்துக்குக் காரணமாயிருக்கு மூலப்பிரகிருதி — அதற்குமூலமோகினி - அந்தப்பிரகிருதிமாயைக்குக் காரணமாயிருக்கும் அசுத்த மாயை, — அதற்குமூலமாம் விந்துசத்தி - அந்தஅசுத்தமாயைக்கு முதன்மையாய் அதற்கு மேற்பட்டதுமாயிருக்கும் விந்துவென்றுசொல்லப்பட்ட சத்தித்துவம் — சிவமிவைமிசையாம் - இவையிற்றுக்கெல்லாம் சிவதத்துவமேலாயிருக்கும். இவையெல்லாவற்றையும் ஒருக்காலும் விடுங்காதோவெனில்? — எல்லாஞ் சாலவினையொத்து மானமாகச் சிவத்தினைச் சாரும்போது - ஆன்மாவுக் கிருவினையொப்புச் சத்திநிபாதமும் உண்டான வகைத்து ஆசாரியனாலே யுண்மையைப் பெற்று அந்தச்சிவத்துடனே யானபொழுது, இங்ஙனஞ்சொல்லப்பட்டவை யெல்லாம் விட்டுநீங்கி நேராக இல்லையாய்விடும்.

இதனாற்சொல்லியது தூலசரீரத்துக்குக் காரணஞ்சூக்குமசரீரமென்றும், சூக்குமசரீரத்துக்குக் காரண மவ்வியத்தமென்றும், அவ்வியத்தத்துக்குக்காரணம் காரணமாயையென்றும், அந்தமாயைக்கு முதன்மையுமாய் மேலுமாயிருக்கும் விந்து சத்தியென்றும், இவையெல்லாத்துக்கு மேலாயிருக்கும் சிவதத்துவமென்றும், இவையெல்லாம் நேராகவில்லையாய்ப்போம் ஆ

ரணம்யாதெனன்? அவனுக கொருபிரயோ
சனநிமித்தமன்று, ஆன்மாக்களைமோ
க்ஷமடைவிப்பிக்கையேகாரண
மென்றுணாத்துகிறூா.

அரன்விதி யருளதென்றே யறைந்தன னதுவுமுன்னே
துரைநர கருந்துறக்கந் தனுகர ணுதியெல்லாம்
வருவதுஞ் செய்தநாதி மலங்களிம மருந்தாறத்தீர்த்துப
பரகதி யதுவுந்தந்து பாதபங்கயமுஞ் சூட்டும். (௫௧)

(இ-ள.) அரனவிதி யருளதென்றே யறைந்தனை னதுவுமுன்னே — முதற்சூத்திரத்திற் சிவஞானமாகக்கை க்ஷிதத்தச் செய்யுஞ் செடல்களெல்லாம 'நிக்கிரகங்கடாம் நேரேற்கா வீசனசெய்வன' எனறும 'மன்னுளை யிலவிபாதி மருத்துவன்' எனவுமிதது முன்னேயுரைத்தன.

தரைநர கருந்துறக்கந் தனுகரணுதி யெல்லாம வருவதுஞ் செய்து — அரிதாகிய சொாக்கமுதலிய மூவிடத்துக் குரிய தனுகரண புவனபோகங்களை யெல்லா முண்டாகும்படிக் கற்பித்து,

அநாதி மலங்களிமமருந்தாறத்தீர்த்து — அநாதியாய் வருகிற மல மாயாதியாகிய வியாதிகளைப் போக்குதல் பொருட்டுண்டதமாகிய சுவாக்கநரகங்களி லுண்டான போகங்களைப் புசிப்பித்துத் தீர்த்து,

பரகதி யதுவுந்தந்து — மேலான சிவானந்தானுபூதியைக் கொடுத்து,

பாதபங்கயமுஞ் சூட்டும். — தனது காருண்ணியத்தாற் சீர்பாதகமலங்களை யிடைவிடாமற் பொருந்தியிருக்கும்படி சூட்டாநிற்கும். எ-று.

கர்மங்களுக்கு நாசமெவ்வாறென்னில்? காஷ்டத் தக்கினி, காஷ்டத்தை தகிக்குமாப்போல வெனவறிக

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சுத்தமாயையி லசுத்தமாயை தோன்றுமென்றுஞ் சூக்குமதேகத்திற் றூலதேகந் தோன்றுமென்றுஞ் சொல்லுஞ் சைவபவுராணிக மதானுசாரிகளா யிருக்கின்ற வாசாரியாமத மனுவாதித்து, சுத்த சைவசித்தாந்தாசிரியர் சொல்லு மதானுசாரமாய்; சுத்தமாயை நித்தியமென்றும், முடிவி லசுத்தமென்னுந் திருவிருத்தத்தாற் றூலதேகஞ் சாதாரணத்தத்துவ புவனமாகிய முதற்காரணத்தி னின்றுஞ் சூக்குமதேகத்தை நிமித்தகாரணமாகப் பண்ணிக்கொண் டுண்டாமென்று முதாகரித்தற் குபக்கிரமிக்கின்றார்.

அரனவிதி - பதிபஞ்சகிருத்தியம்,—அருள தென்றே முன்னேயுரைத்தனம் - அந்தச் சிவனது பஞ்சகிருத்தியம் நிக்கிரகரூபமாயிருக்கின்றது மனுக்கிரகந்தானே யென்று முன்னர் பதி பரீக்ஷையிற் சொன்னோம், அப்படியே,— அதுவும் - அந்த வருளுந் தொழிலும்,—நரை நரகந் துறக்கந் தனுகரணாதி யெல்லாம் - தங்களது கலப்பிலேயே மலபரிபாகத்தைப் பண்ணுஞ் சூக்கும தேகந் தூலதேக முதலிய மாயாகாரியங்களை,— வருவதுஞ்செய்து - மாயையினின்று முற்பத்திபண்ணி,—இம்மருந்தால - இந்தமாயாகாரியமாகிய ஔடதத்தால்,—அநாதி மலங்களதீர்த்து - மலமாயா கன்மங்களைப்போக்கி,—பரகதி யதுவுந் தந்து - பரகதியிலே போசித்து,—பாதபங்கயமுஞ் சூடும் - சிவத்துவாபி வியத்தியையுஞ் செய்யும்.

—

மேல் இனப்பத்துன்பமருத்தியே வினையறுபயன்என்றவாறிரியா, ஈண்டு மாயாகாரியங்களை மருந்தென்றனை மலவாம் போலுமெனின்? ஆகாது; நோய் நீக்குதற்கு ஏதுவாயினவெல்லாம் மருந்தெனப்படுமாகலின்.

அது "உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்—றப்பானாற் கூற்றே மருந்து" என்பதனாலறிக.

இஃது ஏகதேசவுருவகம்.

இதனானே போக்குதற்போகாத மூலமலமும் மான்மோக்ஷம் விடுதலெல்லாம், மருந்தையுண்டு மருந்துபோல, மலமொழிந்தியலுமிய அழுக்குப்பட்டு விடுதியாதல் கூறப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

இப்படி யுயிர்களுடைய காத்திரசரீரங்களையும் ஆன்மாக்களையும் கூட்டிக் காரியப்படுத்துகிறது என்ன பயனைக் கருதிச் செய்கிறானென்றும், அப்படிக் கூட்டிக் காரியப்பட்டு வருகிற ஆன்மாக்களுக்குத்தான் பயனென்னென்ற புத்தியை நோக்கி, மேலும் அருளிச்செய்கிறார்.

ஆனவிக்கியருளென்றே யறைந்தனன் றுவுமுன்னே-பரமேசுரன் செய்யப்பட்ட கிருத்தியங்களெல்லாம் அவனுடைய காருண்ணியமென்றே முன்னற் சூத்திரங்களிலே சொன்னோம். இனி யான்மாக்களுக்கு அந்தக்காத்தாவால் பயனேதெனின்?—தனா நர கருந்தறககக தனுகரணாதியெல்லாம் வருவதனு செய்து-பூமி நரகு பெறுதற்கரிய சுவாக்கம் சரீரத்துவம் புவனம் போகம் இவையெல்லாம் உண்டாம்படியுங் கத்

பித்து,—அநாதி மலங்களின்மருக் காற்றீர்த்து-அநாதியே யுள்ளவனாயுள்ள மலமாயா கன்மங்களினாக சுவர்க்கமுதலாகச்சொல்லப்பட்ட இகக ஔஷதங்களாலே போக்கி, இப்படி கன்மங்களைப் பூமியிலேயிருந்து ஆர்ஜ்ஜிதம் கர்ம சுவர்க்கங்களிலேபோயனுபவித்தும் தொலைந்து கன்மமொப்பு வந்தவவசரத்து,— பரகதி யதுவுந்தந்து பாதபங்கயமுஞ்சூட்டும்-மேலான மோட்சத்தையும் திருவுள்ளமாற்றி ஸ்ரீபாதமாகிய தாமரைமலர்களையும் காட்டியருளும்

இன்னும் சொல்லியது, பரமேசுரன் செய்கிற கிருத்தியங்களெல்லாம் ஆயுதமுடைய காருண்ணியமென்றும், சொர்க்கநரக முதலாகச் சொல்லப்பட்ட ஔஷதங்களாலே ஆன்மாக்களுக்கு அநாதியேயுள்ள மலமாயாகன்மங்களைப் போக்கித் தன்னு திருவடியையுங் கொடுப்பனென்னு முறைமையுமறிவித்தது.

'சுகருமம்' 'விதிப்படி' 'தூலமாமுரு' 'அரணவிதி' ஆகத் திருவிருத்தம் நாலும் புகுந்தன.

'இருவினை' என்ற திருவிருத்தமுதல் 'அரணவிதி' என்ற திருவிருத்தமீறாகத் திருவிருத்தம் நாலுஞ்சொல்லிக் கன்மமலத்தின காரணகாரிய மருளிச்செய்ததெனக் கொள்க.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

அதுவும் - எல்லாஞ் சிவத்தினைச் சார்ந்தபோது சால வினைமுதலாகிய அதுவும்,— அரணவிதி-இலயம் போகம் அதிகாரம் என்னும் அவத்தைகளினின்ற இறைவன்செய்யுஞ் செய்தியென்றும்,— அருளதென்று-அது கருணையேயென்றும்,—அலைந்தனன் முன்னே-தொகுத்தும் வகுத்தும் மேலே கூறிப் போந்தா மாதலின்,—தரைகர சுருந்துறக்கந் தனுகரணாதியெல்

லாம்-பூமி நரக மரிய துறக்கம் முதலியவற்றிற்சென றப்பயனை யனுபவித்தற் கேதுவாகிய தனுகரணாதிகளை,—வருவதுஞ் செய்து - உண்டாகச்செய்து,— அநாதிமலங்கள் - அநாதிமல கன்மங்களாகிய நோய்களை,—இம்மருந்தாற்றீர்த்து - இந்தத்தனு கரணாதிகளாகிய மருந்துகளினாலே தீர்த்து,— பரகதி யதுவு நல்கும் - பரஞானத்தைவிளக்கி,—பாதபங்கயமுஞ் சூடும் - திருவடித்தாமரை சூட்டுதலாலாகிய சிவானந்தப்பெருமையை யு மவனாற்றரப்படும்.

இதனானே மேற்கூறிப்போந்த தூல சூக்குமமான தேகவிரிந்த வெல்லாம், மருத்துவனுக்கு மருந்துபோல மலவயித்தியனாகிய வரனுக்குப் பரிக்கிரக விபூதியாதல் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.

இங்ஙனங் கூறிய மாயாகாரிய மானம் போகத்தை
மறைக்குந் தொழிந்த மலங்களைப் போக்கவற
றோவென றைக்கவாதிகூற, இத் தனுவா
தி யசுத்தமாயினு மிஃதில்லாவிட்ட
து மோட்சத்துக் கேதுவின
றென றுதாரணபூர்வமா
க வுரைத்தருகிறார்.

எழுமுடல் கரணமாதி யிவைமல மலமலத்தாற்,
கழுவுவ னென்றுசொன்ன காரண மென்னையென்னிற்,
செழுமல வறுவைசாணி யுவர்சேறி யித்தழுக்கை,
முழுவது மகற்றுமாயை கொடுமல மொழிப்பன்முன்னோன். (௫௨)

(இ-ள்.) எழுமுடல் கரணமாதியிவை — மாயையினுண்டாகிய தனுவாதிக ளெல்லா மலசம்பந்தமாதலான மலமெனப் பெறும்.

மலம்

மலமலத்தாற் கழுவுவ னென்றுசொன்ன காரணமென்னை யெனில் — ஆணவமாகிய சிக்கு மாயாமலத்தைக் கூட்டி மூலமலத்தைப் போக்குவனென்று நீர் சொன்னதென்னையெனில்?

செழுந்தவ வறுவைசாணி யுவர் செறிவித்தழுக்கை முழுவதுங் கழிப்பன — மேன்மைபொருந்திய புதுமையினையுடைய புடைவையை, கோவினது மலமாயிருக்கிற சாணமும் உவர் காரமுதலியவாகுற காருவாகனவைகளிற் சேர்த்து நிர்மலமாக்காநிற்பன. அதுதன்மைபோல,

மாயை கொடு மலமொழிப்பன முனைவனே. — மலினமாயிருக்கிற வான்மாவைச் சிவனுங் கலாதியாகிய மலினத்தைக் கூட்டித் தனது கிரியாசத்தியால் அதனைப் போக்காநிற்பன. எ-று.

இதற்குக் கிரணாகமம். (ரு௨)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலுதாரணம்.

எழுமுடல்கரணமாதி யிவைமல மலமலத்தாற் கழுவுவ னென்றுசொன்ன காரணமென்னையென்னில் - உண்டாகப்பட்டதேகமும் மனஇந்திரியாதிகளு மிதுகளெல்லாம் அஞ்ஞான

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அழுக்கைக்கொண்டு அழுக்கை நீக்கவேண்டுதலின், மாயேயமலமே ஏனை மலங்கட்கு மருந்தாகக் கூறப்பட்டனவென்பதாம்.

மலம் அழுக்கு என்பன ஒருபொருட்கிளவி.

இதனுண்மை மேலதுவலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படி நீர் முன்சொல்லப்பட்ட மாயாகாரியங்களை ஆன்மபோதத்தை மறைக்குமென்றொழிந்து, மலங்களெல்லாம் போக்குமென்று நீர்சொன்ன தெப்படியென்ற ஐக்கவாதியை மறுத்தருளிச்செய்கிறார்.

எழுமுதல் காரணமாதி யிவைமலம்-உண்டாக்கப்பட்ட தனு கரண புவனபோகமென்று சொல்லப்பட்ட இவையெல்லா மாயாமலம்,—மலமலத்தாற் கழுவுவ தென்றுசொன்ன காரணமென்னையெனனில் - இந்த மாயாமலத்தைக் கொண்டு ஆணவமலத்தைப் போக்குவதென்று நீர் சொன்னபடி யெப்படியெனனில்?—செழுமைய வறுவைசாணி யுவர் செறிவித் தழுக்கை முழுவதுங் கழிப்பன - வாப்பமும் புழுதியும் பொருந்தியிருக்கப்பட்டதொன்ற புடைவையை சாணத்தையும் உவரையுங் கூட்டி யதனுடைய வழுக்குக் கொல்லாததையும் ஒருதனை போக்காநிற்பன அத்தனைபோல்,—மாயைகொடு மலமொழிப்பன் முன்னோன் - பரமேசுரனும் மாயையிலே யுண்டான தனு கரண புவன போகங்களைக் கொண்டு, ஆணவமலத்தினது விருத்திகளைப் போக்காநிற்பன.

இதனாற் சொல்லியது, மாயையும் மலம், ஆணவமும் மலம். ஆனால் ஒரு மலத்தைக்கொண்டு ஒருமலத்தைப் போக்குவனென்றது எப்படியென்ன? புடைவையி லுண்டான வழுக்கை சாணகத்தையும் உவரையுங் கூட்டி யதனுடைய வழுக்குக ளெல்லாவற்றையும் ஒருத்தன் போக்குந் தன்மைபோல, பரமேசுரனு மாயாமலத்தைக்கொண்டு ஆணவமலத்தைப் போக்குவனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

எழுமுடல் கரணமாதி யிவைமலம் - எழுகின்ற தனுகரண முதலியனவு மலமாம்,— பலமலத்தாற் கழுவுவனென்று சொன்னகாரணமென்னை யெனினின் - மலத்தைமலத்தாற் போக்குவனென்று சொன்ன காரண மியாதெனில்?— செழுநவவுறுவை - செழிப் கோடிவத்திரத்தில்,— சாணியுவர்செறிவித்து - சாணமுமுவாமண்முதலிய வழுக்கைக்கொண்டு,— அழுக்கை முழுவதுங்கழிப்பன் - அழுக்கை முழுவதுங்கழுவுஞ்செய்யும் வண்ணான்போல,— முன்னோன்மாயையொடு மலமொழிப்பன் - முதல்வன் மாயாமலத்தினை மருந்தாகக்கொண்டு ஆணவமலங் களைந் திரப்பனென்பதாம்

இதனானே மேலது வலியுறுத்தப்பட்டது

---

## மறைஞானதேசிகர் உரை.

இங்ஙனங்கூறிய கன்மத்தான், மாயாதனுவிற் போகம் புசிப்பிப்பனென்றீர், அஃதொசரும மாயவிலக்கணம் யாதென? மேலுணர்த்துகிறார்.

நித்தமா யருவாயேக நிலையதா யகிலத்துக்கோர்,
வித்துமா யசித்தாயெங்கும் வியாபியாய விமலனுக
கோர், சத்தியாய்ப் புவனபோகந் தனுகரணமுமுயி
ர்ககாய, வைத்ததோர் மலமாயமாயை மயககருஞ் செ
ய்யுமன்றே. (௫௯)

(இ-ள்) நித்தமாய — பிரபஞ்ச சங்காரத்தில் இல்லாதழிந்தான மீளவு மிதனையுண்டாக்குமதற்கோர் ரூபாதான மில்லையாதலாலே யிதற்கநித்தியத்துவங் கூடாதபடியினாலே நாசமில்லாததாய,

அருவாய் — ஆன்மாக்களைச்செய்த கன்மத்துக்கீடாகப்பிரசிருதியிற்றோன்றிய பதார்த்தங்களைப் புசிக்கும்படி யிச்சையைப்படைத்திருக்கவுந் தான ருவன்றாகதாய்,

ஏகநிலையதாய் — அநேகமென்கிறதற் பிரமாண மில்லாதபடியா லொன்றானதாய்,

அகிலத்துக் கோர் வித்துமாய் — சகலசகத்துக்குங்காரணமாய்,

அசித்தாய் — காரியங் சடமாயிருக்கையினாலே தானுஞ் சடமாய்,

எங்கும் வியாபியாய் — எவ்விடத்துங் காரியங் காணப்படுகையினாலே வியாபகமாய்,

விமலனுக் கோர் சத்தியாய் — நின்மலனான சிவனுக்குப் பரிக்கிரக சத்தியொன்றாய்,

புவனபோகந் தனுகரணமுமுயிர்க்காய் — ஆன்மாக்களுக்கு மாயேயமான தனுவாதிகளை யுண்டாக்குவதாய்,

வைத்ததோர் மலமாய மாயைமயக்க முஞ் செய்யுமன்றே.

ஆணவ மாயை கன்மமென மூவகைப்பட்ட மலங்களில் ஒன்றெனறுசொல்லுமதாய், மாயையான தானமாக்களை மயக்கத்தை யுஞ்செய்யாநிற்கும்—எ-று.

எல்லாசகத்தையு மயக்கத்தைய பண்ணுகையான மாயையென்றா (ருகூ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் மாயாலக்ஷணங் கூறுகின்றதாதலின்

நித்தமாய் - காரிய காரண மிரண்டும அநித்தியமென்னும் பௌத்தமத நிராசார்த்தமாக,—அருவாய்-ரூபமாயிருக்கிற பரமாணுவேகாரணமென்னும வைசேடிகமத நிராசார்த்தமாக,—ஏகநிலையதாய்-வேதாகமைக தேசியைப்போல் பிரதிபுருஷ நியதமாக மாயையுண்டென்பதன்றி சகலராகிய ஆன்மாக்களுக்குச் சாதாரணமாக மாயையொன்றேயென்றது,—அகிலத்துக்கோர் வித்துமாய் - பிரபஞ்சம சூனியோபாதான மென்னும் மாத்தியமிகமதம்போலன்றிச சாகோபசாகாதிகளையுடைய விருக்ஷத்துக்கு சூக்குமமாகிய வித்துப்போல ஸ்தூலமாகிய பிரபஞ்சத்துக்கு சூக்குமமாகிய மாயையுண்டென்றது,—அசித்தாய் - சிற்சத்தியே ஜகதுபாதான காரணமென்னும் அத்வைதவாதி நிராசார்த்தமாக் ஜடமென்றது,—எங்குமவியாபியாய் - ஸ்வகாரியமாகிய முப்பத்தொரு தத்துவங்களிலும் தத்காரியமாகிய தாத்துவிகங்களிலும வியாபித்து நிற்பதாய்,—விமலனுக்கோர் சத்தியாய் - நின்மல சிவனுக்கொரு பரிக்கிரக சத்தியாய்,—புவனபோகந் தனுகரணமு முயிர்க்காய்-ஆன்மாக்களு

றி,—ஏசநிலையதாய்-மாயை யனந்த மென்றும் சத்தென்றுஞ் சொல்லும் வேதாந்தகைக்கேசிக்கும் சுத்த வேதாந்திகட்கும் போல முறைமையி னநேகமின்றி சதசன்றி,—அகிலந்தக்கோ ர் விதமுமாய்-சூனியவாதானம் சூனியம் பிரபஞ்சமென்னு ம் பக்ஷத்தைச்சேசிக்குப்போலச் சூனியமின்றி,—அநித்தாய-நித் பிரமோபாதானத்தினின்றும் சடசித்து றாபத்தியாமென்று பரிணாமவேதாந்திகளும் காராயணப்பிரகிருதியினின்றுஞ் சடசித் துண்டாமென்னும் பாஞ்சராத்திரிகளும்போலச் சித்தன்றி,—ஏ ருவியாபியாய்-கண்ணுக்குத்தோற்றிய புத்தியகாரணமென்னு மூலோகாயதருக்குப்போல அவ்வியாபியன்றி,—சிவனுக்கோ ர சத்திடாய்-சிவனுக்குச் சமவேதசிற்சத்தியொன்று பரிக்கிரக சடசத்தியிரண்டு ஆக மூன்றினுளொன்று பரிக்கிரக சடசத்தி யாய்,—புவனபோகந் தனுகரணமு முயிர்க்காய் வைத்ததோர மலமாய்-பிறபோக்கியப்பொருள்களையும் தூலசரீரசூக்குமசரீர ங்களையு மிலக்கணையா லவைகளாலுண்டாகிய சிற்றறிவையுங் கொடுத்த மாயாமலமாய்,—மாயை மயக்கமுஞ்செய்யுமன்றே-மாயையானது அந்தச்சிற்றறிவைப்பற்றி நானசுகி நான துக்கி யென்றுவரும் விபரீதஞானத்தையு முயிர்க்குப்பண்ணுந்தானே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனி, அம்மாயைமாயேயங்களது இயல்பாவது என்னையென்பார்க்கு, அதனை வகுத்துக் கூறுவான்றொடங்கினார்.

உலகிற்கு முதற்காரணமெனப்படும் மாயையாவது, நித்தமாதன் முதலிய இலக்கணங்களை யுடையதெனபதாம்.

மாயையின சொரூபங்கூறுவார், புவனபோகந் தனுகரண முமுயிர்க்காயென்றும், அதுவும் மாத்தியமிகர் மதம்பற்றிச் சூனி

யத்திற் செல்லாமைப்பொருட்டு உலகத்திற்கோர் வித்துமாயெ
ன்றும், அதுவுங் கணிகவாதிகள் மதம்பற்றிச் சார்பினிற் செல்
லாமைப்பொருட்டு நித்தமாயென்றும், அதுவும் உலோகாயதர்
மதம்பற்றிப் பூதங்களிற் செல்லாமைப்பொருட்டு அருவாயென்
றும், அதுவும் வைசேடிகர் முதலியோர் மதம்பற்றிப் பரமாணு
க்களிற் செல்லாமைப்பொருட்டு எங்கும் வியாபியாயென்றும்,
அதுவுஞ் சாங்கியர் மதம்பற்றி முக்குணங்களிற் செல்லாமைப்
பொருட்டு ஏகநிலையதாயென்றும், அதுவும் பாற்கரியர் மதம்ப
ற்றிப் பிரமத்திற் செல்லாமைப்பொருட்டு விமலனுக்கோர் சத்
தியாயென்றும், அதுவுஞ் சிவாத்துவிதர் மதம்பற்றிச் சிற்சத்தி
யிற்செல்லாமைப்பொருட்டு அசித்தாயென்றும், அதுவும் மாயா
வாதி மதம்பற்றி அநிர்வசனத்திற் செல்லாமைப்பொருட்டுவை
த்ததோர் மலமாயென்றும், இத்தன்மைத்தாகிய மாயை, ஆண
வமலம்போல மயக்கமே செய்யுமென்னுஞ் சைவருளொருசாரா
ரை மறுத்தற்பொருட்டு, மயக்கமுஞ் செய்யுமென்றுங் கூறினார்.

செய்யுளாகலின் முறைபிறழ வைக்கப்பட்டன.

ஈண்டு மயக்கமென்றது விபரீதவுணர்வை.

மயக்கமென்னுமும்மை, அது தன்னியல்பன்மை யுணர
நின்றது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—o—

இப்படிச் சொல்லப்பட்ட மாயையினுடைய இலக்கணம் எ
ப்படியென்ற மாணாக்கனை நோக்கி; மாயையினிலக்கண மருளிச்
செய்கிறார்

(அசுத்தமாயையானது) நித்தமாய்-அழியாததாய், —அரு
வாய் - ஒருவர்க்குந் தோன்றாததாய்,—ஏகநிலையதாய் - ஒன்று

விருக்கிற நிலைமையினையுடைத்தாய்,—அகிலத்துக்கோர் வித்துமாய் - பிரபஞ்சத்துக்கொரு காரணமுமாய்,—அசித்தாய் - அசேதனமுமாய்,—எங்கும்வியாபியாய் - எவ்விடத்திலும் வியாபகத்தையுமுடைத்தாய்,—விமலனுக்கோர் சத்தியாய்-மலரகிதனாயிருக்கிற பரமேசுரனுக்குத் தானொருசத்தியுமாய்,— புவனபோகந்தனுகரணமுமுயிர்கட்கு-ஆன்மாக்களுக்குத் தனுவுங்கரணமும் புவனமும் போகங்களுமாய்,—வைத்ததோர்மலமாய்-மூன்றுமலங்களிலே வைத்தெண்ணப்பட்டதொருமலமுமாய்,—மாயைமயக்கமுஞ் செய்யுமன்றே - மாயையானது ஆன்மாக்களுக்குப் பொய்யைமெய்யாகவும் மயக்கத்தையுஞ்செய்யும்.

நித்தமாய் எ-து தன் காரியமாயுள்ள முப்பத்தொன்றுமழியுமிடத்துங் காரணத்துக்கு அழிவில்லையென்றதெனக்கொள்க.

அருவாய். எ-து. காரணத்திலொழிந்து காரியப்படுமிடத்திலுங் கொன்றதென்றதெனக்கொள்க.

அசித்தாய். எ-து இதனாலே ஆன்மபோதஞ் சீவித்தசாமாயினுமிது சடமென்றதெனக்கொள்க.

எங்கும வியாபியாய். எ - து தன்னுடைய காரியமாயுள்ள முப்பத்தொன்றுக்கும் எவ்வளவு வியாத்தமுடையது, அவ்வளவுந் தனக்கு வியாத்தமுடையதென்றதெனக்கொள்க.

புவனம் எ-து உலோகங்கள்

போகம் எ-து. அன்னமுதலானவையிற்றை.

தனு. எ-து. உடல்.

கரணம். எ-து. அந்தக்கரணமும் புறக்கரணமும்.

வைத்ததோர் மலமாய். எ-து. எண்ணப்பட்ட மலங்களிலொன்றுயென்றதெனக் கொள்க.

இதனாற்சொல்லியது, அசுத்தமாயை நித்தியமென்றும்,

அருவமென்றும், ஒன்றாயிருக்குமென்றும், பிரபஞ்சத்துக்குக் காரணமென்றும், சடமென்றும், எங்கும் வியர்த்தமுடைய தென்றும், பரமேசுரனுக்குச் சத்தியாயிருக்குமென்றும், ஆன்மாக்களுக்குத் தநுகரண புவனபோகங்களுமாயிருக்குமென்றும், மூன்று மலங்களிலே ஒன்றாயிருக்குமென்றும், ஆன்மாக்களுக்குப் பொய்மை மெய்யாக மயக்கத்தையுஞ் செய்யுமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மாயை - உலகிற்கு முதற்காரணமெனப்படு மாயையாவது,—நித்தமாய் - நித்தமாகியும்,—அருவாய் - அருவாகியும்,—ஏகநிலையதாய - ஒன்றாகியும்,—அகிலத்துக்கோர்வித்தமாய் - உலகமுண்டாதற் கோர்வித்தாகியும்,—அசித்தாய - சடமாகியும்,—எங்கு மேவியாபியாய் - எவ்விடத்தும் வியாபகமாகியும்,—விமலனுக்கோர்சத்தியாய் - முதல்வனுக்கோர் பரிக்கிரகசத்தியாகியும்,—புவனபோகந் தனுகரணமுமாகிக்காய் வைத்ததோர் மலமாய் - புவனமும் போகமும் தனுவும் கரணமுமாக வுயிர்களின்பொருட்டு விரிந்ததோர் மலமுமாகியும்,—மயக்கமுஞ்செய்யுமன்றே - மயக்கத்தினையும் செய்தலாகிய இலக்கணங்களையுடையது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இந்த மாயையிற்றோற்றிய காலமுதலிய தத்துவங்களினது தோற்றமும், காலத்தத்துவத்தின வியாபாரமு முணர்த்துகிறார்.

லசங்கையினைப் பண்ணி

டாகிய போகங்களைப் புசித்தற்குத் துடிலவ நிமேஷதமுதலிய காலங்களை யுண்டாக்கி அங்கங்குள்ள வானமாகக ணெடுங்காலம் புசியாநின்றே மெனவெண்ணி; அக்காலஞ் சடமாகலாற் றானாகப்பலத்தைக்கொடுக்கவறாதேயெனின்?

நாயகருடைய சத்தியாலே நடத்துமென்று சகத்தையெல்லாம

சிவனாணையாகிய சத்தியாலே பிரபஞ்சமெல்லாத்தையு மிப்படி நடத்தாநிற்பன்.

அசுத்தமாயையிற்றோற்றிய காலமானது சுத்தமாயா புவனவாசிகளுக்குச் சிருட்டிமுதலிய கிருத்தியங்களையு மிதிலுண்டாகிய போகங்களையுஞ் செய்வதேயல்லவா மெனின்? சுத்தமாயையிலுண்டாகிய சுத்தகாலந்தானே யந்தப் புவனவாசிகளுக்குச் சிவசத்தி போக முதலியவற்றை யுண்டாக்கிப் புசிப்பியாநிற்கும்.

இதற்கு மதங்கத்துஞ் சுப்பிரபேதத்தும் பௌஷ்கரத்து மறிக. (௫௪)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் நாலுவிருத்தத்தால் மாயையிற் கலாதிதத்துவங்க டோன்றும் படியும், தத்கிரியைகளுங் கூறுகின்றது.

அசுத்த மாயையினாலே அநந்தேஶ்வர சத்திக்ருத க்ஷோபத்தினாலே முதல் காரியமாயையுண்டாம். மேல்-*போகாவதி பரிச்சேதகமாய் பூதபவிஷ்யத் வர்த்தமானாத்மகமாயிருக்கிற காலந்தோன்றி, சிருஷ்டிகாலமென்றும் ஸ்திதிகாலமென்றும்

சம்ஹாரகாலமென்றும் திரிவிதமாய், சாதாரணமாகவும் அசாதாரணமாகவும் பிரதிபுருஷநியதமாய், தத்தத சரீரோற்பத்தியாதிகளுக் கேதுவாய், சர்வலோகநாயகருசிய ஈஸ்வரசத்தியான ஞாநக்ரியாயிச்சத்ரி ஆரிணியெனனும் சதஇச்சரா திஷ்டானத்திலே ஜகதுற்பத்தியாதிகளைப் பண்ணும்.

* போகாவச்சிபரிச்சேதகம் - போகமுடிவை யளவிடுகை.

இதற்குக் காலவாதி காலமானது ஏகமுமாய் விபுவுமாய் பிரவாஹநாதி காரியங்களுக்கெல்லாம் ஏதுவாயிருக்கையால் நித்யமாயிருக்கிற காலத்துக்கு உற்பத்திபாதக மெப்படியென்னில்? பூர்வாபர ¶ ப்ரதீதயுண்டாகையினாலே காலமநேகமும் அநித்யமுமாம்.

¶ பிரதீதி - அறிவு

அந்தபூர்வாபர ப்ரதீதியானது சூரியகதியாதி யுபாதியினாலே வருவதல்லது, காலத்துக்கு பேதம் வாஸ்தவ மல்லவென்னில்? அந்தவுபாதியினாலே தானே காலவ்யவஹாரம் வருமாகில், காலமே யில்லாதேபோகத் திரியும்.

காலமொன்றேயாகில், இன்னகாலத்திலே யின்னதாம் இன்னகாலத்திலே யின்னதாகாதென்றும், அந்வயவ்யதிரேகமுங் கூடாது. இன்றியும், நாழிகாதிகளுக்குச் சூரியகதியாதி யுபாதியல்லது ‡ லவ × த்ருடி யாதிகளுக் கில்லையாகையால காலபேத † மௌபாதிக மல்ல, ஸ்வபாவிகமென்று சித்தம்.

‡ லவம் - கண்மூடிக்கொண்டது, × த்ருடி - நொடிப்பொழுது, † ஔபாதிகம் - உபாதியாலுண்டானது.

கடாதி பதார்த்தங்களிலே பூதபவிஷ்யத்வியவகாரமொழிந்து வர்த்தமான வியவகார மில்லாதிருக்கையால் வர்த்தமானகாலமே யில்லையென்னில்? கடநிருமாணத்திலே யிருத்

பிண்டாவஸ்தை பூதகாலமாம் * ஜலாஹரணயோக்கியகாலம் பவிஷ்யத்காலமாம். சகரத்திலே கபாலாதியவஸ்தையாயிருக்கிறகாலம் வர்த்தமானகாலம் ஆகையால் காலத்திரயமுமுண்டு ஆகையால் ஜடமுமநேகமுமானதுக்கு நித்தியத்வங்கூடாது க்ரியையில்லாத வஸ்துவுக்கு விபுத்வங்கூடாது ஆகையால் காலமநேகம் அநித்யமென்பது சித்தம்.

* ஜலாஹரணம் - ஜலங்கொண்டுவருகை

ஆகில் இந்தக்காலமுற்பத்தியாதிகளுக்கு ஏதுவாமெனனில். இந்தக்காலோற்பத்திக்குக் காலமுண்டோ இல்லையோ? காலமுண்டெனனில்? — அநவஸ்தையாம் இல்லையெனனில்? காலமேயுண்டாகாதெனனில்? இந்தக்காலம் ¶ஸவ்வியபிசரித்தத்து வஸ்துவிகங்களுக்கே ஏதுவல்லது தன்னுடைய உற்பத்திக்குத் தானே ஏதுவல்ல. காலாதீதரான ஈசுவரன் சுவேச்சையினாலே காலத்தையபேட்சியாமலே காலத்தை +உற்பாதிப்பார்?

— அநவஸ்தை - முடிவின்மை, ¶ ஸவ்வியபிசரித்தத்து - தனக்குவேறான, + உற்பாதித்தல் - உண்டாக்குதல்

இந்தக்காலம் அசுத்தமாயாஜந்யமாகையினாலே சுத்தமாயாகாரியோற்பத்தியாதிகளுக்குக் காலமேதெனனில்? சுத்தமாயையிலுமிவ்வாறு சுத்தகாலமுண்டு.

ஆகில் காலோபசங்காரத்துக்குக் காலமேதெனனில்? இந்தக் காலாபேக்ஷை சதாசிவாதிகள் பண்ணுங் கிருத்தியங்களுக்கே காலாதீதரான ஈச்சுரர் காலத்தையபேக்ஷியாமல் ஸ்வேச்சையினாலே பஞ்சகிருத்தியங்களையும் பண்ணுவார்.

இன்னுமிந்தக்காலமானது ஒன்றுக்கு பூதகாலமும் ஒன்றுக்கு வர்த்தமானகாலமும் ஒன்றுக்கு பவிஷ்யத்காலமுமாயிருக்கையினாலே பூதபவிஷ்யத்வர்த்தமானகாலமாக ஒருபடித்தாயிராதாகையால், பதார்த்தா†வச்சேதககாலம் திரிவிதமெ

ண்பது கூடாதென்னில்? காலமும் திக்கும் ப்ரதிவஸ்து நியதமாயிருக்குமாகையால், முதலே ப்ரதிவஸ்து நியதகாலமென்று சொல்லுகையினாலே சொன்ன தூஷணங்கூடாது. நித்தியகாலாநுயாதத்துவாக ஆன்மா நித்தியனோ? காலம நித்தியமாகில் ஆன்மாவுக்கு நித்தியத்துவமெப்படியென்னில்? காலாநவச்சிந்நத்வமே நித்தியத்துவமெப்படி கூடுமென்னில்? காலாநவச்சின்னத்வமே நித்யத்வமாகையால், பூர்வோக்த தூஷணமில்லை + அவச்சேதகம் - அளவிடுகிறது.

ததுக்தம் ஸௌக்ஷ்மே - ஸ்வகார்யம் க்ருதகம் ப்ராஹு: ஸாபேக்ஷமேவ யந்நாத்ர ஸ்ருஜ்யதே | க்ருதாத்ஸி ஸிஸ்ருக்ஷு: ப்ரத்யக்ஷாத்யபேக்ஷத: || ஸத்க்ருதாத் ஸ்ருஷ்டிகார்யம் ஸ்வயம் த்ருஷ்ட்வா ப்ரவ்ருத்திஷு | தாத்ருசம் ஸ்வதேஹாத்யம் ஸ்வயம் ஸித்தம் க்ரியாஸ்வயம் || ஆத்மதத்வஸாதனேஷ்வாஸ்ய ப்ரவ்ருத்தானாம் காரணத்ரயம் | ஸகாம்ருதி ஸ்வதேவ்யாபிஹ்ருத்யான்யத் பூர்வாதிகோணானாம் || நாகாமே ஜாயதே கஸ்மிந்நாகாமே ஸ்ருஷ்டிஸ்தவியா | ப்ரக்ருதிவஸ் ஸம்பாதித்த்வ தஸ்யாஸ் கார்யம் ப்ரவர்த்தக: || ஸர்வஸம்ஜாயமாநாயம் ஜாயதாமேத: ஸர்வா கவிஸ் | ஸதி ஸ்ருஷ்டிப ப்ரக்ருதிப்ரகாஸ்ய கதர்சிஸ த்ரிவி || யத்க்ருத காரணம் கார்ய ஸஹாத்யாநாம் ப்ரவர்த்தக: | காமேத ஹேதிஜாயேரது ஸர்வஹாவாஸ்ய ஸர்வஜ்ஞா || நகஸ்காரணம் தத்ர தவிகாமே ப்ரவ

𑌯𑍋 𑌮𑌤𑌃 । 𑌶𑌿𑌵𑌃 𑌕𑌾𑌰𑌣𑌵𑌿𑌜𑍍𑌞𑍋 𑌜𑌾𑌯𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑍀𑌯𑌶
𑌕𑍍𑌤𑌿𑌤𑌃 ॥ 𑌉𑌦𑍍𑌵𑌾𑌹𑌯𑌤𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌸 𑌕𑌰𑌾𑌦𑍃𑌕𑍍𑌸𑍍𑌵𑌾𑌦𑌕𑌕𑍍𑌰𑌮𑍇
𑌣 । 𑌜𑌾𑌯𑌾𑌤𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑍋 𑌹𑌾𑌰𑍍𑌮𑍇 𑌕𑌾𑌰𑌣𑌾𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌵𑌾
𑌞𑍍𑌛𑌿𑌤𑌃 ॥ 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌵 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑌂𑌹𑌾𑌰 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑌾 𑌨𑌿𑌯𑌮𑌃
𑌕𑌯𑍋𑌃 । 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌿 𑌵𑌿𑌶𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍇𑌣 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰
𑌣𑍋𑌦𑌕𑌃 । 𑌤𑍇𑌨 𑌕𑌾𑌰𑍇𑌣 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌯𑌸𑍍𑌯𑌃 𑌕𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚
𑌶𑌿𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑌃 ॥ 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌚𑍇𑌤𑌨𑌕𑌾𑌰𑌣 𑌦𑍍𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌤𑌂
𑌵𑌦𑍍𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍇𑌃 । 𑌕𑌚𑌂 𑌜𑌹𑌾𑌰𑌯𑌸𑍍𑌯 𑌸𑌂𑌸𑌾𑌰 𑌨𑌿𑌯𑌮𑌃 𑌕𑌾𑌰
𑌣𑍇𑌤𑌾𑌹𑌵𑍇𑌤𑍍 ॥ 𑌤𑌦𑍍𑌵𑌕𑍍 𑌪𑍍𑌰𑌯𑌯𑌸𑍍𑌯 𑌸 𑌧𑌿𑌯𑍋𑌜𑌾
𑌨𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌕𑌾𑌰𑌤𑌕𑌃 । 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌹𑍋𑌷 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌪𑍍𑌰
𑌕𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌪𑌰𑌾𑌃 ॥ 𑌸𑍇𑌵𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍇𑌯𑍋 𑌵𑌾 𑌸𑌂𑌸𑌾
𑌰𑌨𑌿𑌯𑌮𑌂 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌸𑌃 । 𑌤𑌤𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌵𑌾 𑌸𑌂𑌸𑌾
𑌰𑍇 𑌕𑌾𑌰𑌣𑍇 𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 𑌨𑌸𑌂𑌜𑌤𑌾 ॥ 𑌪𑍍𑌰𑌜𑍇𑌯 𑌪𑍍𑌰𑌨𑍍
𑌮𑍍𑌰𑌣𑌾𑌤𑌿 𑌸𑍍𑌪𑍍𑌰𑌜𑌤𑍍𑌯𑌤𑌿 𑌹𑌂𑌤𑌿 𑌚 । 𑌤𑌿𑌰𑍋𑌦𑌯𑌾𑌤𑌿 𑌸𑌮
𑌮𑌵𑌾𑌤𑍁 𑌨𑌕𑌾𑌰𑌣𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾𑌸𑌹𑌾 ॥ 𑌵𑌤𑍍𑌸𑍇 𑌜𑌨𑌾𑌦𑌯𑌃 𑌕𑌾
𑌰𑌾𑌃 𑌯𑍇𑌵𑌮𑍇𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌿𑌤𑌾𑌃 । 𑌨𑌯𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇𑌨𑍍𑌤𑌾
𑌸𑍇𑌯𑌸𑍍𑌪𑌾𑌦𑌤𑍇𑌷𑍍𑌟𑍇 𑌨 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌤𑌿 ॥ 𑌵𑍃𑌸𑍍𑌤𑍍𑌰𑌾 𑌤𑍀𑌤
𑌹𑌾𑌵𑌿𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌮𑌹𑌾𑌵𑌤𑌃 । 𑌤𑌸𑍍𑌯𑌾 𑌦𑍇𑌕𑌕𑍍𑌷
𑌣𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌯 𑌕𑌯𑍋𑌜𑍍𑌯 𑌮𑌾𑌰𑌮𑌪𑍍𑌯𑌤𑌾𑌃 ॥ 𑌵𑌤𑍍𑌸𑍇 𑌜𑌾 𑌨
𑌕𑍍𑌷𑍇𑌣𑌸𑍍𑌯𑌸𑍍𑌯 𑌹𑌾𑌵𑍋𑌦𑍍𑌧𑌿𑌤𑍍 𑌨𑌸𑍍𑌯 𑌨𑌾𑌶𑌨𑌃 । 𑌨𑌾𑌶𑍋
𑌕𑍍𑌷𑍀𑌸𑍍𑌯𑌸𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑌨𑌾𑌂 𑌕𑌤𑍀𑌰𑍍𑌤 𑌕𑌾𑌰𑌣𑌵𑌚 ॥ 𑌇𑌤𑍇 𑌤𑍍𑌰

பாஶம் சபஞ்சதா ப்ரோக்தம் யஸ் | ஜநநீஜநநீஜநகம் சக்ரஸ்ய
விநியோக்த்ரோ: || போக்யபித்ருணாம் ஸம்ஸாரஸ்ய
ஹேயமித்யுச்யதே இதி |

சுத்தகாலப் பிரளயாந்தரத்திலும் சுத்தா சுக்குமமாயை யுடைய பஞ்சகிருத்தியத்தைப் பண்ணுவனெனப்பதற்குச் சமாதி.

ஶுத்தேऽத்வநி - ஸாம்ப்ரதம் ஸ்வபோக்ய யஸ்ய போக்யமாத்ராத் போகப்ராத்ருத் பாவயந்
கலாகலா | ஜாயாஸக்திர் யோக்த்ராம் ப்ரஸ்வகத்ரு
பஸ்ருது ஸம்பந்தம் ப்ரத்யுரா யக்ஷஜாத:|| இதி.

பின் நித்தியகலாதிதோன்றத் தோன்றியென்பது †சாகாம் டசாபதத் மாயையால், சேஷம் மேலவிருத்தத்திலே கூறுகின்றது.

† சாகாமக்ஷாபதம் - விருவோடு கூடினபதம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

மாயையினின்றும் தத்துவங்களினது தோற்றமும் தொழிலுமுறைகூறுகின்றார்.

மாயையிற்காலமோடு நியதியின் கலாதிதோன்றும் - சுத்தமாயையிற் சிவன் சிருஷ்டித்த காரியத்தின் பின் பந்தமாயங்கதேசுரசத்தி கலக்கிய மாயையினின்றும் காலதத்துவம் நியதித்தத்துவம் கலாதத்துவம் பிறக்கும் (ஆதியென்றதனாற் புருடதத்துவமுமுண்டாம்.) முன் மானதப்பிரத்தியக்ஷப் பிரஸ்தாபத்திலே தத்துவங்களின் வியாபாரக்கிரமம் விஸ்தரிக்கப்பட்டது; இப்போ தற்பத்திக்கிரமமாசாரியர் தாமே யுரைக்கின

றார் —ஆயவக்காலம் - சூக்குமதேகத்துள்ளசாதாரணமாயிருக்குங் காலதத்துவம், (புறம்பிற்சாதாரண காலதத்துவத்தினது விரத்தி துடி முதலிய கலைகளை முன்னிட்டுக்கொண்டு போக்கியப் பொருளிற் போகத்தினைப் பொருட்டியினாற் செலுத்திப் பிரளய பரியந்த மிருக்கும் புறம்பிற சாதாரண காலம்)— மூன்றுயாக்கியு மளித்தும்போக்கி-போகவந்த பரிசசேதகமாய்த் துடி லவம் காட்டாதி காரியகலாபேதத்தினாலே செல்காலம் வருகால மிரண்டின் மத்தியத்தி னிகழ்காலமாயும், சரீர முதலிய தாத்துவிகப் பொருட்களின் தோற்றரோற்றல் நிற்றல் நிமித்தமாய் நிற்குங் காலதத்துவத் தோற்றத்திலுங் காலம் வேண்டிலன. அவத்தையருமாதலால் தத்துவத்தோற்றத்திற் காலநிமித்தமன்று திதியை நியமிக்குங்காலதத்துவம் போலச் சங்காரத்தை நியமிக்குங் கலையித்திரி பெண்கின்ற சங்கார சத்தியே தத்துவத்தோற்றத்தில் நிமித்தியமாய்,—காயமோடுலகுக்கெல்லாம்-தனுகரண புவனபோகங்கட்கு,--காலசங்கையினைப்பண்ணி-ஏகமுதற் பரார்த்த பரியந்த கால வெண்ணிக்கையை யுண்டாக்கி,—நாயகனாணையாலே-சிவாஞ்ஞையினாலேயேவப்பட்ட காலதேவதையினாலே யதிஷ்டிக்கப்பட்டு,—நடத்திடுஞ் சகத்தையெல்லாம்-சடசித்துக்கள்ளனைத்தையு முற்பத்தி யோக்கியதையை யுற்பத்தி பண்ணிச் செலுத்தும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

அசுத்தமைத்தாகிய மாயையினின்றுங் காலமுதலிய தத்துவங்களுளவாம். அவற்றுட் காலமாவது முதல்வனாணையான் முத்திறப்பட்டுத் தனக்குக் கீழுள்ள காரியப்பிரபஞ்சமனைத்தை

இதனாற் சொல்லியது அசுத்தமாயையிலே காலமும் நியதி யுங் கலையுந் தோன்றுமென்றும், சத்தி தத்துவத்தாலே காலத் தத்துவங் காரியப்படுகிற முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

மாயையில் - அசுத்தமாயையாகிய மாயையினின்றும்,— கால மோடு - காலதத்துவத்தோடு,— நியதி - நியதிதத்துவமும்,— பின்கலாதி தோன்றும் - பின்கலைமுதலியனவு முறையேதோன் றுவனவாம் — ஆம் அக்காலம் - அவற்றுளொன்றாகிய காலதத் துவமானது,— நாயகன்றனையாலே மூன்றாய் - முதல்வனாணையா லே மூன்றுபட்டு,— ஆக்கியு மளித்தும்போக்கிக் காயமோ டுலகுக் கெல்லாம் - தோற்ற நிலையிறுதியென்னு முத்தொழிலுடைய வி னைச்சுருக்குமுள்ள காரியப்பிரபஞ்சத்தினையும்,— காலசங்கை யமைப்பனன் - காலவரையறையிரப்படுத்தி,— சகத்தையெல் லாம் நடத்திடும் - இவ்வுலகத்திற் கணமுதலியவைசெய்து நிற் கும் என்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேற்கூறுந்த முறையானே நியதிகலையின் காரிய
ப்பாடுங் கலையிற்றோற்றிய வித்தையினது
காரியப்பாடு முணர்த்துகிறார்.

நியதியின் றோன்றிக் கன்ம நிச்சயம் பண்ணிநிற் கு, மபாவிலாக் கலையினறோன்றி யாணவ மொதுக்கிச் சித்தின், செயல்புரி கிரியாசத்தி தெரிவிக்கு[illegible]

பொருந்தினபோது சுகதுக்கபோகமே ரூபமாகிவருகிற பலங்களைப் புசிக்கச் சத்தருவனுதலாலு மயர்விலாக் கலையெனச் சிறப்பித்தார்.

இதற்குப்பௌஷ்கரத்து மிருகேந்திரத்துங்காண்க.(௫௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——0——

நியதியினன்றோனிக கன்ம நிச்சயம்பண்ணிநிற்கும்-காலத்தத்துவத்துக்குப்பின்பு மாயையிலேநின்றும் நியதித்தத்துவமானதோன்றிக் கர்ம +நியமனத்தைப்பண்ணி ஒருவர்பண்ணின கர்மபலத்தை ஒருவர்புசியாதபடியும், விஷய சௌந்தரியத்தினுலே அதிகப்ரவிருத்திகள் வாராதபடியும், பிராப்தமான பாபபலபோகம் அநிஷ்டமென்று விடாதபடியும், பரிபக்குவமான கர்மபலத்தை முன்பின்னுகப் புசிக்கவொட்டாமலும், ஈசுரசத்திப்பிரேரணையினுல் ராசாஞ்ஞையானதுபோல ; நியமனஞ்செய்து புசிப்பிக்கும்.

+ நியமனம் - ஏற்பாடு.

ஈஸ்வரசத்தியே நியமனத்தைப்பண்ணுதோ! நியதி தத்துவமென்றொன்றை அங்கீகரிப்பது கற்பநாகௌரவமென்னில்? ஈஸ்வரசத்தி நிர்மலையாகையினுலே நியதி *வியவதாகமன்றித் தானே பண்ணுமபொழுது அதுமுதலியையேபண்ணும்.

* வியவதாகம்-மறைவு

காமந்தானே தத்தம் கர்த்தாகளுக்கு நியமமாகப்பலத்தைக் கொடாதோ வெனனில்? காமமானது க்ருஷியாதிகளைப்போலத் தொழிலாகையினுல் நியாமகம்பண்ணமாட்டாது.ஆகில் ஒருவர்பண்ணின க்ருஷியாதிபலங்களை ராஜாவுமிருக்கையிலே ஒருவர் புசிக்கக்காண்கிறோமே யென்னில்? உஞ்ஞத்திலே ×கு

த்விக்குகள் பண்ணின கருமபலத்தை யஜமானன்புசிக்குமா போல, ஏவினவன தொழிலசெய்தவனுடையபலத்தைப் புசிப் பன

× ருத்விக்கு - யாகஞ்செய்துவைக்கின்றவன

அவ்வாறு ஏவினவனும ஏவலசெய்தவனுமன்றி, ஒருவன் தன் னொன்று பண்ணின க்ருஷியாதிபலத்தை ஒருவன்புசிக்ககாண பானேன்னெனின்? அதுவும் ஜன்மாந்தர சம்பந்தமல்லது வா ராது ஆகையால ஈஶ்வரசத்தியுங் காலமும கர்மமுமன்றி நிய தித்தத்துவமென்பது ஆன்மாக்களுடைய போக +நியாமகமாக வு ண்டாகவேணும —

+ நியாமகம - ஏற்பாடு

ததுக்தம் பௌஷ்கரே — ஹோத்ராயஹி ப்ரவ்ருத்த
ஸ்ய கர்மாதித்ர்யாஷ்ய ப்ரவ்ருத்திஷு । கர்த்ருணா ராஜ்ஞா நா
தம் ஹிமாவஹாஸ்ணஸதி ॥ தத்ராபி ப்ரவ்ரு
த்தேயம் நியதிஸ்ஸ்வஸ்மாத் ஸதி । நத்து ஷியதேநா வி
ஹா ராயாவ்யக்ருணா ॥ ப்ரவ்ருத்தா ஶிக்ஷா தத்ரத
பாரக்ஷேஷ்விவ தேவிஜா: । கவிஹோத்ஷ்வ நி
யந்தம் நியோஜயதி ஸாபவாசு ॥ ஸாஜ்ருதே ஷேவ
நேஹாதேஷ்ருஜ்ருநேஷா கதாசந । யச்சா நஹ
வேதேஷ்ய ஸம்ஜ்ஞாஜ்ருத:பரே: ॥ ராஜாஜ்ஞா ஜ
ஷாயத்தக்ஷஜ்யேத ஊஸ்வ: பரே: । க்ருஜ்ருதா
நீதயேவ ராஸம்ஜஸ்ய நாஶிநீ ॥ கநயா நிய
க்கம் தத்த யச்சீரேஷ்ஜீ யாதிகழ் । கழ வேசாகஸீ ப்ர

க்ரியாக்²யா ஶைவஸ்ய ப்ரபோ³தி⁴கா || ஸத்யம் ந ஶாஶ்வதம்
கிஞ்சிந்நியதிர்வ்யயாந்த: | தத்ஸ்வபா⁴வா ஶிவேச்ச²யா
ரது³லைவ ப்ரவர்த்ததே || நகஶ்சித் ஸ்வ ஸ்வம் ப்ர-
ஸ்வாம் ஸ்வாபா⁴ம் யதி³ தஜ்ஞக்தி | கஶ்சித்ஸ்வார்ச் க்ருஷீவ த்த
ஸ்வாத்மகஶ்சித் ப்ரியாஶக்தே || கலைக்யாதி க்ருதகஶ்சித்
க்ருஷ்யாத்³யம் தத்ஸ்வதந்த்ரயத் | தத்கஶ்சித் கர்த்ருத்வா ந
வ்யாப்தம் த்³ருஶ்யதே ஸ்வீகாரா: || வாக்யத்³வி ஶாஜ்ஞா
ஜ்ஞாத்³ருஷ்டாஞ்ஞாவிஷ்டோத²த: | தேச ப்ரயோஜ்ய க
த்தாரோ ஸம்ஜ்ஞேத க்ருஷிஜம் ஸ்வம் || க்ருஷிகர்த்தா
ரஜ்ஞாத ஸ்வகஶ்சித் ப்ரகாஶதே | யதா²ஸ்வயம் க்ரு
தோயாமோ யஜ்ஞாநஸ்வாபா⁴: || தஸ்மாதே³வ ப்ரத்
கர்த்தார ஸ்வதா நப்ரேக்ஷ த்³ருஷ்டேஷு | வக்ஷ்யா
தவிஶேஷ்டா ஶாஜ்ஞாஜ்ஞா யத்ர வித்³யதே || தத்ரவஶ்ய
ஞ்சாத்கஶ்சித்ப்ராப்தம் தத்க்ருஷிஜம்ஸ்வம் | கிஞ்சு
த்³ருஷ்டாந்தகம் கஶ்சித் வித்³யதே பலவத்தரம் || ஸ்வம் தத்³
நாஸாமோண ஸம்ஜ்ஞேத தே ஶநீஸ்வரா: | தஸ்மா
ஞ்ஞியதி தத்ஸ்வஞ்ச ப்ரஸாம் மோஹரியாஶக்திகி ||

அயர்விலாக்கலை பினரேருணறிசசிறிதேயாணவ மொதுக்கி
ச் சித்தின செயல்புரி கிரியாசத்தி தெரிவிக்கும் - சோம்புத
லற்ற கலாதத்துவம பிறகுண்டாய், ஆணவத்தைச்சிறிது நீக்கி
ஆன்மஞானவியாபாரசத்தியை விளங்கப்பண்ணும்.

சித்ரூபமாயிருக்கிற ஆன்மாவை கலாதத்வம் பிரகாசிப்பிக்
கவேணுமோவெனனில்? ஆன்மாக்க ளநாதியே ஆணவத்தி

ஆன்மாவுக்கு விஷயதரிசனத்திலே யாதொன்று¶ கரணம் அவித்தை.

✝ அபிமுகம் - எதிர்நோக்கினது, × கலுஷிதம் - கலக்கப்பட்டது, *ஞாதவம் - அறியுந்தன்மை, — கிராஹ்யம் - விஷயம், ¶ கரணம்-உதவி.

விஷயதரிசனத்திலே புத்தி கரணமாகாதோவெனின்; புத்தியு மான்மாவினாலே கிரகிக்கப்படுகையால் கடகுடியம்போல சடமே, புத்தி ஆன்மாவுக்கு கிராஹ்யமாகையினாலே சக்ஷுகரணமாக ரூபங்களைக்கிரகிக்குமாட்போல, இந்தபுத்தியையும் கிரகிக்கிறதற்கு வித்தைகரணம் அசுவேந-ரேவ சாரதிநா ×பந்தாநகச்சதி என்கிற நியாயமாக, கிரமத்திலே சக்ஷுராதித்துவாரா கரிசிக்கப்பட்ட புத்தியினாலே விஷயமானது நிச்சயிக்கப்பட்டுள்ளளவில், வித்தையினாலே புருஷனானவன் அந்தவிஷயத்தை கிரகிப்பன்.

× பந்தாநங்கச்சதி-வழிநடக்கிறான்

இந்தவிஷயத்தை கிரஹிக்கிறதற்கு புத்தி ஞானமெனகையால், புத்தியேகரணமாகப் போருமெனவில்? உள்ளது. சக்ஷுராதியிந்திரியங்களைப்போலன்றி புத்தியாதி காரணத்திரயங்களும் மனதுசமசயத்தையும், அகங்காரமபிமானத்தையும், புத்திநிச்சயத்தையும் பண்ணுகையால், பதார்த்ததரிசனத்திலே சூரியாவலோகனம்போல, விஷயதரிசனத்திலே யிவைகள் வித்தைக்குச் சஹகாரியாயிருக்கும். ஆகையாற் கலையானது ஆணவத்தைச் சிறிதுநீக்கிஞானக்கிரியைகளைப் பிரகாசிப்பிக்க, இந்தவித்தை ஞானத்தை தக்கலுஷிதம்பண்ணி விஷயதரிசனத்தைப் பண்ணுவிக்கும். இந்தவித்தை ஆன்மாக்களுக்கு இரண்டாம்பந்தம்.

ச்சைந ந மோயஸ்ருத: மேதவ: || வித்யா கலா-
ஷிதாத்மா விஷயே வ்யாயகாத்ரந: | சித்தா ஸா-
ஸ்ராஹ்யோ ந்ருஹ்யா ரவிவஸ் ஸம்ப்ரகா ஶக: ||
போயாத்ரக ப்ரகாஶேத ந தேஷாவி மேதஸ்-
தா | ஹோதா ஸ்வீகரணம் வித்யா ஸம்வித: கரணம் த
த: || கலாவ்ருத்திம் விநேந தஸ்யா ஜ்ஞநயோ: கார்ய-
ஸம்கர: | கலா தோநகாரம் வித்யாஸ் த்ரிதீயோ ஸம்ய
ஶாத்ரநாஸ்தி || கலா வித்யாஸ்வயஸ்வயம் க த ர ர
வோ வகாஶிகா | இதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

*நியதிமூரவிபதின தொழில் நிச்சயிக்கின்றார்*

*நியதி யென்றோன்றி-பின்பு மாயையினின்றும் நியதிதத்துவ முண்டாய்,— கன்ம நிச்சயம்பண்ணி நிற்கும்-தனது கன்மபலமாகிய சுகதுக்கங்களைப் பிறநியதி சம்பந்திப் பிறர் புசியாமற் பிறரவைகளைத் தனது சம்பந்தியா யிருக்கின்ற வான்மாப் புசியாமல் வரையறைபண்ணி நிற்கும்,—அயர்விலாக கலையென்றோன்றி யாணவமொதுக்கிச் சித்தின் செயல்புரிகிரியா சத்தி சிறிதுதெரிவிக்கும் - பின்பு பிரகாசமான கலாதத்துவம் மாயையி லுண்டாய் ஒரு பிரதேசத்திலே மலசத்தி வியாபாரத்தை மறைத்து ஆன்மாவினது புறப்பொருளறிவாகிய ஞானக்கிரியாசத்திவியாபாரங்களைசிறியாதிககமாய்ச் சிறிது விளக்கித்திரும்பித் தற்பொருளறிவாகிய சத்திமத் கர்த்தாவைப் பொருந்திக் கர்த்திருகாரகமென்று பேர் பெற்று நிற்கும்.— வித்*

தை யுடர் கலை யதனிற்றோன்றி யறிவினை யுதிக்கப் பண்ணும் - பினபு வித்தியா தத்துவந் கலா தத்துவத்தி லுண்டாய்க் கலையினுலொரு பிரகாரம் விளக்கப்பட்ட ஞான சத்தி வியா பாரத்தை மலவாசனைபோக்கி விளக்கிப் புறப்பொருளறிவா கிய சத்தி காரணத்தைப்பொருந்திக் கரண காரக மென்று பெ யர் பெற்று நிற்கும்

## சிவஞானயோகியருரை வருமாறு.

நியதிதத்துவம் அக்காலத்தின பின்னுக மாயையினின்று நதோன்றி, அவரவர் செய்த கன்மம் அவரவரே நுகருமாறு நி யமிக்கும் அதனபின அம்மாயையினின்றே கலைதோன்றி ஆண வத்தை யேகதேசத்தினீக்கி, ஆன்மாவின கிரியாசத்தியை விள க்கி வினைக்கீடாக வரும போகத்தற் செலுத்தி நிற்கும். அக்க லையினின்றும வித்தை தோன்றி அவ்வான்மாவினது ஞானசத் தியை ஏகதேசத்தில் விளக்கி அகனைகட்செலுத்தி நிற்குமென பதாம்

## நிரம்பவழகியருரை வருமாறு.

மேல் நியதிதத்துவமுங் கலையுங் காரியப்படுகிற முறைமை யும், கலையிலேவித்தைதோன்றிக் காரியப்படுகிற முறைமையு ம ருளிச்செய்கிறார்.

நியதிபின்றோன்றிக்கன்ம நிச்சயம்பண்ணி நிற்கும்-நியதி தத்வமானது காலத்தின் பினபுதோன்றி ஆன்மாக்கள்செய்த கன்மத்தினளவானன்றி யேறக்குறையப் போகாதபடி யதுதியி

பாஞ்சராத்திரம் வேதாந்தம் இவ்வாறும் வேதசம்பந்த மா
தலாற் பின்னாற் கூறினார்.

பதஞ்சலிபகவான் சொன்ன பாதஞ்சல சாத்திரம், பிரகி
ருதியும் பிராகிருதமும் ஆன்மாக்களும் பந்தமோட்சமா யிருக்
கும், இந்த ஞானத்தாலு மாதிபோகமும யோகபரிபாகமு மெ
ன்று மிருபத்தைந்து தத்துவமாக வீசுரனொருவனுளன. இவனுக்
கான்மாக்களிற் காட்டில் நின்மலமான சித்தமென்று பெயரா
யுடைத்தாய், கேவலஞ் சாத்துவிகமான விக்கிரகத்தை யுடை
யராய், ஆன்மாக்களுக்கு ஞானோபதேசகரா யிருக்குமென்றறி
கையே முத்தியாதலால், புருடதத்துவப் பிராப்தியே பின்னற்
கூறினொன வறிக

வாசுதேவா சொன்ன பஞ்சராத்திரம், குணதத்துவத்து
க்குமே லிருபத்தஞ்சாந் தத்துவம வாசுதேவனென்ப தொருப
தார்த்தமே பரதத்துவம், அதைப் பரதத்துவத்தினின்றுஞ் சிருட்
டினை அநிருத்தன மகாதத்துவசன இரௌகிணேயன என்று
நாலு கூட்டமாக ஜகத்தையுண்டாக்கிற நிமித்தமாகப் பிறக்
கும். இந்த நால்வராலுஞ் ஜடமாயு மஜடமாயும் வருகிற விந்த
வத்துக்களெல்லாஞ் சிருட்டிப்படும். அந்தப் பிரகிருதியைச் சி
த்தாக்கு மசித்துக்கும் வேறுகவறிந் தந்தச் சாத்திரத்தினவழி
தீக்கையைப்பெற்று நாராயணனைப் பூசைபண்ணி யந்தச் சொ
ரூபத்திலே லயிக்கிறது மோட்சம்.

கபிலாசொன்ன சாங்கிய சாத்திரம், பிரகிருதி நித்தியம்
அவ்வியாபகஞ் ஜடரூபமா யெல்லாத்துக்குங் காரணமாய்
சத்துவாதி குணங்களின சாம்யமான வவத்தா ரூபத்தமாயிரு
க்கும் பிரகிருதியிற்காட்டி லனனியராய் நித்தியராய் வியாபக
ராய் மூர்த்தரா யறிவானன்றி யறிவுமாத்திரமாயிருப்பார்கள்.
ஆன்மாக்களிவர்களை யிருபத்தஞ்சாந் தத்துவமென் றறிந்த

விவேகஞானத்தா லிவனிடத்துண்டாய விலற்றைப் பெற்ற மோட்சமெனறும், ஆன்மாவைக் காட்டி லன்னியமாக வீசுரனென ஒருவனில்லையென்றும், சிலர் பிரகிருதிவசத்தாற் காரியத்தினிடத்திலே சொன்ன பரமகாரண புத்திமைப் பண்ணுகையாலும், இவர்களுக்குக் குணதத்துவத்துக்கு மேலுண்டான தத்துவமில்லாதபடியாலும் புருடதத்துவப் பிராப்தி.

வேதாந்திகள், பரமபிரகிருதியாகிய பிரமமே பரமார்த்தமாகவுள்ளது, இந்தப் பிரமத்தினிடத்திலே நின்றுஞ்சீவான்மாக்களும் பிரபஞ்சமுந் தோன்றும். மற்றுண்டானதெல்லா மசத்தியம், அஃதெனபோலவெனனில்? சுத்திகையினிடத் திரசதபுத்தி பண்ணுமாறுபோல் ஜகத்துக்கு உபாதான மாயையென்பது தான பிரமத்தைப்போலச் சத்தியமுமன்று, சசவிஷாணம்போல அசத்தியமுமன்று, இம்மாயைக் காட்டில் இலக்கணமான பிரமசொரூபத்தை வேதாந்த ஞானத்தினாலே யறிகையாற் புருடதத்துவப் பிராப்தியை யடைவதே மோட்சம்.

வேதவியாசர் சொன்ன இதிகாச பாரத பௌராணியர்கள், இந்தப் புராணத்தி லிருபத்தஞ்சாந் தத்துவமாக வான்மாவையும், இருபத்தாறாக வுருத்திரனை, இருபத்தேழாந் தத்துவஞ் சிவனென்றுசொல்லி, இப்படியே பதார்த்த விவேகம்பண்ணியறிகிறதே முத்தி. இவர்களுக்கும் புருடதத்துவப் பிராப்தி. இச் சைவ பௌராணிகர், பிரகிருதி முதலிய தத்துவ சமூகங்களைப் பிரகிருதி புருடராலே யதிட்டிதாவாக வறிந்து, அதற்கு மேற்பட்ட வீஸ்வரனைச் சாலோகாதியான கணேசுரபதப் பிராப்தியை யராகதத்துவத்தி லடைந்திருக்கிறதே மோட்சமென்பர்கள்.

பாசுபத சாத்திரம், ஆன்மாக்கள் பலராய், வியாபகருபமாய், நித்திய ரூபமாய், காரியகாரண யோகத்தாலே பிறந்த

ஞானத்தையுடையராய், ஒருவர்க்கொருவர் பின்னமாயிருப்பர்கள். இவர்களுக்கு மாயாமலமன்றி யாணவமலமில்லை. இந்த மாயா மலத்தாலுங் கன்ம பாசத்தாலுங் கட்டுப்பட்டதனாலே யிருவினைகளையும் அனுபவித்து வைராக்கியம்பிறந்து, இந்தச்சமய சாத்திரம் பிரசாபத்திய முதலிய பதினாறுளே யொன்றின்வழி தீக்ஷையைப்பெற்ற வான்மாக்களிடத்திலே சிவனுடைய ஞானமானது சங்கிரமிக்கும். அஃதெனபோலவெனில்? யாதாமொரு புடைவையிலே யோலைப் பூமுதலியவற்றைப் போட்டு வைத்துவிடத் தந்தவாசனை யதிலே பற்றினாற்போலச் சிவனிடத்துண்டாய ஞானமுங் குணமுமுண்டாம். இவனிடத்திலே கொடுத்தாலவனென்ன செய்வானெனில்? புத்திரனிடத்திலே குடும்ப பாரத்தை வைத்துத் தான் சன்னியாசம் பண்ணுமாறுபோலச் சிவனுந் தனனுடைய வதிகாரஞ் செய்கிறத்திலே யுபாதிபிறந்திருப்பன. இந்த ஞானத்தினாலே மாயையைப் பொருந்தியிருப்பர்கள்.

மாவிரத சாத்திரம், ஆன்மாக்களை முன்புபோலக் கொண்டு ஆணவங் கன்ம மாயை இம்மூன்றையுங் கொண்டு ஆன்மாக்களுக்குச் சங்காரதிசையில் ஞானசத்தி யுள்ளதாய்க் கிரியாசத்தி யில்லையென்றினி வைராக்கியம்பிறந்து, இந்தச் சமயசாத்திரமாகிய லயாருண முதலிய வொன்பதி லொன்றின்வழி தீக்கித்தராய்; அதன்வழிநின்றனுட்டித்தவாறே சித்தாகிய சிவனிடத்தின் மலத்தையுடைய வான்மாத் தோயவுறுமென்னு மதியுண்டாகையால் வித்தியாதத்துவத்தைப் பொருந்தி யிருப்பர்கள்.

காபாலசாத்திரம், முற்கூறினபடியே யான்மாவிலக்கணமும் பந்த விலக்கணமு முண்டென்றும், அந்தக் காபாலர்க்குப் பஞ்சருசாத்த முதலிய சாத்திரங்கள் பதினாலு ளொன்றின்வழி தீக்ஷைபெற்றதன்வழிநின்றனுட்டித்தவர்கள், ஒருவ

ளைப் பேயானது பிடித்தவிடத் தெப்படி யவன் வசமின்றி யாவேசத்தின் வசமாக விருந்தாற்போல, இந்த வாணமாவிடத்தே சிவனுக்குண்டான சர்வஞ்ஞத்துவாதி குணங்களு மப்படியாவேசிக்கு மறிவை யுடைத்தாகையான, மாயையி னதோபுடத்தைப் பொருந்தியிருப்பார்கள்.

சுத்த வாமதந்திரம், இந்தச் சத்திதத்துவத்தில் நிவர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி இந்நாலு புவனத்தடையே, சதாசிவ நாதனுருடைய வதோமுகத்திலே, கிழக்கு முதலாகக் கூறுடந் தட்சிணம வாமம் பூததந்திரானுட டாதாவாகச் சத்தித்துவ நிர்வயமாதலால் சாதாக்கிய தத்துவத்தி லிருப்பர்களென வறிக.

சிவனதுமேலான முகத்திற் றோற்றிட சித்தாந்த மிருபத்தெட்டுந் திவ்வியாகமங்கள, இம்முப்பத்தாறு தத்துவத்தையு மங்கீகரிக்கையால்; எமதுகாத்தா விவாகளைபபோ லன்றித தத்துவாதீதமெனவறிக.

இதனை யாகமங்களிற் பேதித்துக் கூறும். அஃதாகமபேதத்தால் வந்ததெனவறிக. (௭௩)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலு நாலுபூதங்களுடைய கூட்டமாகியாக அந்யசமயிகள்நிற்குந் தத்வங்களை யுரைத்ததல்.

மொய்தரு பூதமாதி மோகினி யங்கமாகப் பொய்தரு சமயமெல்லாம் புகனறுநின்று புகிடும்-நாலுபூதக கூட்டங்களாகியாக மோகினியாகிய அசுத்தமாயா தத்துவங்களுக்குள்ளே அந்தத்திலே யுண்டான புருஷதத்துவ பரியந்த மளவாக விவ்வளவே தத்துவமென்றும், இந்தத் தத்துவங்களி லதிஷ்டாக

தேவதைகளை பரதத்துவமென்றுஞ் சொல்லி, அதற்கேற்ற சாஸ்திரமார்க்கத்திலே நின்று; தேகாந்தத்திலே யந்தந்த தத்வங்களை யடைவார்கள். அந்தந்த தத்துவங்களை யடைந்தபேர் காலாந்தரத்திலே திரும்ப ஜநிக்கையினாலே, அந்தமுத்தி பொய்யே ஆகையால்; பொய்தரு சமயமென்றது.

மோகினியந்த மென்றதற்கு அசுத்தமாயாந்தமாக முப்பத்தொரு தத்துவமு மெனனப்போதும், புருஷதத்வ மட்டென்று சொல்லவேண்டுவதில்லை யென்னில்? புருஷதத்துவத்துக்கு மேல் சததிநிபாததைத யுடைத்தாய், அதனாற் சிவதீட்சையைப் பெற்று சர்வஞ்ஞத்துவாதி †யபிவியத்திபான பேருக்கே பிராப்யமெனனும் ஆகமவசனத்தால் அசுத்தமாயாந்தமெனபது விருத்தம்.

†அபிவியத்தி-பிரகாசம்.

𑌪𑍌𑌷𑍍𑌕𑌰𑍇 - 𑌨𑌹𑌿 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌲𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌉𑌪𑌾𑌦𑌾𑌨𑌸𑌂
𑌭𑌵𑍇𑌽𑌪𑌿𑌜𑌾𑌃 । 𑌪𑌾𑌞𑍍𑌚𑌰𑌾𑌤𑍍𑌰𑍇𑌽𑌪𑌿 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑌿𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂
𑌤𑍇𑌷𑍁 𑌕𑌥𑌿𑌤𑌾𑌪𑌰𑌮𑍍 ॥ 𑌪𑍁𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌷𑍍𑌠𑌯𑌾 𑌨𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌰
𑌶𑍇𑌷𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌕𑌾𑌰𑌕𑍇 । 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌤𑍁 𑌨𑌨𑍍𑌦𑌿𑌨𑌂 𑌯𑌾𑌂𑌶𑌕𑍍𑌤𑌿𑌂
𑌪𑌤𑍍𑌨𑍀𑌮𑌾𑌪𑌾𑌦𑍍𑌯 𑌤𑌦𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ॥ 𑌶𑌿𑌵𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌭𑌿𑌷𑍇𑌕𑍋𑌦𑍍𑌭𑌵
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑌂𑌯𑍋𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌵𑌤𑍍 । 𑌶𑌿𑌵𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌿𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾
𑌨𑌂 𑌶𑌿𑌵𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌕𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥ 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌂
𑌮𑍋𑌹𑍇 𑌨𑌤𑍍𑌵𑌵𑌶𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤𑌃.

ஆகையால் புருஷதத்துவ மந்தமென்னுமல் மோகினி யந்தமாகவென்று மூலபாடத்திலே சொன்னது, மோகினிகாரிய

க்களுக்குள் அந்தமான புருஷகத்துவ பரியந்தமென்று ஆறுபெ யராகக் கூறியது.

பொய்தரு சமயிகளுடையும் பதமு மதற்கேதுவான ஞா னபேதங்களுமாவன? புதிப பிரகாச பேதத்திலே யுண்டா ம் ஞானம் பத்துவிதம். அவர்களுக்கு † பிராப்ய ஸ்தானமு ம்பத்துவிதம். அவையாவன?

† ப்ராப்யம் - அடைதல்.

சார்வாகா-பிருதிவி யப்பு தேஜோவாயு விந்த நாலுபூத மே யுடையதென்றும், இந்த நாலுபூதத்தினுடைய சம்யோகத் திலே தேகமுண்டாம், அந்த தேகத்திலே போதறிவுண்டா ம்; அந்ததேகமே ஆன்மா என்பதாதி ஞானத்திலே தேகாந் தத்திலே பூததைத யடைவாகள.

ஜ்யோதிஷர் - ஆகாசங் கூட வைந்தபூதமே யுளளதென றும் ஞானத்தால் தேகாந்தத்திலே நட்சத்திர பதத்தை ய டைவர்கள்.

கௌளயாமளரும் வாமதக்ஷிண மார்க்கராகிய சாக்த கா பாலிக காளாமுகரும் ஈஸ்வரனுணடென்றும்,வேத ¶விருத்தா சாரத்திலே பௌதிகராகிய பிசாசபதத்தை யடைவார்கள்.

¶விருத்தாசாரம் - பெரியோர்நடைக்கு விரோதநடை.

*பௌராணிக ஸ்மார்த்தர்-பூதாண்டத்துக்குக் காரண மான பஞ்சதன்மாத்திரையே பிரமமெனனும் ஞானத்திலே தேகாந்தத்திலே தன்மாத்திரையி லுள்ள புவனத்தை யடை வர்கள.

*பௌராணிகர் - புராணத்தை முக்கியமாகக் கொண் டவர்.

இந்திரியாத்மவாதிகள் - ஞானேந்திரியமே ஆன்மாவென்

னும் ஞானத்தால் தேகாந்தத்திலே அந்த இந்திரிய பதத்தை யடையவாகள்.

நயாயவாதிகள்-மனசு பரிபநதமே தத்துவமென்னும் ஞானத்தால் தேகாநததிலே மநஸ்தததுவ புவனததை யடைவாகள.

வைசேஷிகர்-அகங்காரமே ஆனமாவெனனும் ஞானததால் தேகாநததகதிலே அகஙகாரபுவனததை யடைவர்கள்

பௌத்தர்-ஞானவிருததிபாகிய புததியே ஆனமாவென்னும் ஞானததால் தேகாநததிலே புததிததுவ புவனததை யடைவர்களை.

ஆருகசர்-குணமக ஞானத்தினாலே தேகாந்தத்திலே குணத்துவததை யடைவாகள.

பாஞ்சராத்திரிகள்-பிரகிருதிக்கு மேல் பரமபதத்திலே அரியிருப்பா, அவருடைய சர்வகுண சாமமியதைை நித்தியமாகப் பெறறு அவருடைய சநநிதானத்திலே யிருப்பதே மோக்ஷமெனனும் ஞானத்தால் தேகாந்ததிலே பிரகிருதி தத்துவததை யடைவாகள.

சாஙகியர்-பிரகிருதி புருஷ விவேகத்தைப் பண்ணி புருஷன பிரகிருதியை நீங்கிநிறபதே மோக்ஷமெனனும் ஞானத்தால் தேகாநததிலே புருஷதத்துவததை யடைவர்கள்.

மாயாவாதிசளும-பிரதானததிலே ¶ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிற தனனை அந்த ௦பிரதானத்துக கயமான புருஷனுனென றறிகிறதே மோக்ஷமெனனும் ஞானததால் தேகாந்தத்திலே அந்த புருஷதத்துவததை யடைவர்கள்.

¶ஆக்கிரமித்தல் - அடக்கிக்கொள்ளுதல், ௦பிரதானம்-பிரகிருதி.

கர்மயோகிகளும்-அப்படியே! இவர்களுக குண்டான ஞான ஹேதுவு மெட்டுவிதமாம். அவையாவன?.

ஆதியாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகமெனப் பட்ட தாபத்திரயத்தையு மறிந்து நீங்கினவிடத்தி லுண்டாம் ஞானமொன்று.

இஷ்டமா யிருக்கிறவர்களுடைய உபதேசத்தினாலே யுண்டாம ஞானமொன்று.

தானே பூர்வஜன்ம வாசனாரூபமான சாஸ்திரத்தை ஆலோசனைப் பண்ணுகையினாலே யுண்டாம் ஞானமொன்று.

தத்கம் மதப்பிரவிருத்திகளா யிருக்கிற குருபதேசத்தினாலே யுண்டாம ஞானமொன்று.

†குருமுகேநாசாஸ்திரார்த ¶த்தியயா வசத்தினாலே யுண்டாம் ஞானமொன்று.

தான ஜப தீர்த்த யாத்திரா தேவதா பக்திபாதி சத்கருமங்களினாலே சித்த சுத்தித்வாரா உண்டாம் ஞானமொன்று.

இந்த வெட்டுவிதத்தினாலும ஞானம் சித்திக்குமெனகிறது.

*முன்சொன்ன தசவிதமுத்தி ஸ்தானத்தி லவர்களுக்கும் சரி.—

†குருமுகே- குருமுகமாக, ¶அத்யயனம் - அப்பியசித்தல்.

[illegible]

அந்யத்ராபி - ஹுதபுங்நாத்ர காலக்ஷணாதிநா மாயாகார்யப்ரலய: । குணவ்ருத்த்யா ந சைவ ஸ்யாத்ப்ரவ்யாக்யாநாபிவாதிநாம் ॥ தத்ர தத்ராபி போகேஸ்ய ப்ரஸ்ருதேபி ஸ்யாத்தத இதி । ஆயுர்வேதாதி ஸம்ஸ்காரயோகாதிதாத்வாதிந: ॥ ஜ்யோதிஷ்டோமஸ்ய விதிஸ்த அஶ்வமேதம் தாராப்ரலயத: । கலௌ ஸ்ப்ருஶா த்வாதேந விநாஶிகாத்யவஸ்திகா ॥ இதி.

அந்யத்ராபி - ஆயுர்வேதா: கலௌ ஜ்யோதிஷா ஸஜாதிஸ்வதாஷிதா: । வாதுக்ஷிண காமஸ்யாதி ஶாஸ்த்ரவாதிவதூஷிதா இதி.

பௌஷ்கரே - தந்த்ராதிஸாஸ்த்ராஸ்வ பக்ஷ்யார ஹிம்ஸ்யாபரே । வைஶேஷிகாஸ் ஸாங்க்யாஶ்ச பாஞ்சராத்ரா ந்யாயவாதிந: ॥ பௌத்தஜைநஸ்மிருதா லோகாயதிகேஷு வாமதாஸ்ஸிதா: ॥ ப்ராக்ருதா: பாஞ்சராத்ராஸ்ச ந்யாஸ்தே ப்ராக்ருதஸம்ஸ்ர: । வேதாந்தஜ்ஞாஸ்ச ஸாங்க்யாஸ்ச யோகிந: பாஶுபதா: ॥ ஏதா ஸ்வாயம்புவே நைவ த்ருஷ்டா ப்ரயோஜநா । ப்ராக் ஸாங்க்ய வைஶேஷிக மார்கம் ஜ்ஞாநம் ப்ரவதந்தி । ஸைகாதஶ

விஶிஷ்யதே ॥ ஶுத்தவித்யாதிதத்த்வஷட்கே ஸமஸ்த விஷய: । அஶுத்தாஸ்தி தஸம்வத்ஸராம் விஷயவாஸநா ஸதநுதே.

மெய்தருஞ் சைவமாதி யிருமூன்றும் விந்தையாதி யெய் துந்தத்துவங்களையும்- (இந்தருக்குப் பொருள் கோள) அறிவிருமூன்றும் வித்தையாதியும் பெய்துதத்துவங்கள் மெய்தருஞ் சைவமெய்தும்-புருடதத்துவத்துக்குமேல் விராகமுதலான வாறுதத்துவங்களையும், சுத்த வித்யாதத்துவ முதலாகப் பொருந்தும் அசுத்தத்துவங்களையும், சத்பமோக்ஷத்தைப்பெறுஞ் சைவர் உண்டென்று சாதித்து நின்று, தேகாந்தத்திலே பசுத்துவத்துக் கேடாக அபரமுத்தி ஸ்தானமான விந்துதத்துவங்களைப் பொருந்துவர்கள்

×தீவ்ரசத்தி நிபாதராய் குருவினாலே நாசசிரியா குணரகிதமுமாய் ஆதாரமுமன்றியிலே ஏகர்த்தசேந்திரியங்களினாலும கிரஹிக்கப்படாததுமாய் — அநுமானாகம்யமாய் சர்வ தத்துவாதீதமுமா யிருப்பது யாதொன்று, அதிலே+ யோசிக்கப்பட்டவன் பரமுத்தனென்று சைவாகமசித்தம்.

×தீவ்ர-வேகம், —அநுமானாகமயம - அநுமானத்தினால் அறியப்படாதது, +யோசிக்கப்பட்டவன்-கூட்டப்பட்டவன்

தத்ரைவ ஸ்வாவகாரிகாயாம் - அத்ராபி தீவ்ர ஶக்த்யா மஹத்யா நவஜாயதே । தத்ஸ்தைவ யோஜிதோ தத்ர பரஸ்த்யா ஸ்வபக்ஷதி.

சிவதத்துவம் சிவனுக்கே தத்துவமொழிய ஆன்மாக்களுக்கு பிராப்பியமொழியச் சோதநியமான தத்துவமல்லவெனவில்?—

ஒன்றுமின் றெம்மிறைக்கே-எம்முடைய பதியாகிய சிவனுக்கு ஒருதத்துவங்களுமில்லை; அவன் தத்துவாதீதனென் றிதன் பொருள்.

சைவமாதி யிருமூன் றும் விந்தையாதி என்ற பதத்துக்கு, சைவம் பாசுபதம் வாமம் காளாமுகம் பைரவம் மகாவிரதம் என்றிந்தவாறு சமயங்களும், சுத்தமாயைக்கு மேல் சுத்தவித்தையாதியாக வைந்து தத்துவத்தையு மடைவார்களென்ன வாகாதோவெனனில்? ஆகாது. அப்படிச்சொல்லில் சிவாகமவிருத்தம். அதெவ்வாறெனனில்? வாமமாகிய சாக்தரும், தட்சிணமாகிய காளாமுகரும், பிசாசபதத்தை யடைவரென்றும்; பாசுபதிகள் அசுத்தமாயா தத்துவத்தை யடைவரென்றும் ஆகம வசன மிருக்கையால்

தக்ஷிணௌ ஷாக்தௌ - வாமதக்ஷிண காலாமுகாஃ பி
ஸாசத்வம் ப்ரயாந்தி ॥ பாஸுபதாஸ்து மாயாயாமிதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மறுசமயிகள் முத்திஸ்தானங்களை வகுத் துரைக்கின்றார்.

மொய்தரு பூதமாதி மோகினி யந்தமாக - கூட்டமாயிருக்கின்ற பிருதிவி முதலிய பூதங்கள் முதலாகக் காரியலக்ஷணையிருக்கிற மோகினியென்று சொல்லப்பட்ட புருஷதத்துவ முடிவாக; பொய்தரு சமயங்கட்கு புருஷதத்துவத்துக்கு மேற் பிரவேசமில்லாமையால், மாயைமட் டென்றால் மாறுபடும் — பொய்தருஞ் சமயமெல்லாம் புக்குநின்றிடும்-உலோகாயத மதமுதல் விவர்த்த வேதாந்த மீறுகு முத்திப்போலி, புறச்சமய

மெல்லாம் பிரவேசித்திருக்கும்.—புகனற மெய்கருஞ் சைவமாதி யிருமூன்றும்-சிவனே தெய்வமென்று கொள்ளலாற் சத்திய மாகுஞ் சைவம் பாசுபதம் மகாவிரதம் வாமம காளாமுகம் வயிரவமென்கின்ற வுட்சமயங்களும, அதிற்பேதங்களும்,—வித்தையாதி பெய்த தத்துவங்களேயும - சுத்தவித்தைமுக விராக தத்துவாகதம மதறியதீபமாதலால், இருமபவெடுத்துச் சுத்தவித்தையாதி சிவாந்தமாயிருக்கின்ற தத்துவங்களில்; மகாவிரதி முதலாய்ப பொருந்துவாகள் — ஒன்றுமின்றெம்மிறைக்கே - எமது கர்த்தாவினறு சைவசித்தாந்த மார்க்கத்துக்கு.

"சகளே நிஷ்களே சைவ ஸர்வதா வஸமாநதா
ஸாயுஜ்யமிதி ததபுரோகதம ஸாரூப்ய மூாதகுதல்பதா"

எனறு சிந்திய விசுவ சாரோகதிய வசனமிருக்கையால், சகள சகளாகள நிஷ்கள நிஷ்களாதீத சிவமான ஸ்வரூப மொன்றுமே மோக்ஷமல்லாமல், சடதத்துவங்களினது சமபநத மொன்றுமில்லை யாமே! இப்படி முற்றெருப்புச சிவசாமீபமாகில்,சிவ னிலய போக வதிகாராவஸ்தைகளே யடையும்போது வராஜிகப படாதாகையால்,முத்தசிவானமாவு மடைய வேண்டுமாகலால், பஞ்சகிருத்தியம பண்ணவேண்டும பண்ணுவனென்றும் பண்ணுனென்றும் வெகுவசன விரோதம.சத்தியகாளே! நீ சாற்றியது;விரோதமில்லாமல் விளம்புவோங்கேள். முத்தான ம சிவனிடத்திற் கிரமத்திற் கர்த்திரு சத்தியில்லையென்றால்.

"சித்வ்யக்த்யா சர்வகாத்ர்த்வம் சித்தாநா மீச்வரோயதா
அநயதாகர்த்ருகாகஸ்யா தீஸ்வரஸ்யாபிஸித்தவத்"

இதி மோக்ஷகாரிகா வசநத்தினாலே, கர்த்திருத்துவஞ் சிவனுக்குமில்லையாய்,ஸ்வரூபாங்கக் குறைவருமாதலாற் கர்த்திரு சத்தியுண்டு. அது சர்வகர்த்திரு சத்தி யல்லவென்னில்? சிவனது கர்த்திரு சத்தியுஞ் சர்வகர்த்திரு சத்தியல்லவாமென்று

சர்வகிர்த்திய மில்லாதே போம். ஆகையால், முத்த சிவான்மாவிடத்திலுஞ் சாவகர்த்திரு சத்தியுண்டு. அப்படி நீருண்டென்று சொல்லில்? சிவனு லேவப்படா னென்றுகொண்டு, சிவனுக்குச் சர்வகர்த்திருத்துவ பங்கம்வரும். 'முத்தானுனபாதி' என்னும் வசனவிரோதமும் வரும். அதில்லை, ஏவயோக்கியனையேயாதிருந்தாற் சர்வகர்த்திருத்துவ பங்கம். மலமில்லாமையால் ஏவயோக்கிய னல்லாமையால், அது வில்லை. ஏவயோக்கியமில்லானை யேவினாற் சிருட்டி முதற் கிருத்திய மவனைக் குறித்து வருமென்றதனாற் சிவனுக்குச் சர்வஞ்ஞத்துவ பங்கம் வரும். அதனாற்சர்வகர்த்திருத்வ பங்கமுந்தானே வரும். "முத்தானுனபாதி" என்பதற்கும் பொருள், அபரமுத்தர்களை ரக்ஷிப்பனென்று பொருளாதலால், வசனவிரோதமுமில்லை ஆகையால், முத்தசிவான்மாவுக்குஞ் சாவகர்த்திருத்துவ சத்தியுண்டு சிவனுக்குப்போலவுண்டாகினும் வியத்தமாகாதெனில்? முத்தனுக்கும் பெத்தனுக்கும் விசேஷமில்லாதே போம் சத்தி நிரமசமாதலால் ஞானபாகத்தி லபிவியத்தியும், கிரியாபாகத்தி லனபிவியத்தி யென்று சொல்லவும் படாது. ஆகிலும், முன்சொன்ன விருவருக்கும் விசேடமில்லையாமாதலால், அபிவியத்தி சர்வகர்த்திரு சத்தி சிவனிடத்திற்போல, முத்த சிவான்மாவினிடத் துண்டு. சர்வகர்த்திரு சத்திக் கபிவியத்தியும், சர்வகிருத்தியத்திற் பண்ணுதலாகிய விழுதல். ஆதலால்வியத்தமானாலும், வியத்தமல்லாததுபோலப் பண்ணுமறு சும்மா விருக்குமென்பதடாது பண்ணுமென்றுல் பின்னசங்கற்பமில்லாமையால், அநேகேஸ்வர வாதம் வருவதுமின்று. பின்னைப் பண்ணப்படுமென்றால், சிவத்துவாபிவியத்தி லக்ஷண ஸ்வப்பிரயோசனஞ் சித்தித்துப் போதலால், தனக்குப்பிரயோசனத்தின் பொருட்டுப் பிரவிர்த்திமானுகான். எக்காலத்து மிளப்பற்றிருக்கும் சிவனெங்கும் வியாபித்து, எக்

காலமு மிடைவிடாமற் பிறர் பிரயோசனம்பண்ணி வருதலா ல்; பிறர் பிரயோசனத்தின் பொருட்டுப் பிரவிர்த்தி மாறுகா ன். சர்வ கர்த்திரு சத்திக் கபிவியத்தியுஞ் சர்வகிருத்தியத்திலு ஞ் சங்கற்பமெனகின்ற விழுதலென்று முன்சாற்றினேம். இ ருப்பவது சிவசங்கற்பத்தி னின்றுங் குறைத்துச் சுருக்கப்ப டாதாகையால், சிவனுக்குக் கிருபாசம்சித்த பஞ்சகிருத்தியம் முத்த சிவானமாவுக்குப பிரிந்த பின்னகிருத்திய பலமின்றிப் பி ன்னபலர்ச்சநீய சஞ்சித்த பஞ்சகிர்த்தியமாகையால், விரோத வேற்றுமைக ளின்று. இதற்குச் சிந்திய விசுவசாதாக்கிய முத லாகமங்களில வசனங் கேட்டறிக.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனி ஏழுசெய்யுளான நாலாயகூற்றைத் தெரித்துணர்த் துகின்றார்.

சாருவாகமுதல் ஐக்கியவாத சைவமீறாகிய புறப்புறச்சம யமும புறச்சமயமும அகப்புறச்சமயமு மெனனும் முக்கூற்றுச் சமயத் தெய்வங்களெல்லாம், பூதமுதல் அசுத்தமாயாதத்துவ மீறாக, ஒவ்வொரு தத்துவங்களி னிலைபெறும. சிவாகமங்களுட் கூறப்படும் "ஏகனேக விருளகரும மாயையிரண்டு" என்னு மா று பொருட்கும், உண்மைத்தன்மை விளக்குகின்ற சைவமென ப்படுந் தலையாகிய அறுவகைச்சமயத் தெய்வமாய் நின்ற அதிகா ர போக லயசிவபேதங்கள்; சுத்தவித்தை முதலிய ஐந்துதத்து வங்களுள் ஒவ்வொன்றி னிலைபெறும். சித்தாந்தசைவத் தெய் வமாகிய சுத்தசிவம், இம்முப்பத்தாறையுங் கடந்து நிற்குமென் பதாம்.

அமலனுதலைத் தெரித்துணர்த்தியவாறு.

அவ்வத்தெய்வங்க ணிலைபெறுந் தத்துவமே அவ்வச்சமயத்தார்க்கு முத்திதான மென்பதூஉம் இதனாற் பெறுதும்.

அவ்வவற்றின் மேலுள்ள தத்துவங்கள் அவ்வச்சமயத்தார்க் குணர்ச்சிசெல்லாமையின், அவ்வத்தத்துவத்தி னளவின்றி அவருக்கு மேற்சேறல் கூடாமை யறிக.

சமயதெய்வங்களைச் சமயமென் றுபசரித்தார்.

இருமூன்றுமென்றதுமது.

ஆணவமலத்துண்மை கொள்ளமாட்டாத ஐக்கியவாதசைவனை நீக்குதற்கு மெய்தரு சைவமென்றும், ஆதியிருமூன்றென்றும், விசேடித்தார்.

பாடாணவாத சைவமுதற் சுத்தசைவமீறாகக்கிடந்த வேறுனுள், பாடாணவாதத்திற்கும் பேதவாதத்திற்குந் தம்முள் வேற்றுமை சிறிதாதல்பற்றி, அவையிரண்டனையு மொன்றாகவைத்து இருமூன்றெனத் தொகைகூறியவாறு.

இவ்வாறன்றி யுரைப்பனவெல்லாஞ் சிவாகமங்களோடு முரணுமென்றொழிக.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

இகத்தத்துவங்கள், புறச்சமயத்துக்கு இத்தனை உட்சமயத்துக் கித்தனையென் றருளிச்செய்கிறார்.

மொய்தரு பூதமாதி மோகினி யந்தமாகப் பொய்தரு சமயமெல்லாம் புக்குநின்றிடும் புகன்று - ஆன்மாக்களைக் கன்மத்துக் கீடாகச் செறிந்துநிற்கிற பூதங்கள் முதலாக அசுத்தமாயை யீறாக, அசத்தியத்தைச் சத்தியமாகச் சாதிக்கிற புறச்சம

யங்களெல்லாம், இவையொழியவில்லை யென்றே சொல்லி, இவையிற்றிலே பொருந்திநிற்கும்.— மெய்தரு சைவமாதி யிருமூன்றும் வித்தையாதி யெய்து தத்துவங்களையும் - சிவனே தெய்வமென்னுஞ் சத்திபதத்தை யுடைத்தான சைவமுதலான வட் சமயங்களாறும், சுத்தவித்தை முதலான சுத்த தத்துவங்களைங்கையும் பொருந்தும்.—ஒன்றுமின்றே மறைகளே-அவனே தத்துவாதீதன் ஆகையாலே, இவையொன்றுமில்லை யெம்முடைய தத்தாவுக்கு.

இதனாற்சொல்லியது, புறச்சமயங் கொள்ளப்பட்ட தத்துவ முப்பத்தொன்று மென்றும், உட்சமயங் கொள்ளப்பட்ட தத்துவ முப்பத்தாறு மென்னு முறைமையு மறிவித்தது.

"சுத்தத்துவம்" "ஐந்தசுத்தம்" "தத்துவரூபம்" "தத்துவமென்" "மொய்தரும்" இவையஞ்சு திருவிருத்தமும் ஆன்மாக்கள் செய்த கன்மத்தைப் புசிக்கைக்குத் தத்துவ முப்பத்தாறும் பலபிரகாரமாக நிற்குமென்று சொல்லியது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

பொய்தரு சமயமெல்லாம - சாருவாகன்முதல் ஐக்கியவாத சைவமீறாகிய புறப்புறச்சமயமும் புறச்சமயமும் அகப்புறச் சமயமுமென்று முக்கூற்றுச் சமயத் தெய்வங்க ளெல்லாம,— மொய்தரு பூதமாதி மோகினி யந்தமாக - நெருங்கிய பூதமுதல் அசுத்தமாயா தத்துவ மீறாக,—புக்குநின்றிடும் - ஒவ்வொரு தத்துவங்களி னிலைபெறும்.—புகன்ற மெய்தரு சைவமாதி யிருமூன்று-சிவாகமங்களிற் கூறப்படும் "ஏகனேக னிருள்கரும மாயை யிரண்டு" என்னுமாறு பொருட்கு முன்மைத்தன்மை விளங்குகின்ற சைவமெனப்படும் தலையாகிய அறுவகைச்சமயத்

தெய்வமாய்நின்ற அதிகாரபோக லயசிவபேதங்கள்,— வித்தை யாதியெய்து தத்துவங்களேயும் - சுத்தவித்தை முதலிய ஐந் துதத்துவங்களி னுவ்வொன்றி னிலைபெறும்.— எமமிறைக் கொன்றுமின்றே - சித்தாந்த சைவத்தெய்வமாகிய சுத்தசிவ மிம்முப்பத்தாறையுங் கடந்து நிற்குமெனபதாம்.

இதனுனே யமலனுக்கிலக்க தெரிந்துணாத்தியவாறு.

## மறைஞானதேசிகர் உரை.



ஏகத்துவாதீதனாகிய பரமசிவனறனது காருண்ணியத்தாற்
றனே நவவிதமான திருமேனியைக் கொளவ
னென றுணாத்துகிறுா

சிவஞசத்தி நாதமயிந்துச் சதாசிவந் திகழுமீச,
னுவந்தரு ளுருத்திரன்றுன மாலய னென்னிறனெனறு
ரைப, பவந்தரு மருவநாலிய குருவநா லுபயமொன்று
ய், நவந்தருபேதமேக நாதனேநடிபபனெனபர்.(எச)

(இ-ள) (சிவஞசததி நாதம்விநது—ஏகநாதனேநடிப்பன) நிரதிகாரியான சிவனறனே நிட்களம சகளம நிட்களசகள மென வானமாகக ளறிவுகருப் புலப்படுகையினபொருட டொ னபது விதமான திருமேனியை யொனறி லொனறுகக கொ ண்டு, பஞசகிருத்தியமாகிய பரமானநதத தாண்டவத்தை நடி ப்பன. எ-று.

அநாதிமலமுத்தன் றனது சிற்சத்தி சன்னிதிமாத்திரத் திலே சிவத்தையும, இந்தச் சிவத்திறுயிரத்தொன்றிலே சத்தி யையும், அந்தச் சத்தியி லாயிரத்தொனறிலே நாதத்தையும், அந்த நாதத்தி லாயிரத்தொனறிலே விந்துவையுந் தோற்றுவி

ப்பன. அந்த விந்துவிற் பததிலொன்றிலே சாதாக்கிய மூர்த்தி தோற்றுவிப்பன. அந்தச சதாசிவமூர்த்தியிற் பத்திலொன்றிலே யீஸ்வரமூர்த்தியைத தோற்றுவிப்பன. அந்த வீஸ்வரமூர்த்தியி லாயிரத்தொன்றிலே யுருத்திரமூர்த்தியையும், அந்த வீஸ்வரனுடைய கோடியிலொரு கூற்றிலே மாயனையும், அந்த வீஸ்வரத்திற கோடியிலொரு கூற்றிலே பிரமாவையும் ; இப்படியே யொனபதினமராகிய சாதிகாரியர்களை யடையேயுண்டாககுவன.

இங்ஙனங் கூறிய திருமேனிப் பிரித்தறியுமிடத் தருவநான குருவநானகு உபயரூபமொன்று

இப்படி மூவிதமாகத திருமேனி கொண்டதனு லானமாககட்குப் பிரயோசன மியாதெனில் ? சிவமுதலிய நிட்களரூபநாலுஞ் சிவயோகிகள தியானித்தற் பொருட்டெனவறிக. அந்த நிட்களமான திருமேனியை லிஙக பீடமாகப்பண்ணிப் பூசைசெயயப்படாதபடியாலே நிட்களமுமாயிற்று. பரமமான நிட்களத்துச்சருக் கலையில்லாதபடியாலே நிட்களமெனறூர்.

அவயவஙகளுடனே கூடியிருக்கையாற் சகளமெனறூர்.

பரமாகிய நிடகளமு மபரமாகிய சகளமுங்கூடி மிசிரமாயிருசகையாற சகள நிட்களமெனறூர்.

ஒரு பொருளுக கிரணடு தனமையுணடாகி லிதரோதராசிரய மென்னுங் குற்ற முணடாமென்னில் ? அஃசனறு. மரம்போலச சகளம், அதினிழற்போல நிட்களம், அநத மரத்தண்டாகிய பூச் சகளம், அதனை விட்டு நீங்காதிருககிற மணம்போல நிட்களம்; இவைபோற் சகளமு மகளமுங் கூடிற் குற்றமில்லையெனவறிக.

இத்தச் சகள நிட்களந் தானே போதாதோ ! சகள முண்டாகவேண்டுமோ வென்னில் ? அது தாமிராதியான லோகத்தி

லும், காட்டமுதலிய வற்றாலும், திருமேனிகொண்டு பூசைசெய்து, உச்சவாதிக் கெழுந்தருளி, அங்கங்கே யான்மாக்களை யனுக்கிரகஞ் செய்தற்பொருட்டுச் சகளமாயிற்று. நிட்களத்தினிடத்திற் சகளமின்மைபானுஞ் சகளத்தினிடத்து நிட்களமின்மையானும் மௌனறுகமொனறேயுளதாகையால், அந்தச் சகள நிட்களத்தினிடத்திலவவிரண்டு முண்டாகையால், அதுவே சிறப்புடைத்தெனக் கருதித் தேவாகள முதலாயினோர் சிவலிங்கத்தையே தாபித்துப பூசைசெய்தமையை யாசமததோதினா; ஆண்டு விரிவிற்காண்க.

ஏகநாதன - எழுவாய், நடிப்பன-பயனிலை.

ஏகாரம் தேற்றம்.

இதற்குச சுப்பிரபேதம் மகுடாகமம் காலோத்தாத்து மதிக (எச)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் சகத்தோத்தியுக்ததப் பிரவர்த்தனொனறு கர்த்தாவை திரிவிதமாகச் சொனனதை, உபாதாநோபாதி பேதங்களினாலே யொனபது பேதமாமெனறு முறைமை கூறுதல்.

சிவமெனறுஞ் சத்தியெனறு நாதமென்றும் விந்துவென்றும் சதாசிவமெனறும் விளங்கப்பட்ட ரூபத்தையுடைய மகேஸ்வரன் ருத்திரன் விஷ்ணு பிரமாவென நிவர்க ளொன்றிலே யொன்ருகத் தோனறி, சிவம் சத்தி நாதம் விந்து நாலும் அரூபமும், மகேஸ்வரன் ருத்திரன் விஷ்ணு பிரமா இவர்கள் நாலும் ரூபமும், சதாசிவன ரூபாரூபமும், ஆக வொன்பது பேதத்தையும் சகத்தேகநாயகனுகிய சிவனொருத்தனே தனக்கு ரூபாதிக ளில்லாதிருக்கவும், இந்த ரூபங்களை யதிஷ்டித்துக்கொண்

ஸ ரூபவான்போல நடனம் பண்ணுவனென்று பெரியோர்கள் சொல்லுவாகள்.

ஒன்றாக நின்றே பஞ்சகிருத்தியங்களைப் பண்ணுத லொன்பது பேதமாகுமொன்பது கற்பனு கௌரவமென்னில்? ஆன்மாக்கள் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் இந்த மூன்றுவகைக்கு, சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தம் என்னும் அத்துவத் திரயங்களுக்கும், பிந்து மோகினி மகானென்னு முபாதானத் திரயங்களு முண்டாகையால்; அந்த பேதங்களினாலே பேதமாகக் கூறபபட்டது

அகிலரூபமென்பதொன்றாயிருக்கையிலே நாலுபேதமெவ்வாறெனனில்? காலமும் திக்கும் ஆகாசமும் அரூபமாயிருக்கத் தத் காரிய பேதங்களினாலே பேதமானதுபோல, கிருத்தியபேதங்களினாலே பிந்நமாகக் கூறப்பட்டது. ஆகிலு மரூபத்தில் * தாரதம்மியமையுண்டு.

* தாரதம்மியம் - ஏற்றக்குறைவு

ஆகில் அந்த கிருத்தியபேதங்களுந் தாரதம்மியங்களு மெவ்வாறெனனில்? பரமசிவத்தி லாயிரத்தொரு † அம்சமாக பராசத்தியானது ‡ ஆவிர்ப்பவித்து × அநுக்கிரகபரையா யிருக்கும் அந்தப் பராசத்தி சுத்தமாயையிலே பதிந்தபொழுது சாந்தியாதீத கலையுண்டாம்; ஆகையா லந்தச் சாந்தியா தீதத்தைப் பராசத்தி பரியாயமாகச சொல்லுவார்கள். அந்தப்பராசத்தியி லாயிரத்திலொரு அம்சமாக சத்தாவஸ்தரான சிவனுக்கு இச்சாஞான ஸ்வரூபிணியான ¶ அவிநாபாவ சத்தியுண்டாம். அந்தச் சத்தி சுத்தமாயையை க்ஷோபித்தபொழுது அந்தச்சத்தியில் § சகச்ராம்சமாக நாதமூர்த்தி யுண்டாம். நாதத்திலே நின்றும் சகஸ்ராம்சமாக விந்து மூர்த்தியுண்டாம். நாதவிந்து மூர்த்திகளைச் சிவனுஞ் சத்தியு மநுப்பிரவிஷ்டரா யிருந்

டித்து நின்று சூக்குமமான சத்தார்த்தப் பிரபஞ்சங்களை யுண்டாக்குவர்கள். மூர்த்தி மூர்த்திமானகளுடைய அபேதோபசாரத்தினாலே சிவனுக்கு நாதனென்றும், சத்திக்கு விந்துவென்றும் பேரானது. அந்தச் சத்தியிற் பத்திலொரு அம்சமாக சாதாக்கிய முண்டாம். சிவனந்த மூர்த்தியை அதிப்பிரவிஷ்டராய் நின்று, சுத்தாதத்துவ கிருத்தியத்தைப் பண்ணுவர். அந்தச் சாதாக்கியத்திற் பத்திலொரு அம்சமாக மகேஸ்வரனேற்றி, அசுத்தமாயா கிருத்தியத்தைப் பண்ணுவர். அவரிடத்திலாயிரத்திலொரு அம்சமாக ருத்திரதேவர் தோன்றிக் கலையிலே நின்றும் மூலப்பிரகிருதியை * யுதிப்பித்து, அதிலே நின்றும் குணத்திரயாதியான சூக்கும சிருட்டிகளைப்பண்ணி, மகேஸ்வரருடைய கோடியம்சமாகத் தோன்றின பிரமாவையும் விஷ்ணுவையும் அசுத்தாத்துவ சிருட்டி ஸ்திதிகளிலே ┼ நியோகித்துத் தாம் காலருத்திரனை யதிஷ்டித்துக்கொண்டு நின்று, அசுத்தாத்துவப் பிரளயத்தையும் பண்ணுவர்.

† அம்சம் - பங்கு, ‡ ஆவிர்ப்பவித்து-உண்டாய், × அநுக்கிரகபரா - அநுக்கிரகத்தை முக்கியமாகவுடையது, ¶ அவிகாபாவம்-நீங்காமை, § சகச்ரம்-ஆயிரம், * உதிப்பித்தல்-உண்டாக்குதல், ┼ நியோகித்தல் - ஏவுதல்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible] || [illegible] || [illegible] || [illegible] இதி.

இது ஒன்பது பேதமு மொன்றிலேயொன்று தோன்றின தற்குச் சம்மதி.

ததத் கிருத்தியங்களுக்குச் சம்மதி பூர்வத்திலே சொன்ேனும்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சிவபேத மணுபேதமெனப் பிரமாதி நவபேதமிருபேதமாம்; அதில் அணுபேதஞ் சத்திலோக முதற் புவனாதிபதியாய் வாஸ்தவபேத தேகியாயிருக்கும். சிவபேத மணுபேதத்தை யதிஷ்டித்துக் காற்பனிகபேத தேகியாயிருக்கும் அதிற் சிவபேதத்தைத் தரிசிப்பிக்கின்றார்.

சிவம்-அதிக்கிராந்த விந்துக பரசிவம்,—
சத்தி-அதிக்கிராந்த விந்துக பராசத்தி,—
நாதம்-பரநாதம்,—
விந்து-பரவிந்து,—

பரநாதமென்பது, உன்மனுகலாதி சாந்தியதீத கலாந்தகாரிய சிவகலா சத்தியையும், சமனாதி அபரவிந்து நிவிர்த்தியந்த

காரியசத்தி கலாசத்தியையும், சமாகாராத்மகமாயுள்ள காரண சாநதியதீத கலாரூப மகாமாயை.

பரவிந்து என்பது, உன்மனு கலாதி காரியப் பிரபஞ்ச மொருபிரதேசத்துண்டா யொடுங்கின மகாமாயையின தோரிடம்.

ஆகையால், மகாமாயையினது பரநாதப் பிரதேசத்தை யதிஷ்டிக்கும் அனுக்கிராந்த விந்துக பரசிவம்; நவபேத விருத்தத்தில் நாதமென்று சொல்லப்பட்டது.

பரவிந்துவை யதிஷ்டிக்கும் அனுக்கிராந்த விந்துக பராசத்தி, விந்துவென்று சொல்லப்பட்டது.

மகாமாயா காரிய பரநாத பரவிந்துக்கள், மகாமாயா காரிய அபரநாத அபர விந்துகக்கள் காணப்பிக்கப் படாநின்றன.

உன்மனீ -பராறபரநாதம், சமனீ- பராற்பரவிந்து.

வியாபினி,வியோமரூபை, அநந்தை,அநாதை, அநாசிருதை யென்கின்ற பஞ்சகலா கர்ப்ப சத்த ரூப ஆத்த ரூப சிவகலைகளும், ஆத்தரூப மாத்திர பஞ்ச சிவகலா புவனங்களும், பரசிவ தத்துவமென்கின்ற பரநாதம்.

சூக்குமை, அதிசூக்குமை, அமிர்தை, அமிர்தாமிர்தை, வியாபினி யென்கின்ற பஞ்சகலா கர்ப்ப சத்தரூப அர்த்த ரூப சத்திகலைகளும், அர்த்த ரூப மாத்திர சத்திகலா புவனங்களும், பராசத்தி தத்துவ மென்கின்ற பரவிந்து.

இவைகள், யோகினியினுடையவும் மகாவிராட் புருடனுடையவும் பிரமரந்திரத்திற்கு மேல், முறைமையில் சத்த ரூப மாத்திரங்களாகவும், சத்த ரூப ஆத்த ரூபங்களாகவும அறியப்படும்.

பிரம ரந்திரத்துக்குள் இந்திகை, தீபிகை, ரோசிகை,மோசிகை, ஊர்த்துவகை யென்கின்ற பஞ்சகலா கர்ப்ப சத்த ரூப

அர்த்த ரூப சிவகலைகளும்; அர்த்த ரூப மாத்திர சிவகலா புவனங்களும், அபர சிவ தத்துவமென்கின்ற நாத, நாதாந்த, அபர நாதமாக அறியப்படும்.

நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை யென்கின்ற பஞ்சகலா கர்ப்ப சுத்த ரூப அர்த்த ரூப சத்தி கலைகளும், அர்த்த ரூபமாத்திர சத்தி கலா புவனங்களும், அபர சத்தி தத்துவமென்கின்ற அபரவிந்துவாக அறியப்படும்.

உன்மனாதி யபரவிந்து, அந்தம் கிரமத்திற் பரசிவ பராசத்தித் தானமாக வுணர்ந்தறிக.

சுத்த ரூப அர்த்தரூப பஞ்ச பஞ்சகலைகள், அர்த்த ரூபமாத்திர பஞ்ச பஞ்ச கலா புவனங்கள் பகுப்பாயிருக்கும்.

ஆத்த சந்திரன நிரோதி யிரண்டும் அபரவிந்துவி லடங்கும்.

மகார உகார ஒளகாரங்கள், கிரமத்திற் சாதாக்கிய தத்துவ ஈஸ்வர தத்துவ சுத்த வித்தியா தத்துவ மென்கின்ற அபர விந்து கோடிகளுளாகும்.

அபரநாத அபரவிந்து அபரநாதங்கள் சதாசிவ ஈஸ்வர வித்தியாதிபதி ருத்திராதிஷ்டானங்களாகவும் அறியப்படும்.

கீழே கீழே நிவிர்த்தியாதி கலாரூபமாக வியாபித்த ஒளகாராதி நாதாந்தம் பிரமாதி பஞ்சதேவதா ஸ்தானமுமாம —

சதாசிவன நிகழு மீச னுவந்தரு ளுருத்திரனுன மாலய னொன்றினொன்றுய்ப் பவதரும் - சனமிகதும்.

அணுபேதத்திற் சனம முபசாரமா யாரோபித்துச் "சம்பு பக்ஷத்துக்குக் கற்பிக்கப்படும். இங்குச் சிவாதி பிரமாந்த நவ பேதத்துள்,—

அருவ நாலும் - காரண மகாமாயாவஸ்தா சாக்ஷா ததிஷ்டான மாதலால், சிவாதி நான்கும் நிஷ்களம்.

உருவம் நாலும்-காரியாதிஷடான மாதலால், ஈசன முதலிய நானகும சகளம்.—

உபயமொனறும்-சதாசிவம காரணததைத தொட்டு உனமனுதி சாதாககியாநத காரியாதிஷடான மாகையால், சகளநிஷகளம் —

நவந்தருபேத மேகநாதனே நடிப்பனெனபா - ச்ுபேதமெனகினற நவபேதததை பொருபொருளாகிய சிவன, தானே அதிஷடேய பேதததை யொட்டி அபிநயிததுத நடஙக ரூபனையிறுவே காண்பிப்பன.

அணுபேதமெனகினற நயபேதத்தை அணுப்பிரமாதி அணுபரசிவாநத அநேகேசுராகள சுவருபத்திறுற காணபிபபா.

சிவம சததி நாதம் விநது எனபதும, சாநதி முதல ஈாற்கலை யெனபதும, ஒரு பொருளுனாததிருப்ப துனாக

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

அஙஙன மொனறுமினறி நிறகுமெமமிறையன் ஓனறினொன்றுகத தோனறி, ஒவவொரு தததுவங்களி னினறுகொணடு, தததந தொழில்களைச செய்யுஞ சிவமுதல் ஐவரிறுகிய முத்திறத தொனபது வாககததினும் வேறறுமையினறி நினறு, அவ்வத தொழில்களைச செய்வனெனபதாம்.

ஏகாரம் தேற்றம.

மேல் ஒருவனே யிராவணுதி பாவகமுற்றுற் போல என்றதனை ஈண்டு மறிவுறுத்துவார், நடிப்பனெனறுர்.

இவ்வொன்பது பேதத்துடன் சத்தி விந்துவென்று மிரண்டும் சத்தி பேதமாயினும், ஏனை மஞ்ஞணமணி முதலிய பேதம் போலன்றி ஒன்றிலொன்றாகப் பவந்தரு முறையிற் காரணமாயிடை நிற்றல்பற்றிச் சிவபேதத்துடன் வைத்தெண்ணி நவந்தருபேதமெனப்பட்டன.

நவந்தருபேத மேகநாதனே நடிப்பனென்றதும் ஒற்றுமை நயம்பற்றிப் பொதுவாகையாற் கூறியதென்பது.

அவை முறையே சிவதத்துவத்துக்கும் நாதத்துக்குமுரிய சத்தி பேதமே யாதலென்பது வருஞ்செய்யுளிற் காண்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

மேல் சூத்திரமாலையிலே பரமேஸ்வரன் கொள்ளப்பட்ட திருமேனிகள், ஒன்றிலொன்றாகத் தோன்று முறைமை யருளிச் செய்கிறார்.

சிவனுஞ்சத்தி நாதமும்விந்து சதாசிவன் றிகழுமீச னுவந்தருளுருத்திரனொடு மாலய னொன்றினொன்றாய்ப் பவந்தரும் - சிவனுஞ் சத்தியும் நாதமும் விந்துவும் சதாசிவனும் விளங்கப்பட்ட ஈஸ்வரனும் கிருபையுடைய உருத்திரனும் மாலும் அயனும் என்னு மிவர்கள், ஒன்றிலே யொன்றாகத் தோன்றிநிற்பார்கள் — அருவநாலிவ் ருருவநா லுபயமொன்றும் - இந்தத் திருமேனிகள்தான், இவ்விடத்து நிஷ்களம் நாலும், சகளம் நாலும், சகளநிஷ்களமொன்றுமாயிருக்கும். இப்படிப் பலவாகச் சொல்லப்பட்ட திருமேனிகளுக்குப் பரமேஸ்வரனும் பலபேதங்களுமாயிருப்பனோ வென்னில்?—நவந்தருபேத மேகநாதனே நடிப்பனென்பர் - இந்த ஒன்பது திருமேனியும் பரமேஸ்வரனொருவனேகொண்டு நடியாநிற்பன.

இதனாற் சொல்லியது, சுத்தமாயையிலே சிவன் கொள்ளப்பட்ட திருமேனிகள், சிவமுதலாகப் பிரமா வீறாக ஒன்பதுபேதமா யிருக்குமென்னு முறைமை யறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு·

ஏகநாதனே - அங்ஙன மொன்றுமின்றி நிற்கு மெமிறைவன்,—சிவஞ்சத்தி நாதமவிந்து சதாசிவன றிசுமீசன உவந்தருளுருத்திரனுன மாலயனென றின்னருப்ப பவந்தரும-சிவமென்றுஞ் சத்தியென்று நாதமென்றுமவிந்துவென்றுஞ் சதாசிவமென்றும் விளங்குகின்ற மகேஸ்வரனென்றும உவந்தருளுகின்ற உருத்திரனென்றும் மாலென்று மயனென்றும இவைகள், ஒன்றினொன்றுகத தோன்றி, ஒவ்வொரு தத்துவங்களினின்றுகொண்டு தத்தந்தொழில்களைச் செய்யும,—அருவநாலு - அருவமாகிய சிவம சத்தி நாசம விந்துவாகிய நான்கு திருமேனியும்,—உருவநாலு- உருவமாகிய மகேச னுருத்திரன மாலயனுகிய நான்கு திருமேனியும்,—உபயமொன்றும் - சதாசிவமாகிய அருவுருவத் திருமேனி யொன்றுமாகிய,—நவந்தருபேத நடிப்பனெனபர் - முத்திறத் தொன்பது வாகத்திலும் வேற்றுமையின்றி நின்று, அவ்வத்தொழில்களைச் செய்வன.

---

## மறைஞானதேசிகர் உரை

சிவனைப்போலே சத்தியொன்றுயிருக்கக் காரியப்பாட்டாற் சத்தியினது பேதம் பலவென்றுணர்த்துகிறார்.

சத்தியாய் விந்துச்சத்தி யாய்மனோன் மனிதானுகி, யொத்துறு மகேசையாகி யுமைதிரு வாணியா

கி, வைத்துறுஞ் சிவாதிக்கிங்ஙன் வருஞ்சத்தி யொரு த்தியாகு, மெத்திற நின்றானீச னத்திற மவளுநிற் பள். (எரு)

(இ-ள்) சத்தியாய் விந்துச் சத்தியாய் மனோன்மனி தானுகி யொத்தறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி வைத்தறுஞ் சிவாதிகரு — முற்கூறிய சிவத்துக்குச் சத்தியும், நாதத்துக்கு விந்துச்சத்தியும், சதாசிவத்துக்கு மனோன்மனியும், ஈசுரத்துக்கு விந்துவினுயிரத்திற் றோன்றிய மகேசையும், உருத்திரனுக்கு மனோன்மனியி லாயிரத்தி லொன்றிற றோன்றிய கௌரியும், மாயனுக்குத் திருவும், பிரமனுக்குச் சரஸ்வதியுமாகி, தனித்தனியே சத்திகள் பொருந்தாநிற்கும்.

இங்ஙன வருஞ்சத்தி யொருத்தியாகும் — இப்படிச் சிவன் முதலிய வெழுவர்களும், ஒருத்தி தானே பலவா யதிட்டித்துக் கொண்டுநிற்கும். இத்தச் சத்திகளுஞ் சத்தனுக்கும் பேதமோவெனனின்?

எத்திறநின்றானீச னத்திற மவளுநிற்பள். — சிவ னிலயி யானபோது இலயசத்தி யெனவும், போகியானபோது போகசத்தி யெனவும், அதிகாரியானபோது அதிகாரசத்தியெனவும், இப்படிப் பெயருற்றுநிற்கும். ஏனையவு மிவ்வாறுகாண்க. எ-று.

சிவாதிக்கு வைத்தறுமெனவும், ஈசனெத்திறநின்றானவ னுமத்திற நிற்பளெனவ பொருளுரைக்க.

இதற்கு வாதுளோத்தரத்துஞ் சுப்பிரபேதத்துஞ் சுத்தா க்கியினு மறிக. (எரு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—※—

மேல் சத்திபேத முணர்த்துதல்

சத்தியாய் - சத்தர்க்கு ஞானசத்தியாய் விந்துக்ஷோபத்தைப் பண்ணி,— விந்துசத்தி யாய்-சிவன நாதா †திஷ்டாதாவானபொழுது விந்து ¶வதிஷ்டாத்திரியான சத்தியாய்,— மனோன்மனி தானாகி - சதாசிவர்க்கு மனோன்மனி சத்தியாய்,—மகேசையாகி - மகேஶ்வரருக்கு மகேஶ்வரி யென்னுஞ் சத்தியாய்,—உமை-உருத்திரதேவர்க்கு உமையென்னுஞ் சத்தியாய்,—திரு-விஷ்ணுவுக்கு லக்ஷ்மியென்னுஞ் சத்தியாய்,—வாணியாகி - பிரமாவுக்கு சரஸ்வதியென்னுஞ் சத்தியாய்,—ஒத்தாறும்-இப்படியே யந்தந்தக் கிருத்தியங்களுக்கும் விகாரங்களுக்கும் பொருந்தின ரூபத்தையும் கிருத்தியத்தையு முடைத்தாய்ப் பொருந்தும்,— வைத்தாறுஞ் சிவாதிகளினை வருஞ்சத்தி பொருத்தியாகும்-காரணேஸ்வர ரிடங்களிலே தனது அதிகாரசத்தியை வைத்துத் தானு மவ்விடத்து அபின்னசத்தியாய் நிற்குஞ் சிவனை யாதியான வேறு பேதங்களுக்கு முன்சொன்னவாறு வரப்பட்ட சத்தியொன்றே! அதெவ்வாறெனின்?— எத்திற நின்றானீச னத்திற மவளுநிற்பள்-சிவனுக்கு அவிநாபூதை யாகையால் சிவனெவ்வாறு மூர்த்திகளை அதிஷ்டித்துக் கொண்டு நின்றான், அவ்வாறே யந்தந்த மூர்த்திகளுடைய சத்திகளையும் அதிஷ்டித்துக்கொண்டு நின்றுந் தானொன்றேயென் றித்தன்பொருள்.

†அதிஷ்டாதா-அதிஷ்டிக்கிறவன், ¶அதிஷ்டாத்திரி-அதிஷ்டிக்கிறவள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவபேதமுணர்த்தி, அணுசத்தி பேதமானது கொடுக்குஞ் சத்திபேத முணர்த்துகின்றார்.

சத்தியாய்-அதிக்கிராந்த வித்துக பரசிவத்திற்கு அதிக்கிராந்த வித்துக பராசத்தியாய்,—விந்துச சத்தியாய்-நாதரூபியாயிருக்கின்ற அனதிக கிராந்த வித்துக பரசிவத்திற்கு அனதிக்கிராந்த வித்துக பராசத்தியாய்,—மனோன்மனி தானாகி-சதாசிவத்திற்கு மனோன்மனி தேவியாய்,—ஒத்தது மகேசையாகி-மகேஸ்வரனுக்குஇணையகிய மகேஸ்வரி தேவியாகி,—உமை திருவாணியாகி-உருத்திரனுக்கு குமாதேவியாகி, மாலுக்கு மகாலக்ஷ்மி தேவியாகி, பிரமாவுக்குச சரஸ்வதிதேவியாகி,—வைத்தது ரு சிவாதிக்கிங்ஙன வருஞசத்தி ஒருத்தியாகும-சிவமுதல் நவ பேதத்துக்கு மிவவிட்டது நவபேதமாய்த்தோறறும் சத்தியொன்றுகும,—எத்திற நின்றுனீச னத்திற மவளுநிற்பள் - சிவன கற்பித நவபேதமா யாதொரு பிரகாரமிருந்தான, சத்தியுங் கற்பித நவபேதமாய் அந்தப் பிராகாரமிருக்கும.

சத்திபேத மேழென்று சொல்லியிருக்கச சிவபேத நவபேதமென்றது விரோதம சிவபேத நவபேதமென்று சொல்லியிருக்கச் சத்திபேத மேழுபேத மென்றது விரோதம். இப்படியாகில், விரோத பரிகாரமெப்படி?ஒருபிரகாரஞ் சொல்லுவோங் கேள்.

அநாசிருதை முதல் சிவகலா சாதிய வியாபினி யீறாகும் பஞ்சகலா புஞ்ச வடிவுற்றுச் சிவகலா சாதிய உன்மனா கோக்க தாக்கும் பரநாதமென்றும், சத்திகலா சாதிய வியாபினி முதற் சூக்குமை யீறாகும் பஞ்சகலா புஞ்சவடிவுற்றுச் சத்தி

கலா சாதிய சமநாநோக்கம் தாக்கும் பரவிந்துவென்றும், ஊர்த்துவைமுதல் இந்திகை யீறாகும் பஞ்சகலா புஞ்சவடிவுற்றுச் சிவகலா சாதிய வியாபிநி நோக்கம் தாக்கும் அபரநாதமென்றும், சாந்தி யதீதைமுதல நிவிர்த்தி யீறாகும் பஞ்சகலா புஞ்சவடிவுற்றுச் சத்திகலா சாதிய நுண்குமை நோக்கம் தாக்கும் அபரவிந்து என்றும் இருக்கும்.

பராபர சிவதத்துவம் பராபர சத்தித்துவ வர்க்கம் நான்கினபேர் மாறியும் மாறாதும் தனித்தனி யிருக்கும் சாதிய்தீதுகலை; அக்கலை மணப்புற்று அதனை பெற்று அப்பெயர்பெறும் உண்மைகலை யாகும் பரசிவ மூர்த்தியாம் சிவகலையுமதிலடங்கும்.

அப்படி நானவிற மிருக்கும் விந்தைத பிரதிஷ்டை நிவிர்த்தியுள் ளடங்கும் சாந்திகலை, அக்கலை மணப்புற்று அத்தனைபெற்று அப்பெயர்பெறுஞ் சாந்தகலையாகும் மகாகத ஈசமூர்த்தியாஞ் சத்திகலையு மதிலடங்கும்.

ஆக நாலிரணடெட்டுச் சடசிவகலை சடசத்திகலை; சற்காரிய காப்ப மகாமாயையினது காத்துவிசப் பிரளயத்து எண்கலை பிரியாப பிரிவுற்றுத்தப பொறித் துபசரிக்கும், பிரியாப்பிரிவுச சிற்சிவகலை சிற்சத்திகலை சங்காரிய காபப வஸ்துக்களாம.

பரசிவம் பராசத்தி அனதிக்கிராக்க விந்துக பரசிவனெனும் பரநாதம பரவிந்து இவை நான்கும், தனித்தனி சிவபேதம் சத்திபேதம இருபேதமுற் றிருநாலகு பேதமாயிருத்தலால், சிவபேதம் நானகோடு சதாசிவமுதற் பிரமா வீறுகுஞ் சிவபேத மைந்தாங் கூட்டிச் சிவபேதம் நவபேதம்.

அச்சத்திபேதம் நானகோடு மனோன்மனிமுதற் சரஸ்வதியீறாகும் சத்திபேத மைந்தங் கூட்டிச் சத்திபேதம் நவபேதமெனனுங் கருத்திற் கருதி, 'நவந்தருபேதமேக நாதனே நடிப்

டன்' என்றும், 'எத்திற நின்றா னீச னத்திற மவளு நிற்பள்' என்றும்; ஆசாரியர் சொல்லியதே தென்றெருசொற் றேஷமு மில்லை.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற்கூறிய சிவபேத மேழற்குமுரிய சத்திபேதமும், முறையே சத்திமுதல் வாணியிறுதி யெழுவகைப்படும். எம்மிறைவனாகிய பரமசிவன் சிவபேத மேழினு நின்று நடாத்துமாறெல்லாம் அவனோடு தாதான்மியமாய் நிற்கும் பராசத்தியும், இச்சத்திபேத மேழினும் அவனுக்குத் துணையாய்நின்று நடாத்து மென்பதாம்.

ஆற்றேல், மேலைச் சூத்திரத்தின் 'வரும்வடி வெல்லாஞ் சத்தி' எனக்கூறி, யீண்டுச் சிவபேதஞ் சத்திபேதமென வேறுவைத்து, 'எத்திற நின்றா னீச னத்திற மவளு நிற்பள்' என்றல் மலைவுபோலுமெனின் மயங்காமைப்பொருட்டு; அஃதுணர்த்தற்கெழுந்தது வருஞ்செய்யுளென்பது

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—o—

மேலிகந்த மூர்த்திகளுக்குச் சத்திக ளருளிச்செய்கிறார்

சத்தியாய் விந்துச்சத்தியாய் மனோன்மணி தானாகி யொத்துறு மகேசையாகி யுமை திருவாணியாகி வைத்தனும்- சிவத்துக்குச் சத்தியும், நாதத்துக்கு விந்துச்சத்தியும், சதாசிவத்துக்கு மனோன்மணிசத்தியும், மகேஸ்வரனுக்கு மகேஸ்வரசத்தியு

ம், உருத்திரனுக்கு உமாசத்தியும், விட்டுணுவுக் கிலக்குமியும், பிரமாவுக்குச் சரஸ்வதியும், ஆகவொன்றிலே யொன்று பேதமா றுமென்று சொல்லப்படும். இப்படிச் சத்திகள் பலவாயிருக்கு மோவெனின்?— சிவாதிக்கிருமன வருஞ்சத்தி யொருத்தியா கும் - சிவமுதலான மூர்த்திகளுக்கு இப்படியே வருகிற சத்தி களெல்லாம் அந்தப் பராசத்தி யொன்றுமேயா யிருக்கும்;—எ த்திற நின்றனீச னத்திற மவளுநிற்பள் - ஆகையால் பரமே ஸ்வரன் எப்படியே நின்றான், அப்படியே அந்தப் பரமேஸ்வரியு ம் அதற்குப் பொருந்திநிற்பள்.

சிவம் ஒன்பதுபேதமாயுஞ் சத்தியேழுபேதமாயும் நின்ற து; ஒன்பதுபேதத்திற் சொன்ன சத்தி, சிவத்துக்குச் சத்தியா யும்; நாதத்துக்கு விந்துசத்தியாயும், சதாசிவமுதலான வஞ்சு க்கும் மனோன்மனிமுதலான சத்திகள் அஞ்சுமாய் நிற்குமதுங் கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது, பரமேஸ்வரன் கொண்ட கொண் ட மூர்த்தங்களுக்கெல்லாம் பரமேஸ்வரியும் அந்தந்த மூர்த்த ங்களுக்குப் பொருந்தின சத்தியாய் நிற்பளென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

சிவாதிக்கு - மேற்கூறிய சிவபேத மேழிற்கும்,—இவ்வன் வருஞ்சத்தி யொருத்தியாகும் - இவ்விடத்துக் குரிய சத்திபே தமூஞ் சிவசத்தியொன்றே.— சத்தியாய் விந்துசத்தி மனோ ன்மனி தானுகி யொத்தது மகேசையாகி யுமை திருவாணியா கி வைத்ததும் - முறையே சிவத்திற்குச் சத்தியாகியும், சதாசி

வத்திற்கு மனோன்மனி சத்தியாகியும், மகேசனுக்குப் பொருந்திய மகேசை சத்தியாகியும், உருத்திரனுக்கு உமைசத்தியாகியும், மாலுக்குத் திருசத்தியாகியும், அயனுக்கு வாணிசத்தியாகியும், எழுவகைப்படும்,— ஏகனென நின்ற நிலைமுதல - எம்மிறைவனாகிய பரமசிவனை சிவபேதமேழின் நின்று நடாத்துமாறெல்லாம்,—அவனும் மருவிநிற்பள்-அவனோடு தாதான்மியமாய் நிற்கும் பராசத்தியும் சத்திபேதமேழினும் அவனுக்குத் துணையாய் நின்று நடாத்தும.

---

## மறைஞானதேசிகர் உரை.

இங்ஙனங் கூறிய சத்திசிவங்களுக்கும் பேத
மில்லையென வுணர்த்துகிறார்.

சத்திதா னாதிமாதி தானாகுஞ் சிவமுமந்தச்
சத்திதா னாதியாகுந் தநும்வடி வானவெல்லாஞ், சத்தியு
ஞ் சிவமுமாகுஞ் சத்திதா னதனுக்குச், சத்தியா
ஞ்சத்தன் மேவியதற் றெல்லாமாஞ் சத்திதானே. (எக)

(இ-ள்.) சத்திதா னாதிமாதி தானாகும் — சிவனுடனே யிரண்டற நிற்கிற சமவாய சத்திதானே, நாதமுதலான திருமேனிகளெல்லாம், அதற்கதற்கேற்ற வடிவைப் பொருந்தாநிற்கும.

சிவமுமக்கச் சத்திதானாதியாகும் — அந்த சிவமும் அந்தச் சத்தி நாதமென்று சொல்லப்பட்ட சத்தியினது பேதமே எல்லாதனையும் பொருந்திநிற்கும்.

தநும்வடிவானவெல்லாஞ் ச — ஆகையாற் பிரபஞ்சத்திற் சொல்லப்பட்ட பதார்த்தங்களெல்லாஞ் சத்திமயமுஞ் சி

*சத்தியுஞ் சிவமுமாகும்*

வமயமுமாகவே காணப்பட்டிருக்கும்.

*சத்திதான் சத்தனுக்குஞ் சத்தியாம்*

சத்தியினுடைய விகற்பங்களெல்லாஞ் சிவமே பொருந்தாதோ வெனின்? அந்தச் சத்திதானே சகாருபிய சிவனுக்குச் சத்தியாகையாற் றனக்கொரு முதன்மையில்லை

*சத்தனவேண்டிற் றெல்லாமாஞ் சத்திதானே.*

சகாரூபிய சிவனையாசொன்னறையுண்டாகுமென்று நிருவாகக் கடைத்தான், அப்பொழுதந்தச் சத்திதானேயவைகளை யதுவாக வுண்டாக்காநிற்கும். எ-று.

இந்த வாதத்தோர்த்தருஞ் சவுந்தரியலகிரியெனனுக் தோத்திரத்திலுமறிக (௭௧)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.

—o—

மேல் பிரபஞ்சத்திலே சத்தி சிவ நிற்கு முறைமை யுணர்த்துதல்.

சத்திதானுகமாதி காணுகும்- சத்தியான நாதாதி பிருதிவியந்த தத்துவங்களெல்லாமநுப்பிரவிஷ்டையாயிருக்கும்;—சிவமுமந்தச் சத்திதானுகியாரும் - சிவமுமந்தச் சத்தியாதியாக சாவவஸ்தைகளையும் அதிஷ்டித்திருக்கும். ஆகையால்;—தருவடிவானவெல்லாஞ் சத்தியுஞ் சிவமுமாகும் - அவாகளா லுண்டாக்கப்பட்ட வெல்லா வுருவங்களுஞ் சத்தி சிவாத்மகமாம —சத்திதான் சத்தனுக்குச் சத்தியாஞ் சத்தனவேண்டிற்றெல்லாமாஞ் சத்திதானே-சத்தியானது சத்தாவஸ்தரான சிவனுக்கும் பலமுமாம்; ஞானமுமிச்சையுங் கிரியையுமாமென் றிதனபொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சத்தியாதியெண்பேதங்களுக்குப் பரசிவமூலம், நாதாதியெழுபேதங்களுக்குப் பராசத்தி மூலமெனபது பகர்கின்றார்.

சத்தன - பரசிவம்,—சத்தி - பராசத்தி,—வேண்டிற்றெல்லாம்-நாதாதி பேதமனைத்தும.

மற்றவை வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

மரமும காழ்ப்புமபோல ஒப்பவியைந்து நிற்றலின், எல்லாத்திருமேனியுஞ் சத்திசிவ மிரணடற்கும் பொதுவடிவே யாமாயினும, சததனுககுச சத்தி தேவியுமா மாகலான, அதற்குரியவடிவு விசேடங் குணவிசேடம பற்றிச் சிவபேதரு சததிபேத மென றுயினவெனபதாம்.

ஆகலா னதற்குரிய வடிவு விசேடங் குணவிசேடம்பற்றிச் சிவபேதஞ சத்திபேதமென றுயினவெனபது குறிப்பெச்சம்.

சத்தனுககோர் சத்தி பாமெனறது,வல்லவனுககு வல்லமையாய் நிற்குமெனச் சிவசததிகட்கு நாயகநாயகி பாவங்கூறியவாறு.

நாயகநாயகி பாவமாதலை வலியுறுத்துவார், சத்தன்வேண்டிற் றெல்லாமாஞ் சத்தியெனச் சத்தியின் பெருமை கூறினார்

வேண்டிற்றெல்லாமென்றது ஒருமைப் பன்மை மயக்கம்.

இவை மூன்று செய்யுளுந் தாதான்மியமாய் நீங்காது நிற்றலைத் தெரித்துக் கூறியவாறு.

அற்றேல், மேல் ஒன்றிரண்டாய்ப் பலவுந்தருமெனப்பட்ட சத்தி சிவங்களை யெங்ஙனந் தலைவனுந் தலைவியுமாய்த் தம்முட் புணருமெனபது முறையன்று போலுமெனபாரை நோக்கி, அது வுணர்த்துதற் கெழுந்தது வருஞ்செய்யுளெனபது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

சிவசத்திகள் நாதமுதலான தத்துவங்க ளெல்லாந் தானேயாய் நிற்குமென்றும், சிவனுடைய திருவுள்ளத்திலே நிகழ்ந்த தெல்லாஞ் சத்திதானேயாய் நின்று நடத்துமுறைமையு மருளிச்செய்கிறார்.

சத்திதானுந்தமாதி தானுரும-நாதமுலான தத்துவங்களெல்லாம அந்தப் பராசத்தி தானேயாய்ப் பொருந்தி நிற்கும்,—சிவமுமந்தச் சத்திதானுகியாகும் - சிவமு மந்தச் சத்தியினுடைய வியாபாரங்களுக்கெல்லாம் காரணமாய்,விட்டு நீங்காமல் நிற்கும். அப்படியிருக்கையினாலே,—தருவடிவானவெல்லாஞ் சத்தியும் சிவமுமாகும - பிரபஞ்சத்தி லுண்டாகப்பட்ட ரூபங்களெல்லாம் பரமேஸ்வரனும் பரமேஸ்வரியுமா யிருக்கும். முன்னே நாதமுதலான தத்துவங்களெல்லாம் சத்தியாகியே நிற்குமென்று சொல்லி, இப்பொழுது சிவமுஞ் சத்தியுமாயிருக்குமெனபானேனெனனில்?—சத்திதான சத்தனுக்குச் சத்தியாம் - அந்தச் சத்தி தானுஞ் சிவனுடைய கிருத்தியங்களுக்கெல்லாம் தானேயாய் நிற்கும். ஆகையால்,—சத்தன் வேண்டிற்றெல்லாமாஞ் சத்திதானே - சிவன் யாதொன்று திருவுள்ளத்தடைத்தான,அந்தத் திருவுள்ளத் தடைத்த வதுதானே சத்திக்குச் செயலாம்.

இதனாற் சொல்லியது, நாதமுதல் பிருதிவி யீறாகவுண்டான தத்துவங்களெல்லாம் சத்திதானேயாய் நிற்குமென்றும், அ

ந்தச் சத்திக்கு முதல் சிவமேயென்றும், உண்டாகப்பட்ட வடிவுகளெல்லாம் சிவசத்திகளென்றும், சிவனுடைய திருவுள்ளத்தில் நிகழ்ந்ததே சத்தினுடைய கிருத்தியமெல்லா மென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

சத்திதா னுகமாதிகாருங் - காதமுதற் பிருதிவியீறான தத்துவங்களெல்லாங் கூடிநிற்கும்.—சிவமு மந்தச்சத்திதானு திபாகும் -சிவமு மந்தச் சத்திமுதலியவற்றை யடுத்து நிற்குமாகலான், மரமும காழ்ப்புமபோல வொப்ப இசைந்து நிற்றலின்,—சத்திதான ரும வடிவானவெல்லாம சத்தியும சிவமுமாகும்-சத்தியாற்றப்படு மெல்லாத திருமேனியும சத்திசிவமிரண்டற்கும் பொதுவடிவே யாயினும்,—சத்தனுக்கு சத்தன வேண்டிற்றெல்லாமாஞ் சத்திதானே - சத்தனுக்குத தானவேண்டியவாறெல்லாம ஆகும சத்தியே,—ஒரசத்தியாம-ஒப்பற்ற தேவியுமா மாகலான, அதற்குரிய வடிவுவிசேடங் குணவிசேடம் பரசிவபேதஞ் சத்திபேதமென றுயினவெனபதாம்.

இவை மூன்று செய்யுளானும தாதானமியமாய் நீங்காது நிற்றலைத் தெரிவித்துக் கூறியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை.

அந்தச் சிவசத்தியினது சிருஷ்டி யுணர்த்துகிறூர்.

சிவஞ்சத்தி தன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தையீன்று,முவக்திரு வரும்புணர்ந்திங் குலகுயி ரெல்

லாமீன்றும், பவன்பிரம சாரியாகும் பான்மொழி க
னனியாகும், தவந்தரு ஞானத்தோகத் தன்மைதா
ன் றெரியுமன்றே. (எஎ)

(இ-ள்) சிவஞ அப்பிரமேய முதலிய விலக்கணத்தையு
த்தினனுடைய சிவன, தனது காருண்ணியத்தாற்
லேயீன்றும் திருமேனிகொண்ட சிவன தாயிரத்தொன்
றிலே பராசத்தியும், அநந்த சத்தியாயிரத்
தொருகூற்றி லாதிசத்தியும், அநந்த சத்தியி லாயிரத்தொன்றி
லிச்சாசத்தியும், அநந்த சத்தி யாயிரத்தொன்றின் ஞானசத்
தியும், அநந்த சத்தி யாயிரத்தொன்றிற் கிரியாசத்தியும், இப்
படிப் பஞ்ச சத்திகளையுந் தோற்றுவிப்பன

இது சிவசிருஷ்டி யெனவறிக.

சேற் சத்தி சிருஷ்டி.

சத்திதான சி நிட்களமான பஞ்ச சத்திகளிடத்திலுஞ்
வத்தையீன்றும் சர்வான்மாக்களுக்கு தியானபூசை நிமித்
தமாகவநந்தபராசத்தியிற் டத்திலொன்றி
ற் சாதாக்கியத்தையும், ஆதிசத்தியிற பத்திலொன்றிலே யமூர்
த்தி சாதாக்கியத்தையும், இச்சாசத்திப் பத்திலொன்றிலே மூர்
த்தி சாதாக்கியத்தையும், ஞானசத்திப் பத்திலொன்றிலே கர்த்
திரு சாதாக்கியத்தையும், கிரியாசத்தியிற பத்திலொன்றிலே
கன்ம சாதாக்கியத்தையும், இங்ஙனமடைவே பஞ்ச சாதாக்கி
யத்தையுந் தோற்றுவியா நிற்பள்.

கர்த்திரு சாதாக்கிய முதலான நாலு சாதாக்கியமு மிலி
ங்காகாரமாயே யிருக்கும். மற்றக் கன்ம சாதாக்கிய மொன
றுமே சிவலிங்கமும் பீடமுமாயிருக்கும். அதலா லான்மாக்
கள் சிவபூசாதி கன்மங்களை இந்தக் கன்மசாதாக்கியத்தி லிட
த்திலே தானே செய்வார்கள்.

இந்தச் சிவலிங்கத்திற் றானே பூசிக்கவேண்டுமோ வெனின்? தண்டில முதலியவற்றிற் சிவனைப் பூசிக்க வந்தப் பூசையிலுண்டான நூனாதிக மிகுந்த குற்றமாய் விடும். சிவலிங்கத்திற செய்தபூசை சம்பூரண மல்லாவிட்டது மந்திரங்கள் திரவிய மில்லாவிட்டதனு சம்பூரணமாய் விடும ஆதலாற், சிவலிங்கத்திலிடத்திற் செய்யும பூசையே சிறப்பென றாகமத்திற் கூறியதென வறிக.

| | |
|---|---|
| ௨௯ திருவுரும் புணர்ந்திங் குலகுயி ரெல்லாமீனறும் | இலிங்கமயமாயிருக்கிறது லிங்கமும், பீடமயமாயிருக்கிறது யோனியுமாகியவிருவுருவ, தயமிற் பிரியாமல ஆன்மாக்களை யீடேற்றுகையின பொருட்டுக் கூட்டி வைத்தவமாயா காரியமாகிய தனுவாதிகளை யான்மாக் களுக் குண்டாக்கி; இங்ஙனஞ் சத்தியுடனே கூடிப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தானே யாயினும,— |
| பவன் பிரம சாரியாகும் | பவனாகிய சிவனெப்பொழுது நித்திய பிரமசாரியாயே யிருப்பன — |
| பானமொழி கன்னியாகும் | அந்தச் சத்தி யெப்பொழுதுமை கன்னிகையாகவே யிருப்பள — |
| தவந்தரு ஞானத்தோர்கசித் தன்மைதான் றெரியுமன்றே. | முற்சனனத்தி லார்ச்சித்த தபோபலத்தால ஞானத்தைப்பெற்ற ஞானிகளுக் கித் தமுறைமை தெரியாநிற்கும். எ-று. |

உலகென்பது - புவனாதிகளை.

உயிரெல்லா மென்றது முப்பத்து முக்கோடி தேவர்களையுஞ் சிருஷ்டித்ததெனவறிக.

இது பலபெயரும் பல வேழுவாயுங் கொண்டது.

இதற்கு வாதுளோத்தரத்தும் வாதுள சுத்தாக்கியினு மறிக.

“மின்னிடை யிமவான்” எனனும் திருவாசகம் திருப் பொற்சுண்ணத்தில் - ௪௫ - வது செய்யுளில் “ மட்டுசுத, தனையுடைக் கேள்வன மகனாகப்பன றமையனெம்மையனை யாள் கள்பாடி” எனவும், “சிறந்திடைக்கொல்கு மாட்குறு திருவயிற் றுளொருத்தி, பெற்றெம்க்குத்திற பின்னோகண மூவராம் மூவனாயுங், கறந்திடச்சொன்ன பொருளெலாருமூன்றவ பிற்கடைக்கால், செற்றிடச்சொன்ன பின்னோகவினாயகனையுத் தேவியுமே” எனவும் இக்கருத்தைப்பற்றி வந்தவாறு காண்க. “மயிலான் மணிச்சுக்கை” எனபதனும், “மகேசுனைமணியைப் பெற்ற, தாயிலானைத் தழுவுமெம்மனுவியே” எனவும அறிக (௭௭)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிதவுமது

சிவஞசத்தி தன்னையினாலும் - பரமசிவன் ஆன்மாக்களுக்குச் சாயத்தத்துவங்களையு முலோகங்களையு முண்டாகுவதாகவும், யோகிகளுக்கு உபகாரார்த்தமாகவும், சுயமேவ கருணையை நினைத்துப் பனாயாதி பஞ்ச சத்திகளையும் கிரமத்திலே தோனறப்பண்ணுவன,—சத்திகான சிவதசையினாலும் - அந்தப் பஞ்சசத்திகளு முத்தியுக்தராகிற சதாசிவாக்கு சிவசாதாக்கியாதிகளைத் தங்கள் தங்களிடத்திலே தோற்றுவிக்கும்,—உவந்திருவருட்பு ணாகதங் குலகுபியெல்லாமினாலும் - அந்தச்சத்திகளுடைய அம்சமான பஞ்சசாதாக்கியங்களிலும் சிவன பிரிவறப் புணர்ந்து நின்று எல்லாப் புவனங்களையும், புவனவர்த்திகளான ஆன்மாக்களுடைய தநுகரணங்களையு முண்டாக்குவ

ர்,—பவன்பிரமசாரியாகும் - இந்த உற்பத்திகளைப் பண்ணுவிக்கையால் பவனென்னும் நாமத்தையுடைய * வாகீசராகிய சிவன் விகாரமின்றித் † சந்ததம் பரப்பிரம ‡ வாச்சியமான பரமசிவ பாவனையைப் பண்ணிக்கொண்டிருப்பர் —பானமொழிகனலியாகும் - வாக்கு ரூபையான சத்தியும் || சங்கவர்ஜிதையாகிப் போயிருக்கும் —தவத்தரு ஞானத்தோராக இத்தன்மை தானறியுமென்றோ - பூர்வசன்மத்துத் தபோபலத்தினாலே குரு அநுக்கிரகத்தைப் பெற்று, ஞானநிஷ்டரான பெரியோர்களுக்கு இத்தன்மை ¶ அநுபவாரூடமாமென்றிதன் பொருள்.

* வாகீசர் - வாக்குக்கு அதிபதி, † சந்ததம் - எப்போதும், ‡ வாச்யம் - அர்த்தம், || சங்கவர்ஜிதை - விஷயப்பற்றில்லாதது. ¶ அநுபவாரூடம் - அநுபவத்தையேறினது.

[illegible]

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

முன்சொன்ன முறைமையிற் பேதப் பிரசவம் பேசுகின்றார்.

சிவஞ்சத்தி தனையீனுஞ் சத்திதான்சிவத்தையீன்றும் - சுத்த சிவசோதி மத்தியசோதி நிஷ்கள நிருத்த சிவத்தினின்றுந் தோற்றிய அதிக்கிராந்த வித்தக பரசிவம், அதிக்கிராந்த

விந்துக பராசத்தியைத் தோற்றுவித்தும், அந்த அநிக்கிராந்த விந்துக பராசத்தி அனதிக்கிராந்த விந்துக பரசிவமென்னும் அபரநாதத்தைத் தோற்றுவித்தும், அந்த அபரநாதம் அனதிக்கிராந்த விந்துக பராசத்தியென்னும் அபரவிந்துவைத் தோற்றுவித்தும், அந்த அபரவிந்துவாகிய பராசத்தி ஆதிசத்திமுதல் நாலுசத்திகளைத் தோற்றுவித்துத் தன்னோடு பஞ்சசத்திகளிற் பஞ்ச சாதாக்கியங்களையும் பஞ்ச மூர்த்திகளையும் தோற்றுவித்தும், பஞ்ச சாதாக்கியங்களையும் பஞ்ச மூர்த்திகளையும் தோற்றுவித்தும், பஞ்ச சாதாக்கிய பஞ்சமூர்த்தி மூர்த்திகளைப் பிர பஞ்சப் பிரமங்களையும் விட்டு சமஷ்டி சதாசிவமாய்த் தோற்றுவித்தும், சதாசிவன் மனோன்மனியைத் தோற்றுவித்தும், மனோன்மனி மகேஸ்வரனைத் தோற்றுவித்தும், மகேஸ்வரன் மகேஸ்வரியைத் தோற்றுவித்தும், மகேஸ்வரி உருத்திரனைத் தோற்றுவித்தும், உருத்திரன் உமையைத் தோற்றுவித்தும், உமை மாலைத் தோற்றுவித்தும், மால் மகாலட்சுமியைத் தோற்றுவித்தும், மகாலட்சுமி பிரமாவைத் தோற்றுவித்தும், பிரமா சரஸ்வதியைத் தோற்றுவித்தும்;

இப்படிச் சிவபேதம் சத்திபேதமாகும் சிவஞ் சத்தியிருவரும் மகாமாயோபாதி புவநோபாதி மணந்து, பரவாகீஸ்வரி பரவாகீஸ்வரர்களாயும், அனந்தேஸ்வரத் துவாரத்தினுலே மாயோபாதி புவநோபாதி மணந்து, அபரவாகீஸ்வரி அபரவாகீஸ்வரர்களாயும், கேவல மாயாதேகோபாதி மணந்து மாதாபிதாக்களாயும்,—

உவந்து இருவரும் புணர்ந்து - மருவிமணந்து, அங்கு சுத்தமார்க்கத்தில்,—

இங்கு - அசுத்தமார்க்கத்தில்,—

உலகுயிர் எல்லாமீன்றும் - தனுகரண புவனபோகங்கள், அணு சிவபேதம் அணு சத்திபேதமாம். முத்தான்ம சிவ

ன், முத்தான்ம சத்தி, சிவமூர்த்தி, சத்திமூர்த்தி, ஈசான ஈசானி, முதர்கிரம சதாசிவ மனோன்மனி முதல் நிரஞ்சனப் பிரமாசரஸ்வதி யீறாகவும், சாஞ்சனப் பிரமாதி ஸதம்ப பரியந்தமாகவும், எண்ணிறந்த ஆன்ம வர்க்கமனைத்தும் தோற்றுவித்தும்,—

பவள பிரமசாரியாகும் பாலமொழி கன்னியாகும் - சம்புபக்ஷ நயரியவயோக, சதுஷ்பக்ஷ நவசத்திபேதத் தோற்றமொடுக்கம் கிரியாசத்தி பிரவிர்த்தி நிவிர்த்தி வைசித்திரியமாத்திரமாகலாலும், உலாநந்த புவாநந்தேனபது-உதயோகித்துச் சங்கற்பித்து என்று பொருள் போதித்தலாலும், சிவன் நித்தியப் பிரமசாரி, சத்தி நித்திய கன்னிகையாம —

இத்தன்மை - இந்தரகசியம் தான,—

தவத்தரு ஞானத்தோர்களு - சமாதிகொடுக்குஞ் சாக்ஷாத்காரவானகளுக்கு, —

தெரியுமன்றே - காணப்படுந் தானே

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

சத்தியுஞ் சிவமுஞ் செய்யு மிச்செயல்களெல்லாம் நம்மனோர் பொருட்டாக நடித்துக் காட்டும் நாடகமாத்திரையே யன்றிப் பிறிதில்லை யென்பதாம்.

உம்மை - சிறப்பு.

“பங்கமும் வீடுமாய பசுபதார்த்தங்களல்லான்” என்பது முதலாக மேலைச் சூத்திரத்தின் விரித்துக் கூறியவற்றை, ஈண்டுருவகஞ் செய்து முகத்தாற் றொகுத்துணர்த்தி இவற்றின்றன்மை தனக் கெய்தலின்மை முதலைத் தெரித்துக் கூறியவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படிச் சிவசத்திகளுட் ஒன்றிலே யொன்றாகத் தோன்றுமோவெனனில்? அப்படித் தோற்றஞ் சொன்னாலும் சிவனுக்குஞ் சத்திக்கும் ஒருககாலுந் தோற்றமில்லையென றருளிச்செய்கிறார்.

சிவஞ்சத்தி தனையீன்றும் - சிவன சத்தியைத் தோற்றுவித்தும்,—சத்திதான சிவத்தையீன்றும்-அந்தச் சத்திதான சிவத்தைத் தோற்றுவித்தும்,—உவந்திருவரும் புணர்ந்திங் குலகுயிரெல்லாமீன்றும்-அவர்க ளிருவரும் பிரிப்பட்டுக் கூடினவிடத்திலே பிரபஞ்சத்தையும் ஆன்மாக்களையும் தோற்றுவித்தும்,—பவன பிரமசாரியாகும்-இப்படிச் சத்தியுடனேகூடிப் பிரபஞ்சத்தை யெல்லாம் பெற்றானே யாயினும், பரமேஸ்வரன் எப்போதும் பிரமசாரியாயே யிராநிற்பன —பானமொழிக் கன்னியாகும் - பால்போன்ற மொழியையுடைய பரமேஸ்வரியும் எப்போதுங் கன்னிகையாயே யிராநிற்பள். இந்தவுலகங்களையெல்லா முண்டாக்கியும் இப்படி யிருக்குமுறைமை யறிகிறவர்களில்லையோ வென்னில்?—தவந்தருஞானத்தோர்க் கிந்தத்தன்மைகான்றெரியுமன்றே-முற்சனனங்களிலேசெய்த தபோபலத்தாலே ஞானத்தைப் பெற்றவர்களுக்கே இந்த முறைமை தெரிவது

இதனாற் சொல்லியது சிவசத்திக ளிரண்டும் ஒன்றிலே யொன்றாகத் தோன்றியும், இவர்கள் தங்களிற் கூடிப் பிரபஞ்சத்தையெல்லா முண்டாக்கியும், பரமேஸ்வரன பிரமசாரியாயும் பரமேஸ்வரி கன்னிகையாயு மிருப்பர்களென்றும்; இந்த முறைமை ஞானவான்களுக் கொழியத் தெரியாதென்னு முறைமையும் அறிவித்தது.

‘சிவஞ் சத்தி’ ‘சத்தியாய்’ ‘சத்திதான்’ ‘சிவஞ்சத்தி’ ஆக நாலு திருவிருத்தமும் சுத்தமாயையிலே சிவசத்திகள் திருமேனிகொண்டு பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து நடத்தி நிற்கிற முறைமையைச் சொல்லியது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சிவஞ்சத்தி தனையீன்றும் - சிவதத்துவத்தினின்றுஞ் சத்திதத்துவந் தோன்றியும்,— சத்திதான் சிவத்தையீன்றும் - சத்திதத்துவத்தினின்றுஞ் சாதாக்கிய தத்துவந் தோன்றியும்,— உவந்திருவரும் புணர்ந்திங் குலகுயிரெல்லா மீன்றும் - உவப்புற்றிருவருங்கூடி - இவ்விடத்து சடப்பிரபஞ்சமுஞ் சேதனப்பிரபஞ்சமெல்லாவற்றையுந் தோன்றச் செய்து,— பவன்பிரமசாரியாகும் பான்மொழி கன்னியாகும் - இத்தத்துவமுதல்ய அனந்தருயிர்களோடியைவன வல்லவாகலின், பவன்பிரமசாரியாதலும் பான்மொழி கன்னியாதலு மேற்புடையவுமாமை,— தவந்தரு ஞானத்தோர்க்கு - முற்றவ விசேடத்தால் முதல்வனருட் பெற்ற ஞானிகட்கு,— இத்தன்மைதானே தெரியுமன்றே - சத்தியுஞ் சிவமுஞ்செய்யு மிச்செயல்களெல்லாம் நமக்கோ பொருட்டாக நடித்துக் காட்டும் நாடகமாத்திரையே! பிறிதில்லையென்பது விளங்கு மென்பதாம்.

‘பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லான்’ என்பது முதலாக மேலைச் சூத்திரத்தில் விரித்துக் கூறியவற்றை மீண்டுருவகஞ் செய்து முகத்தாற் றொகுத்துணர்த்தி; இவற்றின் றன்மை தனைக் கெய்தலின் முதலே தெரித்துக் கூறியவாறு.

## மறைஞானதேசிகர் உரை.

---

தத்துவஞானியி னிலக்கண முணர்த்துகின்றது.

தனுகரண புவனபோகந் தற்பரம் பந்தம்வீடெ
ன், றனுவினோ டெல்லாமாகி யடைந்திடுந் தத்துவ
ங்க, ளினிதறிந் திவைநிவிர்த்தி முதற்கலை யிடத்தேதீ
க்கி, நனிபர முணர்ந்தோனந்தத் தத்துவ ஞானியா
வான். (௭அ)

(இ-ள்.) தனுகரண புவன போகந் தற்பரம் பந்தம் வீடென் றனுவினோ டெல்லாமாகி யடைந்திடுந் தத்துவங்கள் — ஆன்மாவுக்குத் தனு கரண புவனமாகிய வினைகளை மாயாபந்தத்துக்குக் காரண மென்றும், அதற்கு மேலான சுத்தமாயையே யான்மாவுக்கு மோட்சத்துக்குக் காரண மென்றும், இப்படி யான்மாவுக்குப் பலவாகத் தத்துவ முதலியவைகள் பொருந்தாநிற்கும்.

இனிதறிந்து — இதை அசுத்தமாயா பந்தமென்றும், இதுவே சுத்தமாயா பந்தமென்றும், இரண்டினையு நன்றாக வறிந்து;

இவை நிவிர்த்தி முதற் கலை யிடத்தே தீக்கி — மந்திரமுதலிய வைக்கினையு மாசாரியனாலே நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளி லவைகளிருக்கும் வியாத்தி வியாபகங்களையு மறிந்து தீக்கையிலுஞ் சோதிக்கப்பட்டு,

நனிபர முணர்ந்தோ னந்தத் — அந்த ஞானாசாரியராலே மேலான சிவனுடைய சம்பிரதஞானத்தை யறிந்தவனே த

தத்துவஞானி யாவான்.

தத்துவஞானியாவான். இஃதன்றி விராகவ சத்தாலும் வாசனுபலத்தாலு மதனைவழிநின்றவன் தத்துவஞானியல்ல எ-று.

இதற்குச் சைவஞானோத்தரத்தனு சிந்திய விசுவத்துமதிக (௭௮)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.



மேல் தத்துவஞானியாவானது லக்ஷண முணர்த்துதல்.

தனுகரண புவனபோகந் தராபரம பந்தம்விடென் றனுவிரோதெல்லாமாகி யடைந்திருந் தத்துவங்கள்-ஆணவாதிகளுக்குக் கனமான குணமான தனுவாகவும் அந்தாப்பகிஷ்கரணங்களாகவும் × வாசஸ்தானமாகவும் போகவஸ்துக்களாகவும் விருத்தியாதி சாதாக்கிய தத்துவபரியந்தம் பொருந்தும். இந்தச் சாதாக்கிய தத்துவத்துக்குமேலிரண்டு தத்துவமும் விஞ்ஞானாநந்தமய கோசமானவையால் பரமமான பந்தமும தன்னிவிருத்தியே பரமமான மோக்ஷமுமாம்.—இவ்விதநிலை நிவிர்த்திமுதற் கலையிடத்தேறிக்கி னிபரமுணர்ந்தோனந்தத் தத்துவ ஞானியாவான்-இந்தத் தத்துவங்களை முப்பத்தாறினுடைய ஸ்வரூப சுவபாவங்களை நன்றாக வறிந்து, நிவிர்த்தியாதிகளிலே யடங்கிய தத்துவங்களையுங் கலைகளையுங்கூட நீக்கிச் சாந்தியதீதத்துக்கு மேலாய் ஆநந்த ஸ்வரூபமாகிய பரசிவத்தை அகண்டமாக தரிசித்தவன் ஷடத்துவாந்தத்தில் பரதத்துவ ஞானியானவன். அவனே ஜநநமரண மில்லாதவனென்றதன்பொருள்.

வாசஸ்தானம் -இருப்பிடம், புவனம்.

தநுக்ஷம் ஜாநோ நாதோ ரோ யமோ தா ஹ்லவது தகவா
நாம் விஜ்ஞாநா நாஞ்ஞ தவஸி தா:நோடியா ஸ்தநம் ஸந்த
ஸவமே தஸிவமெவதி நாதிஷ்டி .

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

தவா தரு ஞானததோர்க் கிததன்மைதான் தெரியுமென்றதனால், ஞானவா னிலக்கணங் கூறுகின்றார்.

தநு - தூலதேகம்,— கரணம் - சூக்குமதேகம்,— புவனம்-உலகம்,— போகம்-சாதனம் மாலை மகளிர் முதலிய போக்கியப்பொருள் இவைகள அசுத்தமாயாகாரியம்.— தற்பரம்- அதற்கு மேலாகிய தனுகரண புவனபோகமா யிருக்கின்ற சுத்தமாயாகாரியம் நிரனிறையே,— பந்தம் - அசுத்தமாயா காரியம்,— வீடு-அபரமுத்தி தானமாதலால் சுத்தமாயாகாரியம்,—என்று-இவைகளெல்லாம்,—அனுவிரோ டெல்லாமாகிய டைசதியின் தத்துவங்கள் - ஆன்மாவினோடு பொருந்தும் தத்துவ தாத்துவிகங்கள இவைகளை,—இனிதறிந்து - உத்தேசலக்ஷண பரீக்ஷைகளினாலே நன்குணர்ந்து, இது பரோக்ஷஞானம் ஆதலால் அபரோக்ஷஞானம் வரும்பொருட்டு ஆறத்துவாவாகப் பகுத்த முறைமையின்,—நிவிர்த்தி முதற்கலையிடத்தே நீக்கி-நிவிர்த்தி பிரதிஷ்டை வித்தை சாந்தி சாந்தியதீதை யென்கின்ற கலைகளிடத்துத் தள்ளி,—தனிபர முணர்ந்தோனை - தான் சின்மாத்திரமாய்ச் சேவித்து நின்று சிவனையுஞ் சின்மாத்திரமாகச் சிந்தித்துத் தற்பர சிவபரங்களை யைக்கியம்பண்ணித் தியானம்பண்ணினவன், —அத்தத் தத்துவ ஞானியாவ

சனப் பட்டவர்களே ஞானவானக ளென்றும், அருளிச்செய்கிறார்.

தனுகரண புவனபோகந் தற்பரம் பந்தமகீடென றுணர்வினெ டெல்லாமாகி யடைந்திடும் - சரீரமுங் கரணங்களும் உலோகமும் புசிக்கத்தக்க பொருள்களுமாகிய அசுத்தமாயையும், அதற்குமேலான மாயையும் கன்மத்தால் வந்த கட்டுப்பாடுகளும் சாலோகாதியான பதமுத்திகளும் என்று ஆன்மாவுக்கு இப்படி பலவாகப் பொருந்தாநின்ற — தத்துவங்க ளிலிருந்து - இந்தத் தத்துவங்களினுண்மையை நன்றாக விசாரித்துப்பார்த்துப் பொய்யென றறிந்து,— இவை நிவிர்த்திமுதற் கலையிடத்தே நீக்கி - இந்தத் தத்துவ ரூபத்தாரையும நிவிர்த்திமுதலான பஞ்சகலைகளுடனே நீக்கி,— நவிபர முணர்ந்தோனந்தத் தத்துவ ஞானியாவான் - மிக்கசிவனை யறிந்தவன் அந்த உண்மை ஞானியாவான்.

இதனாற்சொல்லியது, ஆன்மாக்களுக்குச் சர்வ வ்யாபாரமுமாய்ப் பொருந்தியிற்கிறது தத்துவமென்றும், அவையிற்றினுண்மையை யறிந்து அவையிற்றைப் பஞ்சகலைகளுடனே நீக்கிச் சிவனுடைய வுண்மையைத் தரிசித்தவனே சிவஞானி யாவனென்று முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

தனுகரண புவனபோகந் தற்பரம் பந்தம்வீடெனறு - தனுகரண புவனபோகங்களும் அவை மூலமாயுள்ள பெத்தமுத்திகளும்,— எல்லாமாகி யடைந்திடுந் தத்துவங்களென்று - அப்பெத்தமுத்திகளிற் படும் பேதங்க ளனைத்தும் மேற் கூறிப்போந்த தத்துவங்களாயின வென்றும்,— இவை யணுவினு

டிவிதறிந்து - அத்தத்துவங்க ளுயிர்களோ டியையவனவன்றி மூதல்வஞே டியையவன வல்லவென்றும், நூல்களாலும் பொருந் தமாற்றானும தெளியவுணர்ந்து,— நிவிர்த்திமுதல் கலையிடத் தே நீக்கி - அத்தத்துவங்களை நிவிர்த்திமுதலாகக் கழியுமுறை மையின வைத்துக்கழித்து;— நவிபர முணர்ந்தோன - அவற்றி ற்கு மேலாய் நிற்பசோனறினை பையததிரிபின்றி யுணரப்பெற் றோன யாவன அவன,— அந்தத் தத்துவ ஞானியாவான-பவ ன பிரமசாரியும பானமொழி கனிவுமாமெனனும் அவ்வுணமை யறிவுடையவனாவன.

தவததரு ஞானத்தோர்க் கித்தனமைதான றெரியுமெனப தனைத் தெரிததுணாததி மேலதனை வலியுணாததியவாறு

---

## மறைஞானதேசிகர் உரை.



ஆன்மாககட் கிப்படித் தத்துவஙகளைக கூடிக் கா
ரியப்படுததும செககாரணந்தா னெனிலீ கன
மக்ஷயம் பிறநது மலம்போவது காரண
மென றுணாத்துகிறா.

எல்லாமாய்க் தத்துவங்க ளியைந்ததே னுனுவுக் கென்னிற, றெல்லாய கன்மமெல்லாந துய்பபித்துத் துடைத்த றகும்பின், னில்லாமன் மூற்றுவித்து நீக்கவு கூடிநின்ற, பொல்லாத வாணவததைப போக்கவும் புகுந்ததனறே. (எகூ)

(இ-ள்.) எல்லா ஆன்மாக்கட் கிப்படித் தத்தவங்களைச்
மாய்தத்த் சிவன வெகுவிதமாகப் பொருததிய தேத
துவங்க ளி காரணந்தானெனவில்?
யைந்ததே னுனு
வுக்கென்னில்

தொல்லாய கன்மமெல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற்கும் — எடுக்குஞ் சனனங்கடோறும் பழையதாய் வருகிற பிராரத்த கன்மங்க ளெல்லாத்தையு மாயாமாசக ளதனைப் புசித்துத் தொலையாவிட்டது சனனமாறுதாதலால் அதனைப் புசித்துத் தொலைக்கவுங் காரணமாகவும்,

பினவில்லாமல் முறநுவித்து நீக்கவும் — சஞ்சிதகன்ம மேற்சகு முடவினைகட் பொருந்தவிப்பாசபடி நிக்கையினாலே சோதித்துப் போக்குகைக் காரணமாகவும்,

கூடிநின்ற பொல்லாத வாணவத்தைப் போக்கவும் புகுந்தனன்றே. — தாமிரத்துக்குக் காளிதஞ் சகசமாயிருக்குமாறுபோல ஆன்மாக்களுக்குச் சகசமாய்க் கூடிநிற்கும் பொல்லாதென்கக் கூறியவாணவத்தைப் போக்குகைக் காரணமாகவுமாதலால், சத்துவங்களைக் கூட்டிச் சிவன் காரியப்படுத்துவன. எ-று.

உம்மை எண்ணும்மை.

இதுவுஞ் சர்வஞானோத்தரம். (௭௧)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் ஆன்மாக்களுக்கு தநுகரணாதி பொருந்தவேண்டிய காரண முணர்த்துதல்.

எல்லாமாய்த தத்துவங்க ளியைந்ததே னறுவுக்கென்னில்—தத்துவங்க ளானவைகள தநுகரண புவனபோகங்களாய் ஆன்மாக்களுக்குக் கூடவேண்டிய தேனென்னில்?—தொல்லாய கன்மமெல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற்கும்—ஆன்மாக்களுக்குப் பிரவாக அநாதியாக வருகிற கர்மபலங்களைப் புசிப்பித்துத் தொ

லக்கவும்,—பின்னில்லாமை முற்றவித்து நீக்கவும்-மேலைத்தக் கன்மம் பொருந்தி நில்லாதவாறு இருவினை யொப்பாகிய பக்குவத்தைப்பண்ணிச்சஞ்சிதமாகிய சர்வகாமத்தையுமழிக்கவும்,—கூடிநின்ற பொல்லாத வாணவத்தைப் போக்கவும் புகுந்தன்றே-செம்புக்குக் களிம்புபோல ஆன்மாவுடனே கூடிநிற்கிற அஞ்ஞானத்தை யொழிக்கவும், தநுகரணாதிகள் பொருந்தினதென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

தநுகரணாதிகளுயிரொடு சாரக் காரண மேதென்னக் காரணங் காண்பிக்கின்றார்.

எல்லாமாய்த் தத்துவங்க ளிவையேதுக்கென னணுவுக்கென்னில் - தத்துவங்களெல்லாம் மாயையினுண்டா யுயிரை வந்து பொருந்திய தேதுக்கெனில்?— தொல்லாய கன்மமெல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற்கும்- மலபரி பக்குவத்தைப் பண்ணிச் சத்தி பதிவித்துத் தீக்ஷைசெய்வித்துச் சஞ்சித கன்மமெல்லாம் புசிப்பித்துத் தள்ளுதற்கும்,— பின்னில்லாமை முற்றவித்து நீக்கவும் - பிராரத்தம புசிக்குமிடத்துத் தியானபூசைமுதல் அனுஷ்டானங்களால் ஆகாமியஞ் சேவித்து நில்லாமற் கெடுத்துப் போக்கவும்,—கூடிநின்ற பொல்லாத ஆணவத்தைப் போக்கவும் புகுந்தவன்றே - சிவத்துவ விரோதியாகிய மூலமலத்தை முடிக்கவும் அடுத்ததன்றே.

தநுகரணாதிகள் மலபரிபாகத்துக்குக் காரணமாகில் விஞ்ஞானகலர்க்குத் தநுகரணாதி யில்லாமையால் மலபரிபாகம் வரக் காரணமில்லை. சத்தியம் நீசாத்தியது; சகலராய் முன்னிரு

எல்லாமாய்த் தத்துவங்க ளிசைந்ததே னணுவுக்கெனனில்-ஆன்மாவுக்குத் தத்துவங்களிப்படி வெகுவிதமாகப் பொருந்தினது வந்த காரணமென்று நீகேட்கில்,— தொல்லாய கன்ம மெல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற்கும்- பழையதாய் வருகிற பிராரத்த கன்மங்களை யெல்லாம் புசிப்பித்துத் தொலைப்பிக்கைக் கும்,—பின்னில்லாமல் முற்றுவித்து நீக்கவும் - சஞ்சித கன்மம் பின்பு இல்லாமல் மோசிவித்துப் போகவும்,—கூடினபொல் லாத வாணவத்தைப் போக்கவும் புகுந்ததன்றே - ஆன்மாவுக்கு அநாதியே சகசமாய் விடாது நீங்காமல் நிற்கிற அஞ்ஞானமான வாணவமலத்தை நீக்குவது நிமித்தமாகவும் பரமேஸ்வரனுடைய வாக்கினையாலே இந்தத் தத்துவங்க ளிவ்வகைத்து பொருந்தாநின்றது.

இதனாற்சொல்லியது, இந்தத் தத்துவங்கள் ஆன்மாவுக்கு பலபிரகாரமாக வந்து கூடினது கன்மத்தைப் புசித்துத் தொலைக்கைக்கும், சகசமாய்நின்ற வாணவமலத்தைப் போக்கவுமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

தத்துவங்க ளணுவுக்கு எல்லாமா யிசைந்ததெனனில் - அங்ஙனந் தத்துவங்க ளணுவினோ டெல்லாமாகி யடைந்தது யாதன்பொருட்டெனனில்?— தொல்லாய கன்மமெல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற்கும்-பழைய இருவினைகளை நுகர்வித்து நீக்குதற்பொருட்டும்,—பின்னில்லாமை முற்றுவித்து நீக்கவும்-அசனூற் பருவமெய்தியவழி மேலைக்கு வித்தாகாதவாறு நீக்கையா னவத்தை முதிர்வித்து பற்றறக் கழித்தற்பொருட்டும்,—

கூடிநின்ற பொல்லாத ஆணவத்தைப் போக்கவும் புருஷார்த்தன
றே - அவைகழியு முகத்தால் விரவிநின்று எல்லா அநர்த்தங்
கட்கு மூலமாகிய வாணவமலத்தைப் போக்குதற் பொருட்டு
மாம.

இவை ஏழு செய்யுளானு காலாங்கூற்றிற்படு முதநிரப்
பொருளும் வகுத்துக் கூறப்பட்டன.

☞ உ-சூ, ச-அதி, முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை

அவ் வாணவ விலக்கண மிஃதென வுணர்த்துகிறார்.

ஒன்றதா யநேகசத்தி யுடையதா யுடலுயாகி, ய
ன்றதா யானமாவின்ற னறிவொடு தொழிலையார்த்து,
நின்றுபோத் திருத்துவத்தை நிகழ்த்திச்செம் பினிற
களிம்பேய்ந், தென்றுமனு ஞானங்காட்டு மாணவ மி
யைந்துநின்றே.

(இ-ள்.) ஒன்றதா ய் — ஆணவமலஞ் சடமுமா யநேகமுமாகிற கட படாதிகளைப்போல வநித்தியமாய்விடு மாகையாற் பலவின்றி யொன்று யிருப்பதாய், அஃதொன்றாய் அநேக வான்மாககளை யெப்படி மறைககு மெனனில்?

அநேக சத்தி யுடையதாய் — அநேககோடி காரியத்தை யுடைத்தாயென்றது, "அதிக மறைப்பன வாயிரகோடி விருத்திகளே" என வுதிக. மல பரிபாகம் வந்த முத்தான்மாக்கட்கு மறைக்குந் தனது சத்திநீங்கிப் பெத்தான்மாக்களையே மறைபபதாய்,

உடனாய் விட்டு நீங்காததாய்,

அநாதியனாதாய் ஆணவமாகக் கொருகாலத்தில் வந்து கூடினதன்றி யநாதி சமவாயமாய்,

ஆணவமாவினாறை பிறவொடு சோர் புயின் யாகாது நின்று இந்தப் பூதவிருளானது பிரபஞ்சத்திற் பதார்த்தங்களையுங் காணும்படி மறைத்துத் தன்னையே காட்டாநிற்கும். இந்தவாணவமும் அதுபோலத் தன்னையுங் காட்டாமல் வேறொருபொருளையுங் காட்டாமலானமாக்களின் ஞானக் கிரியைகளை மறைத்துநின்று,

போகத்திருந்து வதனை நிறுத்தி புசிக்கத் தக்கவைகளில் விருப்பத்தை வைத்து, அஃதாவது மாயாபோக மசுசியுமாய்ப் பொல்லாக்கிருக்கிலு மதனைப் பாரக்கவொட்டாமல் அதிக மோகமாக் கதிரசெல்லுகை

செம்பினிற் களிம்பேய்ந்து செம்பினிற் களிம்பையொத்து அநாதியே சகசமாய்

என்றுமருஞ்ஞானங்காட்டு மாமையிடைத்து நின்றே. ஆணவமான தானமாக்களைப் பொருந்தி நின்றெப்பொழுது மஞ்ஞானத்தை விளக்குமதே சுபாவம். எ-று.

இதற்கு மிருகேந்திரத்து மதங்கத்துங் காண்க.

இந்த மலஞ் சகலரென்னப்பட்ட வானமாக்கட்குச் சகலாவத்தையி லாகமுதலிய கருவிகளுடனே கூடிநின்றவிடத்து மோகமுதலிய வெழுவகையினையுஞ் செய்விக்கும்.

மோகமாவது - சிவத்திரவிய மபகாரமுதலான நதிபாதகமென் றாசாரியனு லறிந்தாலும், அந்தவுணர்ச்சி சிறிதும் விளங்காம லறிவை மயக்கி யதியாதகாதியைச் செய்விப்பது.

மதமாவது - யாதாமொருவனை முன்மோகித்துப் புணர்ந்தபோது மடவாளைப்பார்த்திவள் தேவர்களை மடவாரிற் சிறந்தாள், இவளைப் பெறும்பேறுபோ லப்பேறெமக்கில்லையென்று மதிப்பது.

அராகமாவது - அவளைப் பெறுதபோது மிகவும் வருந்தியழும்படிக் காசையைச் செய்விப்பது.

விஷாதமாவது - தான வாஞ்சித்துப் புணர்ந்த மாதர் பிரிந்தபொழுது மிகவு மனோதுக்கஞ் செய்வது.

சோஷமாவது - சுரறத்தைவிட டெப்படி நீங்குவோம். யாமரிதகாற் குடும்பத்தை யாரதான் முயருவாரென றநதம னோதுக்கத்தாலே யுடம்பு புலருமபடி செய்விப்பது.

வைசித்திரியமாவது- சிவ னமக்குள்ள விருவினைப் பலங்களுக் கிடாகத தெய்விகமுதலிய மூவிதத்தால் வருவிப்பனென றுணாவை யழிப்பித் தவனென்னைக் கெடுத்தா னெடுத்தான, நானுமென்னை வணங்கினோனை வாழவித்தே னெனபிப்பது.

அரிசமாவது - புத்திர மித்திராதிகளைக் கண்டுகளித் தினியெமக் கொன்றுங் குறைவில்லை யென்பிக்கை.

இபபடி யாணவ காரிபத்தையறிக. (அ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மாயை கனம மிரண்டனறியில் ஆன்மாவுக்கு உபாதியாக ஆணவமென றொன்றுசொன்னது எவ்வாறுடைய தெனனின ? மேலாறு விருத்தத்திலே யகத ஆணவமல லட்சணபரிகைக்கு களை சங்கை யுத்தரங்களுடனே கூறுகின்றது.

ஆணவமொன்றகா யநேகசக்தியுடையதா யிசைந்து ஆதியன்றதா யுடனுய்ச் செம்பிற் களிம்பேய்த் தான்மாவின்றனதி

வொடுதொழிலை யார்த்துநின்று பொத்தருத்துவத்தை நிகழ்த்தி யென்று மஞ்ஞானங்காட்டும்; எனமாறிக்கொள்க. ஆணவமானது ஒன்றேயாய்த் தத்தத்பரிபாக காலங்களிலே விட்டு நீங்குவதான அநேக சத்தியுடையதுமாய்ச் சர்வாணமாககளிடத்திலும் சமயுக்தமான தெககாலத்தெனனில்? ஆதியல்ல-அதுவுமான்மாவைப்போல அநாதியாகையாற் செம்பு மதிற் களிம்புப்போலவாய்க் களிம்பு * ஸ்வர்ணத்தையை மறைத்தாற்போல அநாதியே ஆன்மாவினுடைய இச்சாஞானக கிரியைகளைத் தடுப்பதாய், ஆன்மாக்களுக்கு அநாதி சமயுக்தமாய்க் கேவலாவஸ்தையிலே ஆன்மாவினுடைய ஞானககிரியைகளை † நிபிடாந்தகாரத்தில் விழிதக கணபோல விருககுமபடிக்குத் தடுத்துநின்று, சகலாவஸ்தையில் மாயாபோகத்தைப் புசிக்கிறவளுகையும் பண்ணுமாகையால், முதலியல்லாத கேவல சகலாவஸ்தா காலங்களெல்லா மஞ்ஞானத்தையே பண்ணுமென றிதனபொருள்.

* ஸ்வர்ணத்தை - பொன்னுயிருக்கை. † நிபிடாந்தகாரம் - மிகுந்த இருட்டு.

[illegible]

இந்த ஆணவ முண்டென்கிறத்திலே பிரமாணமானது பிரத்யக்ஷமோ, அநுமானமோ ஆகமமோ? ‡ அதீந்திரியமாகையினாலே பிரத்தியக்ஷமல்ல. பிரசித்தமான அக்கினியையும் தூமத்தையும் பாகசாலாதிகளிலே கண்டு, பர்வதத்திலே × வியாப்பிய லிங்கமாயிருக்கிற தூமத்தைக் கண்டு சாத்தியமாயிருக்கிற அக்னியை நிச்சயிக்குமாப்போல ஆணவ ¶ சகசரிதமாக வொருவியாப்பிய ஏதுவைக் காணாதபடியாலே, அநுமானமுங்கூடாது.

‡ அதீந்திரியம் - இந்திரியத்துக்கெட்டாதது. × வியாப்பியலிங்கம் - வியாப்தியுள்ளது; வியாப்தியாவது-சாத்திய சம்பந்தம், புகைக்கு அக்னிசம்பந்தம்போல. ¶ சகசரிதம் - கூட இருப்பது.

பிரத்தியக்ஷானுமான விருத்தமாயிருக்கிற ஆகமமுங்கூடாதென்னில்? அநுமானமும், அநுமான சகசரிதமாயிருக்கிற ஆகமமுமுண்டு. அவையாவன? ஆன்மாவானவன் ஒன்றினாலேமறைக்கப்பட்ட சர்வஞ்ஞத்துவத்தை யுடையவன், கிஞ்சிஞ்ஞனாகையினாலே. யாதோரான்மா வொன்றாலே மறைக்கப்பட்ட சர்வஞ்ஞத்துவ மில்லாமலிருக்கிறான் அவன் கிஞ்சிஞ்ஞனல்ல; சிவனைப்போல. ஆன்மாக்களுடைய சர்வஞ்ஞத்துவத்திலே பிரமாணமுண்டானாலன்றோ ஒன்றினாலே மறைக்கப்பட்டவனென்றுசொல்லவேண்டுமென்னில்? ஆன்மாக்களுடைய ஞானசத்தியானது சர்வத்தையு மறியும் ஞானசத்தியாகையினாலே, ஈஸ்வரசத்தி போல இந்த அநுமானத்தினாலே ஆன்மாக்களுக்குஆணவத்தினாலே மறைக்கப்பட்ட சர்வஞ்ஞதை யுண்டென்பதற்கு வாதிவசனம். கிஞ்சிஞ்ஞதைக்கு இந்த ஆணவம் ஏதுவல்ல. கிஞ்சிஞ்ஞதைக்கு விஷய நியமனம் பண்ணுகிற கரணமே ஏதுவென்னில்? ஆன்மஞானம் சர்வகோசர மாகவேண்டும். அதில்லாதபடியினாலே நாமுன்னே சொன்ன வாணவமே கிஞ்சிஞ்ஞதைக்கு ஏது.

இந்த ஏதுவேண்டா, ஈஸ்வரனுக்குச் சர்வஞ்ஞத்துவம் ஸ்வபாவமானாற்போல, ஆன்மாக்களுக்குக் கிஞ்சிஞ்ஞதையே ஸ்வபாவமென்னில்? மோக்ஷத்திலே சர்வஞ்ஞனெனகிறது கூடாதேபோம். மோக்ஷத்திலும் சர்வஞ்ஞதையில்லையெனனில்? பந்தமுத்திகளில் பேதமின்றியிலேபோய் சுருதி விரோதமுமாம. ஆகையால் ஆன்மாக்களுக்கு சர்வஞ்ஞத்துவம் சுவபாவமல்ல ஆணவமல † நிரோதத்தினாலேயென்று சித்தம்.

† நிரோதம் - தகைவு.

ததுக்தம் பௌஷ்கரே - ஜ்ஞாத்ருத்வகர்த்ருத்வஸம்ஜ்ஞே ச பு கிஞ்சிஜ்ஞதாயத: । நகிஞ்சிஜ்ஞத்வஸத்பாவோ ஸ்வயம் ஸோமே நாவிநஶ்வர: ॥ யதா ஶிவஸ்ய ஜாயம் ஸோமே நவஸஞ்சார்த்தாணுகீ.

ஆன்மாக்களுடைய ஞானகிரியா § நிரோதத்துக்குக் கருமமேபோதும். ஆணவமெனறொன்றை யங்கீகரிக்க வேண்டியதில்லை யென்னில்? அந்தக் கருமம அசுத்தகாரத்துவாவில் புத்திநிஷ்டமாகையினாலும், பிரளயத்திலும் அதோமாயையிலே யிருப்பதாகையினாலும், மாயாகாரியமாகவு மனோவாக்கு காய வியாபார சங்கியமாய்ச் சுத்தாத்துவ வாசிகளை சம்பந்திக்க மாட்டாதாகையினாலும், சர்வான்மாக்களுக்கும் ¶ ஆவாரகமல்ல. கருமமே ஆவாரகமும் போகாதி யேதுவுமாமாகில் அநேகத்துவத் துவாரா ஆன்மாக்களுடைய ஞானகிரியைக்கு ÷ சககாரியொழிய ஆவாரகமல்ல.

§ நிரோதம் - தகைவு. ¶ ஆவாரகம்-மறைக்கிறது. ÷ சககாரி - துணை.

ததுக்தம் தத்ரைவ - யஸ்மாயஸ்மாத்கம் கஸ்மாத் ஆவைஞ்ஜகாவ்ருதஷதி । வ்யாவ்ருதாவாதயோர

[illegible]

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மலத்தின திலக்கணம் வாசிக்கின்றார்.

ஒன்றதாய் - ஏகமாய் அனேகமாய் அசேதனமுமாகில், அநித்தியமுமாய் மகாப்பிரளயத்திற் சகலான்மாக்களுக்கும் முத்தராகவே வேண்டும்.—அநேக சத்திபுடையதாய் - மலமேகமாதலால், மலந்தானே மறைத்து நீங்குமெனனில்? ஒருவனே முத்தனுங்காலத் தெல்லாரு முத்தராக வேண்டுமாதலால். அவரவரை மறைத்து முறைமையிற் பரிபக்குவம் வர நீங்கும் அநந்த சாமர்த்திய முள்ளதாய்,—உடனு யாதியன்றதாய் - சகசநித்தியமாய்,—ஆன்மாவினறிவொடு தொழிலையார்த்து நின்று - ஆவாரகசத்தியினு லான்மாவினது சர்வஞ்ஞத்துவ சர்வ கர்த்திருத்துவரூப சிவத்துவத்தை மறைத்திருந்து,—போத்திருத்துவத்தை நிகழ்த்தி - அதோநியாமிகா சத்தியினாலே போக்கியா சத்தியைப்பண்ணி,—செம்பினிற் களிம்பேய்ந்தென்று மஞ்ஞானங் காட்டு மாணவ மிசைந்து நின்றே - தாமிரத்திற் காளிதம்போல மூல மலம் பொருந்தி நின்றே யெக்காலமு மதியாமையைப் பண்ணும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——o——

*அநாதேல் ஈண்டெடுத்துக் கொண்ட ஆணவமலம் யாது? அதனால் வரும் பொல்லாமை யாது? அதனைப் போக்குமாறு யாங்ஙனம்? எனபாரை நோக்கிப் பதினேழு செய்யுளான் ஒழிபு கூறுகின்றார்.*

*மாணவிறந்த சத்திகளான் எண்ணிறந்த வுயிர்களினுஞ் செம்பிற் களிம்புபோல் அநாதியே விரவிநிற்பதொன்றாய்க் கேவலத்தில் ஆவாரக சத்தியானுஞ் சகலத்தில் அதோநியாமிகா சத்தியானும் அஞ்ஞான நிகழ்ச்சிக்குக் காரணமாய் நிற்பது; மேற்கூறிப்போந்த ஆணவமல மெனபதாம்.*

*போதகிருத்துவம் போகநுகர்ச்சிக்கு வினைமுதலாதற் றன்மை.*

*இதனுனே மலத்தின சொருபங் கூறப்பட்டது.*

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

*'எழுமுடல் கரணமாதி' என்ற திருவிருத்தத்தில் 'மாயை கொடுமலமொழிப்பன முனனோன' எனற பதத்துக்கு வியாக்கியானம் இவ்வளவும்வந்து முடிந்தது.*

*மாயையென்றது சுத்தமாயை அசுத்தமாயை யிரண்டுமெனக் கொள்க.*

*முனனோனெனறது பரமேஸ்வரன் என்னுமதுங் கண்டுகொள்க.*

***இதுவரை முன்-எக-செய்யுளின்முடிவு விடப்பட்டதால் இங்கு தலைப்பில் சேர்க்கப்பட்டது.**

முன்சொன்ன ஆணவமலத்தி னிலக்கணம் எப்படியென்ற மாணாக்கனை நோக்கி யருளிச்செய்கிறார்.

ஒன்றதாய் - ஏகமாயிருப்பதாய்,— அநேகசத்தி யுடையதாய் - எண்ணிறந்த சத்திகளையுடையதாய்,—உடனாய் - சகசமாய்,—ஆதியன்றதாய் - ஆநாதியே யுள்ளதாய்,—ஆன்மாவினறிவொடுதொழிலை யார்ந்துநின்று - ஆன்மாவினுடைய ஞானக்கிரியைகளை அகனியைக் காட்ட மறைத்தாற்போலச் சற்றுந் தோன்றாமல் மறைத்துநின்று,—போத் திருத்துவத்தை நிகழ்த்தி - புசிப்பிலே இருத்தியை மிகவுமுண்டாக்கி,—செம்பினிற் களிம்பேய்ந்து - செம்பிற் காளிதத்தைப்போல ஆநாதியேயுள்ளதாய்,—என்று மஞ்ஞானங்காட்டும் - எப்பொழுது மஞ்ஞானத்தை விளைப்பிக்கும்,—ஆணவ மியைந்துநின்றே - ஆணவமலமானது சர்வான்மாக்களையும் பொருந்திநின்று இங்ஙனஞ் செய்யும்.

இதனாற் சொல்லியது, ஆணவமலத்தின் காரணமொன்றென்றும் காரியம் வெகுவிதமென்றும் ஆன்மாக்கள் ஞானக்கிரியைகளை மறைக்குமென்றும் புசிப்பிலே இருத்தியையுண்டாக்குமென்றும் செம்பிற் காளிதம்போல அநாதியே யுள்ளதென்றும் எப்பொழுது மறியாமையை யுண்டாக்கிக்கொண்டு நிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அநேக சத்தி யுடையதாய் - எண்ணிறந்த சத்திகளான்,—ஆன்மாவினுடனாய்-எண்ணிறந்த வுயிர்களினுஞ்சேர்ந்து,—செம்பிற்களிம்பேய்ந்து-செம்பிற்களிம்புபோல,—ஆதியன்றதாய்-அ

காதியே,—இயைந்து நின்றே யொன்றதாய்-விரவிநிற்ப தொன்றா ய்,—தன்னறிவொடு தொழிலையாத்து நின்று-கேவலத்தி ஞான மாகிளறிவோடு தொழில்களை மறைத்தலாகிய ஆவாரக சத்தி யானும்,—போத்திருத்துவத்தை நிகழ்த்தி-சகலத்திற் போகநு கர்ச்சிக்கு வினைமுதலாதற் றன்மையாகிய அரோதியாமிக சத் தியானும்,—என்று மஞ்ஞானங்காட்டும்-என்று மஞ்ஞான நிக ழ்ச்சிகளுக் காரணமாய் நிற்பது,—ஆணவம்- மேற்கூறிப்போந்த ஆணவமலமென்பதாம்.

இதனானே மலத்தின சொரூபங் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேலைககவரதியும் பாசுபதியு மாணவ மலமெனப
தொன்றில்லை, மாயையே யுள்ளதென்ன,
அதனைக்குறித் துணர்த்துகிறார்.

மலமென வேறொன்றில்லை மாயாகா ரியமதென்
னி, லிலகுயிர்க விச்சாஞானக் கிரியைக ளெழுப்புமா
யை, விலகிடு மலமிவற்றை வேறுமன் றதுவேறுகி, யு
லகுடல்கரணமாதி யுதித்திடுமுணர்ந்து கொள்ளே.அக

| | |
|---|---|
| (இ-ள்.) மலமென வேறொன்றில்லை | ஆணவமல மென்றுசொல்ல வேறொன்றில்லை காணும். |
| மாயாகாரியமதென்னில் | நீ சொல்லுகிற மாயையினுடைய காரியத்தைக் காணுமென்னில்? |
| இலகுயிர்க்கிச்சா ஞானக கிரியைகளெழுப்பு மாயை | ஆன்மாக்கட்கு விளங்காநின்ற ஞானக்கிரியைகளை மாயைதானே யுண்டாக்கி யதனை விளக்கும். |

| | |
|---|---|
| விலகிடு மலயி வற்றை | இந்த ஞானக்கிரியைகளை யாணவமல் சத்தி தடுக்கும். |
| வேறுமன்று | இந்த வாணவ மலந்தா னான்மாக்கட்கு வேறன்றிச் சகசமாயே யிருக்கும். |
| அதுவேறுகி | அந்த மாயையான தாணவ மலத்துக் குப் பின்னமாய், |
| உலகுடல் கரணமாதி யுதித்தி டு முணர்ந்து கொளளே. | அந்த மாயைதா னிந்தப்பிரபஞ்சமுமா யானமாக்கட்குத தனுகரண புவனபோக ங்களுமாய்த் தோன்றுகிற்கும். இந்த வாணவ மாயையாகிய விவையிற்றின் பகுதியை யிப்படியென்றே யறிவாயாக. எ-று. |

இவை காலுக்கு மகங்கமெனவறிக.

இதற்குக் காரண மேற்கவியிற் காண்க (அக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல் மாயாகாரியமே ஆனமா வாரகமென்பதை மறுத் துணர்த்துதல்.

மலமென வேறொன்றில்லை மாயாகாரியம தென்னில் - ஆணவ மலமென வொன்றில்லை, மாயா காரியமாகிய அவைரா க்கியமான ராகமே ஆன்மஞான வாரகமென்னில்? உள்ளது. ராகமானது நின்மலனாயிருக்கிற ஆனமாவை யாவரிக்கமாட் டாது. ஆவரிக்குமென்னில்? முத்தான்மாக்களையும் ஆவரிக்க வேணும். முத்தான்மாக்களுஞ் சிவனும் ஏகப்பிரகாரமாகையா ல், சிவனையும் ஆவரிக்குமென்று சொல்லவேணும். அப்படி முத் தர்களுஞ் சிவனு மொருக்காலும் ¶ போக ஸகதராகக் கண்ட தில்லை. இதன்றியும் பிரகிருதி சன்யமாகிய புத்தி தர்மமானது

ராகமொகையால், அநித்தியம். அநித்திய வஸ்துவானது நித்தியவஸ்துவான சிற்சத்தியை யாவரிக்கமாட்டாது.

¶ போகஸக்தர் – போகத்தில் பற்றினவர்.

தத்ரைவ பௌஷ்கரே – ராகோ(அ)ஸ்தி காரணம் [illegible]

ஆகில் புத்திகதராகமல்ல, மாயாகாரியமாகிய ராகாதியே யென்னில்? மேலதுவுங் கூடாது;—

இலகுயி ரிச்சாஞானக் கிரியைக ளெழுப்புமாயை விலகிடு மலமியற்றை வேறுமன்று-ஆன்மாக்களுடைய விளங்கப்பட்ட இச்சாஞானக் கிரியைகளை, மாயாகாரியமானது ஆணவமலத்தைச் சிறிதுநீக்கி விஷயோன்முகத்தைப் பண்ணுவிக்கும். ஆணவமலமானது, இச்சாஞானக் கிரியைகளைப் பிரகாசிக்கவொட்டாமல் வேறாகநின்று தடுக்கும்.—

அது வேறாகி யுலகுடல்கரணமாகி யுதித்திடுமுணர்ந்துகொள்ளே – அந்த மாயாகாரியமானது ஆன்மாக்களுக்கு அந்நியத்தும் × பின்னமாக வசிக்கிற வுலோகங்களும் தூலதேகங்களும் † அக்தர் *பாகிய கரணங்களுமாக சிருட்டிகாலத்திலே யுதித்துப் பிரளயகாலத்திலே லயத்தை யடைவதாகையால், மறு

யாகாரியம் ஆன்மஞானா வாரகமல்ல; ஆணவமலமே ஆன்மஞானாவாரகமென் றறிந்து கொள்வாயாக வென்றிதன்பொருள்.

× பின்னமாகவசிக்கிற - வேறாய் வாசஞ்செய்கிற. † அந்தர் - உள், * பாகியம் - வெளி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

மாயாகாரிய விசேஷமே மலம், வேறில்லை யென்னும் பாசுபத முதலோரையும்; பிரகிருதி காரிய விசேஷமே மலம் வேறில்லை யென்னும் சாங்கியன முதலோரையு மறுத்துரைக்கின்றார்.

மலமென வேறொன்றில்லை மாயாகாரியம தெனவில் இவ்வுயிர்க்கிச்சாஞானக் கிரியைகளெழும்புமாயை - சித்ரூபப் பிரகாசனாகிய ஆன்மாவின இச்சாஞானக் கிரியைகளை மாயை காரியத் துவாரத்தினாலே விளக்கும்,—விலகிடு மலமிவற்றை - மாயாகாரிய கலாதியில்லாதபோது பிரளயகலாவத்தையி லிச்சாஞானக் கிரியைகளைச் சிற்றறிவு மில்லாதபடி மறைக்கும்,—வேறுமன்று - அந்த மலம் அறிவோடு வேறின்றி முத்திபரியந்தம் பிரிவின்றி நிற்கும்.—அது வேறாகி - அந்த மாயாகாரியம் பிரிந்து கூடும் பந்தமாகி,—உலகுடல் கரணமாகி யுதித்திடும் - புவனஜாலதேக சூக்குமதேக முதலிய பொருளா யுற்பவிக்கும்,— உணர்ந்துகொள்ளே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

உயிரோடொற்றித்து நின்று அறிவிச்சை செயல்களை மறைப்பதாகிய மலத்துக்கும் வேறன்றி அவற்றை விளக்குவ

தாகிய மாயைக்குந் தம்முள் வேற்றுமை பெரிதாகலான், அஃதறியாது மாயையே மலமென்பார் மதம் போலியென்பதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

---

மேல் ஐக்கவாதி ஆணவ மலமென்ப தொன்றில்லை, மாயையே யுள்ளதென்று சொல்ல, அவனை மறுத தருளிச்செய்கிறார்.

மலமெனவேறொன்றில்லை மாயாகாரியம தென்னில் - அசுத்தமாயையிலுண்டான காரியங்க ளானமபேதங்களை மறைக்குமதொழிந்து இதற்கு வேறாக நீர் சொல்லுகிற வாணவ மலமென்ப தொன்றில்லையென்று நீசொல்லில்?—இலகுயிர்க்கிச்சாஞானக் கிரியைகளெழுப்புமாயை - விளங்காநின்ற வான்மாக்களுக்கு இவர்களுடைய விச்சாஞானக் கிரியைகளை மாயை தோற்றுவிக்கும். ஆகையால் மாயை மறையாது,—விலகிடு மலமிவற்றை -இந்த இச்சாஞானக் கிரியைகளை ஆணவமலந தடுக்கும்,—வேறுமன்று - இந்த வாணவ மலந்தான ஆனமாக்களுக்குச் சகசமாயிருக்கும். மலமபோல் மாயை சகசமல்லவோ வெனனில்?—அதுவேறுகி-அந்தமாயையானது சகலத்திற் கூடியும் கேவலத்திற் பிரிந்தும் நிற்கையால் வேறுமாய். இதுவன்றியும்,—உலகுடல்கரணமாகி யுதித்திடு முணர்ந்துகொளே - பிரபஞ்சமுமாய் ஆனமாக்களுக்குத் தனுகரண புவன போகங்களுமாய்த தோன்றும் மலத்தின் மறப்பைப் போக்குகிறது மாயை யென்றறிவாயாக.

இதனுற் சொல்லியது ஐக்கவாதி ஆணவமலமென்ப தொன்றில்லை மாயையேயுள்ளது என்று சொல்ல, அவனை மறுத்து

ஆணவ மலமென்ப தொன்றுண்டென்றும், ஆன்மாக்களுக்கு அநாதியே சகசமாய் ஆன்மபேதத்தை மறைக்குமென்றும் மாயா காரிய மக்கமறப்பையை நீக்குமதொழிந்து மறையாதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு·

மலமென வேறொன்றில்லை - மலமென வொருபொருள் வேறில்லை,—மாயாகாரியமதெனவில் - மாயாகாரியமே மறைகற்றொழிலைச் செய்யுமெனின்? அற்றன்று —இலகுயிர்க்கு-விளங்காநின்றவுயிர்கட்கு,—இச்சாஞானக் கிரியைக ளெழுப்புமாயை - இச்சை யறிவுசெயல்களை வேறுநின்று விளக்குவதாகிய மாயைகளும்,—வேறுமனறிவற்றை விலக்கிடும்மலம் -உயிரோ டொற்றித்துநின் றிச்சையறிவு செயல்களை மறைப்பதாகிய மலத்திற்குந் தம்முள வேற்றுமை பெரிதாகலின்,அஃதறியாது,—உலகுடல் கரணமாகி-உலகு முடலுங் கரணமுமாகி,—அதுவேறாகியுதித்திடும்-உயிர்களு வேறாகியுதிக்கு மாயையே மலமெனபார் மதம்போலியெனபதனை,—உணர்ந்து கொள்ளே - அறிவாயாக வென்பதாம்.

## மறைஞானதேசிகர் உரை.



மேலதற்குத் திருட்டாந்த முணர்த்துகின்றார்.

மாயையே யான்மஞானக் கிரியையை மறைத்துநிற்கும், தூயவிப் பருதிதன்னைத் தொடர்முகின் மறைத்தாற்போலப், போய்முகி லகலச்சோதி புரிந்திடு ம

துவேபோலக், காயமு மகலஞானத் தொழில்பிர காச
மாகும். (அக)

(இ-ள்.) மாயையே யான்ம ஞானக்கிரியையை மறைத்துநிற்கும் — அந்த மாயைதானே யான்மாவினது ஞானக்கிரியைகளை மறைத்து நிற்கும். அஃதெவ்வாறெனில்?

தூயவிப் பருதி தன்னைத் தொட்டாமுகின் மறைத்தாற்போல — களங்காதி குற்றமற்ற வாதித்தனுடைய கிரணங்களை யெப்படிக் காளமேகமானது அந்தப் பிரகாசத்தைச் சற்றுந் தோன்றாமன் மறைக்குமாறுபோல.

போய்முகிலகலச்சோதி புரிந்திடுமதுவேபோல — உடனே தானேயந்த மேகத்தை யொருவாயுவானது வந்தடித்தவாறே யாதித்தனுடைய பிரகாசமானது விளங்கினாற்போல,

காயமு மகல ஞானத் தொழில்பிரகாசமாமே. — மாயாகாரியமாகிய சரீரத்துடனெவ்வளவு கூடியிருந்தானவ்வளவு மறைபடே யிதனை யெப்பொழுது விட்டு நீங்கினனப்பொழுதிவனுடைய ஞானக்கிரியைகள் பிரகாசியா நிற்கும். எ-று.

ஏகாரந் தேற்றம். (அக)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் மாயையானது தன்னுடைய ‡ ஆவரண சத்தியினாலே ஆன்மஞானத்தை யாவரித்துத் தனது காரியமாயிருக்கிற

× விக்ஷேபசத்தியினாலே விஷயோன்முகத்தைப் பண்ணுவிக்குமாகையால் மாயையே ஆன்மஞானாவாரகமொழிந்து ஆணவம வேண்டாமெனபவனை அறுவுறுத்தல்.

‡ ஆவரணம்-மறைதல் × விக்ஷேபம்-தள்ளுதல், தோற்றுதல்.

தூயபருதிச் சுடர்தனை முகின்மறைத்தாற்போல ஆன்மஞானக் கிரியையை மாயையே மறைத்து நிற்கும் முகில்போயகலச் சோதி புரிந்திடு மதுவேபோலக் காயமு மகலஞானத்தொளி பிரகாசமாமே-சூத்திரமான † ஆதித்தனுடைய பிரகாசத்தை மேகமானது மறைத்தாற்போல, ஆன்மாக்களுடைய ஞானக்கிரியைகளைக் காரணமாகிய மாயைதானே ஆவரண சத்தியினாலே மறைத்து நிற்கும் மேகமானது நீங்கினவளவில் சூரியகிரணம் பிரகாசித்தாற்போல மாயாமேகம் நீங்கவே, ஆன்மாக்களுடைய ஞானப்பிரகாசமானது விளங்குமென்ற திரண்டபொருள்.

† ஆதித்தன் - சூரியன்

இது பூர்வபடசம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

பின திருஷ்டாந்தபூர்வமாய்ச்சொல்லிதிரஸ்கரிக்கின்றார்.
தொழில் - கிரியை
மற்றவை வெளிப்பொருள்.

இது பூர்வபட்சம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

இவ்வுரை-அ௯-செய்யுளிற் காண்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மீளவு மானமபோதத்தை மாயை மறைக்குமென்றும், ஒரு திட்டாந்தமிட்டு ஐக்கியவாதி சொல்லுகிற முறைமையு மருளிச் செய்கிறார்.

மாயையே யான்மஞானக் கிரியையை மறைத்துநிற்கும் - அசுத்தமாயைதானே யான்மாவினுடைய விச்சாஞானக்கிரியை களை மறைத்துநிற்கும். அதனைப்போலவெனனில்? — தபனப்பரு திரளையிற் சுடர்முகில் மறைத்தாற்போல - சுத்தமாயிருக்கப் பட்ட வாதித்தனது பிரகாசத்தை மேக மறைத்தாற்போல இது அவனைப்பெத்தத் தன்மை மேல்தன்னுடைய முத்தித்தன்மை சொல்லுகின்றான். — போய்முகி லகலச்சோதி புரிந்திடுவதுவே போல - அந்த மேகமகன்றுபோக ஆதித்த கிரணங்கள் பிரகாசித்தாற்போல, — காயமுமகல ஞானத்தொழிற்பிரகாசமாமே - தேகமுநீங்கவே அநாதியிலுள்ள ஞானம் பிரகாசியாநிற்கும்.

இதனாற் சொல்லியது, ஐக்கியவாதி ஆதித்த கிரணத்தை மேக மறைத்தாற்போல வானமபோதத்தை மாயை மறைக்குமது பெத்தமென்றும், அதுவிட்டு நீங்குகிறதே முத்தியென்று, தன்மதஞ் சொன்னுன்னென்று முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

இவ்வுரை - அ௩-வது செய்யுளிற் காண்க.

---

## மறைஞானதேசிகர் உரை.

இதுவுமது.

பரிதியை முகின்மறைப்பப் பாயொளி பதுங்கி னாற்போ, லுருவுயிர் மறைகஙின்ஞானக் கிரியைக ளொளிக்குமாகுங், கருதிடு மிச்சாஞானக் காரியங் காயம் பெற்றான், மருவிடு முயிர்க்குக்காயம் வந்திடா விடின் மறைபடுமே. (௮௫)

(இ-ள்) பரிதியை முகினமறைப்பப் பாயொளி பதுங்கினாற்போ லுருவுயிர மறைக்கின ஞானக கிரியைக ளொளிக்குமாகும் — சூரியனை மேகமானது மறைத்தாற்போல சூக்குமதூலசரீரங்களானவை ஆன்மஞானத்தை மறைக்குமாகில், ஆன்மஞானக் கிரியைகள் பிரகாசியாமல் அப்பிரகாசமாய் விடும்.

கருதிடு மிச்சாஞானக காரியங் காயம் பெற்றான மருவிடும் — சூக்கும தூல சரீரமுண்டானாற் சிற்சத்தி காரியமாக வறிபப்படு மிச்சாஞானக்கிரியைகள் பிரகாசமாய் விடயங்களிலே பொருந்தும்.

உயிர்களுக் காயம் வந்திடாவிடின மறைப்பே. — மாயாகாரிய மாகத் தனுவுண்டாகாவிடில் விடயதரிசனங் கூடாதென றிதனபொருள்.

மாயாதேகமுண்டாகில் ஆன்மாக்களுடைய விச்சாஞானக் கிரியைகள் பிரகாசிக்கும்; மாயாதேக மில்லையாகில் இச்சாஞானக் கிரியைகள் பிரகாசியாவெனறு மன்னுவய வெதிரேகங்களினால், மாயை யானமாக்களுடைய விச்சாஞானக் கிரியைகளைத் தடுப்பதல்ல.

இந்தப் பாட்டு மேற்பாட்டத்தி லில்லாததனாலே சிவாக்கிரவுடையா ருரைபார்த் தெழுதினது. (௮௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் சித்தாந்தம்.

பருதியை முகின் மறைப்பப் பாயொளி படாங்கிலாற்போ லுருவுயிர் மறைக்கில் ஞானக் கிரியைகளொளிப்படாகும - சூரியனை மேகமானது மறைத்ததுபோலச் சூக்ஷும ஸ்தூல சரீரங்களானவை ஆன்மஞானத்தை மறைக்குமாகில் ஆன்மஞானக் கிரியைகள் பிரகாசியாமல் அப்பிரகாசமாய்விடும்.—இச்சாஞானக் காரியங் காயம்பெற்றன் மருவிடும்- சூக்ஷும ஸ்தூல சரீரமுண்டானால் சிற்சத்தி காரியமாகப்படு மிச்சாஞானக் கிரியைகள் பிரகாசமாய் விஷயங்களிலே பொருந்தும் —உயிர்களுக்குக் காயம வந்திடாவிடின் மறைப்பே - மாயாகாரியமாகிய தநுவுண்டாகாதாகில் விஷயதரிசனங் கூடாதென நின்றபொருள்.

மாயாதேக முண்டாகில் ஆன்மாக்களுடைய இச்சாஞானக் கிரியைகள் பிரகாசிக்கும். மாயாதேக மில்லையாகில் இச்சாஞானக் கிரியைகள் பிரகாசியாதெனனும் அந்நுவய வியதிரேகங்களினாலே மாயை ஆன்மாவினுடைய இச்சாஞானக் கிரியைகளைத் தடுப்பதல்ல.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

இனிச் சித்தாந்தம் வருமாறு.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

மாயை உ[illegible]டல் கரணமாய் வேறுநின்றே உயிரை மறை

த்தலையுமென்பது உடம்பாட்டினு மெதிர்மறையினும் பரிதி முகி லுவமையினைத் தறியப்படு மென்றது பொருந்தாது. மேகம்போல மாயை மறைக்குமாயின், மறைத்தலானாகிய காரியம், பரிதியிற்போல உயிரின்கணிகழுதல் வேண்டும்; அஃதின்மையினென்பது உடம்பாட்டினு மெதிர்மறையினும் வைத்து அறியப்படுதலான, அவ்வுவமை யீண்டைக் கேலாதெனபதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் ஐக்கவாதிமதத்தை மறுத் தருளிச்செய்கிறார்.

பருதியை முகில்மறைப்பப் பாயொளி யொதுங்கினாற்போல் - ஆதித்தனை மேக மறைக்கவிட்டு விளங்காதின்ற கிரணங்களொதுங்கினாற்போல,—உருவுயிர் மறைக்கில் ஞானக் கிரியைகளொளிக்குமாகும்- ஆன்மாவைத் தேகமறைத்தபோது இவனுடைய விச்சாஞானக கிரியைகளு மறையாநிற்குமென்று நீசொல்லில்?—கருதிடுமிச்சாஞானக் காரியங்காயம்பெற்றால் மருவிடுமியிர் கரு-ஒன்றைச்சுட்டி யறியப்பட்ட இச்சையும் ஞானமுங் கிரியையு மானமாத் தேகத்துடனே கூடினபோ துண்டாகாநிற்கும்.—காயம்வந்திடாவிடில் மறைப்பே - ஆன்மா தேகத்தோடேகூடி நில்லாதபோது இச்சாஞானக் கிரியைகள் தோன்றாமல் மறையும்.

இதனாற் சொல்லியது; ஆதித்தனை மேகம் மறைத்தாற்போல வானமாகவுக்குஞ் சரீரம்பொருந்தினால், ஆன்மபோதத்தை மறைக்குமென்றது அத்தமாகாதென்றும்; மாயாதேகம் பொருந்தினா லான்மாவி னிச்சாஞானக் கிரியைகள் சிவிக்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

தூய அப்பருதிதன்னைச் சுடர்முகில் மறைத்தாற்போல - தூயதாகிய பருதியை மின்னலையுடைய மேகம் வேறுநின்று மறைத்தாற்போல,—மாயையே யான்மஞானக் கிரியையை மறைத்து நிற்கும் - மாயையே யுலகுடல் காரணமாய் வேறுநின்று ஆன்மாவினிச்சாஞானக் கிரியைகளை மறைத்த லமையுமென வுடம்பாட்டானும்,—முகில்போ யகலச் சோதி புரிதருமதுவே போல - அம்மேகம் நீங்க பருதிவெளிப்பட்டுத் தோன்றுமாறுபோல,—காயமு மகல ஞானத்தொழில் பிரகாசமாமே - காயமாகிய மாயை நீங்க ஆன்மாவி னிச்சாஞானக்கிரியை பிரகாசித்த லமையுமென எதிர்மறையானும், இவ்வுவமையினைத் தறியப்படு மென்றது பொருந்தாது.—பருதியை முகின்மறைப்பப் பாயொளி பதுங்கினாற்போல்-பருதியை மேகமறைப்பப் பரவிய வொளிமழுங்கினாற்போல,—உயிருரு மறைக்கின ஞானக் கிரியைக ளொழிக்குமாகும் - உயிரை யுருவாகிய மாயை மறைப்ப ஆன்மாவி னிச்சாஞானக் கிரியைகள் ஒழிதலாகிய வுடம்பாட்டானும்,—கருதிடுமிச்சாஞானக் காரியங் காயம்பெறலால்- கருதுகின்ற ஆன்மாவி னிச்சாஞானக் கிரியைகள் மாயாதநுவைப்பெறலால்,—மருவிடு முயிர்க்குக்காயம் வகுத்திடாவிடின மறைப்பே - விளங்கு மான்மாவிற்கு மாயாதநு வில்லையெனின் மறைதலாகிய வெதிர்மறையானும் வைத்தறியப்படுதலான; அவ்வுவமையீண்டைக் கேலாதெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

இதுவுமது.

போதகா ரியமறைத்து நின்றது புகன்மலங்கா,
ணோதலாங் குணமுமாக வுயிரினு ளிரவலாலே, காத
லா லவித்தைசிகத் தருங்கலை யாதிமாயை, யாதலா
லிரண்டுஞ்சோதி யிருளென வேறுமன்றே. (௮௪)

(இ-ள்.) போதகாரிய மறைத்து நின்றது புகன மலங்காணா — இந்த விரண்டுங் கூடியிருக்கையினாலே சரீரமுண்டாம். அஃதுண்டாகவே யந்தவான்மாவினுடைய ஞானக்கிரியைகளை மறைத்து நிற்கிறது ஆணவமலங்காண.

ஓதலாங் குணமுமாக வுயிரினுள் இரவலாலே — அந்த மறைப்பான ஆணவமான மாவுக்குச் சகசமாய் நிற்கையால், அதனைக் குணங்காணுமென்றுசொல்லில் அந்தகுணமாகில் அக்கினிக்கு வெம்மைபோலவுஞ் ஜலத்துக்குத் தட்பம்போலவும் பிரிக்கப்படாதிருக்கவேண்டும். அஃதன்றிக் குணமாயிரிற் குணியுமழியுமாகையால் இதுகுணமன்று.

காதலாலவித்தைசிகத் தருங்கலை யாதிமாயை — மாயையானது தனது காரியமாகிய கலைமுதலியவற்றால் ஆன்மாக்களுக்கு மலத்தை நீக்கிப் போகங்களைப் புசிப்பிக்கக் கண்டோமே!

ஆதலாலிரண்டுஞ் சோதியிருளென வேறுமன்றே — ஆகையா லசுத்தமாயை யான்மாக்கட்குத் தீபம்போலவு மலமந்தகாரம்போலவு நிற்கின்ற இரண்டுஞ் சுபாவமாயிருக்கையால் பேதமாக வங்கீகரிக்கப்பட்டது. எ-று.

உம்மை முற்றும்மை. (௮௪)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிதுவு மதற்கே புறநடை.

போதகாரிய மறைத்துநின்றது புகனமலங்காண்- ஸ்வரூபஞான காரியமாகிய இச்சாஞானக் கிரியைகளைத் தடுத்துநின்றது நாமுன்னே சொல்லப்பட்ட வாணவ மலமங்காண்;—இதலாங் குணமுமாக வுயிரினுள் விரவலாமோ - அநாதியே ஆன்மாக்களுக்கு விடப்படா பற்றனாதியே பொருந்தி யிருக்கையால், சாத்துவிகாதி குணங்கள் காமாது குணமாக வொருகத்தையொருகுணம் பொருந்தின காலத்து லவனுக்க தகயமாயிருக்கவும், அது அவனுடைய குணமென்று சொல்லுவதுபோல; இந்தவாணவத்தையு மான்மாவுக்குக் குணமென்று உபசாரமாகவுஞ் சொல்லலாம் —சாதலாலவிதனைச்சிந்த மாயைகலையாதி கருமாதிலாலிரண்டிரு சோதியிருளென வேருமன்றோ - ஈஸ்வரனுடைய இச்சாநுவிராயிர்யாக மாயையானது ஆன்மா வாரகமாகிய வாணவம நீங்கும்படிக்குக் கலைபாதி தத்துவங்களைத் தனவிடத்திலே யுதிப்பிக்கு மாகையினாலே, ஆன்ம ஞானாவாரகமான வாணவமு மாயையு மிருளுஞ் வெளியும்போலே பேதமே யாகையால், ஆவரண நிவிர்த்தி யாதத்தமாகக் கலாதிகளை யுதிப்பிக்கிற மாயையு மாவரண நிவிர்த்தி பண்ணுவதே யொழிந்து ஆவரணமாகாது. அதெப்படியெனனில்? காரணத்தினுடைய குணங்களே காரியத்தி லுண்டாம; தீபத்துக்குக் காரணமான அக்னி அந்தகார மாகாததுபோல ஆகில் மாயையே சிற்சத்தி அபிவியஞ்சமாகப்போகும,கலாதி சிருட்டியேதெனனில்? பிருதிவி-ஈட்டமானது கடருபமாயே சலாகரணக் கிரியைகளைப் பண்ணுமாப்போலவும, தத்துவானது படருபமாயே+ சீதநிவாரணம பண்ணுவதுபோலவும், மாயையுங் கலாதிருபமாய்ச் சைதந்ய அபிவியத்தையைப்பண்ணும். ஆகையால் மாயையும் மாயாகாரியமான சூக்கும ஸ்தூலசரீரமும் சைதந்ய ¶ நிரோதகமல்ல ; ஆணவமே சைதந்ய நிரோதகமென்று சித்தம்.

‡ அருவிதாயிநீ - அருசாிக்கிறது. + சிதநிவாரணம் - குளிரைப்போக்குதல். ¶ நிரோதகம்-மறைக்கின்றது.

ததுக்தம் தந்த்ரே - நசஜ்ஞாநம் ஸ்வாதந்த்ர்யத: கார்யார்த்த ப்ரகாஶிகா | கார்யார்த்த ப்ரகாஶிகா யத்ர ஸ்வாதந்த்ர்யாத் ஜ்ஞாநம் தத்ர து || யதா ப்ரகாஶம் கரோதி ஸூர்யஸ் ஸம்ஹாரவஹ்நி | நிஜப்ரகாஶம் வஹ்நிஸ்ஸ்வப்ரகாஶிக: | தத்ஜ்ஞாநம் ஸர்வதா வ்யாப்ய ஸாமாந்யகார்யேஷ்விதா || காமேஷ்வரணேஷு கார்யேஷு ஸாமாந்யம் தத்ஜ்ஞாநதா | யதா தத்ஸ்வகார்யேஷு வர்த்தமாநம் ஸ்வாதந்த்ரம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

மலம் அனுமானத்தா லறியப்படுமென்ப தரைக்கின்றார்.

போதகாரியம் - அறிதற்றொழில்

இச்சை கிரியையிலடங்குமாறுபோலக் கிரியை ஞானத்தி லடங்கும.

மலந் திரவியமானாலும் பிரிப்பின்றி நிற்றலால் குணமாக உபசரிக்கப்படும்.

ஆதலால், அஞ்ஞானந்தானே மலமென்னும்வேதாந்தியும் சைவரிலொருவருங் தள்ளப்பட்டனர்.

மலந்திரவியம் இது பிரதிஞ்ஞை.

அநேகசத்திமத்தாதலால் இது ஏது.

மல முண்டெனபதற்குப் பிரமாண முண்டோ? பிரத்திய

ட்சமன்று. ஆதலால் உண்டில்லையென்று சந்தேகமிருத்தலால் ஆகமசித்தமாஞலும் அனுமானமே பிரமாணம்.

ஆன்மா மலவசீகிருத சத்திமான் இது பிரதிஞ்ஞை.

சிவனபோல் சர்வஞ்ஞனுயிருக்காலும கிஞ்சிஞ்ஞனுய்க் காணப்படுதலால் இது ஏது.

யாவனொருவன மலவசீகிருத சத்திமானல்லன அவன கிஞ்சிஞ்ஞனல்லன சிவன்போல இது திருட்டாந்தம.

இது கேவல வெதிரேகி அனுமானமாதலால்;—

அவித்தை சித்தத் தருங்கலையாதி மாயை - மாயையானது மலமொருபிரதேசத்திற் சிறக கலைமுதலிய தத்துவங்களைத தோற்றுவிக்கும்

மற்றவை வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

அல்லதூஉம், மலத்தானாகிய அஞ்ஞானம் முகிலானாகிய மறைவுபோலன்றி உயிரோடு வியாபகமாய் விரவிக குணமபோலத்தோன்றி நிற்பதொன்றாகலானும், தொழிற்பாடின்றிக்கண் ஒளியிருள்போல மாயையோடு இகலி நிற்பதாகலானும்; அப்பெற்றித்தாகிய வாணவமலமே உயிருணர்வின் காரியப்பாட்டைத தடுக்கவல்லதெனத் தெற்றென வுணர்கவென்பதாம்.

குணமுமென்னு மும்மை எதிர்மறைக்கண் வந்தது.

இவைநான்கு செய்யுளானும், ஐக்கியவாதி பாசுபதி முதலியோர்மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து, ஆணவ மலத்தின துண்மை சாதிக்கப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

ஆகையால் மாயை மறையாது, மலமே மறைக்குமென்று அருளிச்செய்கிறார்.

போதகாரிய மறைத்து நின்றது புகல்மலங்காண்-ஆன்மாவினுடைய ஞானக்கிரியைகளை மறைத்துக்கொண்டு நின்றது நீயிலலையென்றுசொன்ன வாணவமலங்காண். அத்தமலத்தை,—ஓதலாகுங்குணமுமாக வுயிரினுள விரவலாலே - செம்பிற் களிம்புபோலச் சகசமாய் நிற்றலாலே, ஆன்மாவுக்கு ஆணவமலத்தைக் குணமென்றுஞ் சொல்லலாம். மலத்துக்குச் சுபாவமான மபோதத்தை மறைக்கிறது;மாயைக்குச் சுபாவ மறைப்பை நீக்குகிறது;அப்படியிருக்கையால்,—காதலா லவிந்தைச்சிந்தத் தருவு கலையாதி மாயை - ஆன்மாக்கள் கன்மத்தைப் புசிக்கைக்குண்டான ஆதரவுக்கிடாக, ஆணவமலத்தா லுண்டாகிய வறியாமையை நீக்கும்படி, கலை முதல் பிருதிவி யீறான தத்துவங்களை மாயை தனனிடத்திலே நின்றுந் தோற்றுவியா நிற்கும்.—ஆதலாலிரண்டுஞ்சோதி யிருளென வேறுமன்றே - ஆகையா லிவ்வையிரண்டு மலமும் ஒளியு மிருளும்போல ஒன்றுக்கொன்று மாறுபட்டு நிற்கும்.

இதனாற் சொல்லியது;ஆன்மாவும் ஆணவமும் வேறற நிற்கையாலே, இதை யான்மாவுக்குக் குணமாகவுஞ் சொல்லலாமென்றும், இந்த மலத்தின மறைப்பை மாயாகாரியங்கள் நீக்குமென்றும், இந்த மலமு மாயையு மிருளு மொளியும்போல மாறுபட்டு நிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

—

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உயிரினுள்விரவலாலே குணமுமாக வோதலாம் - அல்ல

அஉ. மலசத்தானாகிய அஞ்ஞானம் முகிலாகிய மறைவுபோல வறிவுயிரொடு வியாபகமாய் விரவிக் கருணம்போலத் தோன்றி நிற்பதொன்றாகலானும்,—மாயை காதலா லவித்தை நீங்க - மாயையானது விருபபத்தோடு ஆணவமாகிய இருள்கெட,—கருங்கலையாகியாதலால் - தீபம்போலத் தரப்பட்ட கலைமுதலிய தத்துவங்களுடைய தாகலால்,—இரண்டுஞ் சோதியிருளென வேறுமன்றே - தொழிற்பாட்டினைக் கண்ணிரண்டி னொளியிருள போல மாயைபோ டிகலிநிற்ப தாகலானும்,—புகமலமபோ கக்காரியமறைத்து நின்றதுகாண் - சொல்லுகின்ற அப்பெற்றித் தாகிய ஆணவமலமே யுயிருணர்வினைக் காரியப்பாடடைந்த தடுக்க வல்லதெனத் தெற்றென வுணர்கவென்பதாம்.

இவை நானகுசெய்யுளானும் ஐக்கியவாதி பாசுபத முதலியோர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து; ஆணவமலத்தி னுண்மை சாதிக்கப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

### இதுவுமது.

புருடன்றன் குணமவித்தை யெனிறசடம் புருடனுந், குருடன்றன் கண்ணின்குறறங் கண்ணின்றன் குணமோகூறாய், மருடன்றன் குணமதாகி மலமசித் தாகிநிற்குந், தெருடன்றன் குணமதாகிச் சித்தெனநிற்குஞ்சீவன். (அரு)

(இ-ள்) புருடன் அந்தமல மான்மாவுக்குக் குணமென்று றன குண நீ சொல்லின்?

மவித்தை

யெனில்

சடம் புருடனுகும் — குண தத்துவத்தை யங்கிகரிக்கில் ஆன்மாச் சடமாய்விடுவன். இதனை யொழிந்த தானுக வொன்றைப் புசிக்கைக்குக் கருத்தாவு மாகமாட்டான.

குருடனுடைய கண்ணிற்குற்றங் கண்ணினுடைய குணமோகூறாய் — ஒருவன் சாதியந்தகனு யிருக்கிற குற்றமெல்லாருடைய கண்ணுக்கு மது சுபாவமான குணமல்லவே! அதுபோல விந்தமறைப்பு மானமாக்களுக்குக் குணமா யிருப்பதல்லவே! சொல்லாய். இந்தவான்மாவுக்கு மாணவத்தின் குணம் வெவ்வேறு யிருக்குங்காண், அஃதெங்ஙனமெனில்?

மருடனுடைய குணமதாகி மலமசித்தாக நிற்கும் — ஆணவமலத்துக்கெப்போது மறியாமைபே குணமாகையா லசேதனமாகி யெப்பொழுது நிற்கும சித்தாகில் விபுவுமாயானமாவைப்போனறுவிடு மாதலா லது கூடாதெனவறிக.

தெருடன்றன குணமதாகச் சித்தெனநிற்குஞ் சீவன். — ஆன்மாவுக்கியாதாமொன்றையு மறிகிறதே குணமாகையாற் சேதனமாயே யிருப்பன காண். எ-று. (அறி)

ஓகார மெதிர்மறை.

"உயிர்க்குக் குணமன றுயிர்ச்சத்திபோல-வுயிர்கொடுங் காதே நிற்குமோ" எனவறிக.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



ஆன்மாவுக்கு அஞ்ஞானத்தைக் குணமென்று உபசாரமா

ய்ச் சொல்லுவானென்யானேன்? அஞ்ஞானம் ஆன்மகுணமே என்பவனை நிராகரித்தல்.

புருடன்றன குணமவிச்சை யெனிற்சடம் புருடனுதான் - ஆணவமலம் ஞானத்தைத் தடுக்குமென்ன வேண்டா, ஆன்ம குணமே அஞ்ஞான மெனனில்? அஞ்ஞானம் ஆன்மகுணமாகில், ஆன்மா ஜடமாம். அப்படியாகில் போக மோக்ஷம் ஆருக்கு? ஆகையால் ஆன்மா ஜடனுகான. சைதந்ய ஸ்வரூபனேயாகில, பதி சர்வஞ்ஞனே! பாசஞ் ஜடமே! அஞ்ஞானம் திரவியமல்லாமல் குணமே! ஆகையால் * பரிசேஷாத் அஞ்ஞானம ஆன்மாவுக்கே குணமெனனில்?—

குருடனறன கண்ணினகுற்றங் கண்ணினறன குணமோ கூறாய் - புருஷனுடைய கண்ணின காசகாமலாதி தோஷம் கண்ணுக்குக் குணமோசொல்லு கண்ணுக்குக் குணமானது காணகிறது, காணாமல் மறைக்கிறது காசகாமலாதி. அதுபோல ஆன்மாவுக்கு ஞானேச்சாப் பிரயத்தினம் குணம், அதை மறைக்கிறது ஆணவமலமே!—

மருடனறன குணமதாகி மலமசித்தாகி நிற்குந் தெருடன்றன குணமதாகிச் சித்தெனநிற்குஞ் சீவன.-அஞ்ஞானந் தனக்குக் குணமாய் ஆணவ மலமானது ஜடத்திரவியமாய், ஆன்ம ஞானத்தைத் தடுத்து நிற்கும். ஞானேச்சாப் பிரயத்தினங்கள் குணமாயதனுல் ஆன்மா சித்தெனறு பேராய் நிற்குமென்றிதனபொருள்.

இதனுல் ஆணவ மலமென் றொன்றுவேண்டா! அஞ்ஞானமான்மகுண மெனபதற்கு விகற்பம். அதத அஞ்ஞானமென்றது † ஞானவிரோதியோ, ‡ ஞானாபாவமோ, || அந்யதாஞானமோ, ¶ ஞானதிரோதகமோ?

ஞான விரோதியெனனில் ஞானமே யில்லையாம். ஞானமுண்டென்னில் அஞ்ஞானமே யில்லையாம். தேசஸ் § திமிரங்கள்

போல ஞானாபாவமென்னில் அபாவமாகிய வஸ்து ஒரு கிரியையும் செய்யமாட்டாது. கடாபாவம்போல ஆகுதம்.

அந்த அபாவந்தான் * பிராகபாவமோ. † பிரத்வம்சாபாவமோ, ‡ அத்யந்தா பாவமோ, ¶ அந்யோந்யா பாவமோ?

பிராகபாவமென்னில்? பூர்வம் ஞானமில்லாமல் காலாந்தரத்திலே ஞானமுண்டாகவேணும். பிரத்வம்சா பாவமென்னில்? முன்னுக்கு ஞானமுண்டாயிருந்து மேல்ஞானமில்லாமற்போகவேணும் அத்யந்தா பாவமென்னில்? ஆன்மாவுக்கு ஒருக்காலும் ஞானமில்லாமல் கடகுட்யம் போலேயாம். அந்யோந்யா பாவமென்னில் § பிரதியோகிக் கிரகணமில்லாத படியினாலே யுக்தி ஹீனம் அந்யதா ஞானமென்னில் தோஷமில்லாமல் விபரீதஞான முண்டாகாது, ஆகுதம்.

அதுதான + ஆகந்துகமோ ÷ ஸ்வாபாவிகமோ?

ஆகந்துகமாகில், நித்திய சைதந்யத்தை பாதிக்கமாட்டாது. ஸ்வாபாவிகமென்னில், ஒருக்காலும் ஆன்மாக்களுக்கு யதார்த்த ஞானமில்லாமற்போம்.

கிளிஞ்சிலே வெள்ளியென் றறியும் அந்யதா ஞானமானது ஸ்வபாவ ரஜிதஞானத்தை பாதிக்கமாட்டாது. ஞானதிரோதகமென்னில் நாம் சொன்ன ஆணவமென்று சித்தம். இந்தமலம் திரவியமே! அநேகசத்தி யுடைத்தாகையினாலே அக்னியைப்போலே இந்தமலம் குணகுணியாய் நிற்குமென்றதற்கு குணமெவன? மோகம் மதம் ராகம் ● விஷாதம் தாபம் ○ சோஷம் × வைசித்திரியம் இவையேழும்.

* பரிசேஷாத் - பரிசேஷாநுமானத்தால், † ஞானவிரோதி - ஞானத்துக்கு எதிர. ‡ ஞானாபாவம் - ஞானமில்லாமை. || அந்நியதாஞானம் - வேறுவிதஞானம். ¶ ஞானதிரோதகம்-

ஞானத்தைமறைக்கிறது. § திமிரம் - இருள். * பிராகபாவம - காரியம் பிறக்கிறத்துக்கு முன்னபாவம். † பிரதித்வம்சாபாவம் - காரியமழிந்தபின னபாவம். ‡ அத்யந்தா பாவம்- த்ரிகாலத்துமின்மை. ¶ அந்யோந்யாபாவம - அபேதம். § பிரத்யோகி-அபாவத்துக்கு எதிர்வஸ்து. + ஆகந்துகம் - நடுவேவந்தது. ÷ ஸ்வாபீகம் - எப்போதுமிருக்கிறது. ● விஷாதம் - வியசநம். ○ சோஷம் - சோஷித்தல். × வைசித்திரியம்-ஆச்சரியம் அநேகபேதம்.

[illegible]

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஜடமாகிய மலஞ் சித்தாகிய புருடனுக்குக் குணமென்று சொல்லிற் புருஷனும் ஜடமாவனென்று செப்புகின்றார்.

அவித்தையென்பது - அஞ்ஞானமல்ல — கண்ணிற் குற்றம்- காருமை, படலகுணம்.—மருள் - அஞ்ஞானம.—தெருள்- ஞானம

மறைதவை வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

உயிரினுள விரவிநிற்பதனை உயிரின் குண விசேடமென்றல் பொருத்தமுடைத்தெனின்? அறியாது கூறினாய். ஒருபொருளினகட் குணத்தேசடொப்பக் குற்றமும் உடனவிரவி நிற்கப் பெறுமென்பது குருட்டுக்கண்ணிற் காணப்படுதலின, விரவிநிற்றலேபற்றிக் குறறமுங் குணமாதல் செல்லாமையானும, அஞ்ஞானத்திற்குக் குணிப்பொருள ஜடமாவதன்றிச் சித்தாகாமையானும, உயிர் அறிதற்றொழிலுடைய சித்தேயாகலானும், உயிரினகட் குற்றமாய்க் காணப்படு மறியாமைக்குக் குணிப்பொருள மலமென வேறுண்டென்பதாம்.

இதனுனே, அறியாமை உயிர்க்குக் குணமெனனும் பாட்டாணையாதிகண் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து; மலத்தினுண்மை சாதிக்கப்பட்டது.

---

## நிரம்பவழகியருளை வருமாறு

—0—

மீளவும் ஐக்கியவாதி, இந்த அறியாமை ஆன்மாவுக்குள்ள தொன்றென்று சொல்ல; அவனை மறுத் தருளிச்செய்கிறார்.

புருடன்றன் குணமவித்தை யெனிற்சடம் புருடனாகும் - ஆன்மாவுக்குக் குணம் அறியாமையென்று நீ சொல்லில்? ஆன்மாவுஞ் ஜடமாய்ப் புசிக்கைக்குங் கர்த்தனுகான். ஆன்மாவுக்கு அறியாமை யுள்ளதாயிருக்கவில்லை யென்ற தெப்படி யெனில்?—குருடன்றன் கண்ணின்குற்றங் கண்ணின்றன் குணமோ கூறாய் - அந்தகனது நயனத்திலுடைய படலம் நயனத்துக்குள்ள தன்மையல்லவே! அப்படியாயினும் அந்த மறைப்பு ஆன்மாவுக்கல்லவோ குணமாயிருப்பது சொல்லாய். ஆன்மாவுக்குள்ள குணம அறியாமையல்லகாண். அதெப்படி யென்னில்?—மருடன்றன் குணமதாகி மலமசித தாகிநிற்கும் - எப்பொழுதுந் தனக்கறியாமையே குணமாகிய ஆணவமல மசேதனமாகியே நிற்கும் —தெருடன்றன் குணமதாகச் சித்தெனநிற்குஞ் சீவன் - அறிவே தனக்குக் குணமாகிய வான்மா எப்பொழுதுஞ் சேதனமாயே நிற்கும்.

இதனாற் சொல்லியது ஐக்கியவாதி ஆன்மாவுக்குக் குணமறியாமையென்று சொல்ல, அவனை மறுத்து அறியாமை யாணவமலத்துக் குள்ளதென்றும், அறிவு ஆன்மாவுக் குள்ளதென்று மருளிச்செய்த முறைமை யறிவித்தது.

'மலமே' 'மாயையே' 'பருதியை' 'போதகாரியம்' 'புருடன்றன்' ஆக இவையைந்தும் ஐக்கியவாதி. இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம் அவன மதம் "உலகத்- தாயவ னுயிர்க்கு மாயையினருளா- லிருவினைத் தகையி லுருவினைத் தருமால்-கருமுகி லாடர விரிதருகதிர்போன்-றறிவாமுயிரிற் பிரியா

தேயும்" என்றும், அவன்மறுப்பு "பொறிபுலனூறி முறைவற நிறைந்து-காட்சியகளிக்கு மூட்சியினமுனனாக்-கொடுந்தேரா ராழி விடுத்தவராநாடிக் - கொளவோர்காணு துளசிமீன் டுழித்- தந்தவர்கண் டாங்கு" எனனுமதுங்கண்டுகொள்க.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

அவித்தை புருடன்றன்குணமெனில் - உயிரினுள் விரவிநிற்பதாகிய அவித்தையினை உயிரின் குணவிசேடமெனறல் பொருந்துமுடைத்தே, யென்?—புருடனசடமாகும் - சித்தாகிய புருடனை ஜடமாமெனப்படடு வழுவாமாதலின், அறியாது கூறினாய்.—குருடனறன் கண்ணினுற்றம் கண்ணினறன குணமோ கூறுய - ஒருபொருளின்கண் குணந்தோன்றொப்பக் குற்றமுமுடன விரவிநிற்கப் பெறுமெனபது குருட்டுக்கணணிற் காணப்படுதலின், விரவிநிற்றலேபற்றிக் குற்றமுங்குணமாதல் செல்லாமையானும்,—மூலமருடனறன குணமதாகி டசித்தாகி நிற்குட- அஞ்ஞானத்திற்குக் குணிப்பொருள ஜடமாவதன்றிச் சித்தாகாமையானும்,—சீவனறருடனறன் குணமதாகிச் சித்தெனநிற்கும்-உயிரறிக்கறவொழிவிலையுடைய சித்தே யாகலானும், உயிரின்கண் குற்றமாய்க் காணப்படும் அறியாமைக்குக் குணிப்பொருள் மலமென வேறுண்டெனபதாம்.

இதனானே அறியாமை உயிர்க்குக் குணமெனனும பாடாணவாதிகள மதம்பற்றி டரிகரித்து, மலத்திணுண்மை சாதிக்கப் பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இவ்வண மும்மலங்களின முறையுணர்த்தி, மேற்

பஞ்சமலங்களுக்கு மிரண்டு விருத்தத்தா
லவையிற்றின் காரியப்பாடு தொகுத்
துணர்த்துகிறார்.

மும்மல நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்
போல,மம்மர்செய் தணுவினுண்மை வடிவினை மறை
த்திருக்கும், பொய்மைசெய போகபந்தம் போத்திரு
த் துவங்கள்பண்ணு, மிம்மல மூன்றினோடு மிருமல மி
சைபபாமின்னும். (அசு)

| | |
|---|---|
| (இ-ள்) மும்மல நெல்லினுக முளை யொடு தவிடுமிப் போல் | நெல்லுக்குண்டாகிய முளைபோல வாணவமும், தவிடுபோல மாயையும், உமிபோலக் காமியமும், ஆகிய மூன்று மலங்களு முடனேபொருந்தி நிற்கும். |
| மம்மர்செய் தணுவினுண்மை வடிவினை மறைத்திருக்கும் | அவையிற்று ளாணவமலமான தான்மாக்கட்கு மயக்கத்தைச்செய் தவர்களுடைய ஞானக்கிரியைகள் விளங்கிக் காரியப்படாதபடி மறைத்து நிற்கும். |

இது மாலையைப்போலன்றி யசுசியான பதார்த்தத்தை யசுசியெனக் கருதாமல் அதனைச் சுசியெனக்கருதியும், அதிலே மோகிப்பித்து அதில் விழவிடுத்துகை.

| | |
|---|---|
| பொய்மைசெய் போகபந்தம் | மாயையானது பொய்மையுண்டாக்குகிற போகத்தைப்பண்ணுவதாகும். |

அசத்தியத்தை மெய்யெனப்பண்ணி, மாயையானது தன்னுடைய பிள்ளைகளாகிய தநுவாதிகளாகியவையிற்றி னிடத்தி லுண்டாகிய குணதோடங்களைக் காட்டாமல், அசுசியை யசுசியெனாது மறைத்துநின்று மினுக்கியும்; இப்படி யிவைகள் தோன்றுமன் மயக்குகை.

போத் திருத்துவங்கள் பண்ணும் — கன்ம மலமாவது ஆன்மாக்க ளிருவினையா லியற்றுஞ் சுகதுக்கமாகிய போகங்களைப் புசிப்பித்துத் திருத்திகளைப் பண்ணுநிற்கும்.

இம்மல மூன்றிரேனுடு மிருமல மிசைப்பாமினனும் — இங்ஙனஞ் சொல்லிப்போந்த மும்மலங்களுடனே மேலுமிரண்டு மலங்களைச் சொல்லப் புகாநின்றேம். எ-று.

உம்மை யெதிரதுதழீஇய வெச்சம்.

இதற்குச் சுவாயம்புவத்தும் பார்க்கியையினு மறிக.(அகூ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

இழ்ச்சொன்ன வாணவ மாயை கனம மிந்த மூன்று மலங்களும ஆன்மாவை யடைந்து நிற்கு மியல்புணாததல்.

மும்மல நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல் - ஆணவ மாயை கனமமெனனு மூனறு மலமும் ஆன்மாவுககு அரிசிககுத் தவிடு முமியு முளையும்போலப் பிரகா * சாச்சாதனமும ஆவாரகமும் உற்பத்தி ஏதுவுமாய் நிற்கும்.—அணுவினுண்மை வடிவினைமறைத்து நினறு மம்மர்செய்து போதகிருத்துவத்தைப் பணணும் - முனசொனன மலத்திரயங்களுக குளளே யாணவமலமானது, ஆன்மாவினுடைய ஞானேச்சாக் கிரியாரூபங்களைத் தடுத்துநின்று † மமத்துவா கங்காரங்களைப் பண்ணி விஷயங்களைப் புசிக்கிறவனுகப்பண்ணும் —பொய்மெய் செய் - மாயாமலமானது பொய்யாகிய தேகாதிகளை மெய்யென்னும்படி மயக்கதிவைப் பண்ணும்.—போகபத்தம்-கன்மமானது விஷயபோகங்களிலே துவந்துவத்தைப்பண்ணும். சகலாகத்து மூனறு மலமு மிவ்வாறு செய்துநிற்கும்.—இம்மலமூனறி

னோடு மிருமல மிசைப்பனின்றும் - இந்த மூன்று மலங்களையுஞ் செலுத்துவ தாதலால் உபசாரத் மலமென்று நாமத்தையுடைய திரோதாயியையும் மகாமாயையுமாக விரண்டு மலத்தையு மேற் கூறுவாமென்ற திதனபொருள.

*ஆச்சாதனம் - மறைவு. † மமத்துவாகங்காரம்-எனது யானெனபது

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

கன்ம மாயை மலங்கள் நிறைநிறை நிற்கும் முறைமையும், அப்படியே செய்யும் பிரதான கிருத்தியங்களையும், சேஷபாசங்களையும் செப்புகின்றேமென்று செப்புகின்றார்.

மம்மர் - மயக்கம்,—உண்மைவடிவு - சாவஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ ரூப சிவத்துவம். மாயையும் கன்மமும் கிஞ்சிஞ்ஞத்துவ கிஞ்சித்கர்த்திருத்துவப் பிரதமாஞலும் நிரதிசய சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ விரோதிகளெனபது சாற்றப்பட்டது, கன்மகாரியம்.—போகம்- போகவேதன விடயசுகதுக்கமோகம, மாயாகாரியம்.— பந்தம் - கலாதி, மலகாரியம்.— போத்திருத்துவம - போகக கிரியாகர்த் திருத்துவம, போகாசத்தி கர்த்திருத்துவமுமாம்.

மற்றவை வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேலே தன்மமோடதனமமாகியெனக் கூறப்பட்ட கன்மமலமும் அதனபின்னாக நித்தமா யருவாயெனக் கூறப்பட்ட

மாயாமலமும் ஈண்டுக் கூறப்பட்ட ஆணவமலமு மாகியவிம்மூ
ன்று மலங்களும், நெல்லுக்கு முளை தவி டுமிபோல் உயிரைப்
பற்றிநின்று முறையே போகமும் பந்தமும் போத்திருத்து
வமு ம பண்ணுவனவாம். இம்மலங்கள் மூன்றனோடுங் கூடிநின்
று பந்திப்பன வேறிருமலங்களுளவென்பதாம்.

இது நிரனிறை.

கன்மமலம் போகம் பண்ணுதலாவது, நெல்லின்கணுள்ளதா
கிய முளைதற் சத்தி முளையைத் தோற்றுவிக்கு மாறுபோல,
உயிர்கட் சுகதுக்கங்களை முதற்காரணமாய் நின்று தோற்று
வித்தல்.

மாயாமலம் பந்தம் பண்ணுதலாவது, முளைத்தற்கு அனு
கூலஞ்செய்து உடனிற்குந் தவிடுபோல, அச்சுகதுக்கங்களை
நுகர்தற்குத் துணைக்காரணமாய்த் தன்காரியமாகிய த
நுகரண முதலியவற்றையும உயிரையு மிசைவித்து நிற்றல்.

ஆணவமலம் போத்திருத்துவம் பண்ணுதலாவது, அம்மு
ளை அங்குரித்துத் தோன்றுதற்கு நிமித்தகாரணமாகிய உமிபோல,
அத்தோற்றத்திற்கு நிமித்தகாரணமா யவற்றை முறுகுவித்து
நின்று; அச்சுகதுக்கங்களை உயிர் நுகருமாறு நிலைபெறுத்துத
லெனக்கொள்க.

"பந்தம்போகம்போனிறுத்தலும்-வந்தமாயை வினைம
லத்து" என்றார் ஞானாமிர்த நூலுடையாரும்

முளை ஆகுபெயர்.

முளைதவிடுமிகள் பந்தத்திற்கும் காரணமாதல் மாத்தி
ரைக்கும் உவமையாயின.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——0——

முன்சொன்ன மூன்று மலங்களும் அநாதியென்றும், ஆன்

மபோதத்தை மறைக்குமென்று மாணாக்கனை நோக்கித் தோன்
ற வருளிச்செய்கிறார்.

மும்மலநெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல் மம்மர்
செய் தணுவினுண்மை வடிவினை மறைத்துநின்று - மூன்றுமலங்
களும் நெல்லுக்குண்டான முளையுந் தவிடு முமியும்போல மயக்க
த்தையுஞ்செய்து, அணுமாவுக் குண்மையான சொரூபத்தை யொ
ருசாருக தோன்றாமல மறைத்துநின்று,—பொய்மைசெய்போ
கபந்தம் போத்திருத் தவங்களபண்ணும் - பொய்யை மெய்யெ
ன்று மயக்குகிற போதத்தையும் அதனுடன கட்டுப்பட்டு நிற்கிற
புசிப்பையு மகப்ப புசிப்பிலே இருத்திகளையு முண்டாக்காநிற்
கும் இவையனறியும்,—இம்மல மூன்றினோடு மிருமலமினைய
பனின்னும் - இந்த மூன்றுமலத்துடனே மேலும் இரண்டுமல
ங்கூட்டிச சொல்லப் புகாநின்றேனே.

இதனாற் சொல்லியது, ஆணவம் மாயை காமியமென்னு மூ
ன்று மலங்களும் மயக்கத்தைச் செய்து ஆன்மரூபத்தை மறை
க்குமென்றும், இந்தமூன்று மலத்துடனே மேலுமிரண்டு மலங்
கூட்டிச் சொல்லுகிறோமென்று முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மும்மலம் - மேலே தன்மமோ டதன்மமெனக் கூறப்ப
ட்ட கன்மமலமும், அதனபின்னாக நித்தமா யருவாயெனக் கூ
றப்பட்ட மாயாமலமும், ஈண்டுக் கூறப்பட்ட ஆணவமலமுமா
கிய மூன்று மலங்களும்,—நெல்லினுக்கு முளையோடு தவிடுமிப்
போல் - நெல்லுக்கு முளையோடு தவி டுமியும்போல்,—அணுவி
னுண்மைவடிவினை - உயிரின்சொரூபத்தை,— மம்மர்செய்து ம

றைத்துநின்று - மயக்கத்திற் கேதுவாகப் பகுதித்து நின்று,— பொய்மைசெய் போகபந்த போத்திருத்துவங்களை பண்ணும்- முறையே பொய்மைசெய்யாநின்ற போகமும் பந்தமும் போத் திருத்துவமும் பண்ணுவனவாம்.—இம்மலமூன்றினோ டினனு மிருமல மிசைப்பன் - இம்மலங்கள் மூன்றினோடுங் கூடினனு பகுதிப்பன வேறுமலங்க ளானவென்பதாம்.

## மறைஞானதேசிகர் உரை



மேற் றொகுத்துப் போந்த மாயேய மலத்தையுந் திரோதாயியினையு முணர்த்துகிறார்.

மாயையின் காரியத்தை மாயேய மலமதென் று, மேயுமும்மலங்க டத்தந் தொழிலினை யியற்றவே வுந், தூயவன் றனதோர்சத்தி திரோதான கரியதென் று, மாய்வரிம் மலங்களைந்து மணுககளை யணைந்துநிற் கும். (அஎ)

(இ-ள்.) மாயையின காரியத்தை மாயேய மலமதெனறும் — மாயையின காரியமாகிய கலைமுதலிய தத்துவ சமுகங்களை மாயேய மலமெனனும் பெயரைப் பொருந்தககூறியும்,

ஏயு மும்மலங்கடத்தந்தொழிலினை யியற்ற வேவுந் தூயவன்றனதோர் சத்தி திரோதான கரிய — ஆன்மாக்களிடத்திற் பொருந்தினின் றாணவமுதலிய மூன்று மலங்களுந் தத்தந் தொழிலினைச் செய்யும்படி செலுத்தப்பட்ட சுத்தனான சிவனுடையசத்தி யானமாவினுடைய வுஞ் சிவனுடையவுந் தரிசனத்தை யாகவொட்டாமன் மறைக்கையால், இதற்கு

தென்றுமாய்வர் த்திரோதாயி மலமென்றும், பெரியோர்களை சொல்லுவர்கள்.

இம்மலங்களை இந்தப் பஞ்சமலங்களு மான்மாக்களைப ந்த மணுக்களை பொருந்திநின்று தத்தந தொழில்களைச் செயணைந்துநிற்கும். ய்து நிற்கும். எ-று.

சிவசத்தியைப் பதிபதார்த்தமாகக் கூறியிருக்கப் பாசமெனறேறிய தெனனெனின ? அநதச் சத்தியினுண்மையை விசாரிக்கிற் சிவனுடனே சமவேதமாயிருக்கிறது பதிபதாாததமேயாயினும் அச்சத்தி பாசததைப் பினசென்று பரிபககுவம்பணணிச்செலுத்துகையாற் பாசமெனறுபசாரமாகக்காரணப்பெயராக்கிக கூறபபட்டது.

"திரோதசுசிற்சத்தி சிறியார்க் கிவறறால் விரோதஞ்செய் தார்கரும்பின் வியி" "ஈசனது சததிமல மூனறினையு மேவுதலாற்-பாசமெனுமபேரதறகுப் பாங்கு." "சினமருவுதிரோதாயி கருணையாகித திருநதிய சததினிபாதஞ்சேருமனறே" எனவறிக.

இதற்குச் சுவாயம்புவம் பார்க்கியை மிருகேநதிரத்து மறிக.

"சதிநருகாழி மன் கட்டுமெப்பாசங்கள் மூன்றனைவதான" "விருததிகளேபினைந் துளதேபினைநதவப்பாச - மோதுவரோ" யோதியவிவ்வினை-யொடுங்கியதே" எனவறிக. (அஎ)

## சிவாக்ரயோகியருளை வருமாறு.

———o———

மாயையின் காரியத்தை மாயேய மலமதென்றும் - அசுத்தமாயா காரியமாகிய பிரவிருத்திப் பிரகாசா * யதார்த்த ஞா

கங்களைச் செலுத்தும் சம்பந்தத்தை யுடைத்தாகையால் மகாமாயை யொருமலமெனறும்,—

ஏயுமும்மலங்க டத்தஞ்தொழிலினை யியற்றவேயுந் தூயவன்றனதோர்சத்தி திரோதாயி கரியதென்றும் - ஆனமாககளைப்பொருந்தின ஆணவமாயைகாமியக மூனறு மலங்களும் தங்கள் தங்கள் கிரியைகளைப் புரியும்படிககு அதிஷடித்து நிற்டதாகையால் நின்மல சிவ ஸமவேத திரோதான சததியை யொருமலமெனறும்,—

ஆய்வர்-விசாரிப்பர்கள்.

விசாரிப்பதாவது ஆதிசததி மலமல்லாமலிருககவும் கிராதருடைய ஆசாரியனைக் கிராதாசாரிய னென்றதுபோல மலத்தையதிஷடித்து நிற்கையான மலமெமெனறு குறிசகலாமென்பது.—

𑌤𑌥𑌾 𑌚𑍋𑌕𑍍𑌤𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌕𑌿𑌰𑌣𑍇 - 𑌤𑌾𑌸𑌾𑌂 𑌮𑌾𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑍀 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌾𑌹𑌿𑌕𑌾 𑌶𑌿𑌵𑌾𑌃 । 𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑌾𑌦𑍇𑌵 𑌪𑌾𑌶 𑌇𑌤𑍍𑌯𑍁𑌪𑌚𑌰𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌇𑌤𑌿.

இம்மலங்களாவது மணுக்களை யடைந்திற்கும்-இந்த மலங்களாதும் சகலராகிய ஆனமாக்களைப் பொருந்தி நிற்குமென்றிதனபொருள.

* அயதார்த்தம் - பொய்.

𑌤𑌥𑌾 𑌚𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑌾𑌮𑌿𑌕𑍇 - 𑌸𑌚𑌵𑌜𑍍𑌞𑍁𑌵𑌿𑌯𑌃 𑌪𑌾𑌶𑍋 𑌮𑌲𑌾 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌿𑌵𑌿𑌷𑌾𑌮𑌤𑌃 । 𑌮𑌲𑌶𑍍𑌚𑌾𑌯𑌾 𑌚 𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌸𑌾 𑌤𑌿𑌰𑍋𑌧𑌿𑌕𑌾 ॥ 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌮𑌨𑌯𑌮𑍋𑌹𑌵𑍍𑌯𑌾 𑌯𑍃𑌤𑍇 𑌪𑌾𑌶𑌃 । 𑌇𑌤𑌿.

𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 - 𑌮𑌲𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌮𑌾𑌯𑌾 𑌮𑌾𑌯𑍇𑌯𑌾𑌵 𑌮𑌲𑌂,

ஜமஸ। க்ரியாநகரீஸக்ஷ வாஸகே நாகமூலவெ ஞுகஜி.

சிவப்பிரகாசத்திலும், பொது-௨௦-வது, செ. "மோகமிக வுயிர்கடொறு முடனாய்நிற்கு மூலவாணவமொன்று முயங்கி நின்று, பாகமிக வுதவுதிரோ தாயியொன்று டகர்மாயை யொன்றுபடர் கன்மமொன்று, தேகமுறு கரணமொடு புவனபோகச் செயலாரு மாமாயைத் திரட்சியொன்றென ருகமல மைந்தெனபர்."

ஆகில் ஆன்மஞானத்தைத் தடுக்கிறதற்கு நீர்சொன்ன திரோதான சத்தியே போதும், ஆணவமல மென்பதொன்று வேண்டா! ஜடமானது சித்தாயிருக்கிற ஆன்மாவை யெப்படித் தடுக்கும். இதன்றியும் வியாபகனாயிருக்கிற ஆன்மாவுக்கு ஆவரணமும் கூடாதென்னில்? ஆன்மாவுக்கும் ஆணவமலத்துக்கும் அநாதி சம்யோகமானபடியால், அந்த மலத்தினுடைய சத்தியானது ஞானத்துக்கு பிரதிபந்தமாயிருக்கும். இதன்றியும் அசடமானது ஜடத்தினாலே பாதிக்கப் படுகிறதொழிய அஜடத்தினாலே பாதிக்கப்படாது ஈஸ்வரனெப்படி யான்மாக்களுக்குப் பாதகமல்ல, அப்படியே ஈஸ்வர சமவேதையான ஆதிசத்தியும் ஆன்மாவுக்கு பாதகமல்ல. ஆகையால் சித்தானது ஜடத்தினாலே பாதிக்கப்படாதபொழுது பின்னை யெதினாலே பாதிக்கப்படும்.

ஜடம் அஜடமென் றிரண்டுவஸ்துவல்லோ வுள்ளது, அஜடமாயிருக்கிற ஆன்மாவை அஜடமாயிருக்கிற ஆன்மாந்தரம் பாதிக்குமென்னில்? அப்பொழுது பாதகமாயிருக்கிற ஆன்மாவுக்கு நாசம்வரும். அதேதென்னில்? ஆன்மாவுக்கு யாதொன்று பாதகமாம், அதினுடைய நாசமே முத்தி; அந்தப் பாதகநாசமல்லாதபொழுது முத்தியேயில்லை. ஆகையால் ஆன்மசித்தே

தியாதகம் ஜடமாகிய ஆணவ சத்தியேயென்று அங்கிகரிகக வேண்டும்.

ஆகில் ஆனமாவுக்கும் ஆணவ மலத்துக்கும் அநாதிசம்பந்தம் சொல்லப்பட்டது, ஆணவ மலத்தினாலே ஆனமசததி ஆவரிககப்பட்டதோ, அப்பிரகாசமாகப் பண்ணப்பட்டதோ! ஆனமாவும் ஆனமசிற்சததியும் அபின்னரூப மானபடியால் ஆனமசிற்சததி ஆவரிககப்பட்டதெனப் போகாது.

விபுவாகையால் அப்பிரகாசம் பணணுமெனனில்? பிரகாசத்துககு அப்பிரகாச மாகிறபொழுது நாசமேயாம.

ஆகையா லிரண்டுங் கூடாது.

பினனை யாணவமலம் ஆனம சிற்சத்தியை யேதுபண்ணித்தெனனில்?சிற்சத்தி விபுவாகையினாலே ஆவரணமுங் கூடாது, நித்திப் பிரகாசமாகையினாலே அப்பிரகாசமுங்கூடாது; அக்னிசத்தியானது மணி மநதிர அவுஷதங்களினாலே தடுககப்பட்டுப் பிரகாசமாக ஜ்வலியாநிற்கவும், ×ஸ்போடகாதி கிரியைகளைப் பண்ணமாட்டாத ததுபோல, ஆனம சிற்சத்தியும் ஆணவமல சத்தியினாலே தடுக்கப்பட்டு நிததிப் பிரகாசிபாயிருந்தும் ஸவநிஷ்டையா யிருப்பதொழிய இச்சாஞானக்கிரியைகளாகிற காரியப் பிரவிர்த்தியைப் பண்ணமாட்டாமலிற்கும். ஆகையாலாணவமல சக்தியானதே ஆனம சிற்சத்தியை இச்சாஞனக் கிரியா காரியப் பிரவர்த்திகளைப்பண்ணாமல் தடுககும்.

இதற்குமேற் சங்கை.

இருக்கிரியாரூபம், ஆனம சிற்சத்தியென்று முன்னேசொல்லப்பட்டது. அது அறியப்படுகிறதும் பண்ணப்படுகிறதுமில்லாதபொழு தில்லை. இக்க ஞாதிரு கர்த்திருத்துவ ரூபத்துக்கு அனவியமாகக் காரியமேயில்லை. ஆகையால் சிற்சத்திக்குகாரியத்தில் பிரவிர்த்திவாராமல் ஆணவமலம் தடுக்குமென்றது எ

ப்படிக்கூடும். காரியமென்றுசொன்ன ஞானக்கிரியைகள் வ்யதிரிக்தமாகச்சிற்சத்தியென்பதொன்றில்லை எனின்? ஞானக்கிரியா சத்திகளே ஆன்ம ஸ்வரூப சிற்சத்தியல்ல. சுவரூபசிற்சத்தியும் ஞானக்கிரியா சத்தியும் பிரிவற்றதற்குப் பிரிதல்சொல்லும் உபாயமாவது, ஞானக்கிரியையாவது பிரதிவிஷயம். விஷயம் பிரதிபின்னம் இது அந்த ஸ்வரூப சிற்சத்தியினுடைய காரியம்.

யாதொன்று பரமார்த்தமாத்திரம் ஸ்வரூபமாயிருக்குது. அது ஆன்ம ஸ்வரூப சிற்சத்தி. அந்த சிற்சத்தி அவிநாபூதமாகவே ஞானக்கிரியைகள் ஜனிக்குது அந்தக் காரியமாகிய ஞானக்கிரியைகள் ஆணவமலத்தினாலே தடுக்கப்பட்டது. ஆகையால் விஷயம பிரதிஞானக் கிரியைக ளுண்டாகாமலிருக்குது. இதனால் சிற்சத்தி காரியமாகிய இச்சாஞானக் கிரியைகளை யாணவமலத்தினாலே தடுக்கப்பட்டது.

[illegible]

[illegible]

ஆணவ மலமானது ஆன்மாவினுடைய இச்சாஞானக் கிரியைகளையே தடுக்கும். ஸ்வரூபஞானமானது * ஸ்வநிஷ்டமாயிருக்குமென்று சொன்னீர், தடையற்று ஸ்வநிஷ்டமாயிருந்த சித்துக்கு † ஸ்வசம் வேதகம் ‡ ஸ்வசம் வேத்யமாகிய ஸ்வரூபாநுசந்தானம்வேணும். அதுகாணுமலிருக்கையால் ஸ்வரூப ஞானத்தையே யாணவமல மாவரித்ததென்னவேணு மென்னில்? அது அப்படியல்ல.

× ஸ்போடகம்-கொப்பளம், * ஸ்வநிஷ்டம்-தன்னிடத்திலிருக்கிறது. † ஸ்வசம்வேதகம் - தன்னைத்தானறிகை. ‡ ஸ்வசம்வேத்யம்-தன்னாலேதானறியப்படுகை.

ஆன்மா நித்தியமும் விபுவுமாகிய சிற்சத்தி ஸ்வரூபனுகிலும் சக்ஷுசு ப்ரகாச ஸ்வரூபமாயிருந்தும் § சௌராதிப் பிரகாசத்திலுலே பதார்த்த தரிசனம் பண்ணுவதுபோல, ஆன்மாவும் விஷயதரிசனங்களிலே மாயாகாரியமாகிய கலாதிகளை ¶ யபேக்ஷித்தும் + ஸ்வரூபாநுசந்தானத்திலே சிவனுடைய பராசத்தி யோகத்தை யபேக்ஷித்து முண்டாமதல்ல துண்டாகாது. ஆகையால் பராசத்தி யோகமில்லாதபடியாலே ஸ்வரூபாநுசந்தானமுங் கூடாமல், மாயாகாரியமாகிய கலாதி யோகமில்லாதபடியாலே விஷயாநுபவ மில்லாமல் ஸ்வநிஷ்டமுடை

இருட்டிலே விழித்த கண்ணுக்குப் பிரகாசமுங் கெடாமல் விஷயக் கிரகணமு மில்லாம லிருந்ததுபோல விருப்பன.

§ சௌராதி - சூரியன முதலான. ¶ அபேடசித்து - பற்றி + சொரூபாநு சந்தானம் - சொரூபத்தியானம.

ததோ²க்தம் ஶ்ரீமத்³ரௌரவே - நித்யவ்யாபக சிச்சக்தி திரோதா⁴யக ஜீவஸம்ஶ்ரயம் | பாஶவம் ஸாஹஜம் பாபம் ஸர்வாத்மநாம் || இதி.

சாவ விஷயிகமாயிருக்கிற ஆன்மாவினுடைய ஞானக்கிரியைகளைத் தடுத்துக்கொண்டு நிறபது ஆணவமானது, நெல்லினுடைய நுனிக்கழுந்து அங்குரத்தைக் கெடக்கொடுத்து சற்று விட்டு நீங்கினாற்போல; கலாதியோகத்தினாலே ஏகப்பிரதேசத்திலே யாணவம் நீங்குகிறபொழுது ஞானக் கிரியாபலம அப்பிரகாசமாம். அற்பபலமானதுகொண்டு ஆன்மாவை யணுவென்றது இந்த அணுத்வ — ஸம்பாதக மாகையால் மலத்துக்கு ஆணவமென்று பெயா

‡ சம்பாதகம் - உண்டாக்கிறது

ததோ²க்தம் ஶ்ரீமத்³ரௌரவே - யதா² தாம்ரஸ்ய காலிமா மலம் ஸ்வாபா⁴விகம் தத்³வத் | தஸ்மாத் ஸகலஶப்³தே³ந ஜீவா ஜ்ஞாநக்ரியாஶ்ரயா: இதி.

கலாதியினாலே பந்திக்கப்படுகையினாலே சகலரென்றது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இருமல முண்டென்ப திசைக்கின்றார்.

மாயையினகாரியத்தை -மாயாகாரியக் கூட்டத்தை,—மாயேய மலமதெனறும் - மாயேயமலமதெனறு பேர்பெற்ற மலமொனறெனறும்,—ஏயு மும்மலங்க ட்தகநதொழிலினை யியற்ற வேவுந அயவனறனதோாசத்தி திரோதானகரியதெனறும்,— பாசங்களைத தததங் கிருக்தியங்களிற் செலுத்தந திரோதானசத்தியெனறு பேர்பெற்ற சிவனது சததியாகிய மலமொனறெனறும,—ஆய்வர் - விசாரிப்பார்கள்.—மாயாகாரியக கூட்டத்தை மாயையினடக்கி மகாமாயையைக் கூட்டிப் பஞ்சமலமெனறும் வெகுவசனமுண்டு; அது வறிக.— இம்மலங்களைந தம்அணுக்களை - ஆனமாக்களை,—அணைந்து நிற்கும்-பொருந்தியிருக்கும்.

—

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

வேறு மிருமல மெனப்படுவன, அச்சுகதுக்க விளைவுகட்கெல்லாம் இடமாய் நின்று, வியாபகமாகிய வான்மாவின் அறிவிச்சை செயல்களை ஏகதேசப் படுத்துவதென மேற்கூறிப்போநத மாயாகாரியமும், அவ்வமலங்களை யவ்வத்தொழிலிற் படுத்திப் பாகம் வருவிக்குஞ் சிவசத்தியுமாம். அவற்றுள், மாயாகாரியம் மாயையி லடங்குமாயினும், பந்தித்தற்கட்படும் வேற்றுமை பற்றி மாயேயமலமென வேறுவைத் தெண்ணப்படும். அம்மலங்கட் கனுகூலமாய் நின்றுசெய்யுஞ் சிவசத்தி பராசத்தியினடங்குமாயினும், தொழில் வேற்றுமைபற்றி உபசாரத்தாற் தி

ரோதாயியென வேறுவைத் தெண்ணப்படும், இவ்வா றிவ்வை ந்து மலமும் உயிர்தோறுநின்று செய்யும பந்தவேறுபாடு கண் டுகொள்க வென்பதாம்.

திரோதான கரியென்பது திரோதானத்தைச் செய்வதெ ன்னும் பொருட்டாய வடசொல்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இந்த மூன்று மலமுமொழிய மற்றையிரண்டுமலமு மருளி ச்செய்கிறார்.

மாயையின் காரியத்தை மாயீய மலமதெனறும் - அசுத்த மாயையின காரியத்தை மாயீயமலமெனறும், அக்காரியப்படுத் துகிறது,—எயுமும்மலங்கள் தத்தந் தொழிலினை யியற்றவேவுந் துமவன்றனக்கோர்சத்தி திரோதானகரியதெனறுமாய்வர்-ஆண மாயையநாதியேபொருந்திநிற்கிற மூன்றுமலங்களினகாரியமா ன ஆணவத்துக்குள்ள வஞ்ஞானத்தையும், மாயைக்குள்ளபொ ய்யைமெய்யெனகையும், கன்மத்துக்குள்ள புண்ணியபாவத்தை யும், ஆகவிப்படியே அந்தந்ததொழில்களைச்செய்யும்படி செலு த்துகிற சுத்தனான பரமேசுரனுடைய சத்திகளில் ஒருசத்தி யை திரோதாயியென்றும், திருவருளினாலே ஆராய்ந்து சொ ல்லுவர்கள் அறிவாலுயர்ந்த பெரியோர்கள்.—இம்மலங்களைத் து மணுக்களையணைந்து நிற்கும் - முன்சொன்ன மூன்று மலங்க ளும் இந்தவிரண்டு மலங்களும் ஆகப்பஞ்சமலங்களு மான்மாக் களை யநாதியே பொருந்திநிற்கும்.

இதனாற்சொல்லியது அசுத்தமாயையின்காரியத்தை காரி யமாயீயமல மென்றும், எல்லாமலங்களையுங் காரியப்படுத்து

கையினாலே சிவனுடையசத்தியிலே ஒருசத்தியை மலமென்றும் சொல்லுவர்களென்றும், இந்த ஐந்துமலங்களு மான்மாவைப்பொருந்திநிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்ணியதேசிகருரை வருமாறு.

—o—

(வேறுமிருமலமெனப்படுவன) மாயையின்காரியத்தைமாயேயமலமென்றும்- அச்சுகதுக்க விளைவுகட்கெல்லா மிடமாய்நின்று வியாபகமாகிய ஆன்மாவி னறிவிச்சைசெயல்களை யேகதேசப்படுத்துவதெனமேற்கூறிப்போந்தமாயாகாரியமும்,— ஏவும்மலங்கள் தத்தம்தொழிலினை யியற்றவேவும்-பொருந்திய அவ்வமலங்களை யவ்வத்தொழிலிற்படுத்திப் பாகம்வருவிக்கும்,—திரோதானகரியது துயவனறனதோர் சத்தியென்றுமாய்வர் - மறைத்தலைச்செய்வதாகிய சிவசத்தியுமாமென்று கூறுவர். அவற்றுள் மாயாகாரிய மாயையி னடங்குமாயினும் பந்திக்கற்கட்படும் வேற்றுமைபற்றி மாயேயமலமென வேறுவைத்தெண்ணப்படும் அம்மலங்கட் கனுகூலமாய் நின்றுஞ்செய்யுஞ் சிவசத்தி பராசத்தியி னடங்குமாயினும் தொழில்வேற்றுமை பற்றியுபசாரத்தாற்றிரோதமலமென வேறுவைத்தெண்ணப்படும்.— இம்மலங்களைத்தம் அணுக்களையணைந்து நிற்கும் - இவ்வா றிவைந்து மலமு முயிர்மேற்றுநின்று செய்யும், அந்த வேறுபாடு கண்டு கொள்க.

---

## மறைஞானதேசிகர் உரை.

இங்ஙனஞ்சொல்லிய பஞ்சமலங்களுட னான்மாபொருந்திச் சகலாவத்தை யுறுமா றுணர்த்துகிறார்.

மலமாயை கன்ம மாயேயந்திரோ தாயிமன்னிச்,
சலமாரும் பிறபிறப்பிற் றங்கியித் தரைகீழ்மேலும் நி
லையாத கொள்ளிவட்டங் கறங்கென நிமிடத்திங்க,ணல
மாரு மிறைவனாணை யாலுயிர் நடக்குமன்றே. (அஅ)

(இ-ள்.) மலமாயை கன்ம மாயேயந் திரோதாயிமன்னி - ஆன்மாவை யனுசம்பந்தமாகிய வாணவ மலமும், ஆன்மாக்க ளறிவை யியக்குமாயையும், ஆன்மாக்கடொழிலைச்செய்கையி லுண்டாய கன்மமும், மாயையின் காரியமாகிய மாயேயமலமும், ஆன்மாக்க ளறிவை மயக்குந் திரோதாயியும், ஆகப் பஞ்சமலத்தையும் பொருந்தினறு ;

சலமாரும்பிறப்பிற் றங்கி யித்தரை கீழ் மேலு நிலையாத கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத்திங்க ணலமாரு மிறைவனாணையா லுயிர் நடக்குமன்றே. போக்குவரவையுடைத்தா யிருக்கப்பட்ட நின்ற சனன மரணங்களையடைந் திந்தப் பூமிமுதலிய மூன்று லோகத்தினக ணின்றுழன்று, அஃதெனபோலவெனிற் றனக்கொரு நிலைமையின்றி யிருக்குங் கொள்ளி வட்டங் காற்றாடி யொரு நிமிடத்திலநேகம்பிரகாரஞ் சுழலாநிற்கும். அதுபோலவான்மாவு நன்மை பொருந்திய கர்த்தாவினுடைய திருவாணையாற் கன்மானுகுணமாக மேல்கீழ் நடுவிற் பொருந்தாநிற்கும்.

இதற்குச் சிந்தித்தறிக. (அஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேற்சொல்லிப்போந்த மலங்களைத் தொகுத் துணர்த்தல்.

மலமாயைகன்ம மாமாயைத்திரோதாயி மனனி யுயிர்சல மாரும்—ஆணவமலம் அசுத்தமாயை கன்மம் சுத்தமாயை திரோதானசக்தி இவ்வைந்து மலமும் பந்திக்கையினாலே விபுவாய்ப் போக்கு வரத் தில்லாம லிருக்கிற ஆன்மா வேகதேசத்தை யடைந்து போக்கு வரவுண்டாம். போக்குவர வுண்டாகவே,— இறைவ னாணையாற் பிறப் பிறப்பிற் றங்கி யித்தனை யிழி மேலும நிலையாக கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத்தினக னியல் பாரும் நடக்குமன்றே — சிவாஞ்ஞையினாலே சனமானு குணமாக சனன மரணங்களைப் பொருந்திப் புண்ணிய பாபத் துவய பரிபாகத்தினாலே பூமியிலும், கேவல பாபத்தினாலே நரகத்திலும், கேவல புண்ணியத்தினாலே சுவர்க்கத்திலும் பொருந்தி; சுகதுக்கங்களையும் சுகத்தையுந் துக்கத்தையும் புசிக்கும். புசிக்குமிடத்து பஞ்சேந்திரியங்களிலும் கொள்ளிவட்டம் போலுங் காலிதழகாற்றுடி போலும நிமிஷத்திலே எல்லாவிந்திரியங்களிலும் ஒக்கநிறைந்து நின்றது போலச் சுழன்று செல்லுமென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இப்படி யான்மா பஞ்சமலத்தோடு பொருந்திச் சம்சாரத்திற் பிரமிப்பனென்று பேசுகின்றார்.

வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

மேற்கூறிப்போந்த பிறப்பிறப்புக்களெல்லாவற்றிற்குங்காரணம் இவ்வைவகை மலங்களுமாமென்பதாம்.

மன்னியலமாறுமென்பது மழைபெய்து குளநிறைந்த தென்றாற்போலக் காரணகாரியப் பொருட்டாய் நின்றது.

அலமரும் அசமாறுமென நீட்டல்வழிநீட்டல்.

இறைவனுணையா லுயிர்கட்குமென ஈண்டுக் கூறியது அவ்வமலமரலை நீக்கும் வாயிலுணர்த்துதற்பொருட்டு.

அது முன்னர் வகுத்துக் கூறப்படும்.

இவை மூன்றுசெய்யுளானும், மலங்களித்துணையவென்பதூஉம், அவை பந்திக்குமாறுங் கூறுமுகத்தான் ஆணவமலத்தானாகிய பொல்லாமை கூறப்பட்டது.

———o———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———

முன்சொல்லிப்போந்த பஞ்சமலங்களுடனே ஆன்மா கூடி சனனமரணப்பட்டுத் திரிகிறமுறைமை யருளிச்செய்கிறார்.

மலமாயை கன்ம மாயீயந் திரோதாயிமன்னி - ஆணவமாகை மாயீயந்திரோதாயியென்று - சொல்லப்பட்ட பஞ்சமலமாய்ப்பொருந்தி,—சலமாரும் பிறப்பிறப்பிற் றங்கியித்தனைக்கீழ்மேலும் - சலிப்பை யுடைத்தாயிருக்கப்பட்டநிலை சனனமரணங்களை யடைந்து இக்கப்பூமியிலும் பாதாளத்திலும் சுவர்க்கலோகத்திலும்,—நிலையாத கொள்ளிவட்டங் கறங்கென - நிலையில்லாத கொள்ளிவட்ட மென கற்றாடி யென,—நிமிடத்தின்

கண் - இமைத்து விழிக்கிறமாத்திரத்திலே, —ஸமாருமி றைவ ஞானையா லுயிர்கடக்கும் - கலைமைபொருந்தி யிருக்க ப்படாநின்ற கருத்தாவினுடைய வாக்கினையாலே யான்மாக்கள் செல்லாநிற்கும்.

இதற்குப் பிரமாணம் சீத்தல்வின்னணப்பம்-உகூ-செ. "மல ங்களைந்காற்சுழலவன றயிரிற்பொருமத்துறவே என்றும்" திரு தசௌளேணம்-அ-செ. "கறங்கோலை போல்வதோர் காயப் பிறப்போ டிறப்பென்னும்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆனமா பஞ்சமலங்களையும் பொரு ந்தி சனனமரணப்பட்டுப் பூலோகத்திலும் பாதாள லோகத் திலும் சுவர்க்கலோகத்திலும் கர்த்தாவினுடைய வாக்கினையா லே கொள்ளிவட்டம்போலவும் காற்றுடிபோலவும் இமைத்து விழிக்கிற மாத்திரத்திலே சுத்திவருமென்னு முறைமையு மறி வித்தது.

'மும்மல' 'மாயையின்' 'மலமாயை' இம்மூன்றும் பஞ்சம லத்தின தொகை சொல்லியது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உயிர் - ஆன்மாவின் கண்,—மலமாயை கன்ம மாயேயத் திரோ தாயிமனனி-ஆணவமலம் மாயாமலம் கன்மமலம் மா யேயமலம் திரோதானமலமுமாகிய வில் ஐவகை மலங்களும் காரணமாகி நிலைபெறுதலால்,—இறைவனருளையாற்சலமாரும்- முதல்வ னுருளையினாலே போக்குவர வுடைத்தாதற் கேதுவா க,—பிறப்பிறப்பிற்றங்கி - மேற்கூறிப் போக்க பிறப்பிறப்பிற் ப ட்டு,—இத்தரை கீழ்மேலும் - இவ்வுலக கிளாயக்கலிற் சென்

று,—நிலையாத கொள்ளிவட்டங்கறங்கென - நிலைபுதவில்லவாகிய கொள்ளி வட்டமும் காற்றாடியும் போல,—நிமிடததினகணல மாறு நடக்குமனறே - நிமிடத்திற் சுழனறு செல்லும்.

இவை மூன்று செய்யுளானு மலங்க ளித்துணைய வெனப தாம் அவை பசுதக்கு மாறாங் கூறுமுகத தாவரண மலததாலாகிய பொல்லாமை கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகா உரை.

மேலெழுவகை யோனியுட்பட்ட நால்
வகையின தோற்றக தொகுத
துணாத்துகிறார்.

அண்டசஞ் சுவேதசங்க ளுற்பிசஞ் சராயுசத்தோ,
டெண்டரு நாலெண்பத்து நானகுநா றாயிரத்தா,யுண்டு
பல் யோனியெல்லா மொழித்து மாணுடத்துதித்தல், க
ண்டிடிற் கடலைக்கையா னீந்தினன் காரியங்காண் (அகூ)

(இ-ள்.) அண்டசம் முட்டையிற் றோற்றுவன

அஃதாவது பறவை பாம்பு கமடம் முதலை மச்சிய முதலான.

சுவேதசம் வேர்வையிற்றோற்றுவன

அஃதாவது கிருமி கீடம் பதங்க முதலாயின.

உற்பீசம் நீரு நிலனும் வித்துடன் கூடிப் பூமியைப் பிளந்து தோற்றுவன

அஃதாவது புல்லு சிறுபூடு தாவரமுதலாயின.

சராயுசத்தோ பையிற்றோற்றுவன

அஃதாவது ஊரர் மிருக பசுமுதலாயின

எண்பத்து நா லெணபத்து நா லாகு நூறுயிரத் தா யுண்டு பல் யோனி — அண்டச முதலான நால்வகையினு மூன் டாகப் பட்ட வெண்பத்து நான்கு நூறுயி ரமாகிய பேதங்களைப்பொருந்தி யெழுவகை யோனியையு மடைந்து

எல்லா மொழித்து — முதற்கட் டாபர யோனியினுண்டாய் வருவினைகளையும் புசித்துத் தொலைந்தவாறே யதனைவிட்டுக் கிருமியோனியை யெடுத் தாண்டுள்ள தனுபவித் ததனையும் விட்டுப் பறவையுருவையெடுத் ததனையும் விட்டு மிருகயோனியை யெடுத் ததனையும்விட்டுப் பசு யோனியெடுத் ததனையும்விட டிப்படி யெல்லாப்பிறப்பினும் பிறந்திளைத்து.

மானுடத் துதித்தல் கணடிடில் — காலாந்தர வசத்தினாலே புண்ணியமேலீட்டினாலே மானுடப் பிறப்பிற் றோற்றி மோட்சத்தை யடையக் கருதுமதனை விசாரிக்கில், அஃதெத்தன்மைக் கொக்குமெனில்?

கடலைக கையா னீந்தினன காரிய ங்காண் — இலக்கயோசனை யகலத்தையுடைய லவணசமுத்திரத்தைக் கையானீந்திக் கரையேறினவன் காரியத்துக் கொக்கும். எ-று.

இதற்குச் சுப்பிரபேதஞ் சிவதருமோத்தரத்து மெனவறிக.

“தோற்றியிடு மண்டசங்கள் எண்பத்துநான்கு நூறுயிர மென்றெடுத்தே” எனச் சார்புநூலினுமறிக. (அ..)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல்மனுஷ்ய தேகம் வருமருமை யுணர்த்துதல்.

முட்டையிலே தோற்றுவனவும் சுவியிலே தோற்றுவனவும் வித்திலே தோற்றுவனவும் பையிலே தோற்றுவனவு மாகத் தொகை யெண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதமுண்டு இவ்வாறுள்ள யோனிகளுக்குள்ளே இதரயோனிக ளெல்லாங்கழியும் போகத்தினாலேயும் பிராயச்சித்தாதிகளாலேயு நீக்கி மனுஷ்ய சன்மத்தில்வரு மருமை விசாரித்துப் பார்க்கில், சமுத்திரத்தைக் கைநீந்தாக நீந்திக் கரையேறினதை யொக்குமெனவறிக வென்றிதன்பொருள்.



## ஞானப்பிரகாசருரை வருமாறு.



சூக்குமதேகத்திற் றூலதேக முண்டாமென்று சொல்லுஞ் சைவ பௌராணிக மதானுசாரியர்கள் மதம் பூர்வபக்ஷமாக மறுத்து, சாதாரண புவன விகாரத்திற் சூக்குமதேக நிமித்தமாக வுண்டாந் தூலதேகமென்னுஞ் சுத்தசைவ சித்தாந்தாசாரியர் மதம் உத்தர பக்ஷமாக வுபகரிக்கின்றார்.

அண்டசம் - முட்டையிலுண்டாகும் பக்ஷிமுதலியன,—சுவேதசம் - வேர்வையி லுண்டாகும் மின்மினிமுதலியன,—உற்பீசம் - விதைகளை மேற்பிளந் துண்டாகும் மர முதலியன,—சராயுசம் - கருப்பையிலுண்டாகும் மானுடர்முதலியன,—நீத்தினைகரியகான் - கடத்தவன் செய்திபோல்.

மற்றைய வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

நால்வகைத்தோற்றத் தெழுவகைப்பிறப்பி னெண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதத்தின்விரிந்த பேதங்கள் அளவிறந்துள்ளன. அவற்றுள் மானுடப்பிறவியே அவ்வலமரலை நீக்குதற்கு வாயிலெனபதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேலிந்த மானுட சனனத்திலே சனிக்கிற வருமை யருளிச்செய்கிறார்.

அண்டசஞ் சுவேதசங்க ளுற்பீசஞ் சராயுசத்தோடு-முட்டையிலே தோற்றுவன வேர்வையிலே தோற்றுவன வித்திலே தோற்றுவன பையிலே தோற்றுவன ஆகக்கூட்டி,—என்றுநாலு-இப்படிஎண்ணப்பட்டநாலுவகையாலும்,—எண்பத்துநான்கு நூறாயிரந்தா யுளபல்யோனி - அண்டச மிருபத்தஞ்சு சுவேதசம்பத்து உற்பீசம்பத்தொன்பது சராயுச முப்பது ஆக எண்பத்து நான்கு நூறாயிரமாய் வெகுவித மாயிருக்கத்தக்க யோனிக ளெல்லாம் ஆன்மாக்கள் கன்மத்துக் கீடாக வுண்டாயிருக்கும்,—எல்லாமொழித்து - மானுடயோனி யொழித்து மற்றுள்ள யோனிகளையெல்லா நீக்கி,—மானுடத் துதித்தல்- மானுடசனனத்திலே சனிக்கிறது,—கண்டிடிற் கடலைக் கையால் நீந்தினன் காரியங்காண் - விசாரித்துப்பார்க்கில் சமுத்திரத்தைக் கையாலே நீந்தினவன் காரியத்துக்கொக்கும்.

இதனாற் சொல்லியது நால்வகைத் தோற்றத்திலு முண்டான எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிக்குள்ளு மானு

டயோனியிலே வந்துதோன்றின வருமையைய பார்க்கில் சமுத்திரத்தைக் கைநீச்சாக நீந்திக கரையேறினவனுக் கொக்குமெனுமுறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

அண்டசஞ் சுவேதசங்க ளுற்பீசஞ் சராயுசத்தோடு-முட்டை வேர்வை வித்து பையுடனே,—எண்டரு நாலெணபதது நானகு நூறாயிரத்தா யுண்டு-நால்வகைத் தோற்றத் தெழுவகைப்பிறப்பி னெண்பத்து நான்கு நூறாயிரம யோனிபேதத்தினி னுறும் விரிகத பேதங்க ளளவினறி யுள்ளன,—பல்யோனி யெல்லாமொழித்து - அவற்றுட் பலவகைப்பட்ட யோனி பேதங்களொழிதது,—மானுடத் துதித்தல் கண்டிடில் - அவ வலமரலை நீககுதற் கேதுவாகிய மானுடப்பிறவி யெய்தப் பெற்றிடின,—கடலைக் கையானீநதினன் காரியங்காண் - சமுதகிரததைக கையானீநதிக கரையேறினவன் காரியத்தோடொககும்.

---

## மறைஞானதேசிகர் உரை

மேலதனிற சிறப்புவிதி யுணர்த்துகிறார்.

நார்பதி றேயந்தன்னி னான்மறை பயிலாநாட்டில், விரவுத லொழிந்துதோன்றல் மிக்கபுண் ணியந்தா னாகும், துணையினிற் கீழைவிட்டுத் தவஞ்செயசா திதனில்வந்து, பரசமயங்கட்கெல்லாப் பாக்கியம் பண் ணொணாதே. (௬0)

(இ-ள்) நார்பதி நவதீவை யுடைத்தாயிருக்கிற பாரதக தேயந் தன் ண்டத்தி லிந்திரத்தீவுமுதலியவெட்டிமிலே

விஞ்ஞானமறை பயிலாநாட்டில் விரவுதலொழிந்து தோனுமிக்க புண்ணியந்தானுரும தனையினிற் இழைவிடுதே சவளுசெய் சாதியினில்வந்து பரசமயங்கட்கெல்லாப் பாக்கியம் பண்ணொணுதே.

ச்சர் சஞ்சரிக்கும் தேசமாகையால் அந்தப் பூமியினகண் வந்து தோன்றாமல், வேதாகம புராணங்கள் யாகாதிகள்வழங்கும்பூமி குமரித்தீவாதலின் அதிற்சனிக்கப்பெறின் அவர்கள் மிகுந்த புண்ணியபலத்தால் வந்தவர்களெனவறிக. இதனிலுஞ்சிறப் பியாதோவெனில்?

இந்தப் பூமியினகண்வந்து அதோசாதியிற் பிறவாமல் உத்தமமான பிராமணர்முதலு லுவருணத்திற் சனனத்தையெடுத்து, சதகனமத்தை யனுட்டித்தற் குரித்தல்லாத உலோகாயதன முதலிய புரசசமயங்களிற புகாமலிருக்கில் அவர்களே புண்ணியவான்கள். எ-று.

ஏகார மீற்றசை

இதற்குச் சுப்பிரபேதத்துஞ் சிவதருமோத்தரத்து மறிக. (௧௦)

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

—o—

மேற் பரசமயங்களிற் செல்லாமற் சைவநெறியில் வருவ தருமையெனப துணர்த்துதல்.

மனுஷயசனமதலில வருது மலையிலும் வனத்திலும் குறவரிருளரைப்போ லாகாமல், பிராமணுதி நாலு சாதியர்களும் நிறைந்திருக்கும் தேசத்திற் பிறப்பதுபுண்ணியம். அதிலும் வேதோகதாசாரம் நடவாத மிலேச்ச தேசமொழிந்து புண்ணிய தேசத்தில் ஜனிப்பது மிகுந்த புண்ணியம். அதிலும் பூமியிலே ஈனசாதியாக ஜனியாமல் பிராமணுதி சமயத்தில் வருவது

* அதியுக்தமான புண்ணியம். அதிலும் பரசமயங்களிலே போகாமல் சிவனைப் பரதத்துவமென் றறிந் தடையும் சைவ சமயமாவதற்குப் புண்ணிய மிவ்வளவென்று சொல்லப்போகா தென் றிகனபொருள.

* அதியுக்தம்-மிகுதியாகச் சொல்லப்பட்டது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

மனுடர் சன்மிக்கும் பூமியில்வந்து பிறந்தாலும் வேதாகம மார்க்கமில்லாத தேசத்துப் பிறவாது உள்ளதேசத்து உற்பவிப்பது மிகுதத அறம். அதிலும் தாழ்ந்த ஜாதியைவிட்டு வேதாதி மார்க்கிகளாய்ப் பிறந்து பாஷண்ட மதங்களிற் பரிசயம் பண்ணாத புண்ணியம் பண்ணுதல் அரிதென்று பாஷிக்கின்றார். வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

மானுடப் பிறவியினும் உத்தம சமயத்துக் குரித்தாய் உத்தம நாட்டிற் பிறக்கு முத்தம ஜாதியே அதற்கு வாயிலெனப தாம்.

---

## திரம்பவழகியருரை வருமாறு

முன் சொல்லப்பட்ட மானுடசனன மெடுத்தாலுந் தவஞ்செய் சாதியிலேவந்து தோன்றுதற்கு அரிதென்று முறைமை யருளிச்செய்கிறார்.

சேர்பயில் தேசந்தன்னில் - மானுடர்நெருங்கின தேசத்தி ல்,—கானமறைப் பயிலாகாட்டில் விரவுதலொழிந்து தோன் றல் மிகசபுண்ணியத்தானும் - வேதாகம புராண சாத்திரங் கள் வழங்காத காட்டிலே சென்று பொருந்தாமல், இவை வழ ங்குகிற தேசங்களிலே வந்து ஜனிக்கிறது மிகுந்த புண்ணியங்க ளாலே யுண்டாகாநிற்கும். இதுவன்றியும்,—தனாயினிற் இழை விட்டுத் தவஞ்செய்சாதியினில் வந்து-இந்தப் பூமியிலே அகோர ஜாதியில் செல்லாமல் தவத்துக் குரித்தான நல்ல ஜாதியிலே வந்து தோன்றி; இப்படி வந்து தோன்றினாலும்,—பரசமயங்க ட்கெல்லாம் பாகஇயம் பண்ணுதே- சிவனைக் கர்த்தாவாக க்கொள்ளாத புறச்சமயங்களிலே செல்லாத சிவபுண்ணியம் பண்ணுதற்கு அரிதாம்.

இதனுற் சொல்லியது, வேதாகம புராண சாத்திரங்கள் வழங்குகிற தேசத்திலேவந்துபிறக்குகைக்கும், அகோரஜாதியை விட்டுத தவஞ்செய் ஜாதியிலேவந்துபிறக்குகைக்கும், அப்படிப் பிறக்க விடத்தும் சிவனே தெய்வமென றறியாத பரசமயங் களிலே செல்லாதிருக்குகைக்கும், சிவபுண்ணியம பண்ணுதற்கு அரிதென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சேர்பயில் தேசந்தன்னில் - அம்மானுடப் பிறவியினு மானு டர் வாழ்கின்ற விவ்வுலகத்துள்,—நான்மறை பயிலாநாட்டில் விரவுதலொழிந்து தோன்றல் - வேதாசம வழக்கு மிக்குடைய வுத்தமநாட்டில் தோன்றுதல்,—மிக்கபுண்ணியத்தானும் - மிகுந்த புண்ணியத்தாலுண்டாம்,—தனாயினிற் இழைவிட்டு,

தவஞ்செய் சாதியினில்வந்து- அவ்வுத்தம நாட்டில் தோன்றியி னுங் கீழாயகுலத்துத் தோன்றாது உத்தம குலத்திற் றோன்று தல் செய்தும்,—பரசமயங்கட் கெல்லாம் பாக்கியம டைந்தொ ளுதே - அவ்வுத்தம குலத்திற் றோன்றியிடினும் புறச்சமயங்களி ற் செல்லா தலமரவொழிதற்கு வாயிலாகிய வுத்தமசமயத்திற் புரிந்தாதலாகிய நன்மை யொருவனுக் குண்டாத லரிதெனய தாம்

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலதனினுஞ் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

வாழ்வெனு மையல்விட்டு வறுமையாஞ் சிறு மைதப்பித், தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ் சமயஞ்சாரு, மூழ்பெற லரிதுசால வுயர்சிவ ஞானத் தாலே, போழிள மதியினானைப் போற்றுவா ரருள பெற்றோரே. (௬௧)

(இ-ள்.) வாழ்வெனு மையல்விட்டு வறுமையாஞ் சிறுமைதப்பித் தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ் சமயஞ்சாரு மூழ்பெற லரி

து ல சூக்குமமாகிய விருவகைச் சரீரங்க ளிற் செல்லாமற் றனம்குறியா லுண்டா கிய மயக்கத்தையும் விட்டு, தாரித்திரமாகி ய சிறுமைச் சமுத்திரத்திலும் வீழாமற் சா த்துவிதத்தா லுண்டாகிய வெண்வகைப் ப த்தியுடனே பொருந்தி சன்மார்க்க தபோ பலத்தா லுண்டாவதாய சன்மார்க்கப் பி ரமாணமான சைவ சமயத்தின்கண் வந்து பொருந்தி நிற்கப் பெறுவது மரிது.

து

சாலவுயர்சிவ ஞானத்தாலே போழிளமதியி னானைப் போற்றுவா ரருள்பெற்றோர். — அச்சமயத்தின்கண் வந்தவரோ மிகவுமேலான ஞானத்திலேயர்த்தசக்திரனையுடைய சிவனை தருளைப்பெற்றனவரதமு மவனையனுசந்தானம் பண்ணி யிருப்பர்கள் எ-று.

இதற்குச் சிந்திய விசுவ மெனவறிக. (௬௧)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிதுவும் சிவனையே வழிபடுமவர்கள் மோக்ஷத்தை யடைவாகளெனப துணர்த்துதல்.

வறுமையாஞ் சிறுமைதப்பி வாழ்வெனு மையல்விட்டு-தரித்திரமானது மிகவுங் கஷ்டமென்று மிகச் சிறுமையிருலோ ஐஸ்வரிய மதிகமென்று அபேக்ஷித்தும் ஐஸ்வரியம்வந்த காலத்து அந்த ஐஸ்வரிய + பரவசனாயிருந்தானாகில் அதினை ‡அஞ்ஞானுக்கிராகதமா யிருக்கிற ஞானத்தை யுடையனுவன. அஞ்ஞானத்தினுலே ஞானம் † திரோஹித மாகிறபொழுது சாத்விக ராஜசகுணங்கள் கீழ்ப்பட்டுத் தாமச மேலிட்டுக காமமோகனுய்ப பதிவ்ருதா ஸ்ரீக ளிடங்களிலும் அபிலாஷையுடையனாய்ப் பரஸ்ரீ பரத் திரவ்யாதி ¶ லோலுபாதிய தருமப்பிரவர்த்தனு யதினுலே நரகத்தை யடைவன். ஆகையால் தரித்திரம் வந்தகாலத்து சிறுமையென்று துக்கப்பட்டு ஐஸ்வரியத்தை யபேட்சியாமல், ஐஸ்வரியம் வந்தகாலத்திலும் அதினத்யக் × தாபி நிவேசம் பண்ணுமலிருக்கவேணும்.—

+ பரவசன் - ஒன்றுக்கு வசப்பட்டவன். ‡ அஞ்ஞானுக்கிராந்த - அஞ்ஞானமேலிட்ட. † திரோகிதம் - மறைக்கப்ப

ட்டது. ¶ லோலுப - ஆசையுள்ள. × அபிநிவேசம் - மனது நன்றாய்ப் பற்றுதல்.

தஸ்மாத்ஸர்வ பராபரே - ஶைவே ஸர்வாதிகம் ஸ்திதம்
ஶைவஸ்வம் ஶுத்தமேவாத்ர । தஸ்மிந் ப்ரஸக்த பாவஸ்ய
ஶேஷவிஶேஷாத் ப்ராக்ருத கர்மண: ॥ ஸம்ஸ்கார ஸ்ருஷ்டி ஸம்ஸார
ஸ்ருஷ்டா ஶிவஸ்ய க்ருபயா தத: । ததா ஸந்தீஷு ஸத்கர்மா
ஶோபநாஹிதம் ஜ்ஞாநேநாஸ்ய ஸம்ஸ்க்ருதி ॥

தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ் சமயஞ்சாரு மூழ் பெறலரிது சால வுயர்சிவஞானத்தாலே போழிளமதியினானைப் போற்றுவா ரருள்பெற்றாரே-சிவன § ஸ்வதந்த்ரன † நாம்பர தந்த்ரர், ஆ சிவனைகொடுக்க நாம்புசிப்பவர், சிவனுக்குஞ் சிவப க்தர்களுக்கும் நாமடிமையென்னு மியல்புடனே சைவசமயத் தில் சார்வதற்குப் புண்ணியம் பெறுகிறது மெத்தவரிது. சிவ ஞானத்தாலே சிவனை வழிபடுமவர்கள் சிவனருளாலே சிவசா யுச்சியத்தை யடைவர்களென் றிதனபொருள்.

§ ஸ்வதந்த்ரன் - சுவாதீனன். † பாதந்த்ரர்-பராதீனர்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

வேதவிரோத மதங்களைத் தப்பி வேதாதிக்கருகமாய் வந் து பிறந்தாலும் வேதசார சைவசமயஞ்சாருதலரிதென்று சா ற்றி, சார்ந்தவர்களுக்குச் சிவசமாதிஞான பூசையினாலே சிவ னைப் பூசிப்போர் சதர்த்த சிவதீக்ஷாவான்களென்று சாற்று கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

உயர்ந்த சாதியினும் உயர்ந்த குடிப்பிறப்பே யதற்கு வாயிலாம். அவ்வுயர்ந்த குடியிற் பிறந்து சைவத்திலெய்திச் சித்தாந்த நெறியுணர்ந்து சிவபிரானை வழிபடப் பெறுவா ருளராயின், அவர் மலத்தானாகிய வவ் வலமரலை நீங்கி வீடுபேறெய்துவ ரெனபதாம்.

வாழ்வாவன? குலம் இளமை கல்வி செல்வம் அதிகாரமென்னு மிவை.

மையல் செருக்கு.

வாழ்வெனு மையலெனவும், வறுமையாஞ் சிறுமையெனவும், காரியத்தைக் காரணமாக வுபசரித்தார்.

இவை மூன்று செய்யுளாலும் அம்மலபந்தத்தைப் போக்குதற்குரிய வாயில் இவையெனபது கூறப்பட்டது.

—

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முற் சனனங்களிலே சிவபுண்ணியங்களைப் பண்ணிவந்து சைவசமயங்களிலே வருகைக்கு அறிகென் றருளிச்செய்கிறார்.

வாழ்வெனு மையல்விட்டு - ஐஸ்வரியமென்கிற மயக்கத்தைவிட்டு,—வறுமையாஞ் சிறுமைதப்பி - ஒன்றுமற் றிருக்கிற தாரித்திரமென்கிற வியாதிக்குப் பிழைத்து,—தாழ்வெனுந் தன்மையோடு-பத்தியென்றுசொல்லப்பட்ட வுண்மையுடனே,—சைவமாஞ் சமயஞ்சாருமூழ்பெற லரிது - சைவசமயமென்று சொல்லப்பட்ட சமயத்திலே வந்து பொருந்தத்தக்க சிவபுண்

ணியத்தின் முறைமை யாவர்க்கும் பெறுதற் கரிது ஆனாலந்த வுண்மையைப் பெறுவ தெப்படி யெனனில்?—சால வுயர்சிவ ஞானத்தாலே போழிளமதியினனைப் போற்றுவா ரருள் பெற்றோர் - அதிலே மிகவு மேலான சிவஞானத்தாலே திருவிளம் பிறையைச்சாத்தி யெழுந்தருளியிருக்கிற பரமேஸ்வரனை வழிபடுகிறவர்கள் அவன தருளைப் பெற்றவர்கள்.

இதனாற் சொல்லியது வாழ்வெனகிற மயக்கத்தையும் வறுமையென்னுஞ் சிறுமையையும் விட்டுப் பதியுடனே கூடிச் சைவசமயத்திலே வந்து பொருந்தத்தக்க சிவபுண்ணியத்தைப் பண்ணுகைக்கு அரிதெனறும், மேலான சிவஞானத்தாலே பரமேஸ்வரனை வழிபடுகிறவர்களே அவனுடைய திருவருளைப் பெற்றவர்களென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

வாழ்வெனு மையல்விட்டு - குலமினமை கல்வி செல்வ மதிகாரமெனனு மிவைகளினா லுண்டாகிய செருக்கொழிந்து,—வறுமையாஞ் சிறுமைதப்பி - இவைகட் கெதிர்மறையாலுளவாகிய சிறுமைகளினின்று நீங்கி யுயர்ந்தஜாதியினு முயர்ந்த குடிப்பிறப்பெய்தற்கு வாயிலா மவ்வுயர்ந்த குடியிற்பிறந்து,—தாழ்வெனுந் தன்மையோடும் - மெய்யன்போடும்,— சைவமாஞ்சமயஞ் சாரும் ஊழ்பெறல் - சைவசமயத்தி னெய்தும் புண்ணியப் பேறு,—சாலவரிது - மிகவுமரிதாம்'—உயர்சிவ ஞானத்தாலே - அதினுமுயர்ந்த சித்தாந்த நெறியுணர்ந்து,—போழிள மதியினானை - பிளவுபட்ட விளம்பிறையணிந்த சிவபிரானை,—போற்றுவார் - வழிப்படப்பெறுவா ருளராயின,—அருள்பெற்றாரே-அ

வர் மலத்தாலாகிய அவ் வலமரலை நீங்கி வீடுபேறு எய்துவரெனபது.

இவை மூன்று செய்யுளானும் அம் மலபந்தத்தைப் போக்தற்குரியவாயி விவையென்பது கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.

மேற் றன்மத்தாற சரீரமெடுக்குஞ் சிறப்பும், இதற்
கேற்ன்றியும் பயன கொள்ளாதார் சிறப்
பின்மையு முணர்த் துகின்றுா.

மானுடப் பிறவிதானும் வருத்தது மனவாக்காய மானிடத்தைக்தமாடு மரனபணிக் காகவன்றே, வானிடத் தவருமணமேல் வந்தரன் றனையர்ச்சிபப, ருனெடுத் தழலுமும மொன்றையு முணராரங்தோ. (௬௨)

(இ-ள) மானுடப் பிறவிதானும் வருதகது மன வாக்காய மானிடத்தைக்தமாடு மரனபணிக் காகவனறே — சிவ ஞான மாக்சட்குப் பெறுதற்கரிய மானுட வாககையைக் கனமமலத்தால் எடுப்பித்த தேதுகாரணததாலெனனில்? திரிவித கரணங்களாற் பசுவினக ளுண்டாகாநின்ற பஞ்சகவ்வியாதிகளை யாட்டிக்கொள்ளுஞ் சிவன றனைவழி படற் பொருட்டனறே! அஃதெக்காரணத் தாலெனனில்?

வானிடத்தவருமண்மேல்வந்தரன றனையர்ச்சிப்பர் — சுவர்க்கபோகம் பூமியாதலா லீ.ஃதொழிந்து கன்ம பூமியின்க ணழிந்துவந்த பிரம்மா பிரமபுரத்திலும்,மால் திருமாற்பேற்றிலும், இந்திரன் கண்ணார்கோயிலிலும், இப்படி மற்றுமுள்ள சுர மிருகாதிகளெல்லாங் கன்மகாண்டத்தின் வழிநின்று சிவனைப் பூசியாநிற்பர்கள்.

உளனெடுத்தழ வயலிற் பயிரிட்டவன் போகத்தை யா
லுறம ரோன ண்டுப்புசியாமல் வேறொரு தலத்திற்புசிக்கு
ரையு முணரார் மாறுபோலத் தேவர்களும் மிக்கனம பூமியில்
தோ. வந்து வழிபடுத தங்களுக்குவேண்டும் ப
லங்களைப் பெறகக்கண்டிருந்தும் ஐயோ! இத்
தவானமாக்க னல்லசரீரதை யெடுத்து விருதாவிலே திரிந்து
காலங்கழிக்கு மறிவில்லாதவர்கள், ஒன்றையு மறிகிறாக ளில்லை.
அந்தோ வென்பது இரக்கக் குறிப்பு.
இதற்குக் காலோதகரதமறிக (கூ௨)

## சிவாக்ரயோகியருணா வருமாறு.

---0---

மேல் மனுஷ்யதேகத்தில் வந்தும் சிவனைப் பூசைபண்ணு தவன சனமமாநிஷபலமென்ப துணர்த்துதல்.

மனுஷ்ய ஜனமத்தைக யுண்டாக்கினது, பசுவினிடத்தில் பால் தயிர் நெய் * கோசல † கோமய மென்னுமைஞ்சையுமுவந் தாடியருளி யவவாருட்டினபெயாக் சஞ்சு மலதசையு நீக்கு மானை மனசினுலே நினைக்கவும் வாசகினுலே தோத்திரம்பண் ணவு மகைகளிலே பூசைபண்ணவும் கால்களினுலே பிரதட்ச ணம் பண்ணவும சிரசினுலே வணங்கவும் செவியினுலே சிவனு டைய புகழைக் கேட்கவும் கண்ணினுலே யவருடையதிருமே னியைச் சேவிக்கவும் என்பது மறியார்கள்.—தேவலோகத்திலு ளடான பிரமாதிகளும் பூமியினகண்ணே வந்து சிவனைப்பூ சிப்பார்களாகையால் இந்தமனுஷ்ய தேகங் கிடைத்தற் கரிது. இந்ததேகத்திலே யிருக்கையிலே சிவபூசையைப்பண்ணி மோ டசத்தைப் பெறுகிறுகில் பின்னைமோட்சங் கிடைப்ப தரிதெ ன்பதை விசாரிக்கிறார்களில்லையென் றிதன்பொருள்.

*கோசலம்-பசுமூத்ரம், †கோமயம்-பசுமலம், சாணி.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

மானுடசன்ம மெடுத்தும் சிவனைப் பூசைபண்ணுதிருந்தால் நிஷ்பலமென்று நிகழ்த்தினருர்.

வெளிப்பொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

அவ வவாரமே நீக்குதற்பொருட்டுச் செய்யப்படு மரன் பணி ஏனைப்பிறவிகளிற் கூடாமையாற் பிறவிவிசேடம வேணடப்படும்; அவ வரனபணி பயனபடுதல் ஏனையுலகங்களிற் கூடாமையால் தேயவிசேடம் வேண்டப்படும், இவவுணமை ஏனையோரறியமாட்டாமையிற் சாதிவிசேடம் குடிப்பிறப்பு விசேடம வேணடப்படுமென்பதாம்.

இதனுனே அவை வாயிலாகற்கு உரிமை கூறப்பட்டது. வாககாயமெனனுந் தொகைசசொல் வடநூனமுடிபு.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

மேல் மானுடசனனத்தைகவந் தெடுத்தது மனவாக்குக்காயங்களினுலே சிவனை வழிபடுதற்கென றருளிச்செய்கிருர்.

மானுடப்பிறவிதானும் வகுத்தது - மானுடமான சனனத்தைக் கற்பித்தது,—மனவாக்காய மானிடத் தஞ்சமாடுமரன் பணிக்காகவன்றே - பசுவினிடத்தி லுண்டாகப்பட்ட பஞ்ச

கௌவ்வியங்களையு மாடியருளுகிற பரமேசுரனுக்குத் திருப்பணிசெய்ய வென்றல்லவோ மனவாக்குக் காயங்க ளுண்டானது,—வானிடத்தவரு மண்ணில்வந் தரனறனை யர்ச்சிப்பர்-தெய்வலோகத்திலுள்ள பிரமாவிஷ்ணுஇந்திரன் முதலாயுள்ள தேவர்களும் பூமியிலேவந்து பரமேசுரனைப் பூசியா நிற்பர்கள்,—ஊனெடுத் துழலுமூம ரொன்றையு முணரார்நதோ- தோலிரத்த மிறைச்சிமுதலான தேகத்தை யெடுத்துக் கனமத்துக்கீடாக சனன மரணங்களிலே சுழன்று திரிகிற மூகராயுள்ளவர்க ளிவை யொன்றையு மறிகிறார்களில்லையே! அய்யோ!

இதனுற் சொல்லியது, தெய்வலோகத்திலே யுள்ளவர்களும் பூமியிலேவந்து சிவனை யர்ச்சியா நிற்க, இந்தப் பூமியிலே வந்த மானுட சன்னத்தை எடுத்து மனவாக்குக் காயங்களினாலே சிவனை வழிபட்டுப் பிழைத்துப் போகமாட்டாமல், இவையிற றையறியாமல் பிழைபட்டுப் போகிறார்களே மூர்க்கரா யுள்ளவர்க ளென்னு முறைமையறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---

மனவாக்காயம் - சிவனைமனத்தானினைத்தும், வாச்சால்வழுத்தியும், மந்திரஞ் சொல்லியும், காயத்தாற்பணிந்துஞ் செய்யப்படும்;—ஆனிடத் தைந்துமாடுமரன பணிக்காகவன்றோ- பஞ்ச கௌவ்வியத்தினை யாடியருள்கின்ற வரன பணி யேயினைப் பிறவிகளிற் கூடாமையால்,—மானுடப் பிறவிதானும் வகுத்தது- பிறவிவிசேடமாகிய மானுடப்பிறவி வேண்டப்பட்டது.— வானிடத்தவரும - மேலுலகத்துள்ள மாயோன் முதலிய தேவர்களும்,—மண்மேல்வந்தரன் றனையர்ச்சிப்பர் - அவ்வரன்பணிபய

ன்படுதல் ஏனையுலகத்திற் கைகூடாமையால் தேசவிசேடமாகி ய விமமண்ணுலகத்தில் வந்த அரன்றனை யர்ச்சிப்பர்—னெடு த்தழமுமுமர் அகதோ ஒனரையுமுணரார் - இவ்வுலகத் திச் சரீரம் பெற்றும் இவவுண்மை யேனையோரறிய மாட்டாமையா ற் சாதிவிசேடம் குடிப்பிறப்புவிசேடம் வேண்டப்படும். இதனுனே யவை வாயிலாதற குரிமைகூறப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை.



இப்படி யருமைப்பட் டாக்கை யெடுத்
தாலு மதற்கு நிலையில்லையென்
றுணாததுகிறுர்.

கருவினு ளழிவதாயுங் கழிந்திடா வழிவதாயும், பரிணமித் தழிவதாயும் பாலனு யழிவதாயுந், தருண ஞ யழிவதாயுந் தானரைத் தழிவதாயு, முருவமே யழி வேயானு லுள்ளபோ தேபாருய்ய. (கஙஉ)

(இ-ள்.) கருவினு ளழிவதாயும் — கருப்பாசயத்தி லழிவதாயும், அதமூவிதமாம்:சிராவசம்,பாதம்,அவப்பிரசவம்என்பது காலுமாதத்திலழிவது சிராவம்,ஐந்திலுமாறிலுமழிவது பாதம், அதற்குமேற்பட்ட மாததிலழிவதுஅவப்பிரசவம.

கழிந்திடாவழிவதாயும். — பத்தாமாதத்திற் பிறந்தவுடனே மரிப்பதாயும்.

பரிணமித்தழிவதாயும் — மூன்று வயதிருக் தவத்தாசுதரத்தை யடைந்தழிவதாயும்,

பாலனுயழிவதாயும் — அதற்குமேல் பதினறு வயதி... ...யும்,

| | |
|---|---|
| தருணனுயழி வதாயும | அதற்குமேலே நாற்பதினளவுந் தருணவ த்தையின் மரிப்பதாயும், |
| காணலாத் த ழிவதாயும் | அதற்கு மேற்பட்ட விருத்தாவத்தையின மரிப்பதாயும், |
| உருவவேயழி வேயாகு முள ளபோதே பாரு மய | இப்படிக கருப்பாசயங் தொடுத்துச் சரீ ர நிலையின்றி முடிய வழியக் காண்கையாற் றேகமுள்ள போதே நிலையாமையை யறிந்து சிவ தன்மங்களைச் செய்து மோட்சத்தை ய டை. எ-று. |

ஏகாரந் தேற்றம்.

இதற்குச் சிவதருமோத்தரத்து மறிக. (கங)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலாக்கை நிலையல்ல வாதலாற் சடிதியிற் சிவனை வழி பட வேண்டுமென்ப துணர்த்துதல்.

மாதாவினுடைய கர்ப்பத்திலே யிருக்கையிலே கருவழிந் து போவதாயும் உதரத்திலும் பூமியிலே விழுந்தவுடனே சாவ துமுண்டு, சிறிதுநாளிருந்து வளர்ந்து சாவதுமுண்டு, வித்பா ப்பியாச வயசாய் சாவதுமுண்டு, * உன்மத்த பஞ்சவிம்சதி வ யசிற் சாவதுமுண்டு, நரை திரைவந்து சாவதுமுண்டு, ஆதலா ல் மனுஷ்யர்க்கு நூறுவயசுண்டென்று சொன்னதற் குள்ளே இன்னகாலம் சாவென்பதைத் தெரியாதென்றறிந்து; கரசரணு தி த்ருடமா யிருந்துள்ளபொழுதே சிவனைப் பூஜித்தய்யும் வ கைகளைச் செய்யென் றிதன்பொருள்.

* உன்மத்த - யௌவநத்தில் மனோவிகாரமுள்ள.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சரீரம் நிலையன்றென்று சாற்றுகின்றார்.

கழிந்திடா தழிவதாயும் - ஜனனிக்கு முதரத்தில் செத்துப் பிறக்கின்றதாயும்,—உளவமே யழிவேயானால் - சரீரமப்படிச் சாவதானால் —உள்ளபோதே பாருய்ய - சரீரமிருக்குங் காலத்திலே பிழைக்கும் வகை தேடு.

மற்றவை வெளிப்பொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

மானுடயாக்கை அத்துணைப் பெறுதற்கரிதாயினும் இத்துணைப்பொழுது நிற்குமென வறியவாராது நீர்க்குமிழிபோல் எப்பொழுது மழிதன் மாலைத்தாகலின், இவ்வாக்கை நிலையாமை யிளமை நிலையாமைகளை உணரவல்லார்க்கே அவற்றானாகிய மையலை விடுதல் கூடுமென்பதாம்.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

மீளவு மிந்த மானுட சன்மந்தானும் நிலைநிற்பதொன்றல்ல, சரீரம்விட்டுப் போவதற்கு முன்னே சடுதியிலே பரமேசுரனை வழிபடவேணுமென்று அருளிச்செய்கிறார்.

கருவினுளழிவதாயும் - மாதாவினுடைய கர்ப்பத்துக்குள்ளேதா னழிவதாயும்,—கழிந்திடா வழிவதாயும் - சனித்தமாத்திரத்திலே மரிப்பதாயும்,—பரிணமித்தழிவதாயும் - சிறிது வள

ரந்த மரிப்பதாயும்,—பாலனாயழிவதாயும்-வாலாவத்தையிலே மரிப்பதாயும்,—தருணனாயழிவதாயும் - தருணவத்தையிலே மரிப்பதாயும்,—தானரைத்தழிவதாயும் - விருத்தனாய் மரிப்பதாயும்,—உருவமே யழிவேயானால் - இப்படி முடிய மரணமேயானால்,—உள்ளபோதே பாருய்ய-ஆகையா லிந்த சரீரமவிட்டுப்போகாம லிருக்கிறபொழுதே பிழைக்கத்தக்க உபாயங்களை விசாரியார்.

இதனாற் சொல்லியது மாதாவினுடைய வுதரத்திலேயிருக்கிற வவதரத்திலும் பிறந்தவவதரத்திலும பால தருண விருத்தாவதரத்தையிலும எப்பொழுது மிந்தச சரீரம் பொய்யா யழிந்தபோம் ஆகையினால் இந்தச்சரீரமிருக்கையிலே பரமேஸ்வரனை வழிபட்டுப் பிழைக்கவேணுமெனறு முறைமை யறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(மானுடயாக்கை யததனைப்பெருமைத்தாயினும்,) கருவிலேயழிவதாயும்-மாதாவினுடைய கருப்பத்திற்றானே யழிவதாயும்,—கழிந்திடாதழிவதாயும்-பிறந் துடனே யழிவதாயும்,—பிணமிததழிவதாயும் - பிறந்த சிறிது கால மிருந்து அழிவதாயும்,—பாலனாயழிவதாயும் - பால்யனா யழிவதாயும,— தருணனாயழிவதாயும்-தருணனாயழிவதாயும்,—தானரைத தழிவதாயும - நரையுண்டாகி விருத்ததசையி லழிவதாயும்,—உருவமேயழிவேயானால் - இததனைப்போது நிற்குமெனறு அறிபவாராது நிற்குமிழிபோ லெப்பொழுதும் அழிதன் மாலைத்தாகலின,—உள்ளபோதே பாருய்ய - இவ்யாக்கை நிலைபாமை இளமை நிலையாமைகளை யுணரவல்லார்ககே யவற்றானாகிய மையலை விடுதல் கூடுமெனபதாம்.

## மறைஞானதேசிகர் உரை.

மேற் கருவி காரணத்திற்கு நிலையல்லவென்பதற் குதாரணமிட் டுணர்த்துகிறார்.

ஒருபுல னுகரும்போதங் கொன்றிலை யொன்றி னாலும், வருபயன் மாறிமாறி வந்திடு மெல்லாமா று, மொருபொழு துணரி லுண்டா மல்லதிவ் வல்லல் வாழ்க்கை, மருளர்கள் வதுவும்போல மாயும்பின் மாயு மன்றே. (கூ௪)

(இ - ள்) ஒருபுல னுகரும்போதங் கொன்றிலை யொன்றினாலும் — ஆன்மா வோரிந்திரியத்திலேநின் றதற் கேற்ற விடயங்களைப் பொருந்திப் புசிக்கும்—தற் கேற்ற விந்திரியங்களொன்றினு மிவனுக் கொருபிரயோசனமு மில்லை. ஆகி லிதனாற் பிரயோசன மில்லையோ வெனில்?

வருபயன் மாறிமாறி வந்திடும் — இப்படி வருகிற பிரயோசனங்க டானுஞ் சத்தஞ் சோத்திரமிடமாக நின்று விடயத்தைக் கிரகித்த தன்னைவிட் டேனையவு மிவ்வாறு பொருந்திச் சீவியாநிற்கும்.

எல்லா மாறு மொருபொழுது — நித்திரை யவதரத்தி லிவைக ளெல்லாஞ் சேரச் சீவியாதொழிந்து நிற்கும்.

உணரி லுண்டாம் — விழித்த வவதரத்தி லிவையெல்லா முண்டாய் மீளவுங் காரியப்படா நிற்கும்.

அல்லதிவ் வல்லல் வாழ்க்கை — (அல்லது மிவ்வாழ்க்கை யல்லலெனப் பதமாறி யும்மை கொடுத்துக்கொள்க.) அஃதாவது, அதீதமன்றியிலே தானவாழ்க்தானிது

மிக்கவாழ்க்கை துக்கவாழ்க்கையே யாம். அப்படித் தான்வா
ழும் வாழ்வுதானு நிலைக்குமென்றோ! அல்ல

மருள்கன வது மயக்கத்தைப் பொருந்திய கனவுபோல
வும்போல மாயும் தன்னுடைய பின்பு விசாரித்துப்பார்க்கில் அந்தக
பின் மாயுமன்றே கனவு மழிந்து பொய்யாய்ப் போகிறதா
யிருக்குமென்று கருதி யாதொருவன் சிவ
னை வழிபடுகின்றானவனே பரமான பதத்தையடைவன். எ-று.
இதற்குச் சித்தியாகமம் (௧௯)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிதவுமது.

பஞ்சேந்திரியங்களிலே ஒன்றிலே ஆன்மாபொருந்திப் புசி க்குமிடத்து நின்ற நாளுமில்லை. இப்படி எல்லா விந்திரியங் களிலு மாறிப் புசிக்கும் சமுத்தியிலே ஐந்து இந்திரியங்களு ம் சீவிப்பதில்லையாம். இவ்வாறு அல்லலையுடைய விந்த தேகே ந்திரியமெல்லா மயக்கத்தைப் பொருந்தின கனவுபோலக் கெ டுக்கிறது பொய்யல்லவே! உள்ளபொழுதே மோக்ஷத்தைப் பெற முபாயம் விசாரிக்கி லுண்டாமல்லது பயனில்லையென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மேலிதவுமது.

ஒருபுலனுகரும்போதங் கொன்றில - சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களுக்குள் ஓரிந்திரியத்தால் ஒரு விஷயத்தை புசிப

மருள்போல அனேகமாயும்-கனவுபோலப் பின்னும் மாயுமென்றுரைத்துக்கொள்க.

மருளும் கனவும் ஆகுபெயர்.

வாழ்க்கையென்பதும் பின்னென்பதும் இறந்ததுதழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

மீளவு மிந்தச் சரீரத்தாலுண்டான பயன்களெல்லாம் பொய்யாய்ப் போமென்று ஒரு திட்டாந்தமிட்டருளிச்செய்கிறார்.

ஒருபுல னுகரும்போ தங்கொன்றிலா தொன்றினாலும் - ஆன்மா வோரிந்திரியத்திலே நின்று அதற்கேற்ற விஷயத்தைப் புசிக்கும்பொழுது ஏனை யிந்திரியங்களொன்றிலும் இவனுக்கு ஒருப்ரயோசனமுமில்லை — வருபயனமாறி மாறி வருந் போ - இப்படி வருகிற ப்ரயோசனங்கள்தான் ஒன்றுக்கொன்று மாறிவாரா நிற்கும்.—எல்லாமாறு மொருபொழுது-ஒருவயத்தாத்திலே இவனைத்தைப்பட்டபொழுது எல்லாப் பிரயோசனங்களுஞ் சேர மாறிப் பொய்யாய்ப் போகாநிற்கும் — உணரிலுண்டாம் - இவன் துயிலைவிட்டு நனவிலே வந்தபொழுது இந்தப் பிரயோசனங்களெல்லா மீளவு முண்டாகா நிற்கும்.—அல்ல லிவ்வல்லல்வாழ்க்கை-இப்படியுண்டான துக்கங்களை விளைக்கிற இந்த தேகவாதனையாலுள்ள பிரயோசனங்கள் தானும் நிலைநிற்பதில்லை. அதெங்ஙனே யெனில்?—மருள் கனவதுவும்போல மாயும்பின் - மயக்கத்தைப் பொருந்தின கனவுகண்டவன் விழித்துவிட்டது அவையெல்லாம் பொய்யான முறைமைபோல, இவையிற்றினுண்மை யறிந்தபோதே இப்படிச் சொல்லப்பட்டவை யெல்லாஞ் சேர வழிந்துபோகா நிற்கு

ம்,—மாயமன்றே - காணசொல்லுகிறவிது பொய்யல்ல, உண்மையேயாம்.

இதனாற் சொல்லியது ஆன்மா வோரிந்திரியத்தாலே ஒரு விஷயத்தைப் புசிக்கும்பொழுது நின்ற விந்திரியங்களால் இவனுக்கொரு பிரயோசனங்களு மில்லையென்றும், இப்படி வருகிற பிரயோசனங்கள்தானு மாறிமாறி வருமென்றும், இவனைத்தைப்பட்ட பொழுது எல்லாப பிரயோசனங்களுஞ் சேர மாறிமாறிப் போமென்றும், இவனுடைய தரவிட்ட எல்லா விஷயங்களு மீளவு முண்டாமென்றும், ஆகையா லிங்ஙனஞ் சொல்லப்பட்ட துக்கத்தைப் பொருந்தின வாட்கையின் முறைமை கனவிற் காரியங்களை நனவிலே பார்த்தவிடத்துப் பொய்யான தன்மைபோலப் பொய்யேயாமென்னுமுறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

ஒருபுலன் - அவ்வாக்கையின் கண்ணதாகிய அறிவும்,—ஒருகாலைபோதக்கொன்றிலே - அநுபவிக்குங்கால் விடயங்களை யொவ்வொன்று மறிவதன்றி யொருங்கே யறியமாட்டாது.—ஒன்றினபாலும் - ஒருவிடயத்தின் கண்ணும்,—வருபயன் மாறி மாறிவந்திடும் - வரப்பட்டதை விட்டுவிட்டு அறிவதன்றி யிடைவிடின்றி யறியமாட்டாது.—ஒருபொழுதெல்லாமாறும் - அதுவு முறக்கம் மூர்ச்சை முதலியவற்றிற் சிறிது மில்லையாய்விடும்.—அல்லதிவ வல்வாழ்க்கை - அஃதன்றி யிவ்வியாக்கையின் பொருட்டாகிய செல்வத்துணியும்,— மருள்கனவதுவுப்போல - முறையே மயக்கப்பொருளும் கனப்பொருளும்போ

ல,—மாயுமினமாயுமன்றே - தோன்றியபொழுதே மாய்வது மின்டயே மாய்வதுமா மாகலான,—உணரிலுண்டாம் - இவ்வறிவு நிலையாமை செல்வ நிலையாமைகளை யுணரவல்லார்க் கவற்றூறுகிய வையமை விடுதல் கூடுமென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



போகதுடனை முணாந்தகினறது

அரிசனம் பூசிமாலை யணிந்துபொன் ஞடைசாத்திப், பரிசன முனபுசெல்லப பாரகா பரிககககொட்ட, வருசினனமூததவெதாயகல் வந்திட வுணர்வுமானடு, பெரியவர் பேச்சுமினறிக் கிடததலாற பிணததோ டொபபா. (௬௫)

(இ-ள) (அரிசனம் பூசி மாலை யணிந்தபொன ஞடை . பிணத்தோடொபபா )

தொங்கல் - சேருடி.

"வெளிபபடை யெல்லாங் கிளத்தல் வெண்டா - வெளிப்படாச் சொல்லே கிளத்தல் வேண்டும்." எனபதனு லிதுவெளிப்படை.

இதற்குச் சுபாஷிதத்தில் முகரிதாகில், வாசகியபாரம்பரமென்னுரு சுலோகத்திற் காணக. (௬௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் ராஜபோகம் அஞ்ஞானவேதுவென்பதை யுணர்த்துகிறது.

மனுசடபூசி புடபமாலையழகியதாய வத்திராபரணங்களை யுந தரித்துத் தனக்குச் சாதியிலேபெரியவர்களும் வயசிலேபெ ரியவர்களும் சேவித்துப் பின்செல்லத் தான சிவிகையாதிக ளிலேயிருந்து வாத்ய கோஷங்களுடனே சத்ரசாமரங் கொ டி சூழவர வறிவற்றுப் பேசுமின்றிப பெரியோர்களுடை ய வசனமுமின்றிக கிடக்கையாற் பிணமுமறிவற்ற ராசாவும் சமானமென றீனைபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

இராசபோக மஞ்ஞான காரணமென் றுரைகின்றார். வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

அதிகாரஞ்செய்து செருக்குறுவார்செருக்காரின் வேறல்ல ரென்பது ஆண்மிகுமு கிசமுச்சிபற்றி யறியவல்லார்க்கு அதனு ளுகிய மையலை விடுதல் கூடுமெனபதாம்.

உணர்வுண்டாமென்றதனை ஈண்டுக் கந்துரைக்க.

பெரியவரெனறது இழித்தற்கண் வந்த குறிப்புமொழி.

பெருமை அதிகாரித்தாலுயது.

இவைமூன்றுசெய்யுளாலும் வாழ்வெனுமையல்விடுதற்கு உ பாயங் கூறினவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—o—

முன் சொல்லப்பட்ட பொய்யை மெய்யென்று மயங்குகின்ற பேதகான்மாக்களை உயிர்போனவுடலுக்கொப்பானவர்களென்று அருளிச்செய்கிறார்.

அரிசனம்பூசி மாலையணிந்து பொன்னுடைசாத்தி - மஞ்சள்பூசிப் பூமாலைசூடி ஆபரணம்பூண்டு புடைவையுடுத்து,—பரிசனம் பின்புசெல்ல - பரிஜனங்கள் பின்னே சேவித்துச் செல்ல,—பாரகர்பரிக்கவென்றது - சிவிகையார் சுமந்துகொண்டு,—கொட்ட - பலவாத்தியங்களுங் கொட்ட,—வருசின்னமூத - வங்கிச பரம்பரையாகவருகிற விருதுகளைச் சொல்லி சின்னம் முதலானவைகளை யூத,— தொகைசெல்வக்கிடை - சேருடிமுதலானவை நிழற்ற,—உணர்வுமாண்டு - ஒரு பிரஞ்ஞையுமற்று,—பெரியவர் பேச்சுமாண்டு கிடத்தலாற் பிணங்களொப்பார் - இவையிற்றாலே பெரியோரானவர்கள் நினைத்தபடியே வார்த்தை சொல்லாமற் கிடக்கையாலே பிணங்களை யொப்பார்.

இதனாற் சொல்லியது,பிரபஞ்ச வியாபாரமொழிந்து ஒரு கர்த்தாவுண்டு புண்ணியபாவமுண்டென்று பகுத்தறியத்தக்க பிரஞ்ஞையில்லாதவர்களைப் பிணங்களாக வொப்பார்களென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அரிசனம்பூசி - சந்தனமுதலிய வாசனைத் திரவியங்களைப் பூசியும்,—மாலையணிந்து - வாசத்தோடுகூடிய பூமாலையணிந்தும்,— பொன்னுடைசாத்தி - பீதாம்பரம் போர்த்தும்,—பரி

சனம் பின்பு செல்ல-தன்பரிவாரங்கள் பின்னேவரவும்,—பார்கர் டரிக்க-சிவிகையார் சுமக்கவும்,—கொட்ட-வாத்தியங்களை முழக்கவும்,—வரிசின்னமூத-வரிபொருந்திய சின்னங்களூதவும்,—தொங்கல்வந்திட-சத்திரசாமரங்கள் சூழவரவும்,—அறிவுமாண்டு பெரியவர் பேச்சுமின்றிக் கிடந்ததலால்-அறிவற்றதிகாரஞ்செய்து செருக்குறுவராதலால்,—பிணந்தோடொப்பார்-செத்தாரின் வேறல்லரென்பது.—உணர்வுடாம-இக்கிழச்சிபற்றி யறியவல்லார்க்கு அதனாலாகிய மையலை விடுதல் கூடாதென்பதாம்.

இவை மூன்றுபாட்டானும் வாழ்வெனு மையல் விடுதற்குபாயம் கூறியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை

—ஃஃ—

ஆசையால் விரனுறடமனில்லை, நீங்கள் சிவனையே
வழிபட்டுப் பிழையுங்களென் றுபதேச
முணர்த்துகிறார்.

பிணத்தினை யொத்துவாழ்வோர் பின்னடைப் பிணங்கள்போல, வுணக்கியேயுழல்வீருங்க ளூடலுயி ருணர்வுமெலலாய, கணத்திடைத் தோன்றிமாயுங் காயமென் றறிந்தொருககால், வணக்குறீ ரரனையென்றும் வானவர் வணங்கவைப்பன். (கூகூ)

(இ-ள்) (பிணத்தினை...வைப்பன்.) இப்படிப் பிணத்தைகொத்துவாழ்கிறவர்கள் பின்னே நடையாடும்பிணம்போலவுயிருடனே சரீரத்தைப் போற்றிக்கொண்டு திரிகிறவர்களே வாருங்கள், உங்கட் கொன்று சொல்லுவோம். உங்களுடைய சரீரமே

மதற்காதாரமாகிய வானமாவு மிவைகளெல்லாங் கணமாகு ருவமாக "நீரகுமிழி பூங்கட்டி யற்றோ நிலையில்லா - வாகனைசகுச செய்த வரன". எனபதனுல் இப்படியாயிருக்குமென்று, நீங்கள் சிவதீக்ஷையு மந்திரமு மின்றி பொருக்காலானுனு சிவனை யாராதனை செய்வீராகில், அப்பொழு தவ னுங்களைத் தனனுடைய புரமாகிய சிவலோகத்திலே வைத்துத் தேவர்களெல்லாரும் வணங்கும்படி சுற்பிப்பனகாண்; ஆதலா லவனையே வழிபடுக.

இதற்குச் சுவச்சந்த வைரவத்துங் காலோத்தரத்தும றிக. (௧௯)

இரண்டாஞ் சூத்திரமுற்றிற்று.

பதியிலக்கண முற்றிற்று.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

மேல் ராஜசேவை பண்ணுவதிற் பயனில்லை, சிவனையே வழிபடவேண்டு மெனவ புணர்த்துதல்.

பிணைத்துகருச் சரியாக வாழுகிற விராசாக்களைச் சேவித்துத் தேகத்தையும் மனதையும் சோஷிப்பித் தழுங்கிற நடைப்பிணங்களாகிய வறிவிலீரே! உங்கள் தேகமும் பிராணவாயுவும் கரணமும் க்ஷணமாத்திரத்திலே நசித்துப் போமெனபதை யறிந்து சிவனை யொருககால் வணங்கவே, தேவாக ளுங்களை வணங்கும்படி பதத்திலே சிவன வைப்பன்; ஆகையால் சிவனையே வழிபடுங்கோளென்று இதனபொருள்

ஸ்ரீமத் தசிவர்ணுஸ்ரமா சாரியதுரிய சைவபரிபாலக் சிவாக்ரயோகி செய்தருளின

சிவஞானசித்தியார் இரண்டாஞ்சூத்திர வியாக்கியானம் சமாப்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இராசசேவகரு மிமையாதிபெல நிசைகின்றார்

பிணத்தினை யொத்துவாழ்வோர் பின - முன் சொன்னபி னைத்துகுகொத்த பிரபுக்கள் பிறகே,—கடைப்பிணங்கள் போல - செல்லும் பிரேதங்களொப்ப,— உடல் - தூலசரீரம்,— உணர்வுயிர் எல்லாம - கருவிக்கிருப்பாகிய கண் செவி நாக்கு மூக்கு முதலிய கான மிவைகளெல்லாம்,— உனக்கேயுழன்றிர் - வாட்டியே திரிவீர், இதுகொண்டொருபய னுமில்லை.—கணத்திடைத் தோற்றியாயுவ காயமென்றறிகசொருககால் - நிமிடத்திலுண்டாய் மடியுஞ் சரீரமென்று சிந்தித் தொருபோதாகிலும்,— வெச்சுநீரரனை - சிவனை வந்திக்கக்கடவீர். சிவலோகங்கொடுத்து,— என்றும் வானவர் வணங்கவைப்பன - எக்காலத்தும தேவர்கள் வந்திக்கத்தாபிப்பன.

இந்த விருத்தத்திற்குக் கணத்திடைத்தோன்றின்ற காழியுமென்றறிந்து என்னும பாடபேதமுண்டு.

—

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

சிவபிரானை வழிப்பட்டுப்பெறும் இறவாச்செல்வத்தை நோக்கக் கணத்தி லழிதன்மாலைத்தாகிய உடம்பின்பொருட்டு வருந்தியீட்டப்படுஞ் சிறுசெல்வஞ் செல்வமன்றெனப் துணர வல்லார்க்கு, இச்சிறுசெல்வத்தை வேண்டி அவ்வதிகாரச் செருக்குடையார் பின்சென்று இனைதேக்கறுஞ் சிறுமையி னீங்குதல் கூடுமென்பதாம்.

உடலுயிருணர்வுமெல்லா முணக்கியெனவியையும்.

இதனானே வறுமையானுஞ்சிறுமை தப்புதற்கு உபாயங் கூறியவாறு.

ஒன்றதாய் என்பது முதல் இத்துணையு மொழிபு கூறிய தெனக்கொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—c—

இப்படி பிரஞ்ஞையு மற்று அசத்தியத்தைப் பொருளென றிருக்கிறவர்களை வழிப்பட்டவர்களுக்கு ஒருபயனு மில்லையா கையால பரமேஸ்வரனை வழிபடுகிறதே பயனென்றறிந்து வழிப டுங்கோளென்று அருளிச்செய்கிறார்.

பிணத்தினை யொத்து வாழ்வோர்பின் - இப்படிப் பிணத் தைப்போல ஒன்றுமறியாமலவாழுகிறது தானே பொருளாகத் திரிகிறவர்களைப்பிறகே.—நடைப்பிணங்கள்போல வுணக்கி யுழ ல்கிர - நடந்து திரிகிற சவங்கள் போலச் சரீரத்தை வாட்டிக் கொண்டு திரிகிறவர்களே,—உங்களுடலுயிருணர்வுமெல்லாங் க ணத்திடைத் தோன்றிமாயுங் காயமென்றறிந்து - உங்கள் சரீரங் களும் பிராணவாயுவு முங்களுடைய வறிவுகளுஞ் சர்வமுங் க ணமாத்திரையிலே யாவது மழிவது மாகாநிற்கும், சரீரத்தினு டைய தன்மை யிப்படியாயிருக்குமென்று ஆராய்ந்தறிந்து?— ஒருக்கால் வணக்குதீரானை யென்றும் வானவர் வணங்கவைப் பன - ஆகையாலே ஒருகணப்பொழுதாகிலும் பரமேஸ்வரனை வழிபாடு செய்வீராமாகில் அனவரதமு முங்களை யரிபிரமர் இந்திர ன்முதலாயுள்ளவர்கள் வழிபடும்படி கற்பிப்பன பரமேஸ்வரனை

அண்டசமென்ற திருவிருத்தமுதல் பிணத்தினை என்றதிருவிருத்தமீறாக எடுக்குமபிரமாணம சிவஞானபோதம உ-ம சூ, ௪௦-செ. "எங்குமுளனென்றவை பொன்றனதிரணடெனவி, லெங்குமுளனவ ரெவற்றவனு-மங்க, ணவையாவனென்றிலைப் பொன்னொளிபோலிச, னவையுடனை யாளாகா மாவகு" எனறுமதனு கணடுகொள்க.

இதனாற் சொல்லியது, ஒன்றுமறியாமல் வாழ்கிறவர்களை வழிப்பட்டால ஒருபிரயோசனமுமில்லை யென்றறிந்து பரமேஸ்வரனை வழிபட்டால் மிருகபாசங்களிலே வைப்பன, ஆகையால் பரமேஸ்வரனை யறிந்து வழிபடுவதேகோ சொன்னு முன்றமை யறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருணா வருமாறு.

——o——

ரனையொருகால் வணங்குறீர் - சிவனையொருக்கால் வ[illegible]டசெய்கின்றிலீர்! செய்யப்பெறின்,—வானவர் வணங்க [illegible]ன்றும வைப்பன - தேவர்களும வணங்கும்படி யென்றும் மிறவா[illegible]செல்வத்தினை யளிப்பனாதலின்,—கைத்திடைத் தோன்றிமாயு[illegible] காடமென்றும,—அதனை கோக்கக் கைத்தனகட்டோன்றி ய[illegible]தனமாலைத்தாகிய உடம்பினபொருட்டு,—உங்களுடலுயிர [illegible]ர்வுமெல்லாம-உங்களின உடலுயிர் வுணர்வுமுதலிய வெல்[illegible]ற்றையும்,—உணக்கியேயுழல்கீரறிந்து-வருத்தமுறும்படி [illegible]யீட்டப்படும சிறுசெல்வம் செல்வமனறெனப துணரவ[illegible]க்கு,— பிணத்தினை யொத்துவாழ்வோர் பின்னடைப்பி[illegible]ங்களபோலாம்-இச்சிறுசெல்வத்தினை வேண்டிப் பிணத்தினை

